# Dravidian Languages

vis a vis

# Indian Literature

*A Cultural Exploration*

Commemorating



**Prof Murry Barnson EMENEAU**

*A SIMPLE AND HUMBLE ATTEMPT TO STUDY THE CULTURAL EXPLORATION OF INDIAN LITERATURE AMONG DRAVIDIAN LANGUAGES*




**AN INITIATIVE OF:**











**SV University**
**Dravidian University**
**Dr UVS Iyer Library**

Na Subbu Reddiar 100
Educational Trust






"Dravidian Woman, South India" - The portrait depicts a descendant of the ancient Dravidians. The Greek writer Herodotus called them "Eastern Ethiopians" (or Kushites). Originally, the ancient Dravidians inhabited a wide geographic area including Africa's Nile Valley, Southwest Asia (Syria, Iran, Iraq, Afganistan), and India's Indus Valley. The epithet "Kush" can be associated with them and it links these geographic regions. - James E. Brunson




**Keezhadi @ Sivaganga Dist. TN**



International Conference

# Contribution of Dravidian Languages to the Enrichment of Indian Literature and Culture

**PAPERS RECEIVED**

## Volume – I

[ISBN: 978-81-943850-3-5]

143 Papers
In Tamil, Telugu & English

## Volume – II

[ISBN: 978-81-943850-4-2]

82 Papers
In Kannada, Tulu & Malayalam

Organised by

**Department of Tamil**
Sri Venksatesara University
**Dravidian University**
**UVeS Iyer Library**
**Na Subbu Reddiar 100 Educational Trust**

**On the eve of**

DIAMOND JUBILEE OF
(1960 – 2020)
DEPARTMENT OF TAMIL, SVU
(19 – 22 Feb 2020)

Honouring Tamil Thatha
on his 166th Birthday (19 Feb 2020)

# Dravidian Languages

vis a vis

# Indian Literature

A Cultural Exploration

Compilation

Centenary Committee

Na Subbu Reddiar 100 Educational Trust




ந சுப்பு ரெட்டியார் 100

Centenary Committee Publications

# Reverential Dedication

## Murray Barnson EMENEAU

The great Indologist and International fame Dravidianist, on the eve of his 117th Birthday.



28 Feb 1904 :: 29 Aug 2005

**In a long and active career spanning many transformations in American linguistics, he not only created the field of Dravidian linguistics — the analysis and comparative study of the Dravidian languages of South Asia — but also defined linguists' modern conceptions of "language areas". At the University of California, Berkeley, where he chaired the Department of Classics, founded the Department of Linguistics and the Survey of California Indian Languages, and was closely involved with the Department of South and Southeast Asian Studies (founded after his retirement), Murray is fondly remembered by many generations of students and colleagues.**






**Compilation of Papers**
**presented in**
**International Conference**
**organised by**

**Department of Tamil**
Sri Venksatesara University
**Dravidian University**
**UVeS Iyer Library**
**Na Subbu Reddiar 100 Educational Trust**

**On the eve of**

DIAMOND JUBILEE OF
(1960 – 2020)
DEPARTMENT OF TAMIL, SVU
(19 – 22 Feb 2020)

Honouring Tamil Thatha
on his 166th Birthday (19 Feb 2020)

| Dates | Place |
|---|---|
| 19 & 20 Feb 2020 | Department of Tamil, SVU [AP] |
| 20 - 22 Feb 2020 | Dravidian University [AP] |

## VOL I : CONTAINING 143 PAPERS

| | | |
|---|---|---|
| Tamil | 78 Papers | 445 Pages |
| Telugu | 47 Papers | 260 Pages |
| English | 18 papers | 120 Pages |

**Processed by:**

| | |
|---|---|
| Tamil | Department of Tamil, SV University & Dept of Tamil & Translation Studies, Dravidian University |
| Telugu | Dept of Telugu & Translation Studies, Dravidian University |
| English | Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai |








**Compilation of Papers**
**presented in**
**International Conference**
**organised by**

**Department of Tamil**
Sri Venksatesara University
**Dravidian University**
**UVeS Iyer Library**
**Na Subbu Reddiar 100 Educational Trust**

**On the eve of**

**DIAMOND JUBILEE OF**
(1960 – 2020)
**DEPARTMENT OF TAMIL, SVU**
(19 – 22 Feb 2020)

Honouring Tamil Thatha
on his 166th Birthday (19 Feb 2020)

| Dates | Place |
|---|---|
| 19 & 20 Feb 2020 | Department of Tamil, SVU [AP] |
| 20 - 22 Feb 2020 | Dravidian University [AP] |

# Papers in Tamil

# [Papers 78 <::> 445 Pages]

## உள்ளடக்கம்

# தமிழர் உணவு மரபு

**முனைவர் மு.அனு**
உதவிப்பேராசிரியர் - தமிழாய்வுத்துறை
காவேரி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி-18
anupower1986@gmail.com

*****

சங்க இலக்கியம் தமிழரின் நாகரிகம், பண்பாட்டின் உரைவிடமாகத் திகழ்கின்றது. விருந்தினை ஓம்புவதும், சுற்றத்தாரை உபசரிப்பதும், இரப்பவர்க்கு ஈவதும் அப்பண்பாட்டில் முக்கியமானவையாகும். சங்ககால மக்கள் செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருந்தனர்.

**"விருந்து அயர் விருப்பொடு வருந்தும்
திருந்திழரை அரிவைத் தேமொழி நிலையே" (நற்றிணை, பா.எ-81)**

என்ற வரிகள் பெண்களின் விருந்தோம்பும் விருப்பத்தைப் புலப்படுத்துகின்றன. பழந்தமிழரின் விருந்தோம்பும் பண்பின் வாயிலாக அவர்களின் உணவுமுறைகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

**"நீரின்றி யமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!
உண்டி முதற்றே உணவின் பிண்டம்" (புறம்,பா.எ-18)**

என்று வாழ்ந்தவர்களும், பிறர் வாழ வழிகாட்டியவர்களும் தமிழர்களே. உணவு பற்றிப் பிங்கல நிகண்டு கூறுகையில்,

**"உணவே வல்சி யுண்டி யோதன
மசனம் பதமே யிரை போகார
உறை யூட்ட முணவென லாகும்" (சூத்-1153)**

உணவு, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் என்று கூறுகின்றது. இத்தகைய உணவை உலகில் முதன்முதல் நாகரிகமாய்ச் சமைத்துண்டவன் தமிழன். பிற நாட்டினரெல்லாம் தம் நாட்டில் விளைந்த உணவுப் பொருட்களைப் பச்சையாகவும், சுட்டும், வெறுமையாய் அவித்தும் உண்டுவந்த காலத்தில் உணவைச் சோறும் கறியும் என இரண்டாக வகுத்தும், நெல்லரிசியைச் சோறாகச் சமைத்தும், சுவையூட்டும் குழம்பு வகைகளையும் சேர்த்து உயர்வாக உண்டு வந்த பெருமை தமிழனுக்குரியது.

பண்டைத்தமிழர்கள் சுவைமிக்க உணவுப் பொருட்களைச் சமைப்பதில் திறம்மிக்கவர். அவரவர் வாழ்ந்த நிலத்திற்கேற்ப உணவு முறைகள் வேறுபட்டன. அவரவரின் பொருளாதார நிலையையொட்டியும் உணவின் தரம் வேறுபட்டிருந்தது. அரிசி உணவு அக்காலம் முதல் இக்காலம் வரை உணவு வகைகளுள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. உலகில் அரிசி வகைகள் பல உள்ளன. அவற்றுள் நெல்லரிசிச் சோறுபோல் வேறொன்றும் குழம்போடு பொருந்தி சுவையூட்டுவதில்லை. தமிழகத்திலேயே, காடைக் கண்ணியரிசி, குதிரைவாலியரிசி, சாமையரிசி, திணையரிசி, வரகரிசி என ஐந்துவகையான அரிசிகள் உள்ளன. இவை நெல்லரிசிக்கீடாகா. இதிலும் பல வகையுள்ளன. பச்சரிசி,

புழுங்கலரிசி என்னும் இருவகையுள், தமிழர் பெரும்பான்மையரக விரும்பியது புழுங்கலரிசியே. அது சூட்டைத் தணிப்பதால் வெப்பநாட்டிற்கு ஏற்றதாகவும், குழம்பின் சுவையைக் கூட்டுவதாகவும் உள்ளது.

**"இருங்கா முலக்கை யிரும்புமுகந் தேய்த்து**
**அவைப்புமான் அரிசி அமலைவெண் சோறு"(சிறுபாண்,பா.அ-193-194)**

என்று, தூய வெள்ளையாய் அரிசி தீட்டப்பட்டதைத் தெரிவிக்கிறது சிறுபாணாற்றுப்படை.

**அறுசுவை:**

முக்கனிகளுள் ஏதேனுமொன்று இனிப்பும், பாகற்காய் அல்லது சுண்டைவற்றல் கசப்பும், காரவடை உறைப்பும், புளிக்கறியும் தயிரும் ஊறுகாயும் புளிப்பும், மாதுளங்காய் துவர்ப்பும், உப்பேறிய உவர்ப்பும் போன்றவற்றை அறுசுவை உணவு என்பர். இத்தகைய உணவு, தமிழரின் சுவை முதிர்ச்சியையும், தலைசிறந்த நாகரிகத்தையும், மருத்துவ அறிவையும், உடல்நலத்தையும் ஒருங்கே காட்டக்கூடியது. இவ் அறுசுவைகளில் தமிழர்க்குச் சிறந்தவை இனிப்பும் புளிப்புமாகும் என்பதை,

**"முளிதயிர் பிசைந்த காந்தல் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்**
**தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்" (குறுந்.பா.எ-164)**

என்னும் குறுந்தொகை அடிகளும்,

**வேளை வெண்பூ வெண்டயிர்க் கொளீஇ**
**ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை" (புறம்.பா.எ-215)**

**பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்**
**அளவுபு கலந்து மெல்லிய பருகி" (புறம்.பா.எ-281)**

என்னும் புறப்பாட்டடிகளும் தெளிவுறுத்துகின்றன.

**தாளித்தல்:**

சோறு, காய்கறி, துவையல் போன்றவற்றைத் தாளித்து உண்ணும் முறையும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றது. கடுகு, கறிவேப்பிலை முதலியவற்றைத்தூவி பசுவின் நெய்யில் தாளித்தும், முதன்முதல் குழம்பு காய்ச்சப் பெற்றதும் தமிழகத்தில்தான். தாளிப்பு இலக்கிவழக்கில் 'குய்' எனப்படும்.

**"சுவைக்கு இனிதாகிய குய்யுடைய அடிசில்**
**பிறர்க்கு ஈவுஇன்றித் தம்வயிறு அறுத்தி**
**உரைசால் ஓங்கு புகழ் ஒரீஇய**
**முரைசு கெழு செல்வந்தர் நகர்"(புறம்.பா.எ-127)**

என்ற வரிகள் செல்வந்தர்களின் இல்லங்களில் பலவிதமாகத் தாளிக்கப்பட்ட உணவுவகைகள் காணப்படுவதையும்,. பிறர்க்கு ஈதல் இன்றித் தாமே வைத்து உண்ண நினைக்கக்கூடிய வகையில் தாளித்த உணவு வகைகள் இருந்ததையும் புலப்படுத்துகின்றன.

**“குய் இடு தோறும் ஆனாது ஆர்ப்ப**
**கடல் ஒலி கொண்டு...............**
**நடுவண் எழுந்த அடுநெய் ஆவுதி” (பதிற்று,பா.எ-21)**

என்கிறது பதிற்றுப்பத்து. அதாவது, தலைவி இறைச்சி உணவைத் தாளித்ததால் எழும் ஓசையானது கடலோசை போல ஒலித்ததாகவும், நெய் சேர்த்த உணவையும், நெய்யாகிய ஆவுதியின் புகையையும் எடுத்துக்கூறுவதால் தமிழனின் சமையற் கலையின் சிறப்பினை அறியமுடிகின்றது.

**இன்புளி வெண்சோறு:**

ஈசலைச் சங்கத் தமிழர்கள் தங்களது உணவில் சேர்த்துக் கொண்டதனை சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இன்றும் சில பகுதிகளில் ஈசலைப் பொரியல் செய்து உண்ணும் வழக்கம் இருக்கின்றது. பண்டையநாளில் மோரிலும், தயிரிலும் ஈசலைக் கூட்டி சமைத்துள்ளதை,

**“செம்புற்று ஈயலின் இன் அளைப்புளித்து**
**மேன்தினை யாணர்ந்து நந்துங் கொல்லே” (புறம்.பா.எ.119:3-4)**

என்ற அடிகள்வழி அறியமுடிகின்றது. பாரியினைப் புகழும்போது அவன் பறம்பின் வளம்கூறுங்கால் கபிலர், புற்றில் மண்டும் ஈசலைப் பிடித்து மோரோடு கூட்டிச் சமைத்த புளிங்கறியும் தினையும் நிறைந்திருந்தன என்று ஈசல் உணவினை பற்றிக் கூறுகிறார்.



**“சிறுதலைத் துருவின் பழுப்புறு விளைதயிர்**
**இதைப்புன வரகின் அவைப்புமான் அரிசியொடு**
**......................................................**
**இளையர் அருந்த” (அகம்.பா.எ.394:3-8)**

நன்கு முற்றிய தூய்மையான தயிர், செம்மறியாட்டினை ஒத்த பழுப்பு நிறத்தில் இருந்தது. முற்றிய தயிரையே நீருக்குப் பதிலாக உலைநீராய் பெய்தனர். புதுக் கொல்லையில் விளைந்த நன்கு முற்றிய வரகரிசியைத் தயிரில் போட்டு வேகவைத்தனர். வெந்து வரும் சோற்றினுல் புற்றிலிருந்து வெளிவந்து அழிந்த ஈசலை இட்டுச் சமைத்தனர். வெந்து திரண்டு வந்த வரகு சோற்றில் மணக்க மணக்கப் பசுவின் வெண்ணெயை ஊற்றி சோற்றில் கிடந்து உருகுமாறு செய்தனர். இவ்வுணவு இனிப்பும், புளிப்புமாக இருந்ததால் இன்புளி வெண்சோறு எனக் குறிப்பிட்டனர். வரகுச் சோற்றுக்குள் ஈசலைக் கலந்து சமைத்த இவ்வுணவினை வேலைக்காரர்களுக்கென்றே தனியாகத் தயாரித்தனர் என்பது இவ்இலக்கிய அடிகள் வாயிலாக புலனாகின்றது.

**ஊன் உணவு:**

பண்டைத் தமிழகத்தில் ஊன் உணவு உண்ணும் வழக்கமிருந்தது. சேரமான் செல்வக்கடுங்கோ வாழியாதன் கபிலர் கையைப் பிடித்து ‘உம் கை மெல்லிதாயிருக்கிறதே! காரணம் என்ன?’ என்று வினவியதற்கு, அவர்,

**“புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலின் நன்றும்
மெல்லிய பெரும தாமே..................
...............................................
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே” (புறம்.பா.எ-14)**

என்றுரைப்பதால், அக்காலத்துப் பிராமணனும் ஊனுண்டமையை அறியமுடிகின்றது. மன்னர்களும் தங்களைக் காணவரும் பாணர் முதலியோருக்குப் புலால் உணவையே கொடுத்து உபசரித்திருக்கின்றனர் என்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

**“புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற்றத்த புகை கொளீஇ ஊன்துவை
கறிசோறு உண்டு” (புறம்.பா.எ.14:12-14)**

புலால் மணமுடைய இறைச்சியைக் கொண்டு கறித்துவையல், கறிப்பிரட்டல், கறிசோறு முதலானவற்றைச் செய்து உண்டு மகிழ்ந்திருந்தனர் என்பதை இவ்வடிகள் வழி அறியமுடிகின்றது. ஆட்டில் வெள்ளாட்டுக் கடாவையே பண்டைத் தமிழர் சுவையுள்ளதென விரும்பியுண்டதை,

**“மாடற் தோறும் மைவிடை வீழ்ப்ப” (புறம்.பா.எ-33)
“மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்ப” (புறம்.பா.எ-113)
“நறவுந் தொடுமின் விடையும் வீழ்ப்ப” (புறம்.பா.எ-262)
“மைவிடை யிரும்போத்துச் செந்தீச் சேர்த்தி” (புறம்.பா.எ-365)
“விடை வீழ்த்துச் சூடுகிழிப்ப” (புறம்.பா.எ-366)
“மரந்தோறும் மைவீழ்ப்ப”(மதுரைக்.பா.அ-754)
“மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி”(பெறும்.பா.அ-143)**

போன்ற வரிகளால் அறியமுடிகின்றது.

**மீன் உணவு:**

பெரிய வரால் மீனின் துண்டுகள் எண்ணைப் பசையுடன் மிளிருமாறு கண்ணைக் கவரும் விதத்தில் மீன் குழம்பு தயாரிப்பதில் தமிழகப் பெண்கள் வல்லவராய் இருந்தனர். மீனை மக்கள் விரும்பி உண்டு மகிழ்ந்திருந்தனர்.

**“பிடிக்கை யன்ன செங்கண் வரால்
துடிக்கண் அன்ன குரையொடு விரைஇப்” (மலைபடு.457-458)**

என்பதன்வழி பெண்யானையின் தும்பிக்கை போன்ற சிவந்த கண்களை உடைய வரால் மீனின் துடியின் கண் போன்ற துண்டத்துடன் கலந்து மகளிர் விருந்து உபசரித்ததை இப்பாடல் விளக்குகிறது.

**“கொழுமீன் குறைய ஒதுக்கி” (சிறுபாண்-41)
“கொழுமீன் குறைய துடிக்கண் துணியால்” (மதுரைக்.-320)**

மீனினை உணவின் பொருட்டு மக்கள் பயன்படுத்தியமையை இவ்வடிகள் விளக்குகின்றன.

**"ஓங்குசினை மாவில் தீங்கனி நறும்புளி
மோட்டிரு வராஅல் கோட்டுமீன் கொழுங்குறை" (புறம்.பா.எ.399:4-5)**

இப்பாடலில் வரால் மீன் குழம்பிற்கும் புளியாக மாங்கனி பயன்படுத்தப்பட்டது தெரிகிறது. மீன் உணவு பற்றிய செய்திகள் நற்றிணை(60), அகநானூறு(19) போன்ற பல்வேறு நூல்களிலும் இடம்பெற்றுள்ளன.

**கருவாட்டு உணவு:**

தொண்டைமான் இளந்திரையனின் நாட்டில் உள்ள பாலைநில எயிற்றியர்கள்கூட விருந்தோம்புவதில் வல்லவர்களாய் இருந்துள்ளனர். இளந்திரையனைப் பாடிப் பரிசில் பெற விழையும் பாணர்களுக்குக் கருவாடு உணவிட்டு உபசரித்ததை நம் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

**"....................நெடுங்கிணற்று
வல்லூற்று வரி தோண்டித் தொல்லை
..........................................
பைந்தீ கடும்பொடு பதமிகப் பெறுகுவிர்" (பெரும்.97-105)**

ஆழமான கிணற்றில் கொஞ்சமாக ஊறுகின்ற உப்புநீரை எடுத்துக்கொண்டு வந்து வாய் உடைந்த பழைய பானையில் ஊற்றப்பட்ட உலை நீரை உடைந்த அடுப்பில் வைத்து, அரிசியைக் கழுவாமல் இட்டுச் சமைத்த சோற்றைக் கருவாட்டுடன், இளந்திரையனது பாணச்சாதி, கேள்விப்பட்டவுடனே, எயிற்றியர் தமது வறுமையை மறந்து விருந்தோம்பலுக்குத் தயாராகி விடுவர். தாம் சமைத்த புல்லரிசி சோற்றைக் கருவாட்டோடு சேர்த்து, தெய்வத்திற்குப் பலியிடுவது போலத் தேக்கிலையில் குவித்துத் தருவர்.

**இரும்பில் கோர்த்துச் சுட்டகறி:**

சோழன் கரிகாற் பெருவளத்தான் ஈடிணையற்று வாரி வழங்கியவன். தன்னை நாடிவந்த பரிசிலர்க்குக்கூட மென்றுமென்று பற்கள் முனை மழுங்கி போகுமளவிற்கு, சுட்ட இறைச்சியைக் கொடுத்து உபசரித்ததைப் பொருநாற்றுப்படையில் காணமுடிகின்றது. இறைச்சியைக் கம்பியில் கோர்த்துப் பக்குவப்படுத்துதலை இன்று 'Grilled Chicken' என்று வாயில் நீர் ஊறப் பேசுகின்றனர். ஆனால் சங்க காலத்திலேயே இரும்புக்கம்பியில் கோர்த்துச் சுவைமிக்க கறியுணவு தயாரித்ததை,

**"காழின் சுட்ட கோழ் ஊன் கொழுங்குறை
ஊழின் ஊழின் வாய்வெய்து ஒற்றி" (பொரு.105-106)**

ஏன்ற அடிகள் உணர்த்துகின்றன. செம்மறி ஆட்டின் பருத்த மேல் தொடையின் வெந்த இறைச்சியையும், இரும்புக் கம்பியில் கோர்த்துச் சுடப்பட்ட கொழுத்த இறைச்சித்துண்டுகளையும் 'உண்ணுங்கள் உண்ணுங்கள்' என்று கரிகாலன் பரிசிலரைப் பலமுறை வற்புறுத்தி உண்ணச் செய்தான். அதனால், சுட்ட இறைச்சியைப் பரிசிலர்கள் சுடச்சுட எடுத்து வாயிலிட்டு மென்றனர் என்பதை பொருநாற்றுப்படையின் வழி அறியமுடிகின்றது. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்று பசித்தோருக்கு உணவு இடுவதிலும், சுவைமிக்க உணவு வகைகளைச் சமைப்பதிலும் பழந்தமிழர் முன்னோடிகளாய் விளங்கியதை சங்க இலக்கியங்கள் பதிவு செய்து, தமிழரின் பெருமையினை பறைசாற்றுகின்றன.

*****

## முன்னுரை

இந்தியா மிகப் பரந்து பட்ட நாடு. பல்வேறு இனத்தவர்களும், பலமொழி பேசும் மக்களும் வேற்றுமையில் ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகின்றனர். பல மொழிகள் பேசப்பட்டு வந்தாலும் அனைத்தும் ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை அல்ல. திராவிடமொழிகள், இந்தோ-ஆரிய மொழிகள், திபோத்தோ-பர்மிய மொழிகள், என நான்கு குடும்ப மொழிகளுக்குள் அவை அடங்கப்படுகின்றன. அவற்றுள் திராவிட மொழிகளுள் ஒன்றான தமிழ் மொழியால் வளர்ந்த இந்தியப் பண்பாடு குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இலெமூரியா:

உலகில் மனிதன் முதன் முதலில் பிறந்த இடம் இலெமூரியா கண்டம் ஆகும். இது தான் மனித நாகரிகத்தின் தொட்டிலாகவும், இந்தியப் பண்பாட்டிற்கு அடிப்படையாகவும் அமைகிறது. இலெமூரியா எனப்படும் குமரிக்கண்டத்தில் தோன்றிய அவ்வினத்தாரே தமிழரின் மூத்த ஆதிகுடிகள் என்று வரலாறு கூறுகிறது. கடற்கரை, ஆற்றங்கரை, மலைக்குகைகளில் மக்கள் வாழ்ந்து வந்த இந்நிலப்பகுதி ஒரு காலத்தில் கடல்கோளால் அழிந்துப் போனது.

**“மறைந்த குமரிக்கண்டம் (Lost Lemuria) என்னும் ஆங்கில நூலுட் போந்த படத்தினாலே, ஒரு பெருமலையானது மேலைக்கடலில் தொடங்கி வடக்குந் தெற்குமாகக் குமரிக்குத் தென்பகுதியிலுள்ள நிலப்பகுதியிலே நெடுந்தொலைவு சென்று பின் தென்மேற்காகத் திரும்பி ‘மடகாசுக்கர்’ என்ற ஆப்பிரிக்கத் தீவுவரை சென்றதாகத் தெரிகின்றது. அம்மலைக்குக் கீழ்ப்பக்கம் உள்ள நாட்டில் பெருமலை ஒன்றுமிருந்ததாகத் தெரியவில்லை. இந்த மலையானது தென்கிழக்கு முதல் வடமேற்குவரை செல்லுகின்ற இமயமலையைப் போல வடமேற்குத் தொடங்கித் தென்கிழக்கிற் செல்லுகின்ற ஒரு பெரு மலைத்தொடராக இருந்திருப்பதாகத் தெரிகிறது.”**[1] என்று பேரா.கா.சுப்பிரமணியப்பிள்ளை வரைந்திருக்கிறார். குமரிக் கண்டம் என்ற ஒரு பகுதி இருந்ததே இல்லை, அவை கட்டுச் செய்திகள் என்று வடமொழிநூலாசிரியர்கள் மறுக்கின்றனர். ஆனால், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில், குமரிமலைத்தொடரும் அங்கு ப∴றுளியாறு ஓடியதாகவும் குறிப்பிடுகின்றார். இதனை,

**ப∴றுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக் கோடும் (சிலப்:11:19-20)**

என்ற பாடல் வரியில் அறியலாம்.

## சிந்துவெளி நாகரிகம்

குமரிக் கண்டத்தில் தோன்றிய மனிதன் இந்தியாவின் வடக்கு நோக்கிச் சென்று குடியேறினான். அங்கு குடியிருப்புகளையும் நகரங்களையும் உருவாக்கி நாகரிகத்தோடு வாழ்ந்து வந்த இப்பகுதியும் ஒரு

காலத்தில் மண்ணுள் புதையண்டது. 1920-ம் ஆண்டு நடைபெற்ற அகழ்வாராய்ச்சியில் ஹரப்பா என்ற நகரமும், 1922-ம் ஆண்டு மொகஞ்சதாரோ என்ற நகரமும் நிலத்தினடியில் புதையுண்டிருப்பதாக கண்டுபிடிக்கப்பட்டன. இந்நகரங்கள் சிந்து சமவெளிப் பகுதிகளில் கண்டெடுக்கப்பட்டதால் இதற்கு சிந்துவெளி நாகரிகம் எனப் பெயரிடப்பட்டுள்ளது. இந்த நாகரிகத்தை தோற்றுவித்தவர் தென்னாட்டிலிருந்து சென்று பரவிய திராவிடரே ஆவர் என்பதை அங்கு கண்டெடுக்கப்பட்ட பொருள்களைவைத்து அறிய முடிகிறது. **“குசராத் மாநிலத்தை ஒட்டியுள்ள காம்பே வளைகுடாவில் சிந்துவெளி நாகரிகத்திற்குரிய நகரம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அங்கு கிடைக்கப்பெற்ற மரத்துண்டின் காலம் கி.மு.7000 என்று அறிவியல் ஆய்வு கூறுகிறது. இதன்படி பார்த்தால், சிந்துவெளி நாகரிகம் கி.மு.7000-க்கு உரியது. ஏகிப்திய, சுமேரிய நாகரிகத்திற்கும் முந்தியதாகிறது. அதாவது வரலாற்றில் முதன்மைத் தொன்மைக்குரிய தொல்பொருள் அகழாய்வு தமிழினத்திற்கு உரியது என்ற பெருமையை அது அளிக்கிறது.”**[2]

ஒரு நாட்டின் மொழி வளர்ந்தால், பண்பாடு, கலை, கலாச்சாரம் ஆகியவை வளரும் என்பதை பண்டைத் தமிழர்கள் உறுதியாக நம்பினர். **“தமிழைத் திட்டமிட்டு ஒரு செவ்வியல் மொழியாக வளர்க்கும் திட்டமிட்ட செயல் சங்க காலத்திற்கு முன்னரே தொடங்கி விட்டது எனலாம்.”**[3] இந்தியாவில் தோன்றிய பிறமொழி இலக்கியங்கள் யாவும் புராணச் செய்திகளையும், வேதாந்தக் கருத்துகளை கூறுவதாகவும் இருந்தன. திராவிட மொழிகள் மட்டும் தமக்கெனத் தனித்தன்மை கொண்டு வரலாற்றுத் தொடர்பினைப் பெற்று வந்துள்ளன. மக்கள் வாழ்ந்த வாழ்க்கை முறைகளை அகம், புறம் என பிரித்தும், அவர்கள் பயன்படுத்திய பொருள்களைக் குறித்தும் புலவர்கள் தாம் படைத்த இலக்கியங்களில் பதிவ செய்துள்ளனர்.

இந்தியப் பண்பாடு ஆரியமும் திராவிடமும் கலந்தது ஆகும். ஆரியம் சார்ந்த இந்தியப் பண்பாட்டிற்கு வடமொழி கொள்கலனாக விளங்குகின்றது. அதைப் போல் திராவிடம் சார்ந்த இந்தியப் பண்பாட்டிற்கு, திராவிடமொழிகளில் மிகவும் மூத்த பழமையான 2500 ஆண்டு இலக்கியப் பாரம்பரியம் கொண்ட தமிழ் மொழி கொள்கலனாக உள்ளது. **“இந்திய நாகரிகத்தில் இரண்டறக் கலந்திருக்கும் திராவிட நாகரிகத்தின் பண்பின் கொள்கலனாக இருப்பது தமிழ். இதனினும் மூத்த திராவிட மொழி எதுவும் இல்லை.”**[4]

இந்தியப் பண்பாட்டு வளர்ச்சிக்கு தமிழ் மொழி ஆற்றியுள்ள பங்களிப்பை தமிழிலுள்ள செவ்வியல் இலக்கியங்களான சங்க இலக்கியங்களில் தெளிவுறக் காணலாம். அண்மையில் நடந்த கீழடி அகழாய்வு முடிவுகள் குறித்து சிந்து வெளி ஆய்வுகளில் ஈடுபட்டு வரும் ஆர்.பாலகிருஷ்ணன் அவர்கள், **“கீழடியில் கிடைத்த பொருட்கள், குறிப்பாக எழுத்துகள் கிடைத்த படிவத்தில் கிடைத்த சில பொருட்கள் கரிம ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டு அவற்றின் வயது கி.மு.580 எனக் கண்டறியப்பட்டுள்ளது. ஆகவே எழுத்தறிவு இருந்தகாலம் அல்லது சங்ககாலம் என்பது கங்கைச் சமவெளியில் வரலாறு துவங்கிய காலத்திற்கு சமமாக இருக்கிறது. சிந்துசமவெளி நாகரிகத்தின் தொடர்ச்சியை எந்த இலக்கியத்தில் அதிகமாக பார்த்தறிய முடியும் என்ற கேள்வியை முன்வைத்தால், அதாவது சிந்துவெளி தொடர்பான நினைவுகளைக் கொண்ட இலக்கியம் எங்கிருக்கிறது என்று பார்த்தால் சங்க இலக்கியத்தில் தான் இருக்கிது. சங்க இலக்கியத்தைப் போல நகரங்களைக் கொண்டாடிய இலக்கியம் வேறு இல்லை.”**[5] என்று குறிப்பிடுகிறார்.

## திராவிடக் கலைகள்

மனிதனின் உடல் மற்றும் உள்ளத்தின் கற்பனைத்திறனை ஊக்குவித்து தனித்திறமையை வெளிப்படுத்துவது கலையாகும். இதனால் நாட்டின் பண்பாடு, வரலாறு, அழகியல் போன்றவை வெளிப்படும். பண்டைத் தமிழருடைய அழகியல் உணர்வு முத்தமிழாக வெளிப்பட்டது. இதனை,

**தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்”**

(பரிபாடல்:திர:4)

என்ற பரிபாடல் வரியால் அறியலாம். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழில் இயற்றமிழ் சொற்களால் எண்ணத்தை வளர்த்தது. இதனால் இலக்கியக்கலை தோன்றியது. சாதி, சமய, இன, மொழி, காலம் ஆகிய வேறுபாடுகளை எல்லாம் கடந்து உலக மக்களுக்கு என்றும் பயன்படக்கூடிய உலகப் பொதுமறையான திருக்குறள் தமிழில் தோன்றியது. பாட்டும் தொகையும் சேர்ந்த பதினெண் மேற்கணக்கு நூல்களும், அறநூல்களான பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், காப்பியங்களும், பக்தி இலக்கியங்களும் தமிழ் மொழியில் இயற்றப்பட்டுள்ளன. இந்தியாவிலுள்ள பிற மொழிகளைவிட தமிழ் மொழியில் மட்டும் தான் சைவம், வைணவம், கிறித்துவம், இஸ்லாம், சமணம், பௌத்தம் என அனைத்து சமய இலக்கியங்களும் தோன்றின. இதனால் இந்திய இலக்கியக்கலை உலகளவில் ஒரு தனிச்சிறப்பை அடைந்தது.

இசை என்பது கருவியினால் இசைப்பதாகும். குழல், யாழ், முழவு என மூவகை இசைக் கருவிகள் தமிழகத்தில் பெருஞ்சிறப்புடன் போற்றப்பட்டு வந்தன. **“ஏழு நரம்புகளைக் கொண்ட சிறு** இலக்கியக் கலையைப் போன்று பழங்காலத்திலிருந்தே தமிழகத்தில் இசைக்கலையும் நன்கு வளர்ச்சியடைந்திருந்தது. **யாழ் முதல் ஆயிரம் நரம்புகளைக் கொண்ட பேரியாழ் வரை பண்டைத் தமிழர் இசைத்து மகிழ்ந்தனர். இந்திய இசைக்கருவிகளில் யாழுக்கும் அதன் இசைக்கும் தனிச் சிறப்பு உண்டு.”**[6] இசைக்கலையோடு தொடர்புடைய நாட்டியக்கலையும் தமிழ்நாட்டில் தான் தோன்றியது. **“நாட்டியம் எனும் சொல் ‘நிருத்’ எனும் திராவிடமொழியின் வேர்ச்சொல்லிலிருந்து நிருத்த, நிருத்திய, நாட்டிய என்று திரிந்திருப்பதாக மொழியியல் அறிஞர்கள் கருதுகின்றனர்.”**[7] நாட்டியச் சரித்திரத்தை முறைப்படி ஆராய்ந்து வடமொழியில் எழுதிய பரத முனிவர் தென்னாட்டைச் சேர்ந்தவர் என்றும் அவர் ஆரியர் அல்லாத இந்தியப் பழங்குடி மக்கள் இனத்தைச் சேர்ந்தவர் என்றும் காலத்தின் நிலமைக்கேற்ப நாட்டிய சரித்திரத்தை வடமொழியில் இயற்றியருளினார் என்றும் வடமொழி நாடக ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர். இந்தியாவில் வளர்க்கப்பட்டுள்ள நாட்டியக்கலைகள் அனைத்திற்கும் பரத நாட்டியக் கலை தான் அடிப்படையாக அமைகிறது.

இந்தியக் கலைகளின் முழுமையான வளர்ச்சியில், திராவிடக் கலைகளின் மற்ற கலைகளான சிற்பக் கலையும் படிமக் கலையும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன. **“இந்திய நாகரிகம் என்றவுடன் உலக அறிஞர்கள் பலருடைய உள்ளத்தில் தமிழ்க் கலைஞர்கள், இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று எழுதிக் காட்ட இயலாத இறைவனுக்கு கற்பித்த நடராச வடிவே தோன்றுவதாகக் கூறுகின்றனர்.”**[8] திராவிடர்களால் தோற்றுவிக்கப்பட்ட இது போன்ற பல

கலைகளுக்குச் சான்றாக பல்லவர் கால சிற்பங்களும், சோழர் கால கோயீல்களும் இன்றளவும் இந்தியப் பண்பாட்டின் ஏற்றத்திற்கும் ஊற்றத்திற்கும் பெரும் பங்காற்றி வருகின்றன.

## இந்தியப் பழக்கவழக்கங்கள்

இந்தியப் பண்பாடடின் வரலாற்றை, வளர்ச்சியை, வாழ்வை ஆராய்ந்து பார்த்தால் சங்க காலத் தமிழ்மக்களின் பழக்கவழக்கங்களே தென்படுகின்றன. மனிதனுக்கு அடிப்படைத் தேவைகளாக இருப்பது உணவு, உடை, உறைவிடம் ஆகும். உணவு உற்பத்திற்குரிய வேளாண்மைத் தொழிலை இந்தியாவிற்கு அறிமுகம் செய்து வைத்தவர்கள் தமிழர்களே. தொன்பழங்காலத்திலிருந்தே தமிழர்கள் வேளாண்மைத் தொழிலைச் செய்து வந்தனர். **“நெல் முதலிய தானியங்களைப் பயிரிடுதல், வெற்றிலைக் கொடியைப் பயிரிடுதல் , கரும்பைப் பயிரிடுதல் போன்ற பல்வகைப் பயிர்த் தொழில்களைத் தொல் பழங்காலத் தமிழர் முதன்முதல் செய்யக் கற்றதோடு, அவற்றை இந்தியா முழுவதும் பரப்பினர்.”**[9] வேளாண்மை செய்வதற்கு ஏற்ற நீர்ப்பாசன முறைகளையும் உருவாக்கினர். ஆறு, குளம், ஏரி, கிணறுகளை தோண்டுதல் மழைநீர் சேமிப்புத் தொட்டிகள், கல்லணைகள் கட்டுதல் போன்ற நீர்ப்பாசன முறைகளை உருவாக்கியவர்கள் தமிழர்களே. இந்த நீர்ப் பாசன முறைகளே இன்றளவும் இந்தியாவின் பிற பகுதிகளிலும் பின்பற்றப்பட்டு வருகின்றன.

சமயங்களும் ஒரு நாட்டு பண்பாட்டின் பிரதிபலிப்புகளாக உள்ளன. இந்தியாவில் இன்று இந்து சமயக் கடவுள்களாக போற்றப்படும் சிவன், முருகன், விஷ்ணு, போன்ற தெய்வ வழிபாட்டு முறைகளும் சங்க காலத்து மக்களின் வழிபாட்டு முறைகள் தான் பின்பற்றப்பட்டு வருகின்றன. தமிழர்களின் பழக்கமான காது குத்தும் வழக்கமும் இன்று இந்தியா முழுவதும் பரவியுள்ளது. பிறந்த நாள் விழா கொண்டாடும் முறை ஆங்கிலேயரின் வருகையால் இந்தியாவில் தோன்றியது என்று கூறுகின்றனர். ஆனால் சங்ககாலத்தில் அரசர்களின் பிறந்த நாள் விழாவை வெள்ளணி விழாவாகக் கொண்டாடப்பட்டதை,

**பேரிசை நன்னன் பெரும்பெயர் நன்னாள்**
**சேரி விழவினும் ஆர்ப்பெழுந் தாங்கு**
(மதுரைக் காஞ்சி 6:618-619)

என்ற வரியால் அறியலாம். இது போன்று தமிழர்களின் பழக்க வழக்கங்களே, நாளடைவில் இந்தியாவின் பண்பாடாக மாறியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

## முடிவுரை

இந்தியப் பண்பாடு மிகப் பழமையானது மட்டுமல்லாது, மனிதர் உருவாக்கியுள்ள நாகரிகங்களின் சிக்கலான கூறுகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டதுமாகும். இன்று, திராவிட- ஆரிய சமூகப் பண்பாட்டின் கலந்த கலவையாக இந்தியப் பண்பாடு உள்ளது. இரு பண்பாடுகளின் இணைப்பும் வட இந்தியாவில் தான் நிகழ்ந்தது. இந்தியப் பண்பாட்டில் ஆரியப் பண்பாடு கலந்திருந்தாலும், திராவிடப் பண்பாட்டின் கூறுகளே முதன்மையானதாகவும் ஐம்பது விழுக்காட்டிற்கு மேல் கொண்டிருப்பது மறுக்க

முடியாத உண்மை என்று மொழியியல் அறிஞர்கள் மொழிவதிலிருந்து, திராவிடர்களின் சிறப்பை நாம் அறியமுடிகிறது.



**அடிக்குறிப்புகள்**

1.தமிழர் வரலாறு-1, மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர், பக்:03
2.பார் போற்றும் பாவாணர் தொகுதி-3, குணத்தொகை, பக்:121
3.The smile of Murugan on Tamil Literature of south India, கமில் சுவலபில், பக்:2
4.உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், டாக்டர்.வா.செ.குழந்தைசாமி, பக்:54
5.இணையம், பிபிசி தமிழ், 24 செப்டம்பர்2019
6.தமிழ்ப் பண்பாடு, முனைவர்.க.தா.திருநாவுக்கரசு, பக்:53
7.மேலது, பக்:54
8.மேலது, பக்:60
9.மேலது, பக்:22



# பண்பாட்டு வழியில் சமணம்

**முனைவர் ஜெ பாரதி**
ஆய்வாளர், சென்னை
anubharthi04@gmail.com

*****

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் பல காலத்தே பல புலவர்களால் பாடப்பட்டவை. அவ்வாறு பாடப்பட்ட சங்க இலக்கிய பாடல்கள் ஏதேனும் ஓர் அறத்தை வலியுறுத்தியே பாடப்பட்டன. அவ்வறங்களும் அகம், புறம் எனும் இரு பகுப்புகளைக் கொண்டே பாடப்பட்டன. இப்பகுப்புகள் கொண்ட பல கால தொகுப்புகளான சங்க இலக்கியப் பாடல்கள் பரிணாம வளர்ச்சி கண்ட நாகரிக மனிதனின் ஒட்டு மொத்த வாழ்க்கையின் பதிப்புகளாகின்றன. பரிணாம வளர்ச்சி கண்ட நாகரிக மனிதனின் ஒட்டு மொத்த வாழ்க்கையையும் வெறும் பாடல்களாக மட்டும் பாடாமல் அறங்களின் பதிவுகளாகப் புலவர்கள் பாடியுள்ளனர். அவ்வறங்களும் பாடப்பட்ட விதம் கொண்டு அது சார்ந்த மரபுநிலை உணர்த்தப்படுகின்றது. அம்மரபுகள் இரண்டு விதமாக பிரிக்கப்படுகின்றன. அவை தமிழ் மரபு, ஆரிய மரபு எனப்படும்.

**தமிழ் மரபு**

சங்ககால பண்பாடுகளை அறங்களாக பறை சாற்ற பயனர்களும் புலவர்கள் தொன்று தொட்டு மண்ணின் மரபைப் பற்றி, உள்ளது உள்ளபடி பாடல்களாக புனைந்தனர். சங்க கால புலவர்கள் தமிழ் மரபை சார்ந்தே பாடல்கள் இயற்றினர் என்பதாலும் வேறு மரபு கலவா பழம் மரபு என்பதாலும் தமிழ் மரபுக்கு புலவர் மரபு என்ற பெயருமுண்டு. அப்புலவர்கள் அரசின் முன் பாடி பரிசில் பெற்று வாழ்ந்த நிலையில் அவர்கள் பாடிய பாடலில் அரசனின் பெருமிகு வாழ்வு பாடப்பட்டது. அவ்வாறு அரசனை பாடுங்கால் அரசனை சார்ந்த மக்களின் அகவாழ்வும் புறவாழ்வும் கலந்துப் பாடப்பட்டன.

அவ்வாறு ஓர் கட்டுக்கோப்பிற்குள் அரசனின் புகழ்மிக்க ஆட்சிக்கும் மக்களின் அன்பான அமைதியான வாழ்விற்கும் தேவைப்பட்டவை, படிப்படியாக ஒரே நிலையில் வழுவப்பட்டு அறங்களை பின்பற்றும் மரபாயின. இவ்வாறு தமிழர்களின் வாழ்க்கை நிலை தொன்று தொட்டு சமூக வளர்ச்சிக்காகவும் அச்சமூக காரணியான மக்களின் வளர்ச்சி நிலைக்காகவும் ஓர் அறம் வகுக்கப்பட்டு அது புலவர்களால் சேகரிக்கப்பட்டு பரப்பப்பட்ட நிலையே புலவர் மரபானது.

**ஆரிய மரபு**

ஆரிய மரபிற்கு வைதீக மரபு என்றும் பெயருண்டு. வைதீக மரபு கோட்பாட்டின்படி ஆரிய சமூகம் வருணாசிரம மரபிற்கு உட்பட்டது. இதில் பிராமணம் என்பது முதலிடம் பெறுகிறது. வருணாசிரமத்தின் அடுத்த நிலைக்கானவை சத்திரிய, வைசிய, சூத்திரங்கள் ஆகும். ஆரிய மொழி சமஸ்கிருதம். இதன் கோட்பாடுகள் தருமங்கள் எனப்பட்டன. வேதமும், வேள்வியுமே இதன் அடிப்படை. ஆரிய மரபு வைதீக மரபு எனப்பட்டதால் இம்மரபை மறுத்தவை அவைதீக மரபுகள் எனப்பட்டன. இதில் சமணமும் பௌத்தமும் முதலிடம் பெறுகின்றன. தமிழ் சமூகங்களின் வாழ்வியலை பெரும் பாதிப்பிற்குள்ளாக்கிய ஆரிய மரபை எதிர்த்து அம்மரபின் வைதீக செயல்பாடுகளை மறுத்த சமண பௌத்த சமயங்கள் அவைதீக சமயம் என்றே அழைக்கப்பட்டன.

**சமய மரபுகள்**

சமய மரபுகள் வைதீகம், அவைதீகம் என இரு வகைப்பட்டன. வேதம் சார்ந்தவை வைதீக சமயம் எனவும் வேதம் சாராதவை அவைதீக சமயம் எனவும் பகுக்கப்பட்டன. இவைகளின் கலப்பில் ஓர் இலக்கண கட்டமைப்புக்குள் பாடப்பட்ட சங்க இலக்கியப் பாடல்கள் எளிமை, அகம், புறம், குறியீட்டுத்தன்மை சமய சார்பின்மை போன்ற பொதுப் பண்புகளைக் கொண்டவையாயின. இவை சமய சார்பற்று அறங்களை மட்டுமே பொருண்மையாகக் கொண்டு பாடப்பட்டன. இச்சங்க இலக்கியப் பாடல்கள் பிற்கால சமயத் தோன்றலுக்கான குறியீடுகளை திணைக் குடி தெய்வமாக சுட்டுகின்றன. இவை முருகன், மாயோன், முக்கண்ணன், திருமால் என பல பெயர்களை குறியீடுகளாகக் கொண்டு நம்பிக்கைகள் நிமித்தங்கள், வழிபாடுகள் போன்றவற்றின் சார்பு நிலைக்கானத் தன்மை கொண்ட நிலை அறியக் காண்கிறது.

**இலக்கியங்களின் நிலை**

பதினெண்மேல்கணக்கு நூல்களான சங்க இலக்கியத்தின் இந்நிலை வெளிப்பாடுகளால் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் அற இலக்கியங்களாக சுட்டுமிடத்து அவையும் அறங்களை வெளிக் கொணர்ந்தன. இந்நூல்கள் சமயங்களை சுட்டா. நிலைத் தன்மையில் பாடல்களில் கூறப்பட்ட அறம் கொண்டும் சில குறியீடுகளை கொண்டும் இன்ன சமய அறமென அறியும் நிலைக் கொண்டன. காப்பிய காலத்தில் இளங்கோவும் சாத்தனாரும் சமய நிறுவனங்களாக செயல்பட்டு சமண பௌத்த தெய்வங்களாக மகாவீரரையும், புத்தரையும் முன்னிறுத்தினர். வைதீகத்தை எதிர்த்து சமூகத்தில் புத்தொளி தந்த சமண பௌத்தத்தை எதிர்க்க மற்ற வைதீக மதங்கள் ஒன்று திரண்டன. கி.பி.7-ம் நூற்றாண்டில் அவைதீகத்தை எதிர்க்க வைதீக சமயங்களான சைவமும் வைணவமும் மறைமுகமாக கைகோர்த்து தனித்தனி நிறுவனமாக செயல்பட்டன. இந்நிறுவனத்தின் பெருஞ்சேவையாக சைவக் குரவர்களும் வைணவ ஆழ்வார்களும் ஊர் ஊராகச் சென்று இசை மூலம் பக்தியை பரப்பினர். இதன் மூலம் பக்தி இலக்கியங்களும், சிற்றிலக்கியங்களும் பெரும் வளர்ச்சி கண்டு இக்காலம் வரை பார் போற்றும் நிலை கொண்டன. இவ்வாறு சமூகத்தில் வேத மறுப்பு கொள்கை கொண்ட அவைதீக சமயமான சமணமும் பௌத்தமும் வளர பல எதிர்ப்புகளை எதிர்கொள்ளும் சூழல் கொண்டன. வைதிகம் அவைதீகம் இரண்டும் எதிர்க்கும் நோக்கில் தந்த சில தரவுகள் இன்றளவும் ஆய்வாளருக்கான பெரும் விருந்தாகும். தத்தம் சமய முன்னேற்றத்திற்காக புனையப்பட்ட இலக்கியத்தில் எதிர்கொண்ட சமயங்கள் எதிர்த்த சமயங்களை சாடிய நிலையில் ஆய்வுக்கான தரவுகளை அள்ளித் தந்துள்ளன.

**சமணத்தின் தோற்றம்**

கி.மு. 6ஆம் நூற்றாண்டில் சமண பௌத்த அறங்கள் மக்களின் மனதில் பரவும் வரை வைதீக வழியில் செயல்பட்டு பல குறைபாடுகளை சமூகம் கண்டது. அக்குறைபாடுகளை களைந்து வீடுபேறு என்பது யாது, என புது வழியில் விளக்கி அதை அடையும் வழியும் கண்ட சமணமும் பௌத்தமும், அது தந்த விளக்கங்களும் குழம்பியிருந்த மக்களுக்கு தேவையானதாகி மக்கள் ஏற்றுக்கொள்ள ஏதுவானதாக இருந்தன.

கி.மு. ஆறாம் நூற்றாண்டு ஓர் முக்கியமான நூற்றாண்டாக உலக வரலாற்றில் மலர்ந்த ஆண்டானது. மனித குல நாகரிக முன்னேற்றத்தில் இந்த நூற்றாண்டு ஓர் குறிப்பிட்ட நிலையை எய்தியது. அன்றைய சமுதாய மக்களின் சமய ஆன்மீகக் கருத்துகள் புரட்சிகரமான மாறுதல் அடைந்த காலம். உலக

வரலாற்றில் பிற்கால உலக சமயப் போக்கில் மாபெரும் மாறுபாடுகளை உண்டாக்கிய பெரியோர் தோன்றிய காலம் அது.[1]

ஒரே நூற்றாண்டில் தோன்றிய இரு பெரும் சமயத் தலைவர்களின் கருத்துக்கள் பெரும்பாலும் அதிக ஒற்றுமையும் சில வேற்றுமையும் கொண்டு சமுதாயத்தில் வேகமாக பரவி வந்தன. இவ்வாறு பரவிய இவ்விரு சமயங்களில் சமணத்தைப் பற்றிய ஒரு சிறு அலசலே இவ்வாய்வு. ஜைனம் என்னும் சொல் ஜீன என்பதிலிருந்து பெறப்படுகிறது. ஜீன என்பது வெற்றியடை என்னும் பொருள் கொண்ட சமஸ்கிருத வேர்ச்சொல்லாகிய ஜி என்பதன் அடிப்படையாகப் பிறந்த வென்றவன். அதாவது தன்னுடைய வல்லுணர்ச்சிகளை வெற்றிகரமாக அடக்கித் தன்னையே வென்றவன் என்னும் பொருள்படும்.[2]

சமண சமயக் கொள்கைகளை பரவச் செய்ய தீர்த்தங்கரர் எனும் பெரியோர்கள் அவ்வப்போது தோன்றினர் என்பது வரலாறு இதுவரை இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் தோன்றியுள்ளனர். இவர்களுள் மகாவீரர் இருபத்தி நான்காவது தீர்த்தங்கர் இவர்களின் பெயர்கள் வருமாறு:

1. விரு'ப தேவர் (ஆதிபகவன்)
2. அஜிதநாதர்
3. சம்பவநாதர்
4. அபிநந்தனர்
5. சுவாமிநாதர்
6. பதுமநாபர்
7. சுபார்சவநாதர்
8. சந்திரப்பிரபர்
9. பு்'ப தந்தர் (சுவிதிநாதர்)
10. சீதளநாதர் (சித்த பட்டாரகர்)
11. சிறீயாம்சநாதர்
12. வாசபூஜ்யர்
13. விமலநாதர்
14. அநந்தநாதர் (அநந்த ஜித் பட்டராகர்)
15. தருமநாதன்
16. சாந்திநாதர்
17. குந்துநாதர் (குந்து பட்டாரகர்)
18. அரநாதர்
19. மல்லிநாதர்
20. முனிசுவர்த்தர்
21. நமிநாதர் (நமி பட்டாரகர்)
22. பார்ச்சுவநாதர்
23. வர்த்தமான மகாவீரர்[3]

இவர்களில் பார்சுவநாதர் சமண மதத்தை உண்டாக்கினார். அவருக்கு அடுத்த தீர்த்தங்கரான மகாவீரர் இச்சமயத்தை சீர்திருத்தியமைத்தார் என்பது வரலாறு. சமணம் பிற்காலத்தில் மூன்று பிரிவுகளைக் கொண்டது. அவை சுவேதாம்பரர் சமணம், திகம்பர சமணம், ஸ்தானசுவாசி சமணம் என்பன.

வாழ்க்கையை இல்லறம், துறவறம் என இரண்டு வகையாக சமணர்கள் பிரிக்கின்றனர். இவை சாவக தர்மம், யதிதர்மம் எனப்படுகின்றன. கணவன், மனைவி, மக்கள், சொந்தம் சுற்றத்தார் ஆகியோருடன் வாழும் வாழ்க்கை சாவகதர்மம் ஆகும்.

யதிதர்மம் எனப்படும் துறவறம் உலகத்தை துறந்து வீடுபேற்றினை கருத்தில் கொண்டு தவஞ்செய்யும் முனிவரது ஒழுக்கம் ஒழுகுதல் யதிதர்மம் எனப்படும்.

பிறவிநோயை நீக்கி வீடுபேறு பெறுவதை நோக்கமாகக் கொண்டு துறவு மேவும் சமணர் தமது துறவற வாழ்க்கையில் மேற்கொண்டொழுக வேண்டிய ஒழுக்கங்களாக இருபத்தெட்டு மூலகுணங்கள் கூறப்படுகிறது. இவற்றுள்

**“பொய், கொலை, களவு, காமம், அவா இருள் புகாது போற்றி”** (சீசி.2834)[5]

என சீவகசிந்தாமணி முதல் ஐந்து மாவிரதங்களை கூறுகிறது. அவை

**மாவிரதங்கள் ஐந்து**

1. அகிம்சை - கொல்லாமை
2. வாய்மை - பொய்யாமை
3. கள்ளாமை - களவாடாமை
4. துறவு - பிரம்மச்சரியம்
5. அவாவறுத்தல் - முற்றும் துறத்தல்

துறவு கொள்வோர் மேற்கொள்ள வேண்டிய முதல் ஒழுக்கம் இவை என சமணம் கூறுகிறது.

**சமிதிகள் ஐந்து**



**இரியா சமிதி** : சமணத்துறவி தரையில் புழு, பூச்சி இல்லாதவாறு மூன்று முழ தூரம் பார்த்து கவனத்துடன் நடத்தல்.

**பா'ா சமிதி** : பழித்துப் பேசுதல், புகழ்ந்து பேசுதல், கோபமாக பேசுதல், கடுஞ்சொற்கூறல் போன்றவற்றை நீக்கி நாவடக்கம் கொள்ளல்.

**ஏ'ணா சமிதி** : குற்றம் இல்லா உணவை சமண துறவி யாசித்து பெற்று அதிகமாக உண்ணாமல் அளவாக உண்ணுதல்.

**ஆதான நிடே' பனா சமிதி** : சமணத்துறவிக்கு நூல், குஞ்சம், கமண்டலம் ஆகியவை எடுக்கும் போதும் வைக்கும் போதும் எறும்பு முதலிய சிற்றுயிர்கள் இறக்காதபடி விழிப்போடிருத்தல்.

**உத்சர்க்க சமிதி** : சமணத்துறவி மலம், மூத்திரம் கழிக்கும்போது ஊருக்கு அப்பால் ஒருவரும் நடமாடாததும் யார் கண்ணிலும் படாத இடத்திலும் கழித்தல்.

**ஐம்பொறி அடக்கம்**

ஐம்பொறிகளின் வாயிலாக நல்வினை தீவினை அறிந்து ஒழுகல்

**கண்** : களிப்பை காணாது இருத்தல்.
**நாசி** : மலர்கள், நறுமண பொருட்களை நுகராமை
**நா** : அறுசுவையறுத்தல்
**ஊறு** : இன்பம் அளிக்கும் பொருட்களை தேய்த்தல் தொடுதல் கூடாது.

**ஆவஸ்யகம் ஆறு**

இவை 'டாவஸ்யக்கிரியை எனப்படும்.

**சாமயிகம்:**

உலக இன்ப துன்ப, நன்மை தீமைகளை ஒரே கண்ணோட்டத்துடன் காணல்.

| | |
|---|---|
| **துதி** | : தீர்த்தங்கரர்களை போற்றித் துதித்தல். |
| **வணக்கம** | : குருக்களையும் பெரியோர்களையும் போற்றி வணங்குதல். |
| **பிரதிகிர்மணம்** | : பாவத்திற்கு காரணமானவை நேராதபடி இருத்தல். |
| **கழுவாய்** | : விரதத்தில் ஏதேனும் குற்றம் குறை நேர்ந்தால் அக்குற்றத்தை கழுவுதல். |
| **விசர்க்கம்** | : தவம் புரியும்போது வரும் துன்பங்களை அஞ்சாமல் பொறுத்தல். |

சமணத்துறவிகள் தாம் ஒழுக வேண்டிய தவத்தின் போது கீழ்வரும் ஏழு ஒழுக்கங்களை கடைபிடித்தல்

| | | |
|---|---|---|
| **லோசம்** | : | மயிர் களைதல் |
| **திகம்பரம்** | : | நிர்வாணம் எய்துதல் |
| **நீராடாமை** | : | நீராடிச் செய்யும் புறத்தூய்மையை விட அகத்தூய்மை சிறந்ததென கருதுதல். |
| **தரையில் படுத்தல்** | : | பாய் படுக்கையின்றி தரையில் படுத்து உறங்குதல் |
| **பல் தேய்க்கானம்** | : | பல் தேய்த்தால் உடம்பின் மீது பற்று ஏற்படும் என்று பற்றில்லாத இந்த யாக்கை பேணப்படாமல் இருத்தல். |
| **நின்று உண்ணல்** | : | சுகமாக உண்ணாமல் நின்றபடி உண்ணல். |
| **ஏகபுக்கம்** | : | ஒரு நாளைக்கு ஒரு வேளை உண்ணல் |

.
மேற்கண்ட தர்மங்கள் யதி தர்மங்கள் ஆகும்.



**இல்லற தர்மம்**

இல்லற தர்மமான சாவக தர்மம் ஒன்பது ஒழுக்கங்கள் கொண்டது

**அணுவிரதம் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | **அகிம்சை** | - | கொல்லாமை |
| 2. | **பொய்யாமை** | - | பொய் பேசாதிருத்தல் |
| 3. | **கள்ளாமை** | - | களவு செய்யாதிருத்தல் |
| 4. | **பிறன்மனை விரும்பாமை** | - | பிறர் மனைவியை நாடாமை |
| 5. | **பொருள் வரைதல்** | - | பொருளை ஈட்ட வரைமுறை |

மேற்கண்ட அணுவிரதங்களோடு

1. **கள் உண்ணாமை**
2. **ஊன் உண்ணாமை**
3. **தேன் உண்ணாமை**

இவைகளுடன் இரவு உண்ணாமை அதாவது சூரியன் மறைந்த பிறகு உணவு கொள்ளுதல் கூடாதவையாகின்றன.

கி.பி.3-ம் நூற்றாண்டு முதல் 8-ம் நூற்றாண்டு வரை இருண்ட காலம் எனப்பட்டது களப்பிரர் ஆட்சிக்குப் பிறகு பல்லவர்கள் தமிழகத்தை ஆண்டார்கள். சமயம் செல்வாக்குப் பெற்றதும் அக்காலகட்டத்தில் தான்.

காஞ்சிபுரத்தில் தமிழுக்குத் தனியே பல்கலைக் கழகம் அமைத்த பெருமை சமணத்திற்கு உண்டு. மகேந்திரவர்மன் காலத்தில் அரசியல் செல்வாக்கோடு சமணப்புலவர்கள் தமிழை ஆராய்ந்தனர். இலக்கிய இலக்கணத்தை எளிமைப்படுத்த எண்ணினர். இதன் பயன் நன்னூல், யாப்பருங்கலகாரிகை, அகப்பொருள் விளக்கம், தண்டியலங்காரம், புறப்பொருள் வெண்பாமாலை, காப்பியங்கள், புராணங்கள், நீதி நூல்கள் போன்றவை தோன்றின.

சமண மதம் தமிழகத்தில் ஒளிர்க்கத் துவங்கிய காலம் முதல் பல நூற்றாண்டுகளாகச் சமணத் துறவியர் நாட்டின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று சமய சமுதாயப் பணிகளை ஆற்றியுள்ளனர். மனிதகுலம் போற்றும்படி கொள்கைகளை கூறிய சமண சமயம் இன்றளவும் பார் போற்றும்படி பெயர் கொண்டுள்ளது. சமண சமயத் துறவிகள் நாடோடிகள் போல் சுற்றி கொள்கைகளைப் பரப்பியும் இலக்கண இலக்கியத் தொண்டாற்றியும் வந்தனர். அவர்கள் கூறிய கொள்கைகள் இன்றளவும் தமிழ் பண்பாடாக பின்பற்றப்பட்டு வருகின்றன. மேலும் சமணம் பெண்களை போகப் பொருளாகக் கருதாமல் அவர்களுக்கு கல்வியில் முன்னுரிமை, துறவில் பங்கு, இல்லறத்தில் பங்கு, கல்வி புகட்டும் உன்னத ஆசிரியை பணி போன்றவற்றில் பெண்களுக்கு பங்களிக்கிறது.



வயதில் சற்று முதிர்ந்த உடலாலும் உள்ளத்தாலும் வலிமையுடைய கற்ற, சகிப்புத்தன்மையுடைய குழந்தைகளை வளர்க்கும் விதம் அறிந்த பெண்களே ஆசிரியராகத் தேர்வு செய்யப்பட்டனர். இவ்வாறெல்லாம் கடும் பயணம் தற்காலத்தில் குறைவுபட்டாலும் அழிக்கப்படாமல் சமணம் என்றும் பெருமரமாக வளர்ந்து தமிழர்களின் பண்பாட்டில் பல கிளைகள் இன்றளவும் உலகிற்கு பறை சாற்றுகின்றன.

**துணை நின்ற - நூல்கள்**


1. பௌத்தமும் சமணமும் - ப.5-ந.சுப்ரமணியன்
2. இந்திய தத்துவம் - 1 ப.169 - எம்.ஹரியண்ணா
3. சமணமும் தமிழும் - ப.10 - மயிலை வேங்கடசாமி
4. சமணத்தடயம் - ப.165 - நடன காசிநாதன், மா. சந்திர மூர்த்தி
5. சமணத்தடயம் - ப.226 - நடன காசிநாதன், மா. சந்திர மூர்த்தி


(☺)(☺)(☺)(☺)(☺)

# அன்னமய்யா கீர்த்தனைகளில் நம்மாழ்வார் காட்டும் இறைநிலை உறவுகளின் தாக்கம்

**முனைவர் சு.மகாலெட்சுமி**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை – ஆய்வு மையம்,
ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி,
குற்றாலம், தென்காசி மாவட்டம்
saimaha24@gmail.com

இந்திய இலக்கியச் சிறப்புக்களில் பக்திப்பாசுரங்கள் இறையார்வத்தின் பரிமாணத்தை அளவிடுகின்றன. இமயம் குமரி வரை பல்வேறு மொழிகள் வழக்கில் இருப்பினும் ஆன்மீக மொழியானது இறையனுபவத்தின் வெளிப்பாட்டிலே பெரிதும் ஒன்றுபட்டுள்ளன. ஆன்மீக உலகில் வடமொழியில் ஜெயதேவர், குஜராத்தில் நரசிம்மஹ மேத்தா, மராத்தியில் துக்காராம், கன்னடத்தில் புரந்தரதாஸர், தெலுங்கில் அன்னமாச்சன்யா, தமிழில் ஆழ்வார்கள், நாயன்மார்கள் போன்றோர்கள் குறிப்பிடத்தக்கவராவர். வைணவச் சமய உலகில் கி.பி.798இல் அவதரித்த நம்மாழ்வாரின் தமிழ் பாசுரங்களில் உள்ள இறைநிலை உறவுகள் கி.பி1408 இல் அவதரித்த அன்னமய்யாவின் தெலுங்கு கீர்த்தனைகளில் ஏற்படுத்தியுள்ள தாக்கத்தினை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

நம்மாழ்வார் வேதங்கள் நான்கினையும் தமிழில் பாசுரங்களாய் அருளியுள்ளார். அவையாவன,

1. திருவிருத்தம் - இருக்கு வேதசாரம், 2. திருவாசிரியம் - யசூர் வேதசாரம், 3. பேரிய திருவந்தாதி – அதர்வண வேதசாரம், 4. திருவாய்மொழி – சாமவேத சாரம் என்பனவாம்.

அன்னமய்யா திருவேங்கடவனை 32,000 கீர்த்தனைகளில் பாடியுள்ளார். இன்று கிடைத்திருப்பது 12,000 பாடல்களே ஆகும். “அன்னமய்யா பாடிய கீர்த்தனைகள் யாவும் திருவாய்மொழிக்கு ஒப்பாக சொல்லத்தகும்'' என்று அடபா ராமகிருஷ்ணராஜ் குறிப்பிடுகின்றார் (2006:12).

வைணவப் பெரியோர்களான ஆழ்வார்களும் ஆசார்யர்களும் தம் பாசுரங்களின் மூலம் பகவானுக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பினை எடுத்துக் கூறி அந்த பகவானை அறிவதே ஆத்மாவுக்குக் கிடைக்கும் பேறு எனடறு கூறியுள்ளனர். வேதங்கள் உபநிடதங்கள் புராணங்கள், கீதை போன்ற ஆன்மீக நூல்களும் பகவானுக்கும் ஆத்மாவுக்கும் உள்ள தொடர்பினையும் உறவினையம் பெரிதும் பேசுகின்றன.

பகவானுக்கும் (பரமாத்மா) ஆத்மாவுக்கும் (ஜீவாத்மா) இடையே ஒன்பது விதமான உறவுமுறைகள் இருப்பதாகச் சாத்திரங்கள் கூறுகின்றன. இதனைப் “பாஞ்சராத்ரம்''

**‘பிதா ச ரக்ஷக: சேஷீ பர்த்தா: ஞேய: ரமாபதி:**
**ஸ்வாமி ஆதார: மம ஆத்மா ச போக்தா ச அத்ய மனு உதித’’**

என்று கூறுகின்றது. (தேவராசன்., 2002:392). இதைத் தமிழில் “1. தந்தை – உறவு, 2. இரட்சிக்கப்படுபவன் - இரட்சிப்பவன் உறவு, 3. அடிமை - அடிமை கொள்பவன் உறவு, 4. தலைவன் - தலைவி உறவு, 5. அறிபவன் - அறியப்படும் பொருள் உறவு, 6. சொத்து - சொத்துக்குரியவன் உறவு, 7. உயிர் - உடல் உறவு, 8. தாங்குகின்றவன் - தாங்கப்படும் பொருள் உறவு, 9. போகத்தை அனுபவிப்பவ் - போக்கியப் பொருள் உறவு'' எனக் கூறுவர்.

வேதத்தைத் தமிழ் செய்த நம்மாழ்வார் திருவாய்மொழியில் பரமாத்மா – ஜீவாத்மா சம்பந்தம்பட்ட இந்த ஒன்பது வகையான இறைநிலை உறவுகளைப் பற்றி கூறியுள்ளார். அன்னமய்யாவின் கீர்த்தனைகளிலும் திருவாய்மொழியின் தாக்கம் இருப்பதால் இவ்வுறவுகளை இனம்காண முடிகின்றது.

**1. தந்தை – தனயன் உறவு**

தந்தை – தனயன் உறவு என்பது ஒரு தந்தைக்கும் அவனது மகனுக்கும் இடையே நிலவும் உறவாகும். நம்மாழ்வார் பெருமானின் இத்தனிப்பண்பினை வியந்து திருவிண்ணகர் என்று அழைக்கப்படும் ஒப்பிலியப்பன் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் பெருமானை "என்னப்பனே" என்று விளித்து எம்பெருமானைத் தந்தையாகவும் தன்னை அவன் மகனாகவும் பாவித்து,

**"என்னப்பன் எனக்காயி குளாய் என்னைப் பெற்றவனாய்,**
**பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பனென் அப்பனுமாய்**
**மின்னப் பொன்மதிள் சூழ்திரு விண்ணபர்ச் சேர்ந்தவப்பன்"**

(திருவாய்மொழி.6-3-9)

என்று மங்களாசாசனம் செய்தருள்கின்றார்.

அன்னமய்யா, திருவேங்கட முடையானைக் கண்ணனாகப் பாவித்து துயில் எழுப்புகையில் பெருமானை தந்தையாக பாவித்து பாடியுள்ளார். இதனை,

**மேலு கொனு நாயன்னா மெல்லலனே நீ தோடி**
**பாலு லதே பிலிசேரு படி நாடனு**
**சாலு நிக நித்துரலு சத்தி கூள்ள பொத்து**
**வேளாய நா தன்றி வேக லேவே"** (கீர்த்தனை.79:1-4)

எனும் கீர்த்தனை வரிகளில் உன்னுடன் விளையாடும் குழந்தைகள் விளையாடுவதற்காக உன்னை அழைக்கின்றார்கள் நீ எழுந்திரு உறங்கியது போதும். என் அப்பனே விரைவாக எழுந்திரு எனப் பாடியுள்ளார்.

**2. இரட்சிக்கப்படுபவன் - இரட்சிப்பவன் உறவு**

எம்பெருமான் எல்லா உயிர்களையும் காக்கும் கடமையுள்ளவன் என்பதனையும் அவனைக் கொண்டு தன்னைக் காத்தலையே எதிர்நோக்கி இலுப்பவன் ஜீவாத்மா என்பதனையும் நம்மாழ்வார் தம் பாசுரத்தில்,

**"கருத்தில் தேவுமெய்யாப் பொருளும்**
**வருத்தித்த மாயப் பிரானையன்றி, ஆரே**
**திருத்தித் திண்ணிலை மூவுலகும் தம்முள்**
**இருத்திக் காக்கு மியல்வி னாரே"** (தி.மொ.,2-2-8)

என்று விளக்குகிறார். அன்னமய்யா கீர்த்தனையில் எம்பெருமான் பக்தர்களுடைய ஆத்மாவை ஆனந்த மகிழ்ச்சியூட்டும் பரமாத்மாவாகவும் சரணடைந்தவர்களைக் காப்பாற்றக் கூடிய திருவேங்கடவனாகவும் காட்டியளிக்கிறார். இதனை,

**'முங்கிட பொல்லின மோஹன மாத்மல்**
**பொங்கிஞ்சே கன புருஷீடு**
**சங்கதி மாவண்டி ஸ்ரணாகதுலகு**
**நங்கமு ஸ்ரீ வேங்கடாதிபு டிதடு"** (கீர்த்தனை., 15:11-14)

எனும் கீர்த்தனை வரிகள் உணர்த்துகின்றன.

### 3. அடிமை – அடிமை கொள்பவன் உறவு

முதலை வாய்பட்ட யானையையும் அடியவனான பிரகலாதனையும் காத்தது போல் தனக்கு எதிரில் தோன்றி எம்பெருமான் அருள் செய்யவில்லையே என நம்மாழ்வார் நினைக்கிறார். உடனே பெருமான் நம்மாழ்வாருக்கு எதிரில் தோன்றி காட்சியளிக்கின்றார். அப்போது தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகையில் தன்னை அடிமையாக பாவித்து,

**'அடியா னிவனென் றெனக்கா ரருள் செய்யும்**
**நெடியானை நிறைபுகழ் அஞ்சிறைப் புள்ளின்**
**கொடியானை குன்றாமல் உலகம் சார்ந்த**
**அடியானை அடைந்தடி யேனுய்ந்த வாறே'** (தி.மொ.,9-4-10)

எனும் இப்பாடலில் விவரிக்கின்றார். அன்னமய்யா குறிப்பிடுகையில், திருவேங்கடவன் எல்லா இடங்களிலும் பரவி உள்ளார். ஆபத்து நேரிடும் போது காக்கக்கூடிய உறவினராகவும் இருக்கிறார். அவர் நம் முன்னே எப்போதும் காட்சியளிப்பார் என்பதனை,

"அதடே ஸகல வ்யாபருடதடே யாதுர பந்துவு
டதடு தலம்புல முங்கிட நப்புட யென்னடோகோ?" (கீர்த்தனை.23:1-2)

எனச் சுட்டியுள்ளார்.



### 4. தலைவன் - தலைவி உறவு

தலைவன் தலைவி அல்லது நாயக – நாயகி பாவனையில் நம்மாழ்வார் தன்னைப் பெண்பாலாக பராங்குச நாயகியாக பாவித்து எம்பெருமானை தோழி, தாய், மகள் ஸ்தானத்தில் நின்று அனுபவிக்கிறார். திருமாலாகிய நாயகனின் பிரிவைப் பொறுக்க மாட்டாத ஆழ்வாராகிய பராங்குச நாயகியின் நிலையை அவள் தாய் கூறுவதாக,

**'கோமள வான் கன்றைப்புல்கிக் கோவிந்தன் மேய்த்தன் என்னும்**
**போமிள நாகத்தின் பின்போய் அவன் கிடக்கையீதென்னும்"**
(தி.மொ.4-4-5)

என்று இப்பாசுரம் குறிப்பிடுகின்றது. இப்பாடலில் கண்ணபிரான் கன்றுகளை மேய்த்தான் என்பதறிந்த நாயகி தெருவில் திரிகின்ற இளம் கன்றுகளைக் கட்டியணைத்து, 'நம் கண்ணன் மேய்த்த கன்றுகள் இவை என்று சொல்கிறாளாம். இளநாகங்களைக் கண்டால் அஞ்சாமல் பின் சென்று "இது எம்பெருமானுடைய திருப்பள்ளிக் கொள்ளும் படுக்கை" என்று ஆனந்தம் கொள்கிறாளாம். இங்ஙனம் திருமாலை நினைத்து தன் மகள் பித்து பிடித்து அலைகின்றாளே என்று தாய் புலம்புகின்றாள். அன்னமய்யா தன்னை நாயகியாகவும் (அலர்மேலுமங்கை) திருவேங்கடவனை நாயகனாகப் பாவித்து தனக்குப் பிரிவினால் ஏற்பட்டத் துன்பத்தை,

**"கரகி யந்தாகா நின்று காகிலிஞ்சு சுண்டிநானு**
**விடுவவு சேதுலு வேடு கெட்டிதோ**
**அடரி ஸ்ரீவேங்கடேஸ அலமேல் மங்கனு நேனு**
**தொடரி ஏலிதிவி ரதுலு தரிதீபுலு"** (கீர்த்தனை-63:11-14)

எனக் குறிப்பிடுகின்றார். இக்கீர்த்தனையில் உன்னை எவ்வளவு நேரம் அணைத்திருந்தாலும் என்னுடைய கைகள் உன்னை விட மறுக்கின்றன. திருவேங்கடவா அலர்மேலு மங்கையான என்னை நீ அடைந்ததனால் களிப்படைந்தேன் என வர்ணிக்கிறார். மேலும் அன்னமய்யா தன்னை தோழியாகப் பாவித்து,

**"சலுவ கஸ்தூரி பூத ஸரி நீல வர்ணமாய**
**மெலுத நிவ்வெர கநிமிஷ த்ரிஷ்டாய**
**தொலுத சிகுரு பானுபு துல்ஸி பூஜாய நின்னு**
**ஜலஜாட்சி தலபோஸி ஸாரூப்ப மந்தெ"** (கீர்த்தனை.68:7-10)

எனும் கீர்த்தனையில் நாயகனைப் பிரிந்ததனால் நாயகிக்கு ஏற்பட்ட துயரத்தினைக் கண்ட தோழிக்கு ஏற்பட்ட பிரமையை வெளிப்படுத்தியுள்ளார்.

### 5. அறிபவன் - அறியப்படும் பொருள் உறவு

எம்பெருமானுக்குத் தெரியாமல் இவ்வுலகில் எதுவுமே நடப்பதில்லை. எல்லாவற்றையும் அறிந்தவன். அதனால் பெருமானைக் கண்டு தனது பேதமை தீர்ந்ததனை நம்மாழ்வார்,

**"அறிந்த நிந்து தேறித் தேறி யானென தாவியுள்ளே**
**நிறைந்த ஙான மூர்த்தி யாரைநின் மலமாக வைத்து**
**பிறந்தும் செத்தும் நின்றிடனும் பேதமை தீர்ந்தொழிந்தேன்**
**நறுத் துழாயின் கண்ணியம்மா: நானுன்னைக் கண்டுகொண்டே"**
(தி.மொ.,4-7-7)

எனப் பாடியுள்ளார். அன்னமய்யா கூறுகையில், 'என்னைக் காக்க திருவேங்கடமுடையானின் திருநாமத்தை என்னுடனே வைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால் கோபம், காமம், பேதமை போன்ற தீயகுணங்களே என்னிடமிருந்து விலகி சென்று விடுங்கள் என்கின்றார். இதனை,

**"காபை ஸ்ரீவேங்கடபதி பேரிதே**
**நாபை நுன்னதி நயமுனனு**
**போப்பு காமாதி குணமுலாரா மீ**
**ரேபுனா கடகட நெந்தைன போரோ"** (கீர்த்தனை-37.,11-14)

எனும் கீர்த்தனை வரிகள் புலப்படுத்துகின்றன.

### 6. சொத்து –சொத்துக்குரியவன் உறவு

இவ்வுலகில் பொருளையுடையவன் எப்படி சுதந்திரமாக அப்பொருளைப் பயன்படுத்துவானோ அதைப்போலவே பரமாத்மா ஜீவாத்மாவை சுதந்திரமாக வைக்கவும், தள்ளவும் எடுக்கவும் உரியவனாகின்றான். இதனை நம்மாழ்வார்,

**'யானே என்னை அறிய கிலாதே**
**யானே என்றன தேயென் றிருந்தேன்**
**யானே நீயென் உடைமையும் நீயே**
**வானே ஏத்துமெம் வானவரேறே"** (தி,மொ.2:9-9)

எனும் பாசுரத்தில் எம்பெருமானுக்கும் எனக்கும் உள்ள உறவினைமறந்து 'யான்' 'எனது' என்ற செருக்கில் பாழாய் போனேனே என வருந்தி யான், எனது உடைமைகள் யாவையும் உனதே' என்று கூறுகிறார். அன்னமய்யா தன் கீர்த்தனையில் திருவேங்கடவனை கை கூப்பி வணங்கினால் போதும்

நம்மைக் காப்பான் என்று உறுதியான மனதுடன் அவரை வணங்காத குறை நம்மிடையே உள்ளது. திருவேங்கடவனை வணங்காமல் மற்ற எத்தனைப் புண்ணியம் செய்தாலும் அது காட்டில் காய்ந்த நிலாப் போலப் பயனற்றதாகும். இதனைச்,

**"சேத மொக்கிதே சாறு ஸ்ரீவேங்கடேஸீடு காசு**
**காதரான ஸேவிஞ்சனி கடமே கானி**
**ஈதல நிதி மாரி மரேன்னி புன்யாலு ரேலிலா**
**ரீதி நடவி காஸின ரித்த பென்னெல ஸீண்டி"**
(கீர்த்தனை-9.,11-14)

என்று குறிப்பிடுகின்றார்.

**7. உயிர் – உடல் உறவு**

சரீர – சரீரி பாவனையில் 'சித்து' என்ற தொகுதியிலுள்ள மூன்றுவகை ஆன்மாக்களும் (பத்தர், முத்தர், நித்தியர்) எம்பெருமான் திருமேனியில் அடங்கியிருக்கும் என்று கூறுவர். இந்த சரீர – சரீரி பாவனையை நம்மாழ்வார்,

**'திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை**
**படர்பொருள் முழுவதும் ஆய்அவை அவைதொறும்**
**உடல்மிசை உயிரெனச் சுரந்து எங்கும் பரந்துளன்**
**சுடர்மிகு சுரளியுள் இவை உண்ட சுரனே"** (தி.மொ.,1-1-7)



எனும் பாசுரத்தில் கூறுகின்றார்.

**8. தாங்குகின்றவன் - தாங்கப்படும் பொருள் உறவு**

எம்பெருமானாகிய பரமாத்மாவை ஜீவாத்மா எப்பொழுதும் ஆதாரமாகப் பற்றியிருக்கும் இதனை நம்மாழ்வார்.

**"................ நினைந்த எல்லாப் பொருள்கட்கும்**
**வித்தாய் முதலில் சிதையாமே**
**மனஞ்செய் ஞானத்து உன் பெருமை**
**மாசுணாதோ? மாயோனே!"** (தி.மொ.,1-5-2)

என்று கூறுகின்றார். இப்பாசுரத்தில் எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக முழுமுதல் காரணமாக, வித்தாக, மூலமாய் இருக்கின்றான். உலகம் படைப்பிற்கும் பிறகு அவன் சிதையாமல் இருப்பது அற்புத ஆற்றல் எனச் சுட்டுகின்றார். அன்னமய்யாவும் தம் கீர்த்தனையில்,

**"பங்கமுயோ புட்டதா பரிமளபு தாமெர**
**போங்கபு கீடமுலந்து புட்டதா பட்டு**
**கோங்கக ஸ்ரீவேங்கடேஸீ கொலிசின தாலீலு**
**சங்கெ லேனி ஞானு லெந்து ஜனியிஞ்சி ரேமி?"**
(கீர்த்தனை-98.,11-14)

என்று சேற்றிலிருந்து நறுமணமுள்ள தாமரை பிறக்கிறதல்லவா? பூச்சியிலிருந்து பட்டடு உண்டாகின்றதல்லவா? உறுதியான பக்தியுடன் திருவேங்கடவனை வணங்கிய அடியார்கள் எங்கு பிறந்தால் என்ன? பெருமானின் ஆற்றலுக்கு அனைவரும் உட்பட்டவர்களே என்ற கருத்தினை முன் வைக்கின்றார்.

**9. போகத்தை அனுபவிப்பவன் - போக்கியப் பொருள் உறவு**

தனக்குப் போக்கியமான அனுபவத்தில் உள்ள பொருளை எவன் ஒருவன் தன் விருப்பத்தை அனுபவிக்கின்றானோ அவனே 'போக்தா' எனப்படுவான். ஆப்பாடி அனுபவிக்கப்படும் பொருள் 'போக்கியம்' ஆகின்றது. இதை நம்மாழ்வார்,

**'நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகந்து என்னை**
**ஈர்மை செய்து என்னுயிரால் என்னுயிருண்டான்**
**சீர்மல்கு சோலை தென் காட்கரை யென்னப்பன்**
**கார்முகில் வண்ணன் தன் கன்றம் அறிகிலேன்"** (தி.மொ.9-6-3)

என அருளியுள்ளார்.

அன்னமய்யாவும் தன் கீர்த்தனைகளில் பெருமானே சஞ்சலடைந்த என்னுடைய மனதை உன்மேல் இருக்கும்படி செய்வாயாக. நான் தினமும் செய்யும் பூசைகள் அனைத்தும் என் மனது உன்மேல் நிலையா இருக்க வேண்டும் என்பதற்காகத் தான் எனப் பாடியுள்ளார். இதனை,

**"அந்துகே ஸீம்மி நே ஜேஸே ஆசாராலு தைவமா**
**நிந்த வாய நா மனஸீ நீபை நிலுபவே"** (கீர்த்தனை.96.,1-2)

எனும் கீர்த்தனை வரிகள் மூலம் உணரமுடிகின்றது.

இறைவனை அடியவர்கள் அடைவதற்குரிய ஒன்பது வித உறவுகளைக் கூறுவதன் மூலம் இறைநிலையினை அடைவதற்கான வழிகளை முன்னிறுத்தியுள்ளார். காலத்தால் பிற்பட்ட அன்னமய்யாவின் கீர்த்தனைகளில் இவ்இறைநிலையினைக் காணுவதன் வழி தமிழ்மொழிக்கும் தெலுங்கு மொழிக்கும் உள்ள பிணைப்பினையும் மரபுசார் தொடர்ச்சியினையும் வெளிக்கொணர இயலுகின்றது.



**<u>துணை நின்ற நூல்கள்:</u>**

1. அன்னமாச்சார்யா, 'அடபா ராமகிருஷ்ணராவ்', சாகித்திய அக்காதெமி, புதுதில்லி, 1996.
2. வைணவமும் ஆழ்வார்களும், 'தேவராஜன்', ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, 2002.
3. அன்னமாச்சார்யரின் கீர்த்தனைகள், 'எஸ்.ஜெயப் பிரகாஷ் மற்றும் ஆ.சோமசுந்தரம்', ஸ்ரீ திவ்யா பதிப்பகம், மதுரை, 2006.
4. நாலாயிர திவ்யப் பிரபந்தம், 'இலட்சுமண முதலியார்'(தொ.ஆ)., ஸ்பெசிபிச் எண்டோமெண்டல், சென்னை, 1962.

(☺)(☺)(☺)(☺)(☺)

# சூழலியல் நோக்கில் 'கானகன்' புதினம்

**முனைவர் க இந்துமதி**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
பூ.சா.கோ. கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர் – 641014.
thinkal20@gmail.com

*****

## முன்னுரை

நால்வகை நில அமைப்புகளையும், ஐவகைத் திணைக்கோட்பாடுகளையும் அகம், புறம் என்ற இரு வகைக் கைக்கோளால் பழந்தமிழ்ச் சமூக அமைப்பை நமது செவ்வியல் இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. முதல், கரு, உரி என்ற மூவகைப் பகுப்பில் அடங்கும் செய்திகள், தமிழ் நிலப்பரப்பை, பழந்தமிழர் தம் வாழ்வியலை செம்மையுற எடுத்துக்காட்டுவனவாகும். இலக்கியம், சமூக வாழ்வியலின் கருத்துருவாக்கமாகும். இவ்வகையில் தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் அந்தந்த காலகட்ட மக்களின் வாழ்வியலைக் காட்டும் பதிவுகளாக அமைகின்றன. இன்றைய நிலையில் தமிழ் இலக்கிய ஆய்வுகள் தொல்லியல், அறிவியல், சமூகவியல், கோட்பாட்டியல், திறனாய்வியல் போன்ற பல நிலைகளில் அமையப்பெற்று வருகின்றன. இவை அனைத்தும் தமிழ்ச் சமூகப் பண்பாட்டை நிறுவி வருகின்றன. தமிழ் இலக்கியம், ஒரு நீண்ட, நெடிய அறுபடா வரலாறு கொண்டது. இந்தியச் சமூகத்தில் பல்வேறு இன, மொழிப் பண்பாடுகளில் திராவிடப் பண்பாட்டின் வரலாறு என்பது உலக வரலாற்றோடு ஒப்பிட்டு நோக்கும் வகையில் அமைவதாகும். இதனைத் தற்போது தொல்லியல் சான்றுகளும், மானிடவியல் ஆய்வுகளும் நிறுவி வருகின்றன. அவ்வகையில் அண்மையில், சாகித்திய அகாடெமி வழங்கிய யுவபுரஸ்கார் விருது பெற்ற புதினமான 'கானகன்', சூழலியல் நோக்கில் அணுகப்பட வேண்டிய ஒன்றாகும்.

## கானகன்

மலைச்சொல் பதிப்பகத்தின் வெளியீடாக, ஜுன் 2014-ஆம் ஆண்டு முதல் பதிப்பாக வெளிவந்தது கானகன் புதினம். இதன் ஆசிரியர் லக்'மி சரவணகுமார். இப்புதினம், 264 பக்கங்களைக் கொண்டது. 2019-ஆம் ஆண்டிற்கான, சாகித்திய அகாடெமி வழங்கும் யுவபுரஸ்கார் விருது பெற்ற இப்புதினம். வெளிவந்தது முதல், இரண்டு பதிப்புகளைக் கண்டுள்ளது. 'வஞ்சிக்கப்பட்டவர்களின் பிரார்த்தனைகள் குறித்து அச்சமாயிருங்கள்' என்ற குர் ஆனின் வாசகத்தை முன்னறிவிப்பாகக் கொண்டுள்ளது இப்புதினம். இது, காலம் காலமாக அடிமைப்பட்டு வஞ்சிக்கப்பட்டு வரும் சமூகம், தம் அடிமைத்தனத்தை விட்டு வெளியேற, வெகுண்டெழும் என்ற புரட்சிப் போக்கினைக் காட்டுகிறது. வெளிவந்த ஆண்டு முதல், இப்புதினமானது பல வாசிப்பு நிலைகளில் நேர், எதிர் வாதங்களைக் கொண்டுள்ளது. அத்துடன் மத்திய அரசின் விருது பெற்ற புதினமாதலால், விருது குறித்த சந்தேகங்களையும் அதன் பின்னுள்ள அரசியலையும் சுட்டிக்காட்டுகிறது. இருந்தபோதிலும் சூழலியல் குறித்த விழிப்புணர்வை உள்வாங்கி, செயல்படத் துவங்கியிருக்கும் நமது இந்திய சமூகத்தில், தமிழில் இத்தகையதொரு புதினம் எழுதப்பட்டிருப்பது வரவேற்பிற்குரியது.

## கதை அமைப்பு

கானகன் புதினம், ஒரு பனிக்காலத்தில் தொடங்கி, இளவேனில், கடுங்கோடை, பெருமழை என நான்கு காலங்களுக்குமாகப் பிரித்து, ஒவ்வொரு காலத்துக்கும் ஒரு இயல்பைச் சொல்லி, அதிலிருந்து கதை நகர்வதாக அமைகிறது. வனமிருகங்களின் குருதிச்சுவை, வனமெங்கும் விரியும் புதிய ஊர்களின் நெடி, வறண்ட கனவுகள், வாழ்விற்கான சில முன் தயாரிப்புகள், மழைக்காலத்தின் மர்மங்களும் வற்றாப் பகையின் நீட்சியும் என கதைப்போக்கிற்கான முன்னுரைகள் அமைகின்றன. இப்புதினத்தின் கதை நாயகன் வாசி, காட்டை நேசித்து அதைப் பாதுகாக்கும் காட்டாளன். புலியை வேட்டையாடுவதிலிருந்து தொடங்கி, புலியால் வேட்டையாடப்படுதல் வரை புதினத்தின் கதை நகர்கிறது. எம்.ஜி.ஆர், முதல்வராக இருந்த காலகட்டமான 1984-இல் கதையின் காலம் அமைகிறது. 'எம்.ஜி.ஆர். திரும்பி வருவாரா மாட்டாரா? அப்படியே வந்தாலும் முதல் மந்திரியாவரா என இந்தக் காட்டுக்கு வெளியில் ஊர் உலகமே பெரும் கலக்கத்திலிருந்தது' (பக்கம், 32). வேட்டையாடுவதற்கு நாட்டுத் துப்பாக்கிகள் பயன்படுத்தப்படுவதும், கஞ்சாத் தோட்ட முதலாளிகளின் அட்டூழியங்கள், மாட்டுக் கெடாக்களைப் பாதுகாக்க புலி வேட்டையடுப்படுவதும், விவசாய நில ஆக்கிரமிப்பில் யானை கொல்லப்படுவதுமாக இப்புதினத்தில் மிருகங்களின் வேட்டையும், மலைவாழ் மக்களின் சுரண்டப்படும் வாழ்வும் சித்திரிக்கப்பட்டுள்ளன.

பகையும் பழி தீர்த்தலும் மனிதனுக்கு மட்டுமல்ல. மிருகங்களுக்கும் உண்டு. மனிதனுக்கும் மிருகத்திற்குமான சண்டையில் மனிதன் வெல்வதாக தொடங்கும் கதை, இறுதியில் அதே மிருகத்திடம் மனிதன் தோற்றுப் போவதாக முடிகிறது. தங்கப்பன், ஒரு வேட்டைக்காரன். தன் பசிக்காக, வாழ்வாதாராத்திற்காக மட்டுமன்றி, வேட்டைத் தொழிலைப் பணத்திற்காகவும் செய்பவன். அவனது மூன்றாம் மனைவியான செல்லாயிக்கும், பளியன் சடையனுக்கும் பிறந்த வாசி, இப்புதினத்தின் கானகான அறியப்படுகிறான். தங்கப்பனுக்கும் வாசிக்கும் இடையே இருக்கும் கருத்து முரண், இசுலாமிய சமூகத்தினரின் மலைவாழ் வாழ்வியல், அவர்களுக்கும் தங்கப்பனுக்குமான பழக்கம், அகமலைக் காட்டில் வாழும் பூர்வ குடிகளான பளிச்சி இன மக்கள் வாழ்க்கை, கஞ்சாத் தோட்ட முதலாளிகள், வனத்துறையினரின் தொல்லைகள் மற்றும் அநியாய நடவடிக்கைகள், பொழுதுபோக்கிற்காக வேட்டையாட வரும் ஜமீன்தார்கள் செய்யும் அட்டூழியங்கள், மூலிகை வளங்களைச் சுரண்டும் நோக்கில் வரும் மருத்துவ குழுக்கள், சிவப்புச்சட்டைக்காரர்கள் என மலைவாழ் மக்களால் அறியப்படும் கம்யூனிஸ்ட்டுகளின் ஆதரவு என புதினத்தின் கதை நிகழ்வுகள் அமையப் பெறுகின்றன.

**காடும் வேட்டையும்**

காடு பற்றிய புதினமாதலால், காடு பற்றிய வருணனைகள், வேட்டையாடுதலின் நோக்கம், அதில் உள்ள அறம், மனிதர்களையும் மிருகங்களையும் வருணிப்பதில் காட்டு மரங்களும், பூக்களும் உவமிக்கப்படுவது, ஆண்-பெண் இணைவிழைச்சில் வனமே குறியீடாக அமைவது என முழுக்கக் காடு பற்றிய சித்திரிப்புகள் கொண்டமைகின்றன. புலியை வர்ணிக்கும் ஒரு இடத்தில், 'காட்டில் சாய்ந்து கிடக்கும் முதிர்ந்த மரமெனப் புலி சாய்ந்து கிடந்தது' எனவும், 'புலி உடல் மஞ்சள் கோடுகள், இலையுதிர் காலத்து இலைகளைப் போல' எனவும் குறிப்பிடப்படுகின்றன (பக்கம், 22). புலியை வேட்டையாடுதலில் பரண் அமைத்தல், இலக்கு, சரியான தருணத்திற்காகக் காத்திருத்தல் என வேட்டையாடுதலின் திறன் விவரிக்கப்படுகிறது.

மேலும் புலியின் இறப்பு, ‘கருணையை எதிர்பார்க்காத புலி, கம்பீரமாக சாகத் தவித்திருக்கும் தவிப்பு (பக்கம், 23) எனவும், புலியின் மரணம், நரிகளின் வெறி, மான்களின் குதூகலம் எனவும் குறியீடாகக் குறிப்பிடப்பட்டிருப்பது, அதிகாரம், பணபலம் கொண்ட சுரண்டல்காரர்களால் அநீதிக்கு ஆட்படும் சமூகத்தினர், அவர்களின் மரணம், அதிகார மனம் படைத்த, அதை அடையத் துடிக்கும் பிற வகையினரும் அடையும் மகிழ்வைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. காடுகளில் மிருகங்களுக்கிடையேயான சண்டை, அதனது பசிக்காக மட்டுமே. ஆனால் மனிதர்களுக்கிடையே அது, அதிகார மையம் கொண்டே அமைகிறது. முன்பு காடுகளில் மிருகங்கள் மனிதர்களுக்குத் தொல்லை கொடுக்காமல், மனிதனும் மிருகங்களும் எவ்வித கலக்கமும் இன்றி வாழ்ந்தனர். ஆனால் இன்று, விவசாயிகள், பெரும் முதலாளிகள் மரங்களை வெட்டி வணிகமாக்கிக் காடுகளை அழித்து வருகின்றர். பொழுதுபோக்கிற்காக வேட்டையாட வருவபர்கள், காடுகளைச் சேதப்படுத்தி இருமாப்புடன் செல்வர். ‘வேட்டை முடிவுக்கானதில்லை. ஒரு அழிவின் தொடக்கம்’ (பக்கம், 34) எனவும் இப்புதினத்தில் சொல்லப்படுகிறது. கருமாண்டி என அடையாளப்படுத்தப்படும் தங்கப்பனின் கதாபாத்திரத்திலிருந்து, வேட்டை என்பது வீரச்செயல் மட்டுமல்ல, மனவலிமைக்கானது என்பதும், வேட்டையாடுவதில் ஆயுதம் முக்கியமல்ல இலக்கே முக்கியம் என்பதும் பெறப்படுகிறது (பக்கம், 37). மேலும் வேட்டையாடுவதில் மிருகங்களைக் கவர்ந்திழுக்கும் வாசனைத் திரவியமாக உப்பைப் பயன்படுத்துவதும் (பக்கம், 53), உணவுக்காக வேட்டையாடப்படும் விலங்குகள், இறக்கும் நிலையில் தங்களது முதுகுடிப் பெண்ணான பளிச்சியை வணங்கி, அதன் கழுத்தை அறுப்பதும் (பக்கம், 61) மலைவாழ் மக்களின் நம்பிக்கையைக் குறிக்கிறது. தங்களது உணவுத் தேடலில் தாம்சார்ந்த காட்டில் மற்றொரு உயிரினம் பலியிடப்படுவதை பாவமாகவும், அது முன்னோரை வழிபடுவதன்வழி தீர்க்கப்படுவதும் நடைபெறுகிறது. இன்றைய இந்தியச் சமூகத்தில் முன்னோர்களை வழிபடுவது, அமாவாசைக்குத் திதி கொடுப்பது, முதியவர்களுக்கு உணவளிப்பது, கோயில்களில் நேர்த்திக்கடன் செலுத்துவது, ஆடு, கோழி முதலிய உயிரினங்களைப் பலியிடுவது, பாவ மன்னிப்பு கேட்பது போன்றன இதன் நீட்சியே ஆகும்.

காட்டாளனாக அறியப்படும் வாசி, தனது தந்தை சடையனைப் போலவே காடு மீதான பாசமும் அதைக் காக்க வேண்டிய பொறுப்பும் உடையவன். சடையன், பளியன் குடியைச் சார்ந்தவன். புலி, யானை முதலியன வேட்டையாடப்பட்டு கொல்லப்படும்போது காடுகளின் அழிவை முன்னோரின் வாக்கு மூலமாக பளியர் குடிக்கு அறிவிக்கிறான். தனது மகனும் தன்னைப் போலவே உருமாறுகிறான் என்பதை அறிந்து மகிழ்வடைகிறான். காட்டில் ஒற்றைச் சிறுத்தைக்கும் மாட்டுக் கூட்டத்திற்கும் இடையே சண்டை நிகழ்கிறது. சில மாடுகள் முதலில் சிறுத்தையைப் பார்த்துப் பயந்து ஓடினாலும், பின் வலிமையான மாடுகள், தாம் குழுவாக இணைந்துள்ளோம். பயந்து ஓடுவதை விடுத்து, திருப்பி அடிக்க எண்ணி, சிறுத்தையைத் தூக்கி எறிந்து காயமுறச் செய்து விரட்டி அடிக்கின்றன. இப்பகுதியில் ‘உடல் முழுக்கக் காயம். இன்னொரு முறை மாடுகளைத் துரத்தும் திராணியின்றி ஓடிய சிறுத்தையைப் பின்தொடரவே இல்லை’ (பக்கம், 77) என்பதிலிருந்து வலிமை நமக்குள் உண்டு என்பதை முதலில் நாம் உணர வேண்டும். ஒற்றுமையுடன் எதிர்த்தால் காலமும் பயந்து ஓடிவிடும். துரத்தப்பட்டவர்கள், திருப்பி ஒரேயடியாக எதிர்த்து நின்றால், அதிகார வர்க்கம் பயந்து ஓடி விடும். தனக்கான தலைவன் வருவான், காப்பாற்றுவான் என்று எண்ணுவதை விடுத்து அனைவரும் வலிமை கொண்டு ஓங்கி நிற்க வேண்டும் என்பது அறிவுறுத்தப்படுகிறது. தனிமனிதப் போற்றுதல், கொண்டாடுதல் என்பதை இந்தியச் சமூகம் தொடர்ந்து கையாண்டு வருகிறது. இந்த முட்டாள் எண்ணத்தை விடுத்து, சுயக்கருத்துவாக்கம் கொண்ட

சமூக அமைப்பை உருவாக்க வேண்டும். காடும் வேட்டையும் வெறும் நிலப்பரப்போ தொழில் முறையோ அல்ல. மனித சமுதாயம், உணர்ந்து கொள்ள வேண்டிய பல அறங்களை, இயற்கைப் பாதுகாப்பை, சுற்றுச்சூழலைக் காப்பதன் அவசியத்தை உணர்த்துவனவாகும். மேலும் அதனை எதிர்த்தோ, சிதைத்தோ செயல்படுவது, பெரும் ஆபத்தையும் அழிவையும் உருவாக்கும்.

**சூழலியலின் முக்கியத்துவம்**

தமிழ் இலக்கிய, இலக்கணங்கள் சமூகப்பரப்பை அடிப்படையாகக் கொண்டமையனவாகும். நிலமும் பொழுதும் இலக்கியப் படைப்பாக்கத்தின் மூலமாகும். மொழி, பண்பாடு என்ற சமூக அடையாளங்கள் உருவாக்கப்படுவதன் பெரும் காரணிகளில் நிலமும் ஒன்று. தமிழ்ச் சமூகத்தில் நால்வகைத் திணைகளுக்கு நிலம் வரையறைக்கப்பட்டுள்ளது. இங்கு நிலம் என்றால் மண் மட்டுமல்ல. மண் சார்ந்த வாழ்வும் அடங்கும். குறிஞ்சியும் முல்லையும் மருதமும் நெய்தலும் என மலை, காடு, வயல், கடல் என்ற நிலப்பகுப்புகளையும் அவற்றில் வாழும் மக்களின் வாழ்வையும் உள்ளடக்கிச் சொல்வதே தமிழ் இலக்கியமாகும். இவை உலக இலக்கியங்களுக்கும் பொருந்தும். இந்த நால்வகை நிலப்பரப்பும், அனைத்து நாடுகளிலும் ஏதேனும் ஒன்று குறைந்தோ அல்லது முழுமையாகவே நிச்சயம் அமைந்திருக்கும். இவற்றில் காடு என்பது தனித்துவமானது. இங்குதான் மனித குலத்தின் ஆதி குடிகளின் வாழ்வியல் துவக்கம் பெறுகிறது. காட்டில் எல்லாவற்றுக்கும் இடமுண்டு என்பதுதான் அடிப்படை விதி (பக்கம், 89), காட்டின் ஒவ்வொரு எச்சமும் ஒரு பிரபஞ்சத்தின் துவக்கம்தான் (பக்கம், 91) என்ற வரிகள், காட்டின் தொன்மையை விளக்கும்.



உலக நிலப்பரப்பில் வாழும் மனிதர்கள், விலங்குகள், பறவைகள், பூச்சிகள் போன்ற அனைத்து உயிரினங்களுக்கும் வாழ்வதற்கேற்ற நீர், உணவு வளங்களை மட்டும் காடு கொண்டிருப்பதில்லை. இயற்கைசார் மனித வாழ்வு, இயற்கையிடமிருந்து பெறுவது வாழ்வாதாரம் மட்டுமல்ல. வாழ்வின் அறங்களை. உண்மைகளை. இதில் வாழ்ந்த, வாழும் பழங்குடிகள் இன்றும் காட்டிற்கும் தங்களுக்கும் இடையே புரிந்துணர்வுடன் செயல்படுகின்றனர். தேவையைத் தாண்டி எதையும் எடுக்கக் கூடாது (பக்கம், 94). இயற்கை யாரையும் எதையும் வஞ்சிப்பதோ, சிதைப்பதோ கிடையாது. ஆனால் இன்று இயற்கை, சிதைக்கப்படுவதும் சூறையாக்கப்படுவதும் வஞ்சிக்கப்படுவதும் தொடர் இழிவாக நிகழ்த்தப்படுகின்றன. இது அறம் சார்ந்த மனித வாழ்வை கேள்விக்குள்ளாக்கும். பொய் சொல்லக் கூடாது, கொலை, கொள்ளை செயல்களில் ஈடுபடக் கூடாது போன்றன குற்றங்கள். சட்டங்கள் மூலம் அவற்றிற்குத் தண்டனை உண்டு. இயற்கை வளங்களைப் பாதுகாத்தல், மிருகங்களை வேட்டையாடக் கூடாது, முதலியன தொடர்பாக பல சட்டங்கள் இருந்தாலும் இவை முறையாக முழுமையாக நடைமுறைப் படுத்தப்படுவதில்லை. ஏனென்றால் இங்கு சிதைப்பது, பேசக்கூடிய, அதிகாரத்தில் இருக்கக்கூடிய மனித குலம். சிதைவுக்குள்ளாவது, எவ்வித பேச்சும் பேச முடியாது நிற்கும் இயற்கை. நீங்கள் யார் என் இடத்திற்கு வருவது? சுரண்டுவது? உங்களுக்கு இங்கே வருவதற்கும் சுரண்டுவதற்கும் உரிமை இல்லை என இயற்கை பேசுவதும் இல்லை. தடுப்பதும் இல்லை. ஆனால் அதற்கான எதிர் விளைவுகள், மனித வாழ்வினைச் சிக்கலுக்குள்ளாவது, மாபெரும் அழிவை ஏற்படுத்துவது என காட்டின் எதிர்வினைகள் ஏராளம். இதைப் புரிந்தும் புரியாமல் போல் இன்றைய சமூகம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. இதனை சட்டங்கள் கொண்டோ, அதிகாரம் கொண்டோ முற்றிலும் நிறுத்த முடியாது. அவரவர் சுயஅறிவு கொண்டு இயற்கைசார் வாழ்வின் முக்கியத்துவத்தை உணர வேண்டும். மரபின் எச்சங்கள் என்றுமே

நம் வாழ்விற்கான படிப்பினைத் தருவன. அதை விட்டொழிக்காமல் இயற்கை வளத்தை நன் முறையில் பயன்படுத்தி, அதனைப் பேணிக் காக்க வேண்டும்.

**சூழலியல் நோக்கில் கானகன்**

காடுசார் வாழ்வியலை எடுத்துரைக்கும் கானகன் புதினத்தில், மலைவாழ் மக்களின் பரிதவிப்பு நிலையும், தங்கள் முன்னே தம் நிலம் சிதைவுக்குள்ளாவதை, துண்டாடப்படுவதை எதிர்க்க முடியாத கையறு நிலையும் எடுத்துக்காட்டப்படுகிறது. தமது தேவையைத் தாண்டி வேறு எதனையும் பெறக்கூடாது, வேட்டைக்குப் பின்னான சடங்குகள், தம்மை விரட்டுபவர்களை தம் குல முன்னோர்கள் தண்டிப்பர் என்ற நம்பிக்கை, கோடை கால வறட்சி நிலை, அப்போது தேவைக்கான உணவையும் நீரையும் முன்பே சேமித்துப் பழகுதல் முதலியன இந்நாவலில் குறிப்பிடப்படுகின்றன. அதே நேரத்தில், பசியும் அதற்கான தேடலுமே என்றிருந்த அவர்களது வாழ்வில், பணத்தின் தேவை ஆரம்பித்தது. அதற்காகக் கஞ்சாத் தோட்டங்களில் வேலை செய்வது, கூலி வேலைக்குச் செல்வது என அம்மக்களின் வாழ்வு மாற்றமும் இடம் பெறுகின்றன. தங்களது மரபிலிருந்து விடுபட முடியாமலும், சமவெளிப் பகுதியினர் போன்றே தங்களது வாழ்க்கையும் அமைய வேண்டும் என்ற ஆசையும் கொண்ட அவர்களது ஊடாட்ட வாழ்நிலையை
இப்புதினத்தில் காண முடிகிறது. ‘மனிதனின் அகோரப் பசியும் பேராசையும்தான் இவ்வுலகின் மிக மோசமான ஆயுதங்கள். இந்த இரண்டும் எல்லா யுத்தங்களுக்கும் மனிதர்களைத் தயார்படுத்தி விட்டன’ (பக்கம், 121) என்ற வரிகளும், ‘மனிதன், தனது ஆசைகளில் நிறைவு கொள்ள முடியாத பெரும்பசி கொண்ட மிருகம்’ (பக்கம், 182) என்ற வரிகளும் தனிமனிதப் போராட்டம், இனம், நாடு முதலியவற்றுக்கிடையேயான போராட்டம் என்ற உலகளாவிய பார்வையை உணர்த்துகின்றன.

மனிதன் எவ்வாறு பழிக்குப்பழி என்ற சிந்தனையோடு செயல்படுகிறானோ, மிருகங்களும் அப்படியே செயல்படும். தங்கப்பனால் கொல்லப்பட்ட யானை, பழி வாங்கும் நோக்கோடு விவசாயிகளின் விளைநிலங்களைச் சேதப்படுத்த வருகிறது. இதிலிருந்து தமது விளைநிலங்களைக் காப்பாற்ற, புதிய யுக்திகளைக் கையாண்டனர் (பக்கம், 227). தீப்பந்தங்களைக் கொண்டு யானையைத் துரத்தியடிக்கும் மரபை விடுத்து, துப்பாக்கிகளைக் கொண்டு அவற்றை விரட்டி அடிக்க நினைத்தனர். காட்டில் பெரிய பள்ளங்களைத் தோண்டி, யானைகளைப் பொறி வைத்து சிக்க வைக்கும் முயற்சியில் இறங்கினர். ஆனால் யானைக்கூட்டத்தின் பழி உணர்வின் காரணமாக ஏற்பட்ட வெறி, அவர்களின் முயற்சியை நிலை குலையச் செய்ததது. இறுதியாக அவற்றைக் கொல்ல நினைத்தனர். மனித உணர்வின் பெருங்கோபம் இயற்கையைச் சீரழிக்கும் என்பதை இந்நிகழ்வுகள் உணர்த்துகின்றன. உலகம் முழுவதும் போர்களினால் பல இலட்சம் மக்கள் புலம்பெயர்கின்றனர். இதனால் அவர்களது நிலமும் வாழ்வாதரமும் பிடுங்கிக் கொள்ளப்படுகின்றன. இப்புலம்பெயர்வு, இயற்கையைச் சீரழிக்க நினைக்கும் அதிகார வர்க்கத்தினரின் கொடுமையால் நிகழ்கிறது. நிலம்சார் மக்களை விரட்டியடிப்பதன் மூலம், அம்மண்ணின் வளங்களைச் சுரண்டுகின்றனர். தொழில்நுட்ப வளர்ச்சி என்ற பெயரில் நிகழ்த்தும் கொடுமைகளால் ஏதும் அறியாத அப்பாவி மக்கள் தமது நிலங்களை, உடைமைகளை இழந்து அலைவுறுகின்றனர்.

**முடிவுரை**

கானகன் புதினம், காடு சார்ந்த மக்களின் நம்பிக்கையை, அறத்தை, அவலத்தை, துயரத்தை எனப் பல கோணங்களில் விவரிக்கிறது. இதில் ஆண்-பெண் சார்ந்த பாலியல் கருத்தாக்கங்கள், அதிகார வர்க்கத்தை எதிர்க்கும் மார்க்சியப் பார்வைகள் எனப் பல்வேறு தளங்களுக்கான கருத்துருவாக்கங்களும் இடம் பெறுகின்றன. இந்தக் கட்டுரை, சூழலியல் நோக்கில் மட்டுமே எடுத்துரைக்கப்பட்டு அமைகிறது. ஏனெனில் மழை வளம் குறையத் தொடங்குதல், இயற்கை வளங்கள் வளர்ச்சித் திட்டங்கள் என்ற பெயரில் சுரண்டப்படுதல் என இயற்கையை அழிக்க நினைக்கும் தொடர் நிகழ்வுகள் நடந்தேறி வரும் இந்தியச் சூழலில் இத்தகைய சிந்தனை அவசியம் தேவை. ஒரு படைப்பு என்பது, தாம் வாழும் சமூகச் சிக்கல்களை, போராட்டங்களை எடுத்துரைக்க வேண்டும். மரபின் நீட்சியாகச் சொல்லப்படும் சமூக அறங்கள், சமரசமின்றி இனம் காணப்பட்டு, மக்களை நன்முறையில் முனைப்படுத்த வேண்டும். இத்தகைய நிலையில் இந்தியச் சமூக பண்பாட்டின் ஒரு கூறான, இயற்கையைப் பாதுகாத்தல் என்ற சிந்தனையை, தமிழ் மரபுச் சூழலோடு எடுத்துரைத்து, இயற்கை தரும் அற்புதத்தைக் கைக்கொண்டு, அது உணர்த்தும் அற வாழ்வினையும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்று வலியுறுத்துகிறது கானகன்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# பழங்குடியினரின் கதைகளும் பின்புலமும்

**கல்பனா ச.**
உதவிப்பேராசிரியர்
நியூ பிரின்ஸ் ஸ்ரீ பவானி கலை மற்றும் அறிவியல் கல்லூரி
nandhukalp@gmail.com
*****

மனிதனின் நனவிலி மனதில் எழுகின்ற எண்ணங்களும் ஏக்கங்களும் கதைகளாக வெளிப்படுகின்றன. இனக்குழுவாக வாழ்ந்து வரும் பழங்குடியினரிடையேயும் கதைகள் காணக்கிடக்கின்றன. பழங்குடியினர் அன்றாட வாழ்வில் தாங்கள் பார்த்து வருவனவற்றையோ அல்லது தங்களுக்கு அப்பாற்பட்டு விளங்குபவைகளையோ கதைக்கருவாகத் தேர்வு செய்து கொள்கின்றனர். இம்மக்கள் தங்களின் ஆசைகள, வாழ்க்கை அனுபவங்கள், சட்டதிட்டங்கள் சமுதாய அமைப்புகள், பண்பாடு, நம்பிக்கை போன்றவற்றை கதைகளின் வாயிலாக விளக்குகின்றனர். பொழுது போக்கிற்காகக் கதைகள் கூறப்பட்டாலும் அக்கதைகளின் வழி நற்கருத்துக்கள் எடுத்தியம்பப்படுகின்றன எனலாம். இடுக்கி பழங்குடியினரான மன்னான், முதுவான், ஊராளி, மலைப்புலையர்களிடம் கதைகள் காணப்படுகின்றன. பழங்குடியினரிடமிருந்து சேகரித்த உறவுமுறை சார்ந்த கதைகள் இங்கு ஆராயப்படுகின்றன.

#### மாற்றாந்தாய் குழந்தைகள் உறவு



மாற்றாந்தாய்க் குழந்தைகள் உறவு முறை தொடர்பான கதைகளில் முதல தாரத்தின் குழந்தைகளைச் சிற்றன்னையானவள் கொடுமைப்படுத்தி துன்புறுத்துவதே பெரிதும் கதை நிகழ்வாக இடம் பெற்றுள்ளது. மேலும் மூத்தவளின் குழந்தைகளை வீட்டைவிட்டு விரட்டி அடிக்கும் மாற்றாந்தாய்களைக் கதைகள் சுட்டிக்காட்டுகின்றன. மூத்ததாரத்தின் குழந்தைகள் எவ்விதத்திலும் சிறப்பாக வாழ்ந்துவிடக் கூடாது எனும் எண்ணம் கொண்டவளாகவே மாற்றாந்தாய் இருந்திருக்கின்றாள்.

முதுவர்களிடையே மாற்றாந்தாயின் கொடுமையைச் சுட்டிக்காட்டும் கதை இடம்பெற்றுள்ளது. நல்ல விளைச்சல் கிடைக்கவேண்டும் என்பதற்காகக் கணவன் தன் மனைவியை பலியிட்டு வயலின் தலைகாடு நடுகாடு அடிக்காட்டில் புதைக்கின்றான். குழந்தைகள் தாயை காணாமல் துன்பப்படுவது கண்டு மறுமணம் செய்துகொள்கின்றான். சித்தியாக வருபவள் குழந்தைகளுக்கு உணவு கொடுக்காமல் அவர்களைத் துன்பப்படுத்துகிறாள். குழந்தைகள் தாயை நினைத்து அழுகின்றனர். இறந்த தாய் குழந்தைகளிடம் தலைக்காட்டிலுள்ள மரத்தில் தண்ணீரும் நடுக்காட்டில் உள்ள மரத்தில் பலவகை உணவுகளும் அடிக்காட்டில் பலவகைப் பழங்களும் இருப்பதாகக் கூறுகின்றாள். குழந்தைகளும் சென்று பசியாறுகின்றனர். இதை அறிந்த சித்தி மரங்களை வெட்டி விடுகின்றாள். மேலும் தன் கணவனிடம் கூறி குழந்தைகளை வீட்டைவிட்டு துரத்திவிடுகின்றாள். குழந்தைகள் காட்டில் அழுதுகொண்டு இருப்பதைக்கண்டு அவ்வழியே வந்த இராஜாவும் மந்திரியும் அவர்களின் நிலையறிந்து அவர்களைத் திருமணம் செய்து கொள்கின்றனர் இதை அறிந்த சித்தி தன் மகளையும் மரத்தின் மீது இருக்கச் சொல்கின்றாள். இராஜாவின் வேடம் புனைந்து வந்த கிழவன் அவளை திருமணம் செய்து கொள்கின்றான். உண்மை அறிந்த சித்தி தன் பிள்ளை நிலை இவ்வாறு இருக்க மூதத்தாரத்தின் பிள்ளைகள் மட்டும் சந்தோசமாக இருக்கிறார்களே என்று பொறாமை கொண்டு அரண்மனைக்கு தன் கணவனுடன் செல்கின்றாள். அங்கு மூத்ததாரத்தின் பிள்ளைகள் சகலவசதியோடும் இருப்பதைக்கண்டு

பொறாமை கொண்ட சித்தி அவர்களைப் பற்றித் தவறாக இராஜாவிடமும், மந்திரியிடமும் கூறுகின்றாள் இறுதியில் சித்தியையும் கணவனையும் இராஜாவும் மந்திரியும் கொன்றுவிடுகின்றனர். இக்கதையில் உணவிற்காகப் பாடுபடும் குழந்தைகள் இராஜா மந்திரியால் திருமணம் செய்து கொள்ளப்படுகின்றனர். இதனை அறிந்த மாற்றாந்தாய் பொறாமை கொண்டு அவ்வாழ்வை கெடுக்க நினைக்கின்றாள். இறுதியில் கொல்லப்படுகின்றாள். இக்கதையில் வயல் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. முதுவர்கள் இன்று காடுகளில் வாழ்ந்தாலும் அவர்களின் முன்னோர்கள் சமவெளியைச் சார்ந்தவர்களே (தமிழகம்) என்பதனை மெய்பிக்கும் வாயிலாக வயல்பற்றிய செய்தி அவர்களின் கதைகளில் இடம் பெற்றுள்ளன.

ஊராளிகளிடையே சேகரிக்கப்பட்ட கதையில் மாற்றாந்தாயானவள் குழந்தைகளைக் கொடுமைப்படுத்திக் கணவனிடம் கூறி காட்டில் விடச் சொல்கின்றாள் கணவனும் அவ்வாறே செய்கின்றான். காட்டில் பிள்ளைகள் இருக்கும் போது அவ்வழியே ஒரு யானைக்கூட்டம் வருகின்றது அதில் வயதான யானை பிள்ளைகளைக் கண்டு உடன் அழைத்துச் செல்கின்றது. சித்தியும் கணவனும் இருக்குமிடத்தில் பஞ்சம் ஏற்படவே. அதனால் உணவு தேடி இருவரும் காட்டிற்குச் செல்கின்றனர். அங்கு குழந்தைகளைச் சந்தித்து உணவு பெறுகின்றனர். இறுதியில் யானை அவர்களின் கெட்ட குணத்தை அறிந்து இருவரையும் கொன்றுவிடுகின்றது. இக்கதையில் மாற்றந்தாயினால் கொடுமைக்கு ஆளாகும் குழந்தைகளை யானை காப்பாற்றுகின்றது. இறுதியில் பஞ்சம் ஏற்படவே சிற்றன்னையும் கணவனும் குழந்தைகளை நாடுகின்றனர். முடிவில் தங்களின் கெட்ட செயல்களால் துன்பத்திற்கு ஆளாகின்றனர். இருகதைகளிலுமே கொடுமைப்படுத்தியவர்கள் அடைந்த துன்பம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

இக்கதைகள் வழங்கிவந்ததற்கானக் காரணத்தை நோக்குமிடத்து அக்காலச் சமூகச் சூழலில் ஆண்களுக்கு மறுமணம் அனுமதிக்கப்பட்டிருக்கின்றது என்பது தெளிவாகிறது. சிற்றன்னையின் கொடுமை எல்லா சமூகத்தாரிடமும் காணப்படுகிறது. கொடுமை செய்யும் மாற்றந்தாய்களை நம்மக்கள் ஏற்றுக்கொள்வதில்லை என்றாலும் நடைமுறையில் இச்சிக்கல் நிலவி வருவதனைச் சுட்டிக்காட்டிக் கொடுமை செய்வோர் தண்டனை அனுபவிப்பதான நிகழ்வுகளைப் பழங்குடியினரின் கதைகள் சுட்டிநிற்கின்றன. சிறந்த இதிகாசமாகச் சிறப்பிக்கப்படும் இராமாயணத்திலும் சிற்றன்னையாக விளங்கும் கைகேயியின் தூண்டுதலால்தான் தசரதன் தன் மகன் இராமனை காட்டிற்கு வனவாசம் போகச் சொல்கின்றான். இதிகாசத்தின் சிறு கதைக் கூறாக இப்பழங்குடிகளின் கதைகள் விளங்குகின்றன எனலாம். சிற்றன்னையின் கொடுமை மேலோங்கி நின்ற காலகட்டத்தில் அதைத் தடுத்து அறிவுரை கூறும் முகமாக இக்கதைகள் இவர்களிடையே வழங்கிவந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

**மாமியார், மருமகள் உறவு**

கூட்டுக்குடும்ப அமைப்பில் மாமியார் மருமகள் போராட்டம் என்பது இன்றளவும் தீர்க்கமுடியாத ஒன்றாகவே உள்ளது. மாமியார் உடைத்தால் மண்குடம்; மருமகள் உடைத்தால் பொன் குடம் போன்ற பழமொழிகள் இந்த உறவுநிலையிலுள்ள முரண்பாட்டின் உச்சத்தை விளக்கும் சிறந்த சான்றுகளாக உள்ளன எனலாம்.

முதுவர்களிடையே மாமியார் கொடுமை பற்றிய இடம் பெற்றுள்ளது. இக்கதையில் ஆண் பொருள் தேடி வெளியிடம் செல்கின்றான். அவ்வேளையில் மாமியார் மருமகள்களைக் கொடுமைப் படுத்துகின்றாள். கொடுமை தாங்க முடியாமல் இருவரும் காட்டிற்குச் செல்கின்றனர். அங்கு சென்று தும்பியையும் வண்டையும் உணவாக உண்கின்றனர். இறுதியில் இருவரும் தும்பி, வண்டாக மாறுகின்றனர். கணவன் வந்து அவர்களை விளக்கமார் கொண்டு அடிக்கின்றான் இருவரும் தங்களின் உருவம் பெறுகின்றனர். இறுதியில் தாயின் கொடுமைச் செயல்களை அறிந்து தாயைக் கொல்கின்றனர். இக்கதையில் மாமியாரின் கொடுமை தாங்கமுடியாமல் இருவரும் துன்புறுகின்றனர். முடிவில் தன் தீய செயலால் மாமியார் கொலை செய்யப்படுகின்றாள். இக்கதையிலும் தண்டிக்கப்படுவதே கதை முடிவாகக் கூறப்பட்டுள்ளது. மேலும் ஒருவன் இரு பெண்களை (அக்கா, தங்கை) திருமணம் செய்துகொள்ளும் முறை அக்காலத்தில் இருந்திருக்கின்றது என்பது இக்கதைகளின்வழி புலனாகிறது. சங்ககாலத்தில் இடம்பெற்றுள்ள பொருள்வயிற் பிரிவு இப்பழங்குடிகதைகளிலும் இடம் பெற்றுள்ளது நோக்கத்தக்கதாகும். இன்றுவரை யாராலும் தீர்த்துவைக்க முடியாத உறவுச்சிக்கலாக இவ்வுறவுகள் நீடித்துநிற்கின்றன எனலாம். மாமியார் தண்டிக்கப்படுவதான பல்வேறு கதைகள் மக்கள் மத்தியில் பெருவழக்குப் பெற்றுள்ளன என்று ச. சோமசுந்தரம் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தை வைத்துப் பார்க்கும்பொழுது எல்லா சமூகத்தினரிடமும் இச்சிக்கல் இருந்திருக்கின்றது என்பது தெளிவாகிறது.

**பெற்றோர் குழந்தைகள் உறவு**

மன்னான் மக்களிடையே சேகரித்த கதையில் பெற்றோர்கள் குழந்தைகளுக்கு உணவு கொடுக்க முடியாமல் அவர்களைவிட்டுச் செல்கின்றனர். ஆனால் சில நாட்களுக்குப்பின் குழந்தைகள் பெற்றோரை கண்டுபிடிக்கின்றனர். தாய் குழந்தைகளுக்கு பாம்பு முட்டையை உண்ணக் கொடுக்கின்றாள். மகன் பாம்பாக மாறுகின்றான். தங்கையும் அண்ணனும் ஆலமரத்தடியில் வாழ்ந்துவருகின்றனர். ஒரு நாள் அண்ணன் உணவு தேடி சென்ற நேரத்தில் அவ்வழியே வந்த இராஜா தங்கையின் நிலையை அறிந்து அவளை திருமணம் செய்கின்றார். இறுதியில் அண்ணன் மனிதனாகின்றான். அனைவரும் சந்தோமாக வாழ்கின்றனர் இதே போன்ற கதை ஊராளிகளிடமும் காணப்படுகின்றது, மேலும் ஊராளிகளின் கதையில் பெற்றோர்கள் குழந்தைக்கு உணவு கொடுக்கமுடியாத சூழலில் குழந்தையைக் கொல்ல நினைக்கின்றனர். அவ்வேளையில் பார்க்கான் வந்து குழந்தையை காப்பாற்றி கொண்டு செல்கின்றது. சிறிது நாட்கள் சென்றபின் குழந்தை பெற்றோரை சந்திக்கின்றது. பார்க்கானின் உத்தரவுடன் குழந்தை மீண்டும் பெற்றோருடன் வந்து வாழ்கின்றது. இக்கதையிலும் உணவிற்காகவே குழந்தையைக் கொலை செய்ய பெற்றோர்கள் முனைந்துள்ளனர் என்பது தெளிவாகின்றது.

இருகதைகளிலுமே பெற்றோர்கள் பஞ்சத்தின் காரணமாகவே குழந்தைகளை விட்டுச் செல்லும் நிலை பதிவாகி உள்ளது. பழங்குடியினரிடம் சேகரித்த கதைகளில் பஞ்சம் என்பதே பெருவாரியாக பதிவு செய்யப்பட்டுள்ளது புலனாகிறது. உணவின் வறுமையை நிவர்த்தி செய்யும் முகமாக பலியிடல், குழந்தைகளைக் கொல்ல நினைத்தல், குழந்தைகளை அனாதைகளாக விட்டுச் செல்லல் போன்றவையே கதைகளின் போக்காக அமைந்திருக்கின்றன,

**அண்ணி கொழுந்தன் நாத்தனரா் உறவு**

இவ்வுறவுகள் அனைத்தும் கதையின் ஒரு சிறு கதாபாத்திரங்களாகவே இயங்குகின்றன. மலைப்புலையர்களிடம் சேகரித்த கதையில் அண்ணன் மனைவி கொழுந்தன் மீது ஆசை கொள்கின்றாள். ஆனால் தம்பி அதனை உணர்ந்து அண்ணனின் மனைவி அன்னையின் மறு உருவம் என்று விலசிச் செல்கின்றான். இதுபோன்ற கதைகள் மக்களிடையே வழங்கக்காரணம் இவ்வாறான உறவுச்சிக்கல்கள் நிறைந்திருந்த காலகட்டத்தில் அவற்றிலிருந்து விடுபடவும் இழிவான வரண்முறைகளை மாற்றியமைக்கவும் இக் கதைகள் மக்களிடையே வழங்கி வந்திருக்க வேண்டும்

மன்னான் மக்களிடையே சேகரித்த ஒரு கதை அண்ணி நாத்தனார் உறவைச் சுட்டுவதாக உள்ளது இக்கதையில் ஏழு அண்ணன்களுக்கு ஒரு தங்கை தங்கை நிறைய நகைகள் இட்டிருப்பதைக் கண்ட அண்ணிமார்கள் அண்ணன்கள் வெளியூர் சென்றநேரத்தில் நாத்தனாரை ஏமாற்றி அவளை குளத்திற்கு அழைத்துச் செல்கின்றனர். அங்கு சென்று நகையைப் பறித்துக் கொண்டு அவளை குளத்திற்குள் பார்த்து கொண்டே இருந்தால் தங்க மீன் வருமென்று கூறுகின்றனர். நாத்தனாரும் பார்த்துக் கொண்டிருக்கும் வேளையில் ஒரு சிவந்த பாம்பு அவளை தண்ணீருக்குள் இழுத்து சென்று அவளை திருமணம் செய்து கொள்கிறது. இறுதியில் அண்ணன்கள் அவளைக் கண்டுபிடிக்கின்றனர். தங்கை பாம்புடன் கொண்ட உறவினால் குழந்தை பிறக்கின்றது. இதை அறிந்த அண்ணன்கள் தங்கையை ஏமாற்றிய அண்ணிமார்களைக் கொன்று பாம்பிற்கு குழந்தை பெற்றுவிட்டாளே என்று தங்கையையும் கொன்று ஏழு அண்ணன்மார்களும் இறந்துவிடுகின்றனர் இக்கதையில் இனம்மாறி திருமணம் செய்ததினால் ஏற்பட்ட விளைவுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளது பாம்பைக் கதாபாத்திரமாகக் கொண்டு கதை கூறப்பட்டாலும் அக்கால சமூகத்தில் உயர்வு தாழ்வு என்ற பிரிவு இருந்திருக்கின்றது என்பதை இக்கதை புலப்படுகிறது,



உறவுகள் பற்றிய கதைகள் முன்வைக்கும் கருத்துக்களைப் பார்ப்போமானால் அக்கதைகள் அனைத்துமே உணவின் தேவையையே முன்வைக்கின்றன எனலாம். மனிதனின் அடிப்படை தேவைகளில் ஒன்று உணவு. உணவில்லாமல் மனிதன் எதிர்கொள்ளும் துன்பம், அதனால் ஏற்படும் விளைவுகள் போன்றவை கதைகளாக உருவாக்கப்பட்டுள்ளன. வறுமையின் உச்சகட்டத்தில் இருப்பவர்களுக்கு மண்ணில் புதைந்துகிடக்கும் கிழங்கு வகைகளே உணவாகப் பயன்பட்டன என்பது கதைகளின் வழி புலனாய்கிறது. ஒரு கதையில் கிழங்கை அபகரித்து அக்காவைக் கொலை செய்யும் நிலை கூறப்பட்டுள்ளது. வேறு கதையில் பாம்பு முட்டையைத் தாய் குழந்தைகளுக்குக் கொடுக்கும் அவல நிலையும் கூறப்பட்டுள்ளது. நல்லவிளைச்சல் கிடைப்பதற்காக ஒருவன் தன் மனைவியைப் பலியிட்ட செய்தியும் கதைகளில் பதிவாகியுள்ளன.

வங்காளத்தில் வாழும் திராவிட இனத்தவரான கோண்டுகள் நல்ல விளைச்சல் பெறுவதற்காக ஆண்டு தோறும் மனிதர்களைப் பலியிடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் என்று பிராசர் கூறிய கருத்தை எட்கர் தர்ஸ்டன் நம் நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும் கோம்சூர் மலைப்பகுதியில் ஆண்டுதோறும் தரைப்பெண்ணுக்குப் பலி தரப்படுகிறது. மயிலின் உருவில் வடிவமைக்கப்பட்ட பொம்மையோடு மனிதனைச் சேர்த்துக் கட்டிப் பலியிடுகின்றனர் என்ற செய்தியும் அந்நூலில் பதிவாகியுள்ளது மேலே குறிப்பிடப்பட்ட செய்திகளில் கோண்டுகளும் கோம்சூர் மலைப்பகுதியில் வாழ்ந்தவர்களும் நல்லவிசைச்சலுக்கு வேண்டி மனித பலி நடத்தியுள்ளனர் என்பது ஆதாரப் பூர்வமாக விளக்கப்பட்டுள்ளது பழங்குடியினரின் கதையிலும் நல்ல விளைச்சலுக்காகவே கணவன் தன்

மனைவியை பலியிடுகின்றான். தர்ஸ்டன் குறிப்பிட்டுள்ள செய்திகளையும் பழங்குடியினரின் கதையையும் வைத்து நோக்கும் பொழுது ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் உலகில் உணவிற்கான பஞ்ச ஏற்பட்டிருந்திருக்கிறது அதன் காரணமாக மக்கள் பூமிக்கு இரத்தபலி கொடுப்பதால் பூமி நல்ல விளைச்சல் தரும் என்ற மூட நம்பிக்கையில் பலிகளை நடத்திவந்துள்ளனர். பூமிக்கு முன்பு நடத்தப்பட்ட மனிதபலிகள் நாளடைவில் கோழி, ஆடு, மாடு பலியிடுதல் எனும் நிலையில் மாற்றமடைந்து இன்று நோன்பிருந்து பூமியைத் தெய்வமாக வணங்கி பயிரிடும் நிலை மக்களிடையே காணப்படுகிறது என்பது தெளிவாகிறது. பஞ்சத்தின் விளைவே மக்களை இந்நிலைக்கு ஆளாக்கியுள்ளது என்பது கதையின் வழி புலனாய்கிறது. உறவுகள் பற்றிய கதைகள் அனைத்துமே உறவுகளின் வழி பல சமுதாயப் பிரச்சனைகளை முன் வைத்துள்ளது. அதுமட்டுமல்லாமல் ஒழுக்க நிலையையும் தவறு செய்தால் தண்டனை கிடைக்கும் என்ற செய்தியின் வழி தவறு செய்யக் கூடாது என்ற நற்கருத்தும் கதைகளின் வழி எடுத்தியம்பப்பட்டுள்ளது.

**<u>உடனுதவிய நூல்கள்</u>** :-

1. சு.சோமசுந்தரம் - தஞ்சை மாவட்ட நாட்டுப்புறக் கதைகள் ஓர் ஆய்வு
2. இரத்தினம். க - தென்னிந்திய மானிட இன இயல்

(☺)(☺)(☺)(☺)(☺)



# கள்ளிக்காட்டு இதிகாசத்தில் வாழ்வியல் கூறுகள்

**மு.சுகந்தி**
உதவிப்பேராசிரியர்
நியூ பிரின்ஸ் ஸ்ரீ பவானி கலை மற்றும் அறிவியல் கல்லூரி
suganthiganesan@gmail.com

*****

கற்பனை என்பது நெடுங்காலம் வரையில் செய்யுள் வடிவில் பாட்டு வாயிலாகப் புலப்படுத்தக் கூடியதாகவே இருந்தது. அதனால் காவியம் முதலியவை வளர்ந்து பெருகின. உரைநடையில் கற்பனை வளர்ந்ததின் வேகமான வளர்ச்சி நாவலும் சிறுகதையும் ஆகும். இவ்வாறாக வளர்ந்த நாவலின் இலக்கணம் யாதெனில் வாழ்க்கையோடு இயைந்ததாக அமைய வேண்டும். சாதாராண மக்களின் வாழ்க்கையைப் பெருமை மிக்க வாழ்க்கையாகக் கதையுடன் கற்பனை சேர்த்து நாவலில் சித்தரித்திருந்தாலும் அது மக்களின் உணர்ச்சிகளையும் குறிக்கோள்களையும் ஒட்டியதாக அமைதல் வேண்டும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் மாயூரத்தில் முனிசீப் வேலை பார்த்தவர் வேதநாயகம் பிள்ளை. அவர் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம் தொடங்கி இன்று பல்வேறு நாவல்கள் தோன்றியுள்ளன. இந்த வரிசையில் நாட்டுப்புற மக்களின் வாழ்வியற் கூறுகளையும் பழக்க வழக்கங்களையும் சித்தரிக்கும் வகையில் தோன்றிய நாவல் கள்ளிக்காட்டு இதிகாசம் ஆகும். இந்நூலின் ஆசிரியர் கவிஞர் வைரமுத்து ஆவார். இவர் இந்நூலுக்காகச் சாகித்ய அகாதெமி விருது பெற்ற சிளப்புக்குரியவர் ஆவார்.

கள்ளிக்காட்டு இதிகாசம் கள்ளிக்காட்டு மக்களின் வாழ்வியற் கூறுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குகின்றது.

**வாழ்வியற் சூழல்:**

நாகரிகம் வளர வளர மனிதர்கள் சிறுகூட்டமாக இருந்து வாழ்ந்த நிலையிலிருந்து பெரிய சமுதாயமாக வாழும் நிலைக்கு வந்தனர். பெரிய சமுதாயமாக வளரத் தொடங்கியதும் சிறு சிறு நாடுகள் யாவும் ஒரு குடும்பத்தின் உறுப்புகள் போலாகி ஒரு பெருஞ்சமுதாய அமைப்பாக உருப்பெற்றது. இப்படி சமுதாயமாக உயர்ந்த ஒவ்வொரு மனிதனும் மகிழ்வுடன் வாழ்வதற்கு இந்றியமையாத அடிப்படைச் சூழல்கள் தேவைப்படுகின்றன. இத்தகைய சூழல்கள் வாழ்வியற் சூழல்கள் எனப்படுகின்றன. மதுரையைச் சுற்றியுள்ள நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் முறைகளை கள்ளிக்காட்டு இதிகாசத்தில் இடம்பெற்றுள்ள மக்களின் குடும்பம் வாழ்க்கை முறை பழக்க வழக்கங்கள் நம்பிக்கைகள் போன்றவற்றின் மூலம் வாழ்க்கைச் சூழல்களை அறிந்து கொள்வதற்கு இந்நாவல் ஏதுவாக அமைகின்றது எனலாம்.

**குடும்பம்:**

குழு என்ற சொல்லில் இருந்து குடும்பம் உருவாகியிருக்கலாம் என்று கருதப்படுகின்றது. குடும்பம் என்பது ஒரு தனிமனிதனைச் சூழ்ந்த அகச்சுற்றம் என்றும் குலம் என்பதை புறச்சுற்றம் என்றும் இராமநாதன் குறிப்பிடுகிறார். இல்லறம் பற்றி வள்ளுவர் அதிகாரம் முழுமையும் கூறியுள்ளார்.

இத்தகையக் குடும்பத்தின் ஒரு தொடக்கமே திருமண நிகழ்வாகும். இவ்வகையில் கள்ளிக்காட்டு இதிகாசத்தில் இடம்பெற்றுள்ள நாட்டுப்புறமக்களிடம் ஒருதார மணம் விதவை மறுமணம் பரத்தமை எனப் பலத் திருமண முறைகளைக் கொண்டிருந்துள்ளனர்.

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் முதன்மைப் பாத்திரமாக சிறந்து விளங்கும் பேயத்தேவரின் வாழ்கை முறையை ஒரு தார மணத்திற்கும் அவரது மகள் செல்லத்தாயி வாழ்க்கையை விதவை மறுமணத்திற்கும் சான்று பகரலாம். பேயத்தேவர் மனைவி அழகம்மா. ஆழகம்மாளின் உடல்நிலை சரியில்லாத போது அவளுக்குத் தேவையான அனைத்தும் செய்கிறார் பேயத்தேவர். “ ஒரு நாள் யேத்தேவரும் அழகம்மாளும் கம்பங்காட்டில் வேலை பார்த்து சற்று ஓய்வெடுக்கும் வேளையில் கட்டுவீரியன் பாம்பு அவரைத் தீண்ட வ?ரும் சமயத்தில் தன் உயிருக்காக சிறிதும் அஞ்சாமல் அந்தப் பாம்பைப் பிடித்துக் கொன்ற” நிகழ்வை அழகம்மாள் இறந்த பின் இவள் பிரிவை எண்ணி வருந்துவதின் மூலம் இல்லறத்தின் சிறப்பையும் அன்பின் மேன்மையையும் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

நாட்டுப்புற மக்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கலாசாரத்தை மீறாதவர்கள். இத்தகைய கலாசாரத்தில் இருந்து முரண்பட்டு ஒரு முற்போக்குவாதியாக செயல்படுபவராகச் பேயத்தேவரைச் சித்தரித்துள்ளார் வைரமுத்து. தேவர் மகளின் கணவர் செல்லத்தாயி இறந்த பின் அவளுக்கு மறுமணம் செய்ய நினைத்து ஒச்சுக்காளை என்பவனை மறுமணம் செய்து வைக்கிறார்.

**தொழில்**:

பண்டைக் காலத்தில் மக்களின் தொழில்முறை சாதி அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்தது. இந்த அடிப்படையில் கள்ளிக்காட்டு மக்களின் தொழில்முறை அமைந்துள்ளது. இந்திய சமுதாயத்தில் பல சாதி அமைப்புகள் காணப்படுகின்றன. சாதி என்னும் சொல்லிற்கு சததானது பிறப்பு என்ற பொருளையும் கெபண்டதாகும். ஒருவருடைய எகுப்பு அவர்களுடையப் பிறப்பைக. கொண்டேத் தீர்மானிக்கப் பெறுவதால் அதனைக் குறிக்க சாதி என்னும் சொல் காணப்படுகின்றது. பெரும்பாலும் கிராமங்களில் ஒருவரை அழைக்கக் கருதினால் அவருடைய சாதியைக் கூறி அழைக்கும் வழக்கம் இருப்பதாக பாலசுப்பிரமணியன் கூறுகிறார். நாட்டுப்புற மக்களின் முக்கியத் தொழில் விவசாயம் ஆகும். உழவுத் தொழிலின் சிறப்பை வள்ளுவர்

**“பலகுடை நீழலும் தங்குடைக்கீழ் காண்பர்**
**அலகுடை நீழ லவர்”** (கு.எண் : 95)

கள்ளிக்காட்டு இதிகாசத்தில் பேயத்தேவர் விவசாயத்தை உயிராகக் கொண்டுள்ளார். இதற்கேற்றாற் போல் விவசாயம் தான் அவரையும் குடும்பத்தாரையும் வாழ வைக்கின்றது எனலாம். இந்நாவலில் இடம்பெற்றுள்ள பிற கதாபாத்திரங்களான நாயக்கர் என்பவர் வட்டிக்கு விடுவதும் தச்சர் தச்சுத் தொழிலும் இடையர்கள் ஆடு மேயத்தலும் என கள்ளிக்காட்டு மக்களிடம் இன அடிப்படையில் தொழில் முறை அமைந்திருந்ததை அறியமுடிகின்றது.

**பொருளாதாரமும் கல்விமுறையும்**:

கள்ளிக்காட்டு மக்கள் பொருளாதாரத்தில் பின்தங்கியே உள்ளனர். ஆனால் ஒரு மனிதனின் நிம்மதியான வாழ்கைக்கு பொளாதாரம் இன்றியமையாததாகும். பேயத்தேவர் கடன்பட்டு வாழ்வதும் அந்தப்

பணத்தைப் திருப்பிக் கொடுக்க மடியாமல் அவரையும் குடும்பத்தையும் வாழ வைக்கும் மாட்டையும் அவர் கொண்டு சென்று விடுகிறார். அவர் வளர்த்த மாடு அங்கிருந்து தேவரிடம் வந்துவிடும். பின் அவ்வூர் மக்கள் ஒன்று கூடி பணஉதவி செய்து தேவரின் கடனை ஊர்மக்கள் திருப்பிக் கொடுத்துக் கடனைத் தீர்த்து விடுகின்றனர். அச்செயலில் சாதி தலைகாட்டவில்லை. முாறாக நாட்டுப்புற மக்களின் உயர்ந்த பண்பு புலப்படுகின்றது.

பொருளாதார நிலையில் பின்தங்கி இருக்கும் மக்கள் கல்வி நிலையிலும் பின் தங்கி உள்ளனர். அந்த ஊரில் அதிகம் படித்தவர் பேயத்தேவர் மகள் செல்லத்தாயி. அவள் படிப்பு மூன்றாம் வகுப்பு. கல்வியறிவு இல்லையெனினும் கள்ளிக்காட்டு மக்கள் உயர்ந்த பண்போடு சிறந்த நோக்கத்தோடு துணிவோடு வாழ்ந்துள்ளனர் என்பது இதிகாசத்தின் வழி அறியமுடிகின்றது.

**பழக்க வழக்கங்கள்**:

பழக்க வழக்கங்களும் சமய நம்பிக்கைகளும் இடத்திற்கு இடம் மாறுபடுகின்றன. வாழ்க்கை அமைப்பிற்குத்தக மண்ணின் தன்மைக்கேற்ப இவை வேறுபடுகின்றன. பழங்காலம் முதல் வரும் நம்பிக்கைகளும் வழக்கங்களும் பொதுத் தன்மை கொண்டு விளங்குவதாக பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

கிராமப்புறங்கள் மட்டுமில்லாமல் எல்லா இடங்களிலும் பெரும் விமரிசையாகக் கொண்டாடப்படுவது விழாக்களாகும். “கள்ளிப்பட்டியிலும் முத்தாலம்மனுக்குத் திருவிழா எடுக்கப்பட்டு மூன்று நாள் விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. கோயிலைச் சுற்றி பந்தல் போடவும் தோரணம் கட்டுவதும் அவுத்து விட்ட கன்னுக்குட்டிக மாதிரி சின்னஞ்சிறுசுக ஆடிக்கிடக்கவும் பொம்பளக மாவிடிக்கவும் உள்ளுர் மற்றும் வெளியூர் விருந்தாளிகளுமா சேர்ந்து கிராமமே விழாவில் திளைத்து மகிழ்ந்து இருப்பர்.

**பண்பாடு**:

கிராமத்திற்குரிய சில பண்பாட்டுக் கூறுகள் இம்மக்களிடம் காணப்படுகின்றன. மனைவி மாடு இறப்பு பற்றிய நம்பிக்கைகளும் இதில் பேசப்பட்டுள்ளது. “கள்ளிக்காட்டு விவளாயக் கலாசாரத்தில் கணவன் மனைவி உறவு என்பது வெறும் உரிமைகளை முன்னிறுத்தி ஏற்படுவதல்ல கடமைகளை முன்னிறுத்திக் கட்டப்படுவதாகும். என்பதை பேயத்தேவர் அழகம்மாள் வாழ்வின் மூலம் உணரமுடிகின்றது.

நாட்டுப்புற மக்களின் குடும்பத்தில் ஒன்றாகப் போற்றப்படுவது மாடு ஆகும். கள்ளிக்காட்டு மக்கள் தன் குழந்தைகளை வளர்ப்பது போல மாட்டையும் தன் குழந்தைகளுக்கு மேலாகப் போற்றி வளர்த்துள்ளனர். இம்மக்களிடம் பெற்ற பெண்ணை விட மகிழ்ச்சி தருவது மாடாகும். முனித உயிர்களை விட மாக்களின் உயிர் பெரிதும் போற்றப்படுகின்றது.”ஒரு மாடு குடும்பங்காக்கும் ஒன்பது மாடு குலங்காக்கும்” என்பது விவசாய வாழ்வில் வேரோடிய நம்பிக்கை ஆகும்.

கள்ளிக்காட்டு மக்களில் ஒருவர் இறந்து விட்டால் அவரை கிடந்த கோலத்தில் இல்லாமல் அமர்ந்த கோலத்தில் வைப்பது கள்ளிக்காட்டு கலாசாரமாகக் கருதப்படுகின்றது. “ஆள் செத்தா வெள்ளாம நல்லா வெளையும் வெள்ளாம நல்லா வெளைஞ்சா ஆள் செத்தாலும் சாகும்னு” என்ற கூற்று இம்மக்களிடம் நிலவி வரும் நம்பிக்கையாகும்.

**பெண்கள் நிலை:**

பெண்கள் காலந்தோறும் பல வழிகளில் துன்பப்பட்டு மனத்துணிவுடன் வாழ்ந்து வருகின்றனர். இந்த நூலிலும் தேவர் மகள் செல்லத்தாயியை ஒச்சுக்காளை என்பவனுக்கு இரண்டாம் திருமணம் செய்து வைக்கின்றார். அவனோ அவளைத் துன்புறுத்திக் கொண்டே இருப்பதும் அவள் அழுது கொண்டே அப்பன் வீடு வருவதும் தேவர் தன்னால் இயன்ற பொருளுதவி செய்து அவளை அனுப்பி வைப்பார். ஆந்தப் பணம் தீர்ந்தவுடன் அவளை மீண்டும் துன்பப்படுத்துவதே அவனது வழக்கமாகக் கொண்டிருக்கும் பாத்திரமாக சித்திரிக்கப்பட்டுள்ளான். "விடிஞ்செழுந்து மஞ்சக்குளிச்சு சீவி முடிச்சுச் சிங்காரிச்சு பகுமானமா சமையல் பண்ணி உண்டமிச்சம் பரிமாறி காத்தாடும் இடத்தில் தலையணை போட்டு..........மாலையில் கசங்கிய புடவையை திருப்பிக் கட்டி பசையில்லா சிரிப்போடு கணவனை வரவேற்கும் பகட்டு வாழ்க்கை யல்ல கள்ளிக்காட்டுப் பெண்கள் வாழ்க்கை யாகும்.

**தீண்டாமை:**

நாட்டுப்புற மக்களிடம் உயர்ந்த பண்புகள் அதிகம் இருப்பினும் இன அடிப்படையில் அவர்கள் நிலை துன்பமானது. கீழ் சாதியான முருகாயி தண்ணீர் பிடிக்க வருகின்றாள் அவ்வூரில் ஒரே ஒரு தண்ணீர் கிணறு. அதில் கீழின மக்கள் நீர் இறைக்கக் கூடாது. மேலின மக்கள் யாரேனும் நீர் பிடிக்க வரும்போது யாரேனும் அவர்கள் மீது இரக்கப்பட்டு நீர் இறைத்துக் கொடுத்தால் மட்டுமே அவர்கள் எடுத்து வரமுடியும். இத்தகையச் சூழலில் பேயத்தேவர் முருகாயி குடத்தை வாங்கி கியற்றில் இருந்து நீர் எடுத்துக் கொடுக்கிறார். அதைப் பார்த்த ஊர் மக்கள் ஒன்று கூடி அவரை எச்சரிக்கை செய்மு விட்டு செல்கின்றனர் காலங்கள் மாறி முன்னேற்றம் ஏற்பட்டாலும் இன அடிப்படையில் சமுதாயம் முடங்கி விடுகின்றது என்பதை இந்நூல் சிறப்பாக எடுத்துரைக்கினறது.

**போராட்டம்:**

கள்ளிக்காட்டு மக்கள் வாழ்க்கை முழுதும் போராட்டமாக மாறுகின்றது. இதோடு அரசிடமும் போராடும் சூழல். மக்கள் வசிக்கும் இடத்தில் அணைகட்டப் போவதைக் கேள்விப்பட்டு சீற்றத்தோடு எழுகின்றனர். தங்கள் உரிமைக்காகப் பெரிதும் போராடுகின்றனர். இருப்பதைக் கொண்டு வாழும் மக்களிடம் இருக்கும் இடத்தையும் விட்டுப் போங்கள் என்றால் அவர்கள் நிலை துயரமானது. அரசிடம் பல முறை போராடுககின்றனர். ஆனால் அரசோ அவர்களிடம் பணத்தைக் காட்டி மனதை மாற்றி ஆதிக்கம் செலுத்தி ஊரை விட்டு விரட்டி விடுகின்றது அரசு.

வைரமுத்து நாட்டுப்புற மக்களின் வாழ்வியற் சிந்தனைகளையும் சூழல்களையும் தெளிவாக விளக்கியுள்ளார். அவர்களுக்கு ஏற்படும் சவாழ்க்கைச் சிக்கல்களையும் துன்பங்களையும் எளிய நடையில் விவரித்துள்ளார். குடும்ப அமைப்புகளையும் இன அடிப்படையில் அமைந்துள்ள தொழில் முறையையும் இந்நாவலின் வழி அறியமுடிகின்றது. கள்ளிக்காட்டு மக்களின் வாழ்க்கை இறுதி வரையில் போராடி முடிவில் அவர்களின் மண்ணைப் விட்டு போய்விடுகின்றனர்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# சங்க இலக்கியத்தில் பல்லுயிர் பெருக்கம்

ப கணேஷ் வடிவேல்
உதவிப்பேராசிரியர் - தமிழாய்வுத்துறை,
ஸ்ரீமத் ஆண்டவன் கலை மற்றும் அறிவியல் கல்லூரி(தன்னாட்சி)
gvrukmani@gmail.com

*****

மனிதன் உலகில் தோன்றுவதற்கு முன்னரே உயிரினங்கள் தோன்றியுள்ளன. அவ்வாறு தோன்றிய உயிரினங்களே இப்பூமிப்பந்தை, வழி நடத்திச் சென்றுள்ளன. அவற்றின் செயல்பாடுகளினால் உயிர்க்கோளமானது பல்வேறு பரிணாமங்களை அடையப்பெற்றதோடு, புதிய உயிரினங்கள் தோன்றுவதற்கு காரணியாவும் அமைந்துள்ளன. உயிர்கோளத்தில் உயிரினங்களின் உற்பத்திப் பெருக்கத்திற்கு எவ்வித தடையுமின்றி இருப்பதற்கு காரணம் பல்லுயிர் பெருக்கமாகும். ஓரறிவு உயிரிலிருந்து ஐந்தறிவு உயிரினம் வரைக்கும் தங்களுடைய வாழ்விற்கு எவ்வித தீங்கும் உண்டாகாமல் ஒரே நிலையில் வாழ வேண்டும் என்று விரும்புகிறது. ஆனால் ஆறறிவு படைத்த மனிதனால் அதனுடைய வாழ்விடங்களையும், உணவுக்கான காரணிகளையும் இவன் துய்க்க முற்படும் பொழுது அவற்றிற்கு ஊறு நேருமாயின் அவை அழியத் தொடங்கிவிடுகின்றன. அவ்வாறு அழிவதனால் உண்டாகும் இழப்புகளைச் சரி செய்ய, இயற்கை வேறு வகையில் விடை தேடும். அந்த விடை மனித குலத்தின் உயிருக்கு கசப்பான முடிவாக அமைகின்றன. இதனை கருத்தில் கொண்டே இன்றையப் பல்லுயிர் பெருக்கத்திற்கான செயலைச் சங்க கால மக்கள் எவ்வாறு தங்களுடைய வாழ்வில் செயல்படுத்தினர் என்று ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இயற்கையும் மனித வாழ்வும்:**

சங்க கால மக்கள் இயற்கையோடு இணைந்த வாழ்வை வாழ்ந்துள்ளனர். உடலும் உயிரும் நிலைத்திருக்க வேண்டுமாயின், நீரும் நிலனும் நிலைத்து இருக்கவேண்டும். இங்கு நிலைத்து என்று குறிப்பிடுவது நீரும், நிலனும் அதன் மூலத்தன்மையிலிருந்து (நுண்ணுயிர் சிதைவுறாமல்) மாறுபடாமல் அவற்றை ஒன்றாக சேர்த்து பயிர் செய்தால் வேளாண்மை உயிர்பெறும். அந்த உயிரே உடலை வளர்க்கும் உபாயமாகும் **(புறம்-18-18-23)** என குடபுலவியனார் என்னும் புலவர் பாண்டியன் நெடுஞ்செழியனிடம் பல்லுயிர் சிதைவுறாமல் பேணி பாதுகாக்குமாறு குறிப்பாக அறிவுறுத்துகிறார். இதனை வள்ளுவரும்,

> **“நீர் இன்று அமையாது உலகுஎனின் யார் யார்க்கும்**
> **வான் இன்று அமையாது ஒழுக்கு”** (குறள்-20) என்கிறார்.

**மண்ணும் மனிதமும்:**

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் மண்ணை உயிராக மட்டும் நினைக்கவில்லை. உயிருக்கு உறுதுணையாக இருக்கும் நுண்ணுட்டச் சத்துக்களைக் கொடுக்கும் உட்கரு பொருளாகவும் விளங்குகின்றன. இதனை,

> **“................................நின் நாட்டு**
> **வயவுறு மகளிர் வேட்டுணின் .........”** (புறம்:-20-13,14)

என்ற பாடல் அடியில் சேர நாட்டுப் பெண்கள் கருவுற்ற பொழுது மண்ணைத் திண்பார்கள். மற்ற யாரும் உன் மண்ணை கைப்பற்ற மாட்டார்கள் என்கிறார் குறுங்கோழியூர்கிழார். பெண்கள் தாங்கள் கருப்பம்

உற்ற நிலையில் தங்களுக்கு உண்டான நுண்ணுட்டச்சத்து குறைப்பாட்டுக் காரணமாக மண்ணைச் சாப்பிட்டு தங்கள் குறைகளைக் களைந்து கொள்கின்றனர். மண் உண்டல் என்பது சாதாரண நிகழ்வல்ல. மண்ணில் பல்லுயிர் பெருக்க நுண்ணுயிர்கள் வாழ்வதால் அவை நம் உடல் அணுக்களுக்கு உணவாகின்றன. இக்கருத்திற்கு வலுசேர்க்கும் விதமாக வள்ளுவர் பயிர்களுக்கு குறிப்பிடும் பொழுது,

**"தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்து எருவும்**
**வேண்டாது சாலப் படும்"** **(குறள்:-1037)**

என்கிறார். ஆனால் இன்று அவை அனைத்தும் இரசாயனங்களாலும், அணுக்கழிவுகளாலும், வேதியியல் கழிவுகளாலும் அவற்றை அழித்து வருகின்றோம். இது உலக உயிர்களின் குறைபாட்டைக் களைவதற்கு வழியின்றி, சத்து குறைவான நோய் எதிர்ப்பு சக்தி இல்லாத உயிரினங்கள் உற்பத்தியாவதற்கு வழிவகுக்கின்றன. இதை மெய்ப்பிக்கும் விதமாக தூத்துக்குடி முத்தையாபுரத்தைச் சார்ந்த மரியசெல்வம் என்கிற 80 வயது மூதாட்டி தொடர்ந்து 70 வருடமாக மண்ணைச் சாப்பிட்டு வருவதாகவும், தனக்கு எவ்வித நோயும் வரவில்லை என்றும் கூறுகிறார். (தினமலர்-1-09-2019-ப-5)

**தெய்வத்தின் வழி பல்லுயிர் பெருக்கம்:**

தெய்வத்தின் பெயரில் இயற்கையையும், உயிரினங்களையும் அக்கால மக்கள் பாதுகாத்து வந்துள்ளனர் என்பதை,

**"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்" (புறம்-199-1)**

என்ற வரியில் ஆலமரத்தில் கடவுள் இருக்கிறார் என்று கூறி அவற்றைப் பாதுகாத்துள்ளனர். இதே போன்று



**"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்" (குறுந்தொகை-87-1)**

என்ற பாடல் அடியில் செங்கடம்பு என்னும் மரத்தில் அச்சம் தரும் தெய்வம் இருப்பதாக குறிப்பிட்டுள்ளனர் அக்கால மக்கள்.

**அரசர்களின் பல்லுயிர் பெருக்கப் பண்பு:**

சங்க காலத்தில் வாழ்ந்த அரசர்கள் இயற்கையையும், இயற்கையோடு இணைந்து வாழும் உயிரினங்களையும் பாதுகாத்து, வளர்த்து வந்துள்ளனர். இதனை,

**"புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேல்"** (புறம்-37-5)

**"புறவின் அல்லல் சொலிய கறையடி"** (புறம்-39-1)

என்ற பாடல் அடிகளில் புறாவின் உயிருக்காக தனது உயிரை துச்சமாக மதித்து துலாத்தட்டில் ஏறி அமர்ந்த சிபி சக்கரவர்த்தியின் பல்லுயிர் பெருக்கச் சிந்தனையை நம்மால் உய்த்துணரமுடிகிறது.

பிற நாடுகளில் விளையும் உணவு பொருளான கரும்பை தனது நாட்டிற்கு கொண்டு வந்து பயிர் செய்து பல்லுயிர் பெருக்கத்திற்கு வித்திட்டான் அதியமான் நெடுமான் அஞ்சி. இதனை,

**"அரும்பெறல் மரபின் கரும்பு இவண்தந்தும்"** (புறம்-99-2) என்கிறார் ஔவையார்.

கடையெழு வள்ளல்களான பாரி, பேகன் ஆகியோர் தன்னை நாடி இரந்து வரும் புலவர்களுக்கு பொன் பொருள் மட்டும் கொடுக்காது, அ∴றிணையான முல்லைக்கொடிக்கும், மயிலுக்கும் கொடை கொடுத்து வரலாற்றில் நீங்க இடத்தைப் பிடித்துள்ளனர். இதனை,

**"இவரே பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை**
**நாத்தழும்பு இருப்பப் பாடா தாயினும்** (புறம்:-200:-9-11)
**கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த"**

என்ற அடியில் முல்லைக்கொடி படரக் கொழுகொம்பு இல்லாத நிலையில் பாரி தனது தேரைக் கொடுத்து அதனுடைய இனப்பெருக்கத்திற்கு வித்திட்டான். அதே போன்று,

**"படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ"** (புறம்:-141-11)

**"மடத்தகை மாமயில் பனிக்கும் என்று அருளிப்"** (புறம்:-145-1)

என்ற அடியில் மயிலானது குளிரில் நடுங்குவதைக் கண்டு அதன்மேல் இரக்கம் கொண்டு அதனுடைய உயிரைக் காக்கும் பொருட்டு போர்வையால் போர்த்திப் பாதுகாத்துள்ளான்.

**சங்கத் தலைவியின் பல்லுயிர் பேணும் பண்பு:**

சங்கத்தலைவி இயற்கையையும், இல்லறத்தையையும் தனது இரு கண்களாகப் பாவித்து வந்துள்ளாள். **"கலைமானும் பிணைமானும் காதலில் இன்புற்று இருக்க அதைக் கண்ட தலைவி, அவற்றின் ஓசை கேட்டு கணவன் எழுந்து விடுவானோ என்று பயந்து, தான் நடந்து சென்றால் அதன் சேர்க்கை எங்கு கலைந்துவிடுமோ என்று அஞ்சி நின்று இருக்கிறாள்".** (புறம்:-320:-4-8) இவற்றிலிருந்து தலைவியின் உள்ளமானது உயிர்களின் உற்பத்திக்கு உறுதுணையாக இருந்துள்ளதை காணமுடிகிறது.

**உயிரினங்களின் இரக்கமும் உயிர் பெருக்கமும்:**

உயிர்களிடத்தில் மனிதன் மட்டும் இரக்கம் காட்டவில்லை. உயிரினங்கள் தங்கள் இனத்தைச் சாராத பிற. உயிரினங்கள் மீது பரிவு கொண்டு அவற்றைப் பேணிப் பாதுகாத்து வளர்த்துள்ளன. இதனை,

**"புலிப்பாற் பட்ட வாமான் குழலிக்குச்**
**சினங்கழி மூதாக் கன்று மருத்து ஊட்டும்" (புறம்:-323:-1,2)**

என்ற வரியில் புலியிடம் அகப்பட்டு இறந்து போன பெண் மானின் குட்டியைக் காட்டிலுள்ள பசு ஒன்று இரக்கங்கொண்டு பாலூட்டி வளர்த்துள்ளதைப் பல்லுயிர் பெருக்கத்திற்கான அடிப்படையாக காணமுடிகிறது. பல்லுயிர் பெருக்கத்திற்கு கிளிகள் காலங்காலமாக தங்கள் பங்களிப்பைச் செய்து வருகின்றன. இதனை

**"கிளிமரீ இய வியன் புனத்து"** (புறம்:-138-9)

என்ற அடியில் காட்டில் வாழும் கிளிகள் மரப்பொத்தில் கதிரைச் சேர்த்து வைக்கின்றன. அவ்வாறு சேர்த்து வைக்கும் பொழுதும், எடுத்து வரும் பொழுதும் பல கதிர்கள் சிதறி அவை பயிர்களாக விளைவதனால், பல உயிரினங்கள் பசியாறுவதற்கு உறுதுணையாக அமைகின்றன.

**மரமும் மனித உறவுமும்:**

பழங்கால மக்கள் இயற்கையை உயிராகவும் உறவாகவும் நேசித்து வந்துள்ளனர். இதனை,

**"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி**
**மறந்தனம் துறந்த காழ்முளை அசைய** (நற்றிணை:-172:-1-4)

**நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்த்தது**
**நும்மினும் சிறந்தது, நுவ்வை ஆகும் என்று"**

என்ற பாடலில் தலைவி சிறு வயதில் முற்றிய புன்னை விதையை மணலில் அழுத்தி விளையாடும் பொழுது அவை மண்ணில் புதைந்து பின்னர் மரமாக வளர ஆரம்பித்தது. அதற்கு நெய்யும் பாலும் ஊற்றி வளர்த்தாள் அன்னை. ஆதலால் அப்புன்னை மரமானது உனக்கு தங்கை முறைவேண்டும் என்று சொல்லி வளர்த்துள்ளாள். இங்கு இயற்கையானது உறவு நிலையில் வைத்து பார்க்கப்படுவதோடு மறைமுகமாக பல்லுயிர் பெருக்க நிகழ்வுக்கு வித்திட்டுள்ளது. இதே போன்று **"காரிக்கண்ணனார் என்னும் புலவர் காவல் மரங்களை மட்டும் ஒரு போதும் வெட்ட வேண்டாம். அவையெல்லாம் இளமரங்கள்** (புறம்:-57-10) என்று நன்மாறனிடம் எடுத்துரைக்கிறார். ஏனெனில் அவையெல்லாம் வளர்ந்து பல பறவையினங்களுக்கும், உயிர்களுக்கும், உணவாகவும், நிழலாகவும் பயன் தரக்கூடியது என்ற உண்மையை உள்ளுறையாக இவ்வுலகிற்கு உணர்த்தியுள்ளார்.

**பௌர்ணமி நாளில் மீன் பிடித்தல் இல்:**

பரதவர்கள் பௌர்ணமி, அமாவாசை ஆகிய நாட்களில் மீன் பிடிக்கக் கடலுக்கு செல்லமாட்டார்கள். இதனை,

**"பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது**
**உவவுமடிந் துண்டாடியும்"** (பட்டினப்பாலை:-92-93)



பௌர்ணமி நாளில் கடல் சீற்றத்துடன் காணப்படுவதால் மீனவர்கள் மீன் பீடிக்கச் செல்லமாட்டார்கள். ஆனால் உண்மை என்னவெனில் அந்நாளில் மீன்கள் குஞ்சு பொரிக்கும் நாளாகவும், இனப்பெருக்க நாளாகவும் அமைவதால் அவற்றிற்கு எவ்வித இடையூறும் உண்டாகத வண்ணம் கடலுக்குச் செல்வதைத் தவிர்த்துள்ளனர்.

**பல்லுயிர் பெருக்காவிடில் உண்டாகும் தீமைகள்:**

உலகத்திலுள்ள உயிர்கள் நிலைபெற்று வாழவும், பஞ்சபூதங்கள் தனது நிலையிலிருந்து மாறாமல் நிலைத்து நிற்பதற்கு பல்லுயிர் பெருக்கமானது துணைபுரிகின்றன. அவ்வாறு இல்லாமல் உலகத்தில் வாழும் மக்கள் அவற்றிற்கு எதிர்வினையாகச் செயலாற்றினால் பல்வேறு துன்பங்கள் இப்பூமிக்கு வந்து சேரும் என்பதை பல்வேறு நிலைகளில் பல புலவர்கள் பூடகமாக விளக்கிச் சென்றுள்ளனர். இதனை,

**"கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்**
**தொல்லது விளைந்தென நிலம்வளம் வரப்பினும்**
**எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை"** (புறம்:-203:-1-3)

என்ற அடியில் சென்ற காலத்தது பெய்தேன் என்று வானம் நிலை மாறினாலும், முற்காலத்தில் விளைந்தேன் என்று நிலம் விளைச்சலை நிறுத்தினாலும், இவ்வுலகத்தில் உயிர்கள் வாழாது இறந்து போகும் என்கிறார் ஊன்பொதி பசுங்குடையார். மேலும் இந்த

பூமியானது நடுக்கம் கொள்ளும் என்பதை **" பொய்கையிலுள்ள நீரானது கூத்தர் ஆடும் களம் போன்று அலைகளால் எழுந்து அடங்கும்"** (புறம்:-28:-13,14) என்று முதுகண்ணன் சாத்தனார் குறிப்பிடுகிறார். மேலும் உலகம் தன்நிலையிலிருந்து பிறழும் என்பதை,

**"நிலம்புடை பெயரினு நீர்தீப் பிறழினும்** (புறம்:-373:-1,2)

**இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்''**

என்கிறார் புலவர். உலகமானது இடம் மாறும், நீரும், தீயும் தம் இயற்கையினின்று மாறும், அலைகளையுடைய பெரிய கடலுக்கு எல்லை தோன்றும் போன்ற தீமைகள் உண்டாகும் என மதுரைக் கொல்லன் புல்லன் அறிவுறுத்துகிறார். இதே கருத்தைப் பறிற்றுப்பத்தில், **''நிலந்திறம் பெயருங்காலை யாயினும்''** (பதிற்றுப்பத்து:-63-6) என்ற அடியில் இடம் பெறுகிறது.

புறநானூற்றில் **கடலை சார்ந்த மேகமானது நீரை முகத்தாமல் போகாது (புறம்:-205:-11,12)** என்று பெருந்தலைச் சாத்தனார் குறிப்பிடுகிறார். இன்றைக்கு இவற்றை நீர்சுழல் என்று விஞ்ஞானிகள் அழைக்கின்றனர்.

அன்றைக்கு வாழந்த மக்கள் பல்லுயிர் பெருக்கத்திற்குப் பல்வேறு வகையில் உறுதுணையாக இருந்தாலும் அவர்களிடமும் சில தவறுகள் நிகழ்ந்துள்ளன. அதனால் தான் நாம் பல உயிரினங்களை இன்று காணாது இழந்து நிற்கின்றோம். இதனை,

**''மீளி முன்பின் ஆளி போல''** (புறம்:-207-8)
**''வாள்வரி நடுங்கப் புகல்வந்து ஆளி**
**உயர்நுதல் யானைப் புகர்முகத்து ஒற்றி''** (அகநானூறு:-252:-2,3)

என்ற வரியில் யாளியைக் கண்டு புலியானது நடுங்கும் என்றும், யானையை யாளியானது கொன்று அதன் கொம்புகளை உடைத்து உண்ணக்கூடிய வலிமையுடையதாக இருந்துள்ளது. வலிமையும் ஆற்றலும் உடைய யாளியை அக்கால மக்கள் தங்களுடைய சுயநலம் கருதி பாதுகாக்க தவறிவிட்டனரா அல்லது அழித்து விட்டனரா என்று தெரியவில்லை. ஆனால் இன்று அவற்றின் இனமே இல்லாமல் அழிந்து போய்விட்டது. அவற்றை சிற்பங்கள் மற்றும் இலக்கியங்கள் வாயிலாகவும் அறிந்து கொள்ள முடிகிறது. இதற்கு பல்லுயிர் பெருக்க குறைபாடே காரணமாகும்.

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்கள் பல்வேறு நிலைகளில் நேரடியாகவும், மறைமுகமாகவும் பல்லுயிர் பெருகத்திற்கான வழிவகைகளைக் கடைபிடித்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. இயற்கையை துன்புறத்தாமாலும் அவற்றிற்கு ஊறு விளைவிக்காமல் பாதுகாத்து வந்துள்ளனர். ஆகையால் தான் இயற்கை வளமானது சிதையாமல் இன்று நமக்கு கிடைத்துக் கொண்டிருக்கிறது. அவ்வாறு கிடைத்த இயற்கை வளத்தைப் பாதுகாக்காமல், மனிதனுடைய நாகரிக சுயநலத்திற்காக அவற்றை அழித்து வருகிறான். அவ்வாறு அழித்து வருவதால் இயற்கையானது அவற்றை சமன் செய்வதற்கு புயல், வறட்சி, அதிக மழை பொழிவு, காடுகளில் தீ பரவுதல், நிலநடுக்கம், கொள்ளை நோயகள் போன்ற பல்வேறு வழிகளில் தனது எதிர்ப்பைப் பதிவு செய்து வருகின்றன. இதனால் மக்கள் மட்டும் அழிவதில்லை. அவற்றுடன் சேர்ந்து அரியவகை பொக்கி'ங்களாகக் கருதப்படும் உயிரினங்களும் அழிந்து போகின்றன.

இதற்கு நாம் வாழும் காலங்களில் பல்வேறு சம்பவங்களை சுட்டிக்காட்டலாம். ஆற்றில் மணல் அள்ளுவதால் நிலத்தடி நீர் மட்டம் குறைதல், இரசாயன பூச்சிக் கொல்லிகளால் பல உயிரினங்கள் இறப்பதோடு, மகரந்த சேர்க்கை நடைபெறுவதைத் தடுக்கப்படுகிறது. சிலரின் சுயலாபத்திற்காக உருவான அமேசான் காட்டுத்தீ உலகின் ஒட்டு மொத்த பல்லுயிர் பெருக்கத்திற்கும் இறுதி யாத்திரை

நடத்தி விட்டது. தைவான் நாட்டில் உள்ள ஒரு ஊரில் பிறக்கும் குழந்தைகள் அனைத்துமே பெண் குழந்தைகளாகப் பிறக்கின்றன. இவை மரபணு குறைபாடாக இருக்கலாம் என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். இது போன்று கற்பனையிலும் எட்டாத நிகழ்வுகள் பூமியில் நடைபெறலாம். இதே நிலை சென்றால் வருங்காலச் சந்ததிக்கு நாம் விட்டுச் செல்லுவது பல்லுயிராக இருக்காது. பலி உயிராகத் தான் இருக்கும். எனவே உலகு உய்ய உயிரினங்களைப் பேணிக் காப்போம்.

**துணைமை ஆதாரங்கள்:**


1. திருக்குறள் - கழக வெளியீடு
2. புறநானூறு - கழக வெளியீடு
3. குறுந்தொகை - கழக வெளியீடு
4. நற்றிணை - கழக வெளியீடு
5. பட்டினப்பாலை - கழக வெளியீடு
6. அகநானூறு - கழக வெளியீடு
7. தினமலர் நாளிதழ்


(☺)(☺)(☺)(☺)(☺)



# ஹம்ஸ ஸந்தேசத்தில் சங்க இலக்கிய தூது இலக்கணம்

ஸ்ரீ . சுபஸ்ரீ
முனைவர்பட்ட பகுதிநேர ஆய்வாளர், தமிழாய்வுத்துறை
ஸ்ரீமத் ஆண்டவன் கலைமற்றும் அறிவியல் கல்லூரி
narasimhansuba12@gmail.com

*****

இக்காலத்தில் இருக்கும் எந்த ஒரு நவீன கண்டுபிடிப்பும் இல்லாத காலகட்டங்களில் வாழ்ந்த நம் மக்களின் சமுதாய பின்னணிகள், வாழ்வின் சிக்கல்கள் அனைத்தையும் அக்கால அரசர்கள் வழிநடத்திச் சென்றனர். அவர்களின் வரலாற்றை ஏடுகளின் மூலம் அடுத்த தலைமுறையினருக்கு எடுத்துச் சென்றனர். மேலும் தமிழ் இலக்கண இலக்கியங்களில் பலவகையான பாடல்கள், நூல்கள், காப்பியங்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றில் “தூது” எனும் சிற்றிலக்கியம் அகவாழ்விலும் புறவாழ்விலும் அரசர்களுக்கும், மக்களுக்கும் ஆற்றிய பணி தமிழ் இலக்கியங்களில் பெரும்பான்மையாகக் காணப்படுகிறது.

**அஃறிணைப் பொருள்களைத் தூது விடுதல்**



அஃறிணைப் பொருள்கள் பேச்சுதிறன் மற்றும் செயல்திறன் அற்றவை ஆயினும் தூது விடுவதற்கு அவற்றையே பயன்படுத்தினர். தலைவன் தலைவியின் காதல் அவருடைய தன்மைக்கு ஏற்ப வெளிப்படுத்த அஃறிணைப் பொருள்கள் அமைந்துள்ளன.

> **சொல்லா மரபி னவற்றோடு கெழிஇச்**
> **செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்**

என்றும் தொல்காப்பிய நூல் (பொருளதிகாரம் : 2) தூது இலக்கியத்தைப் பற்றிக் கூறுகிறது.

**தூது பெயர்க்காரணம்**

ஒருவருடைய கருத்தை மற்றவருக்கு தெரியப் பயன்படுத்தும் செயலை ”தூது” எனலாம். இச்செயலினை செய்பவன் தூதன் எனப்படுவான். இந்நிலையானது உயர்திணை மற்றும் அஃறிணை இரண்டிற்கும் பொருந்தும். தலைவி தன் மனநிலையை தோழியின் மூலமாக தலைவனுக்குத் தூது விடுதல், பறவை மூலம் தூது விடுதல் போன்ற நிகழ்வுகள், மேலும் அரசியல் தூதுகளையும் பல இதிகாசங்கள் கூறுகின்றன.

**தூது இலக்கியத்தின் இலக்கணம்**

காதல் துயரம் காரணமாக ஓர் ஆண் அல்லது பெண் தான் காதல் கொண்ட பெண் அல்லது ஆணுக்குத் தூது அனுப்புவது, உயர்திணை மற்றும் அஃறிணைப் பொருளைத் தூது விடுவது, மேலும் தூது பெறுவோரிடம் இருந்து ஒரு பொருளை வாங்கி வரச் சொல்வது போன்ற நிகழ்வுகள் தூது விடுதலின் நடைபெறுகின்றன.

**தூது அனுப்பும் பொருள்**

இரத்தினச் சுருக்கம் (1-7) எனும் நூலில் தூது அனுப்பும் பொருள்கள் எவை என்பதை குறிப்பிடப்பட்டுள்ளது.

**இயம்புகின்ற காலத்து எகினம் மயில் கிள்ளை**
**பயம்பேறு மேகம்பூவை பாங்கி – நயந்த குயில்**
**பேதை நெஞ்சம் தென்றல் பிரமரம் ஈரைந்தும்**
**தூதுரைந்து வாங்கும் தொடை**

(இந்நூலில்) இப்பாடலில் எகினம் (அன்னம்), மயில், கிள்ளை (கிளி), மேகம், பூவை, பாங்கி (தோழி), குயில், நெஞ்சம் (மனம்), தென்றல், பிரமரம் (வண்டு) போன்ற பத்துப் பொருட்கள் தூது விடுவதற்குரியன என தெரிவிக்கிறது. மேலும் சான்றோர்கள் பலரும் இவற்றையே தூது அனுப்பியதாக பல இலக்கியங்களிலும் கூறப்படுகிறது. அதே போல், இந்த இலக்கணத்திற்கு இணங்க "ஹம்ஸ ஸந்தேசம்" என்னும் நூலில் ஸ்வாமி தேசிகன், இராமன் சீதைக்கு அன்னப்பறவையை தூது விடுவதாக அமைத்துள்ளார்.

**தூது இலக்கியத்தின் சிறப்பு**

தூது இலக்கியங்களின் பெயர்கள் தூது அனுப்பும் பொருளின் பெயரை ஒட்டியே அமைந்திருக்கும். செய்யுள்களில் தலைவன் முதன்மையிடம் வகிப்பதுபோல் தூது இலக்கியங்களில் தூது விடப்படும் பொருள் அமைகிறது. ஸ்வாமி தேசிகனின் "ஹம்ஸ ஸந்தேசம்" எனும் இலக்கிய நூலில் அன்னப்பறவை தூது செல்வதாக அமைந்துள்ளது. ஹம்சம் என்றால் அன்னம் ஆகும். இதில் தூது அனுப்பப்படும் பொருளின் பெயரிலேயே நூலின் பெயர் அமைந்துள்ளது.

**தூது அனுப்பும் தலைவன் மற்றும் தலைவியின் பெருமை**

ஒரு ஆண், பெண்ணிற்குத் தூது அனுப்பும் நூல்களில், தலைவனின் நிலைகள் விரிவாகக் கூறப்படும். மேலும் தூது பொருள், தூது அனுப்பும் முறை, எவ்வாறு செல்ல வேண்டும், எப்படி தூது சொல்ல வேண்டும் எனப் பல விளக்கங்கள் தூது இலக்கிய நூல்களில் காணப்படுகின்றன.

**தூது செல்லும் பொருளின் பெருமை**

தூது அனுப்புவோர், தூது செல்பவரைத் தனக்காக ஒரு செயலை செய்துவர வேண்டுகிறார். அப்போது தனக்காக தூது செல்பவருடைய பெருமைகளும் விளக்கப்படுகிறது. இங்கு அன்னப்பறவை தூதாக அனுப்படுகிறது.

**க்ருத்வா தஸ்மிந் ப்ஹுமதிம் அஸௌ பூயஸீம் அஞ்ஜநேயாத்**
**காடோந்மாத: ப்ரணயபதவீம் ப்ராப வார்த்தாநபிஜ்ஞே:**
**விச்லேஷேண க்ஷுபித மநஸாம் மேகசைலத்ருமாதௌ**
**யாச்ஞாதைந்யம் பவதி கிமுத க்வாபி ஸம்வேதநார்ஹே (ச்லோகம் 5)**

இராமன் சீதையை பிரிந்து மனம் கலங்கி தன் நிலை மறந்து அன்னத்தை தூது செல்ல வேண்டினார். ஞானத்தில் சிறந்தவரான அனுமானை மனதில் நினைத்து அன்னத்திடம் தூது செல்ல விண்ணப்பித்தார். இந்த அன்னத்தின் பெருமை அடுத்து கூறப்படுகிறது:

**வேத உதந்வத் விபஜந விதோ வம்சஜம் விச்வமூர்த்தே:**

**ஆ"ஹு: ஸித்தா: கமலவாஸதே: ஔபவாஹ்யம் பவந்தம்**
**லப்தம் யேந ப்ரகுண கதிநா தத்ப்ரியாயா: ஸகாசாத்**
**தத்ஸாவர்ண்யம் ச்ரவண ரஸநா ஸ்வாத யோக்யா ஸு"தா ச (ச்லோகம் 6)**

உலகம் அனைத்தையும் தனது திருமேனியாகக் கொண்டவனும், ஹம்ஸ ரூபியாக வந்தவனும் ஆகிய பகவானின் குலத்தில் தோன்றிய அன்னமானது நான்முகனின் வாஹனமாக உள்ளது. நான்முகனின் பத்தினியாகிய சரஸ்வதியின் வெண்மையான நிறம், காதுகளால் சுவைக்கத் தகுந்தபடி வெளிவரும் வாக்கு என்னும் அம்ருதம், ஒழுக்கமான நடை, சீரிய புத்தி ஆகியவற்றைக் கொண்டுள்ளது.

**தூதுப் பொருளிடம் கூறும் அறிவுரை**

தூது அனுப்புவோர், தூது பெறுவோரிடம் எவ்வாறு செயல்பட வேண்டும் என்று அறிவுரை கூறும் வகையில் இலக்கியங்கள் அமைந்துள்ளன. அதன் கருத்தானது இந்த நூலில்:

**ஸார்த்தம் காந்தை: சபரஸு"த்ருசாம் அத்ரிகுஞ்சே" ராகாத்**
**ஆஸீநாநாம் க்ஷணம் அஸமயே த்ருச்ய சந்த்ரோதயஸ்ரீ:**
**உட்டீயேதா: ஸரஸிஜவநாத் தக்ஷிணா ஆசா அநுஸாரீ**
**பச்யந் தூராத் ப்ரபலகருதாம் பக்ஷிணாம் தத்தவர்த்மா (ச்லோகம் 16)**

அன்னம் மேலே பறக்கும்போது, பெரிய சிறகுகளைக் கொண்ட கருடன் போன்ற பறவைகளுக்கு வழிவிட்டு செல்லவேண்டும். மேலும் மலையில் இருக்கும் வேடுவ பெண்களுக்கு இடையூறு இல்லாமல் செல்ல வேண்டும் எனக் கூறுகிறார்.

**அங்கீ குர்வந் அம்ருதருசிராம் உத்பதிஷ்ணொ: ஸலீலம்**
**சாயாம் அந்தஸ் தவ மணிமயோ மால்யவாந் ஏஷ சைல: (ச்லோகம் 17)**

இரத்தினமயமான மால்யவன் என்னும் மலை மீது நிற்காமல் பறந்து செல்ல வேண்டும்.

**மார்க்கௌ ஸம்யக் மம ஹநுமதா வர்ணிதௌ த்வௌ தயோஸ்தே**
**ஸஹ்ய ஆஸந்ந: அபி அநதிஸு"பக் பச்சிமோ நித்யவர்ஷ:**
**ப்ராசீநே து ப்ரதிஜநபதம் ஸம்ஹதௌ அத்புதாநாம்**
**மக்நா த்ருஷ்டி: கதமபி ஸகே மத்க்ருதே தே நிவார்யா (ச்லோகம் 18)**

அன்னம் செல்லவேண்டிய பாதையில் இரண்டு வழிகள் கூறப்படுகின்றன. இதில் கிழக்கு நோக்கிச் செல்லும் வழியே சிறந்தது என்றும், மேற்குப் பகுதியில் விஹ்யமலை உள்ளதால் அங்கு மழை பொழிந்தபடி இருக்கும் எனவே கிழக்கு நோக்கி செல்லுவது உத்தமம் என்கிறார். இவ்வாறு, செல்லவேண்டிய பாதை மற்றும் செல்லும் விதம் ஆகியவற்றைத் தூது செல்வோர்க்குத் தெளிவுபடுத்துகிறார்.

**தூது செல்லும் சமயம்**

தூது சொல்ல செல்வோர்க்கு தன் செய்தியை தெரியப்படுத்த சரியான நேரத்தையும் தூது அனுப்புபவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

**நேதீயஸ்யாம் அதிகதரஸ: தீர்க்கிகாயாம் நிகாமம்**
**ஸம்வேசேந ச்ரமம் அபநயந் சர்வரீம் யாபயேதா:**
**இத்தம் நித்ரா ஸமயம் உசிதம் வீக்ஷ்ய நக்தம் சரீணாம்**
**ப்ரத்யூக்ஷே த்வம் ப்ரணயமதுராம் ச்ராவயிஷ்யந் மத் உக்திம் (ச்லோகம் 85)**

தூது செல்ல வேண்டிய இடத்தை அடைந்தவுடன் அங்கு சற்று நேரம் இளைப்பாறி களைப்பைப் போக்கிக் கொண்டு நடைவாயில் உள்ள நீரைப் பருகி தன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு பின் செயலில் இறங்க வேண்டும். மேலும் அங்குள்ள காவலாளிகள் இரவு நேரங்களில் காவல் காத்து பின் விடியற்காலையில் சற்று உறங்குவார்கள். அந்தச் சமயம் என்பது தூது செல்வதற்கு சரியான தருணமாக அமையும். அந்தச் சமயத்தில் தனது தூது செய்தியை அன்பு கலந்த வார்த்தைகளோடு காதலி இனிமையாகக் கேட்கும்படி கூறவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**தூது கூறும் விதம்**

**தாம் ஆரூட: சலகிஸலயாம் சிம்சுபாம் ஸ்வ ஏக லக்ஷ்யோ**
**மந்தீகுர்வந் மநஸிஜ தநு: கோஷ தீவரம் நிநாதம்**
**மோஹாத் ஈஷத் முஹிதமநஸம் போதய ப்ரேயஸீம் மே**
**ரம்யாம் ஆதௌ ரகுஜநகயோர் வர்ணயந் வம்சகீர்த்திம் (ச்லோகம் 87)**

தூது சொல்வோர் தன் பேச்சின் ஒலி மற்றவர்கள் காதில் விழாதபடி மெதுவாக பேசவேண்டும். மற்றும் தூது அனுப்புவோரைப் பற்றிய முக்கிய செய்தியையும் கூறவேண்டும். இராமனின் மேன்மைகள் மற்றும் சீதையின் குலப்பெருமைகள் ஆகியவற்றை முதலில் வர்ணிக்க வேண்டும். இராமனை விட்டுப் பிரிந்த மயக்கத்தில் உறக்கம் இல்லாமல் இருந்தாலும் மயங்கிய நிலையில் உள்ள சீதையை எழுப்பி மெதுவாகத் தூது கூறவேண்டும் என்கிறார்.

**தூது கூறவேண்டிய செய்தி**

**பத்யு: தேவி ப்ரணயஸசிவம் வித்தி தீர்க்காயுஷோ மாம்**
**ஜீவாதும் தே தததம் அநகம் தஸ்ய ஸந்தேசம் அந்த:**
**சூராணாம் யத் சரத் உபகமே வீர பத்நீவராணாம்**
**ஸம்மாந அர்ஹம் ஸமயம் உசிதம் ஸூசயேத் கூஜிதை: ஸ்வை: (ச்லோகம் 88)**

“தேவீ! தீர்க்கமான ஆயுள் உள்ளவனும் உனது கணவனும் ஆகிய இராமன் என்னைத் தூதனாக அனுப்பி உள்ளார். நான் (அன்னம்) அவருடைய அன்பான தோழன், நீ என்னை அறிந்து கொள்ள வேண்டும்”, என்பது தூது செய்தியின் தொடக்கமாகிறது.

**பச்யந்தீ ஸா ரகுபதிவது: த்வாம் அசேஷ அவதாதம்**
**ப்ரத்யாச்வாஸாத் அதிகதருசி: ப்ராக்தநீ இந்துலேகா**
**மத்ஸந்தேசே ததநு ஸுமுகீ ஸாவதாநா பவத்ரீ**
**கிம் ந ஸ்த்ரீணாம் ஜநயதி முதம் காந்த வார்த்தா ஆகம: அபி (ச்லோகம் 90)**

ரகு வம்சத்தில் வாழ்க்கைப்பட்ட அவள் உன்னை நன்கு கடாசஷிப்பாள், உன் மீது நம்பிக்கைக் கொள்வாள், உனது சொற்களை (சீதை) கவனமாகக் கேட்க வேண்டும் என்ற ஆர்வம் கொள்வாள். தன் மீது காதல் கொண்ட கணவனைப் பற்றிய செய்தியைக் கேட்பதில் மகிழ்ச்சி அடைவாள்.

**பச்சாத் ஏவம் கதய பவதீபாகதேயேந ஜீவந்**
**கல்யாணீம் த்வாம் குசலமநக: கோஸலேந்த்ர: அநுயுங்க்தே (ச்லோகம் 91)**

கோஸல நாட்டின் சந்த்ரனாகிய இராமன், மங்களமே வடிவாக உள்ள உன்னைப் பார்த்து, “நலமா” என்று அன்னமாகிய என் மூலமாகக் கேட்கிறான்.

**யஸ்யா யஸ்மிந் வ்யவதி: அபவத் பூஷண அலேபந ஆதி:**

**நீதாம் ஏநாம் நியதி விபவாத் அந்தரீபம் தவீய:**
**ப்ரத்யாஸீதந் இவ நயநயோ: வர்த்மநி ஸ்த்தாபயித்வா**
**ஸ த்வாம் ஏவம் வததி குசலீ தேவி ஸக்க்யா முகேந (ச்லோகம் 92)**

(சீதை) நீ இராமனுடன் சேர்ந்திருந்த காலத்தில் உனது ஆபரணங்கள் இராமனை அணைத்துக் கொள்ளத் தடையாக உள்ளதாக எண்ணினாய், இப்போது இராமன் அவற்றை எண்ணியபடி உள்ளான் என்கிறார்.

**முடிவுரை**

பழங்கால மக்களின் அகம் மற்றும் புற வாழ்வியல் சிக்கல்களை பூர்த்தி செய்ய அவர்கள் கையாண்ட முறையே தூது விடுதல் ஆகும். மேலும் உயர்திணை, அஃறிணை என்று பாகுபாடு பார்க்காமல் அவற்றின் அசைவுகளை புரிந்து கொண்டு அவற்றை கலை மற்றும் இலக்கிய வளர்ச்சிக்கு பயன்படுத்தி உள்ளார்கள். இப்படியாக “ஹம்ஸ ஸந்தேசம்” என்ற இந்த நூலானது, சங்க கால தூது இலக்கியத்தின் அனைத்து விதிகளும் நன்றாகப் பொருந்தும் விதமாக அமையப்பெற்றுள்ளது.

(:☺(☺)(☺)(☺)(☺)



# தொல்காப்பிய - உயர்திணைப் பாகுபாடுகள்

**அ .உமாமகேஸ்வரி**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை
கிருஷ்ணசாமி மகளிர் அறிவியல் கலை மற்றும் மேலாண்மையியல் கல்லூரி
umavetriani@gmail.com

*****

கிறிஸ்து பிறப்பிற்கு முன் என்று சுட்டப்பெறும் தமிழினத்தின் முதல் இலக்கணம் தொல்காப்பியம். காலம் அறுதியிட்டுக் கூற முடியாத பழமையினைக் கொண்டது. அப்பழமை என்பது அறிஞர்களால் **“தொன்மை”** என்று பாராட்டப்படுவது. அத்தொன்மைச் சான்ற தொல்காப்பியம் இலக்கியம் மற்றும் உலகியல் வழக்கிற்கு இலக்கணமாகவும், தமிழினத்தின் பண்பாடு மற்றும் கலாச்சாரத்தினையும் வாழ்வியல் விழுமியங்களையும் பறைச்சாற்றி உலகிற்கு உணர்த்துகின்றது. அவ்விலக்கணத்தின் ஒவ்வொரு கூறும் தமிழினத்தின் மாண்பையும் பண்பையும் உலகிற்கு உணர்த்துவன. தொல்காப்பியரின் பெயர் பாகுபாடு, தமிழ் இனத்தின் மிகச் சீரிய பண்பாட்டினை வெளிப்படுத்தும் நிலையை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**தொல்காப்பிய இலக்கணத்தின் பகுப்புமுறைகள்**

தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. ஒவ்வொரு அதிகாரமும் ஒன்பது இயல்களைக் கொண்டது. அவற்றில் எழுத்ததிகாரம் நூன்மரபு முதல் குற்றியலுகரப்புணரியல் ஈறாக ஒன்பது இயல்களையும், சொல்லதிகாரம் கிளவியாக்கம் முதல் எச்சவியல் ஈறாக ஒன்பது இயல்களையும், பொருளதிகாரம் அகத்திணையியல் முதல் மரபியல் ஈறாக ஒன்பது இயல்களையும் கொண்டமைந்துள்ளது.

**இயல் அமைப்புகள் உணர்த்தும் பொருண்மை**

ஒவ்வொரு அதிகாரத்தின் ஒன்பது இயல்களையும் நோக்குவார்க்கு, இவ்விலக்கண நூல் ஏதோ இலக்கியங்களுக்கான வெற்று எழுத்திலக்கணத்தையோ, சொல்லிலக்கணத்தையோ, பொருளிலக்கணத்தையோ பற்றியது அல்ல என்பதும் அவை, மக்கள் வாழ்வியல் சார்ந்தன என்பதும் அறியப்படும். காலத்தை வென்று, இன்றைய நூற்றாண்டு மொழியியல் அறிஞர்களும் வியக்கும் மொழிக்கூறுகளைத் தன்னகத்தே கொண்டதோர் ஒப்புயர்வற்ற இலக்கணநூல் எனின் மிகை அன்று.

**தொல்காப்பிய சொல்லதிகாரம்**

எண்ணற்ற கருத்துக் கருவூலங்களைக் கொண்டு திகழும் தொல்காப்பிய சொல்லதிகாரத்தின் ஒவ்வொரு கூறுகளும் சொல்லிலக்கணம், தொடர்இலக்கணம் என்ற இலக்கண அமைப்பையும் மீறி பண்பாட்டை வெளிப்படுத்தும் கூறுகளை உள்ளடக்கியது. அவற்றில் பெயரிலக்கணத்தின் முதன்மைக் கூறான உயர்திணைப்பெயர்கள் அமைந்துள்ள முறையைத் தொல்காப்பியத்தின் வழி நோக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**பெயர் இலக்கணம்**

பெயரின் இலக்கணம் பற்றிக் கூறும் தொல்காப்பியர் சொல்லின் இயல்புகளையும் சொல் பாகுபாடுகளையும் உணர்த்தியப் பின்பு பெயர்ச்சொல் அமைப்புப் பற்றி விளக்குகிறார். உலகத்து வழங்கும் சொற்களைப் பெயர்ச்சொல், வினைச்சொல் என இரு வகைப்படுத்துவார். இவ்விரு வகைச்சொற்களைச் சார்ந்து இடைச்சொல். உரிச்சொல் என்பன வரும் என்கிறார்.

> **"சொல் எனப்படுப பெயரே வினை என்று**
> **ஆ இரண்டு என்ப அறிந்திசினோரே"** (தொல்.சொல்.பெயர்.நூ.4)

> **"இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்**
> **அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப"** (தொல்.சொல்.எழுத்து.நூ-5)

மேற்கண்டவற்றில் பெயர் என்பது,

"பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்பனவற்றுக்கு வழங்குவதற்காக வைக்கப்பட்ட சொற்களைக் குறிக்கும். அச்சொற்களை பெயர்சொற்கள் என்று கூறுவர் என்பர் ஆ.சிவலிங்கனார் அவர்கள்". (தொல்.சொல்.பெயரியல்.உரைவளம்.பக்-8)

**தொல்காப்பிய இலக்கணத்தின் பெயர்சொல் அமைப்பு**



பெயர்ச்சொற்கள் உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர் இவ்விருத்திணைக்கும் பொதுவான விரவுப்பெயர் என மூவகைப்படுத்துகிறார். எனவே பெயர்ச்சொற்கள் இருதிணைக்கும் உரிமை உடையது என்பது பெறப்படுகிறது.

**பால் அறியும் முறைமைகள்**

இருதிணைக்கும் பொதுவான பெயர்களை, பால் அறியும் முறைப்பற்றியும் கூறுகிறார். மேலும், பெயர்கள் திணையிலிருந்து பிரிந்து தனித்தனிப்பால்களுக்கு உரியவாகும் பெயர்களை விளக்குகிறார். அவ்வாறு பால்களுக்கு உரிய பெயர்களை கிளவியாக்கத்தில் ஐம்பால்களுக்கும் உரிய ஈறுகளைக் கொண்டு அறியும்படி விளக்குகிறார். கிளவியாக்கத்தில் கூறப்பெற்றப்பெயர்களின் ஈறுபற்றி அறிய முடியாதனவாக பலபெயர்கள் உண்டு என்றும் அவையும் இருதிணை ஐம்பால்களுள் ஒவ்வொன்றுக்குப் பொருந்தும் என்கிறார்.

**அவையாவன**

அ) னகர ஈற்றினையுடையவை ஒன்றன் பாலுக்குரியனவாம்.

ஆ)கிளவியாக்கத்தில் கூறப்பெறாத பல பெண்பாற்பெயர்கள் பெயரியலில் கூறப்பட்டுள்ளது. (எ.கா.பெண்டாட்டி, தோழி)

இ) ஐ > நங்கை பெண்பாலுக்குக் கூறப்பட்டது. (எ.கா.விடலை-ஆண்பாலுக்குக் கூறப்படவில்லை)

ஈ) லகர, ளகர, ஈற்றுச்சொற்கள் ஆண்பாலுக்குரியன. (எ.கா.குரிசில், வேள்)

**பெயர் பகுப்புமுறைகள்**

மக்களை உயர்திணை என்றும் மக்கள் அல்லாத ஏனைய உயிருடைய மற்றும் உயிரல்லாதவை அஃறிணை என்றும் அமைக்கப்படும். அவற்றுள் ஆண், பெண், பலர் என உயர்திணை மூன்று பிரிவாக(பால்)வும் ஒன்று, பல என அஃறிணை இரண்டு பிரிவாக(பால்)வும் அமையும் என்கிறார்.

**மூன்றாம் பாலினத்தவரைத் தொல்காப்பியம் உணர்த்தும் விதம்**

உயர்திணையில் ஆண்மை திரிந்து பெண்தன்மை மிகுந்தவரை **"பேடி"** என்ற சொல், குறிப்பிட்ட ஈறுகளையுடையன அல்ல. எனவே உயர்திணை முப்பாலாகப் பிரித்து வழங்க வேண்டும் என்கிறது. மேலும், ஆண்மை திரிந்து **"பெண்தன்மை மிக்க"** பேடி என்ற சொல் ஆண்பாலுக்கான ஈறுகளுடன் வரக்கூடாது என்றும் பெண்பாலுக்குரிய ஈறுகளுடன் வரவேண்டும் என்கிறார்.

**இருதிணை, ஐம்பால்களை உணர்த்தும் ஈறுகள்**

பெயர்களின் ஈற்று எழுத்தினைக் கொண்டு இருதிணை, ஐம்பால்களை அறிய முடியும்.

னகரம் - ஆண்பால்
ளகரம் - பெண்பால்
ரகரஒற்று, பகரஇறுதி, மார் என்ற சொல் - பலர்பால்
து, று, டு குற்றுகரங்கள் - அஃறிணை (ஒன்று)
அ, ஆ, வ ஈறுகள் - அஃறிணை (பல)



**பெயரும் வினையும் அமையும் முறை**

உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணைகளிலும் ஐந்து பால்களைக் குறிக்கும் மேற்கண்ட பதினொரு எழுத்துக்களும் வினைச்சொல்லோடு இணைந்து வரும்பொழுது வினையிலும் பெயரிலும் மயங்காது வரவேண்டும் என்று தொல்காப்பியம் விதி அமைக்கிறது.

**பால் வெளிப்படையாக வரும் உயர்திணைப்பெயர்கள்**

அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அவர், இவர், உவர் ஆகிய சுட்டுப்பெயர் ஒன்பதும் யான், யாம், நாம் ஆகிய தன்மைப்பெயர் மூன்றும் யாவன், யாவள், யாவர் ஆகிய வினாபெயர் மூன்றுமாக பதினைந்து பெயர்களும் பால் வெளிப்படையாக வழங்கும் உயர்திணைப்பெயர்கள்.

மகன் என்பது ஆண்மகனையும், மகள் என்பது பெண்மகளையும் பெண்மையை அடுத்த இகர இறுதியும் (பெண்டாட்டி), ஆண்மையை அடுத்த இகர இறுதியும் (நம்பி), நம்மூர்த்து வரும் இகர ஐகாரம் (நம்பி, நங்கை), முறைமையை உணர்த்தும் பொழுது பொதுப்பெயராகவும், முறைமையை உணர்த்தும்பொழுது மகன், மகள் என்பனவாகவும், பன்மையை உணர்த்தும் மாந்தர், மக்கள் என்பனவும் ஆடூஉ, மடூஉ ஆகிய இருசொற்களும், சுட்டெழுத்தை முதலாகவும் அன், ஆன் எனும் ஈற்று விகுதிகளை உடையனவாகவும், அன்னன், அன்னான், அன்னள், அன்னாள் என ஒப்புமையால் உவமமிக்கப்படும் பொருளோடு வரும் பெயர்கள் (பொன்னன்னான்), எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என்னும் பெயர்களும் இவையோடு, நிலத்தால் (இடத்தால்) பெற்றபெயர், குடியால் பெற்ற பெயர், பலர் கூடிய கூட்டத்தால் பெற்ற பெயராகிய குழுப்பெயர், வினையால் வரும் பெயர்கள், உடைமையால் வரும் பெயர்கள்,

பண்பால் வரும் பெயர்கள், பன்மையை உணர்த்தும் முறைமைப்பெயர்களாகிய தாயர், தாய்மார், தந்தையர், தந்தைமார் முதலான பெயர்களும் **“பல்லோர் குறித்த முறைநிலைப்பெயர்”** என்ற நூற்பா வரிக்கு, பன்மையை உணர்த்தும் முறைமைப்பெயர் தாயர், தாய்மார், தந்தையார், தந்தைமார் என்று கூறி தாய் என்பது உயர்திணை மற்றும் அ.்.றினைக்குரிய பொதுப்பெயர். **“தாயர் என்பது உயர்திணைக்கேயுரியது”** என உரைக்கூறுவார் தெய்வச்சிலையார்.(தொல்.சொல்.தெய்வ.உரை.ப.62)

உயர்திணைப் பெயராகிப் பன்மைக் குறித்து வரும் பெயர்கள் சான்றாக, “ **குறிஞ்சிக் கண்ணியர் குவளை பூண்டு, வெற்பராடும் வெற்புச்சேர் இருக்கை”** எனும் வரியைச் சான்றாக தெய்வச்சிலையார். (தொல்.சொல்.தெய்வ.உரை.ப.63)

**“பல்லோர் குறித்த திணைநிலைப் பெயரே”** திணைப் பற்றி வரும் பன்மைபெயர் என்று பொருள் கொண்டு, **“திணையைக் குறிக்கும் பெயர் ஒருமையால் வருவது உண்டு. அவ்வாறு ஒருமையால் பெரும் பெயர் அந்நிலத்துத்தலைமகனைக் குறிக்கும் உடைமைப்பெயர். அந்நிலத்துள்ள மக்களைக் குறிக்க வரும் பெயரே பண்மைப்பெயர், இருதிணைக்கும் பொதுப்பெயராக அமையும்.”**
கூடி வழங்கும் இயற்பெயர் வழக்கில் வழங்கும் பெயராகக் கொள்வர். ஒரே இயற்பெயரை உடைய பலரை, ஒரு வினையால் சொல்லும் பொழுது தொகுத்துக் கூறுதல் வேண்டும் என்றும் சான்றாக, சாத்தன்மார் வந்தார் என்றும் சான்று பகர்வார் தெய்வச்சிலையார்.

இவ்வளவு என்று எண்ணால் சுட்டும் வரையறைப் பெயர்கள் என்று கூறியவை (ஒருவர், ஐவர், எண்மர்) பால் வெளிப்படையாக வந்த உயர்திணைப்பெயர்களாகும். மேலும், சிறப்புப் பற்றி வருவனவும், தலைமைப் பற்றி வருவனவும், இழிவு பற்றி வருவனவும், கல்வி பற்றி வருவனவும், உறுப்புப் பற்றி வருவனவும், காலம் பற்றி வருவனவும் பிறன், பிறள், பிறர், நுமன், நுமள், நுமர், தமன், தமள், தமர் என்பனவும் இதுபோல்வனவாக உயர்திணைக்கே உரியவாகி வரும் பெயர்கள் எல்லாம் உயர்திணையில் பால் வெளிப்படையாக வழங்கும் பெயர்களாகும்.

உயர்திணைப் பெயர்களும் புறநடையில் **“பன்மையும் ஒருமையும் பாலறிவந்த” (தொல்.சொல்.பெயரியல்.நூ.12)** எனும் வரிக்கு **“இச்சூத்திரம் பலர்பாலுக்கே கூறப்பட்டதாக இருப்பினும் அவன், அவள் என்பது போல ஒருமையையும் வெளிப்படையாகத் தழுவிச் சுட்டுகிறது என்கிறார் ஆ.சிவலிங்கனார்”. (தொல்.உரைவளம்.பெயரியல்.ப.72)**

அகத்திணையியலில் பெயரினியல்பு அமையும் முறையைக் கூறுகிறார். ஒவ்வொரு திணையைச் சார்ந்த மக்களுக்கு **‘மரபாலும் தொழிலாலும்’** பெயர்கள் அமையும் என்கிறார் தொல்காப்பியர்.
திணையை இருபிரிவாகப் பிரித்து உயர்திணை, அ.்.றிணையாக பிரிக்கிறது. மேலும், உயர்திணையை ஆண், பெண், பலர் என்று மூன்று பிரிவாக பிரிக்கிறது. மூன்று பிரிவுகளுக்குமான பெயர்களின் விகுதிகளைக் கூறுகிறது.

பெயருக்கு இலக்கணம் கூறி, பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகியவைகளை வழங்குவதற்காக வைக்கப்பட்ட சொற்களே பெயர்ச்சொல் என்கிறது. பெயர்ச்சொற்கள் இருதிணைக்கும் பொதுவானவை. எனவே, ஐம்பால்களுக்கும் உரிய ஈறுகளைக் கொண்டு அறியும் முறைமையை விளக்குகிறது.

மூன்றாம் பாலினத்தவர்களில் ஆண்தன்மை மிக்கவரை ஆண்பாலுக்குரிய ஈறுகளிலும் பெண்தன்மை மிக்கவரை பெண்பாலுக்குரிய ஈறுகளிலும் அழைக்க வேண்டும் என்கிறது. எனவே, மூன்றாம் பாலினத்தவரை உயர்திணை முப்பாலாக பிரித்து வழங்க வேண்டும் என்கிறது. சுட்டுப்பெயர்கள், தன்மைப்பெயர்கள், படர்க்கைப்பெயர்கள், வினாப்பெயர்கள் பால் வெளிப்படையாக வழங்குவன என்கிறது.

ஐந்து பால்களைக் குறிக்கும் பதினொரு ஈற்றெழுத்துக்களைக் கூறுகிறது. அவையேயல்லாத உயர்திணைப்பெயர்களின் பட்டியல்களைத் தருகிறது. நிலம், குடி, குழு, வினை, உடைமை, பண்பு முறைநிலைப்பெயர், சினைநிலைப்பெயர், திணைநிலைப்பெயர், கூடி வழங்கும் இயற்பெயர், வரையறை பெயர்கள், சிறப்பு, தலைமை, இழிவு, கல்வி, உறுப்பு, காலம், மரபு, தொழில், பிறன் முதலான பெயர்கள் உயர்திணை முப்பாலுக்குரிய பெயர்களாக குறிப்பிடுகிறது.

மேற்கண்ட பெயரமைப்பு இலக்கியங்களுக்கான வரையறையை மட்டும் சுட்டவில்லை. உலகியல் வழக்கில் மக்களால் பயன்படுத்தப்பெறும் பெயர்களின் வரன்முறையைத் தொல்காப்பியம் சுட்டுகிறது. பெயர்களின் இலக்கணம் பெண்பால் மூன்றாம் பாலினத்தவரின் பால் வரையறையை வகுத்து பண்பாட்டின் உச்சநிலை தமிழினம் என்பதை பறைச்சாற்றி உலகிற்கு உணர்த்துகிறது. இக்கட்டுரை தொல்காப்பியத்தின் வழியும் உரையாசிரியர்களின் உரையின் வழியும் எழுதப்பெற்றது.

**துணைநூல்பட்டியல்**

1. சிவலிங்கனார்.ஆ - தொல்காப்பிய உரைவளம்
சொல்லதிகாரம்
பெயரியல்
உலக தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி-சென்னை(1984)

2. சுப்பிரமணியன்.ச.வே.- தொல்காப்பிய முழுவதும்(விளக்கவுரை)
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம். முதல்பதிப்பு.(2008)

(☺)(☺)(☺)(☺)(☺)

# திராவிடமொழி இலக்கியங்களில் தமிழ் - தமிழகம்

பெரும்புலவர் **துரை கருணாகரன்**
பகுதிநேர ஆய்வாளர்
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தரமணி
dkarunagaran54@gmail.com

*****

**தோரணவாயில் :-**

ஒரு நாடும் அந்நாட்டில் வாழும் மக்களும் மொழியின் இணைப்பிரியாச் சார்புடையவை. நாட்டினால் மொழிக்குப் பெயர் வருவதும், மொழியால் நாட்டிற்குப் பெயர் உயர்வதும் ஆக ஒன்றை ஒன்று சுட்டும் அளவிற்கு சார்புடையவை.

தமிழ் என்பது மொழிக்கும், தமிழர் என அம்மொழி பேசும் இனத்திற்கும் தமிழகம் என அம்மக்கள் பேசும் நாட்டிற்கும் பெயர் ஏற்பட்டன.

தமிழ் எனும் சொல்லே தமிழர்களையே குறிப்பிடும். அதனால் தமிழரகம் என்னாது தமிழகம் என்றே குறிப்பிடும் வழக்காறு ஏற்பட்டது.

**தென்னகப் பெருமொழிகள் :**

தமிழ் என்னும் சொல், த்ரமிள – த்ரமிட – த்ரவிட – த்ராவிட எனப் பிரிந்ததாக அறிஞர்கள் கூறுவர். முன்னாளில் மலையாளம் தனியாகப் பிரியாத காலத்தில் தமிழ் - வடுகு ஆகிய இருமொழிகளே தென்னகப் பெருமொழிகளாக இருந்தன. இவற்றைத் 'திராவிட ஆந்திர மொழிகள்' என்றே வடநாட்டார் வழங்கினர்.

கால்டுவெல், தென்னக மொழிகளில் மூலமொழியினைச் சுட்டுவதற்குத் 'திராவிடம்' என்னும் சொல்லைப் பயன்படுத்தவே அதுவே இன்று வழக்காற்றில் உள்ளது.

**உறவாடிய ஒண்டமிழ் :**

கிரேக்க நூல் ஆசிரியர்களான தாலமி, பிளினி போன்றோர் தமிழகம் குறித்துச் சில குறிப்புகளைத் தந்து போயினர். பௌத்த ஆசாரியர் பலர் தமிழ்நாட்டினராதலின் அவர்கள் மூலம் தமிழ்ப் பண்பாடு சீனம் போன்ற நாடுகட்கும் பரவியதாகத் தெரிகிறது. நம் இந்திய நாட்டிலும் தமிழன் பல்வேறு நாடுகளுக்கும் சென்றிருக்கிறான். தற்போது பல்வேறு மொழிபேசும் மாநிலங்களான மராட்டி, குசராத்தி. வங்கம், பஞ்சாபி, ஒரியா, இந்தி முதலிய மொழிபேசும் மாநிலங்களில் தமிழன் கலந்துறவாடித் தன் மொழியையும் தனது பண்பாட்டையும், பக்தி நெறியையும் பரப்பி உள்ளான்.
வேத கால ஆரிய மொழியின் வரவின்போது தமிழ் இடைப்பட்டதாகத் தோன்றி இந்தியாவில் வழங்கிய தனி மொழி 'தமிழ்' ஒன்றே எனலாம்.

திராவிட மொழிகளில் ழ, ற, ன சிறப்பெழுத்துக்களின் ஆட்சியைக் குறைக்க வடமொழியாளர் பெரிதும் முயன்று, 'எழுத்து அழிவுப்பணி' செய்துள்ளனர். எனினும் எகர, ஒகரக் குறில் ஆட்சியின் அடிப்படையை அவர்களால் சிறிதும் அசைக்க இயலவில்லை.

**தனித்தன்மை காக்கப் போராட்டம் :**

தெலுங்கில் அச்ச தெலுங்கு இயக்கமும்
கன்னடத்தில் பழங்கன்னட இயக்கமும்
மலையாளத்தில் பச்சமலையாள இயக்கமும் - வடமொழி தாக்கத்திலிருந்து தத்தம் மொழிகளைக் காக்கப் பாடுபட்டன. தென்னாட்டு மொழிகளில் தமிழ் ஒன்றில்தான் தனித்தமிழ் இயக்கம் முழு வெற்றி பெற்று வாகை சூடியுள்ளது. தமிழைச் சாரச்சார அவற்றின் தனித்தன்மை காக்கப்பட்டது.

'கன்னடமும், களித்தெலும்பும், கவின்மலையாளமும் துளுவும்' இவை தமிழில் உயிர்த்துத் தோன்றியிருப்பினும் இலக்கியமும், இலக்கணமும் ஒன்றுபல ஆயிடினும் இங்கு தமிழே தனித்தன்மை கொண்டு 'திராவிட மொழிகளின் தாய்' என விளங்குவது போற்றத்தக்கதே!

**தத்தம் இலக்கியங்களில் தமிழ் - தமிழகம் :**

வேதம் வடக்கே தோன்றினாலும் அதன் விளக்கவுரை தெற்கே தோன்றின.

பௌத்த சமண மதங்கள் வடக்கே தோன்றினாலும், அவற்றைப் பரப்பிய ஆசாரியர்கள் தெற்கிலும் தோன்றினார்கள்.

சைவ, வைணவ மதங்களும் பக்தி இயக்கமாகத் தெற்கிலிருந்துதான் வடக்கே பரவின.

இதன் விளைவாகத் தமிழ் குறித்தும், தமிழ்நாட்டைக் குறித்தும் தமிழ் மக்கள் குறித்தும் பிற நாட்டினர் தம் இலக்கியங்களில் ஆங்காங்கே குறிப்பிட்டுள்ளனர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நம் நாட்டில் வழங்கிய இலக்கிய வளமுடைய மொழிகளில் தமிழ்மொழிதான் முன்னிலை வகிக்கிறது. பின்னர்தான் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு போன்றவை தமிழும் சமஸ்கிருதமும் இணைந்த மொழிகளாக உருவெடுத்துள்ளன. இம்மொழி இலக்கியங்களிலும் தமிழ்மொழி, தமிழினம், தமிழ்நாடு குறித்த பல செய்திகள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன.

பிற மொழிகளில் நம் தமிழும் தமிழகமும், குறித்துக் கூறப்பட்டுள்ளனவற்றைத் தொகுத்துச் காண்பதே இக்கட்டுடையாமென்க.

**வடமொழி இலக்கியங்களில் :**

வடமொழி, நம் நாட்டின் பண்பாட்டையும், பக்தியையும் பரப்புகின்ற மொழியாகப் பலநூற்றாண்டுகளுக்கு முன்பே திகழ்ந்து இருப்பினும் தமிழகத்தைப் பற்றியத் தெளிவான குறிப்பு முதன் முதலில் வடமொழியில் இயற்றப்பட்ட ஆதிகாவியமாகிய வால்மீகி இராமாயணத்தில்,

'தத்ர த்ரக்ஷ்யத காவேரீம்' என்பனபோல் சோழப்பாண்டிய நாடுகளைப் பாடியுள்ளமையும்

வியாசரின் மகாபாரதத்தில் அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையில் பாண்டிய மன்னனை மணந்ததாகவும், அர்ச்சுனனின் தந்தை பாண்டுவிற்கும், பாண்டியருக்கும் தொடபு இருப்பதாக கூறுவர். இச்செய்திகள் ஆந்திர மகாபாரதத்திலும் உள்ளது.

**கன்னட மொழி இலக்கியங்களில் :**

தென்னக நான்மொழிகளில் பழங்கன்னடம் பழந்தமிழுக்கும், பழகு தமிழுக்கும் ஒரு பொற்பாலமாக விளங்குகிறது. பழங்கன்னட இலக்கியத் தொடர்கள் தமிழினின்றும் வேறுபடுத்தி அறிய முடியாதவை.

மைசூர் தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் தம் நூலில் தக்கணப்பகுதி முழுவதிலும் வாழ்ந்த பழங்குடிகள் தமிழர்களே என்றும் கன்னடம் கருநாடகம் எனப்பெரிட்டவர்களும் தமிழர்களே என்றும் குறிப்பிடுவார்.

'பம்ப பாரதம்' எனப்படும் 'விக்கிர மார்ச்சுன விசயம்' என்னும் இலக்கியத்தில் திரௌபதியின் சுயம்வர மண்டபத்திற்கு சேரர் வந்திருந்ததாகவும் பரந்த மார்பில் முத்துமாலை அணிந்த பாண்டியன் மனங்கொண்டு உன்னையே பார்த்துக்கொண்டிருப்பவன் சேரன் என்றும் மேலும் அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையின்போது பொதிகை மலையை அடைந்ததாகவும் அங்கு சந்தனமும், தென்றலும் பிறந்து சிறப்புற்றதாகவும் பாராட்டுவதாக குறிப்பிடப்பட்டுள்ளது.



**தெலுங்கு இலக்கியங்களில் :**

தெலுங்கு மொழி, இனம் தமிழ்மொழி இனத்துடன் மிகவும் நெருக்கமான பிணைப்புகளைச் கொண்டுள்ளது.

கரிகாலச் சோழ மரபினர் என்று கூறிக்கொண்ட காகதீய மன்னர்கள் தெலுங்கு சோழர்களாக ஆந்திர நாட்டை ஆண்டனர்.

ஆய்அண்டிரன் என்ற பெயர் ஆந்திரத்தில் தெலுங்குப் பெயர்களில் ஒன்றாக குறிப்பிடுவார்கள் மொழி ஆய்வாளர்கள். தஞ்சை, மதுரை நாயக்க மன்னர்கள் தமிழகத்தை ஆண்டனர். அத்தகைய ஆட்சியோடு தமிழ் மொழியை ஆதரித்த பாங்கு பாராட்டற்குரியது.

தெலுங்கில் உள்ள 'பசவபுராணம்' 'பண்டிதாராத்ய சரித்திரம்' 'விருஷாதிப சதகம்' ஆகிய நூல்களில் நாயன்மார்கள் வரலாறுகள் சுருக்கமாக குறிப்பிட்டுத் தமிழ்மொழிக்குச் சிறப்புச் சேர்த்தவர்களாகக் குறிப்பிடுகின்றனர்.

பண்டிதாராத்ய சரித்திரம், பருவதப் பிரிகரணத்தில் ஸ்ரீசைலத்திற்குச் செல்லும் தமிழக பக்தர்கள் தமிழில் பாடிக்கொண்டு செல்வதாக

**"மங்கையர் பாங்கனே மல்லிகார்ச் சுனனே**
**யாமுனக் கடியனே அகில நாயகனே"** என்று அகவல்யாப்பு போன்ற 'துவித' என்னும் தெலுங்கு யாப்பில் பிறமொழிக் கவிஞர் ஒருவர் பாடிய தமிழ்ப் பாடலை நோக்குவாம்.

'ஹரிவிலாசம்' நூலில் சிறுதொண்டர் கதையும்

'பீமகண்டம்' காவியத்தில் பொதிகை, தாமிரபரணி பற்றியும்

'காசிக்கண்டம்', 'ஜக்கன' ஆகிய நூல்களில் ஸ்ரீரங்கம், கும்பகோணம், இராமேஸ்வரம் குறித்து குறிப்பிட்டும்

'தூர்ஜடி' என்ற கவிஞன் நக்கீரரைப் பற்றியும் 'நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே' என்ற கதையை விரித்து கூறியிருப்பார். அதில் கண்ணப்பநாயனாரைப் பற்றியும் மதுரை மாநகரைப் பற்றியும் அழகுறப்பாடியுள்ளமை அறியலாம்.

கிருஷ்ண தேவராயரின் 'ஆமுக்தமால்யதா' எனும் காவியத்தில் திருவில்லிபுத்தூர் வர்ணனைகளும், சூடிக்கொடுத்த சுடர்கொடியாம் ஆண்டாளின் கதையும் அற்புதமாக காவியமாக்கியிருப்பார்.

**மலையாள இலக்கியங்களில் :**

மலையாளம் தமிழின் கிளை மொழியாக இருந்து தனிமொழியாக வளர்ந்தது என்று 'கேரள பாணினீயம்' கூறுகிறது.

1941 ஆம் ஆண்டு வெளியிட்ட அரசுப்பதிவேட்டில் குறிப்பிட்ட 1100 கல்வெட்டுகளில் 838 தமிழ் கல்வெட்டுகளே.



சிலம்பு தோன்றிய சேர நாட்டில் அதன் எச்சமாக இன்றும் கண்ணகியின் வரலாறு 'நல்லம்மைப் தோற்றப் பாட்டாகப்' பாடப்பட்டு வருகிறது.

சிலம்பில் கூறப்படும் எழுதுவரிக்கோலம் இன்று மலையாளத்தில் 'கதகளி' ஆட்டமாக வாழ்ந்துக்கொண்டிருக்கிறது. இவை அனைத்தும் பழந்தமிழ்ப் பண்பாட்டின் எச்சங்களாகப் பன்னூறாண்டுகளைத் கடந்தும், தமிழ் மொழியும் அதில் உருவான தமிழ்க்கலைகளும், போற்றுவாரற்ற நிலையிலும் கேரளமாகிய மலையாளத்தில் வாழ்ந்துக்கொண்டிருக்கின்றன.

'முதுசொல்' என்று தொல்காப்பியத்தில் கூறப்படும் 'பழமொழி' இலக்கிய வகை ஒரே கருத்திலும், ஒரே சொல்லாட்சியுடனும், திராவிட மொழிகளில் நிலவி வருவதை ஒப்பிட்டுக் காணலாம்.

தமிழிலும், மலையாளத்திலும் முறையே பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பழமொழிகள் தொகுக்கப்பட்டுள்ளன.

'பழஞ் சொல்லினு பதரில்ல' என்னும் மலையாள 'பழமொழி பழமொழிகளில் பயனில்லாதவை எவையும் இல' என்று கூறுகிறது.

'ஊணினு மும்பு உப்பேரி; வாக்கினு முன்பு பழசொல்லு' என்னும் மலையாள பழமொழி, உணவு படைக்குமுன் இலையில் உப்பு வைப்பதும் எவருடனும் பேசத் தொடங்குமுன் ஏற்புடைய பழமொழியைச் சொல்லிப் பேச தொடங்குவதும் சிறந்த தமிழ்ப்பண்பாட்டைப் பறைசாற்றுகிறது.

பழந்தமிழ் முன்னோர் பழமொழியை (முதுமொழி) ஏன் இலக்கியங்களில் ஒன்றாக கொண்டனர். என்பதற்கு விடையாக இவை அமைந்துள்ளமைக் காண்க.

**வடதிராவிடம் :**

பிராகுவி, குவி, ஒரோவான் போன்ற தமிழினத்தைச் சார்ந்த மொழிகள் வடதிராவிட மொழிகள் எனப்பட்டன. மராத்தியும், குஜராத்தியும் ஐந்திராவிட மொழிகளில் வைத்தெண்ணப்பட்டன.

இன்றைய வடபுல மொழிகளனைத்துக்கும் தாயான பாலி, பிராகிருத மொழிகளும் தமிழினின்று திரிந்த திராவிட மொழிகளாம்.

பாலி, பிராகிருத மொழிகள் அக்காலத் திராவிட மொழிகளாதலின் அவற்றிலும் தமிழின் தாக்கத்தை அறிதல் இன்றியமையாதது.

பிராகிருத மொழியுள் எகர, ஒகரக் குறில் எழுத்துகள் உட்பட பல தமிழ்க் கூறுகள் உள்ளன.

பௌத்த நூல்களில் வரும் 'தமிலிகா' (தமிழகம்) என்னும் சொல் இந்தியா முழுவதும் இருப்பதாக குறிப்பதும், இச்செய்தி World Ethnology என்னும் நூலில் இடம்பெற்றிருப்பினும் வடஇந்திய மொழிகளில் ஆழ வேரூன்றியுள்ள தமிழின் தாக்கத்தைக் காட்ட போதுமானவையாகும்.

ஐந்திர இலக்கண தாக்கத்தால் சமஸ்கிருதத்தில் உயிரெழுத்து, மெய்யெழுத்து முறைவைப்பையும் வலைநா ஒளிகளையும், தமிழிலிருந்து கடன் பெற்றிருக்கிறது.

ஆரியத்தாக்கம் பெற்ற வடஇந்திய மொழிகள் வாக்கிய அமைப்பில் திராவிடமாகவும், சொல் வளத்தில் ஆரியமாகவும் உள்ளன என்று கால்டுவெல் கூறுகிறார்.

**பொது நோக்கு ஆய்வு :-**

ஒரு மொழி தன் தொடக்க காலத்தில் எவ்வினத்தில் முகிழ்த்தது என்று கண்டறிய மொழி நூலாரை நம்பி பயனில்லை. மொழி அகழ்வாராய்ச்சியாளர்தாம் வரையறை தர முடியும்.

சிந்துவெளியில் வாழ்ந்தவர் தமிழரே என்றும், 'இருக்கு' வேதத்தில் வரும் 'பான்சஜன்' என்னும் சொல்லாட்சி ஐந்திணை மக்களையே குறித்தது என்றும், 'பணிஸ்' என்னும் மக்கள் வடநாட்டு பண்ணையகாரர்களாகிய விவசாயிகளே என்றும், 'பண்ணை' என்று குறிப்பிடும் வழக்கம் இன்றும் தமிழ்நாட்டில் உள்ளது அறிவோம்.

சிந்துவெளி நாகரீகக் காலத்தில் தொடர்ச்சியறாமல் வடநாடு முழுவதும் வாழ்ந்த மக்கள் தமிழர்களே என்றும், ஆரியத் தாக்குதல்களால் தமிழ் - பிராக்கிருத மொழியாயிற்று என்பார் பி.டி.சீனிவாச ஐயங்கார்.

**நிறைவில் :**

இந்திய வரலாறு முறையாகத் தெற்கிலிருந்து தொடங்கப்பட வேண்டும் என்னும் பேருண்மையை வரலாற்றுப் பேராசிரியர் 'வின்சென்ட் ஸ்மித்' அவர்கள் வெளியிட்டார்.

குமரி நாட்டு கடலகழ்வாராய்ச்சியால் இந்திய மொழிகளில் தமிழின் தாக்கத்தை ஆய்ந்து வெளியிட்டவை மொழிவளத்துக்குப் பெரிதும் துணை நிற்கிறது.

பன்னெடுங்காலமாகத் திராவிட மொழிகளுக்கும் வடபுல மொழிகளுக்கும் இணைப்பு பாலமாகவும், தாய்மை ஊற்றாகவும் இருந்த தமிழ் இலக்கண இலக்கியங்கள் திராவிட மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம் மொழிகளில் ஒத்தநெறித்தழுவி அமைந்துள்ளமை நன்கு அறியமுடிகிறது.

நாட்டுப்புறப்பாடல்களில் கும்மி, கோலாட்டம், விடுகதை, நகையாட்டு, ஏற்றப்பாட்டு, உலக்கைப் பாட்டு, ஏர்களப்பாட்டு, அறுவடைப்பாட்டு என யாவும் மொழி மாறினாலும் சுவையும் கருத்தும் மாறாது நிலவி வருகிறது.

(எ.கா.) "**முள்ளு முனையிலே முணு குளம் வெட்ட**
**ரண்டு குளம் பாழ் ஒண்ணுல தண்ணியே இல்லை**" என்ற பாடல் அடிமாறாமல், சொல்மாறாமல் கன்னடம், மலையாளம், மராத்தி ஆகிய மொழிகளில் எக்காலத்தில் எப்படி பரவியது என்றுகூட அறிய முடியவில்லை.



திராவிட மொழிகளில் தமிழ், தமிழினத் தாக்கத்தை அறிய பல்துறை ஆய்வு ஊக்கப்படுமாயின் திராவிடம் வெல்லும்.

**<u>துணை நூற்பட்டியல்</u>** :

1. கர்நாடக பூர்வ சரித்ரே – எம்.எச்.கிருஷ்ணன்
2. ஆந்திர நாட்டு அகநானூறு – தமிழ்நாடு பதிப்பகம் 1978.
3. தமிழிலக்கிய வரலாறு – பி.டி.சீனிவாச ஐயங்கார்.
4. யாசபாரதம் - தமிழ் பதிப்பு
5. ஒப்பிலக்கணம் - கால்டுவெல்.
6. திராவிட மொழிகள் ஓர் ஆய்வு – பன்மொழிப் புலவர்.
7. மொழி நூல் - டாக்டர். மு.வ.

(☺)(☺)(☺)(☺)(☺)

# பழந்தமிழ் நூல்களில் பௌத்தம்

**முனைவர் சி.கங்காதரன்**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
குமரராணி மீனா முத்தையா கலை அறிவியல் கல்லூரி
gengadaranc@gmail.com

*****

**முன்னுரை**

அரச வம்சத்தைச் சார்ந்த சித்தார்த்தர் என்பவர் தவத்தினை ஆற்றி ஞானம் பெற்று புத்தர் என்று வழங்கப்பெற்றார். புத்தர் மக்களுக்கு அறிவுறுத்திய அறவுரைகள் பௌத்த நெறியாயிற்று. அந்நெறியைப் பின்பற்றியோர் பௌத்தர் எனப்பட்டனர். அவர்தம் சமயம் பௌத்த சமயம் என வழங்கப்படலாயிற்று. பௌத்த சமயம் வடக்கே தோன்றி வளர்ந்ததாயினும் இந்தியாவின் பல்வேறு இடங்களில் பரவி சிறப்புப் பெற்றது. இந்தியாவில் மட்டுமன்றி இந்தியாவிற்கு வெளியிலும் பரவிய பெருமை பௌத்த சமயத்திற்கு உண்டு. பழந்தமிழ் நூல்களில் பௌத்தம் குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**தமிழகத்தில் பௌத்தம்**

வடக்கே தோன்றிய பௌத்த சமயம் இந்தியாவின் பல இடங்களில் பரவுவதற்கு முதன்மைக் கரணியமாக இருந்தவர் அசோக மன்னர். மௌரிய மன்னர்களுள் சிறந்தவராகிய அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் பௌத்தம் தென்னிந்தியாவில் கால்பதித்தது. புத்தரின் அறநெறிகளில் மனதைப் பறிகொடுத்த அசோகர் பௌத்த சமயத்தை தழுவிய மன்னராவார்.

பௌத்த சமயம் அவைதீக சமயமாகும். இது காட்சி, அனுமானம் என்ற இரு அளவைகளை அடிப்படையாகக் கொண்டது. வேதவாக்கியம் என்ற அளவையை ஏற்காதது. இதன் காரணமாக வேதம் சார்ந்த கொள்கைகளுக்கு முரணாக பௌத்தம் அமைந்தது.

பௌத்தம் (பெ) என்பதற்கு ‘ஆசையே துன்பத்துக்குக் காரணம் என்பதை அடிப்படையாகக் கொண்டு துன்பத்தை நீக்குவதற்கு வழிமுறைகளைக் கூறும் மதம்; Buddhism - என்று கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (ப.1053) குறிப்பிடுகிறது.

பௌத்த மதம் உலகமெங்கும் பரவுவதற்கும் காரணமாக இருந்தது சங்கம். ‘சங்கம்’ என்றால் பௌத்த துறவிகளின் கூட்டமாகும். இக்கூட்டத்தின் உறுப்பினர்கள் தேரர் எனப்பட்டனர். பௌத்த மதத்தில் ‘மும்மணி’ என்று சொல்லப்படும் புத்த, தன்ம, சங்கம் என்னும் மூன்றனுள் இம்மதத்தின் உயிர்நிலையாக இருந்தது சங்கம் ஆகும். சங்கத்தின் அங்கத்தினரான தேரர்கள் நாடெங்கும் சென்று பௌத்த கொள்கையைப் பரவச் செய்தபடியால் பௌத்த மதம் அந்தந்த நாட்டு மக்களால் மேற்கொள்ளப்பட்டு மேலோங்கி நின்றது.

புத்தர் நிர்வாணம் அடைந்த பிறகு அவரைப் பின்பற்றி பௌத்தமதத் துறவிகள் பல்பல நாடுகளிலும் சென்று பௌத்தமதக் கொள்கையைப் பரவச்செய்தனர். தமிழ்நாட்டிற்கு வந்து சிற்றூர்களிலும், நகரங்களிலும் பௌத்தமதக் கொள்கைகளைப் போதிப்பதையே தமது வாழ்நாட்களின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள்.

தமிழ்நாட்டில் அரசர், வணிகர், செல்வந்தர் முதலானவர்களின் பொருளுதவி பெற்று விகாரைகளையும், பள்ளிகளையும், சேதியங்களையும், ஆராமங்களையும் நிறுவினார்கள். மடங்களில் வாழும் பௌத்தத் துறவிகள் மருத்துவம் பயின்று, தம்மிடம் வரும் நோயாளர்களுக்கு இலவசமாக மருந்து கொடுத்துத் தொண்டு செய்து வந்தார்கள். பள்ளிகளில் பாடசாலைகளை அமைத்துச் சிறுவர்களுக்குக் கல்வியையும் கற்பித்து வந்தார்கள்.

பௌத்தருக்குரிய நன்னாட்களில் நாட்டு மக்களைத் தமது பள்ளிக்கு அழைத்து மணல் பரப்பிய முற்றங்களில் அமரச்செய்து, திரிபிடகம், புத்தஜாதகக் கதைகள், புத்தசரித்திரம் முதலான நூல்களை ஓதிப் பொருள் சொல்லியும் மக்களுக்கு மதபோதனை செய்து வந்ததுடன் குருடர், செவிடர், முடவர் முதலானவருக்கும், ஏழைகளுக்கும் உணவு கொடுத்துதவ அறச்சாலைகள் அரசர் செல்வந்தர் முதலானோர் உதவிபெற்று நிறுவினார்கள்.

கோவலன் மகள் மணிமேகலை பௌத்த மதம் புகுந்து துறவுபூண்டு புகார்ப்பட்டினத்துக்கு அருகிலிருந்த சக்கரவாளக் கோட்டத்தைச் சேர்ந்த உலக அறவி என்னும் அம்பளத்தில் இருந்த குருடர், முடவர் போன்றவர்களுக்கு உணவளித்தாள். மேலும், மணிமேகலை சிறைக்கோட்டம் சென்று சிறையில் வாடும் மக்களுக்கு உணவு அளித்ததை அறிந்த சோர் அரசன் அவளை அழைத்து, நான் உனக்கு என்ன செய்யவேண்டும் என்று கேட்க, அவள் சிறைக்கோட்டத்தை அறக்கோட்டமாக்க வேண்டும் என்று கேட்க, அரசனும் அவ்வாறே சிறைக் கோட்டத்தை அறக்கோட்டமாக்கி கொடுத்தான் என்பதை,

**அரசன் ஆணையின ஆயிழை அருளால்**
**நிரயக் கொடுஞ்சிறை நீக்கிய கோட்டம்**
**தீப்பிறப் புழந்தோர் செய்வினைப் பயத்தால்**
**யாப்புடை நற்பிறப் பெய்தினர் போலப்**
**பொருள்புரி நெஞ்சிற் புலவோன் கோயிலும்**
**அருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியும்**
**அட்டிற் சாலையும் அருந்துநர் சாலையும்**
**கட்டுடைச் செல்வம் காப்புடைத் தாக**

- மணிமேகலை.காதை.19

இதன் வழியாக அறியலாம். நாட்டு மக்களுக்கு நலம் புரிந்துகொண்டே பௌத்த மதத்தின் கொள்கைகளையும் போதித்துவந்தபடியால் பௌத்த மதம் தமிழ் நாட்டிலும் நன்று பரவி வளர்ந்தது.

பௌத்த மதம் காவிரிப்பூம்பட்டினம், கும்பகோணம், மயூரப்பட்டணம், நாகைப்பட்டினம், காஞ்சிபுரம், பல்லாவரம், மதுரை, அரிட்டாபட்டி, தஞ்சை, அழகர்மலை, சித்தர்மலை, குன்னக்குடி, ஆனைமலை, திருச்சிராப்பள்ளி போன்ற இடங்களில் பரவியிருந்தன.

பௌத்த மதம் தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த செய்தியை சிலப்பதிகாரம், மணிமேகலை, தேவாரம், பெரியபுராணம், நீலகேசி முதலிய நூல்களும் குறிப்பிடுகின்றன.

**பௌத்தமதத் தத்துவங்கள்**

பௌத்த மதத் தத்துவம் பன்னிரண்டு நிதானங்களை உடையது (நிதானம் என்பதற்கு காரணம் என்று பொருள்). பன்னிரண்டு நிதானங்களைத் தமிழில் பன்னிரு சார்பு என்பர். அவைமுறையே, அவிஜ்ஜை, ஸங்காரம், விஞ்ஞானம், நாமரூபம், ஸளாயதனா, பஸ்ஸ, வேதனா, தண்ஹா, உபாதானம், பவம், ஜாதி, ஜராமரணம் என்பதாகும்.

பாலி மொழிப் பெயர்களாகிய இவற்றைச் சீத்தலைச்சாத்தனார், பேதைமை, செய்கை, உணர்வு, அருவுரு, வாயில், ஊறு, நுகர்வு, வேட்கை, பற்று, பவம், தோற்றம், வினைப்பயன் - என்று தமிழ் பெயரால் மணிமேகலை என்னும் நூலில் குறிப்பிடுகிறார். இதனை,

**பேதைமை செய்கை உணர்வே அருவுரு**
**வாயில் ஊறே நுகர்வே வேட்கை**
**பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்**
**இற்றென வகுத்த இயல்பீ ராறும்**
**பிறிந்தோர் அறியில் பெரும்பேறு அறிகுவர்**
**அறியார் ஆயின் ஆழ்நர கறிகுவர்**

- மணிமேகலை.காதை.30:45-50

என்ற பாடலடிகளால் அறியலாம். சார்புகளினாலே பிறப்பு இறப்பு உண்டாகின்றன. சார்புகளை அறுத்தால், பிறப்பு, இறப்பு நீங்கி நிர்வாண மோட்சம் எனப்படும் வீடுபேற்றினை அடையலாம். இவற்றைப் பாலி மொழியில் உள்ள பிடக நூல்களில் கூறியுள்ளபடியே சாத்தனார் மொழிபெயர்த்துக் கூறியுள்ளார்.

**பௌத்தத்தின் அடிப்படைகள்**

புத்தர் கண்டறிந்த நற்காட்சிகளின் அடிப்படையில் அவரின் பௌத்த சமயக் கொள்கைகள் அவரின் சீடர்களால் உருவாக்கப்பெற்றன. புத்தர் நிறுவிய பௌத்த மதம் நான்கு உன்னத உண்மைகளையும், எட்டு மார்க்கங்களையும் அடிப்படையாகக் கொண்டது. உலகில் நிறைந்துள்ள துன்பங்களுக்கு முதுமை, மரணம், பிறவி, மறுபிறவி, சிற்றின்பங்கள், மூவாசைகள், முற்பிறவிகளின் கர்மம், அறியாமை, உடல், உள்ளம் ஆகியவையே காரணம். நன்னெறி, மனக்கட்டுப்பாடு, அறிவு ஆகியவற்றின் அடிப்படையிலான அஷ்டாங்க மார்க்கம் மோட்சமளிக்கும். சுரியான பேச்சு, சரியான செயல், அகிம்சை, திருடாமை, பொய் சொல்லாமை, தகாத பாலுறவு தவிர்த்தல், கள்ளுண்ணாமை, சரியான வாழ்க்கை முறை ஆகியவை நன்னெறிகள். மனத்தில் தவறான எண்ணங்கள் தோன்றாமல் தடுத்தலும், மனம், மெய், மொழி மூலமாகத் தவறுகள் செய்யாமல் இருத்தலும், தியானத்தில் ஈடுபடுதலும் மனக்கட்டுப்பாடு ஆகும். நிஜத்தைச் சரியான உய்த்துணர்தலும் சுயநலமின்மை, கருணை, பற்றறுத்தல் ஆகியவற்றைப் பற்றிய சரியான சிந்தனைகளும் அறிவு ஆகும் என கே.என்.இராமச்சந்திரன், சமண சமய வரலாறும், விஞ்ஞானமும், மெய்ஞ்ஞானமும் (ப.408) என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

புத்தருடைய உபதேசங்களை நான்கு சீரிய உண்மைகளாக பௌத்த மரபு கூறுகிறது. ஆவை பொருள்களின் தோற்றம் சார்ந்த கொள்கையுடன் தொடர்புள்ளவையாகும். உலகத் துன்பங்களுக்கு பன்னிரெண்டு காரணங்கள் இருப்பதாகும், நிர்வாணம் பற்றியும் நான்கு உண்மைகளில் கூறப்பட்டுள்ளன. 1.எல்லாமும் துன்பத்தில் வாழ்ந்தவை, 2.துன்பத்திற்கு ஒரு காரணம் உள்ளது, 3.துன்பத்தை அழிக்கமுடியும், 4.முடிவுக்கு ஒரு வழி உள்ளது (தேவிபிரசாத் சட்டோபத்யாயா, இந்தியத் தத்துவ இயல்) என்ற கருத்து பௌத்த அடிப்படையை விளக்குவதாக உள்ளது.

**பௌத்தப் பள்ளியின் வருணனை**

அழகிய ஒளிபொருந்திய ஆபரணங்களை அணிந்துள்ளனர் சிறுபிள்ளைகள். திருவிழாக் கூட்டத்தில் சிறுபிள்ளைகள் தங்களைவிட்டு பிரிந்து போகாமல இருக்க அன்னையர் தம் கரங்களால் அவர்களை அணைத்துப் பாதுகாப்பாக அழைத்துச் செல்கின்றனர். சிறுவர்களின் சிறிய கரங்களைத் தம் கையால் பிடித்திருப்பதைப் புலவர் தாமரை மலர் தாமரை மொட்டினைத் தாங்கியிருப்பபதுபோல் இருக்கிறது என்று கூறுகிறார். அழகு விளங்கப் பெண்கள் பலரும் பூசைக்கு வேண்டிய மலர், புகை முதலியவற்றோடு

புத்தரை வழிபாடு செய்து, வாயால் புகழ்ந்து பாடுவதால் பௌத்தப் பள்ளி சிறந்து விளங்குகிறது என்பதை,

**திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
ஓம்பினர்த் தமீஇத் தாம்புணர்ந்து முயங்கி
தாதணி தாமரைப்போது பிடித்தாங்குத்
தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
காமர் கவனிய பேரிளம் பெண்டிர்
பூவினம் கையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்குங் கடவுட் பள்ளியும்**

- மதுரைக்காஞ்சி : 461-467

இப்பாடல் வழியாக மாங்குடி மருதனார் குறிப்பிடுகிறார். பௌத்த சமயப் பெண்கள் எத்துணை மகிழ்ச்சியோடும் மனநிறைவோடும் குழந்தைகளை அழைத்துக்கொண்டு புத்தரின் ஆலயத்திற்குச் சென்று வழிபடுகிறார்கள் என்பது புலப்படுகிறது. இதனால் பௌத்த சமயத்தைத் தழுவிய மக்கள் எத்தகைய இயல்பான அமைதியான வாழ்க்கையை வாழ்ந்தார்கள் என்பதை அறிந்து கொள்ளலாம்.

**சிலம்பில் பௌத்தம்**

நாலடியாரில் பௌத்த சமயக் கருத்துக்களான பல் சமய அறஒருமை, பேதைமை, நிலையாமை, ஐவகை நெறிகள் ஆகியன சுட்டப்பெற்றுள்ளன. சமண சமயத்தவர்களால் எழுதப்பெற்றபோதும் இதனுள் பௌத்த நெறிகளும் காட்டப்பெற்றிருப்பது குறிக்கத்தக்கது. திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்ச மூலம் ஆகியவற்றிலும் பௌத்த சமய பஞ்சசீலக் கொள்கைகள் வலியுறுத்தப்படுகின்றன.

சிலப்பதிகாரத்தில் பௌத்த மும்மணிகளான புத்தம், தருமம், சங்கம் பற்றிய குறிப்பு இருந்ததை,

**பணைணைத் தோங்கிய பாசிலைப் போதி
அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி
அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்
இந்திர விகாரம் ஏழுடன் போகி**

- சிலப்பதிகாரம்.10:11-14

சிலம்பு குறிப்பிடுகிறது. போதி அணிதிகழ் நீழல் அறவோன் என்பது புத்தரைக் குறிப்பதாகும். திருமொழி என்பது தருமத்தைக் குறிப்பதாகும். அநதர சாரிகள் என்பது சங்கத்தைக் குறிப்பதாகும்.

கோவலன் கொலையுண்ட பிறகு கோவலனின் தந்தை மாசாத்துவான் தன் செல்வங்கள் அனைத்தையும் பௌத்த நிலையத்திற்கு அளித்தான் என்பதை,

**கோவலன் தாதை கொடுந்துயர் எய்தி
மாபெருந் தானமா வான் பொருள் ஈந்தாங்கு
இந்திர விகாரம் ஏழுடன் புக்காங்கு**

- சிலப்பதிகாரம்.27:91-93

இதன் வழியாக அறியமுடிகிறது.

**முடிவுரை**

- பௌத்த மடங்களில் வாழ்ந்த பௌத்தத் துறவிகள் தங்களிடம் வரும் நோயாளிகளுக்கு இலவசமாக மருத்துவம் செய்தனர் என்பதை அறியமுடிகிறது.
- பௌத்த பள்ளிகளில் பாட சாலைகளை அமைத்துக் கல்வி கற்றுக் கொடுத்தனர் என்பதும் இதன்வழி புலப்படுகிறது.
- குருடர், செவிடர், முடவர் முதலானவர்களுக்கும் ஏழைகளுக்கும் உணவு கொடுத்து உதவினர் என்பது சுட்டப்படுகிறது.

- வைதீக மதம், சமண மதம், ஆசிவகம் ஆகியவற்றுடன் பௌத்த மதம் போட்டியிட்டதோடு முரண்பட்டும் நின்றது. ஒன்றையொன்று வீழ்த்த முயன்றன. சண்டைகளும் பிணக்குகளும் பெருகின.

(☺)(☺)(☺)(☺)(☺)



# சமுதாயப் புரட்சியாளர் வள்ளலார் - ஓர் ஆய்வு

**முனைவர் ஆ.சுலோச்சனா**
முதுகலைத் தமிழாசிரியர்
மண்ணூர் செங்கல்வராய நாயுடு மேல்நிலைப்பள்ளி
தியாகராய நகர், சென்னை – 600 017
sulochana300770@gmail.com

*****

**முன்னுரை**

'அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை' என்ற சொற்றொடரால் அறியப்பட்டவர் வள்ளலார். கடலூர் மாவட்டம் வடலூரிலிருந்து 10 கி.மீ. தொலைவிலுள்ள மருதூரில் இராமையாவுக்கும் இவரின் ஆறாவது மனைவியான சின்னமைக்கும் 5.10.1823 இல் ஐந்தாவது மகனாகப் பிறந்தார். தந்தையின் மறைவுக்குப்பின் தன் தாயின் பெற்றோர் ஊரான அதாவது தாய்வழி பாட்டி ஊரான சின்னக்காவனத்தில் வளர்ந்தார். இது சென்னையிலிருந்து 40 கி.மீ. தொலைவிலுள்ள பொன்னேரி வட்டத்தில் அமைந்துள்ளது. இங்கு இரண்டு ஆண்டுகள் கழித்தபின் 33 ஆண்டுகள் சென்னையிலும் கருங்குழியில் 9 ஆண்டுகளும், வடலூரில் மூன்று ஆண்டுகளும், இறுதியாக 4 ஆண்டுகள் மேட்டுக்குப்பத்திலும் வாழ்ந்து 30.1.1874 இல் உலக வாழ்க்கையிலிருந்து நீங்கினார். இடைப்பட்ட 51 ஆண்டுகால வாழ்க்கை ஞானவாழ்க்கையாகவும், மாந்தநேய வாழ்க்கையாகவும் அமைந்திருந்தன. வள்ளலாரின் சிந்தனைகளும், செயல்பாடுகளும் அவரை ஒரு புரட்சியாளராக அடையாளம் காட்டியது.

**வள்ளலார் அறிவின் ஆழ்மையும் அகன்மையும்**

வள்ளலார் திருவருட்பா மூன்றாம் திருமுறையில் திருவடிப்புகழ்ச்சி என்னும் தலைப்பில் "பரசிவஞ் சின்மயம் பூரணஞ் சிவபோகபாக்கியம்" எனத் தொடங்கும் பாடல் 192 சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் பாடியமைக் கொண்டு அவரின் மொழி ஆளுமையின் அகன்மையை அறியமுடிகிறது.

இறைத்தத்துவங்களையும், இறைப்பெருமைகளையும் பாடிய வள்ளலார் சங்ககால இலக்கியங்களில் கற்றுத் தோய்ந்தவர். தொழுவூர் வேலாயுதம் அவர்கள் சங்ககாலப் பாடல் என்று ஒரு பாடலைக் கொடுத்தார். அப்பாடல் சங்ககாலப் பாடல் இல்லை என்று மறுத்ததோடு சங்ககாலப் பாடல்களில் இவ்வளவு பிழைகள் இருக்காது என்றும் கூறினார் என்பதை ஊரனடிகள் எழுதிய 'இராமலிங்க அடிகள் வரலாறு' என்னும் நூலில் இருந்து அறியமுடிகிறது. அவரின் படைப்புகளைக் கொண்டும் இலக்கண, இலக்கியங்களில் அவருக்கிருந்த ஆழ்மையையும், அகன்மையையும் அறியமுடிகிறது.

அக்காலத்தில் வாழ்ந்த சான்றோர் பெருமக்கள் தாம் கூறவந்த கருத்துகளையும், அறிவுரைகளையும் செய்யுள் வடிவிலேயே கூறப்பட்டுவந்த நிலை இருந்தது. தன் சிந்தனைகளும், கருத்துகளும் எளிய மக்களையும் சேரவேண்டும் என்று எண்ணிய வள்ளலார் செய்யுள் வடிவிலிருந்து மாறுபட்டு உரைநடையையும் பயன்படுத்தினார். இதனால் உரைநடை இலக்கியத்தில் தனித்தடம் பதித்தவராக அறியப்படுகிறார்.

**மாந்தநேயமே ஞானவாழ்க்கை**

சமயப் பெரியோர்களாக அறியப்படும் தாயுமானவர், பட்டினத்தடிகள், அருணகிரியார் முதலானோர் இல்லறத்தில் உழன்று மனித வாழ்க்கையை வெறுத்து இறையருள் வேண்டி, இறைஞானமே மெய்ஞானம் என வாழும் நிலைப்பெற்றனர். வள்ளலாரின் வாழ்வு முற்றிலும் மாறுபட்டதாகும். இறையருள் வாழ்க்கையைத் தன் குழவிப் பருவத்திலேயே உணர்ந்தார். அவருக்குள் கிடைத்த இறையருளுக்குப் பெயர் தாங்கிய கடவுள்த் துணையினைத் தொடக்க நாளில் பற்றியிருந்தார். திருவருட்பா முதல் ஐந்து திருமுறைகள் உருவானது. பின்னாளில் அதைவிடுத்து இறைத்தன்மை என்பது மாந்தருக்குத் துணைநிற்கும் மாந்தநேயமே எனக் கண்டார். அம்மாந்தநேய அடிப்படையில் தோன்றியதே பசியாற்றுதல் என்னும் ஜீவகாருண்யம், ஆன்மநேய ஒருமைப்பாடு போன்றவையாகும்.

அக்காலத்தில் சமயப் பெரியோர்கள் மனித வாழ்க்கையிலிருந்து நீங்கி இறை ஞானத்திற்குச் செல்ல, வள்ளலாரோ இறைஞான வாழ்க்கையிலிருந்து மனித வாழ்க்கையின் நடுவணாகத் திகழும் மாந்தநேயமே இறைவாழ்க்கை எனக் கண்டார்.

**வள்ளலாரின் தனித்தன்மை**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் சமயக் சான்றோராகவும், சமுதாய சிந்தனையாளராகவும், பகுத்தறவு புரட்சியாளராகவும் அறியப்படுபவர் வள்ளலார். அக்காலகட்டத்தில் புலவர் பெருமக்கள் குறவஞ்சி, தூது முதலிய சிற்றிலக்கியங்களில் தம் புலமையை வெளிப்படுத்தியுள்ளனர். அவற்றுள் பெரும்பான்மை தனிமாந்தரின் புகழ்பாடும் இலக்கியங்களாகக் காணப்படுகின்றன. அவர்களிலிருந்து வள்ளலார் தனித்தன்மை உடையவராகக் காணப்படுகிறார். இவர் தனிமனிதருக்குக் கடிதங்கள் விடுத்து அறிவுரைக் கூறினாரேயன்றி அவர்கள்மீது இலக்கியங்கள் படைக்கவில்லை. மாறாக வாழ்வியல் நெறிகளையும் தாம் உணர்ந்த வாழ்வியல் அறங்களையும் செய்யுள் வடிவிலும், உரைநடை வடிவிலும் இலக்கியங்களாகத் தந்துள்ளார்.

**வடலூர் என்னும் பெயர்**

திருவருட்பா ஆறாம் திருமுறையில் கண்ணிகள் என்னும் இசைப்பாடலில் “வருவார் அழைத்துவாடி” என்னும் தலைப்பில்,

**வருவார ழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே**
**வந்தாற் பெறலாம் நல்லவ ரமே**

இப்பாடல் வரிகளில் வடலூர் என்னும் சொல்லாட்சி காணப்படுகிறது. வலிமை என்னும் பொருள் தரும் சொல் வடல் என்பதாகும். ஆன்மீகம் என்னும் உள்ளநெறியை வலிமைப்படுத்தும் ஊர் வடலூர்.

வடலூரில் இன்றைய உள்ளாட்சித் துறையின் அரசிதழில் காணப்படும் பெயர் ஆபத்தாரணபுரம். இவ்வூர் மாவட்ட வருவாய் ஆவணங்களில் பார்வதிபுரம் என்று அரசாணை எண் ந.க.வி.5/45849/2009 இல் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே வடலூர் என்னும் சொல் முதன்முதலில் வள்ளலாராலேயே பயன்படுத்தப்பட்டுள்ளதால், வடலூர் என்னும் பெயர் வள்ளலாரால் சூட்டப்பட்டது என அறியமுடிகிறது.

**வள்ளலார் விரும்பிய கல்வி**

ஆங்கில மொழியாட்சி மேலோங்கியிருந்த காலத்திலும் சமஸ்கிருதம் பயன்பாட்டில் இருந்த காலத்திலும், வாழ்ந்த வள்ளலார் அம்மொழியின் முக்கியத்துவத்தினை உணர்ந்ததால் மும்மொழிக் கல்வியைக் கற்பிப்பதற்காக "சன்மார்க்க போதினி" என்ற பெயர் தாங்கிய பாடசாலையை 1867 இல் நிறுவினார். அதன் ஆசிரியர் கல்வியில் சிறந்த பெரும்புலவராக இருக்கவேண்டும் என விரும்பினார். அதனால் கல்வி கற்பிக்க தொழுவூர் வேலாயுதனாரைத் தேர்ந்தெடுத்தார்.

**தமிழ் ஆரியம் இங்கிலீஷ் சன்மார்க்க போதினி**
**சாலையில் உபயகலாநிதிப் பெரும்புலவர் தொ.வேலாயுத**
**முதலிய அறிஞர்களால்.....** பாடம் கற்பிக்கப்படும்

என்ற அறிவிப்பு வெளியிட்டார். மென்மையான மனம் கொண்ட வள்ளலார் ஆசிரியர் மாணவர்களை அடிக்கக்கூடாது என்பதில் உறுதியாக இருந்தார். பொன்னேரி சுந்தரம் என்னும் ஆசிரியரிடம் கல்வி பயின்ற வடிவேல் என்ற மாணவனை அடித்ததை, வள்ளலார் படிக்கும் சிறுவர்களை அடிப்பது நன்றல்ல என ஒரு பாடலைப் பாடி ஆசிரியர் சுந்தரத்திற்கு அனுப்பினார். அப்பாடல்,

**துடிப்பிலாத் தாயமனச் சுந்தரப்பேர்**
**உடையாய்என் தோட கேள்**
**அடிப்பதுமச் சிறுவர்களையடிப் பதுநன்**
**றல வென்மேல் ஆணை யாணை**

எனத் தன்மேல் இருமுறை ஆணையிட்டுக் கூறுகிறார்.



**வள்ளலார் உணர்ந்த ஒளி**

வள்ளலார் தம் இளம் பருவ காலத்தில் உருவ வழிபாட்டில் ஊறித் திளைத்தவர் என்பதை அவரின் தொடக்ககாலப் படைப்புகளான முதல் ஐந்து திருமுறைகள் விளக்குகின்றன. வளர்நிலையில் ஒளிவடிவில் இறையைக் காண்கிறார்.

**உள்ளொளி ஓங்கிட உயிரொளி விளங்கிட**
**வெய்யொளி காட்டிய மெய்யருள்**

என்றுப் பாடுகிறார். இது அகவலில் 1540 ஆவது வரிகளாக இடம் பெற்றுள்ளது. இறைவன் அருட்பெருஞ்சோதி வடிவானவர் என்பதை உணர்ந்து உருவ வழிபாட்டிலிருந்து ஒளி வழிபாட்டிற்கு வந்தார் என்பதை அறியமுடிகிறது. இதுவே அணையா விளக்குக்கு அடிகோலியது.

**வள்ளலார் கண்ட சங்கம்**

வள்ளலார் வாழ்ந்த காலத்தில் தமிழ்நாடு கிழக்கிந்திய வணிகக் குழு ஆட்சிக்கும், ஆங்கிலேய ஆட்சிக்கும் உட்பட்டிருந்தபோதும் சமுதாய நல அமைப்புகள் பல இந்து சமயம் சார்ந்தும், சாராமலும் தோன்றியுள்ளன.

இந்து இலக்கியச் சங்கம் (1830), சதுர்வேத சித்தாந்த சபை (1845), இந்து முற்போக்கு வளர்ச்சி கழகம் (1850), இந்து டிபேட்டிங் சொசைட்டி (1850), சென்னை இந்து கைம்பெண்கள் மணச்சங்கம் (1852), சமூக சீர்திருத்த சங்கம் (1852) போன்றன சென்னையில் தோன்றியுள்ளன என்று க.திருநாவுக்கரசின் 'நீதிக்கட்சி வரலாறு' என்னும் நூல் கூறுகிறது. இவற்றுள் எதனோடும் வள்ளலாருக்குத் தொடர்பு இருந்ததாக அறிதற்கில்லை. இருப்பினும் மாந்தநேயமே தன் வாழ்க்கையின் பொருள் என உணர்ந்த வள்ளலார் "சமரச சன்மார்க்க சங்கம்" அமைத்தார். அதன்வழி மக்களிடம் நலதிட்டங்களைச் சேர்த்தார்.

**வள்ளலாரின் மாந்தநேய எண்ண வீச்சு**

பத்தொன்பதாம் நூற்றாண்டை இந்தியாவின் “பஞ்ச நூற்றாண்டு” என்று வரலாற்று ஆசிரியர் கூறுவர். 1851 முதல் 1900 வரை 31 பஞ்சங்கள் ஏற்பட்டதாகவும் இதில் 2 கோடியே 15 இலட்சம் மக்கள் மடிந்தனர் என்றும் ராஜ்கௌதம் எழுதிய ‘கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப்போக’ என்னும் நூல் கூறுகிறது. இக்காலகட்டத்தில் தமிழகம் 24 பஞ்சங்களை எதிர்கொண்டது. நீர்நிலைகள் பாதுகாக்கப்படாததினாலும் நாட்டில் பஞ்சம், பட்டினி, வறுமை, கொள்ளைநோய் ஏற்பட்டு பல்லாயிரக்கணக்கான மக்கள் மடிந்தனர் என்று சு.அமிர்தலிங்கம், ‘வள்ளலாரின் ஆளுமை உருவாக்கம்’ என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். இதற்கிடையில் வரிக்கொடுமையும் வட்டிக்கொடுமையும் மக்களை வாட்டியது. இது வள்ளலாரின் மனதில் ஏற்படுத்திய தாக்கமே,

**வாடியப் பயிரைக் கண்டபோ தெல்லாம் வாடினேன் பசியினால் இளைத்தே**
**வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த வெற்றுரைக் கண்டுளம் பதைத்தேன்**

என்ற வரிகளும்,

**வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்**
**……………………………………………..**
**பட்டினி கிடப்பவரைப் பார்க்கவும் நேரீர்**
**பழங்கஞ்சி ஆயினும் வழங்கவும் நினையீர்**

என்ற வரிகளும்,

**கருணையிலா ஆட்சி கருகி ஒழிக**
**அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க**

என்ற வரிகளும் பிறந்தன. சமுதாயத்தில் மக்கள் எதிர்கொண்ட சிக்கல்கள் சிலவற்றைத் தீர்க்கும் எண்ணத்தின் செயல்பாடே வடலூர் தருமச்சாலை.

**வள்ளலாரை வருத்திய சமூகக் கேடுகள்**

வள்ளலார் காலத்து நிலவிய சாதி, சமயப் பிணக்குகளை,

**சாதியிலே மதங்களிலே சமயநெறிகளிலே**
**சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச்சண் டையிலே**
**ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்**

என்றும், மூடப்பழக்கங்களை,

**நலிதரு சிறிய தெய்வமொன் றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிய**
**பலிதர ஆடுபன்றிகுக் குடங்கள் பலிக்கடா முதலிய உயிரைப்**
**பொலிவுறக் கொண்டே போகவும் கண்டே புந்திநொந் துளநடுக்குற்றேன்**

என்று பாடினர். அக்காலத்தில் மூடப்பழக்கங்கள் மண்டிக்கிடந்ததையும், சாதி, சமய பிணக்குகளால் மக்கள் பிளவுப்பட்டிருந்ததையும் ‘மதராசப்பட்டணம்’ என்றும் நூலிலிருந்தும் அறியமுடிகிறது.

மக்களிடம் மண்டிக் கிடந்த மூடப்பழக்கங்கள் மக்கள் அறிவை மழுக்கிவிட்டன என்று குறிப்பிடும் வள்ளலார் இருபதாம் நூற்றாண்டில் எழுச்சியுற்ற பகுத்தறிவு இயக்கங்களுக்கு அடிகோலியதை உணரமுடிகிறது.

**முடிவுரை**

- ❖ வடலூர் என்ற பெயரை முதலில் வள்ளலார் குறிப்பிட்டதை அறியமுடிகிறது.
- ❖ இறைத்தன்மை என்றது மாந்தநேயமே எனக் கண்டதை அறியமுடிகிறது.
- ❖ அவர் காலத்திய புலவர் பெருமக்களுள் வள்ளலார் தனித்தன்மையுடன் திகழ்ந்ததை அறியமுடிகிறது.
- ❖ சமூகச் சிக்கல்களைத் தீர்க்க முனைந்துள்ளதை அறியமுடிகிறது.
- ❖ இருபதாம் நூற்றாண்டின் பகுத்தறிவு இயக்கங்களுக்கு அடிகோலியதை காணமுடிகிறது.

(☺)(☺)(☺)(☺)(☺)



# தமிழிசையும் மரபுகளும்

**முனைவர் மா பெரியசாமி**
உதவிப்பேராசிரியர்
விவேகானந்தா கல்லூரி
திருமயிலை, சென்னை
peruskailas@gmail.com

*****

தமிழ்ச் சமூகம் தனக்கென்று ஒரு தனித்துவமான வரலாற்றைக் கொண்டுள்ளது. மனித குலம் தோன்றி வளம் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கும் இக்காலம் வரையிலும் தன்னுடைய தனித்துவத்தின் துணையோடு முன்னேற்றம் கண்டு வளர்ந்து வருகிறது. இத்தகைய வளர்ச்சிக்கு இசைத் துறையை எவ்வாறு உருவாக்கியுள்ளது என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பாட்டும் இசையும்**

மகாகவி பாரதியார், 'பாட்டுத்திறத்தால் இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்' என்று பாடினார். அதோடு, மட்டுமல்லாது தனது குயில் பாட்டில் பலவகையான பாடல்களில் தம் நெஞ்சைப் பறிகொடுத்துத் தவித்ததையும் கீழ் வருமாறு பாடுகிறார்:

**"வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்**
**கொட்டியிசைத்திடுமோர் கூட்டமுதுப் பாட்டினிலும்**
**வேயின் குழலொடு வீணைமுதலா மனிதர்**
**வாயினிலுங் கையாலும் வாசிக்கும் பல் கருவி**
**நாட்டினிலுங் காட்டினிலும் நாலெல்லாம் நன்றொலிக்கும்**
**பாட்டினிலும் நெஞ்சை பறிகொடுத்தேன் பாவியேன்"** (குயில் பாட்டு, 39-44)

தமிழ்நாட்டில் இசையால் இறைவனை உணரலாம் என்றும் கண்டனர். 'பாட்டிடைப் பண்ணாய், ஏழிசையாய் இருப்பவன் இறை' என்று பாடினர் இறைத் தொண்டர். இறைவனும் தனது அடியவருக்கு ஆபத்து நேர்ந்த காலத்தில், அதனைத் தீர்க்க, விறகுவெட்டியாக வந்து உலகை மயக்கும் கானம் பாடினார் என்று திருவிளையாடல் புராணம் சொல்லுகிறது. இத்தகைய அதிசயங்களை நீடு நினைந்து மனமுருகி கீழ்வருமாறு பாடினார் கவிமணி:

**"வெந்தழல் நீராகும் வெள்ளெலும்பு பெண்ணாகும்**
**வந்த மத வேழம் வணங்கிடுமே! - சந்த**
**மெழப் பாடுவாறுள்ளுருகிப் பாடும்**
**தமிழிசைக்கு நீடுலகில் உண்டோ நிகர்?"** (ந. சஞ்சீவி கட்டுரை களஞ்சியம், 342)

என்னும் பாடலடிகள் இறை அடியவர்கள் தமிழால் செய்த அருஞ்செயல்களுக்கும் தமிழ் இசையின் வல்லமைக்கும் சான்று பகர்கின்றன என்பது மிகையன்று.

**தமிழரின் தொன்மை**

தமிழ்ச் சமூகம் தொன்மைக் காலம் தொடங்கி நவீன காலமான தற்காலம் வரையிலும் அனைத்துத் துறையிலும் தனித்துவமான பண்பாடுகளைக் கொண்டிருக்கிறது. அத்தகைய சமூகம் மென்மேலும் வளர்ந்து செல்ல அப்பண்பாடுகள் உதவியாக இருக்கும் என்பதும் திண்ணம். மேலும்,

தமிழ் இலக்கியங்களான பாட்டும் தொகையும் தொடங்கித் தற்காலத்து நவீன இலக்கியம் வரையிலும் நீதி இலக்கியம், பக்தி இலக்கியம், காப்பிய இலக்கியம், சிற்றிலக்கியம் போன்றன அனைத்தும் இசையுடன் பாடும் மரபில் அமைந்தனவாகும். இதனைப் 'பண்ணிசை' என்று குறித்தனர். எனவே, இசையோடு பாடும் மரபு என்பது நமது இலக்கியங்களுக்குப் பொதுவானதாகும். நவீன காலத்து இலக்கியங்கள் சிலவற்றிற்கு மட்டுமே இசையோடு பாடும் மரபு பொருந்தாது. சான்றாகச் சிறுகதை, நாவல் முதலியவற்றைக் கூறலாம். மற்றபடி அனைத்து இலக்கியத்திற்கும் பொருந்தும்.

தமிழ் மொழிப் பக்தி மொழி என்று சிறப்பித்துக் கூறும் இலக்கிய வளம் உடையது. தேவாரம், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம், கம்பனது இராமகாதை, அடியவர்களின் பெரும் வாழ்வைச் சித்திரிக்கும் பெரிய புராணம் போன்றன பல ஆயிரம் பாடல்களாகப் பெருகின. இது பக்தி என்னும் பெரும் வெள்ளம் பெருக்கெடுத்துத் தமிழ் பெரு நிலத்திலுள்ள மனித மனத்தைப் பண்படுத்தி இம்மைக்கும் மறுமைக்கும் ஆற்றுபடுத்தியது. எனவே, தமிழிலக்கியம் பயில்வோர்க்கும் சுவைஞர்க்கும் தமிழிசையின் மரபை அறிதல் அடிப்படையானதாகும்.

**பண்**

தமிழில் பாடல் இசைக்கப்படுதல் மரபு. ஆகையால்தான் முத்தொள்ளாயிரம் **'பதிபடுப முத்தமிழ்நூல்'** (73) என்று இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் ஊர்தோறும் விளங்குகிறது என்பதைப் பாடியது. இசையோடு பாடும் முறையைப் 'பண்ணிசை' என்று அழைப்பர். கோயில்களில் பக்தி இலக்கியங்களைப் பாடியவர்கள் 'பண்ணிசை ஓதுவார்கள்' என்றும் ஓதுவாமூர்த்திகள் என்றும் அழைக்கப்பட்டனர்.

'பண்' என்னும் சொல் தற்காலத்தில் 'இராகம்' என்பதற்கு ஒக்கும். 'பண்' என்ற சொல் தொன்மைக் காலம் முதலே இருந்துவருகிறது. கண்ணில் கண்ணோட்டம் என்னும் பண்பு இயைந்து இருத்தல் அடிப்படை என்று கூற விழைந்தார் திருவள்ளுவர். அவ்வாறு இல்லாது போனால் அது கண்ணென்றும் கூறமுடியாது என்றும் கூறினார். இதனை விளக்க பாடல் என்பது இசையோடு இருக்க வேண்டும். அவ்வாறு இல்லை என்றால் பாட்டாகாது என்று உறுதிபட குறளில் கூறுகிறார்:

**"பண்ணென்னாம் பாடற்கியல் பின்றேல் கண்ணென்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்"** (குறள்.573)

'பண்' என்பது 'இராகம்' என்று முன்பே கூறியிருக்கிறோம். 'இராகம்' என்பது இன்று பெருவழக்காய் இருக்கிறது. இன்று 'பண்' என்பது இலக்கிய வழக்காகச் சுருங்கியுள்ளது. ஆனால் சங்ககாலத்திலும் மத்திய காலத்திலும் பண்ணிசை என்பது பெருவழக்காய் இருந்தது. பன்னிரு திருமுறைகளைப் பண்ணிசை அடிப்படையில் தொகுத்து வைத்துள்ளனர். ஒவ்வொரு பதிகத்திற்கும் எவ்வகையான பண் அமைய வேண்டும் என்று குறித்துள்ளனர். பண் வகையில் தொகுக்கப்பட்டுள்ள திருமுறைகள் திவ்வியப் பிரபந்தம் போன்றன இசை சுரங்கம் போல உள்ளது. இந்தப் 'பண்' என்பது 'இராகம்' என்றும் 'பாட்டு' என்றும் பெயர் பெற்றுள்ளது. அது நவீன காலம் வரையிலும் 'இசைப்பாட்டு' என்னும் பொருளில் குறிக்கப்பட்டாலும் அது பெருவழக்காய் இல்லை.

பாரதியார் தனது கண்ணன் பாட்டில் காதலரின் மன ஒற்றுமையைக் காட்டுவததற்குப் பண்ணும் பாட்டின் இனிமையும் போல் அமைந்தது என்று பாடுகிறார். **"பண்ணு சுதி நீ எனக்குப் பாட்டினிமை நான் உனக்கு"** என்று கூறும் போது 'பண்' என்பது இராகம் என்னும் பொருள் பெருவதைத் தெளிவாக அறியமுடிகிறது.

அதே பாடலில் இசையின் தன்மையை **"நாதவடிவானவளே நல்ல உயிரே கண்ணம்மா"** என்றும் பாடுகிறார். நாதம் என்பது சுத்த இசை வடிவாகும். நாதம் என்பது சுத்த இசை வடிவானது என்பதாலேயே இறைவனை நாதவடிவாகக் காணும் சிந்தனை மரபு உள்ளது. திருமூலரும் பரம்பொருளை நாத வடிவாகக் காணுகிறார்.

**"நாதம் பரத்தில் லயித்திருக்கும் ஆதலால்
நாதம் அறிய பரமும் அறியலாம்"**

என்பதன்மூலம் இதை உணரலாம்.

பண் இசைப்போர் பாணர்கள் என்று காரணப் பெயரால் அழைக்கப்பட்டனர். இவர்கள் இசையைத் தொழிலாகக் கொண்டவர்கள். இதில் வாய்ப்பாட்டு இசைப்போர் இசைப்பாணர் எனவும் யாழ் இசைப்போர் யாழ்ப்பாணர் எனவும், தோற்கருவி இசைப்போர் மண்டைப் பாணர் எனவும் அழைக்கப்பட்டனர்.

பாணர்களில் பேரியாழ், சீரியாழ் என்ற கருவிகளை வாசிப்போர் முறையே பெரும்பாணன் (பெரும்பாணாற்றுப்படை) சிறுபாணன் என (சிறுபாணாற்றுபடை) அழைக்கப்பட்டனர். இவர்கள் வாழ்ந்த பகுதியைப் பாண்சேரி என்றும் குறித்தனர்.

பாணர்களில் ஆண், பெண் இருவரும் இசைக் கருவிகளை இசைத்துள்ளனர். இதன் காரணமாகப் பண் இசைப்போரில் ஆண்களைப் பாணன் என்றும் பெண்களைப் பாடினி என்றும் அழைத்தனர். பாணனுக்குத் துணைவியானவர், இசை, யாழ், கூத்து போன்றவற்றில் திறன் பெற்று வல்லவராய் விளங்கினார். ஆகையினால் அவர்கள் பாடினி, பாணினி, பாண்மகள், பாட்டி முதலான பல பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

யாழ் என்னும் இசைக்கருவி வடமொழியில் வீணை என்று அழைக்கப்படுகிறது. இன்று தமிழ் மரபிலும் யாழ் என்பது வீணை என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. யாழ் வாசிக்கும் இவர்களைத் தொல்காப்பியம் 'துணைமையோர் தோழர்கள்' (தொல்.களவு.1) என்று கூறுகிறது. யாழ் வாசிக்கும் இவர்கள் வட நாட்டிற்குச் சென்று யாழ் இசையைப் பரப்பினர். வடமொழியில் யாழ் என்பது கந்தர்வம் என்ற பெயரால் அழைத்தனர். இதனால் யாழை மீட்டவர் கந்தர்வர் ஆனார். இவர்கள் இலங்கைக்குச் சென்றும் இசையைப் பரப்பியுள்ளனர். இதற்குச் சான்றாக 'யாழ்ப்பாணம்' என்னும் முக்கிய நகரம் இலங்கையில் விளங்குகிறது.

பண் என்பது பண்படுத்தப்பட்ட ஒலியாகும். பண்படாத ஒலியை இரைச்சல் என்று கூறுகிறோம். ஆதலால் பண்பட்ட ஒலியை இசை என்கிறோம். இதனாலேயே பாடலைப் பண் சுமந்த பாடல் என்று சிறப்பித்துக் கூறுவர். இறைவன் ஒலி வடிவாக அதாவது நாதவடிவாக உள்ளான் என்பதை, "ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே" என்று அப்பரும், "பண்ணும் பதம் ஏழும் பல ஓசைத் தமிழவையும் உள்நின்றதோர் உரு" என்று திருஞான சம்பந்தரும் பாடியுள்ளனர். (தமிழ் இசைக் கருவூலம் - ப.26)

**இசைப் பிறப்பு**

‘ஸரிகமபதநி’ என்னும் சுரங்கள் ஏழும் அதற்குரிய மாத்திரை அளவில் ஒலித்தால் ஏழிசை பிறக்கும். இவற்றுள்ளே பண் பிறக்கும் என்று தொன்மை நூலான பஞ்ச மரபு குறிப்பிடுகிறது. இசையின் அடிப்படை ஒலிகளை எவ்வாறு உண்டாக்கியுள்ளனர் என்றால் அது இயற்கையாக இருக்கும் விலங்குகளிடமிருந்து பெறப்பட்டுள்ளது. இதனை,

**“வேண்டிய வண்டும் மாண்டகு கிளியும்**
**குதிரையும் யானையுங் குயிலுந் தேநுவும்**
**ஆடும் என்றிவை ஏழிசை யோசை”** (யாழ்நூல், 4)

என யாழ் நூல் கூறுகிறது. இதனைக் கீழ்வருமாறு பட்டியல் தெளிவாக்குகிறது.

| | | | |
|---|---|---|---|
| கிளி | மயில், தவளை | ஷட்ஜம் (ஸ) | |
| விளரி | பசு | இருஷபம் (ரி) | |
| தாரம் | ஆடு | காந்தாரம் (க) | |
| குரல் | வண்டு, கொக்கு | மத்திமம் (ம) | |
| துத்தம் | கிளி, குயில் | பஞ்சமம் (ப) | |
| கைக்கிளை | குதிரை | தைவதம் (த) | |
| உழை | யானை | நிஷாதம் (நி) | (யாழ் நூல்.ப.5) |

இசை இயற்கை சூழலில் இருந்த ஒலியின் மூலம் பெறப்பட்டது என்பதைத் தெளிவாக்குகிறது. அதனைச் செம்மை செய்து எழு சுரங்களாக உருவாக்கியுள்ளனர் என்பதின்வழி இசைக் கலையின் மூலமும் அதன் சிறப்பும் அறியமுடிகிறது.



**இசை வெளிப்பாடு**

நமது முன்னோர் இசையைக் கீழ் நிலையிலிருந்து மேல் நிலைக்கும், அதிலிருந்து கீழ்நிலைக்கும் கொணரும் இயல்பினை உணர்ந்திருந்தனர். இது இசையில் முக்கியமானதும் செவ்வியல் பண்புமாகும். இதனை, இன்று ஆரோகணம் என்றும் அவரோகணம் என்றும் அழைப்பர். தமிழில் முறையே ‘ஏறோசை’, ‘இறங்கோசை’ என்றும் சுட்டுவர்.

இந்த இசை மூவகை தானத்தில் இசைக்கும். அவை மந்தரம், மத்தினம், தாரம் எனப் பிற்காலத்தார் வழங்கினர். இது தற்சமயமும் வழக்கில் இருக்கிறது. இதனைத் தமிழ் தொன் மரபில் மெலிவு, சமன், வலிவு என்று மூன்றையும் கூறியுள்ளனர். இதனைச் சிலம்பும் சுட்டி உள்ளது. சிலம்பிற்கு உரை செய்த அடியார்க்கு நல்லாரும் **‘மந்தோச்ச சமம்’** (யாழ் நூல், 14) எனக் கூறியுள்ளார். இவ்வாறு செவ்வியல் தன்மையுடன் வளர்ந்தது தமிழ் இசை.

**பாடல் ஒலித்தல்**

பாடல் பாடும் மரபு ஆடுதல், கூத்தாடுதல், நடனமாடுதல், நாடகம் நடித்தல் ஆகிய இடங்களில் எல்லாம் இருந்தன. அது போல மகளிர் விளையாட்டில், கிளி ஓட்டும் போதும் சுண்ணம்மிடிக்கும் போதும் கோலாட்டம், கும்மியாட்டம் ஆகிய கலைகளிலும் பாட்டுக்களுடன் தங்களது வாழ்வைச் செம்மையாக்கியுள்ளனர். குழந்தைப் பிறப்பு, பருவம் (பெண்) எய்தல், திருமணம், மகிழ்ச்சி, துக்கம் என எல்லா மனித வாழ்நிலைகளிலும் பாட்டு இருந்து வருகின்றது.

வாழ்வைப் பிரதிபலிக்கும் இலக்கியத்தில் இப்பாடல் சிறப்பாக வெளிப்பட்டுள்ளது. அவை அம்மனை, பந்து, ஊசல், வள்ளை, என்றும் வரிப்பாட்டுக்களைச் சிலப்பதிகாரத்தில் பாடுவதையும் காணலாம்.

திருவாசகத்தில் தெள்ளேணம், சாழல், தோள்நோக்கம், உந்தி முதலிய வரிப்பாடல்களையும் காணலாம். (ந. சஞ்சீவிக் கட்டுரைகள், 342)

**பண்ணும் காலமும்**

இசையை மனத்தின் மொழி எனலாம். அந்த வகையில் இசைப்பதற்குக் கால சூழலைக் கொண்டு இசைப்பது வழக்கமாக இருந்துள்ளது. பண்டைய இசையில் ஐந்திணைக்கும் உரிய யாழும் இசையும் இருந்ததைத் தொல்காப்பியம் சுட்டியுள்ளது. காலத்துக்கேற்றவாறு காலையில் மருதப்பண், நண்பகலில் பாலைப்பண், மாலையில் செவ்வழிப்பண், நள்ளிரவில் குறிஞ்சிப்பண் எனப் பண்ணிசைத்தலை இசை வல்லோர் வகுத்துள்ளனர். (சஞ்சீவி கட்டுரை களஞ்சியம்-ப.340)

**இசையின் நோக்கம்**

இசைக்கப்படுவதற்கு நோக்கம் என்ன என்ற வினாவிற்கு விடை வேண்டும். நாகரிகம் கொண்ட சமூகம் தனது சமூக செயல்பாட்டினைச் செம்மையுறச் செய்தலுக்கும் இசைக்கும் மிகுந்த தொடர்பு உண்டு. இதனை,

**"எவ்வுயிர்க்கும் இன்பம் உண்டாக்கலும், அறிவினைத் தெளிவடையச் செய்தலும், மனத்தை ஒருமை நிலையில் நிறுத்தலும், புகழ்பட வாழச் செய்தலும், உறுதிப் பொருளை வற்புறுத்தலும், முடிந்த பயனைக் கூறுதலும், மெல்லோசையால் மன அமைதியைத் தருதலும் உச்ச நிலையாகிய ஓசையால் மக்களது உணர்வைத் தூண்டித் தொழிற்படச் செய்தலும் இசைப்பாடலாற் பெறும் எண்வகைப் பயன் எனக் கொண்டனர் தமிழ் முன்னோர்."** (சஞ்சீவி கட்டுரை களஞ்சியம் ப. 341)

அதேபோல் நம் காலத்துக் கவிஞரான பாரதிதாசனும் 'துன்பம் நேர்கையிலே எனக்கு யாழெடுத்து மீட்டாயா!' என்று தமது மனவிருப்பத்தை வேண்டுகிறார். இவற்றின்மூலமாக நமக்கு மனித வாழ்வை நிறைவு செய்ய துணை நிற்பதாகும் என்றே துணியலாம்.

**முடிவுரை**

இன்று நாம் கல்லூரி வழியாக இலக்கியம் கற்றுத் தரும் பண்பாட்டைக் கொண்டுள்ளோம். நமது மரபான இலக்கியத்தை அறிந்து கொள்ளவும் இலக்கியத்தின் இன்பம் நுகரவும் இசை பற்றிய அறிவும் உணர்வும் அவசியம் என்பது புலனாகிறது. எனவே, இதனை இன்று இலக்கியம் பயில்வோருக்கு இசை கற்றல் என்பது அடிப்படையானதாக அமைந்தால் இக்கல்வி சிறப்படையும் என்பது திண்ணம்.

**துணை நூற்பட்டியல்**

1. தமிழிசைக் கருவூலம், பண்ணிசைச் செல்வி டாக்டர் சுப்புலட்சுமிமொகன், திருக்குறள் பதிப்பகம், சென்னை, 2009.
2. பேரா.ந.சஞ்சீவி கட்டுரை களஞ்சியம், (தொகு.) காவ்யா சண்முகசுந்தரம், காவ்யா, சென்னை, 2006.
3. யாழ்நூல் , விபுலாநந்த அடிகளார், அரசன் பதிப்பகம், சிவகாசி, 2013.
4. பாரதியார் கவிதைகள், சி. சுப்பிரமணிய பாரதி, கங்கை புத்தக நிலையம், சென்னை, 2003.

(☺)(☺)(☺)(☺)(☺)

# சங்க இலக்கியத்தில் சுற்றுச்சூழல்

**த. இராஜேஸ்வரி,**
முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்)
தமிழ்த்துறை, இராணிமேரி கல்லூரி,
சென்னை-04.

**முன்னுரை**

மனிதன் வாழ்வதற்கு உரிய இடம் 'பூமி' இப் பூமி மிகப் பெரியது. இவற்றினை பாதுகாத்தல் அவசியம். இச் சுற்றுச்சூழல் பற்றிய சிந்தனைகள் அண்மைக்காலங்களில் பரவலாக பேசப்பட்டுவருகின்றன. சங்க இலக்கிய சுற்றுச்சூழலை விளக்குவதாக இக் கட்டுரை அமைகின்றது.

**"கதிர்விரி சுனை சுடர்க் கவின் கொண்ட நனஞ் சாரல்**
**எதிர் எதிர் ஓங்கிய மால்வரை அடுக்கத்து**
**அதிர் இசை அருவிதன் அம்சினை மிசை வீழ"**[1]
**(கலித்: 44:1:3)**

எனும் கலித்தொகை பாக்களின் வழியாக அடுத்தடுத்து அமைந்த எழில் மிகுந்த மலைகள், இம்மலைகளின் உச்சியின் மேல் தன் கதிர் மலந்து இளஞாயிற்றின் கிரணங்கள் பட்டு ஒளி மிளிர்கின்ற மலைச் சாரல், அம்மலைச் சாரலிலே விழுகின்ற அருவிகள் விழும் காட்சி அதன் வளம் விளக்கப்பட்டுள்ளது.



மரங்கள் இயற்கை நமக்கு அளித்த கொடை என்பதை பரிபாடலின் வழியாக கீழ்கண்ட மரங்களை குறிப்பிடுகின்றது.

**"வரையன புன்னாகமும்**
**கரையன சுரபுன்னையும்**
**வண்டு அறைஇய சண்பக நிரை தண் பதம்**
**மனைமாமரம் வாள் வீரம்**
**சினை வளர் வேங்கை கணவிரி காந்தள்**
**தாய தோன்றி தீயென மலரா**
**ஊதை அவிழ்த்த உடை இதழ் ஒள்நீலம்**
**வேய் பயில் சோலை அருவி தூர்த்தரப்"**[2]
**(பரி: 11:16:23)**

மலைகளின் அருகில் வளர்ந்துள்ள புன்னை மரமும் அவ் ஆற்றங்கரையிலுள்ள சுரபுன்னை மரத்தில் வண்டுகள் ரீங்காரிக்கின்றன. சண்பக மரக் கூட்டங்கள் மிகுந்த குளிர்ந்த தன்மையுடைய தோற்றா மரமும் வாள் வீர மரமும் கொம்புகள் செழித்து வளரும் வேங்கை மரமும் செவ்வலரி காந்தள் தீயைப் போன்று மலரும் செழித்த தோன்றியும் காற்றால் மலர்ந்த இதழ்கள் நீலமும் மூங்கில் வளம் மிகுந்த மலைச்சாரலில் சோலையில் அருவி நீர் கொண்டு வந்து குவிந்து நிறைந்திருக்கின்றது.

நீர் நிலைகள் ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு பெருந்துயையாக நிற்கின்றது.

**"மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்**

**தாண்துறை ஊரன் வரைக**
**எந்தையும் கொடுக்க என வெட்டேமே"**[3]

(ஐங்:6:4:6)

பொய்கையில் பூத்த தாமரை பற்றி கூறுகின்றது.

**"சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்**
**இருங் கல் விடர் அளை வீழ்ந்தென வெற்பில்**
**பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்"**[4]

(ஐங்: 214:1:3)

எனும் பாக்களின் வழியாக காண முடிகிறது.

குற மக்கள் வெட்டி எரிக்கும் அகிற் கட்டையிலிருந்து வருகின்ற புகை சந்தன மனத்துடன் சேர்ந்து அனைத்து திசையிலும் வீசுகின்றது.

**"பூத் தலை அறாஅப் புனைகொடி முல்லை**
**நாத் தழும்பு இருப்பப் படாது ஆயினும்**
**கறங்கு மணி நெடுந்தேர் கொள்க எனக் கொடுத்த**
**பரந்து ஓங்கு சிறப்பின் பாரி"**[5]

(புறம்: 200:9:12)



அலங்கரிக்கப்பட்டதைப் போல் மிளிரும் முல்லைக்கொடி நாத்தழும்பு, உண்டாகப்படாதாயினும் ஒலிக்கின்ற மணி கட்டப்பட்ட பெரிய தேரைக் கொள்க எனக் கூறித் தந்த பாரியின், சிறப்பு மேம்பட்டு விளங்கும் தலைமை தன்மை கொண்டபாரி என்று இப்பாக்களின் வழியாக எடுத்துக் காண முடீகின்றது.

மென்மையான தன்மையடைய கரிய மயில் குளிரினால் நடுங்குவதைக் கண்டு இறங்கி துகிலைத் தந்த மிகுந்த புகழினையுடைய மதம் உடைய யானையின் செருக்கு மிக்கு குதிரையுடைய பேகனே! எனும் கருத்தை இப்பாக்கள் விளக்குகின்றன.

**"மடத் தகை மா மயில் பனிக்கும் என்று அருளிப்**
**படாஅ ஈத்த கெடாஅ நல்லிசைக்**
**கடாஅ யானைக் கலிமான் பேக!"**[6]

(புறம்: 145:1:3)

இப்பாடலிருந்து பழந்தமிழர்கள் பறவைகளை தமக்கு நிகராக எண்ணி மதித்தனர் என்பதை எவ்வுயிர்க்கு ஆயினும் இரங்கல் வேண்டும் எனும் ஒப்பற்ற உயரிய கொள்கையினைக் கொண்டு அதனை பின்பற்றி வாழ்ந்தனர்.

**"மாசு அற இமைக்கும் உருவினர்"** [7]

(திரு:முரு:128)

சங்க கால மக்கள் தனது ஆடை, படுக்கை விரிப்புகள் போன்றவைகளை துவைத்துப் பயன்படுத்தினர் என்பதை

**"புகை முகந்தன்ன மாசுஇல் தூஉடை"** [8] (திரு:முரு:138)

**“காடி கொண்ட கழுவுறு கலிங்கத்து**
**“தோடு அமைதூ மடி விரித்த சேக்கை”** 9 (நெடு:134:135)

**“புலைத்தி கழ்இய தூவெள் அறுவை”**10

(புறம்:311:2)

அனைவராலும் பயன்படுத்தக் கூடிய ஆடை அணிகலன்களுக்கு பயன்படுத்தப்படும் சலவைத் தூள்கள் மிகுந்த நச்சுத் தன்மை உடையது வேதிப்பொருட்களும் அவற்றின் மேலே பயன்படுத்தப்படும் நெகிழி உறைகளும் சுற்றுச்சூழலை மிகுந்த பாதிப்படையச் செய்கின்றன.

இந்த உலகமானது கடலால் சூழப்பட்டது எனும் பொருள்பட விரிநீா் வையம் என்பதை,

**“ஒரு நாள் கூறின்றுமிலரே: விரிநீா்**
**வையக வரையளவு இறந்த”**11

(நற்:130:11:12)

அடுக்கல் நிலத்தில் பசிய தினைக் கதிா்களைக் காக்கின்ற குறிஞ்சி நில பெண்டிா் பற்றி நற்றிணை பாடல் சுட்டுகின்றது.

**கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை”**12

(நற்:22:1)

ஓங்கிய மலைகள் இல்லாத உயா்ந்த பாறைகள் மிகுந்த இடமாக அடுக்கல் உள்ளதாகக் குறிப்பிடப்படுகின்றது

பலா மரங்கள் நிறைந்த மலைகளில் விழும் அருவி என காண முடிகின்றது.

**“சினைதொறும் தூங்கும் பயம் கெழு பலவின்**
**சுனையுடை முன்றில் மனையோள் கங்குல்**
**ஒலி வெள் அருவி ஒலியின் துஞ்சும்”**13

(நற்: 77:6:8)

மலைகளின் வளம் அருவி பற்றி வெளிப்படுத்துகின்றது.

திருப்பரங்குன்றத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் வழியில் காற்று எத்தகைய நறுமணத்தைக் கொண்டு வீசுகின்றது என்பதை

**“ஏழ் புழை ஐம் புழை யாழ் இசை கேழ்த்து**
**வீழ் தும்பி வண்டொடு மிஞிறு ஆா்ப்பக் சுனை மலரக்**
**கொன்றை கொடி இணா் ஊழ்ப்பக் கொடி மலா்**
**மன்றல மலர மலா் காந்தள் வாய் நாற**
**நன்று அவிழ் பல் மலா் நாற நறை பனிப்ப**
**தென்றல் அசைவரூஉம்”**14

(பரி:செவ்: 8:22:27)

ஏழ்துளைகளையுடைய சூழலும், ஐந்து துளைகளையுடைய யாழிலும் பிறந்த இசையினைப் போல நிறத்தால் ஒத்த தம் இனத்தை விரும்பும தும்பி வண்டு, மிஞிறு என்பதைப் இசை பாடும் சுனைகளில் பூக்கும் கொன்றை மரங்ளின் கொடியினை போல நீண்ட பூங்காத்தும் மலரும் இடமெல்லாம் மணம் வீசும் இவையே அல்லது நன்கு மணம் வீசும் அந்நறுமணங்களைக் கவா்ந்து தென்றல் காற்று வீசும் எனக் காற்றின் நறுமணம் பெற்று திகழ்கின்றது.

**“கனல் பொருது அகலின் ஆவி காளழ”** [14] **(பரி:10:72)**

இயற்கையான மரங்களும், மூலிகைகளும் இதற்குப் பயன்பட்டன.

**“காழ் ஆரத்து அம்புகை சுற்றிய தார் மார்பின்”** [15] **(பரி:9:28)**

எனும் பாடல் வரிகள் கூறுகின்றது.

தீயால் சுடப்பட்ட அகிலினின்று எழுந்த நறுமணம் புகையைக் கூறும பொழுது,

**“கனல் பொருத அகிலின் ஆவி காளழு”**[16]

**(பரி:10:72)**

எனும் பாக்கள் சுட்டுகின்றது.

கழியும் - கானலும், கடலும் கலனும் மீனும் உப்பும் நாரையும் குருகும், புன்னையும், தாழையும், தாழையும், நெய்தலும், அரும்பும், அன்றிலும் சான்றோரால் எடுத்துக் காட்டப் பெறுகின்றன.

இயற்கையின் எல்லையில்லா இன்பங்கள் எள்ளளவும் குறையாமல் உள்ளது.

**“சாந்த மரத்த பூழில் எழுபுகை**
**கூட்டு விரை கமழும் நாடன்”**[17]

**(ஜங்:212:1:2)**



எனும் பாக்களில் தலைவனது நாட்டின் வளமை கூறப்பட்டுள்ளது. சுற்றுச்சுழலுக்கு உகந்த காட்சிக்கு சுட்டப்படுகின்றது.

மனிதன் உயிர் வாழ்வதற்கு உகந்தது தூய்மையான காற்று அவசியமான ஒன்றாக நறுமணம் வீசக்கூடிய

**“இறவுப் புறத்து அன்ன பிணர்படு தடவு முதல்**
**சுறவுக் கோட்டன்ன முள்இலைத் தாழை**
**பெருங் களிற்று மருப்பின் அன்ன அரும்பு முதிர்பு**
**நல் மான் உளையின் வேறுபடத் தோன்றி**
**விழவுக் களம் கமழும் உரவுநீச் சேர்ப்ப”**[18]

**(நற்:19:1:5)**

எனும் பாக்களின் வழியாக வெளிப்படுகின்றது. தாழை மலர்கள் நறுமணம் மிகுந்தது. இம் மலர்களில் மோதி வீசுகின்ற காற்று மிகுந்த நறுமணத்துடன் கமழ்ந்ததை கூறுகின்றது.

சுற்றுச் சூழலுக்கு ஏற்ற வகையில் சுற்றுப்புறத்திற்கு ஏறப பல்வேறு விளையாட்டுக்கள் ஆடினார்கள். கடற்கரையிலுள்ள வண்டுகள், நண்டுகளை ஒட்டி நெய்தல் நிலத்தின் மலர்களைக் கொய்து கடலாடி மகிழ்ந்தனர் என்பதை

**“நீயும், யானும் நெடுநல் பூவின்**
**நுண்தாது உறைக்கும் வண்டினம் ஒப்பி**
**ஒழி திரை விரித்த வெண் மணல் அடைகரைக்**
**கழிசூழ் கானல் ஆடியது”**[19] **(நற்:27:1:4)**

எனும் நற்றினைப் பாக்களின் வழியாக அறிய முடிகின்றது.

**முடிவுரை:**

சங்க இலக்கியத்தில் காணலாகும் சுற்றுச்சூழலின் இன்றியமையாக் கருத்துக்கள் விளக்கப்பட்டபடுகின்றன.

(☺)(☺)(☺)(☺)(☺)



# மாற்றிலக்கணக் கோட்பாடுகள்

**முனைவர் மா. சங்கீதா**
உதவி பேராசிரியர்
புனித சிலுவைக் கல்லூரி
திருச்சிராப்பள்ளி – 2
msgeethatamil@gmail.com

*****

**முன்னுரை**

மொழி என்பது மக்கள் படைத்துக் காக்கும் அரியதொரு கலை. மொழியே மக்களின் அறிவை வளர்த்து உயர்த்தும் அரிய கருவியாகும். மொழியை வளர்ப்பவரும் மக்களே: மொழியால் வளர்பவரும் மக்களே. சமுதாய வாழ்வுக்கும், வளர்ச்சிக்கும் காரணமாக இருப்பது மொழியே: சமுதாயத்தால் வளர்ந்து சமுதாயத்தை வளர்த்து வருவது மொழியேயாகும். **“மொழியை வளர்த்தது மனமே: மனத்தின் இயற்கையைக் காட்டவல்லதாக, மனத்தின் எதிரொலியாக உள்ளது மொழியேயாகும்”** மனிதத் தொடர்பில்லாமல் மொழியை ஆராய இயலாது. மனிதர் ஒவ்வொருவரின் பேச்சிலும், மனதிலும், அறிவின் ஆழத்திலும் மொழி வேர்க் கொண்டுள்ளது. அங்கிருந்தே மொழி வளர்ச்சிப் பெற்றுள்ளது. ‘இலக்கணம்’ மொழியின் அமைப்பை விவரிப்பது என்றும், ‘மொழியியல்’ மொழியின் அமைப்பை அறிவியல் நோக்கில் விளக்குவது என்றும் மொழியியலாளர்கள் குறிப்பிடுகின்றனர். ஒரு காலத்தில் ‘இலக்கணம்’ இலக்கியங்கள் உள்ள மொழிகளுக்கே எழுதப்பட்டது. ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் நாடோடி மக்களின் பேச்சு மொழிக்கும்கூட மொழியிலாளர்களால் ‘இலக்கணம்’ எழுதப்பட்டு வருகிறது. மொழியியலாளர்கள் மொழியைப் பொதுமையாக்கி, எளிமைப்படுத்தித் திட்டமிட்டு ஆய்வுகள் பல செய்து, வளர்ச்சிப் போக்கில் மொழியைப் பல்வேறு கோணத்தில் ஆராய்ந்துள்ளனர். அதில் இன்றியமையாத ஒன்றாக விளங்குவது மொழியியலாளர்களின் மாற்றிலக்கண கோட்பாடாகும். அத்தகைய மாற்றிலக்கண கோட்பாடுகள் குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

**மொழியின் பொது இலக்கணம்**

மொழிகளுக்குப் பொருத்தமானப் பொதுவான இலக்கண அமைப்பைக் காணும் முயற்சியில் இந்த நூற்றாண்டில் மொழியியல் துறையில் முன்னணியில் நிற்பவர் சாம்ஸ்கி ஆவார். அவருடைய மாற்றிலக்கணக் கோட்பாடுகளால் ஒவ்வொரு மொழிகளிடையேயும் காணும் பொதுமை இயல்புகளைக் காண இயலவில்லை. இதற்கு காரணம் அவர்கள் மொழிக் கூறுகளிலிருந்து (Components) ஒரு பொதுமையைக் காண முயன்றன. ஆனால் சாம்ஸ்கியின் கோட்பாட்டின்படி மொழியியல் வல்லுநர்களின் குறிக்கோள் இப்பொதுப் பண்பினைக் காண்பதாகவே இருந்திருக்கின்றது.

**இலக்கண மதிப்பீடு**

இலக்கணம் என்பது மொழியில் உள்ள எல்லா வாக்கியங்களையும் - ஒத்துக் கொள்ளப்பட்ட வாக்கியங்களாக அனைத்தையும் உருவாக்க வேண்டும். ஒரு மொழியைத் தாய்மொழியாக கொண்டவனுடைய உள்ளுணர்வோடு ஒத்து வருகின்ற இலக்கணத்தையே ‘மதிப்பீடு’ செய்வதற்கு

எடுத்துக் கொள்ள வேண்டும். இதனை ‘விளக்க முழுமை’ என்கின்றனர். இதற்கு அறிவியல் அணுகுமுறைக்குரிய மூன்று இயல்புகள் தேவை. 1.பரப்பு, 2. முரண்பாடின்மை, 3. சிக்கனம். ஆகியவையாகும்

**“பரப்பு என்பது காணும் தரவுகள் எவற்றையும் விட்டு விடாமல் அனைத்திற்கும் விதிகள் - விளக்கங்கள் கொடுக்கப்பட வேண்டும். இதுவே காணும் முழுமையாகும். ஆனால், இந்த விளக்கத்தில் தேவைக்கு மிகாமல் முன்னுக்கு பின் அக முரண்பாடுகள் இருத்தல் ஆகாது. தேவைக்கு மிகாமல், ஆனால் வேண்டிய அளவு சுருக்கமாக விதிகள் அமைதல் வேண்டும். இதுவே சிக்கனம் ஆகும்”** என்று குறிப்பிடுகின்றனர்.

**மொழியியலில் பொதுமை வகைகள்**

சாம்ஸ்கி மொழிப் பொதுமை இரு வகையாக இருக்க வேண்டும்.

1. பொருட் பொதுமைக் கூறுகள் (Substantive Universals),
2. அமைப்புப் பொதுமைக் கூறுகள் (Formal universals).

ஒலிப் பொதுமைக் கூறுகளிலிருந்து ஒவ்வொரு மொழியிலிருந்தும் சிற்சில கூறுகளை எடுத்துக் கொள்ளலாம். அனைத்து மொழிகளிலும் காணப்படுகிற பெயர், வினை என்ற பாகுபாடுகள் இருப்பது பொருட்பொதுமையாகும். மனிதனுடைய ஒலியுறுப்புகள் ஒன்று போல் இருப்பதால் ஒலிக்கூறுகள் மற்றும் பொதுமைக் கூறுகளை ஆராய்ந்து மொழியியலில் ஒரு பெரும் புரட்சியைச் செய்தவர் சாம்ஸ்கி எனலாம். இவர் எல்லா மொழிகளுக்கும் உள்ள பொதுவான இலக்கண அமைப்பு ஒன்றை உருவாக்கி அதன் உறுப்புகள் ஒன்றோடொன்று உறவுக் கொள்ளும் முறையினை விளக்கியுள்ளார். இப்பொதுமை அமைப்பிற்கே அவர் மாற்றிலக்கணம் **(Transformational Grammer T.G.)** என்று பெயரிட்டுள்ளார்.

**மாற்று இலக்கணத்தின் அமைப்பு முறை**

தனிவாக்கியம் ஒன்றோடொன்று இணைந்து கூட்டு மற்றும் கலப்பு வாக்கியத்தை உருவாக்குவதற்கும், அவற்றின் அமைப்பை விளக்குவதற்கும் உதவுவதுதான் மாற்றிலக்கணத் தொடரியல் (Transformal Grammer) இலக்கணமாகும். இவ்வாறு மாற்றங்கள் உருவாக்கப்படும்போது மாற்றல் விதிகள் தேவைப்படுகின்றன. மாற்றல் விதிகளில் பல்வேறு வகைகள் உள்ளன. மாற்றங்கள் ஏற்படும்போது அவற்றை விலக்குவதற்கு இருவகையான வாக்கியங்கள் எடுத்துக் கொள்ளப்படுகின்றனர். இருவேறு வகையான அமைப்புகள் இருப்பினும் தெளிவுப் படுத்தப்படுகின்றது. ஒவ்வொரு வாக்கியத்திற்கும் **புற அமைப்பு புதை அமைப்பு,** என இரண்டு வடிவங்கள் உண்டு என்பதும், புதை வடிவிலிருந்து மாற்றல் விதிகள் தோன்றுகின்றன. ஆனால் மூலப்பொருளில் மாறுதல் ஏற்படுவதில்லை என்பதும் இவ்விலக்கணத்தின் அடிப்படைக் கொள்கைகளாகும்.

**மாற்றல் இலக்கணச் சிறப்புகள்**

மாற்றிலக்கணத்தை இரண்டு நிலைகளால் அமைத்து, அவ்விரண்டு நிலைகளையும் மாற்றும் விதிகளால் தொடர்புப்படுத்தி விளக்குவது மாற்றிலக்கணம் ஆகும். ஒவ்வொரு வாக்கியத்திற்கும்

**புற வடிவம் (Surface structure)**

**புதை வடிவம் (Deep structure)**

என இரண்டு வடிவங்கள் உண்டு. அகப்படுத்தும் வாக்கியத்தினுள் அகப்படும் வாக்கியங்களை உள்ளடக்கி, அதன் வாயிலாகப் பெறப்படும்பெறப்படும் மொழியமைப்பை விளக்குவதற்குச் சில மாற்றல் விதிகள் தேவைப்படுகின்றன. இத்தகைய மாற்றல் விதிகளைப் பயன்படுத்தி அக அமைப்பிலிருந்து புற அமைப்பு பெறப்படுகிறது. இதன் வாயிலாக, கூட்டு அல்லது கலப்பு வாக்கியம் பெறப்படுகிறது. இவ்வாறு மொழி அமைப்பை விளக்கப் பயன்படும் இலக்கணமே மாற்றிலக்கணத் தொடரின் இலக்கணமாகும். சாம்ஸ்கியின் கருத்துப்படி, **'இராமன் இராவணனைக் கொன்றான்'** என்ற செய்வினை வாக்கியம், **'இராவணன் இராமனால் கொல்லப்பட்டான்'** என்னும் செயப்பாட்டு வினை வாக்கியம' இரண்டும். ஒரே புதை வடிவத்திலிருந்து பிறக்கின்றன. ஆதலால் அவை ஒரே பொருள் உடையவையாகும். புறவடிவத்தில் இவ்விரு வாக்கியங்களும் வேறுபடுவதற்குக் காரணம் ஒவ்வொன்றும் பிறப்பதற்கு வெவ்வேறு மாற்றல் விதிகள் பயன்படுவதாகும். இவ்வாறு பொருளால் ஒத்து, வடிவத்தால் வேறுபடும் வாக்கியங்களை 'மாற்றல் இலக்கணம்' எளிதில் ஒன்று படுத்திவிடுகிறது.

**மாற்றிலக்கணக் கோட்பாடு விதிகள்**

தொடரமைப்பு விதிகள் சாதாரண வாக்கியங்களை மட்டுமே விளக்குகிறது. சில வகையின் வாக்கியங்களை விளக்குவதற்குத் தொடர் அமைப்பு விதிகள் போதவில்லை. ஆகவே, இவ்வகையான வாக்கியங்களை விளக்குவதற்கு மாற்றுவிதிகள் பயன்பட்டன. இம்மாற்று விதிகள் (அ) மாற்றிலக்கண விதிகள் என்பது ஒரு தொடர் குறியீட்டை வேறு விதமான தொடர் குறியீடாக **(Phrase Marker)** மாற்றுகிறது. மாற்று விதியில் பயன்படுத்தப்படும் தொடர் குறியீடு என்பது அகத்தொடர் குறியீடு என்றும் மாற்று விதி பயன்படுத்தப்படுவதால் கிடைக்கக் கூடிய குறியீட்டிற்கு வருவிக்கப்பட்டக் குறியீடு என்றும் பெயரிட்டு அழைப்பர்.



மாற்று விதிகள் இரண்டு வகைப்படும். முதல் வகை **கட்டாய மாற்று விதிகள் (Obligatory Transformation Rules)** இரண்டாவது வகை **சிறப்பு மாற்று விதிகள் (Optional Transformation Rules)** அடிப்படை வாக்கியத்திலிருந்து தொடர்புடைய வாக்கியங்களை வருவிக்க இவ்விதிகள் கட்டாயமாகப் பயன்படுகின்றன. ஆனால் சிறப்பு மாற்று விதிகள் செயல்பட்டாலும் படலாம். செயல்படாமல் இருக்கலாம். அதனால் வாக்கியத்தின் இலக்கணத் தன்மைக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படாது. அதாவது, **தொடரமைப்பு விதிகள் (Phrase Structure Rule)** தொடர்புடைய வாக்கியங்களின் அடிப்படை வாக்கியத்தை **(Kernal Sentence)** உருவாக்கும் இவ்வடிப்படை வாக்கியத்தின் மேல் மாற்று விதிகள் (**Transformation Rules**) செயல்படுகின்றன. இவை செயல்பட்டப் பிறகு தொடர்புடைய மற்றைய வாக்கியங்கள் வருவிக்கப்படுகின்றன.

**உருபொலியனியல் விதி (Morph Phonetic Rules)** வாக்கியத்தின் ஒலிகளில் ஏற்படுகின்ற மாற்றங்களை விவரிக்கின்றன. இதைப் போன்றே வடிவால் ஒத்துப் பொருளால் வேறுபடும் வாக்கியங்களையும் "மாற்றல் இலக்கணம்" எளிதில் எளிமைப்படுத்தி விடுகிறது. **"சாப்பிட்ட மீன்" என்னும் தொடர் இருவேறு புதைவடிவங்களைக் கொண்டது. ஒரு புதைவடிவத்தில் "மீன்" எழுவாய் ஆகவும், மற்றதில் செயப்படுப் பொருளாகவும் அமையும். ஒரு வாக்கியத்தின் பொருள் பெரும்பாலும்**

**புதை வடிவத்தாலேயேப் பெறப்படுகிறது என்பது → சாம்ஸ்கியின் கொள்கையாகும்.** மாற்றல் இலக்கணத்தின் மற்றொரு சிறப்பு அதன் உயர்ந்த இலக்கு **(goal)** ஆகும். சில வாக்கியங்களின் அமைப்பை விளக்குவதே அமைப்பு முறை தொடரனியலாரின் இலக்கு என்றால், எல்லா வாக்கியங்களின் அமைப்பையும் விளக்குவது மாற்றல் இலக்கண நூலாரின் இலக்கு என்று குறிப்பிடலாம்.

ஒவ்வொரு மனிதனும் புதிதுப் புதிதாக வாக்கியங்களைப் பேசுகிறான். கேட்டிராத வாக்கியங்களை எல்லாம் கேட்டுப் புரிந்துக் கொள்கிறான். இதற்கெல்லாம் காரணம் அவனுடைய மொழியில் அவன் பெற்றிருக்கும் அறிவு திறனே ஆகும். “**ஒரு குழந்தை தன் தாய் மொழியில் மிகப் பெரிய வாக்கியங்களைப் பேசவும், புரிந்து கொள்ளவும், குறுகிய காலத்தில் கற்றுக் கொண்டு விடுகிறது. இதற்குக் காரணம் அம்மொழியின் வாக்கியமைப்புப் பற்றிய விதிகளை அது அறிந்து கொள்வதுதான் அந்த விதிகளையெல்லாம் குழந்தை பிறர் பேசும் வாக்கியங்களை ஆராய்வதனால் அறிந்து கொள்கிறதா? அல்லது இயற்கையாகவே, அது பிறக்கும் போதே பெற்ற மொழித் திறனைத் துலக்கிக் கொள்கிறதா என்பது கருத்து மாறுபாட்டிற்குரிய சிக்கலாகும் → பிறப்பில் அமைந்த அறிவுதிறனே துலங்குகிறது என்பது → சாம்ஸ்கியின் கருத்தாகும்**” அறிதிறன் என்பது ஒரு மொழியில் பிழையற்ற வாக்கியங்களைப் படைத்துக் கொள்ளவும் பிழையுடைய வாக்கியங்களைப் படைக்காமல் இருக்கவும் தேவையான விதிகளையெல்லாம் அறிந்திருப்பதாகும். சாம்ஸ்கியின் கருத்துப்படி செயல்திறன், அறிதிறன் என்ற பாகுபாட்டை வலியுறுத்தினாலும் “மாற்றல் இலக்கணம்” அறிதிறனையே வெளிப்படுத்துகிறது. சாம்ஸ்கி ஆங்கில மொழியை வைத்துக் கொண்டு தான் மாற்றல் இலக்கணக் கொள்கையை விளக்குகிறார் என்றாலும் அக்கொள்கை மனித மொழிகளுக்கெல்லாம் **(Human language)** பொது என்று மதிக்கப்படுகிறது.

**மாற்று விதிகள்**

மாற்று விதிகள் என்பது தொடரமைப்பு விதிகளால் வருவிக்கப்பட்ட அடிப்படை வாக்கியங்களில் செயல்பட்டு அந்த அடிப்படை வாக்கியத்தில் ஒரு சில மாற்றங்களை ஏற்படுத்துகிறது. ஆங்கிலத்தில் எடுத்துக்காட்டாக, “**ஒரு செயப்பாட்டு வினை வாக்கியத்தில் அடிப்படை வாக்கியமாக அமைவது NP1 – AUX – V – NP2 இவ்வமைப்பில் செயல்படும் போது அவ்வடிப்படை வாக்கியத்திலுள் S NP2 – It NP1 உள்ள இடத்திற்கும் NP1 – I NP2 உள்ள இடத்திற்கும் இடமாற்றம் செய்ய NP2 முன்னால் by என்பது இணைந்தும், செய்வினை செயப்பாட்டு வினையாகவும் மாற்றப்படுகிறது அதாவது ஒரு மொழியின் தொடரமைப்பை விளக்குவதற்குத் தொடர் அமைப்பு விதிகளும், மாற்று விதிகளும் இணைந்து செயல்பட்டு இலக்கணத்தை விளக்குகின்றன**” என்று சான்று பகர்கிறது.

**மாற்று விதிகளின் வரிசை முறை**

மாற்று விதிகளின் முக்கியத்தன்மை யாதெனில் மாற்று விதிகள் ஒவ்வொன்றும் ஒரு வரிசையில் அமைந்திருக்க வேண்டும். இல்லையெனில் வழுவான வாக்கியங்கள் தோன்றிவிடும் என்கிறார். சான்றாக, ஆங்கிலத்தில் செயப்பாட்டு வினை வாக்கியத்தைத் தோற்றுவிக்க மூன்று மாற்று விதிகள் பயன்படுகின்றன. இவற்றில் முதலில் பயன்படும் மாற்று விதி. ‘செயப்பாட்டு வாக்கிய மாற்று விதி’ **(T-**

**Passive)** ஆகும். இரண்டாவதாக அமைவது ‘ஒருமைப் பன்மை மாற்று விதி’ **(T - Number)** ஆகும். மூன்றாவதாக அமைவது, ‘ஓட்டுக்களின் மாற்று விதி’ **(T-Affix Inversion)** பயன்படுகிறது. “Kannan – C (Context) – eat – Mangoes என்ற வாக்கியத்தை வரிசைப்படி அடுக்கும் போது கீழே உள்ள வாக்கியங்கள் கிடைக்கின்றன.

**Mangoes – C – be + en – eat – by – kannan**
**Mangoes – O – be - en – eat – by – kannan**
**Mangoes – be – 0 – eat + en– by – kannan**
**Mangoes are eaten by kannan”**

செயப்பாட்டு வினை வாக்கியத்தை மாற்று விதியை ஒருமை, பன்மை விதிக்கு முன்னால் பயன்படுத்த முடியாது. ஏனெனில் அது வழுவான வாக்கியங்களை உருவாக்கிவிடும்.

**மாற்றிலக்கணப் பகுதிகள்**

சாம்ஸ்கி 1957 இல் எழுதிய மாற்றிலக்கணத்தில் மூன்று விதிகள் இருந்தன. தொடரமைப்பு விதிகள்: தொடர்புடைய வாக்கியங்களின் அடிப்படை வாக்கியத்தை உருவாக்கும் இவ்வடிப்படை வாக்கியத்தின் மேல் மாற்று விதிகள்: செயல்படுகின்றன. இவை செயல்பட்ட பின் தொடர்புடைய மற்றைய வாக்கியங்கள் வருவிக்கப்படுகின்றன. உருபொலியனியல் விதிகள் சொற்களுக்கிடையில் ஏற்படும் ஒலிகளின் மாற்றங்களை விவரிக்கின்றன.




இதுபோலவே மாற்றம் செய்த மாற்றிலக்கணத்தில் இம்மூன்று விதிகளும் இருக்கின்றன. ஆனால் வாக்கியங்களின் அமைப்பை நோக்கிய முறையில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. தொடரமைப்பு விதிகள் என்பது பல்வேறு பகுதிகளாக வாக்கியத்தைப் பிரித்துப் பின்பு அவற்றிற்கிடையே உள்ள இலக்கண உறவை விளக்குகின்றன. வாக்கியத்தின் புற அமைப்பை மட்டுமே அடிப்படையாக வைத்து இந்த இலக்கணம் தோன்றியது. மேலும் இந்த இலக்கணம் 1. தொடரியல் பகுதி, 2. ஒலியனியல் ஆகிய இரண்டு பகுதிகளை உள்ளடக்கி இருந்தது.




மாற்றிலக்கணத்தில் ஏற்பட்ட முதல் மாற்றம் வாக்கியம் இரண்டு வகையான அமைப்பினைக் கொண்டது. 1. **புற அமைப்பு 2. அக அமைப்பு** சான்றாக, 1. எடு 2. எடுங்கள் இதில் மரபு வழி இலக்கணத்தார் குறிப்பிடுகையில், நீ, நீங்கள் என்பது தோன்றா எழுவாய் என்பர். **‘கண்ணன் ராதாவைப் பார்த்தான்’**

இதில் கண்ணன் → எழுவாய். இராதா → செயப்படுபொருள் பார்த்தான் → பயனிலை. இத்தகைய இலக்கண உறவுகளை அக அமைப்பில் காட்ட வேண்டும். பொருளியல் பகுதியில் விதிகள் செயல்படுவதற்கு வேண்டிய வாக்கிய உறுப்புகள் அனைத்தும் அக அமைப்பில் இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார்.

**மாற்றும் விதிகளில் செயல்பாடு**

மாற்றிலக்கணம் என்பது எதைச் செய்யும், எதைச் செய்ய வேண்டும், எதை செய்யக் கூடாது என்பதில் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. 1965 - இல் சாம்ஸ்கி விளக்கிய மாதிரியை ஆராய்கையில், மாற்றும் விதிகள் பொருளை மாற்றாது. மாற்றக் கூடாது. ஆனால் அதிலும் சில சிக்கல்கள் இருக்கின்றன

**"Anand Pres+Perfer Large ice cream** என்பதை
**Anand Prefers large ice cream.**
**Large ice cream is preferred by Anand**
**What anand prefer's is large ice cream"**

என்று மாற்றலாம். இவ்வாக்கியங்கள் அனைத்தும் ஒரேப் பொருளை தருகின்றன. ஆனால் **"Does Anand prefers large ice cream"** என்பதை **'Large Anand Prefers Ice cream'** என்று மாற்றக்கூடாது. ஏனெனில், இது அறவே பொருளால் வேறுபடுகின்றன. பொருள் மாறுபடாத முறையில் மாற்றும் விதிகள் செயல்பட வேண்டும். அச்செயற்பாடுகளை நான்கு வகையாகக் கூறலாம்.

1. **கூறுகளை நீக்கல் - Delete – நீக்கும் விதிகள்**
2. **படி எடுத்தல் - copy படி எடுக்கும் விதிகள்**
3. **சேர்த்தல் - Add – சேர்க்கும் விதிகள்**
4. **இடத்தை மாற்றல் - Reorder - இடம் மாற்றும் விதிகள்**

தெளிவிற்காக சிலவற்றை விளக்கமாக காணலாம்.

**நீக்கும் விதிகள்**

ஆங்கிலத்தில் ஏவல் வினைக்குரிய மாற்றும் விதிகள் **(T-IMPERATIVE)** நீக்கும் விதிகளாகச் செயற்படுகின்றன. ஏவல் வாக்கியங்கள் **You, Will** இரண்டும் புதைவடிவில் இருக்கின்றன. ஆனால் புறவடிவில் அவற்றை நீக்கி விடுகின்றன. **'You will be quiet'** என்பதை **'Be quit'** – என இவ்வாறு மாற்றுகிறது. செயப்பாட்டு வினை வாக்கியங்கள் குறித்த, குறிப்பிட்ட ஒரு ஆள் அல்லது பொருளாக இல்லாது எவரையும், எதனையும் குறிப்பிடும் ஒன்றாக (Indefinite agent) இருக்கும் வாக்கியங்களில் நீக்கும் விதி இருக்க வேண்டும் .து சில இடங்களில் செயற்படுகிறது. **'Someone must help meena'** இது செயப்பாட்டுப் பொருளை மாற்றும் விதிகள் **(T.Passive)** செயற்பாட்டினால். **'Meena must be helped by someone'** இதில் Someone என்பதை வேண்டுமானால் நீக்கி விடலாம். ஏனெனில் அது குறிப்பில்லாத, பொதுவான எழுவாயாகும். அது ஒரு பொருளையோ, ஆளையோ குறிக்காமல் பொதுவாக இருக்கிறது. இதனால் கிடைக்கும் வாக்கியம் **'Meena must be helped'** இதில் பொருள் மாற்றம் எதுவும் இல்லை. எவரும் உதவலாம். ஆனால் கருத்தா என்பது குறிப்பாக (definite Agent) இருப்பின் இத்தகைய நீக்கும் விதி செயற்படாது. நீக்கினால் பொருள் மாறுபட்டுவிடும் குறிப்பிட்டவன் தான் உதவி

செய்வான் என்பது பெறப்படாது. **‘Meena must be helped by Muthu’** என்னும் வாக்கியத்தில் **by** ஆரவாரம் என்பதை நீக்க முடியாது.

**படம் எடுக்கும் விதிகள்**

படம் எடுக்கும் விதிகள் என்பது ஆங்கிலத்தில் இணை வினாவை மாற்றும் விதிகள் **(T.Tag)** படி எடுக்கும் விதிகளாகச் செயல்படுகின்றன. அடிப்படை வாக்கியத்தின் எழுவாயும் **(She)** வினைத் தொடரின் முதல் துணை வினையும் **(can)** இணை வினாவில் படி எடுக்கப்படுகின்றன. **“She can dance, can’t she?”**

**சேர்க்கும் விதிகள்**

சேர்க்கும் விதிகள் என்பது இதனையும் இணை வினா மாற்றும் விதிகளாலேயே விளக்கலாம். அடிப்படை வாக்கியத்தில் எதிர்மறை இல்லை என்றால் இணை வினாவில் **‘not’** என்ற எதிர்மறை சேர்க்கிறோம். **‘Meena has come, has not she?’** Not என்பதை n’t என வேறொரு மாற்றும் விதி மாற்றுகிறது. மற்றொரு எடுத்துக்காட்டு **There** என்பதைப் புகுத்தும் விதி (T.THERE INSERTION) ‘A duck is swimming in the pool’ என்பதை, ‘There is a duck swimming in the pool’ என மாற்றும் என்று குறிப்பிடுகிறார்.

**இடம் மாற்றும் விதிகள்**

இடம் மாற்றும் விதிகள் என்பது வினையடைய முன்னே செலுத்தம் இடங்களில் (T.ADVERB PERPOSING) இடம் மாற்றும் விதி செயற்படக் காண்கிறோம்.

**A thief stole my bicycle (on Saturday)**

**On Saturday a thief stole my bicycle.**

இடைச்சொல்லை (particle) இடம் மாற்றும் விதி (T.PARTICLE SEPARATION)

**The dog smashed (up) the dishes**

**The dog smashed the dishes up.**

T.THREE INSERTION விதி Three என்பதைச் சேர்ப்பதோடு எழுவாய், வினை இவைகளின் இடங்களையும் மாற்றுகிறது.

**A cow is on the lawn.**

**There is a cow on the lawn**

**மாற்றும் விதிகளின் வடிவம்**

இப்போது மாற்றும் விதிகள் (T.Rules) பெறும் வடிவத்தில் திருப்பி எழுதும் விதிகளைப் போல் இல்லாமல் மாற்றும் விதிகள் ஒவ்வொன்றிற்கும் இரண்டு பகுதிகள் உள்ளன.

அமைப்பின் விளக்கம் - (Structural Analysis - SA) மாற்றும்விதி செயற்படும் தொடர் அமைப்பில் மாற்றம் (Structural change) தொடரில் செய்யும் மாற்றம்

வினையடையை வாக்கியத்தின் முன்பு கொண்டு வரும் (T-Adverb preposing) விதி.

**Madavi cried suddenly**

**Suddenly Madavi cried**

மாற்றும் விதிகள் செயற்படும் தொடரில் முதலில் வினையடை இருக்கிறது. இதை உறுதி செய்ய அமைப்பின் விளக்கம் தேவை. அவ்விளக்கம் அத்தொடரில் வினையடையாக இருக்கிறது என்பதை உறுதி செய்யும். அவ்வுறுதியின் பின் எத்தகைய மாற்றம் வேண்டும் என்பது உறுதி செய்யப்படும். இம்மாற்றிலக்கணப் பகுதி வினையடைத் தொடரின் முன்பு கொண்டு வருக என கூறுகின்றது.

**(VL) T-PARTICLE SEPRATION** விதி வினையில் இருந்து அதனை அடுத்து வருகின்ற இடைச்சொல்லைப் பிரிக்கும் விதி.

**The cat ate up the fish**
**The cat ate the fish up**

அமைப்பின் விளக்கம் இதில் 'Verb – particle – NP' இருக்கிறதா என்பதை உறுதி செய்கிறது. அதுவே ate - up - the fish என்பது. இது உறுதி செய்யப்பட்ட பின்பு அமைப்பு மாற்றம் இடைச்சொல்லை NP –க்கு பின்பு கொண்டு வருகின்றது. இந்த வாக்கியத்தில் Ate – up – the fish என்பது உறுதி செய்யப்பட்ட பின்பு, up என்பதை the fish என்பதன் பின்பு கொண்டு வருகின்றன. T-PARTICLE SEPARATION குறிப்பிட்ட இடங்களில் வேண்டும் பொழுது செயற்படும். ஆனால் முழுப் பெயர்கள் வரும் பொழுது கட்டாயம் செயற்பட வேண்டும் என்ற நியதி இல்லை. ஆனால் பதிலிப் பெயர்கள் வரும் பொழுது கட்டாயம் செயற்பட கூடாது என்கின்றன.



**The cat ate up the fish**

**The cat ate the fish up** என வருகிறது.

ஆனால், **'The cat ate them up'** என்று வருமே ஒழிய **'The cat ate up them'** என வராது என்று கூறுகின்றன.

**மாற்றும் விதிகள் செயற்படும் வரன்முறை**

ஒவ்வொரு வாக்கியத்திற்கும் ஒரு மாற்றும் விதியாயினும் செயற்படுதல் வேண்டும். 'The boy past + kill the snake'

**'The boy kill + past the snake'**

மேலே உள்ள வாக்கியத்தில் வினை ஒட்டினை வினை இறுதியில் கொண்டு வரும் மாற்றும் விதி – (T.AFFIX HOPPING) ஒன்றே போதும். ஆனால் பெரும்பான்மை வாக்கியங்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட மாற்றும் விதிகள் தேவைப்படுகின்றன. **"The car will be driven by Anand won't it?"** ஒரு சில நுட்பங்களை விட்டு விட்டு இந்த வாக்கியத்தின் புதைவடிவை காண முடிகிறது. இந்தப் புதை வடிவில் **T-Tag, T-Passive** என்ற இரண்டு விதிகளும் செய்யப்பட்டால் தான் **The car will be drivern by Anand, Wont it** என்ற முன்னைய வாக்கியம் கிடைக்கின்றன.

**'Anand will drive the car, will not be?** என்பது கிடைக்கும். அதன் பிறகு,

T-TAG செயற்பட்டால்,

**The car will be driven by Anand will not be?**

என்ற வாக்கியம் கிடைக்கும். இந்த வாக்கியம் பொருந்தாது. தவறான வாக்கியம் எனவே முதலில் T-Passive என்ற விதியை செயற்படுத்தி அதன் பிறகு T-Tag விதியைச் செயற்படுத்த வேண்டும். அப்பொழுது,

Anand will drive the car T.PASSIVE → The car will be driven by Anand

**T-Tag → T.Tag** என்ற விதியைச் செயற்படுத்த வேண்டும். அப்பொழுது

**Q Anand will drive the car**

**T-Passive → The car will be driven by Anand.**

**T-Tag → The car will be driven by Anand, will not it?**

மேலும் ஒரு விதி Will not என்பதை Won't என மாற்றும். மாற்றும் விதிகளை செயற்பட வேண்டிய முறையில் கருத்து வேற்றுமைகள் பல உள்ளன. பலா் செயற்பாட்டு மாற்றும் விதி (T.PASSIVE) வேண்டுமா என்கின்றன. இதில் புதை வடிவே, புறவடிவில் காணப்படும் வடிவைப் போன்றதாகக் கருதுகின்றன. சிலா் உலக மொழிகள் அனைத்திற்கும் பொது வரன்முறை விதியைக் காண முயல்கின்றன.

**முடிவுரை**



ஒரு மொழியின் பொது இலக்கணம், பொதுமை வகைகள், இலக்கண மதிப்பீடு, மாற்றல் இலக்கண விதிகள், மாற்றிலக்கணக் கோட்பாடு விதிகள், நீக்கும் விதிகள் சேர்க்கும் விதிகள், படம் எடுக்கும் விதிகள், இடம் மாற்றும் விதிகள் மாற்றும் விதிகளின் வடிவம், மாற்றும் விதிகள் செயற்படும் வரன்முறை ஆகியவை ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்கு எவ்வாறு மாற்றப்படுகிறது என்பது இக்கட்டுரையின் வாயிலாக ஆராயப் பெற்றுள்ளது.

**துணை நின்ற நூல்கள்**

1. வரதராசன்.மு, மொழி வரலாறு, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம், லிமிடெட், சென்னை-1. பதிப்பு : 1961
2. தொடரியல், மொழியியல் முதுகலை முதலாமாண்டு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், தொலைதூரக் கல்வி இயக்ககம், அண்ணாமலை நகா். சிதம்பரம்.
3. கருணாகரன்.கி, ஜெயா.வ, மொழியியல், கவிதைப் படிப்பகம் சென்னை-1997
4. பரமசிவம்.கு, இக்கால மொழியியல் அறிமுகம், அடையாளம் 1205∴1 கருப்பூா் சாலை, புத்தாநத்தம், திருச்சி - 621310,
5. முத்துச் சண்முகன், மாற்றிலக்கணம் ஓா் அறிமுகம், பாவை பிரிண்டா்ஸ் (பி) லிமிடெட், 16(142) ஜானிகான் சாலை, இராயப்பேட்டை, சென்னை.

(☺)(☺)(☺)(☺)(☺)

# நிலையாமையும் வடக்கிருத்தல் சிந்தனையும்.

**முனைவர். அ.இலட்சுமி தத்தை**
உதவிப்பேராசிரியர்.
தமிழ்த் துறைத் தலைவர்(பொ)
புதுவைப் பல்கலைக் கழகச் சமுதாயக் கல்லூரி.
புதுச்சேரி
lakshmi.duttai@gmail.com
*****

தொகை இலக்கியங்கள் பல்வேறுபட்ட சமயச் சிந்தனைகளின் தொன்மைப் பதிவாக நமக்கு கிடைக்கின்றன. வட இந்திய மரபுகள் எனப்படும், வைதீக சிந்தனைகள் சமண பௌத்த மரபுகள், பழந்தமிழர் வழிபாட்டு மரபுகள் என பல்வேறுபட்ட சிந்தனைகளின் பலகணியாக இத்தொகை இலக்கியங்கள் திகழ்கின்றன.

திராவிடப்பழஞ்சமய தெய்வங்களான, கொற்றவை, முருகன், சூர், அணங்கு, நடுகல், ஆவி, மாயோன், சேயோன் போன்றனவும், வைதீகத் தெய்வங்களாக சிவன், திருமால் போன்றனவும், சமணச் சமயச் சிந்தனைகளாக நிலையாமை, வடக்கிருத்தல், மறுபிறவி போன்றனவும் பதிவுகளாகக் கிடைக்கின்றன.

வடக்கிருத்தல் அல்லது ஸல்லேகனை என்பது சமண சமயக் கொள்கை. உண்ணா நோன்பிருந்து உயிர்விடுதல் என்பது இதன் பொருள்.வடக்கிருத்தல் எப்பொழுது மேற்கொள்ள வேண்டும் என்று அருங்கலச்செப்பு என்ற நூல் குறிப்பிடுகின்றது.

**இடையூரின் ஒழிவில் நோய் மூப்பு இவை வந்தால்**
**கடை துறத்தல் சல்லேகனை.**(அருங்-45)

அதாவது பொறுக்க முடியாத மன வேதனையைத் தருகின்ற இடையூறு, தீராத நோய், மிகுந்த மூப்பு இவை உண்டான காலத்துச் சல்லேகனை மேற்கொண்டு உயிர் விடலாம். சல்லேகனை என்பது தமிழில் வடக்கிருத்தல் என்று கூறப்பட்டது. சமணர்கள் சல்லேகனையை மேற்கொள்ளும் சமயம் வடக்கு நோக்கி அமர்ந்து இருப்பர். காரணம் அவர்களின் கொள்கைப்படி சமணத் தீர்ந்தங்கரர்கள் வடக்குப்பகுதில் வீடுபேற்றனை அடைந்தனர். எனவே அவர்கள் சல்லேகனை மேற்கொள்ளும் போது வடக்கு நோக்கி அமர்வர்.

**தொகை நூல்களில் வடக்கிருத்தல்**

சேரமான் பெருஞ்சேரலாதனும் சோழன் கரிகாற் பெருவளத்தானும் வெண்ணிப் பறந்தலை என்னும் இடத்தில் போர் செய்தனர். அப்போரில் சேரமான் பெருஞ்சேரலாதனுக்குப் புறப்புண் ஏற்பட்டது. புறப்புண் என்பது முதுகுப்புறத்தில் புண்படுதல். வீரர்கள், போரிடும்போது தமது மார்பில் புண்பட்டால் அதைப் பெருமையாகக் கருதுவார்கள். முதுகில் புண்பட்டால் அதை அவமானமாகக் கருதுவார்கள். தற்செயலாகப் போரிலே புறப்புண் ஏற்பட்டது பெருஞ்சேரலாதனுக்கு. அதனால் பெருங்கவலையடைந்தான்; தீராத்துயரம் ஏற்பட்டது. ஆகவே, அவன் உண்ணாவிரதம் இருந்து (வடக்கிருந்து) உயிர்விட்டான். இச்செய்தியைப் புறநானூறு 65, 66 ஆம் செய்யுள்களிலும் அவற்றின் உரையிலும் அறியலாம்.

உறையூரை அரசாண்ட கோப்பெருஞ்சோழன், தன் மக்கள் அரசுரிமைக்காகக் கலகஞ்செய்ததைக் கண்டு சினங்கொண்டு அவர்கள் மேல் போர் செய்யச் சென்றான். அப்போது, புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர், அறிவில்லாத மக்கள் மேல் தந்தை போர் செய்வது தவறு என்று கூறித் தடுத்து விட்டார். ஆனால், சோழன் தன் மக்களின் செயலுக்கு வருந்தி வடக்கிருந்து (உண்ணாவிரதம் இருந்து) உயிர்விட்டான். சோழனுடைய நண்பர் பிசிராந்தையார் என்னும் புலவர் தம் நண்பராகிய சோழன் உயிர்விடுவதைக் கண்டு மனம் பொறாமல் தாமும் அவர் பக்கத்தில் அமர்ந்து வடக்கிருந்து உயிர்விட்டார். சோழனுடைய மற்றொரு நண்பரான பொத்தியார் என்பவரும் இச்செய்தியறிந்து மனம் வருந்தித் தாமும் வடக்கிருந்து உயிர்விட்டார். இச்செய்திகளைப் புறநானூறு 212 முதல் 223 வரையில் உள்ள செய்யுள்களால் அறியலாம்.

சங்கப் புலவராகிய கபிலர் என்பவரும் தமது நண்பராகிய பாரி வள்ளல் இறந்த பிறகு பட்டினிகிடந்து (வடக்கிருந்து) உயிர்விட்டார் என்று அறிகிறோம்.

**கல்வெட்டுச் செய்திகள்: விஜய மங்கலம்**

சமணர்களின் கோயிலான சந்திரப் பிரப தீர்த்தங்கரர் ஆலயத்தின் முன் மண்டபத்தின் தூண் ஒன்றில் பின்வரும் செய்தியைக் கொண்ட கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. கர்நாடக மாநிலம்,சிரவண பெல்கொலாவில் கோமடேஸ்வரர் சிலையைத் தோற்றுவித்த சாமுண்ட ராஜனுடைய தங்கை புல்லப்பை என்ற அம்மையார் நிசீதிகை செய்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. அதாவது அப்பெருமாட்டியார் இக் கோயிலில் சல்லேகனா விரதமிருந்து உயிர்விட்டார்கள் என்பதாகும்.

**திருநாதர் குன்று**

சந்திரநந்தி ஆசிரியரும், இளையபடாரர் என்பவரும் முறையே 57 நாளும் 30 நாளும் உண்ணா நோன்பிருந்தனர் என்று இங்குள்ள கல்வெட்டுச் சாசனம் கூறுகின்றது.

238 of 1904. S.I. Ep.Rep. 1937-38> P.109

இங்குக் காணப்படும் வட்டெழுத்தும் பிராமி எழுத்துச் சாசனம், கி.பி 3 அல்லது 4 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாக இருக்கலாம் என பதிவாகியுள்ளது.

**நிலையாமைச் சிந்தனை**

வாழ்க்கை மீதான நிலையாமை சிந்தனைகளைப் பல நிலைகளில் தொகை நூல்களில் உணர முடிகின்றது. அவைதீக மதங்கள் நிலையாமைக்குக் கூடுதல் சிறப்பினைத் தந்து விளக்குகின்றன. சங்க காலத்துப் பொதுவான வாழ்க்கைப் போக்கோடு நிலையாமையை உடன் வைத்து நோக்கும் போது, நிலையாமை அவ்வாழ்க்கைப் போக்கின் ஒரு கூறாகவே அமைந்திருத்தல் தெளிவாகத் தெரிகின்றது. நிலையாமை பற்றிய வெவ்வேறு விளக்கங்கள் தமிழ் நாட்டுக்கு வெளியிலிருந்து வந்திருக்கலாம். ஆனால், சங்க இலக்கியங்கள் தோன்றிய காலத்திலேயே நிலையாமை தமிழிலக்கியத்தில் இடம்பெறத் தொடங்கிவிட்டது. தமிழ் மக்கள் சிலரின் சிந்தனையிலாவது நிலயாமைக் கருத்து இடம் பெறத் தொடங்கிவிட்டது என்பது தெளிவாகிறது. நிலையாமையை வற்புறுத்திய இந்தியச் சமயங்கள் நிலையில்லாத வாழ்க்கையிலிருந்து உலகிலிருந்து விடுபடுவதே வாழ்க்கையின் இலட்சியம் எனப் போதித்தன. நிலையாமைக் கருத்தை ஓரளவு வற்புறுத்திய வைதிக சமயத்தினர் வேள்வி முதலியன

செய்வதால் நிலையில்லாத வாழ்விலும் நிலைபேற்றை அடையலாம் என்ற கொள்கை உடையவராயிருந்தனர். நிலையாமையைப் பெரிய அளவில் வற்புறுத்திய சமணரும் பௌத்தரும் அறத்தைப் போதித்து அதிலும் சிறப்பாகத் துறவறத்தைப் பிரசாரஞ் செய்துள்ளானர்.

1. சங்க காலப் புலவர்கள் கொடையை வற்புறுத்துவதற்கு நிலையாமைக் கருத்தைக் கைக்கொண்டனர் (புறம்.,27,189,359,360,361,364)

2. மன்னனுடைய கொடையை உலகம் புகழ்ந்து கூற அவன் வாழ வேண்டும் என்று கூறினர் ஒரு புலவர் (புறம்., 24)

3. வளர்பிறையும் தேய்பிறையும் மாறி மாறி வருவது, வாழ்க்கை நிலையாமையை எடுத்துக் காட்டுவதால், வருத்தி வருபவருக்கு ஈயவேண்டும்; புலவரார் பாடப்படும் புகழுடையோரே விண்ணுலகம் செல்வர் என்பது புலவர் ஒருவர் கூற்று. (புறம்., 27)

4. நாடகமேடையிலே தோன்றிப் பலரும் பலவாறு நடித்த பின் வேடத்தைக் களைவது போல, உலக வாழ்க்கையும் நிலையற்றதாதலால், மன்னனும் படைவீரரும் கொடையில் வல்லவராக வாழ வேண்டும். (புறம்., 29)

5. பொருளை அனுபவிக்க வேண்டும் என்று நினைத்துச் சேமித்து வைத்தால், அதனை அனுபவிக்க முடியாமலும் போகக் கூடுமாதலால், செல்வத்தின் பயன் கொடையே. (புறம்.,189)

6. ஈமப் புறங்காட்டை விவரித்து வாழ்க்கை நிலையாமையை வற்புறுத்தி இரலவருக்குக் கொடை வழங்குவது மூலமாகப் பெருமையும் பயனும் பெறுமாறு செல்வரை அறிவுறுத்திய செய்யுட்கள் சில. (புறம்., 359,360,364).

இளமை நிலையாமையும், யாக்கை நிலையாமையும் சமணத்தின் தலையாயக் கோட்பாடுகளுள் ஒன்று. பொருள்வயிற் பிரியும் கலித்தொகை (11) தலைவன் இதனை மறைமுகமாகக் கூறிச் செல்கின்றான்.

**“அரிதாய அறன் எய்திய அருளியோர்க்கு அளித்தலும்”**

என்ற பாடலில் பிறர்க்கு ஈந்து தாழும், இன்பம் துய்க்கும் கடப்பாடு போற்றப்படுகிறது. இன்ப அளவிலேயே தங்கிவிடாமல் இளமை முதலியன நிலையாது ஒழிதலையும் மூப்பும் கூற்றும் வந்துறுதலையும் உணர்ந்து உயர்நிலை உலகமாம் பேரின்பப் பெருவாழ்வையும் அடைய விழைகின்றனர்.

கலித்தொகை (12) பாடல் குறிக்கும் “மாற்றும் கை கொண்ட வழியாவது நன்மக்கள் கொண்டொழுகு செந்நெறியாகும், நன்றி மறவாமை, பெரியோரைப் பேணல், கள், காமம், துறத்தல், பொய் கூறாமை பிறர்க்கு அல்ல புரியாமை” ஆகியவற்றை மேற்கொண்டு ஒழுகினர்.

புறப்பாடல்கள் கொல்லாமையையும் உணர்த்தி நிற்கின்றன. “நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும் அல்லது செய்தல் ஓம்புமின்” (புறம்., 195) என்பதும் உண்பது நாழி உடுப்பவை இரண்டே எனற நிலையாமையையும் உணர்த்தி நிற்கின்றன.

நிலையாமையும் வடக்கிருத்தலும் வைதீக மரபிற்கு மாறாக அவைதீகக் கொள்கைகளாகத் தமிழிலக்கியப் பரப்பில் கோலோச்சின. இத்தத்துவங்கள் இலக்கியங்களின் மூலம் மக்களின் வாழ்வியலுக்குள் கொண்டுசெல்லப்பட்டது.

**குறிப்பு நூல்கள்:**

1. மயிலை.சீனி.வேங்கடசாமி. சமணமும் தமிழும். வர்தமான் பதிப்பகம். சென்னை.

(☺)(☺)(☺)(☺)(☺)



# தமிழ்மொழி கற்றலில் அகராதியின் பயன்பாடு

**முனைவர் மா மணிமேகலை**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை,
சீதாலெட்சுமி இராமசுவாமி கல்லூரி, திருச்சி-2.
arulkavimani2012@gmail.com

*****

**முன்னுரை**

ஒரு மொழியைக் கற்பதற்கும் கற்பிப்பதற்கும் துணையாக அமைவன கருவி நூல்களாகும். "இலக்கியம் கண்டு இலக்கணம் இயம்பல்" என்றும் பாடல்வரி இலக்கியத்திலிருந்து இலக்கணம் முகிழ்ந்தது என்பதை உணர்த்துகிறது. இலக்கியம் கற்பதற்கும் இலக்கணமும் இலக்கணம் கற்பதற்கு இலக்கியமும் துணை நிற்கின்றன. இவை இரண்டும் வகுப்பறைச் சூழலை அடிப்படையாகக் கொண்டன. நோக்கு நூல்கள் மேற்கண்டவற்றைப் போல் இல்லாமல் வெளிச்சூழல் அல்லது புறக்சூழலை மையமாகக் கொண்டன. அகராதி, சொல்லடைவு, தொடரடைவு, பொருளடைவு, சொற்களஞ்சியம் போன்ற அடங்குகின்றன. அகராதி இலக்கணத்தின் பின்னிணைப்பு (Index of Grammer) எனக்கூறப் பெறுவதுண்டு. இலக்கண வரையறைக்கு உட்படாத பல செய்திகளைச் சுட்டுவதாக அகராதி அமைவதால் இங்ஙனம் கூறப்பெறுவதுண்டு. இக்கட்டுரையில் தமிழ்மொழி கற்றலில் அகராதியின் பயன்பாடு குறித்து ஆராயப்படுகிறது.

**இலக்கணங்களும் அகராதிகளும்**

மரபு இலக்கணங்களில் மொழிக்கற்றல் எனும் நிலையில் சொற்பொருளையும் கற்கவேண்டும் என்ற நோக்கம் நிலவிவந்துள்ளது. தமிழின் முதல் இலக்கணமான தொல்காப்பியம் முதல் இருபதாம் நூற்றாண்டு பிற்கால இலக்கணங்கள் வரை இம்மரபைக் காண இயலுகின்றது. தொல்காப்பியத்தின் உரியியல், இடையியல், மரபியல் என்பன சொற்களுக்கான விளக்கங்களை வழங்கும் பகுதிகளாக விளங்குகின்றன. தொல்காப்பிய உரியியல் இன்றைய அகராதி அமைப்பை ஓரளவு ஒத்துள்ளது. உரியியலில் 120 கடினச் சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது என்பதால் இவ்வியலை ஒரு சிறப்பகராதி எனக் கருதலாம். இடையியலில் கட்டுரை வடிவங்களான (band forms) இலக்கணச் சொற்களின் பொருள் விளக்கமும் மரபியலில் பயன்பாட்டு வரையறையுடைய சொற்களின் பொருளும் தரப்பெற்றுள்ளன. மொழியமைப்பை விளக்கும் இலக்கணத்துடன் மொழியமைப்பை மற்றும் வரையறை குறித்த பல அகராதியில் செய்திகளையும் தொல்காப்பியத்தில் காணமுடிகின்றது. தொல்காப்பியத்தை அடியொற்றி எழுந்த பிற இலக்கணங்களும் உரியியல் எனும் பகுதியை இலக்கணமாகச் சோ:ந்துள்ளன. இது அகராதியின் இன்றியமையாமையை உணர்த்துவதாக அமைகின்றது.

இலக்கணமும் அகராதியும் ஒன்றை ஒன்று சாா;ந்து செயல்படினும், அமைப்பு மற்றும் பயன்பாட்டு அடிப்படையில் அவற்றிற்கிடையே பெரும் வேறுபாடு உண்டு.

இலக்கணம் வரையறுக்கப் பெற்ற அமைப்பைக் கொண்டது. விதிமுறைகளுக்குட்பட்டது. எளிதில் மாறும் தன்மை அற்றது. மூடிய அமைப்பைக் கொண்டது. விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டது. மொழிப்பொறுமை நோக்குடையது மொழித்திறனை வளர்க்க வல்லது.

அகராதி விரிவான அமைப்பை;பெற்றது. விதிமுறைகளுக்கு உட்படாத சொற்தொகுதிகளை உள்ளடக்கியது. திறந்த அமைப்பைக் கொண்டது. மிக எளிதில் மாறும் தன்மை பெற்றது. மொழிச் சிறப்புடையது. மொழிப்பயன்பாட்டை வளர்க்க வல்லது.

இலக்கண விதிகளின் மூலம் மொழியைப் பிழையின்றி எழுதவும் பேசவும் இயலும் எனினும் அகராதியின் பயன்பாட்டின் மூலமே மொழியியல் புதிய படைப்புகளைத் தர இயலும்.

**அகராதிகளில் கற்றல் கூறுகள்**

சொற்களின் பயன்பாட்டையும் அவற்றின் பொருளையும் விளக்கங்களையும் பதிவு செய்வனவாக அகராதிகள் அமைகின்றன. அகராதியில் இரண்டு பகுதிகள் உண்டு. அவை 1.தலைச்சொல்பகுதி, 2. பொருள் பகுதி என்பனவாகும். சொற்களின் ஒலிப்பு, ஒலியன் வடிவு, சொல்வடிவு, சொல்பகுப்பு, இலக்கணம் என்பவற்றைச் சுட்டுவனவாக முதல் பகுதி அமைகின்றது. மொழியின் எழுத்தியல் மற்றும் சொல்லியல் செய்திகள் முதல் பகுதியில் அமைகின்றன. சொல்லின் பொருள், பயன்பாடு, பயன்பாட்டு வரையறை சொல் சார்ந்த சமுதாயம், சூழல் போன்றவற்றைப் பதிவு செய்து வழங்குவது இரண்டாம் பகுதியாகும். இவ்விரண்டு பகுதிகளும் மொழியைக் கற்றலிலும் கற்பிப்பதிலும் பெரும்பங்காற்றுகின்றன.

**பொருள் பகுதியும் கற்றல் கூறுகளும்**



ஓா் அகராதியின் பொருள் பகுதியில் தலைச்சொற்கள் பொருள், விளக்கம், மேற்கொள், எடுத்துக்காட்டு, சொற்பிறப்பு, குறுக்குநோக்கீடு, குறிப்பான், குறிப்பு விளக்கம் என்பன அமைகின்றன. தலைச்சொல்லின் பல பொருள்களையும் (Polysemy) ஒருபொருட் பன்மொழிகளையும் (Synonymy) அகராதியின் உதவியால் கண்டறிய இயலும்.

மொழிக்கல்வியில் இலக்கிய இலக்கணங்களைப் போன்றே அகராதிகளும் அடிப்படை நூல்களாக விளங்குகின்றன. வளமான மொழியிலுள்ள சொற்களைப் பாதுகாத்து வைப்பதில் அகராதிகள் சிறப்பிடம் பெறுகின்றன. மொழிப் பயன்பாட்டில் சொற்பொருள் விளக்க நிலையில் அனைவருக்கும் பொதுவான தெளிவினை வழங்குவதில் அகராதிகள் சிறந்த கருவி நூல்களாகத் திகழ்கின்றன. சுமாா் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு, தொழில்நுட்ப வசதிகள் இல்லாத அந்தக் காலக்கட்டத்தில் தமிழகத்தில் தோன்றிய இருமொழி அகராதிகளின் வளா்ச்சிக்குப் பெரும் பங்காற்றியவா்கள் ஐரோப்பியா்களேயாவா்.

**கற்றல் கூறுகளின் அறிமுகம்**

ஐரோப்பியா் தொகுத்தளித்த அகராதிகளில் கற்றல் கூறுகள் மிகுந்துள்ளன. இதற்குக் காரணம் தமிழ்மொழியைக் கற்பதில் சிக்கல் தோன்றும் இடங்களை அவா்கள் கண்டு உணா்ந்ததாகும். ஆவா்கள் இலக்கணத்தை எளிமைப்படுத்தவும் சொற்றொகுதியை விரிவுப்படுத்தவும் பல அறிய முயற்சிகளை மேற்கொண்டனா்.

ஒரு சொல்லின் அடிச்சொல்லிருந்து தோற்றம் பெறும் சொற்களைக் கண்டறியக் கூட்டுச்சொற்கள், தொடா்களைத் துணைப்பதிவாய் அமைத்தனா். சொற்கள் எத்துறையைச் சாா்ந்தன என்பதைக் குறிக்க குறிப்பான்களைக் கையாண்டனா். இலக்கண நிலையைத் தெளிவுப்படுத்த இலக்கண குறிப்பான்களையும்

நிலைக் குறிப்பான்களையும் அறிமுகம் செய்தனர். சொல்லின் சரியான பயன்பாட்டை புரிந்துக் கொள்வதற்காக எடுத்துக்காட்டுகளை அறிமுகப்படுத்தினர். சொல் குறித்து மேலும் விளக்கத்திற்கு விளக்கக் குறிப்பான்களைக் கையாண்டுள்ளனர்.

தமிழர்களால் தொகுக்கப்பெற்ற தமிழ் பேரகராதி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, க்ரியா போன்ற அகராதிகளில் சில உத்திகள். நெறிமுறைகள் அறிமுகப்படுத்தப் பெற்றிருப்பினும் அவற்றிற்கு அடித்தளமாக ஐரோப்பியர் தொகுத்த அகராதிகள் விளங்குகின்றன.

**அகராதி விளக்கம்**

அகராதி என்பது 'அகரம்' என்ற சொல்லும் 'ஆதி' என்ற சொல்லும் சேர்ந்த ஒரு தொகைச் சொல்லாகும். இன்றைக்கு அகராதி. அகரவரிசை, அகரமுதலி, பேரகராதி என்று குறிக்கப்படும் நூற்களுக்கு ஏறத்தாழ இணையாக நிகண்டு கூட்டம், உரிச்சொல் பனுவல் போன்ற சொற்களும் வழக்கில் இருந்துள்ளன.

**உலகில் வெளியான முதல் தமிழகராதி**

கி.பி.1594-ஆம் ஆண்டு சிதம்பர, சிரேவண சித்தர் என்னும் புலவர் 'அகராதி நிகண்டு' என்னும் பெயரில் தமிழ் அகராதியை உலகிற்கு வழங்கியுள்ளார். அதன் பின் கி.பி.1612-ஆம் ஆண்டு இத்தாலி மொழியில் முதன்முதலாக அகரவரிசையில் அகராதி தோன்றியது எனக் குறிப்பிடப்பெறுகிறது.



**'அ' கரத்தின் சிறப்பு**

> **'அகரமுதல எழுத்து எல்லாம் ஆதி**
> **பகவன் முதற்றே உலகு'**

உலகிலுள்ள எழுத்துக்களெல்லாம் (ஆதி) அகரத்தை முதலாக உடையன. எழுத்து - தொழிற்பெயர். நாதத்தினின்று ஒலியாகவும் வளியாகவும் எழுவது. முகிழ்ப்பது ஆகுப்பெயர். வடிவம் இருவகை. அவை ஒலிவடிவம் வரிவடிவம் என்பன. ஒலி வடிவம் கண்ணுக்குப் புலனாகாதது. வரிவடிவில் கண்ணுக்குப் புலனாவது. வரி வடிவம் வேறுபடினும் ஒலிவடிவம் அனைத்து மொழியில் இருப்பது சிறப்பு.

எல்லா எழுத்துக்களும் பேச்சு ஒலியில் உரசும் நிலையில் உள்ளன. அகரமானது எந்தத்துணையுமின்றி (வாய் திறக்கும்போது) பிறக்கும் சற்று எதையும் உரசாமல் தன்னிச்சையாக செயல்படும் எழுத்தாகும். இதனை,

'அ ஆ ஆயிரண் டங்காந் தியலும்' - (தொல். எழுத்து : 85) எனக் குறிப்பிடுகின்றது.

அகரம் அங்காத்தலை உடையது: அதாவது, தோற்றத்துக்கு நிலைக்களனாக இருக்கின்றது.
அகரம் அங்காத்தலை உடையது: அதாவது, தோற்றத்துக்கு நிலைக்களனாக இருக்கின்றது.
ஆதி அகரம் இயல்பாயுள்ளது. விகாரமற்றது: நாதமாத்திரையாய்த் திகழ்வது ஒலிவடிவம், வரிவடிவம் என்னும் இரண்டையும் கலந்தது. எழுத்துக்களுக்கெல்லாம் தாயகம். ஆதி அகரத்தின்றும் அகர இசை எழுகிறது. அகர ஓசையாகியும் மற்ற எழுத்துக்களுக்கு எல்லாமாகியும், அவற்றை இயக்குவதாகியும் விளங்கும் பண்பு வாய்ந்தது. திருமந்திரத்தில்,

> **அகாரம் உயிரென் றறையனு மாமே** - (திருமந்திரம்: 975)

**அகார முதலாய் அனைத்துமாய் நிற்கும்** - (திருமந்திரம்: 1753)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

'அ' என்கிற எழுத்து வேறு எழுத்துக்களின் உதவியில்லாமல் உச்சரிக்கப்படும். 'அ' எழுத்தை உச்சரிக்க அவகாசம் இல்லாமற் போனால் வேறு எந்த எழுத்தையும் உச்சரிக்க முடியாது.

ஐரோப்பியர்கள் தமிழை முழுமையாகவும் தெளிவாகவும் கற்றுக்கொள்ள பல்வேறு நூல்களை வெளியிட்டுள்ளனர். பெப்ரிஷீயஸ் 'மலபார் இலக்கணம்' என்ற பெயரில் ஓர் இலக்கண நூலை எழுதியுள்ளார். இது ஆங்கிலத்தில் எழுதப்பட்ட தமிழுக்கான சுருக்க இலக்கண நூலாகும். வீரமாமுனிவர் தமிழில் விரிவான இரண்டு இலக்கண நூல்களை எழுதியுள்ளார். பேச்சுத்தமிழைப் புரிந்துக்கொள்ள 'கொடுந்தமிழ் இலக்கணத்தையும், எழுத்துத் தமிழைக் கற்றுக்கொள்ள செந்தமிழ் இலக்கணத்தையும் படைத்துள்ளார். ஜி.யு.போப் தஞ்சாவூரில் இருந்த போது மூன்று இலக்கண நூல்களைத் தமிழில் எழுதியுள்ளார். தமிழ்மொழியைக் கற்றுக்கொள்வதற்குத் துணைசெய்யும் வகையில் 'தமிழ் கைநூல்' என்ற ஒன்றை ஜி.யு.போப் வெளியிட்டுள்ளார். ஐரோப்பியர்களின் இலக்கண பணியை விட அகராதிப் பணி சமுதாயம் மற்றும் பண்பாட்டு சார்புடையதாய் அமைந்திருக்கின்றது.

**முடிவுரை**

அகராதிகள் மூலம் மொழியமைப்பு சார்ந்த பல இலக்கண விதிகளையும் சொல்லமைப்பு முறைகளையும், சொல்லின் மொழியமைப்பு நிலையிலான செயல்பாடுகளையும் பல நிலைகளில் கற்றுக் கொள்ளமுடியும் மொழியியல் சார்ந்த செய்திகளையும், மொழியியல் அல்லாத சமுதாயப் பயன்பாடு சார்ந்த கூறுகளையும் அகராதிகள் மூலம் தெரிந்து கொள்ள முடியும். எனவே தான், அகராதி இலக்கணத்தின் பின்னிணைப்பு ஆகுகின்றது.

(☺)(☺)(☺)(☺)(☺)

# ஐங்குறுநூற்றில் உவம உருபுகள்

**முனைவர் சே கரும்பாயிரம்**
இளநிலை ஆராய்ச்சி அலுவலர்
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
சென்னை
sethu.karumbayiram@gmail.com

*****

தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் ஏழாவது இயலாக உவமவியலை அமைத்துள்ளார். அவர் இவ்வியலுக்கு முன் அகத்திணையியலில் உவமத்துடன் தொடர்புடைய உள்ளுறை உவமத்தைப் பற்றிக் கூறியுள்ளார். அதன் தொடர்ச்சியாக இவ்வியலில் உவமம் பற்றிய பல செய்திகளை விரிவாக எடுத்துரைத்துள்ளார். அவற்றில் உவம உருபுகளும் அடங்கும். அத்தகைய உவம உருபுகளைப் பற்றி ஐங்குறுநூறு கூறியுள்ளதன்வழி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**உவமம்**

உவமம் என்னும் சொல்லுக்கு **“ஒன்றோடு ஒன்றை ஒப்புறுத்தல்”** (8:265) எனத் திவாகர நிகண்டும் **“ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல்”** (தொல்.பொருள்.276) எனப் பேராசிரியர் உரையும் குறிப்பிடுகின்றன. அதாவது சொல்ல வந்த பொருள் எளிதில் புரிந்துகொள்ளுவதற்கு மற்றொரு பொருளைக் கொண்டு ஒப்புமைப்படுத்துவது உவமம் எனலாம். ஆகையால் உவமம் தோன்றுவதற்குப் பொருள் அடிப்படையாகும். அந்தப் பொருளை உவமேயம் என்றும் உவமேயத்தை விளக்க வருவதை உபமானம் என்றும் பின்னர் வந்த இலக்கண நூலார் கூறியுள்ளனர். உவமத்திற்கு உவமை என்ற வேறு பெயரும் உண்டு. அது தற்காலத்திய பெருவழக்காய் உள்ளது.

தொல்காப்பியர் உவமத்தின் வகைகளை வினை, பயன், மெய் (வடிவம்), உரு (நிறம்) என நால்வகையாக வரையறுத்துள்ளார். வினை உவமம் என்பது செயலையும் பயன் உவமம் என்பது செயலினால் வரும் பயனையும் மெய் உவமம் என்பது வடிவத்தையும் உரு உவமம் என்பது நிறத்தையும் வெளிப்படுத்தும்.

வினை உவமம் செயல் பற்றி வந்துள்ளதை, **“அணிமயி லன்ன வசைநடைக் கொடிச்சி”** (ஐங்.258:2) என்னும் பாடலடியில் மயில் அசைந்து நடக்கும் செயல் குறிஞ்சி நிலத் தலைவியாகிய கொடிச்சிக்கு உவமையாகக் கூறுவதன்மூலம் அறியலாம்.

பயன் உவமம் குறித்து, **“தொண்டி யன்ன பணைத்தோள்”** (ஐங்.171:3) என்னும் பாடலடி தொண்டி நகரம் போல் அழகிய தோள்களை உடையவள் தலைவி என்கிறது. இங்குப் பல்வகையான வளங்களைக் கொண்டுள்ள தொண்டி நகரம் மக்களுக்கு இன்பத்தை வழங்குகிறது. அதுபோலவே தலைவியும் தலைவனுக்கு இன்பத்தைத் தருகிறாள். இந்த உவமையின்வழி இன்பமாகிய பயன் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

மெய் உவமம் வடிவங் குறித்துத் தோன்றுவதை, **“அம்பணத் தன்ன யாமை”** (ஐங்.43:1) என்று கூறுவதன்மூலம் அம்பணத்தின் வடிவம் ஆமைக்கு உவமை ஆகுவதைக் காணலாம். அம்பணம் என்பது மரக்காலைக் குறிக்கும். அது நான்கு படி அளவு கொண்ட ஒரு முகத்தலளவை. அதன் அடிப்பகுதி ஆமையின் மேற்பகுதி வளைந்து இருப்பது போல இருக்கும். அத்தகைய மரக்கால் கவிழ்ந்து இருந்தால் ஆமையின் வடிவத்தைக் காணமுடியும்.

உரு (நிறம்) உவமம் குறித்து, **“ஞாழற் பூவி னன்ன, சுணங்கு”** (ஐங்.149:1,2) என்று பாடலடி குறிப்பிடுகிறது. இங்கு ஞாழல் பூவின் நிறம்போலத் தேமல் உள்ளது எனக் கூறுமிடத்து நிற உவமம் வெளிப்படுவதை நோக்கலாம். ஞாழல் பூ என்பது புலிநகக் கொன்றை மலரினைக் குறிக்கும். இதன் பூ பொன்னிறத்தில் இருக்கும். ஆகையால் அப்பூ மஞ்சள் நிறம் கொண்டது என அறியலாம். இதன்மூலம் தேமல் அந்நிறத்தில் இருக்கும் என்பது தெரியவருகிறது.

மேற்கூறிய நான்கு உவமமும் தனித்தனியாகத் தோன்றுவது மட்டுமின்றி, சேர்ந்து வரும் என்றும் கூறுகிறது தொல்காப்பியம் (பொருள்.273). ஐங்குறுநூற்றில் நிறம், வடிவம் ஆகிய இரு உவமங்களும் ஓர் உவம உருபில் இடம்பெற்றுள்ளது. இதனை, **“பொங்குளை யன்ன, வடைகரை வேழம் வெண்பூ”** (ஐங்.13:1,2) என்று கூறுவதன்மூலம் வேழத்தின் வெண்பூவிற்கு உவமமாகச் சாமரை வருவதில் அதன் வெண்மை நிறமும் வடிவமும் வெளிப்படுவதைக் காணலாம். சாமரை என்பது வெண்ணிற மயிரியினைக் கொண்ட தலைப்பகுதியும் நீண்ட கைப்பிடிப் போலக் காம்பினையும் கொண்டதாகும். இது குதிரையின் தலையில் அணியக் கூடியதாகும்.



**உவம உருபு**

உவமமானது உருபு இல்லாமலும் உருபுடனும் என இருவகையாக வரும். உருபு இல்லாமல் வருவது சுட்டிக்கூறா உவமமாகும். இதில் உவம உருபு தொக்கி நிற்கும். சான்றாக **எரிப்பூ** (ஐங்.368:1:1), **பொன்யிணர்** (ஐங்.396:1:3) ஆகியவற்றில் முறையே போல், போன்ற உவம உருபுகள் தொக்கி நிற்பதைக் காணமுடிகிறது. அதுவே உருபுடன் வரும்போது சுட்டிக் கூறும் உவமமாகிறது. அதாவது பொருளையும் உவமத்தையும் ஒப்புமைப்படுத்துவதற்கு இடையில் சொல் நிற்கும். அத்தகைய சொல்தான் உவம உருபு எனப்படுகிறது. சான்றாக, **‘மள்ள ரன்ன மரவம்’** (ஐங்.400:1), **‘நின்னே போல மாமருண்டு நோக்க’** (ஐங்.492:3) என்னும் பாடலடிகளில் உவமத்துக்கும் பொருளுக்கும் இடையே அன்ன, போல என வரும் உவம உருபுகளைக் கூறலாம். இந்த உவம உருபுகள் தனித்திருந்து பொருள் தராது. அது உவமத்துக்கும் பொருளுக்குமிடையே வரும்போது மட்டும்தான் வினை, பயன், வடிவு, நிறம் ஆகியவை குறித்துப் குறிப்பால் பொருள் உணர்த்தும். ஆதலால் இதனை இடைச்சொல் என்று குறித்தார் தொல்காப்பியர்.

தொல்காப்பியர் உருபுகள் எத்தனை வகை என்பதையும் அவை எவ்வாறு தோன்றும் என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளார். அவர் முதலில் அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப முதலான உவம உருபுகளைத் தொகுத்துக் கூறி, பின்னர் வினை, பயன், வடிவு, நிறம் என நான்கு வகையான உவமங்களில் ஒரு உவமத்திற்கு எட்டு உவம உருபுகளென முறையே முப்பத்திரண்டு உவம உருபுகளை

வகுத்துரைத்துள்ளார். அதனால் ஒரு உவமத்திற்கு வரும் உவம உருபு மற்றொரு உவமத்திற்கு வராது என்பது தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. தொல்காப்பியர் குறிப்பிட்ட சில உவமங்களுக்குப் பின்னாளில் வேறு உருபுகள் பயின்று வருவதற்கு மொழியின் வளர்ச்சி நிலையையே காரணமாகக் கருதலாம்.

தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள அன்ன, என்ன, உறழ, வெல்ல, கடுப்ப, மருள, புரைய, நிகர்ப்ப, போல முதலான உவம உருபுகளும் அவர் நூற்பாவில் குறிப்பிடாத அமர், அனைய, இன், ஏர், என, கொள்ள முதலான உவம உருபுகளும் ஐங்குறுநூற்றில் இடம்பெற்றுள்ளன.

**அன்ன**

தொல்காப்பியர் அன்ன என்னும் சொல் வினை உவமத்திற்கு உருபாக வரும் என்பதை முதலில் கூறி, பின்னர் அது பிற உவமங்களுக்கும் உருபாக வரும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். **"அன்னஎன் கிளவி பிறவொடுஞ் சிவணும்"** (தொல்.பொருள்.284) என்பது நூற்பா.

வினை உவம உருபாக அன்ன என்னும் சொல் வந்துள்ளதை, **"மள்ள ரன்ன தடங்கோட் டெருமை"** (ஐங்.94:1) என்னும் பாடலடி வீரனைப் போன்று வலிமை பொருந்தியது எருமைக் கிடா என்று குறிப்பிடுகிறது. இங்கு வீரரின் செயல் எருமைக் கிடாவிற்கு உவமையாக வந்து வினை உவமம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

அன்ன என்னும் சொல், **"காவிரி மலிர்நிறை யன்னநின், மார்புநனி விலக்கல்"** (ஐங்.42:3,4) என்னும் பாடலடிகளில் வந்துள்ளது. அப்பாடலடிகள் பெருகிவரும் காவிரி ஆற்றுப் புது நீரில் பலரும் மூழ்கி மகிழ்வதைப் போலத் தலைவனின் மார்பில் பலரும் தழுவி மகிழ்வர் எனப் பொருள் உணர்த்துவதன்மூலம் செயலினால் வரும் பயன் குறித்த உவமத்து அன்ன உருபு தோன்றியுள்ளதை அறியமுடிகிறது.

வடிவ உவமம் குறித்த அன்ன என்னும் சொல் உருபாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை, **"காம்புகண் டன்ன தூம்புடை வேழம்"** (ஐங்.20:3) என்கிறது பாடலடி. இங்கு மூங்கிலைப் போன்ற உள்துளையுடையது வேழம் என்று கூறுமிடத்து வடிவ உவமம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. வேழம் என்பது நாணலைக் குறிப்பதாகும். இதன் வேறுபெயரான கொறுக்கையாகும்.

நிற உவமம் குறித்து, **"கட்டளை யன்ன கேழல்"** (ஐங்.263:2) என்னும் பாடலடியில் கட்டளை கல் போல் கருநிறமுடைய பன்றி என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு அன்ன என்னும் சொல் நிற உவமத்தில் உருபாக வந்துள்ளமையை அறியமுடிகிறது.

**என்ன**

என்ன என்னும் சொல் வினாப் பொருளைத் தரும். இது வினை உவம உருபாகவும் வரும் என்பதைத் தொல்காப்பியம் கூறியுள்ளது. ஆனால் ஐங்குறுநூற்றில் இவ்வுருபு நிற உவமமாக வந்துள்ளதை,

**“அடர்பொன் னென்னச் சுடரிதழ்”** (ஐங்.430:2) என்னும் பாடலடியில் பொன்னின் தகடு போன்ற நிறமுடைய மலர் என்று கூறுவதன் மூலம் அறியலாம்.

**உறழ**

இது உறழ்தல் என்னும் வினையைக் குறிக்கும். ஐங்குறுநூற்றில் உறழ் என நிறத்திற்கு உவம உருபாக வந்துள்ளது. இதனை, **“செயலைத் துப்புற ழொண்டளிர்”** (ஐங்.273:1) என்னும் பாடலடியில் செயலை மரத்தின் துப்புப் போன்ற நிறமுடைய மலர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. செயலை என்பது அசோக மரத்தையும் துப்பு என்பது பவழ நிறத்தையும் குறிப்பதாகும்.

**வெல்ல**

வெல்ல என்னும் சொல் வெல்லுதல் என்னும் வினையைக் குறிப்பதாகும். இது உவம உருபாக வரும்போது வென்ற எனவும் வரும். இது ஐங்குறுநூற்றில் நிற உவம உருபாக வந்துள்ளதை, **“வேங்கை வென்ற சுணங்கு”** (ஐங்.324:4,5) என்னும் பாடலடியில் வேங்கை பூவின் நிறம் ஒத்த சுணங்கு என்று கூறியுள்ளது. சுணங்கு என்பது தேமலைக் குறிக்கும்.

**கடுப்ப**



கடுப்ப என்னும் சொல் வடிவ உவமத்துக்கு உருபாக வருமென்று தொல்காப்பியர் (பொருள்.286) குறிப்பிடுவார். ஐங்குறுநூற்றில் நாரையின் இறகு மகளிருடைய கூந்தலுக்கு வடிவ உவமமாக வருமிடத்து இவ்வுருபு வந்திருக்கின்றது. அதாவது நாரை இனங்கள் இறகைக் கோதி இருத்தலைப் போல மகளிர்கள் நீர் வடியும் கூந்தலைக் கோதுவர் என்பதை, **“நாரை நல்லினங் கடுப்ப மகளிர், நீர்வார் கூந்தல்”** (ஐங்.186:1,2) என்று கூறுவதன்மூலம் அறியலாம்.

**மருள**

இது மருளுதல் என்னும் வினைச்சொல்லைக் குறிக்கும். இதைத் தொல்காப்பியர் வடிவ உவமத்துக்கு உருபாகவும் வரும் என்பார். இது மருள் என ஐங்குறுநூற்றில் வந்துள்ளதை, **“வேய்மருள் பணைதோள்”** (ஐங்.318:1) என்று கூறுவதன்மூலம் அறியலாம். அதாவது மூங்கிலை ஒத்த திரண்ட தோள் என்பது அதன் பொருளாகும். மூங்கில் மரம் பெண்ணின் தோளுக்கு உவமமாகக் கூறுமிடத்து வடிவ உவமம் வெளிப்படுவதை அறியமுடிகிறது. இது வடிவ உவமத்தில் வருவது மட்டுமல்லாது நிறவுவமத்திலும் வந்துள்ளதை ஐங்குறுநூறு கூறியுள்ளது. இதனை, **“எரிமருள் வேங்கை”** (ஐங்.294:1) என்னும் பாடலடியில் நெருப்பினைப் போன்று ஒளியுடைய வேங்கைப் பூக்கள் என்று கூறுவதன்மூலம் அறியலாம். வேங்கைப் பூ மஞ்சள் நிறமுடையதாகும். இதை இலக்கியங்கள் பொன்னிறம் என்று குறிப்பிடும்.

**புரைய**

புரைய என்பது புரை என்றும் வழங்கப்படுகிறது. இது வடிவ உவம உருபாக வருமெனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். இதனை, **“வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்”** (ஐங்.255:2) என்னும் பாடலடியில் தெய்வப் பெண்டிரை ஒத்த மென்மை உடையவள் தலைவி என்று கூறுவதன்மூலம் புரை என்னும் சொல் வடிவ உவமத்திற்கு உருபாக வருவதை அறியலாம். இது நிற உவமத்திற்கும் உருபாக வந்துள்ளது.

இதனை, **"பூப்புரை யுண்கண்"** (ஐங்.376) என்னும் பாடலடியில் மை தீட்டிய கண்களுக்கு நிற உவமமாகக் குவளைப் பூ கூறப்பட்டுள்ளதன்மூலம் நோக்கமுடிகிறது.

**நிகர்ப்ப**

நிகர்ப்ப என்பது நிகர்க்கும் எனவும் வரும். இது வடிவ உவமத்திற்கு உருபாகும் எனத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இதனை, **"பல்லிதழ் நீலமொடு நெய்த னிகர்க்கும்"** (ஐங்.2:4) என்று கூறும் பாடலடியில் நீலம், நெய்தல் ஆகிய இரண்டும் மலரைக் குறித்து வடிவ உவமம் பெறுவதை அறியலாம். நீலம் என்பது கருங்குவளைப் பூவையும் நெய்தல் என்பது வெள்ளாம்பல் பூவையும் குறிப்பதாகும்.

**போல**

போல என்னும் உவம உருபு போல், போலும், போன்று எனவும் வரும். இது நிற உவமத்திற்கு உருபாக வரும் என்பதைத் தொல்காப்பியம் சுட்டியுள்ளது. புலவர்கள் கண்களுக்கு நிற உவமமாகப் பூக்களைக் கூறுவார்கள். இதனை, **"பூப்போ லுண்கண்"** (ஐங்.16:4) என்னும் பாடலடியில் தாமரை போன்ற கண் என்று கூறுவதன்மூலம் அறியலாம். மேலும் வினை, பயன், வடிவம் ஆகிய உவமங்களுக்கும் போல என்னும் சொல் உருபாக வந்துள்ளதை ஐங்குறுநூற்றில் காணமுடிகிறது.

வினை உவமம் குறித்து, **"நின்னே போல மாமருண்டு நோக்க"** (ஐங்.492:3) என்கிறது பாடலடி. இங்குப் பெண்ணானவள் மருண்டு நோக்கும் செயலானது மானின் மருண்டு நோக்குவதோடு உவமம் ஆக்கப்பட்டுள்ளதில் போல உருபாக வந்துள்ளதை அறியமுடிகிறது.

பயன் உவமத்திற்குப் போல உருபாக வருவதை, **"கயம் போலப், பலர்படிந் துண்ணுநின் பரத்தை மார்பே"** (ஐங்.84:4,5) என்று கூறுகிறது பாடலடிகள். இங்குக் கயத்தில் பலரும் நீராடி இன்புறுவது போலத் தலைவனுடைய மார்பில் பெண்டிர் பலரும் அணைந்து இன்புறுவர் என்று கூறுவதில் பயன் உவமம் வெளிப்படுவதைக் காணலாம்.

மயிலின் தோகையைப் பார்ப்பதற்கு நீண்டு அழகாக இருக்கும். அதன் தோகையைப் பெண்களின் கூந்தலுக்கு உவமையாகக் கூறியுள்ளதை, **"கொடிச்சி கூந்தல் போலத் தோகை"** (ஐங்.300:1) என்னும் பாடலடி உணர்த்துகிறது. இங்குப் போல என்பது வடிவ உவமம் குறித்து உருபாக வந்துள்ளமையை நோக்கமுடிகிறது.

**இன்**

இன் என்னும் சொல்லுக்கு **"ஐந்தனுருபு, ஏழனுருபு, இறந்தகாலவிடைநிலை, சாரியை"** என்று தமிழ்ப் பேரகராதி (368) பொருள்களைத் தருகிறது. இது உவம உருபெனப் பேராசிரியரால் சுட்டப்பட்டுள்ளது. ஐங்குறுநூற்றில் நாணல் கரும்பு போலப் பூக்கும் என்று கூறியுள்ளதை, **"வேழங் கரும்பிற் பூக்கும்"** (ஐங்.12:1) என்பதன் மூலம் அறியலாம். நாணல் கரும்புக்கு உவமையாக வடிவமும் நிறமும் வந்தவிடத்து இன் என்னும் உவம உருபு கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

**அனைய**

அனைய என்னும் உவம உருபு உரையாசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது. இது ஐங்குறுநூற்றில் **“அருந்ததி யனைய கற்பின்”** (ஐங்.442:4) என்று கூறுகிறது பாடலடி. இங்கு அருந்ததி போலக் கற்புடையவளாகத் தலைவி இருக்கிறாள் என்று உணர்த்துவதன்மூலம் அறியலாம். கற்புடைய பெண்களுக்கு உவமையாக அருந்ததியைக் கூறுவது மரபாகும்.

**ஏர்**

ஏர் என்னும் சொல்லானது கலப்பை என்னும் பெயர்ச் சொல்லாகவும் ஏர்தல் வினைச் சொல்லாகவும் குறிப்பால் பொருள் உணர்த்தும் இடைச்சொல்லாகவும் வரும். இது உவம உருபாக வருவதை இளம்பூரணர் சுட்டியுள்ளார். ஐங்குறுநூற்றில் நிறம் குறித்த உவமைக்கு உருபாக முத்துப் போன்ற பல்லும், பொன் போன்ற மேனியும் வந்துள்ளது. இதனை, **“முத்தேர் வெண்பல்”** (ஐங்.380:2), **“பொன்னேர் மேனி”** (ஐங்.388:4) என்னும் பாடலடிகள்மூலம் அறியலாம்.

**அமர**

இது அமர்தல் என்னும் வினைச்சொல்லைக் குறிக்கும். இச்சொல் உவம உருபாகும் என்பதைத் தண்டியலங்காரம், மாறனலங்காரம் முதலான இலக்கணங்கள் கூறியுள்ளன. ஐங்குறுநூற்றில் குவளையின் மலர் போலக் கண்கள் இருந்ததை, **“குவளையி னமர்த்த கண்ணே”** (ஐங்.277:5) என்று கூறுவதன்மூலம் அறியலாம். இங்கு அனைய என்னும் சொல் நிற உவமத்திற்கு உருபாக வந்துள்ளதைக் காணமுடிகிறது.

**என**

என என்னும் சொல் குறிப்பால் பொருள் உணர்த்தும் இடைச்சொல்லாக வரும். இது உவம உருபாகவும் வரும். இதனை **“கயலெனக் கருதிய வுண்கண்”** (ஐங்.36:4) என்று பாடலடி குறிப்பிடுகிறது. இங்கு கண்களுக்கு உவமையாகக் கயல்மீன் வந்தவிடத்து என என்னும் சொல் உருவ உவமத்திற்கு உருபாக வந்துள்ளதை அறியமுடிகிறது.

**கொள்ள**

இது கொள்ளுதல் என்னும் வினைச்சொல்லைக் குறிப்பதாகும். இது தொல்காப்பியர் குறிப்பிடாத உவம உருபுகளுள் இதுவும் ஒன்று. கொள்ள என்னும் உருபு வருவதை, **“பகல்கொள் விளக்கு”** (ஐங்.56:1) என்று பாடலடி கூறியுள்ளது. இங்குப் பகல் போன்று ஒலிதரும் விளக்கு எனப் பொருள் உணர்த்துவதன் மூலம் அறியலாம்.

**முடிவுரை**

பொருளை விளங்கிக் கொள்வதற்கு ஒப்புமையாக உவமம் வந்துள்ளதை அறியமுடிகிறது. வினை, பயன், மெய், உரு என உவமங்கள் தோன்றுவதை ஐங்குறுநூற்றின்வழி விளக்கப்பட்டுள்ளது. அன்ன, ஆங்க, என்ன முதலான ஐங்குறுநூற்றில் கூறிய உவம உருபுகளைச் சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளன. தொல்காப்பியர் கூறிய உவம உருபுகளில் சில தோன்றுமிடம் ஐங்குறுநூற்றில் வேறுபட்டுள்ளதைக்

காணமுடிகிறது. தொல்காப்பியர் குறிப்பிடாத உவம உருபுகளும் ஐங்குறுநூற்றில் இடம்பெறுவதை நோக்கமுடிகிறது.

**துணை நின்ற நூல்கள்:**

1. ஐங்குறுநூறு மூலமும் உரையும், (பதி.) தி. சதாசிவ ஐயர், ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம், யாழ்ப்பாணம், 1943.
2. ஐங்குறுநூறு, (உரை.) பொ.வே. சோமசுந்தரனார், கழக வெளிய(ஐங்.56:1)ீடு, சென்னை, 1961.
3. தொல்காப்பியம் (உரைவளம்), பொருளதிகாரம், உவமவியல், (தொகு.) ஆ. சிவலிங்கனார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2015-16.
4. சேந்தன் திவாகரம் - பிங்கலம் - சூடாமணி, சாந்தி சாதனா வெளியிடு, சென்னை, 2004.
5. தமிழ்ப் பேரகராதி, தொகுதி - 1, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

(☺)(☺)(☺)(☺)(☺)



## சாதிய அதிகாரப் புத்துயிர்ப்பும் விளிம்புநிலை எழுத்தியலின் கலக அரசியலும் - *செம்புலம்* புதினத்தை முன்வைத்து

**முனைவர் ஜோ செ கார்த்திகேயன்**
உதவிப்பேராசிரியர்
பூ. சா. கோ. கலை அறிவியல் கல்லூரி
jskarthikeyank@gmail.com

*****

திராவிட மொழிக்குடும்பத்தின் தாயாக இருக்கக்கூடிய தமிழ்மொழி, நீண்ட நெடிய இலக்கியப் பாரம்பரியத்தையும் வளத்தையும் கொண்டது. இந்த இலக்கிய வளத்தில் விளிம்புநிலை மக்கள் குறித்த பதிவுகள் அல்லது விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் முறைகள் சங்க காலம் தொட்டே படைப்பாளர்களால் பதிவுசெய்யப்பட்டுள்ளமையைக் காணமுடிகிறது. என்றாலும் அவை ஒரு தனித்த அடையாள இயக்கங்களாகவோ அடையாள அரசியல் செயல்பாடுகளாகவோ இருந்து செயல்பட்டவை அல்ல. ஆனால், இன்றைய விளிம்புநிலை இலக்கியங்கள் தனித்த அடையாள இலக்கியங்களாக இருந்து செயல்பட்டு வருவதை சமூகத்தை உற்றுநோக்கும் எவரும் அறிந்துகொள்ள முடியும். அத்தகைய அடையாள இயக்கச் செயல்பாடுகளில் மார்க்சியம், தலித்தியம், பெண்ணியம், அரவாணியியம் உள்ளிட்ட இயக்கங்கள் குறிப்பிடத்தக்கன. இத்தகைய இலக்கியங்களில் ஒருவித பிரச்சாரத்தன்மை இருப்பதனையும் அவதானிக்கமுடியும்.

இவற்றில், தலித்தியம் என்ற அடையாள இயக்கத்தின் அரசியல் செயல்பாடுகள் இன்றைக்கு மற்றவற்றைக் காட்டிலும் முதன்மைபெற்று வருவதனைக் காணமுடியும். சமய அரசு நிறுவனங்களின் ஆதிக்கக் கரங்களில் அகப்பட்டு எல்லா நிலைகளிலும் தொடர்ந்து அகப்பட்டுக்கொண்டும் சுரண்டப்பட்டுக்கொண்டும் இருக்கக்கூடிய தலித் மக்களின் குரல்கள் இன்றைக்கு அதிகாரத்திற்கு எதிராக ஒலிக்கத் தொடங்கியிருக்கிறது. இந்த அதிகாரத்திற்கு எதிராக உண்மையைப் பேசக்கூடிய விடுதலையை முன்னிறுத்திய கலக அரசியல் செயல்பாடுகள் இந்தியச் சமூகத்தைப் பொருத்தமட்டில் சாதி ஆதிக்கம், ஐரோப்பியக் காலனியாதிக்கம் என்ற இரட்டை அதிகார மையங்களுக்கு எதிரான நிலைபாடுகளில் செயல்பட்டு வருவதனை அறியமுடிகிறது. ஆக, விளிம்புநிலை இலக்கியங்களில் ஒரு பகுதி அதீத ஒடுக்குமுறைக் கருவியான சாதி அதிகாரத்திற்கு எதிரான குரலை உயர்த்துதல் என்ற புள்ளியில் ஒட்டுமொத்த இந்தியச் சமூகத்தின் இலக்கியங்களோடு ஒத்திசைவு கொள்கின்றன.

சாதி என்னும் கருத்தியல் வலையில் பின்னப்பட்டு சிறைபட்டுக் கிடக்கும் இந்திய நிலப்பரப்பில் சாதி x சாதி மீறல் என்ற எதிரீடுகள் தொடர்ந்து இயக்கம் பெற்றே வந்துள்ளதையும், இன்றைக்கும் அது தன்னியல்பு குன்றாமல் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதனையும் காணமுடிகிறது. அதன் ஒரு பகுதியாக, உலகமயமாக்கச்சூழலில் உருக்கொண்ட நகர்மயமாகப்பட்ட கிராமங்களும், கிராமங்களிலிருந்து வெளியேறுவதற்கான சூழல்களும் கிராம நிலவுடைமைச் சமூகப் பரம்பரை.ஃ.குலத்தொழில்களின் மீதான புறந்தள்ளல்களும் சாதி என்ற கருத்தியல் வலையை நைந்துபோகச் செய்து அது வரையறுத்துக் கொடுத்த அகமணமுறையை புறந்தள்ளி புறமணமுறையான சாதிமறுப்புக் காதல்களும் திருமணங்களும் பரவலாக உருக்கொள்ளத் துணிந்துள்ளது. என்றாலும் இதனை ஏற்காத சாதிய மனம் கொண்ட முதலாளிகள் மற்றும் எஞ்சி நிலைத்துள்ள சாதியாதிக்க

உடல்களும் இன்றைக்கு புறமணமுறைகளுக்கு ஏதிராக கொலைமணமும் குணமும் கொண்டவர்களாக உருப்பெற்று சாதி ஆணவக் கொலைகளை உதிர்த்து வரும் இன்றைய ஆரியப் பார்ப்பனக் கலாச்சாரக் காலனியச் சூழலில் இரா. முருகவேளின் ***'செம்புலம்'*** புதினம், ஐரோப்பியப் பின்னைக் காலனியத்தை தனக்கான தற்காப்புக் கேடயமாக முன்னிறுத்திக்கொண்டு இயக்கம் பெரும் சாதியத்தின் பாங்கை வெளிச்சப்படுத்த முனைந்திருப்பதாக தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது.

**கதைக்கட்டுமானம்**

புதினம், நிலவுடைமைச் சமூகத்தின் குணங்கள் அத்தனையும் பரிபூரணமாக அமையப் பெற்ற கிராமம் - அங்கு இந்தியச் சமூக அமைப்பிற்கே உரிய தனிப்பெருமை கொண்டதான அமைப்பாக அறியப்படுத்தும் வகையிலான ஒதுக்கிவைக்கப்பட்ட தலித் மக்கள் வாழ்வு - அவர்கள் மீது நிகழ்த்தப்படும் சாதியவான்களின் ஆதிக்க நடத்தைகள் - அதனை ஏற்கும் கலகத்தை மௌனமொழிவழி வெளிப்படுத்தி வாழும் தலித்மக்கள் - அங்கு உருப்பெறும் சாதி எதிர்ப்பு/மறுப்பு, கலகக்காரன் - அவனை கட்டங்கட்டும் ஆதிக்கச்சமூகம் - அவனை அழித்தொழித்து தன் அதிகாரத்தை நிலைநிறுத்திக்கொள்ளுதல் - என்ற வரிசைக் கிரமமான கதை சொல்லல் முறைமையை (நேர்கோட்டுக் கதை சொல்லும் முறையை) சிறிது அசைத்துப் பார்த்திருக்கிறது. புதினத்தின் முதன்மைக் கதாப்பாத்திரமாக இயக்கம்பெறும் பாஸ்கர் என்ற தலித் சாதியினனின் கொலைக்கான காரணத்தைத் தேடும் புலனாய்வில் தொடங்குகிறது. கொலை செய்தது யார்? எதற்காகக் கொலை செய்தார்கள் என்பதான கேள்விகளை முன்னிறுத்திய காவல்துறையினரின் தேடலில் துவங்கி நகர்கிறது. கதை நிகழ்வுகள் நிகழ்காலத்திலும் இறந்தகாலத்திலுமாக (நனவோடை நிலை) மாறி மாறி வெட்டி ஒட்டப்பட்டிருப்பினும் கதையைப் புரிந்துகொள்வதில் ஒருவித நேர்கோட்டுத்தன்மை இருப்பதனை வாசகன் அறிந்துகொள்ள முடியும்.

***செம்புலம்*** புதினம் அடிப்படையில் இரண்டு தத்துவார்த்தங்களைத் தனக்கான வாதப்பொருண்மையாகக் கொண்டு இயங்குகிறது. ஒன்று தலித்தியம். மற்றொன்று, மார்க்சியம். அதாவது, சாதியும் வர்க்கமும் ஆகிய இரு சிக்கல்களை இரு தத்துவங்களின் பின்னனியில் தீர்வு நோக்கிய நகர்வை எட்டிப்பிடிக்கப் போராடும் தன்மையில் புனைவாக்குகிறது எனப் புரிந்துகொள்ளலாம். மற்றமையை மையப்படுத்தும் இந்த இரு தத்துவங்களுமே இணைந்து மையத்தை நோக்கிய கலகக் குரல்களை எழுப்பவேண்டும் என்ற சிந்தனைப்போக்கு வளர்ந்துவரும் இன்றைய சூழலில் சாதி என்ற மையத்திற்கெதிரான கலகத்தை சமகாலப் பொருத்தப்பாட்டோடு முன்வைக்கிறது இப்புதினம். சாதியும் வர்க்கமும் வேறுவேறான கருத்தியல் அதிகார வடிவங்களாக இருந்தாலும் இவ்விரண்டும் இன்றைக்கு ஓரதிகாரமாக வலுப்பெற்று விளிம்புநிலை மக்களின் மீது தனது நீடித்த ஏகாதிபத்திய அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொண்டுள்ளது.

வாசகர்களுக்குப் போதிய எதிர்பார்ப்பு உணர்வுகளைத் தூண்டி வாசிப்பைத் துரிதப்படுத்தும் பாங்கில் புனையப்பட்டுள்ளது. நான்கு அத்தியாயங்களாக தன்னை பாகுபடுத்தி இயக்கம்பெறும் புனைவின் ஒவ்வொரு அத்தியாயத்தின் தொடக்கத்திலும் சொல்லப்படும் புறநிலைக் கதைகள், நிகழ்த்துக் கலைகளின் குறிப்புப்பொருள் கதையின் மொத்த சாரத்தையும் குறிப்பால் உணர்த்தும் கோமாளி/கட்டியங்கரானின் தன்மையை ஒத்ததாக இருப்பதனை உணரமுடியும். கதைசொல்லி வெகுசில இடங்களிலேயே பாத்திரங்களை அவர்களின் இயல்பான புழங்குவெளியில் இயக்கம் பெறச் செய்துள்ளார். மற்றபடி எல்லா பாத்திரங்களின் நடத்தைகளும் கதை சொல்லியால் தீர்மானிக்கப்பட்டு,

தான் எடுத்துக்கொண்ட பொருண்மைக்கு ஏற்றபடி மட்டுமே விவரிக்கப்பட்டுள்ளது. கொலைக்கான காரணங்கள் மீதான காவல்துறையினரின் நனவு நிலை புலனாய்வுப் பகுதியாகத் தொடங்கும் கதை அடுத்தடுத்த உத்தியடிப்படையிலான தன்மையில் விரிவுபெறுகிறது.

சாதி ஆணவக் கொலைகளுக்குக் காதல் மட்டுமே காரணம் இல்லை ‘உயர்சாதி’ என்ற மனோபாவத்தால் உண்டாக்கிக் கொள்கிற கௌரவம் என்ற தூய்மைவாதக் கருத்தியலும் காரணம் என்பதனை படைப்பாளி வேறுபடுத்திக் காட்ட முனைகிறார். என்றாலும் இவற்றிக்கு (சாதி மரபு x மரபு மீறல்) அடிப்படைக் காரணமாக இனத்தூய்மை வாதம் இருப்பதனை உணரலாம். அதாவது சாதிய மரபு மீறும் ஆதிக்க சாதியோடு அடிமைச்சாதியும் தண்டிக்கப்படுகின்றனர். அது இருபுறமும் பய உணர்வை உண்டாக்க வேண்டி நிகழ்த்தப்படுகிறது. என்றாலும் வேறுபாடு உண்டு. ஆதிக்க சாதியினனின் சாதி மீறலுக்குக் கொடுக்கப்படும் தண்டனை இனத்தூய்மை மீது படிந்த கலங்கத்தை தூய்மைப்படுத்தும் படியும் கூடவே பயத்தை உண்டுபண்ணும் படியும் நிகழ்த்தப்படுவது. மாறாக தாழ்த்தப்பட்ட சாதியினருக்கான தண்டனை என்பது பய உணர்வை தூண்டிவிட்டு ஒட்டுமொத்த தலித் மக்களையும் பதற்ற நிலைக்கு உந்தித்தள்ளுவதை மட்டுமே நோக்கமாக் கொண்டு நிகழ்த்தப்படுவது. அப்படிப்பட்ட கொலையாகத்தான் பாஸ்கரின் கொலையும் நிகழ்ந்து விடுகிறது.

ஆணவக் கொலை என்றாலே காதல் சார்ந்தது என்னும் ஊடகங்களின் பொதுப்புத்தி உருவாக்கத்தின் மீது வெளிச்சம் பரப்பும் இப்புதினம், அதன் நவகாலனிய வெளியை காட்சிகளாக நகர்த்துகிறது. பாஸ்கருக்கும் - அமுதாவுக்குமிடையிலான காதலால்தான் கொலை நிகழ்த்தப்பட்டுள்ளது என்று காவல்துறை முடிவு செய்து கொள்வது அத்தகைய ஊடகப் பொதுப்புத்தி உருவாக்கத்தின் மறுஉருவாக்கமாக / ஒரு பகுதியாகவே உணரச்செய்கிறது. காவல்துறையிலுள்ள பாலு என்ற கான்ஸ்டபிளின் மொட்டை மெயில் அந்த வழக்கிற்கு மற்றுமொரு கதவைத் திறந்து உண்மையறியும் குழுவால் சோதனை செய்யப்படுகிறது. அந்தக் குழுதான் பாஸ்கர் கொலைக்கு காதலும் சாதியும் மட்டுமல்ல வர்க்க முரண்பாடும் காரணம் என்பதைப் புலனாய்வு செய்து கண்டறிகிறது.

கிராமங்களில் ஆதிக்க சாதி, தாழ்த்தப்பட்ட சாதியை சுரண்டிக் கொண்டிருந்தது. இந்நிலை இன்றைக்கு, சம சாதிக்காரனை அதே சாதிக்காரன் சுரண்டுவதை, அப்படி சுரண்டப்படுவதற்கு தாழ்த்தப்பட்ட சாதிக்காரன்தான் காரணம் என்று அந்த இடைநிலைக் சாதியினன் புரிந்து கொண்டு அவனை மேலும் ஒடுக்குவதன் மூலம் தனது கோபத்திற்கு வடிகாலாக்கிக் கொள்வதனையும் அக்குழு வாசகர்களுக்கு கவனப்படுத்துகிறது.

பிரதி ஒட்டுமொத்தமாக, இன்றைய சூழலில் சாதி ஒழிப்பு என்பது தலித் அமைப்புகளின் சாதி எதிர்ப்புகளால் மட்டும் அது சாத்தியமாகாது என்பதனையும் அது தன்னை புறனமைப்புச் செய்துகொண்டு வர்க்கமுலாம் பூசப்பெற்று கார்ப்பரேட்டுகளாகவும் வணிக நிறுவனங்களாகவும் வளர்ந்து நிற்கிற காரணத்தால் கம்யூனிச வழியில்தான் சாதியற்ற வாக்கபேதமற்ற சமூக சமத்துவத்தை நிறுவமுடியும் என்பதனை முன்வைப்பதாகப் புரிந்து கொள்ளலாம். அல்லது தலித்தியமும் மார்க்சியமும் இணைந்து சாதிக்கெதிரான கலகத்தையும் போராட்டத்தையும் முன்வைத்தால் மட்டுமே சாதியை அழித்தொழிக்க முடியும் என்பதான புரிதலை முன்வைப்பதாகவும் புரிந்துகொள்ளலாம். பிரதி இயல்பாகவே ரங்கநாயகம்மாளின் ‘***புத்தர் போதாது அம்பேத்கர் போதாது, மார்க்ஸ் அவசியத்தேவை***’ என்ற

ரங்கநாயகம்மாவின் நூலுக்கான விமர்சனத்தைத் தாங்கித்தான் பயணிக்கிறது என்பதை வாசகர்கள் எளிதில் உணர்ந்துவிட முடியும்.

வர்க்க பேதமற்ற, சமூகச் சமநிலைக்கான போராளியாக அடையாளப்படுத்தப்படும் 'பாஸ்கர்' கொலை செய்யப்படுவதான புனைவு, ஏமாற்றத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. இத்தன்மை கலகக்காரர்கள் கொல்லப்படுவார்கள் என்ற ஆண்டாண்டு காலமாக சொல்லப்பட்டுவந்த அதே கதை சொல்லல் முறையின் இன்னொரு வடிவமாகவே இருக்கிறது. இத்தகைய முடிவுகள் தலித்துகள் போராடினால் அனாதைப் பிணங்களாக கொள்ளப்படுவது உறுதி என்ற பொதுப்புத்தியை உருவாக்கும் எண்ணம் கொண்டது என்பதனை உணரலாம். பாஸ்கருக்குப் பிறகு அவரது நண்பர்கள் அவன் பணியைத் தொடர்கின்றனர் என்றாலும் அச்சுறுத்தலோடு / அச்சத்தோடு ஒருவகையில் இத்தகைய புனைவாக்கங்கள் கூட ஆணவக் கொலைகளின் மையம் கொண்டிருக்கிற பய உணர்வைத் தூண்டுதல் என்ற ஆதிக்க மரபைக் கருத்தியல் ரீதியாக வாசகர்களின் மனங்களில் உருவாக்கக் கூடிய அபாயம் நிறைந்ததுதான. தலித் மனதில் பய உணர்வை உற்பத்தி செய்யும் அதேசமயம் ஆதிக்கத்தை எச்சரித்து கூர்மைபெறச் செய்யும் வழிகாட்டியாகவும் இத்தகைய படைப்பாக்கங்கள் புரிந்துகொள்ளக்கூடும்.

ஒருவேளை, இதுதானே சமூகத்தில் நடக்கிறது. அதைத்தானே பிரதி யதார்த்தமாகப் பதிவு செய்துள்ளது என்று வரிந்து கட்டினோமானாலும் இழப்பு நம்முடையதுதான். ஏனெனின், எதார்த்தத்தை நடப்பியலை சொல்வதற்குத்தான் வானொலி, தொலைக்காட்சி, செய்தித்தாள்கள், சமூகவலைத்தளங்கள் என எண்ணற்ற RPI தொங்கிகள் இருக்கின்றனவே. அதையே ஏன் சமூகத்தின் மீது அக்கறை கொண்ட, அதை அசைத்துப்பார்க்க விரும்பும் படைப்பாளியும் செய்ய வேண்டும்? புனைவில்கூட மாற்றத்தைச் கொண்டுவராத இத்தகையைப் படைப்புகள் சமூகத்தின் எத்தகைய மாற்றத்தைக் செய்துகாட்ட சாத்தியப்படுத்தப் போகின்றன.

"உலகமயமாக்கல் என்பது காலனிய அடிமை நாட்டு மக்களின் மீது தொடுக்கப்பட்ட மாபெரும் சம்மட்டி அடி" என்று வரையறுப்பார் சரண்குமார் லிம்பாலே. அத்தகைய சம்மட்டியடியாக உருவாக்கம்பெற்ற ஆதிக்க சுரண்டல் மையங்களின் வலைப்பின்னல்களாக உருப்பெற்ற கம்பெனிகளில் நிகழ்த்தப்படும் உழைப்புச் சுரண்டல்களை பிரதி உருவகப்படுத்துகிறது.

சாதி, ஆவணக் கொலைகளைப் பற்றிய இதுவரைக்குமான கதை சொல்லல் முறைகள் ஆதிக்கச் சாதியினரின் பார்வையிலும் தலித் படைப்பாளர்களின் தலித்திய உணர்வோடும் பெரும்பாலும் படைப்பாக்கம் பெற்றுள்ளதை மறுப்பதற்கில்லை. அத்தகையைப் படைப்பாக்கங்கள் எல்லாமே 'காதல்' என்ற ஒன்றினடிப்படையில் சாதி மீறல்களாகவும், சாதியை உடைக்கும் போர்க்குணங்களின் ஒன்றாகவும் வைத்தே படைப்பாக்கம் பெற்றுள்ளன. 1) சோ. தர்மனின் ***'கூகை'*** புதினத்தில் சீனிச்சாமியின் மகன் ஆதிக்கச் சாதியினனின் மகளோடு காதல் கொண்டதால் இருவரும் கொல்லப்பட்டதாக பதிவு பெறுவது 2) சூர்யகாந்தனின் ***'விதைச்சோளம்'*** புதினத்தில் நாச்சியப்பன் என்ற மாதாரி சமூகத்தைச் சேர்ந்த தலித் லட்சுமி என்ற நாயக்கர் சமூகத்தைச் சேர்ந்த பெண்ணோடு காதல் கொண்டு கர்ப்பம் தரித்ததால் பெற்றோரால் நாச்சியப்பன் கொள்ளப்பட்டதுமான இலக்கியத் தரவுகளும் உடுமலை சங்கர் - கௌசல்யா என்ற தலித் சாதிமறுப்புத் திருமணத்தால் கொல்லப்பட்டதுமான சமூக நடப்பியில் தரவுகளும் இங்கு எண்ணத்தக்கது. அதாவது இவையெல்லாமே சாதி மீறலால் ஏற்பட்ட கௌரவக் குறைபாட்டை

சமன்செய்து கொள்ளும் ஆதிக்கச் சாதியினரின் நடத்தைகளை மட்டுமே கவனங்கொண்டு நிகழ்த்தப்பட்டன. இவைகள் தான் திரும்பத்திரும்பத் கதைகளாக சொல்லப்பட்டு அதன் வேறு பரிணாமம் கவனங்கொள்ளாமல் புறந்தள்ளப்படுகின்றன. இந்த வழக்கமான கதை சொல்லல் முறையிலிருந்து அதன் நவபரிமாணத்தை படைப்பாளி காட்டமுயல்வது சிறப்பு.

அடையாள இயக்கங்களின் செயல்பாடுகள் தீவிரம் பெற்றுவரும் இன்றைய பின்காலனியச் சூழலில், சாதிய, முதலாளிய வடிவங்கள் ஒன்றை ஒன்று அனுசரித்து இயக்கம்பெறுவதனால் அவற்றை தலித்திய, மார்க்சிய இணைவுக் கருத்தியலின் வழிதான் எதிர்க்கமுடியும் என்பதனையும் தற்காலத்தில் அத்தகைய சிந்தனைத் தெளிவு தேவை என்பதையும் படைப்பாளர் முன்வைப்பதான புரிதலை பிரதி கொடுக்கிறது.

மூன்றாம் உலக நாடுகளின் அதிகாரத்திற்கு எதிரான அடையாள அரசியல் செயல்பாடுகளில் அடையாள இயக்கங்களின் செயல்பாடுகளைப் புனைவுகளின் வாயிலாக ஆவணப்படுத்தும் இந்திய இலக்கிய நிலைபாட்டில் தமிழ்இலக்கியங்களும் குறிப்பாக விளிம்புநிலை இலக்கியங்களும் தங்களுக்கான பங்களிப்பைச் செய்துவருவதனை இப்புதின மீதான ஆய்வு உறுதிபடுத்துகிறது.

**பார்வை நூல்கள்**

1. இரா. முருகவேள். (2018). செம்புலம் (முதற்பதிப்பு,). திருப்பூர்: பொன்னுலகம் பதிப்பகம்.

2. சரண்குமார் லிம்பாலே. (2008). தலித் இலக்கியம் விடுதலையின் திசைகள். (முதற்பதிப்பு). கோயம்புத்தூர்: புத்தா வெளியீட்டகம்.



(☺)(☺)(☺)(☺)(☺)

# திராவிட மொழி வளர்ச்சியில் சிலப்பதிகாரத்தின் பங்களிப்பு

**முனைவர் கு புஷ்பாவதி**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை (சுயநிதிப் பிரிவு)
சீதாலெட்சுமி இராமசுவாமி கல்லூரி
pushpasrc1977@gmail.com

*****

உலகில் உள்ள பிறப்புகளில் மக்கள் பிறப்பு ஒன்றே விழுமியது என்று ஆன்றோரால் போற்றப்படுவதற்கு காரணம் ஒழுக்கமாகும்.மக்களுக்குரிய பல பண்புகளையும் அடக்கி நிற்கக்கூடிய ஒரு தொகைச் சொல்லாய் இது அமைந்துள்ளது. ஒழுக்கம் ஒவ்வொரு மனிதனின் வெற்றிக்கும் துணை நிற்கும் ஒரு காவியமாகும். அறநெறியில் வாழாமல் இருக்கும் மனிதன் எவ்வளவு தான் பணம் புகழ் சம்பாதித்தாலும் அவனது வாழ்க்கை முற்றுப்பெறாது.

**ஒழுக்கத்தின் எய்துவார் மேன்மை இழுக்கத்தின்**
**எய்துவர் எய்தாப் பழி''**

ஒழுக்கம் உடையவர்கள் மட்டுமே வாழ்வில் உயர்வான நிலையை அடைவார்கள். மனித வாழ்விற்கான ஒழுக்க நிலையை காப்பியம் வழி இனி உணரலாம்.

**காப்பியம் - பொருள் விளக்கம்**

காப்பியத்தை குறிக்கும் 'எபிக்' என்ற சொல் 'எபோஸ்' என்ற கிரேக்கசொல்லிலிருந்து ஆக்கப்பட்டது. இக் கிரேக்கச் சொல்லின் பொருள் 'சொல்' அல்லது பாடல் என்பதாகும். இப்பொருள் காலத்தின் மாற்றத்தில் வீரயுகப் பண்பினைக் கருவாகக் கொண்டு அமைந்துள்ளது. மேலும் சிலப்பதிகாரம் பெருங்கதை ஆகிய காப்பியங்களில் ஆளப்படும் காப்பியம் என்னும் சொல் காவியம் என்னும் ஒருவகை இலக்கியத்தை குறிக்காது. 'காப்பு','காத்தல்' என்னும் பொருள்பட அமைந்து ஒரு வகையில் இலக்கண நூல்களையே குறிக்கின்றது. மாறன் அலங்காரம்,தண்டியலங்காரம், நவநீதப்பாட்டியல், வச்சணந்தி மாலை போன்ற இலக்கண நூல்கள் காப்பியம் என்பதை காவியம் என்றே பொருள் தந்து விளக்குகின்றர். காப்பியம் என்ற சொல் 'நிறை'என்ற பொருளில் முதன் முதல் சீவக சிந்தாமணியிலேயே வருகிறது. இங்குக் காப்பியக் கவிகள் என்னும் தொடர் 'நிறை ிழநவள' என்னும் பொருள் தந்து நிற்கிறது. வீரயுகச் செயல்கள் பெரும்பான்மையும் முதன்மைத் தன்மை பெற்ற ஒரு வீரத் தலைவனின் வியத்தகு செயல்களை அடியொற்றியே அமையும். காப்பியம் என்ற சொல் காவ்யம் என்ற வடசொல்லின் திரிபு அன்று. இது தமிழ்ச்சொல்லே. காப்பூ இயம்ஸ்ரீ காப்பியம் ஆகும். இயம் என்பது சொல்,ஒலி,வாத்தியம் எனப் பொருள்படும். இவ்வகையில் நோக்கும் போது இயல், இசை, நாடகம் ஆகியவற்றை காக்கும் தன்மையில் அமைவது காப்பியமாகும்.''காப்பியத் தொல்குடிக் கவின் பெற வளர்ந்து''என்ற சிலப்பதிகார வரியில் 'காப்பியம்'என்ற சொல் வருகிறது.

**''ஆடற் கூத்தினோ டவிநயம் தெரிவோர்**
**நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்**
**பண்யாழ் நரம்பின் பண்ணுமுறை நிறுப்போர்''**

என்னும் வரிகளில் காப்பியம் என்னும் சொல் காவியம் என்ற பொருளில் வருகின்றது.

**சிலப்பதிகார காப்பிய அமைப்பு**

“நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்னும் மணி ஆரம் படைத்த தமிழ்நாடு” என்று கூறிய முகத்தான், சிலப்பதிகாரக் காவியம் செந்தமிழ் வீரன் பாரதியின் நெஞ்சை அள்ளிய செய்தி புலப்படுகின்றது. “தேனிலே ஊறிய செந்தமிழின் சுவை தோறும் சிலப்பதிகாரம்” என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை கூறியதால் தேன் நிகர்க் காவியம் இது என்பது தெளிவாகின்றது. தமிழ் இலக்கியத்தில் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் சங்க கால நூல்களுக்குப் பின்னர்,‘தென்றல் நடையாக’வெளிவந்த முதல் காப்பியம் இந்த சிலம்பு. பொருள் நலம், சொல் நலம்,கவிநலம், இசைநலம், இயல்நலம், நாடக நலம் என்று பல நலங்களையும் கொண்டது. சிலப்பதிகாரம் முழுவதிலும் கவிஞன் குரல் ஒலிக்கவே செய்கின்றது.

அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவது, ஊழ்வினை வந்து உருத்துவது என்ற ஏனைய இரண்டு உள்ளுறைப் பொருள்களிலும்‘உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்துதலே’ நூல் தொடக்கமுதல் இறுதி வரை உயர்ந்து நின்று பொருந்தி வருவது என்பதை ஏற்புடைய வகை உறுதிப்படுத்துவது பெண்மைக்குப் பெருமை சேர்ப்பதாகும். மூன்று காண்டங்களையும் முப்பது காதைகளையும் முறைமையால் அமைந்த முனிவர் இளங்கோவடிகள், சிலம்பின் கதையைக் காவியத்தில் சொல்ல வந்து 5001 அடிகளில் அதனை அமைத்திருக்கிறார்.

“புகாரில் தாழ்ந்த நிலமாகிய நெய்தல் நிலத்தில் பிறந்த கண்ணகி, படிப்படியாகக் கதைப்போக்கில் ஒவ்வொரு நிலமாக அழைத்துச் செல்லப்பட்டு இறுதியாக மிக உயர்ந்த நிலமாகிய குறிஞ்சிக்கு அழைத்துச் செல்லப்படுகின்றாள். இயற்கை அழகு ஓட்டத்தில் கண்ணகியின் கதை மண்ணிலே தொடங்கி விண்ணிலே முடிகிறது” என்று கூறுகையில் மனித வாழ்வு பெற்றார் மண்ணின்று விண் சென்று, உயர்ந்து, பிறவி அறுக்க வேண்டிய உயரிய கருத்தைச் சொல்கிறார். இவ்வாறுஇளங்கோவடிகள் வாழ்வதற்கு முன்னேயும் பின்னேயும் எத்தனையோ கவிஞர்களும், படைப்பாளர்களும் தோன்றியிருந்தாலும் இவரின் சிலப்பதிகார படைப்பிற்கு ஈடில்லை. ஏனெனில் சேற்றில் தோன்றும் அனைத்தும் தாமரை ஆகாது. அது போல கவிஞன் பாடுவதெல்லாம் கவிதையும் ஆகாது. காரணம் ஆழ்ந்த பொருளை விளங்கச் செய்யும் கதையை ஆழமாக அழகாக விளங்கச் சொல்வது தான் காவியம். அவ்வகையில் வாழ்க்கையின் விளக்கமாக அமையும் விழுமிய செயலே காவியத்தின் பொருளாகும். அந்த செயலும் முழுமையாக வரைமுறையோடு அமைக்க வேண்டும். முதல், இடை, கடை என்ற முப்பகுதிகளையும் ஒன்றோடொன்று தொடர்புபடுத்தி அமைதல் சிறப்பு. காவியத்தில் கிளைக்கதைகள் உருவாக்காலாம். ஆனால் கதையின் ஓட்டத்தோடு தொடர்புடையதாக அமைய வேண்டும். இவ்வகை கருத்துகளை நுணுக்கமாக மனதில் கொண்டு படைக்கப்பெற்றதே சிலப்பதிகாரமாகும். அதனால் தான் சேற்றில் தோன்றுவதெல்லாம் பங்கயம் என்று கூறல் முறையாகாது.

முதல், இடை, கடை அமையும் போக்கில் சிலம்பின் பங்கைக் காணலாம். சிலம்பு விற்கச் சென்ற கோவலன் கொல்லப்படுவது நிகழ்வின் துவக்கமாகவும், தன் கணவன் கொலையுண்ட செய்தி உணர்ந்த கண்ணகி என் கண்வன் கள்வன் அன்று என்று அநீதியைச் சுட்டிக்காட்ட வேந்தனை வழக்காடிய நிகழ்வு அதன் இடை, பின்பு ஒரு முளையை பிய்த்து எரிந்து மதுரையை தீக்கிரையாக்கியது, கண்ணகி விண்ணகம் சென்றதுஅதன் முடிவாகவும் காப்பியத்தில் அமைகிறது. காப்பியத்தின் தலைமையான செயல் மதுரைக்காண்டத்தில் விளக்கம் பெறுகிறது.

மேலும் காப்பியத்தின் ஒழுங்கமைப்பில் இளங்கோவுக்கு இருந்த ஈடுபாடு, காண்டங்களின் அளவில் கூடப் புலனாகும். நடுவில் நிற்கும் மதுரைக் காண்டம் 1977 அடிகளை உடையது.புகார்க்காண்டம் 1533 அடிகளையும் பின்னமைந்த வஞ்சிக்காண்டம் 1424 அடிகளையும் கொண்டு, ஏறக்குறைய சரிநிகர் நீட்டம் உடையனவாகின்றன.

கோவலனும் கண்ணகியும் மதுரை எய்திய வழியில் புறஞ்சேரிப் பகுதியில் சாலினி கண்ணகியை புகழ்வதிலும், கவுந்தியடிகள் கண்ணகியை போற்றிய விதத்திலும், மனம் மாறிய கோவலன் கண்ணகியை போற்றும் விதமும் சிலப்பதிகாரத்திற்கு மட்டுமன்றி, இளங்கோவின் அறிவுத்திறனையும் மெருகேற்றுவதாகவே அமைந்துள்ளது. அடுத்து, சமுதாயச் சிந்தனையையும் அவர் படைப்பில் திறம்பட விளங்கும். சான்றாக, பரத்தமையால் பழியுற்ற சமுதாயத்தைப் புகாரில் படைத்து, அச்சூழலால் கோவலன் கேடுறுதல், அவ்வகைக்கேடே மதுரையில் தூயனான கோவலனை பழிவாங்கியது என்று சுட்டிக்காட்டி மனிதன் வாழக்கூடிய அறவாழ்வை வலியுறுத்துகிறார். சிற்றின்ப வாழ்வில் சிறுமையுற்று வாழும் சமுதாயத்தில் ஆண்களால் பெண்கள் அடையும் வேதனையை கண்ணகியின் வழி படைத்துக் காட்டுகிறார் இளங்கோவடிகள்.மங்கல வாழ்த்துப் பாடலில் அவளது திருமண வாழ்க்கையும், மனையறம் படுத்தக் காதையில் அவளது இல்வாழ்வின் சிறப்பையும் நேர்முகமாக விளக்கிய அடிகளார், கண்ணகியின் தனிமைத் துயரத்தை மற்ற இடங்களில் நேராக வெளிப்படுத்தாது மறைத்தே கொண்டு செல்வார். மாதவியை எங்கும் குறை கூறாத தன்மையுடையவள் கண்ணகி. இவ்வாறு கண்ணகியை தலைமைப் பாத்திரமாகக் கொண்டு தலைவி காப்பியமாக அமைத்து அதன்வழி பத்தினித் தெய்வ வழிபாட்டையும் வலியுறுத்துகிறார்.

மாதவியையும் அவளுடைய கலையின் சிறப்பையும் மறக்காத இளங்கோ அவளைப் பெருமைப்படுத்தும் விதமாக கோவலனும் கண்ணகியும் புகாரை நீங்கிய பின்னரும், கோவலன் இறந்த செய்தியைக் கேட்டவுடன் தாமும் தம்மோடு தம் மகள் மணிமேகலையும் துறவை மேற்கொள்கின்றனர். இந்நிகழ்வை வாழ்த்துக்காதையின் வழி உணரலாம். மேலும் கோவலனுக்கு கோசிகன் தந்த மாதவி எழுதிய கடிதம் அவளுடைய அறிவு நுட்பத்தையும் பெரியோரிடத்துக் கொண்ட மதிப்பும் தெள்ளிதின் உணரலாம்.

மேலும் இவருடைய படைப்புகள் தமிழக வாழ்க்கையும் பண்பாடும் விளக்கப் பெறும் வர்ணனைகளாலேயே இன்பச் சுவையை மிகுவிப்பார். அரங்கேற்று காதையில் ஆடல் பாடல் பற்றிய செய்திகளே பேசப்பெறுகின்றன. இவற்றில் 175 அடிகளில் கடைசிப் பன்னிரண்டு அடிகளே, கோவலன் மாலையைப் பெற்று மாதவியை அடைந்ததும், அந்தி மாலை சிறப்புச் செய் காதையில் மாலைப்பொழுதின் வரவையும், கோவலனைக் கூடிய மாதவியைப் பற்றியும், தலைவனைப் பிரிந்த கண்ணகியின் நிலைமையும் பேசப்படுகிறது. இந்திர விழா எடுத்த காதையில் 240 அடிகளில் கடைசி ஆறு வரிகள் மட்டும் கண்ணகியின் இடக்கண்ணும், மாதவியின் வலக்கண்ணும் துடித்ததாக என்று ஆசிரியர் விளக்கம் தருகிறார்.இவ்வாறு இன்பச்சுவைகளிடத்து தன் கருத்தை பதிய வைப்பார். அவலச் சுவை அதிகளவு பயன்படுத்தாது படிப்பவர்களிடையே கவனச்சிதறல் இல்லாது ஆர்வத்தை ஏற்படுத்தும் வகையில் இன்பச் சுவை அதிகமாகவும் அவலச் சுவை சிறிதளவே கூறி காப்பியத்தை நகர்த்தும் பாங்கு இளங்கோவின் படைப்புத்திறனை வெளிப்படுத்தும். மேலும் நாடுகாண் காதை,வேட்டுவ வரி, ஊர்காண் காதையும், ஆய்ச்சியர் குரவையும், குன்றக் குரவையும் போன்றன சங்க கால வாழ்க்கை முறையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

**அறத்தின் இயல்பு**

அறமே வாழ்க்கைக்கு வேண்டிய சிறப்பையும் செல்வத்தையும் தரும். ஆகையால் அறத்தைவிட உயிர்க்கு ஆக்கமானது வேறு எதுவுமில்லை. அறத்தை விட ஆக்கமும் இல்லை அதை மறந்து கைவிடுவதை விடக் கெடுதியும் இல்லை. ஆகையால் அறச்செயல்களை இயலும் வகையில் ஓயாமல் செய்ய வேண்டும். செய்யத்தக்க வழியில் எல்லாம் செய்ய வேண்டும்.அறம் என்பது "அறு" என்னும் வினைச்சொல் அடியாகப் பிறந்ததே ஆகும். அறு என்னும் அடிச்சொல்லிற்கு அறுத்துச் சொல், வழி, துண்டி, வேறுபடுத்து எனப் பல்வேறு வகைப் பொருள்களைப் பெற்று வருகின்றன. அம் விகுதி சேரவே அறமாயிற்று. மேலும் அறம் என்ற சொல்லிற்கு புண்ணியம்,ஈகை. அறக்கடவுள், சமயக்கூற்று ஆகிய பல பொருள்களையும் பெற்று வருகின்றன.

**"ஆற்றுத லென்பது ஙலந்தவர்க்கு உதவுதல்"** (கலித்தொகை)

**"அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்**
**மறவாது இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்**
**உண்டியும் உடையும் உறையுளும் அல்லது**
**கண்டதில்........"** (மணிமேகலை)

என்று கலித்தொகையும், மணிமேகலையும் அறம் என்பது ஈகையே என்ற பொருளில் அமைவதை திட்டவட்டமாக வெளிப்படுத்துகிறது. இவ்வகை அறச் செய்திகளைக் கொண்டு தன்னிகரற்ற இடத்தைப் பெற்றுள்ளது சிலப்பதிகாரம்.

தமிழைப் பொறுத்தவரைச் சிறப்பாகக் குறிப்பிடற்குரியது சிலப்பதிகாரம். செந்தமிழ் மொழியிலுள்ள ஐம்பெருங்காப்பியங்களுள் பழமையானது சிலப்பதிகாரம். முத்தமிழ் புலமையும், வித்தகக் கவித்திறனும் வாய்ந்த சேரமுனிவர் இளங்கோவடிகளால் இயற்றப்பெற்றது. கற்பவர் நெஞ்சினைக் கரைந்துருக வைக்கும் காவிய அமைவுடையது. சாரமாய் நாவிலே தரித்தாடக் கூடியது. "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" எனப்படும் தமிழகத்தின் பெருமையும், சிறப்பும் கூறுவது.

சிலம்பிலே உள்ளத்தைத் தன் வயப்படுத்தும் கதை உள்ளது. உள்ளத்தோடு ஒன்றிக் கலந்து விடும் கதாபாத்திரங்கள் உலவுகின்றனர். இசை இனிதாக இசைக்கின்றது. கூத்துக்கள் நிகழ்கின்றன. குரவைகள் ஒலிக்கின்றன. பண்கள் பயின்று வருகின்றன. அரசியல் நெறி அமைந்துள்ளது. அறவொழுக்கங்கள் பேசப்படுகின்றன. மக்களில் பல்வேறு தரத்தினரையும், நிலையினரையும் கொள்கையினரும் காணலாம். தமிழகத்தின் வளம், தமிழரின் ஒன்று கலந்து வாழும் பண்பு, தமிழகத்தின் மிக உயர்ந்த, நயத்தக்க நனி நாகரிகம், தமிழரின் பேராண்மை, கொடைப்பண்பு, எல்லாமே மிளிர்கின்றன. மூவேந்தர் நாட்டின் சிறப்பையும் முத்தமிழ் இனிமையின் தொகுப்பையும் காவிய அமைப்பின் கனிவையும். தமிழிசையின் தன்னிகரற்ற உயர்வையும் சிலம்பில் கண்டு மகிழலாம்.மேலும் கற்பின் வீரம், பெண்மையின் திண்மை போன்ற பண்பாட்டுச் செய்திகள் ஏற்றம் பெறுகின்றன. மேலும் மன்னன் ஆட்சிமுறையும், நீதி தவறினால் மன்னனேயாயினும் அவன் தண்டிக்கப்படுவான் என்பதையும், தலைவியை விட்டு தலைவன் பிற பெண்களை காமத்தின் வழி நாடினால் அவன் மட்டுமன்றி அவனைச் சார்ந்தோரும் எவ்வாறு துன்பத்தை அனுபவிப்பர் என்ற மனித வாழ்வின் அறக்கருத்துக்களை சிலம்பின் வழி உணரலாம். கலை,வழிபாட்டு மரபுகள் இவற்றில் உட்புகுத்தப் பெறுகின்றன. இதனால் முத்தமிழ்க் காப்பியமாகவும், பல்சமய ஒருமைப்பாட்டுச் சூழல் காட்டுவதாகவும் அமைகின்றது. அரங்கேற்று காதையின் கலைச் செய்திகள் அக்காலத் தமிழரின் கலை வரலாற்றை அறியக்கூடிய மூலமாக

அமைகின்றன. மக்களிடையே வழங்கிய வாழ்க்கைப் பாடல்களை, வழிபாட்டுப் பாடல்களைப் பற்றிய செவ்விய உருவ எண்ணமும் சிலம்பின் வரி, குரவைப் பாடலால் கிடைக்கின்றமை வெளிப்படை.

மதுரை நகர், புகார் நகரமைப்பு வருணனைகள் அக்காலக் கட்டிடக்கலை வன்மையையும், சமுதாய உயர்வு தாழ்வு நிலைகளையும், பல் நாட்டு வாணிகத் தொடர்பினையும் செல்வச் செழிப்பையும் சித்திரிக்கின்றன. தமிழினப்பற்று, தமிழர் போர்த்திறம், மறக்கள வேள்வியினும் சிறந்ததான அறக்கள வேள்வி போன்ற பலவும் வெளிப்படுகின்றன. புதுமை புலப்படுகின்ற பல கூறுகளுள் முதற் காப்பியம் என்ற நிலையில் சிலம்பில் அமைகின்றன. முந்தைய சங்கப் பாடல்களில் காணப்படாத, ஆயின் அதன் அடிப்படையில் வளர்ந்ததாகக் கருதக்கூடிய யாப்புநிலை சிலம்பின் வடிவமாக அமைகின்றது.

**இளங்கோ வழி அறநெறி**

இமயவரம்பன் மகன், சேரன் செங்குட்டுவனின் தம்பி என்பதாலோ இளங்கோவின் புகழ் இன்று வரை நிலைக்கவில்லை.

> **“ஒரு நாள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் அரசவையில் இருந்தபோது நிமித்தகன் ஒருவன்அவை முன் எழுந்து நின்று, அரசே! தங்களுக்குப் பின் சேர நாட்டின் அரசுரிமை தங்கள் இளைய மகனுக்கு உரித்தாகும்” என்று இமயவரம்பனிடம் கூறினான். அது கேட்ட இளங்கோ “மூத்தவன் இருக்க இளையவன் அரசக்கட்டிலில் அமர்வது முறையன்று” எனக் கூற, அரசுரிமையை அண்ணனுக்கே ஆக்கி, அரண்மனையிலிருந்து வெளியேறி, வஞ்சி நகர்க்கு வெளியேயுள்ள குணவாயில் என்னும் கோட்டத்தில் தங்கி வாழ்ந்தார்”.**

இந்த செய்தி வரந்தரு காதையுள் கண்ணகித் தெய்வத்தின் வாயிலாக நமக்குக் கிடைக்கிறது.

**“கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட்டுவன்றன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீக்கிச்
சிந்தை செல்லாச் சேண்நெடுந் தூரத்து
அந்தமில் இன்பத்து அரசான் வேந்து”**

என்ற இவ்வரிகள் அண்ணனாகிய சேரன் செங்குட்டுவன் அரசைத் தமக்குரியதாக்க நிமித்திகன் முயன்றதை உணர்ந்த இளங்கோவடிகள் அரசியல் வாழ்வை வெறுத்தது மட்டுமன்றி, உலக இன்பங்களையும் துறந்து துறவுக்கோலம் பூண்டவர். மேலும்வரந்தருகாதையில்,

**“ஊன் ஊண் துறமின்,உயிர்கொலை நீங்குமின்”**

என்ற வரியில் உயிர்கள் பால் இளங்கோவடிகள் கொண்ட அன்பை உணரலாம்.

கண்ணகி கோவலன் ஏளனமாக பேசிய வம்பப் பரத்தையரை கவுந்தியடிகள் முள்ளுடைக் காட்டில் முதுநரிகளாகச் சபித்தபோது, அச்செயல் கவுந்தியின் தவப்பெருமைக்கு ஏற்றதல்ல என்று கண்ணகி கோவலன் வழி வெளிப்படுத்திய இளங்கோஅறநெறி தவறாதத் தன்மையுடையவர் என்பதை விளக்குகின்றது. இவ்வகை நிலையே இவரை பேரும் புகழுடன் மண்ணில் நிலைபெறச் செய்தது.

**“பீடுகெழு நங்கை பெரும்பெயர் ஏத்தி
வாடா மாமலர் மாரி பெய்தாங்கு
அமரர்க்கு அரசன் தமர்வந்து ஏத்தக்
கோநகர் பிழைத்த கோவலன் தன்னொடு
வான வூர்தி ஏறினள் மாதோ
கானமர் புரிகுழல் கண்ணகி”**

என்று மதுரைக்காண்டத்தில் கட்டுரைக் காதையில் இளங்கோவடிகள் உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தல் வேண்டும் என்கிறார். உயர்ந்தோர் என்பதை அமரர்கள் பெயரில் விளக்குகிறார். ஏனெனில் உயர்ந்தோர் என்போர் அமரர்களை விட வேறு யார் இருக்க முடியும்.

உலகக் காப்பியங்களில் காணப்படும் பல பொருட் கூறுகளுக்கு இடனாகச் சிலம்பும் அமைகின்றது. கனவு, பயணம், செய்தி அனுப்பல், உபசரித்தல், போர், அறிவுரை கூறுதல, கடவுளர் தொடர்பு, மீவியற்கை, கிளைக்கதை, நிமித்தங்கள், முன்னிகழ்வைப் பின்னுணர்தல் போன்ற பொருள், உத்திநிலைகள் காணப்படுகின்றன. இவ்வாறு கதை, இலக்கியப்பாங்கு, சமயம், உலகியல், அரசியல் போன்ற பல செய்திகளின் கொள்கலனாகச் சிலப்பதிகாரக் காப்பியம் அமைகின்றது. மேலும் 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்ற கருத்தை ஆதாரக் கொம்பாகப் பற்றிக் கொண்டு காவியப்பிணிப்பில் இளங்கோவடிகள் திகழ்ந்ததால் அவருடைய படைப்பு பல தலைமுறையின்கண் நிலைத்து நிற்கின்றது.

**துணையாக இருந்த நூல்கள்**


- சிலப்பதிகாரம் தெளிவுரை – ஞா.மாணிக்கவாசன்
- இளங்கோவின் பாத்திரப்படைப்பு – டாக்டர்.எஸ்.இராமகிரு‘ணன்
- தமிழ்க்காப்பியங்கள் - கி.வா.ஜகந்நாதன்
- திராவிட மொழி இலக்கியங்கள் - ச.வே. சுப்ரமணியன்


(☺)(☺)(☺)(☺)(☺)



# நைவேத்யம் கதையில் பண்பாட்டு மாற்றம்

**முனைவர் பி பகவதி**
அண்ணாமலைப் பல்கலைக்கழக
மிகை உதவிப் பேராசிரியர்,
தமிழ்துறை, காமராசர்
அரசு கலைக்கல்லூரி,
சுரண்டை.
dr.bagavathyram@gmail.com

******

பிற உயிரினங்களிடமிருந்து மனிதனைப் பிரித்துக் காட்டுவது பண்பாடாகும். ஏனென்றால் பண்பாட்டுக் கூறுகள் மரபணுக்களால் தீர்மானிக்கப்படாமல் அறிவுசார்ந்த நிலையில் தீர்மானிக்கப்படுகின்றன. மேலும் பண்பாடு என்பது தலைமுறை தலைமுறையாக அறிவுசார்ந்த நிலையில் கற்றுணர்ந்த நடத்தை முறைகளையே குறிக்கிறது. ஒருமனிதன் பிறந்ததிலிருந்து இறக்கும் வரை தனது பண்பாட்டைச் சமுதாய வயமாக்கல் மூலமாகவும் பண்பாட்டு வயமாக்கல் மூலமாகவும் கற்றுக் கொள்கிறான். இங்கு கற்பிக்கும் நிறுவனமாக பெற்றோர்களும், குடும்பமும் அவன் சார்ந்த சமூகமும், பிற நிறுவனங்களும் விளங்குகின்றன. தனிமனிதப் பண்பாடு, சமூகப் பண்பாடு தேசியப் பண்பாடு என பண்பாடு மாறுபடுகின்றது. தனிமனிதப் பண்பாடு பெரும்பாலும் சமூகத்தையோ அல்லது தேசியத்தையோ பாதிக்காது. ஆனால் தேசத்தில் ஏற்படும் மாற்றம் இயற்கைச் சீற்றம் போன்றவற்றால் தேசியப் பண்பாடு மாறுதல் அடைகிறது. தன்நிலச் சமூக மக்களின் வாழ்வியலைத்தன் படைப்புகளின் மூலம் வெளிக்கொணரும் பூமணியின் கதைகளில் இப்பண்பாட்டு மாற்றத்தைக் காணலாம். இக்கதைகளில் காணப்படும் பண்பாட்டு மாற்றங்களுக்குக் கண்டுப்பிடிப்புகளும் - வெளிப்படுத்தல்களும், தொழில்மயமாதலும் - நகரமயமாதலும், உயர்குடியாக்கமும் - உறவுமுறையாக்கமும், இந்துமயமாதலும் - பிற சமயமத் தழுவலும் போன்ற முறைகள் காரணமாக உணரப்படுகின்றன. இங்கு பூமணியின் கதைகளில் ஒன்றான ‘நைவேத்தியத்தில்’ தேசியப்பண்பாட்டு மாற்றத்திற்குக் காரணமான உறவின் முறையாக்கமும் - உயர்குடியாக்கமும் குறித்து காணலாம்.

**பூமணி**

திருநெல்வேலிக்கருகிலுள்ள கோவில்பட்டி என்னும் நகரில் வாழ்ந்து வருபவர் பூ.மணிவாசகம் என்ற இயற்பெயரைக்கொண்ட பூமணி. கூட்டுறவுத் துறையில் தணிக்கை அதிகாரியாகப் பணியாற்றி ஓய்வு பெற்றபூமணி கல்லூரி மாணவராக இருக்கும் போது எழுதிய முதல் கவிதை ‘தீபம்’ இதழில் வெளிவந்தது. 52 சிறுகதைகளையும், ஏழு நாவல்களையும் ‘ஏலேய்’ என்ற கட்டுரை நூலையும், யானை என்ற தலைப்பில் போலந்து மொழிச் சிறுகதைகளை மொழிபெயர்த்தும் படைத்துள்ளார். இவரின் ‘வெக்கை’ என்ற நாவலே ‘அசுரன்’ என்ற பெயரில் திரைப்படமாகியுள்ளது. திரைக்கதை உரையாடல், ஆவணப்படம், திரைப்பட இயக்கம் எனப் பல்வேறு தளங்களில் படைப்பு பணியைச் சிறப்புற வெளிப்படுத்திக் கொண்டிருப்பவர் பூமணி. இந்தியாவின் உயரிய விருதான சாகித்ய அகாதமி உட்பட பலவிருதுகளையும், பட்டங்களையும் பெற்றவர் பூமணி.

**பண்பாடும், பண்பாட்டு மாற்றமும்.**

பண்பாடு என்பது இலக்கியம், கவிதை, நடனம், இசை, கோயில்கள், சடங்குகள், வேதமந்திரங்கள், தொழில்கள் போன்ற சில கூறுகள் மட்டும் ஆகாது. இது மக்களின் நடத்தை முறைகளைக் கட்டுக்

கோப்பான நிலையில் வெளிப்படுத்தும் ஒரு மிகப்பெரும் அமைப்பாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு பண்பாட்டிலும் ஆயிரமாயிரம் கூறுகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அப்பண்பாடு என்னும் அமைப்பிற்குள் பொருத்தப்பட்டுள்ளன. அப்பண்பாட்டில் மாற்றம் என்பது தனியொரு செயலோடு மட்டும் தொடர்பு உடையது அல்ல. பல செயல்களின் மொத்தத் தொகுதியாகும. ஒவ்வொரு பண்பாட்டிலும் மாற்றங்கள் பல காலங்காலமாக நிகழ்ந்து வந்தாலும் இடம், காலம் ஆகியவற்றிற்கு ஏற்ப மாற்றத்தின் அளவும், வீதமும் வேறுபடுகின்றன. இந்தியச் சூழலைப் பொறுத்தவரை மேற்கத்தியமயமாதல், உயர்குடியாக்கம், இந்துமயமாதல், பிற சமயங்களுக்கு மாறுதல், நாட்டுப்புற நகரத்தொடர்பு, ஊரகமயமாதல், பழங்குடித் தன்மையிலிருந்து விடுபடல் போன்றவற்றைப் பண்பாட்டு மாற்றத்திற்கான காரணிகளாகச் சுட்டலாம்.

**நைவேத்யம் கதையில் பண்பாட்டு மாற்றம்.**

இந்திய ஊரகச் சமுதாயமானது சாதி அடிப்படையிலான பல நிலைகளைக் கொண்டதாகும். இதில் அந்தணர்கள் மேல்நிலையிலும், சூத்திரர்கள் கீழ்நிலையிலும் இருப்பதாகக் கூறப்படுகிறது. வேதகாலம்தொட்டே அந்தணர்கள் சமுதாய ஆதாயம் தேடி சமய வாழ்வைத் தங்களுக்குரியதாக்கிக் கொண்டனர். அதோடு 'தூய்மை (Purling) தீட்டு (Pollution) என்றும் கருத்தாக்கங்களை ஏற்படுத்திச் சாதிக்குழுக்களுக்கிடையில் வேறுபாடுகளை ஏற்படுத்தி விட்டனர். சமுதாயப் படிநிலையில் கீழே தள்ளப்பட்டவர்கள் அந்தணர்களின் வாழ்க்கை முறையைப் பின்பற்றித் தங்களின் சமுதாய தகுதியை உயர்த்திக் கொள்ள முயலுகின்றனர். இது இந்தியச் சமுதாயத்தில் மாற்றத்தை ஏற்படுத்தும் காரணியாகச் செயல்படுகிறது. இதனை 'நைவேத்யம்' என்ற கதையில் காணலாம்.

ஒரு கிராமத்தில் வாழ்ந்த அந்தணர்கள் வறட்சியினால் தங்கள் நிலங்களைக் குறைந்த விலைக்கு விற்றுவிட்டு நகரங்களுக்குக் குடிபெயர்ந்ததையும், அந்நிலங்களில் வேலை செய்த குடியானவர்கள் அந்த நிலங்களை விலைக்கு வாங்கி நிலஉரிமையாளர்கள் ஆனதையும் 'நைவேத்யம்' கதையில்பூமணி கதைக் கருவாக்கியுள்ளார்.

**உறவின் முறையாக்கம்.**

ஒரு கிராமத்தில் அந்தணர்கள் அல்லது அங்குள்ள மேல்சாதியினர் என அழைக்கப்படுவோர் தங்களுடைய சொந்த நலன்களைப் பேணிக் கொள்வதற்காகத் தங்களுக்குக் கீழுள்ள சாதிகளுன் சில குடும்பங்களை அல்லது குறைந்த அளவு ஒரு குடும்பத்தையாவது தேர்ந்தெடுத்து அவர்களைத் தங்களுக்கு நெருக்கமான குடியினராக உயர்த்தி வைத்து கொள்வர். இது உறவின் முறையாக்கம் என அழைக்கப்படுகின்றது. இதன் வாயிலாக அவர்கள் பொருளாதாரச் சார்பு, பாலியல் ஆதாயம், சமூகப் பாதுகாப்பு, குடும்ப வேலைகளைப் பராமித்துக் கொள்ளுதல் போன்ற நலன்களை அடைந்து கொள்வர்.

இவ்வகையான உறவின் முறையாகத்கத்தைச் 'நைவேத்யம்' கதையில் காணலாம். இக்கதையில் அந்தணர்கள் தங்களுக்கும் தங்கள் நிலத்தில் விவசாயம் செய்யும் குடியானவர்களுக்கும் இடையேயான உறவிற்காகத் தலையாரி பொன்னுரங்கம் என்பவனை நியமித்திருந்தனர். "அக்ரஹாரத்திற்கும் அவனுக்குமான உறவு லேசானதல்ல. அவனுடைய அப்பா ராமையாத்தேவருக்கும் முந்தி சங்கரசுப்புத் தேவரிலிருந்து ஆரம்பித்தஉறவு"(நைவேத்யம் ப.47) என்று அந்தணர்களுக்கும், பொன்னுரங்கத்திற்குமான

உறவைக் கதையில் அறிமுகப்படுத்தியுள்ளார் ஆசிரியர். பொன்னுரங்கத்திற்கு அந்தணர் குடும்பங்கள் மீதுஏற்பட்ட நன்றிக்கான காரணம் குறித்து, "ராமையா நம்ம குடும்பம் பெராமணக் குடியால உண்டானது. வழியில் போனவனைக் கூப்பிட்டு அவுக தலையாரியாக்கி மூடலன்னா நான் வெறகுவெட்டிச் செத்திருக்கனும். அவுகள என்னைக்கும் மறக்க கூடாதுப்பா" "(நைவேத்யம் ப.48) என்று கூறிச்சென்றுள்ளார். இக்கதையில் மூன்றாவது தலைமுறையாக அந்தணர் குடும்பங்களுக்காக உழைத்து வரும் தலையாரி தவிர வேறு குடியானவர்கள் அந்தணர்கள் வரும் தெருவில் நடக்க மாட்டார்கள். அவர்களிடம் பேச மாட்டார்கள் இதனை "எங்களுக்கு கொஞ்சமாச்சு யோசனையிருக்காப்பா. நான் போய் வர்றதுக்குள்ள முடியலையோ மதிப்பா உள்ள போயிநேருக்கு நேர பேச்சுப் போடுவீகளோ" ("நைவேத்யம் ப.52) என்ற கதைப் பகுதி மூலம் உணரலாம். அறுவடையின் போது ஒவ்வொரு அந்தணருக்கும் அந்தந்த குடியானவர்களிடமிருந்து நெல்லைப் பெற்றுக் கொடுப்பது, மழைபெய்யாமல் பொய்த்த போது நெல்லிற்குப் பதிலாக குடியானவர்கள் பயிர்செய்த காய்கறிகளைப் பெற்றுக் கொடுப்பது, போன்ற செயல்களையும் பொன்னுரங்கம் செய்கிறான். விதவையான காமுப்பாட்டிக்கு அந்தணர்களை விட அதிகம் உதவுபவன் பொன்னுரங்கம் தான். கதையின் நாயகனான சங்கரய்யரின் நெருங்கிய நண்பராகிய பொன்னுரங்கம் சங்கரய்யரின் இறுதிச் சடங்கின் போது அந்தணர்களுக்கிடையே ஒருவனாக நின்று அவரின் பிணத்தையும் தூக்கிச்செல்கிறான். அந்தணர்களுக்கிடையே ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்து வைப்பது, குடியானவர்கள் அந்தணர்களுக்கிடையே ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்து வைப்பது என பொன்னுரங்கம் செயல்படுகிறான். இவ்வாறு உயர் சாதியினரான அந்தணர்கள் தங்களுடைய பொருளாதாரச் சார்பிற்காகவும், சமூகப் பாதுகாப்பிற்காகவும் தலையாரியான பொன்னுரங்கத்திடம் உறவு கொண்டதைப் பூமணி கதையில் சித்தரித்துள்ளார்.

மேல்சாதியினரின் வசதிகளைக் கவனிக்கும் பொருட்டு கீழ்சாதியினர் தம்மைத் தூய்மைப்படுத்தி உயர்வடையச் செய்தல் என்ற உறவின் முறையாக்கப்படி தலையாரியான பொன்னுரங்கம் தன்னை தூய்மைப்படுத்திக் கொண்டு அந்தணர்களின் தேவைகளை கவனித்து வருவதையும் கதையில் காணலாம்.

கதையின் நாயகனான சங்கரய்யர் தன் மனைவியை இழந்த பின்பு பொன்னுரங்கத்தின் உறவுப்பெண்ணான குப்பை பொறுக்கும் சீதையிடம் பாலியல் ஆதாயத்திற்காக உறவு வைத்துக் கொள்வதையும் கதையில் காணலம். சீதை சங்கரய்யருக்குத் தனது வீட்டிலிருந்து உணவு சமைத்துக் கொண்டு வந்து கொடுப்பது, சங்கரய்யர் உடல்நலம் சரியில்லாமல் துன்பப்பட்ட போது நாட்டு மருந்து கொடுத்து வைத்தியம் செய்வது என உறவுகொள்கிறாள். சங்கரய்யரும் திருவிழாக்களின் போது கோயிலில் சமைக்கப்படும் உணவு வகைகளைக் சீதைக்குக் கொடுத்து மகிழ்கிறார். பிறருக்குத் தெரியாமல் காடுகளில் சங்கரய்யரைச் சந்தித்து மகிழ்ந்த சீதை அவர் இறந்த போது "சொன்னது போலவே எனக்கு முந்திக்கிட்டீங்களே. நான் என்னைக்கும் நாதியத்த கழுததான்" "(நைவேத்யம் ப.185) எனக் கூறி வருந்துகிறாள்.

இவ்வாறு உறவின் முறையாக்கத்தை '***நைவேத்யம்***' கதையில் காணலாம்.

**உயர்குடியாக்கம்.**

ஒருகிராமத்தில் ஆதிக்கச் சாதியினராக (Dominant Caste) விளங்குவோருக்குக் கீழே உள்ளவர்கள் சமுதாய ஆதாயம்தேடி ஆதிக்கச் சாதியினரைத் தழுவித் தங்களையும் அவர்களுக்கு இணையாக மாற்றிக்கொள்ள முயலுகின்றனர். இது உயர்குடியாக்கம் என அழைக்கப்படுகின்றது. ஒரு கிராமத்தில் ஆதிக்கச் சாதிஎன்பது நிலவுடைமை, மக்கள் தொகை, சமுதாய அரசியல் செல்வாக்கு போன்றவற்றால் முன்னணி பெறும் சாதியைக் குறிக்கிறது.

***‘நைவேத்யம்’*** கதையில் வறட்சி காரணமாக வயலில் விவசாயம் இல்லாததால் குடியானவர்கள் அந்தணர்களுக்கு நெல் கொடுக்கவில்லை. ஆனால் வேறு பயிரிட்டு அவர்கள் வாழ்ந்தனர். நெல்இல்லாமல் தவித்த அந்தணர்கள் தங்கள் நிலங்களை விற்று விட்டு பிறவேலை தேடி வெளியூருக்குச் செல்ல ஆரம்பித்தனர். அதில் சில குடும்பங்களிடம் விவசாயம் செய்த குடியானர்களே நிலங்களை விலைக்கு வாங்கினர். குத்தகைக்கு விவசாயம் செய்தவர்கள் தங்கள் சொந்த நிலத்தில் விவசாயம் செய்ததால் அவர்களின் வாழ்வு மாற்றம் பெற்றது. இதனைப் பூமணி “சித்திரம்பட்டிதான் எவ்வளவு மாறிவிட்டது. தலைகீழாகப் புரட்டிப்போட்டது போல் ஆகிவிட்டது” (நைவேத்யம் ப.65) எனறு கதையில் சித்தரித்துள்ளார். நில உடைமையாளர்களான குடியானவர்களின் புன்செய் உணவு நன்செய் உணவாக மாறியது. நாள்தோறும் குளித்தல், தூய்மையான ஆடைகளை அணிதல், கல்வி, கலைகளில் நாட்டம் என அவர்களின் வாழ்வுமுறை மாற்றம் பெறுகிறது. அடிமையாக இருந்து பயிர் செய்த போது இருந்த வாழ்வு மாறியதால் பண்பாடும் மாற்றம் பெற ஆரம்பித்தது. உணவு முறை, உடை, பழக்க வழக்கம் என அந்தணரைப் போல குடியானவர்வகளின் வாழ்வு மாற்றம் பெற்றது. இவ்வாறு உயிர் குடியாக்கத்தை கதையில் காணலாம்.



**முடிவுரை**

பூமணியின் ***‘நைவேத்யம்’*** என்ற கதையில் கிராமம் முழுமையானதாகத் தோன்றினாலும், அது அதன் அடையாளத்தை உடைக்கும் கூறுகளையும் கொண்டுள்ளது. பிளவுபடும் மனிதனின் அடையாளங்களும், முரண்களின் மோதல்களும் அதனால் ஏற்படும் பண்பாட்டு மாற்றங்களையும் ‘நைவேத்யம்’ கதையில் காணலாம்.

# திராவிட மொழிகளின் மக்கள் பண்பாடு

முனைவர் மு. சம்பத்குமார்,
உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,
திருகொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி,
tamilsampathsudha@gmail.com

*****

**முன்னுரை**:

திராவிட மொழிகளே, தென்னிந்திய மக்களில் மிகப்பெறும் பிரிவினரின் பேச்சு மொழியாக விளங்குகின்றன. திராவிட மொழிகளை இரண்டு வகைகளாக பிரிக்கின்றனர். அவை திருந்தியமொழிகள் திருந்தாமொழிகளாகும். தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு திருந்தியமொழியாகும். துதம், கோதம், கோன்ட், கூ, ஓரியன், இராஜ்மஹால் போன்றவை திருந்தாமொழியாகும். திருந்தியமொழிகளின் ஒன்றான தமிழ் மொழிகளின் பண்பாடுகளை காணலாம்.

**தமிழ்**

திராவிட மொழிகளுள் முதன்முதலில் திருந்திய நிலைபெற்ற மொழி இதுவே. ஐயத்திற்கு இடமில்லா மிகப் பழைய சொல்லுருவங்களில் சிறந்த சொல்லுருவங்களையும் மிகப் பலவாயசொல்லுருவங்களையும் பெற்றுள்ள வளர்ந்த மொழியாகும். “யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்” என்று பாரதியார் கூறுவதை நம் தமிழ்மொழியில் இல்லாத சிறப்பு வேறு எந்த மொழிகளிலும் இல்லை என்று பல அறிஞர்களால் புகழப்படுகிறது.

**உலக அரங்கில் தமிழ்**

தமிழர்கள் எட்டு கோடி பேர் உலகம் முழுவதும் இருக்கிறார்கள் நியூசிலாந்திலிருந்து அலாஸ்காவரை பரந்துபோய்ப் புலம்பெயர் தமிழர்கள் பத்துலட்சம் பேர் வாழ்கிறார்கள். ஒரு காலத்தில் ‘பிரித்தானிய அரசைச் சூரியன் மறையாத அரசு’ என்று அழைத்தார்கள். இப்போதே ‘சூரியன் மறையாத தமிழ்’ என்று சொல்கிறார்கள். 2012 ஆம் ஆண்டு தொடங்கி எல்லா வருடங்களிலும் சனவரி 14ம் நாள் ‘தமிழர் பாரம்பரிய நாள் எனப் பிரகடனப்படுத்தப்பட்டிருக்கிறது’. அத்துடன் உலகத்தில் இரண்டாவது பெரிய தேசமான கனடாவில் முதல்முறையாக ஒரு புதிய சாலை ஒன்றுக்கு ‘வன்னி வீதி’ என்று பெயர் சூட்டப்பட்டிருக்கிறது. இது சரித்திர முக்கியத்துவமாகும்.

**பண்பாடு-பொருள் விளக்கம்**

**“பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்”** (கலி. நெய். 1338)

எனச் சங்கப்பாடல் கூறும் பண்படுதலே பண்பாடாகும். யாவர் மாட்டும் ஒத்த அன்பினராகக் கலந்து ஒழுகுதலும், அவரவர் வருத்தத்திற்கும், புரிதலும், பகுத்துண்டலும் பழிக்கு நாணுதலும் ஆகிய நற்குணங்கள் பலவும்” எனப் பரிப்பெருமாள் பொருள் தருகிறார்.

பண்புடைமை என்று சொல்லப்படும் மரபு அல்லது வழக்கம் எது என்றால் எல்லோரிடத்திலும் அன்புடையவராக இருத்தலும், சிறந்த குடிமை மரபுள்ள குடியில் பிறத்தலும் ஆகிய இரண்டுமே எனத் தெளிவுபடுத்துகிறார். திருவள்ளுவர் இதனை,

**அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்**
**பண்புடைமை என்னும் வழக்கு** (குறள்-992)

என்ற குறள் மூலம் அறியலாம். பண்பாட்டுக் கூறுகள் என்பவை, மானம் ஒழுக்கம், விருந்தோம்பல், ஈகை, ஒருவனுக்கு ஒருத்தி, பண்டிகைகள், கலைகள், தொழில், பெரியோரை மதித்தல், பழிக்கு நாணுதல் போன்றவை பண்பாட்டுக் கூறுகள் ஆகும்.

**சங்க இலக்கியங்களில் பண்பாடுகள்**

தமிழ் மக்கள் தங்கள் வீட்டிற்கு வரும் விருத்தினர்களை இன்முகத்துடன் வரவழைத்து உபசரிப்பதில் அவர்களுக்கு நிகர் வேறு எவரும் இல்லை எனலாம். விருந்து குறித்த பதிவுகள் சங்க இலக்கியங்களில் மிகுந்து காணப்படுகின்றன.

அதியமான், தன்னை நாடிவரும் விருந்தினர்களை, பல நாட்கள் பலரோடு வந்தாலும், தலைநாள் போல உபசரிக்கும் பண்பினை உடையவன் என்பதை ஔவையார்.

**“ஒரு நாள் செல்லலம் இருநாள் செல்லலம்**
**பல நாள் பலரோடு செல்லினும்**
**தலைநாள் போன்ற பயின்று விருப்பனன் மாதோ”** (புறம் 101-1-3)

என்ற புறநானூற்றுப்பாடல் மூலம் உணர்த்துவதை அறியலாம்.

**பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்**

நல்ல நாளிலே தொடங்கும் காரியம் இடையூறில்லாமல் வெற்றிபெறும் என்பது பழந்தமிழர் நம்பிக்கை. பெண் கேட்கச் செல்வோர் நல்ல நாள் பார்த்து அந்நாளிலே புறப்படுவது தொல்தமிழர் வழக்கமாயிருந்தது. சோதிடர்களே நல்ல நாட்களைக் குறித்தும் கொடுப்பார்கள். அந்த நாளிலே திருமணம் முதலிய மங்கலமான செயல்களை நடத்துவார்கள். இவ்வழக்கம் தமிழகத்திலே இருந்தது இம்முறை இன்றும் தமிழர்களிடம் பின்பற்றப்படுகிறது. இச்செய்திகளைக் கூறுகின்ற சிறுபஞ்ச மூலம் பாடல்கள் பின்வருமாறு,

**“நாள் கூட்டம் மூர்த்தம் அவற்றோடு நன்றாம் அக்**
**கோள் கூட்டம் யோகம் குணனுணர்ந்து-தோள் கூட்டல்**
**உற்றானும் அல்லானும் ஐந்தும் உணர்வானால்**
**பெற்றால் நாள் கொள்க பெரிது** (சிறுபஞ்சமூலம் பா.44)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

**காப்பியங்களில் பண்பாட்டுப் பதிவுகள்**

நம் தமிழர்களின் பண்பாடுகளில் மிகச் சிறந்தது விருந்தோம்பல் ஆகும்.

**“மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து** (குறள். விருந்து -90)

எனத் திருவள்ளுவா் விருந்து பற்றியும் விருந்தினா்களின் முக்கியத்துவத்தையும் விளக்கியுள்ளாா். அனிச்சமலா் முகா்ந்து பாா்த்தால் வாடிவிடும். ஆனால் விருந்தினா்கள் தூரத்தில் இருக்கும் போதே நாம் முகம் சுளிப்பதை பாா்த்தாலே வாடிவிடுவா். அத்தகைய விருந்தினா்களைப் பாதுகாப்பது நம் பண்பாடு ஆகும்.

கோவலனை பிரிந்திருந்தபோது கண்ணகி விருந்தெதிா் கோடல் என்ற ஒன்றைச்செய்ய முடியாமல் துன்பப்பட்டாள். அறநெறியில் வாழ்பவா்களுக்கு உதவி செய்தல், அந்தணா்களுக்கு உபசாித்தல், துறவியை எதிா்கொண்டு வணங்கிப்போற்றுதல், நன்னெறியில் விருந்தினரை உபசாித்தல் ஆகிய இல்லற தருமங்கள் செய்வதற்கு உாிமையில்லாதவளாய் நான் அவற்றை இழந்திருந்தேன் என வருந்தினாள்.

**“அறவோா்க்கு அளித்தலும் அந்தணா் ஓம்பலும்**
**துறவோா்க்கு எதிா்தலும் தொல்லோா் சிறப்பின்” சிலம்பு 16(71-72)**

இப்பாடலின் மூலம் விருந்து உபசாிக்க முடியாமல் வருந்துவதை காணமுடிகிறது.

அணுக்கள் நிறைந்த மண்ணால் ஆன இந்த உலகத்தில் வாழும் உயிா்களுக்கு எல்லாம் உணவு கொடுக்க வேண்டும். அப்படி உணவு கொடுப்பது உயிா்கொடுப்பதா்க்கு சமம்.

**“மண்டிணி ஞாலத்து வாழ்வோா்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோா் உயிா் கொடுத்தோரே”** மணி-11 (95-96)

என விருந்தோம்பலின் சிறப்பு மணிமேகலையிலும் விளக்கப்பட்டுள்ளது.



**பக்தி இலக்கியங்களில் சமுதாயப் பண்பாடு**

ஒருவாின் துயா் தீா்ப்பதும் ஒரு சமூகத்தொண்டாகும். மன்னனின் தனிப்பட்ட துயரமாயினும் அது தீா்க்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

அவனது தனிப்பட்ட துயரம் அவன்செய்யும் நல்லாட்சியையும் பாதிக்கும் வாய்ப்புண்டு. ஆதலால் அவனது தனித்துயரம் தீா்க்கப்பட வேண்டிய ஒன்றாக அருளாளா் திருஞானசம்பந்தா் கருதினாா்.

ஆச்சிராமம் என்ற ஊருக்குச் சம்பந்தா் சென்றாா். அவ்வூா் தலைவன் கொல்லி மழவனின் மகள் பிணியுற்றாள். பிணி தீராமையால் அவ்வூா் கோயிலின் முன் படுக்க வைத்தான். திருஞான சம்பந்தா் இறைவன் மீது பதிகம் பாடி அப்பெண்ணின் நோய் நீக்கினாா்.

**“ஆந்தை விழிச்சிறு பூதத்தாா் பாச்சிராசிராமத்துறைகின்ற**
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
**ஏறது வேறிய ரெழையைவாட இடா் செய்வதோ விவாீடே”** (தேவாரம் - 11)

எனும் பாடலால் சமுதாயப் பண்பாட்டை அறிய முடிகிறது.

**இக்கால இலக்கியங்களில் பண்பாடு**

பாலாவின் ‘திண்ணைகளும் வரவேற்பறைகளும்’ எனும் கவிதைத் தொகுப்பில் காணப்படும் பண்பாட்டுப் பதிவுகளையும் மாற்றங்களையும் பற்றிக் கூறுகிறாா்.

நம் தமிழர்கள் சமுதாயத்திற்கும், மக்களுக்கும் தீங்கு நேர்ந்தால் உடனே தடுத்து நிறுத்தும் பண்புடையவர்களாக இருந்தனர். இன்று உள்ள மக்கள் யாருக்கும் உதவி செய்யாமல், சமுதாயத்தையும் கெடுத்துக் கொண்டு சுயநலம் உடையவர்களாக மாறிவிட்டனர் என்பதை "பார்த்தும் பாராது வாழ்ந்து கொண்டிருக்கிறேன் நான்" தி.வ. அ.ப-27 என்ற வரிகளில் கூறயுள்ளார்.

**"எத்தனை செயல்கள் செய்து பெற்றேன் வாழ்க்கை**
**என்று சொன்னேன் எல்லாம் இழந்தேன்** (தி.வ.அ.ப-27)

மேலும் பாரதியார், பாரதிதாதன், வாணிதாசன் போன்ற பல கவிஞர்கள் பண்பாடுகளைப்பற்றி கூறியுள்ளார்.

"ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே" (பாரதியார் கவிதை ப. 20) என்ற பலவாறாக பல கவிஞர் கூறியுள்ளார்.

**முடிவுரை**

பல்வேறு சிறப்பான பண்பாட்டுக்கூறுகளை தன்னகத்துக் கொண்டிருந்தாலும் காலவோட்டத்திலும், நவநாகரிகம் என்கிற அந்நிய நாட்டு பண்பாட்டுப் படையெடுப்பினாலும் பல்வேறு பண்பாட்டுக் கூறுகள் அழிந்து வருவதை இன்றும் நாம் கண்கூடாகப்பார்த்துக் கொண்டிருக்கின்றோம். தமிழில் எல்லா வகை இலக்கியங்களிலும் பண்பாட்டுக் கூறுகள் காணப்படுவதை இக்கட்டுரையின் மூலம் அறிய முடிகிறது.



(☺)(☺)(☺)(☺)(☺)

# தமிழ் மொழியின் பக்தி இலக்கிய பண்பாட்டுக் கொடை

**திருமதி க கரும்பாயி**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை (சுயநிதிப்பிரிவு)
சீதாலட்சுமி இராமசுவாமி கல்லூரி
karumbukavin@gmail.com

*****

தமிழ் மொழி என்பது கருத்துக்களை பரிமாறிக் கொள்ளும் கருவியாகும். ஒரு மொழி நிலைத்து நிற்க வேண்டுமென்றால் அம்மொழி பேச்சுவழக்கிலும், இலக்கிய வழக்கிலும் இருத்தல் வேண்டும். சிறந்த செம்மையான இலக்கிய வளத்தை கொண்டிருத்தல் வேண்டும். அவ்வகையில் தமிழ்மொழி செம்மொழிகளுள் ஒன்றாகும். தமிழ் திராவிட மொழிக் குடும்பமாகும். திராவிடமென்பது தமிழுக்குப் பிறிதொரு பெயராக வழங்குகின்றது. திருந்திய மொழிகளை ஆறு வகையாக பகுப்பர். அவை தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு(கூர்க்) என இவையனைத்தும் திராவிட மொழிக்குடும்பங்கள் என்பர். தமிழ் மொழி தொன்மையான மொழியாகும். இதனை,

''மண்டினிக் கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர்'' என புறநானூற்றுப் பாடல் தமிழின் தொன்மையைச் சுட்டிக்காட்டியுள்ளது. மேலும் தமிழ் இனத்தின் தொன்மையினை,

**''கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முன்தோன்றி மூத்தக் குடி''**

என புறப்பொருள் வெண்பாமாலை உரைக்கும். தமிழ்மொழியின் தன்மையினை பிங்கல நிகண்டு,

**''இனிமையும் நீர்மையும் தமிழ்எனல் ஆகும்''**

என்று தமிழ் மொழியின் இனிமையினை எடுத்துக்கூறும். சுமேரிய நாகரிகம் மிகத் தொன்மையானது. ஆயினும் அம்மக்களின் மொழியை விடவும் தமிழ்மொழி மிகத்தொன்மையும் சீர்மையும் உடையது என்று ஹீராஸ் பாதரியார் கான் ஈவான்ஸ் முதலிய அறிஞர்கள் கூறுவர்.

ரைஸ்டேவிட் எனும் மொழியறிஞர் சமஸ்கிருதம், ஈப்ரு, கிரேக்கம் ஆகிய செம்மொழிகளில் தமிழ்ச்சொற்கள் கலந்து இருத்தலைச் சுட்டிக்காட்டுகிறார்.

மலையாளம், கன்னடம், தெலுங்கு போன்ற இருபத்தைந்துக்கும் மேற்பட்ட மொழிகள் பிறத்தற்கு ஆதாரமாக – தாயாக தமிழ் விளங்குகிறது.

தமிழை வட இந்திய அறிஞர்கள் திராவிடம், தமிள் எனவும் தெலுங்கர்கள் அரவம் என்றும் குறிப்பிட்டனர். தமிழின் மறுபெயரான திராவிடம் என்னும் பெயரையே திராவிட மொழிகளின் குடும்பப் பெயராகக் கால்டுவெல் தெரிவு செய்துள்ளார். மேலும் தமிழ்மொழியின் சிறப்பினை கால்டுவெல் அவர்கள்,

“திராவிட மொழிகள் அனைத்திலும் உயர்தனிச் செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ் தன்னிடையே இடம்பெற்றிருக்கும் சமஸ்கிருதச் சொற்களை அறவே ஒழித்துவிட்டு உயிர் வாழ்வதோடு அவற்றின் துணையை ஒரு சிறிதும் வேண்டாமல் வளம் பெற்று வளர்வதும் இயலும்” என்று தமிழின் சிறப்பினை எடுத்துரைத்துள்ளார். இங்ஙனம் தொன்மையும் இனிமையும் வாய்ந்த தமிழ்மொழி பக்தி இலக்கியங்கள் வாயிலாக பல பண்பாட்டுக் கூறுகளை தந்துள்ளது. இது குறித்து ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

மனிதனுக்கு செய்யும் வேவை இறைவனுக்கு செய்யும் வழிபாடாகும் என்பதை சைவமும், வைணமும் நாயன்மார்கள் வாயிலாகவும், ஆழ்வார்கள் வாயிலாகவும் எடுத்துக்காட்டாக இருந்து வந்துள்ளது.

**பண்பாடு**

பண்படுதல் என்ற சொல்லுக்குச் செப்பமாதல், சீர்திருத்தமெய்தல் என்பது பொருளாகும். மேலும் திருந்தி வரும் மனநிலையை பொதுவாகப் பண்பாடு எனலாம். ஒழுக்கம், அறிவு, கல்வி, கலை, கருத்து, இவை அழகுபெற உறவாடி நிற்பது பண்பாடு ஆகும். பண்பாட்டினை தனிமனித பண்பாடு என்றும் சமுதாய பண்பாடு என்று இருவகையாக பிரிப்பர். தமிழின் பண்பாட்டினை இலக்கியங்களில் காணமுடியும். இலக்கியங்கள் மனிதனை பக்குவப்படுத்தி தீயநெறிக்கு உள்ளகாதவாறு வழிநடத்தும் சிறந்த வழித்துணையாகும். பக்தி இலக்கியங்கள் பண்பாட்டினை பதிவு செய்துள்ளன.

மக்களை நன்னெறியில் - ஆன்மீக நெறியில் - பக்குவப்படுத்துவது சமயம் என்றும் மக்களின் மனத்தகத்தில் மறைந்து கிடக்கும் மேன்மைகளை வகையுடன் வெளிப்படுத்துவது சமயம் என்றும் துன்பம் கலந்த வாழ்வை இன்பமாக மாற்றுவதும் சமய இலக்கியங்கள் எனலாம். மக்களை எல்லா நிலைகளிலும் எல்லாவிதங்களிலும் பக்குவப்படுத்திச் சீர்படுத்துதே பக்தி இலக்கியங்களாகும்.

மக்களின் ஆக்கமான அறநெறிக்குச் சமயவுணர்வு அடிப்படைத் தேவையாகும். ஒருநாட்டு நாகரிகத்திற்குச் சிறந்த அடையாளம் அந்த நாட்டுப் பண்பாடு என்பர். தமிழ்நாட்டுப் பண்பாட்டிற்குச் சிறந்த அடையாளமாகச் சமயவுணர்வு இருந்து வருகிறது. உயிர் வாழ்வை அகத்தும், புறத்தும் வளம்பெறச் செய்யச் சமய வாழ்க்கையே உகந்தது என்பது தவத்திரு குன்றக்குடி அடிகளார் கருத்தாகும். ஒருவனது மனத்தைத் தீயவற்றினின்றும் நீக்குகையில் அவனிடம் உள்ளுணர்வும், பொதுநல நாட்டமும் மலர சமயம் துணைநிற்கும். மக்களிடையே மனவொருமைப் பாட்டையும் அமைதியையும் வளத்தையும் ஏற்படுத்துவதற்காகத் தோன்றியதே சமயநெறி ஆகும். பக்தி இலக்கியங்கள் மக்களின் நல்லொழுக்கத்திற்கும் ஆன்ம நலத்திற்கும் வழிகாட்டிகளாக அமைந்துள்ளன.

**சாதி வேறுபாடு காணாமை**

பக்தி உலக மக்கள் அனைவரையும் ஒன்றெனக் கருதுகின்றன. மக்கள் அனைவருக்கும் ஒரே கடவுள் என்ற தத்துவத்தை,

> **“ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
> **நன்றே நினைமின் நமனில்லை நாணாமே**
> **சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து**

**நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே''**

என்ற திருமந்திரப் பாடல் உணர்த்தும்.

பக்தி பாடிய பெரியோர்கள் தமக்கென மட்டும் வாழாமல் பொதுநலத்துக்காக தாம் வாழும் சமுதாய முன்னேற்றத்திற்கு தேவையான பல செய்திகளை தம் பாடல்களில் பதிவு செய்திருக்கின்றனர்.

**தன்னலம் நீக்குதல்**

மக்களிடையே இருக்கும் சுயநலவுணர்வு நீங்கினால்தான் பொதுநலமெய்த முடியும். அதற்கு யான் எனது என்ற ஆணவ எண்ணங்கள் இருக்கக் கூடாது. நல்வினையோ, தீவினையோ செய்த பலனை கண்டிப்பாக அனுபவிக்க வேண்டும். இதனை மாணிக்கவாசகர்

**''வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே''**

என்று பாடி வினைக்கேற்ப ஆட்டுவிப்பவன் இறைவன் என்பதைச் சுட்டிக்காட்டி ஆணவத்தை அழிக்க வழியைக் கூறியுள்ளார்.

**பொதுநலம் பேணுதல்**

தான் நன்மைபெறுவது சுயநலம். பிறரையும் நன்மையடையச் செய்வது பொது நலமாகும்.

**''நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரஞ்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே''**

என்ற திருமந்திரப்பாடல் தாம் பெற்ற இன்பத்தை உலகமும் பெற்றுச்சிறக்க வேண்டும் என்ற பொதுநலச் சிந்தனையை உணர்த்துகின்றது. மேலும் தாயுமானவர்,

**''காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டாகாரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ இன்புற்றிடநாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே''**

என்ற பொதுநல உணர்வை போதிக்கின்றது.

**ஈகைப் பண்பு**

பிறருக்கு கொடுக்க வேண்டும் என்ற பண்பு சுயநலத்தை நீக்கி பொதுநல நோக்குடன் இருந்தால் மட்டுமே வரும். பிற உயிரையும் தம் உயிர்போல் எண்ண வேண்டும் என்ற பண்பினை,

**''படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்ககங் காகா
நடமாடுங் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடுங் கோயில் பகவற்க தாமே''**

என்ற திருமந்திரபாடல் உயிர்களை நடமாடும் கோயிலாக பார்க்கும் எண்ணத்தை உணர்த்தியுள்ளது.

**வழிபாடு துயரை நீக்கும்**

இறைவனை வழிபட்டால் மனம், செயலும் தூய்மையுறும். நாம் செய்யும் வினைகளே நமக்கு பலனைத் தருகின்றன. நல்வினையோ, தீவினையோ நாம் செய்யும் வினையானது நம்மை வந்தனையும். ஆகையால் தீவினை செய்யாதிருக்க வேண்டும் என அறிவுரை கூறி எச்சரிக்கை செய்கின்றன பக்தி இலக்கியங்கள். ஆண்டாள் திருப்பாவையில்,

**"தூயோமாய் வந்து தூமலர் தூவித் தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்"**

என்ற பாடல் தூய்மை உடையவராய் இறைவனை சிந்தித்தால் தீவினைகள் யாவும் தீயிலிட்ட பஞ்சு போல் தூசாகும் என்கிறது.

**தாய்லாந்து நாட்டில் திருப்பாவை**



வைணவ சமயத்தின் பெண் ஆழ்வார் ஆண்டாள் பாடியது திருப்பாவை ஆகும். சைவ சமயக் குரவர் நால்வருள் மாணிக்கவாசகர் பாடியது. மார்கழி மாதத்தில் கன்னிப்பெண்கள் நீராடி மண்ணாற்பாவை செய்து ஆற்றங்கரை, பொய்கைக் கரைகளின் அப்பாவையினை வைத்துத் தம் நாட்டில் நல்ல மழை வளம் பெருக வேண்டும் என்றும் தங்கட்கு நல்ல கணவர் வாய்க்க வேண்டும் என்றும் நோற்கும் நோன்பே பாவை நோன்பு. தாய்லாந்து நாட்டில் கொண்டாடப்படும் திருவிழாவும் மழைத் திருவிழாவாகும். அங்கு சடங்குகளின்போது திருப்பாவை பாடல்கள் ஓதப்பெற்றன என தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கூறியுள்ளார்.

பக்தி இலக்கியங்கள் இறைவனை மட்டும் புகழந்து பாடாமல் அதன்வழி மக்களை நல்வழிப்படுத்தி, பண்பாட்டினையும் எடுத்தியம்புகின்றன. தமிழ்மொழி தொன்மையான மொழி மட்டுமன்று. பக்தி இலக்கியங்களின் வழி பண்பாட்டு கருத்துக்களையும் உலகிற்கு வழங்கியுள்ளன என்பது பெருமை ஆகும்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு க வெள்ளை வாரணனாரின் தமிழ்க்கொடை

**முனைவர் அ மோகன்**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
டாக்டர். அம்பேத்கார் அரசினர் கலைக் கல்லூரி
வியாசர்பாடி
சென்னை - 600039.
tamilmohan1977@gmail.com

*****

**முன்னுரை:**

மொழி என்பது மனித சமுதாயத்தில் ஆகச்சிறந்த கண்டுபிடிப்பாகும். அது வழங்கப்படும் இடத்திற்கேற்ப வேறுபட்டிருந்தாலும் எல்லா மொழிகளிலும் இலக்கண இலக்கிய வழக்காறுகள் பொதுவாக இருப்பதைப் பார்க்க முடிகிறது. மொழியாகிய கருவி இல்லையென்றால் மனித நாகரிக வளர்ச்சி என்பது கேள்விக்குறியே. எனவே மொழி இல்லையெனில் மனிதம் மறித்துவிடும்.

அவ்வகையில் இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு திராவிட மொழி இலக்கியங்கள் பெரும்பங்கு ஆற்றியுள்ளன. திராவிட மொழிகளில் ஒன்றான தமிழ் மொழிசார் இலக்கியங்களும் ஆராய்ச்சிகளும் உலகிற்கு இந்தியாவை அடையாளப்படுத்தும் பெட்டகமாக உள்ளன. அவ்வகையில் தமிழ் மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்களை ஆராய்ந்து அடையாளப்படுத்திய க.வெள்ளை வாரணனார் தம் ஆய்வுப்பணியை விளக்க முற்படுகிறது இக்கட்டுரை.

**க.வெள்ளை வாரணனார்:**

தஞ்சை மாவட்டம் குடந்தைக்கு (கும்பகோணம்) அருகே உள்ள திருநாகேச்சுவரத்தில் கந்தசாமி அவர்களுக்கும் அமிர்தம் அம்மையாருக்கும் இளைய மகனாக க.வெள்ளை வாரணனார் 14-01-1917 இல் பிறந்தார். இவர் தமிழையும் சைவத்தையும் தன் இரண்டு கண்களாக எண்ணி ஆராய்ந்துள்ளார். இதனால் தமிழின் சிறப்பும் மேன்மையும் உலகிற்கு அடையாளப்பட்டுள்ளன.

**இலக்கணப் பணிகள்:**

க.வெள்ளை வாரணனார் தமிழுக்கு ஆற்றிய பணிகளை இரண்டாக வகுக்கலாம். அவை:

1. **இலக்கணப் பணிகள்**
2. **இலக்கியப் பணிகள் ஆகியவை ஆகும்.**

தமிழின் தொன்மையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தை முழுமையாக ஆராய்ந்து தொல்காப்பியரின் வரலாறு, நூல் எழுதப்பட்ட காலம், தொல்காப்பிய உரைகள் பற்றிய ஆராய்ச்சி ஆகிய மூன்று நிலைகளில் தன் ஆய்வு முடிவுகளை வெளிப்படுத்தியுள்ளார். அதன் பயனாக இலக்கிய

வரலாறு தொல்காப்பியம் 1957 என்ற நூல் அவர் படித்து பின் பணியாற்றிய அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வெளியிடப்பட்டது. இதன் மூலம் தொல்காப்பிய இலக்கணத்தில் அவர் ஆழங்கால் பட்டார். அதன் பயனாக நூலில் காணப்படும் பதினைந்து நூற்பாக்கள் பிற்காலத்தில் வடமொழியின் தாக்கத்தால் இடைச்செருகலாக இருந்திருப்பதை சுட்டிக்காட்டியுள்ளார். இவ்வாய்வுத் திறத்தை பாரதிதாசன் பின்வருமாறு போற்றிப் பாடுகிறார்.

**“செந்தமிழ்ப் புலவன் வெள்ளைவாரணன்**
**அருளிய தொல்காப்பிய ஆராய்ச்சி**
**அஞ்சுதல் சிறிதும் இல்லா அருள்மிகு**
**நெஞ்சப் படைப்பு நாட்டுக் கன்பளிப்பு!”**
**நூலே கரகம் முக்கோல் மனையே**
**ஆயுங்காலை அந்தணர்க்குரிய**
**என்பது முதலிய பதினைந்து செய்யுள்**
**ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியத்தில்**
**இடைச் செருகல் என்றெடுத்துக் காட்டிய**
**யானைக்குக் கைமாறு வானும் போதாது”.**

என்ற பாரதிதாசனின் இந்த பாராட்டுப் பாடலால் க வெள்ளை வாரணனாரின் தொல்காப்பிய பணி நமக்கு சிறப்பாக அடையாளப்படுகிறது.

தொல்காப்பியத்தையும் நன்னூலையும் ஆராய்ந்து ஒப்பீட்டு முறையில் தொல்காப்பிய எழுத்ததிகாரமும், நன்னூல் எழுத்ததிகாரமும் கருத்தால் எப்படி ஒன்றுபட்டுள்ளன என்பதை அடையாளப்படுத்தியதோடு மட்டுமின்றி வேறுபட்டிருப்பதற்கான காரணத்தையும் ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

அதன் பயனாக தொல்காப்பியம் நன்னூல் எழுத்ததிகாரம் 1962 என்ற நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் வழியே வெளியிடப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி இவ்விரு நூல்களிலும் அமைந்துள்ள சொல்லதிகாரத்தையும் ஆராய்ந்து தொல்காப்பியம் நன்னூல் சொல்லதிகாரம் 1971 என்ற நூல் அதே அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வெளியிடப்பட்டது.

மு அருணாசலப்பிள்ளை தொல்காப்பிய பொருளதிகாரத்திற்கு உரைவளம் காண முற்பட்டார். அதன் பயனாக பொருளதிகாரம் அகத்திணை இயலுக்கு உரை கண்டார். பின் உடல் நலமின்மை காரணமாக அவரால் தொல்காப்பிய பணியை மேற்கொள்ள இயலவில்லை. அதனை அடுத்து க.வெள்ளை வாரணனார் தொல்காப்பிய அகத்திணை இயல் நீங்கலாக பிற இயல்களுக்கு தன் ஆய்வுரையுடன் கூடிய உரை வளத்தை எழுதினார். இதில் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், சோமசுந்தர பாரதியார் போன்ற உரையாசிரியர்களின் கருத்துகளை எடுத்துக் காட்டி தன் விளக்கவுரையையும், ஆய்வுரையையும் எழுதி நூற்பாக்களை விளக்கியுள்ளார். இதனால் தொல்காப்பியத்தை நம்மால் ஆய்வு நோக்கில் விளங்கிக்கொள்ள முடியும்.

1. **தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணை இயல் உரைவளம் - 1983.**
2. **தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் உரைவளம் - 1983**
3. **தொல்காப்பியம் பொருளதிகாரம் கற்பியல் உரைவளம் - 1983**
4. **தொல்காப்பியம் பொருளதிகாரம் பொருளியல் உரைவளம் - 1983**
5. **தொல்காப்பியம் பொருளதிகாரம் உவமையியல் உரைவளம் - 1986**
6. **தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் உரைவளம் - 1986**
7. **தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் உரைவளம் - 1989**
8. **தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் உரைவளம் - 1994**

ஆகிய இந்த நூல்களின் வாயிலாக வெள்ளை வாரணனார் ஆற்றிய இலக்கணப் பணியை அடையாளப்படுத்திக் கொள்ள முடிகிறது.

**இலக்கியப் பணிகள்:**

கு வெள்ளை வாரணனாரின் இலக்கியப் பணிகள் என்று அடையாளப்படுவது அவர்தம் சங்க இலக்கியத்திலிருந்து சைவத் திருமுறைகள் வரை உள்ள இலக்கியங்களைக் கூறலாம். சங்க கால தமிழ் மக்கள் தம் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சடங்கு முறைகள் போன்றவற்றை வெளிப்படுத்துவதோடு மட்டுமின்றி சங்க கால தமிழரின் போர், வீரம், அரசியல் பொருளாதார வளர்ச்சி போன்றவை பிறருக்கு அறிமுகப்படுத்தும் வகையில் விளக்கி எழுதியுள்ளார். அவர்தம் சங்ககால தமிழ் மக்கள் 1948 என்ற நூல் இதனை வெளிப்படுத்துகிறது.

தமிழகத்தில் ஏற்பட்ட மொழி அரசியலை மாற்றி தமிழே ஆட்சி மொழியாக வேண்டும் என்று வலியுறுத்தி போராடிய மறைமலையடிகள், தந்தை பெரியார் போன்றோரின் வரிசையில் வெள்ளை வாரணனாரும் தன்னை இணைத்துக் கொண்டு தமிழை ஆட்சி மொழியாக்க இராஜாஜியிடம் வலியுறுத்தும் நோக்கில் பாந்தளூர் வெண்கோழியார் என்னும் புனைப்பெயரில் “காக்கை விடு தூது” எனும் கவிதை நூலை 1938 இல் வெளியிட்டார். பின் தமிழை ஆட்சி மொழியாக்க தமிழக அரசும் முன்வந்தது.

**சமயப் பணிகள்:**

தமிழில் மிகுதியாக இருப்பது பக்தி இலக்கியங்களே. அதனாலேயே தமிழ் மொழியை பக்தி மொழி என அழைப்பர். க.வெள்ளை வாரணனார் சைவ சமயம் சார்ந்து கிடைக்கக் கூடிய இலக்கியங்களையும், தத்துவ நூல்களையும் ஆராய்ந்து பல ஆய்வு நூல்களை எழுதியுள்ளார். அதன் வரிசையில் பன்னிரு திருமுறை வரலாறு பகுதி-1 1961, பன்னிரு திருமுறை வரலாறு பகுதி-2 1969 ஆகிய இரண்டு நூல்களும் பன்னிருதிருமுறைகளின் வைப்புமுறை, நாயன்மார்களின் காலம், சிவபெருமானின் பெருமைகள் மற்றும் தல வரலாறு போன்றவற்றை ஆழமாகவும் நுணுக்கமாகவும் கூறுவதாக அமைந்துள்ளன. நாயன்மார்களின் பாடல்களை சங்க இலக்கியம், திருக்குறள், சிலப்பதிகாரம் போன்றவற்றோடு ஒப்புமைப்படுத்தி கூறுவது இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

குறிப்பாக மாணிக்கவாசகரின் கால ஆராய்ச்சி குறித்து வெள்ளை வாரணனார் எழுதியதைப் பாராட்டி தமிழக அரசு அவருக்கு விருது வழங்கி சிறப்பித்தது. 1973 இல் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித் துறையால் “தமிழ்ச் செம்மல்” என்ற விருது வழங்கப்பட்டது. இவருடைய திருவருட்பா சிந்தனை 1986 என்ற நூலைப் பாராட்டி தமிழக அரசு, தமிழ் வளர்ச்சித்துறை முதல் பரிசு வழங்கி சிறப்பித்தது. அதுமட்டுமின்றி சைவ சமயம் சார்ந்து அமைந்துள்ள சைவ தத்துவங்களையும் இலக்கியங்களையும் ஆராய்ந்து நூலாக்கம் செய்தார் க.வெள்ளை வாரணனார். அவை பின்வருமாறு:

1. **சைவ சித்தாந்த சாத்திர வரலாறு**
2. **திருமந்திர அருள்முறைத் திரட்டு - 1973**
3. **திருவருட் பயன் - 1965**
4. **அற்புதத் திருவந்தாதி உரை - 1970**

5. திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் - 1982

இதுமட்டுமின்றி 1954-இல் அரபந்த நாவலர் இயற்றிய “பரத சங்கிரகம்” என்னும் நாட்டிய நூலைப் பதிப்பாசிரியராக இருந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வாயிலாகப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இந்நூல் அவர்தம் நாட்டிய அறிவைப் புலப்படுத்தும் நூலாக அமைகிறது. அது மட்டுமின்றி அவர் எழுதிய இசைத்தமிழ் 1979 என்ற நூல் தமிழ் இசை குறித்த புரிதலை நமக்குத் தருகிறது. யாழ் நூல் இயற்றிய விபுலானந்தர் தன் ஆசிரியராக இருந்த காலத்தில் அவரோடு நெருங்கிப் பழகிய க.வெள்ளை வாரணனார் தமிழ் இசை பற்றிய புரிதலை பெற்றார். விபுலானந்தரின் யாழ் நூலுக்கு அணிந்துரை வழங்கும் அளவிற்கு வெள்ளை வாரணனார் உயர்ந்து நின்றார்.

**காலச்சூழல்:**

க வெள்ளை வாரணனார் தன்னை சிறந்த ஆய்வாளராக, படைப்பிலக்கியவாதியாக, பதிப்பாசிரியராக எல்லாம் அடையாளப்படுத்திக்கொள்ள அவர் இருந்த சமூகச் சூழலை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அவருடைய காலகட்டத்தில் தமிழகத்தில் சுயமரியாதைச் சிந்தனை பெரிதாக வளர்ந்தது. 1920களில் தந்தை பெரியாரால் ஏற்படுத்தப்பட்ட இந்த இயக்கம் தமிழில் தோன்றிய இலக்கண இலக்கியங்களை விவாதப் பொருளாக்கி சில முற்போக்கான கேள்விகளை முன்வைத்தன.



இது வெள்ளை வாரணனார் உள்ளிட்ட ஆய்வாளர்களை பெரிதும் பாதித்தது. அதனால்தான் மறைமலையடிகள், மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை, தமிழ்த் தென்றல் திரு.வி.க, நாமக்கல் கவிஞர் போன்ற பல படைப்பாளர்கள் தன்னை அடையாளப்படுத்திக் கொண்டனர். அவர்களின் வரிசையில் க.வெள்ளை வாரணனாரும் தமிழின் பழமையான இலக்கண இலக்கியங்களை தன் நுண்மாண் நுழைபுலம் கொண்டு ஆராய்ந்தார்.

**முடிவுரை:**

இந்தியாவில் வழங்கப்படும் மொழிகளில் ஒன்றான தமிழ் மொழியின் பழமை குறித்தும் அதன் இலக்கண வளமை பற்றியும் வெள்ளை வாரணனாரின் பங்களிப்பை விளக்கும் நோக்கில் அமைந்துள்ளது இக்கட்டுரை. தரவுகளை சேகரித்து தக்க சான்றுகளுடன் கருத்தை நிறுவ வேண்டும் என்ற ஆய்வு முறையை வெள்ளை வாரணனார் தன் ஆய்வுகளில் கடைபிடித்துள்ளார்.

ஆதனால் கிடைத்த துல்லியமான முடிவுகளைப் பாராட்டி தமிழக அரசும் அவரை சிறப்பித்து பரிசு வழங்கியுள்ளது. தமிழுக்கு க.வெள்ளை வாரணனார் ஆற்றிய பணியைப் போன்று திராவிட மொழிகளில் பல்வேறு ஆராய்ச்சியாளர்கள் ஆய்வு முடிவுகளை தந்திருக்கக் கூடும். ஆதனை ஒப்பு நோக்கி ஆராய வேண்டியது இக்காலத்தின் தேவையாகிறது என்பதையும் இக்கட்டுரையால் உணரப்படுகிறது.

(☺)(☺)(☺)(☺)(☺)

# கற்றறிந்தோர் ஏத்தும் கலியின் வாழ்வியல் கூறுகள்

**திருமதி இரா கவிதா**
உதவிப்பேராசிரியர் - தமிழ்த்துறை
பகுதிநேர முனைவர்பட்ட ஆய்வாளர்
டாக்டர் எம.ஜிஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
அடையாளம்பட்டு (மதுரவாயல்) சென்னை-95.
kavitha0143@gmail.com

*****

கலித்தொகை – கலிப்பாக்களின் தொகுப்பு. கலிப்பா – கலிப்பாட்டு, ஆசிரியப்பாவைப் போல் கலிப்பாவும் சொல்லக் கருதிய பொருள்களை விளக்கமாகச் சொல்லுவதற்கு ஏற்றபாட்டு. அகப்பொருள் செய்திகளை அழகாகக் கூறுவதற்குத் தகுந்தது. கலிப்பா என்பது முன்னோர் கொள்கை. கலிப்பாடல்களை இசையுடன் பாடலாம். ஒரே பாடலைப் பல இசைகளிலே இணைத்துப் பாட முடியும். சொல்லத் தொடங்கிய பொருளைத் தொகுத்துக் கூறலாம். இத்தகைய சிறந்த பாடல்களின் தொகுப்பே கலித்தொகை.

கலித்தொகை அமைப்பிலே ஐங்குறுநூற்றைப் போன்றது. ஐந்து பகுதிகள் அடங்கியிருக்கின்றன. ஐந்தும் ஐந்து தனித்தனிப் புலவர்களால் பாடப்பட்டவை. பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி,முல்லைக்கலி, நெய்தற்கலி இவைகளே அந்த ஐந்து பகுதிகள்.

**கலித்தொகையின் சிறப்பு:**

கலித்தொகைப் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறுகதையைப் போல அமைந்திருக்கின்றன. ஒவ்வொரு பாடலுக்கு ஒவ்வொரு படம் அமைத்து அப்பாடல் கருத்தை விளக்கலாம். காதலனுக்கும் காதலிக்கும் நடைபெறும் உரையாடல், தலைமகளுக்கும் தோழிக்கும் நடைபெறும் உரையாடல், தோழிக்கும் நற்றாய்க்கும் நடைபெறும் உரையாடலை, தலைவன் தன்தோழனிடம் பேசுவது, தோழி தலைவியுடன் பேசுவது, இவை போன்ற பகுதிகள் எல்லாம் மிகவும் சுவையுடன் எழுதப்பட்டிருக்கின்றன.

கைக்கிளைத்திணை, பெருந்திணைப் பாடல்களிலே நகைச்சுவையைக் காணலாம். பாலைவனக் காட்சி அங்கே வாழ்வோரின் வாழ்க்கைநிலை, மலைக்காட்சி, அங்கு வாழும் மக்களின்செயல்கள், மருதநிலத்தின் இயற்கைவளம், அங்குள்ள மக்களின் நாகரிகம், அவர்களுடைய உயர்தரமான இல்லறவாழ்வு, முல்லை நிலத்து மக்களின் பொழுது போக்கு, அவர்களுடைய வாழ்க்கை, அந்த நிலத்தின் இயற்கைக் காட்சி நெய்தல் நிலத்தின் தோற்றம். அந்நில மக்களின் வாழ்க்கை இவைகளையெல்லாம் படிப்போர் உள்ளத்திலே பதியும்படி கூறுவதிலே கலித்தொகைப் பாடல்களுக்கு இணையாக வேறு எப்பாடல்களையும் எடுத்துக்காட்ட முடியாது.

**சுவையுடன் கதை சொல்லும் பாங்கு:**

குறிஞ்சிக்கலியில் கூறப்படும் செய்தி மிகவும் வேடிக்கையானது. நகைச்சுவை பொருந்தியது. தலைவனும், தலைவியும் களவு மணத்திலே காலங்கடத்தி வருகின்றனர். ஒருநாள் இரவு; தலைவன் குறித்த இடத்திலே தலைவி போய் நிற்கின்றாள். அச்சமயம் ஒரு வேடிக்கையைப் பற்றித் தலைவி தன் தோழியிடம் கூறுகின்றாள் இந்த முயற்சியில் அமைந்தது இக்கதைப்பாடல்.

தோழியே! “நமது சேரியிலே கருங்குட்டத்தான், கால் கை குறைந்தவன் ஒரு பாப்பான் மறைந்து திரிகின்றான். அவனிடம் அகப்படாமல் பாதுகாத்துக்கொள்” என்று நீ கூறியிருக்கிறாய் அல்லவா? ஒருநாள் இரவு அவனிடம் நான் அகப்பட்டுக் கொண்டு பட்டபாட்டைக் கேள்!

எல்லாருந் தூங்குகின்ற நள்ளிரவிலே துணியால் போர்த்திக் கொண்டு, தலைவன் குறிப்பிட்ட இடத்திலே போய்நின்று கொண்டிருந்தேன். அந்த மொட்டைத்தலைக் கருங்குட்டப்பார்ப்பான் என்னை பார்த்தவிட்டான். ஏதோ உளறினான்; பணிந்தான்! நேரமில்லா நேரத்திலே இங்கு நின்ற நீர் யார்? என்றான்.

வைக்கோலைக் கண்ட எருமை மாட்டைப்போல் என் பக்கத்திலேயே நின்று விட்டான். அதோடு அவன் சும்மா இருந்தானா? “பெண்ணே, வெற்றிலைபாக்கு போட்டுக்கொள்” என்றான். தன் பாக்குப் பையை அவிழ்த்தான். வெற்றிலை பாக்கு எடுத்துக்கொடுத்தான். நான் இவ்வளவுக்கும் ஒன்றும் வாய் பேசவில்லை. வாளா நின்றேன்.

உடனே அவன்சிறிது எட்டி விலகினான், “நீ சிறுமி, என் கையில் அகப்பட்டாய்! நான் இவ்வூர் ஆண் பிசாசுகளிலே ஒருவன். என்னை நீ துன்புறுத்தினால் இவ்வூரார் உனக்குப் பலிகொடுக்காமல் பண்ணிவிடுவேன்” என்ற ஏதேதோ உளறி கொட்டினான்.

அவன் என்னை ஏதோ ஓர் தேவதையென்று நினைத்துக் கொண்டான். பயந்து போனான். இவ்வுண்மையை நான் உணர்ந்து கொண்டேன். உடனே தாமதமில்லாமல் ஒரு கைமணலை அள்ளினேன்; அவன்மேல் வீசினேன். அவன் ஆவென்று கூச்சல் போடத் தொடங்கி விட்டான். இம்மாதிரி அவனால் இரவுக் குறியலே, நகைப்புக்கிடமான ஒரு காரியம் நடந்துவிட்டது.

இப்பாடலால் ஒரு பெண் தனது மவுனத்தால் எதிரியை நடுங்கச்செய்து தப்பித்துக் கொண்ட செய்தியைக்காணலாம். இவை போன்ற கதைகள் இன்னும் பல உண்டு.

**உவமைகள்:**

கலித்தொகையிலே கூறப்படும் உவமைகள் மிகவும் தெளிவாக இருக்கும். கேட்போர் நெஞ்சத்திலே குடி கொள்ளுவதாக இருக்கும். உவமானங்களை எப்படித் தேர்ந்தெடுத்துத் தெரிவிக்க வேண்டும் என்பதற்கு அவைகள் வழிகாட்டுவன.

களவு மனத்திலே ஈடுபட்டு வாழ்ந்தான் ஒருத்தி,அவள் தன் காதலனுடன் சேர்ந்து, தன் பெற்றோர்க்குச் சொல்லாமல் அவனூர்க்குப் போய்விட்டாள். அவனைக் காணாமல்வருந்திய செவிலித்தாய் அவளைத் தேடிக்கொண்டு புறப்பட்டாள். அவள் போகும் வழியிலே சில முனிவர்கள் எதிர்பட்டனர். “என் மகளும், மற்றொருத்தியின் மகனும் இவ்வழியே போனதைப்பார்த்தீர்களா? என்று அவர்களிடம் கேட்டாள். “நாங்கள் அவர்களைப் பார்த்தோம்” என்று அவள் கூறினர். அவளுக்கு ஆறுதல் மொழிகளும் புகன்றனர்.

**“பலஉறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கு அல்லதை**
**மலையுளே பிறப்பினும் மலைக்கு அவைதாம் என் செய்யும்;**
**நினையுங்கால் நும்மகள் நுமக்கும் அங்கு அணையளே”**

கலவைச் சந்தனம், அதைப் பூசிக்கொள்ளுவோர்க்கும்தான் நறுமணம் நல்கும், அதனால் என்ன பயன்? நினைத்துப்பார்த்தால் உன்மகளும் உனக்கு அப்படித்தான்.

**சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க்குஅல்லதை**
**நீருளே பிறப்பினும் நீர்க்கு அவைதாம் என்செய்யும்**
**தேருங்கால் நும்மகள் நுமக்கும்ஆங்கு அனையளே"**

**"ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க்கு அல்லதை**
**யாழுளே பிறப்பினும் யாழ்க்கு அவைதாம் என் செய்யும்?**
**சூழுங்கால் நும்மகள் நுமக்கு ஆங்கு அணையளே"**

ஏழு நரம்புகளையுடைய இனிய இசைக் கருவி (யாழ்) அதை வாசிப்பவர்க்குத்தான் இன்பந்தரும். யாழிலே இசை பிறந்தாலும் அந்த இசையால் யாழுக்கு என்ன பயன்? எண்ணிப் பார்த்தால் உமது மகளும் உமக்கு அப்படித்தான்"

இவ்வாறு மகளைப் பிரிந்து வருந்திய செவிலித் தாய்க்குக் கூறிய ஆறுதல் மொழிகள். இது கலித்தொகையில் பாலைக்கலி பாடலில் அமைந்துள்ள பொருள் பொதிந்த கருத்துக்கள்.

**அரசியல்:**

குடிமக்களுக்குக் குறையுண்டாகமல் பாதுகாக்க வேண்டும். இத்தகைய ஆட்சியே சிறந்த அரசாட்சி. இந்த நல்லாட்சியை எவரும் அசைத்து அழித்துவிட முடியாது. இத்தகைய நல்லாட்சி நடைபெறும் நாட்டில்தான் அமைதியும் இன்பமும் குடிகொண்டிருக்கும். செல்வம் கொழித்திருக்கும். எல்லா மக்களும் வறுமையின்றி வாழ்க்கை நடத்துவர். பண்டைத்தமிழர்கள் இவ்வுண்மையை அறிந்திருந்தனர். ஆதலால் அவர்கள் அரசியலிலே கண்ணும் கருத்துமாக இருந்தனர். சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாவற்றிலும் இக்கருத்தைக் காணலாம்.

கலித்தொகைப் பாடல்கள் பலவற்றிலே செங்கோல் ஆட்சி சிறப்பித்துக் கூறப்படுகின்றது. கொடுங்கோலாட்சியின் கொடுமை விளக்கப்படுகின்றது.

**"அலவுற்றுக் குடிகூவ, ஆறு இன்றிப் பொருள் வெஃகிக்**
**கொலை அஞ்சா வினைவரால், கோல் கோடியவன் நிழல்**
**உலகு போல், உலறிய உயர் மர வெஞ்சுரம்"**

குடிமக்கள் துன்புற்று அலறும்படி - அறமற்ற வழியிலே அவர்களிடம் பொருளை விரும்பி கொலைக்கஞ்சாமல் ஆளும் அதிகாரிகளைக் கொண்டு கொடுங்கோலாட்சி புரியும் மன்னவனுடைய நாடு பாழாகும். அதுபோல உலர்ந்து போன உயர்ந்த மரங்களையுடைய பாலைவனம் காணப்படுகின்றது.

குடிமக்களிடம், அளவுக்கு மீறி வரிவாங்கி அறங்கொல்லும், அதிகார வர்க்கத்தாலும், அவர்களுக்கு ஆதரவளிக்கும் அரசாங்கத் தலைவராலும் நாடு பாழாகும் என்பதை இதனால் அறியலாம்.

**செல்வத்தின் சிறப்பு**

இம்மையிலே இன்பமடைச் செல்வமே ஏற்றக்கருவி. மறுமைக்கான நல்லறங்களைச் செய்வதற்கும் செல்வமே சிறந்த துணை, ஆதலால் பொருளீட்டும் முயற்சியிலே ஒவ்வொரு ஆடவனும் ஈடுபடவேண்டும். இது பழந்தமிழர் கொள்கை. தேட்டம் என்பது செல்வத்திற்கு ஒரு பெயர். ஈட்டம் என்பதும் அதன் பெயர். தேடப்படுவது தேட்டம்; ஈட்டப்படுவது ஈட்டம்.

**“அரிதாய அறன் எய்தி அருளியோர்க்களித்தாலும்
பெரியதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
பரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும்”**

பொருளே சிறந்த அறத்தை அடையச் செய்யும்; தனது பெரிய பகைவர்களை வென்று முறியடிக்கச் செய்யும்; தனது எதிரிகளை அழிக்கச் செய்யும்; அன்பு நிறைந்த காதலுடன் இல்லற வாழ்க்கையிலே இன்புற்று வாழவும் செய்யும்.

செல்வமுடையவரே இவ்வுலகில் சிறந்து வாழ்வர். செல்வமுற்றவர்களின் வாழ்விலே இன்பமில்லை. அவர்களால் நல்லறங்களை நடத்த முடியாது; என்பதை இதனால் காணலாம். பொருளாதார உயர்வு தாழ்வுள்ள சமுதாயத்தில் இத்தகைய உணர்ச்சி மக்கள் மனத்திலே படிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் மக்கள் முன்னேற முடியும்.

**“மடியிலான் செல்வம் போல் மரம நந்த”**

சோம்பல் இல்லாதவனிடம் செல்வம் பெருகியிருப்பதைப் போல் மரங்களிலே மலர்கள் பூத்திருந்தன. இது முயற்சி திருவினையாக்கும் என்ற கருத்தைக் காட்டுகின்றது.

**செல்வம் நிலையாமை**

செல்வத்திற்குக் காரணம் முயற்சி மட்டும் அன்று பழவினையும் செல்வம் சேருவதற்குக் காரணமாகும். இக்கருத்தும் பழந்தமிழர்களிடம் குடிகொண்டிருந்தது.

செல்வம் நிலையுள்ளது. அழியாதது; என்று நம்பி அதைச் சேர்ப்பதிலே காலங்கடத்துவது அறியாமை. செல்வம் நிலையற்றது; வரும் போகும் ஆதலால் செல்வமுள்ளபோதே நல்ல செயல்களைச் செய்ய வேண்டும், இதுவும் பழந்தமிழர் கொள்கை. இதை வலியுறுத்தவே செல்வம் நிலையற்றது என்பதைப் பற்றிப் பல நூல்களிலும் பாடியிருக்கின்றனர்.

**“மரீஇத் தாம் கொண்டாரைக் கொண்டக்காற் போலாது
பிரியும் பால் பிறர் எள்ளப் பீடின்றிப் புறமாறும்திரு”**

செல்வமானது தான் சேர்ந்தாரைப் பெருமைக்கு ஆளாக்கும், அவரை விட்டுப் பிரியும்போது, சேர்ந்த காலத்தைப் போல் இல்லாமல், அவரை மற்றவர்கள் பார்த்து “ஏழை வறியவர்” என்று பரிகாசிக்கும்படி பெருமையின்றி வேறிடத்துக்குப் போய்விடும்”

**“கிழவர் இன்னோர் என்னாது பொருள்தான்
பழவினை மருங்கில் பெயர்பு பெயர்பு உறையும்”**

பொருளானது தனக்கு உரியவர் இன்னார்தான் என்று கருதி ஒருவரிடத்திலே நிலைத்திராது, நல்வினையுடையவர்களிடமெல்லாம் மாறிமாறிச் சென்று தங்கும். இவைகள் செல்வம் நிலையற்றது என்பதைக் காட்டுவன. முயற்சி மட்டும் செல்வத்திற்குக் காரணம் அன்று; பழவினையும் செல்வத்திற்குக் காரணம் என்று கருத்தையும் இவைகள் காட்டும்.

**நீதிமொழிகள்:**

மக்களுக்கு அறிவு புகட்டும் நீதிமொழிகள் பலவற்றைக் கலித்தொகையிலே காணலாம். அவைகள் சிறந்த அறிவுரைகள், உணர்வோர் உள்ளத்திலே ஓடாமல் ஊன்றி நிற்கக் கூடியவைகள்.

**"செம்மையின் இகந்து ஓரிப் இப்பொருள் செய்வார்க்கு அப்பொருள்**
**இம்மையும் மறுமையும் பகையாவது அறியாயோ?**

ஒழுங்கு தவறிய நெறியிலே பொருள் சேர்ப்பவரிடம் அப்பொருள் நிலைத்திராது, இம்மையிலும் பகையாகி நின்று துன்பந்தரும். மறுமையிலும் பகையாகி நின்று துயர் விளைவிக்கும். நேர்மையான வழியிலே பொருள் சேர்க்க வேண்டும். பொருளாசை அறமற்ற முறையிலே செல்வம் சேர்ப்பது தவறு என்று கூறுகிறது.

**"பிறர் நோயும் தம் நோய்போல் போற்றி அறன் அறிதல்**
**சான்றவர்க் கெல்லாம் கடன்"**

பிறர்க்கு உண்டான துன்பத்தையும் தமக்கு நேர்ந்த துன்பமாக எண்ணிப் பாதுகாப்பது. அறநெறியை அறிந்து நடத்தல். இவை அறிஞர்களின் கடமை. இவை போன்ற இன்னும் பல சிறந்த அறவுரைகளைக் காணலாம்.

**கூடாநட்பு:**

நண்பருக்கு உதவி செய்தல் தன் கடமை என்று நினைக்கின்றவர்களுடன் ஏற்படும் தொடர்புதான் இடையிலே அறுந்து போகாது, என்றும் பிணைந்து நிற்கும். நண்பர் இருவரும் இத்தகைய எண்ணமுடையவர்களாயிருந்தால் அவர்களுடைய நட்புக்கு எப்பொழும் முடிவேயில்லை.

**"சிறப்புசெய்து உழையராப் புகழ் ஏற்றி மற்றவர்**
**புறக்கொடையே பழி தூற்றும் புல்லியார் தொடர்புபோல்"**

நண்பர் தமது பக்கத்திலே இருக்கும்போது அவரைக் கொண்டாடுவார்கள் புகழ்ந்து போற்றுவார்கள். அவர்கள் அப்பாற் போனபின் அவர்களைப் பழித்துப் பேசுவார்கள் இவர்கள் அற்பர்கள்.

**"செல்வத்துள் சேர்ந்தவர் வளன்உண்டு மற்றவர்**
**ஒல்கிடத்து உலப்பிலா உணர்விலர் தொடர்புபோல்**
**.................................................................................**
**பிரிந்தக்கால் பிறர்க்குரைக்கும் பீடிலார் தொடர்புபோல்"**

ஒரவர் செல்வமுள்ளவராயிருக்கும் காலத்தில் அவருடன் ஒன்றாக உறைந்திருப்பார்கள். அவர்களுடைய செல்வத்தைச் சுரண்டித் தின்பார்கள். அவர் வளமிழந்து வறுமையுற்ற காலத்தில் ஒரு சிறிதும் உதவி செய்யமாட்டார்கள். இவர்கள் அறிவிலிகள்.

ஒன்றுபட்ட நண்பராயிருக்கும் போது நண்பருடைய இரகசியங்களையெல்லாம் தெரிந்து கொள்ளுவார்கள். நட்பு முறிந்து அவர்களை விட்டுப்பிரிந்தபின், தாம் அறிந்த இரகசியங்களைப் பிறரிடம் வெளியிடுவார்கள். அவர்கள் பெருந்தன்மையற்றவர்கள், அற்பர்கள். இவர்களுடைய நட்பு ஆபத்தானது.

புறங்கூறுவோன், தன்னலமே குறிக்கோளாக உடையவன் இரகசியத்தை வெளியிடுவான். இவர்கள் நண்பர்களாகக் கொள்ளுவதற்குத் தகுதியற்றவர்கள். அவர்களுடன் கொள்ளும் நட்பு கூடாநட்பாகும். இக்கருத்தை மேலே காட்டிய பாடற் பகுதிகளிலே காணலாம்.

**கற்புடைமகளிர்**

பெண்களின் கற்பைப் பற்றிக் கலித்தொகைப் பாடல்கள் பலவற்றிலே காணலாம். சங்க இலக்கியங்களிலே பெண்களுக்கு மட்டுந்தான் கற்பு வலியுறுத்தப்படுகின்றது. பெண்கள் மட்டுந்தான். ஆடவர்களை மணம் புரிந்து கொண்ட மனைவிமார்கள் மட்டுந்தான் கட்டுப்பட்டுடன் வாழவேண்டும். கற்புடையவர்களாய் வாழ வேண்டும் என்று கருதினர். ஆண்களுக்கு எத்தகைய கட்டுப்பாடும் இல்லை. அவர்கள் மனம் போனபடி திரியலாம். ஆண்கள் பல பெண்களை மணந்தனர். பரந்தையர்களுடனும் கூடிக் களித்தனர். இது இக்காலத்திற்கு ஏலாத ஒழுக்கம்.

**“வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்”**

அருந்ததியைப்போல எல்லோரும் தொழுது போற்றும்படி விளக்குகின்ற கற்பினையுடையவள்

**“என்தோழி
அருமழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே”**

என் தோழியினிடம் அரிய மழையைத் தருவிக்கம்படி வேண்டிக் கொண்டாலும் அதைப் பெய்யும்படி செய்யும் பெருமையுடையவள். இவைகளே பெண்களின் கடமை, கற்புடைமை என்று பண்டைத்தமிழர்கள் கருதினர்.

**பழக்க வழக்கங்கள்**

கலித்தொகையிலே பண்டைத் தமிழ் மக்களிடம் குடிகொண்டிருந்த பல பழக்கவழக்கங்களைக் காணலாம். பல்லி சொல்லுக்குப் பலன் உண்டு. பெண்களுக்கு இடது கண்துடித்ததால் அதனால் நன்மையுண்டு. தவத்திலே தமிழ் மக்களுக்கு நம்பிக்கையுண்டு. முன்பிறப்பிலே தவஞ் செய்தவர்கள் இப்பிறவியில் எல்லா இன்பங்களையும் நுகர்ந்திருப்பார்கள். பொய்சாட்சி சொன்னவன் ஒரு மரத்தின் கீழ் இருப்பானாயின் அந்த மரம் பற்றியெறிந்துவிடும். சந்திரனை இராகு என்னும் பாம்பு பிடித்துக் கொள்ளுவதனால் சந்திர கிரகணம் ஏற்படுகின்றது. தைமாதத்திலே நீராடி நோன்பிருக்கும் வழக்கம் பெண்களிடம் உண்டு. இவை போன்ற இன்னும் பல பழக்க வழக்கங்களை கலித்தொகையிலே காணலாம்.

**முடிவாக**

கற்றறிந்தோர் போற்றும் கலித்தொகையிலே தீந்தமிழ்த்தேனை நுகரலாம். சிந்தனைக்கு விருந்தளிக்கும் சிறந்த செய்திகளைக் காணலாம். சங்க நூலாகிய இவ்வெட்டுத்தொகை நூலில் இயம்பும் உண்மைகள் இந்நூலைப் படிப்போர் இன்னும் பல அரிய செய்திகளை அறிந்து உணரலாம். பழந்தமிழர் பண்பாட்டை அறிவதற்கு இக்கலித்தொகை மிகப் பெரிய ஆய்வு பெட்டகமாக விளங்குகிறது. தமிழ்நாட்டு வரலாற்று ஆராய்ச்சிக்கு இந்நூல் பெருந்துணைசெய்யும்.

(☺)(☺)(☺)(☺)

# தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் பங்கு

**முனைவர் ஜெ புவனேஸ்வரி,**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை, தேசியக்கல்லூரி,திருச்சி
buvi1727@gmail.com

*****

வளர்ந்து வரும் கலைகளில் இதழியல் கலையும் ஒன்றாகும். இதழியல் சமுதாய, அரசியல், பொருளாதார வளர்ச்சி நிலைகளையும், பண்பாட்டுச் சிறப்பினையும் எடுத்துரைக்கும் கலையாகும். சமுதாய மாற்றங்களையும், புதுமைகளையும் புகுத்துவதில் இதழியல் சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

**இதழ்களின் தோற்றம்**

மேலை நாட்டவர் தொடர்பால் இந்தியாவில் அச்சுக்கலை வளர்ச்சி பெற்று இதழியல் வளர்ச்சிக்கு ஊன்றுகோலாக அமைந்தது. இந்திய மக்களின் கல்வி மற்றும் அரசியல் விழிப்புணர்வால் இதழியல் துறையானது வளர்ச்சியடையத் தொடங்கியது. இந்திய செய்தித்தாள் ஔரங்கசீப்பின் காலத்திலேயே தோன்றியுள்ளது. தீவிர சமய உணர்ச்சியும் மிக எளிய வாழ்க்கையும் கொண்டிருந்த மொகலாய மன்னர் செய்தித்தாள்களை ஆதரித்துள்ளனர்.



“ஔரங்கசீப்பின் பணியாளர்கள் நாடெங்கும் சென்று மன்னருக்குத் தேவையான அரசியல் செய்திகள் அனைத்தையும் அனுப்பிக் கொண்டிருந்தனர். அவை அனைத்தையும் இரவு நேரங்களில் படிக்கச் செய்து அதற்கேற்ப நடவடிக்கை எடுப்பது ஔரங்கசீப்பின் பணியாக இருந்தது.”(ப.பத்மநாபன், சு.தில்லைவனம், இதழியல்-தகவல் தொடர்பியல் ஆய்வுகள், ப.367)
இதன் வழியாக செய்திகளை அறிவிக்கும் பணி ஔரங்கசீப்பின் காலத்திலேயே தொடங்கியதை அறிய முடிகிறது. பண்டைக் காலத்தில் அரசாங்கக் கட்டளைகள், அறச் செய்திகள், புத்த மதக் கொள்கைகள் ஆகியவற்றை அசோகர் தூண்களிலும் பாறைகளிலும் செதுக்கி மக்களுக்குத் தெரிவித்தார். எனவே இந்திய இதழியலின் முன்னோடியாகக் கருதப்படுகிறார்.

1780-ஆம் ஆண்டு ஜனவரி 29-ஆம் நாள் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி என்பவர் ‘பெங்கால் கெசட்’ என்ற இதழை வெளியிட்டார். இதுவே இந்தியாவில் அச்சில் வெளிவந்த முதல் இதழாகும். பின்னர் ரிச்சர்ட் ஜான்சன் என்பவரால் 1985-ஆம் ஆண்டு ‘மெட்ராஸ் கூரியர்’ என்னும் இதழ் வெளியானது. இதனைத் தொடர்ந்து பல்வேறு இதழ்கள் தோற்றம் பெற்றன.

**தமிழகத்தில் இதழ்கள்**

ஒரு நாட்டின் உயர்வுக்கும் வளர்ச்சிக்கும் இதழ்கள் செம்மையான பணியை ஆற்றி வருகின்றன. மக்களை நல்வழிப்படுத்தும் நோக்கில் மத, இன, அரசியல் புலத்தில் தமிழகத்தில் தோன்றிய இதழ்களின் வரலாற்றை ஆராய்வோமானால் தமிழகச் சூழலில் தமிழ் இதழ்கள் தோன்றுவதற்குக்

காரணமாக இருந்தவர்கள் கிறித்துவ பாதிரியார்கள் ஆவர். மதப் பரப்பியல் நோக்கில் நிறுவப்பட்ட சென்னைக் கிறிஸ்தவச் சங்கம் 1831-இல் 'தமிழ்ப் பத்திரிகை என்ற மாத இதழை முதன் முதலில் வெளியிட்டது. அதனைத் தொடர்ந்து திருவனந்தபுரம், நாகர்கோவில், பாளையங்கோட்டை, சென்னை, மதுரை முதலான தழிழகத்தின் பல பகுதிகளில் இருந்தும் கிறிஸ்தவப் பாதிரியார்கள் பல்வேறு இதழ்களை வெளியிட்டனர். இதனைத் தொடந்து பல்வேறு வகைப்பட்ட இதழ்கள் வெளிவந்தன.

**சமய இதழ்கள்**

இயற்கையின் சீற்றங்களைக் கண்ட மக்கள் தங்களது நிலையற்ற வாழ்க்கையை நினைத்து அஞ்சினர். இதற்கு ஒரு வடிகாலாக மக்கள் இறைசக்தியை நம்பத் தொடங்கினர். இதன்மூலம் மக்களிடையே ஆன்மீகம் செல்வாக்கு பெற்றது. எனவே பிற இதழ்களுக்கு இணையாக ஆன்மீக இதழ்களும் வெளிவரத் தொடங்கின.

**கிறிஸ்துவ இதழ்கள்**

கிறிஸ்துவ இதழ்கள் முதன் முதலில் சமயக் கொள்கைகளையும் போதனைகளையும் மக்களிடையே பரப்பின.



"1831-இல் சென்னைக் கிறிஸ்துவ சமயப் பரப்புக் கழகத்தார் வெளியிட்ட 'தமிழ் பத்திரிகை' என்ற மாத இதழ் தமிழில் வெளிவந்த முதல் கிறிஸ்துவ இதழாகும்."(ஞானராபின்சன், தமிழ்க் கிறிஸ்தவ மரபு, ப.17)

அதன் பின்னர் சுவிசேஷ பிரபாவ விளக்கம்(1841), சத்திய வேதக் கொடி(1862), அருணோதயம்(1863), திருச்சபை பத்திரிகை(1863), கற்பக விருட்சம்(1864), சத்திய வர்த்தமானி(1870), சிநேக போதன்(1875), தீர்க்க தரிசன வர்த்தமானி(1884), சத்திய தூதன்(1884), இயேசு நாதருடைய இருதய தூதன்(1890), சத்திய போதினி(1910), தமிழ்ச்சபை தீபிகை(1915), குருசடியின் குரல்(1928), ஞான தூதன்(1928), கத்தோலிக்கச் சபை(1940), உயிர் மீட்சி(1950), புத்துயிர்(1950), வருகையின் தூதன்(1958), ஜெப கிறிஸ்து(1955), வேளாங்கண்ணி குரலொலி(1958), விழித்தெழு(1960), சத்தியம்(1961), சுவிசேஷ பூரிகை(1963), மீட்பின் குரல்(1964) போன்றவை வெளிவந்தன. தற்பொது இயேசு அழைக்கிறார், இயேசு விடுவிக்கிறார் போன்ற இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

**இந்து இதழ்கள்**

கிறிஸ்துவ இதழ்களைத் தொடர்ந்து இந்து சமயத்தினரும் தங்களது சமயக் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் மக்களிடையே பரப்பும் நோக்கில் முதன் முதலில் 1864-இல் தத்துவ இதழான 'தத்துவ போதினி' என்ற இதழைத் தொடங்கினர். அதன் பின்பு விவேக விளக்கம் (1865), அமிர்தவசினி(1865) ஆகிய இதழ்கள் வெளிவந்தன.

"1870-இல் பிரம்ம சமாஜ கிளைகளைத் தமிழகத்தில் நிறுவி இந்து சமயம் சார்ந்த இதழ்களை வெளியிட்டனர்".(இரா.கோதண்டபாணி, இதழியல், ப.68)

இதனைத் தொடர்ந்து பிரம தீபிகை(1871), சைவ உதயபானு(1882), தத்துவ விவேசினி(1882), சன்மார்க்க போதினி(1885), சிவபக்தி பத்திரிகை(1890), ஞானபானு(1894), ஞானபோதினி(1897), சித்தாந்த தீபிகை(1897), சைவ போதினி(1901), ஞான சாகரம்(1902), திருநாவுக்கரசம்(1904), ஞானசித்தி(1908), பகவத் கீதை(1911), சித்தாந்தம்(1912), சைவம்(1914), இராமானுஜம்(1918), பரமஹம்ச ப்ரஹாசினா(1919), சமரச சன்மார்க்கம்(1927), சமய ஞானம்(1927), சிவநேசன்(1927), இந்து தர்மம்(1935), ஞான சம்பந்தம்(1941), காமகோடி(1941), தார்மீக ஹிந்து(1946), அருட்பெருஞ்ஜோதி(1947), இராமகிருஷ்ண விஜயம்(1958), திருக்கோயில்(1958), குமரகுருபரன்(1959), சைவம்(1961), வள்ளலார்(1963), அருள்(1966), ஞானபூமி(1980) போன்றவை ஆரம்ப காலத்திலும், பின்பு விஜய பாரதம், வேத முரசு போன்ற இதழ்களும் இந்து சமய இதழ்களாக வெளிவந்தன.

**இசுலாமிய இதழ்கள்**

இசுலாம் சமயத்தின் கருத்துகளை மக்களிடையே பரப்புவதற்காக 1909-ஆம் ஆண்டு முதன் முதலில் ‘இசுலாம் நேசன்’ என்ற இதழ் வெளிவந்தது. இதனைத் தொடந்து தத்துவ இஸ்லாம்(1919), தாருல் இஸ்லாம்(1922), இஸ்லாம்(1922), நூருல் இஸ்லாம்(1939), நூருல் ஹக்(1948), முஸ்லிம் முரசு(1948), தீனுல் இஸ்லாம்(1957), குர்ரானின் குரல்(1958), ரகமத்(1961), அல் இஸ்லாம்(1966), அறமுரகம்(1971) போன்றவை இஸ்லாம் சமய இதழ்களாக வெளிவந்தன.



**விடுதலைக்கு வித்திட்ட இதழ்கள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாட்டின் விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டு பல இதழ்கள் தோற்றம் பெற்றன. இந்திய விடுதலைப் போராட்ட வீரர்களில் ஒருவரான சுப்பிரமணிய ஐயர் எல்லா மக்களுக்கும் விடுதலை உணர்வை ஏற்படுத்தும் பொருட்டு 1882-இல் ‘சுதேசமித்ரன்’ என்னும் வார இதழைத் தொடங்கினார். இவரே தமிழ்ப் பத்திரிகையின் தந்தை எனப் போற்றப்படுகின்றார். இவரைத் தொடர்ந்து மகாகவி பாரதியார் 1907-ஆம் ஆண்டு ‘இந்தியா’ என்ற இதழைத் தொடங்கினார். இந்திய மக்கள் அனைவரும் நாட்டுப்பற்றுடன் திகழும் விதமாக மக்களிடத்தில் விடுதலை விழிப்புணர்வை ஏற்படுத்தும் விதத்தில் பல புரட்சிக் கருத்துக்களைத் தமது இதழில் வெளியிட்டார். தமிழ் இதழ்களில் முதன் முதலில் கருத்துப்படம் வெளியிட்ட பெருமை பாரதியாரையே சாரும். மேலும் பாரதியார் விஜயா, கர்மயோகி, சக்கரவர்த்தினி, சூரியோதயம் முதலான பல இதழ்களையும் நடத்தினார். ‘கர்மயோகி’ என்ற மாத இதழ் வேதாந்த கருத்துக்களை மக்களுக்கு எடுத்துச் சொல்வதற்காகப் பாரதியாரால் தொடங்கப்பட்டது. பாரதிக்குப் பிறகு டி.எஸ்.சொக்கலிங்கம் 1931-ஆம் ஆண்டில் ‘காந்தி’ என்ற வாரம் இருமுறை இதழையும், ‘வந்தே மாதரம்’ என்ற நாளிதழையும் தொடங்கி நடத்தினார்.

**திராவிட இயக்க இதழ்கள்**

திராவிட இயக்கம் என்பது பார்ப்பனிய ஆதிக்கம், அறியாமை, மூடபழக்க வழக்கங்கள் இவற்றிலிருந்து மக்கள் விடுபட வேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்டு தொடங்கப்பட்ட இயக்கமாகும். 1925-ஆம் ஆண்டு வரை காங்கிரஸ் கட்சியில் தீவிரமாகப் பணியாற்றி வந்த தந்தை பெரியார் தமது கட்சியில் பார்ப்பனிய ஆதிக்கம் இருப்பதை எதிர்த்துச் சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார். அப்போது ‘குடியரசு’ என்ற இதழ் இவரால் தோற்றுவிக்கப்பட்டது.

1933-ஆம் ஆண்டில் ‘புரட்சி’ என்ற வார இதழையும் பெரியார் நடத்தினார். ‘திராவிட நாடு’ என்னும் இதழ் அண்ணாவின் எழுத்தாற்றலைப் புலப்படுத்தியதோடு மட்டுமல்லாமல் தமிழ் உரைநடையையும் வளப்படுத்தியது. திராவிட நாடு இதழுடன் ‘காஞ்சி’ என்ற வார இதழையும் அண்ணா நடத்தினார். அக்கால திராவிட இயக்க இதழ்களில் இன்றும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் இதழ் ‘முரசொலி’ ஆகும். இவ்விதழின் நிறுவனரும் ஆசிரியரும் கலைஞர் கருணாநிதி ஆவார். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளைப் பரப்பும் இதழ்களாகத் தென்னகம், சமநீதி, அண்ணா, நீதியின் குரல், நீட்டோலை முதலியவை தொடங்கப்பட்டன. 1976-ஆம் ஆண்டில் ‘பொன்மனம்’ என்ற இதழ் வெளிவந்தது. எம்.ஜி.ஆரின் மறைவுக்குப் பின் ‘நமது எம்.ஜி.ஆர்’ என்னும் இதழ் வெளிவரத் தொடங்கியது. வைகோவைத் தலைவராகக் கொண்ட மறுமலர்ச்சித் திராவிட முன்னேற்றக் கழகம் ‘சங்கே முழங்கு’ என்ற இதழையும் வெளியிட்டது. இவை திராவிட சமூகத்தின் மேம்பாட்டுக்கான முற்போக்கு இதழ்களாகும்.

**இலக்கிய இதழ்கள்**

தமிழ் மொழியும் தமிழ் இலக்கியமும் வளர்ச்சியடைவதற்கு இலக்கிய இதழ்கள் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கனவாகும். பழங்கால இலக்கியப் பத்திரிகைகளில் முதலில் இடம்பிடிப்பது செந்தமிழ்(1902) என்னும் மாத இதழாகும். இது மதுரை சேதுபதி மன்னரால் தொடங்கி வைக்கப்பட்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் வெளியிடப்பட்டது. 1923-ஆம் ஆண்டு முதல் ‘செந்தமிழ்ச் செல்வி’ என்னும் இலக்கிய மாத இதழ் சென்னையிலிருந்து சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரால் வெளியிடப்பட்டது. இவ்விதழில் தமிழில் காலந்தோறும் ஏற்படும் மாற்றம், வரலாற்றுக்குப் பயன்படும் பல அரிய இலக்கிய, திறனாய்வு மற்றும் வரலாற்றுக் கட்டுரைகள் வெளிவருகின்றன. 1925-ஆம் ஆண்டு ‘தமிழ்ப்பொழில்’ என்னும் இலக்கிய இதழ் தஞ்சையிலுள்ள கரந்தை தமிழ்ச் சங்கத்தினரால் வெளியிடப்பட்டது. இவை தவிர புனைகதை இலக்கியத்திற்கெனச் சில இதழ்கள் வெளிவரத் தொடங்கின. குறிப்பாக பி.எஸ்.இராமையாவின் கூட்டு முயற்சியால் 1935-ஆம் ஆண்டு ‘மணிக்கொடி’ என்ற கதைப்பத்திரிகை வெளியானது. மணிக்கொடி படைப்பாளர்களின் எழுத்துக்களை வெளியிடுவதற்கென 1939-ஆம் ஆண்டு சென்னையில் க.நா.சுப்பிரமணியம் ‘சூறாவளி’ என்னும் இதழைத் தொடங்கினார். 1948-ஆம் ஆண்டு எம்.வி.வெங்கட்ராம் என்பவரால் ‘தேனி’ என்னும் இதழ் தொடங்கப்பட்டது. 1954-ஆம் ஆண்டு தொ.மு.சி.ரகுநாதன் திருநெல்வேலியில் ‘சாந்தி’ என்னும் இலக்கிய இதழைத் தொடங்கினார். 1958-ஆம் ஆண்டு ப.ஜீவானந்தம் என்பவரால் ‘தாமரை’ என்னும் இதழ் தொடங்கப்பட்டது. தற்போதைய சூழலில் கணையாழி, ஞானரதம், கசடதபற, காலச்சுவடு, தீராநதி, உயிர்மை போன்ற பல இலக்கிய இதழ்களும் செயல்பட்டு வருகின்றன.

**திரைத்துறை இதழ்கள்**

திரைப்படம், திரைப்படக் கலைஞர்கள் மற்றும் திரைத்துறை தொழில்நுட்பம் போன்ற செய்திகளையும், படங்களையும் உள்ளடக்கிய இதழே திரைத்துறை இதழாகும்.

“தமிழில் முதல் திரைப்பத்திரிகை திரு.பி.எஸ்.செட்டியார் என்பவரால் ‘சினிமா உலகம்’ என்னும் பெயரில் 1935-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது” என்று பத்மநாதன் கூறுகிறார்.(ப.பத்மநாபன், சு.தில்லைவனம், இதழியல்-தகவல் தொடர்பியல் ஆய்வுகள், ப.225)

திரைத்துறை பத்திரிகையின் முன்னோடி செட்டியார் ஆவார். பொம்மை, சினிமா எக்ஸ்பிரஸ், சினிமா மெயில், ஜெமினி சினிமா, பிலிம் நியூஸ், பிலிமாலயா, திரைக்கதிர், வண்ணத்திரை, பேசும் படம், திரைச்சுவை, மதிஒளி, கலைப்பூங்கா, திரை உலகம் முதலான பல திரைத்துறை பத்திரிகைகள் இன்று வெளிவந்து கொண்டிருக்கின்றன.

**மருத்துவ இதழ்கள்**

‘நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்’ என்பதற்கேற்ப மனிதன் நோயில்லாமல் நீண்டகாலம் ஆரோக்கியமாக வாழ விரும்புகிறான். அதற்காக எந்த வகையான உணவுகளை எடுத்துக் கொண்டால் நோயில்லாமல் வாழலாம், உடலுக்குத் தேவையான சத்துப் பொருட்களின் அளவு எவ்வளவு இருக்க வேண்டும் முதலானவற்றைப் பற்றி அறிய ஆவல் கொள்கிறான். அவனுடைய ஆர்வப்பசிக்குத் தீனி போடும் விதத்தில் வெளிவருவனவே உடல்நலம் குறித்து வெளிவரும் மருத்துவ இதழ்களாகும். அவை சுகாதார போதினி, இயற்கை, மருத்துவம், வைத்தியக் களஞ்சியம், டயட்புட், அவள் விகடன், சிநேகிதி, பெண்மணி, சித்தன், மருத்துவப் பொழில், மங்கையர் மலர் போன்றவையாகும்.

**பிற இதழ்கள்**

ஒவ்வொரு துறையினரும் தங்கள் செய்திகளை வெளியிடுவதற்கென இதழ்களைத் தொடங்குகின்றனர். குறிப்பாக கல்வி இதழ்கள், கலை இதழ்கள், இளையோர் இதழ்கள், சிறுவர் இதழ்கள், மகளிர் இதழ்கள், சட்ட இதழ்கள், வணிக இதழ்கள், சோதிட இதழ்கள் போன்றவையும் வெளியாகின்றன.

**இதழ்களின் பணிகள்**

‘எழுத்தும் தெய்வம், எழுதுகோலும் தெய்வம்’ என்னும் பாரதியின் கோட்பாடு சமுதாயப் பொறுப்பில் பத்திரிகைகளின் பங்கு எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை வலியுறுத்திக் காட்டுகிறது. விடுதலைப் போராட்டக் காலத்தில் மக்களுக்குச் சுதந்திர உணர்வூட்ட பத்திரிகைத்துறை மிகவும் பயன்பட்டது. மண், மலை, கடல் எனப் பிரிந்து கிடக்கும் இடங்களை ஒன்றாக இணைத்திடும் பாலமாக இதழ்கள் விளங்குகின்றன. இத்துறையைத் திரு.வி.க, மகாத்மா காந்தி, பாரதி, அண்ணா, பெரியார், சி.பா.ஆதித்தனார், கலைஞர் மு.கருணாநிதி முதலானோர் போர்க்கருவிகளாகப் பயன்படுத்தி மக்களிடையே தேங்கிக் கிடந்த எண்ணங்களை மீட்டு அடிமைத்தளையிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாக வாழ வழிவகை செய்தனர்.“காலம் பாராது, பசி நோக்காது சுவடிகளை நூலாக்கும் பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு தமிழின் இலக்கிய வளங்களைக் காத்தார் தமிழ்த் தாத்தா உ.வே.சாமிநாதய்யர். எளிய மக்களும் கற்றுப் பயனுறும் வகையில் நாளிதழ் படைத்து இதழியல் வரலாற்றில் விடிவெள்ளியாகத் தோன்றியவர் சி.பா.ஆதித்தனார்.”(ப.பத்மநாபன், சு.தில்லைவனம், இதழியல்-தகவல் தொடர்பியல் ஆய்வுகள், ப.55) என்று சி.பா.ஆதித்தனார் செய்த அரும்பணிகளை இன்று இதழ்கள் எடுத்துரைத்துக் கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.இதழியல் சிறு ஆலம் விழுது போல் தோன்றி, இன்று அது பல விழுதுகளைக் கொண்ட பெரிய ஆலமரமாக வளர்ந்துள்ளது. இதழ்கள்

அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியின் விளைவாக மக்களோடு நெருங்கிய தொடர்பு கொள்கின்றன. அவை பல்வேறு வழிமுறைகளையும், சாதனைகளையும் உள்ளடக்கிய பரந்த துறையாக இன்று திகழ்கிறது.

(☺)(☺)(☺)(☺)(☺)



# திராவிட மொழியில் கன்னட மக்களின் பங்கு

ச குமார்
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
அறிஞர் அண்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி
கிருஷ்ணகிரி
cskumarmed@gmail.com

*****

பாரத நாட்டில் உள்ள கருநாடக தேசத்தில் வழங்கும் மொழி கன்னடம் எனப்படும். கருநாடகம் என்னும் சொல்லே கன்னடம் என்றாயிற்று. இக்காலத்தில் வழங்கும் கன்னடத்திற்கும் முற்காலத்தில் வழங்கிய கன்னடத்திற்கும் சில வேற்றுமையுண்டு. முற்காலக் கன்னடத்தைப் பழங் கன்னடம் என்பார்கள். பழங் கன்னடத்திற்கும் தமிழுக்கும் பல வகையான ஒற்றுமையுண்டு.

### பழங்கன்னடம்:

தமிழில் உள்ள பூ, புல், புலி, பல்லி, பத்து இவை போன்ற சொற்கள் அப்படியே பழங் கன்னடத்தில் காணப்படுகின்றன.

### புதுக்கன்னடம்:

தற்காலக் கன்னடத்தில் பூ - ஹீவு என்றும், புல் - ஹீல்லு என்றும், புலி - ஹீலி என்றும், பல்லி - ஹல்லி என்றும், பத்து - ஹத்து என்றும் வழங்கப்படுகின்றன.



### தேசியச்சொற்கள்:

இன்று தமிழில் கற்றோர்க்கு மட்டுமே விளங்கும் இலக்கியப் பதங்கள் பல, கன்னடத்தில் யாவரும் எளிதில் உணரும் தேசியச் சொற்களாக இருக்கின்றன. திங்கள் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். தமிழில் திங்கள் என்பது சந்திரனைக் குறிக்கும். சந்திரனுக்குரிய நாளைத் திங்கட்கிழமை என்கிறோம். இன்னும், திங்கள் என்பது மாதத்தையும் குறிக்கும். பத்து மாதம் சுமந்து பெற்ற தாயின் பெருமையைக் கூறுகின்றதை,

> **“ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்துபெற்றுப்**
> **பையலென்ற போதே பரிந்தெடுத்துச் - செய்யஇரு**
> **கைப்புறத்தி லேந்திக் கனகமுத்தம் தந்தாளை**
> **எப்பிறப்பிற் காண்பேன் இனி”**

என்ற பாட்டின் மூலம் அறியலாம். திங்கள் என்பது மாதம் என்ற பொருளைத் தருகின்றது. இலக்கியத்தில் பயில்கின்ற சொல் கன்னடத்தில் கற்றோரும் மற்றோரும் வழங்குகின்ற பதமாக இருக்கின்றது. நிலவின் ஒளியைத் ‘திங்கள் விளக்கு’ என்பர் கன்னடியர். மாதத்தைத் திங்கள் என்றே கூறுவர்.

### அமைத்தல் மரபு:

பழந்தமிழில் கரைதல் என்றால் அழைத்தல். காக்கை தன் இனத்தை அழைத்துக் கலந்துண்ணும் தன்மையைத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

> **“காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்**
> **அன்னநீ ரார்க்கே உள”**

என்பது திருக்குறள். காக்கை ஒழித்து உண்ணாமல் இனத்தை அழைத்து உண்ணும் அத்தன்மை வாய்ந்தவர்க்கே இவ்வுலகில் ஆக்கம் உண்டு என்பது இக்குறளின் கருத்து கரை என்ற சொல் மற்றொரு பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. கடலிற் செல்லும் கப்பல்களுக்குக் கரையிருக்கும் இடத்தைக் காட்டுவதற்காகக் கடற்கரையில் அமைக்கப்பட்டுள்ள விளக்கைத் தீப ஸ்தம்பம் என்பர் வடமொழியாளர். ஆங்கிலவர் Light House என்பர். கலங்கரை விளக்கம் என்பர் தமிழர். சிலப்பதிகாரத்தில் கலங்கரை விளக்கம் குறிக்கப்பட்டுள்ளது.

**"இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்**
**இலகுநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்"**

என்பது **சிலப்பதிகாரம்**.

கலங்கரை விளக்கம் என்பதன் பொருள் என்ன? கலம் என்பது கப்பல்: விளக்கம் என்பது வெளிச்சம். கப்பலைத் துறைமுகத்திற்கு அழைக்கும் வெளிச்சம் என்பதே கலங்கரை விளக்கம் என்பதன் பொருள். சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் இவ்வாறு பொருள் கூறுகின்றார். ஆகவே, கரை என்னும் சொல்லுக்கு அழை என்ற பொருள் பழந்தமிழில் உண்டு என்பது நன்கு விளங்கும். இத்தகைய கரை என்ற சொல் கன்னடத்தில் யாவராலும் வழங்கப்படுகின்ற தேசியச்சொல். பால் கறக்கும் வேளை வந்துவிட்டால் 'கரு கரையுத்தே' என்பர் கன்னடத்தார். 'கன்று அழைக்கின்றதே' என்பது அதன் பொருளாகும்.

## இருபால் பெயர்கள்:

சில ஆண்பாற் பெயர்களையும் அவற்றிற்கு நேரான பெண்பாற் பெயர்களையும் கன்னடத்தில் காணலாம். ஒருவன் என்பதும் ஒருத்தன் என்பதும் ஆண்பாற் பெயர்கள். ஒருத்தன் என்பது பேச்சுத் தமிழிலே பெரும்பாலும் வரும் ஆயினும் அச்சொல்லின் பழமையும் செம்மையும் திருவாசகத்தால் விளங்குவதாகும்.

**"நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக் கண்ணனே**
**விண்ணுளோர் பிரானே**
**ஒருத்தனே உன்னை ஓலமிட் டலறி உலகெலாம்**
**தேடியும் காணேன்"**

என்று **மணிவாசகர்** திருவாசகத்திலே பாடியுள்ளார். ஒருத்தன் என்பது ஆண்பால் ஒருத்தி என்பது பெண்பால். இனி, ஒருவன் என்ற சொல்லைக் கருதுவோம். ஒருவன் என்பதற்கு நேரான பெண்பாற் பெயர் ஒருவள் என்பதாகும். ஆனால், ஒருவள் என்னும் பதம் தமிழ் இலக்கிய மரபில் இல்லை. இக்குறைப்பாட்டைத் தீர்க்க முன் வந்தனர் சிலர். ஒருவள் என்று கூறுதல் வழுவன்று என்று சில மாநாடுகளில் தீர்மானமும் செய்தனர். ஆயினும், புலவர் உலகம் 'ஒருவளை' இன்றுகாறும் ஏற்றுக் கொள்ளவில்லை. இப்புதுமைப் பதத்தை ஏற்றுக் கொள்வதற்குக் கன்னடத்தை ஆதாரமாகக் காட்டலாம் என்று தோன்றுகின்றது. ஒருவன் என்பது கன்னடத்தில் ஒப்பனு என்றாகும். அதற்கு நேரான பெண்பாற் பெயர் ஒப்பளு. ஒப்பளு என்பது கன்னடத்தில் வழங்குதலால் ஒருவள் என்னும் பதம் தமிழின் நீர்மைக்கு மாறுபட்டதன்று என்று கொள்வதில் குற்றமொன்று இல்லை.

## ஏர்த்தொழில்:

பழந் தமிழ்ப் பதங்களின் தாதுப் பொருள் கன்னடத்தால் நன்கு விளங்கத்தக்கதாக இருக்கின்றது. எருது என்ற தமிழ்ப் பதம் பழங்கன்னடத்தில் ஏர்து என்று வழங்குகின்றது. அது ஏர் என்ற தாதுவின் அடியாகப் பிறந்த சொல். ஏர்த் தொழிலாகிய உழவுக்குப் பயன்படும் காளைமாடுகளை ஏர்து என்று கன்னடத்திலும், எருது என்று தமிழிலும் வழங்கலாயினர் என்பது நன்கு விளங்குகின்றது. மற்றொரு சொல்லினைப் பார்ப்போம். வெங்காயத்தைத் தமிழில் உள்ளி என்பர். உள்ளி என்னும் பதம் கன்னடத்தலும் உண்டு. ஈருள்ளி, வெள்ளுள்ளி என உள்ளி இருவகைப்படும். ஈருள்ளியை ஈர வெங்காயம் என்றும், வெள்ளுள்ளியை வெள்ளை வெங்காயம் என்றும் பொது மக்கள் வழங்குவர். கன்னடத்தில் ஈருள்ளியை நீருள்ளி என்கின்றார்கள். சாறு நிறைந்த வெங்காயத்தை நீருள்ளி என்று குறித்தல் பொருத்தமாகத் தோன்றுகின்றது. நீருள்ளி நாளடைவில் ஈருள்ளியாயிருத்தல் கூடும்

### மாடும் வண்டியும்:

வண்டி என்ற தமிழ்ச் சொல்லை எடுத்துக் கொள்வோம். மாடு பூட்டிய வண்டியை மாட்டு வண்டி எனபா். குதிரை இழுக்கும் வண்டியைக் குதிரை வண்டி என்பா். இருப்புப் பாதையிற் செல்லும் வண்டியை ரயில் வண்டி என்பா். கன்னடத்திலும், தெலுங்கிலும் வண்டியைப் பண்டி என்கின்றாா்கள். பழைய தமிழ் நூல்களில் பண்டி சொல்லே காணப்படுகின்றது. **சிந்தாமணியாசிரியா்**,

**"மல்லலம் தெங்கிள நீர்ப்பெய் பண்டியும்
மெல்லிலைப் பண்டியும் கமுகின் மேதகு
பல்பழுக் காய்க்குலை பெய்த பண்டியும்
ஒல்குதீம் பண்டம்பெய் தொழுகும் பண்டியும்"**

என்று பாடியுள்ளாா். பண்டி என்ற சொல் பழைய நூல்களிற் காணப்படுதலாலும், கன்னடமும் தெலுங்கும் பண்டி என்ற பதத்தையே வழங்குதலாலும் வண்டி என்பது பண்டியின் திரிபே என்று தெரிந்துகொள்ளுகின்றோம்.

### தன்மை ஒருமைப் பெயா்கள்:

தமிழில் யான், நான் என்னும் இரண்டும் தன்மை ஒருமைப் பெயா்கள். இவற்றுள் யான் என்பதைக் கூறவில்லை: யான் ஒன்றையே கூறுகின்றது. பிற்காலத்தில் நான் என்பதும் வழக்காற்றில் வந்துவிட்டது. கன்னடத்தில் யான் என்னும் முற்காலச் சொல்லும், நானு என்னும் பிற்காலச் சொல்லும் காணப்படுகின்றன.

### முன்னிலை ஒருமைப் பெயா்கள்:

தமிழில் முன்னிலை ஒருமை பெயா் நீ என்பது. அது கன்னடத்தில் நீன் என்று வழங்ககின்றது. தமிழ் நாட்டில் சில பாகங்களில் பேச்சுத் தமிழில் நானு, நீனு என்று வழங்குகின்றாா்கள். ஆயினும், 'நீனு' என்பது கொச்சை மொழி என்றே கற்றோரால் கருதப்படுகின்றது. கன்னடத்தில் நீன் என்பது நல்ல சொல்லாகும்.

### தொழுநோய்:

திராவிட மொழிகளுக்குரிய சிறப்பெழுத்தாகிய ழகரம் கன்னடத்தில் பொது ளகரமாக மாறிவிட்டது. பல கன்னடப் பதங்களில் ழகரம் நழுவி ஒழிந்தது. உணவு பொருளாகிய உழுந்து கன்னடத்தில் உத்து என்றும் கொழுப்பு கொப்பு என்றும், கழுத்து கத்து என்றும் வழங்கக் காண்கின்றோம். குஷ்ட நோயைத் தமிழில் பெருநோய் என்று பொது மக்கள் கூறுவா். அந்நோய் இலக்கியங்களில் தொழுநோய் எனப்படும். தேவாரத் திருப்பாசுரத்தில்,

**"அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவாா் சடைக்கரந்தாா்க் கன்ப ராகில்
அவா்கண்டீா் நாம்வணங்கும் கடவு ளாரே"**

என்று பாடினாா் **திருநாவுக்கரசா்**. தொழுநோய் கன்னடத்தில் தொன்னு என வழங்குகின்றது.

புலி என்னும் சொல் பழங் கன்னடத்தில் உண்டு. அது புதுக் கன்னடத்தில் ஹுலி ஆயிற்று. வேங்கைப் புலியைத் தமிழில் பெரும் புலி என்பா். அதற்கு நேரான கன்னடப்பதம் பொப்புலி என்பது. ஆந்திரதேசத்திலுள்ள பொப்புலி என்ற ஊா்ப்பெயாின் பொருள் பெரும் புலி என்பதேயாம். தெலுங்கிலும் கன்னடத்திலும் பல சொற்கள் இவ்வாறு தேய்ந்து வழங்கக் காணலாம். கன்னடத்திலும் பருப்பு பப்பு என்றும், மருந்து மத்து என்றும், எருமை எம்மே என்றும், பருத்தி பத்தி என்றும் வழங்கப்படுகின்றன.

இன்னும் சில கன்னடப் பதங்களில் முதலில் உள்ள சகரம் சுகரமாகத் திரிந்துள்ளது. தமிழில் செவி என்பது கன்னடத்தில் கிவி; அவ்வாறே செவிடு என்பது கிவிடு; செந்தளிர் என்பது கெந்தளிர்; செம்பருத்தி என்பது கெம்பத்தி.

### வடுகர் படகராதல்:

தமிழ்ச் சொற்களின் முதலில் உள்ள வகரம் பகரமாக மாறியிருத்தலைப் பல கன்னடப் பதங்களிற் காணலாம். வடுகர் என்பது படகர் என்றாயிற்று. வீடு என்பது பீடு. வீதி என்பது பீதி. வில் என்பது பில்லு. வேர் என்பது பேரு. இத்தகைய மாற்றங்களை உணர்ந்து கொண்டால் தமிழுக்கும் கன்னடத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பு நன்கு விளங்கும்.

### கன்னடமும் துளுவும்:

கன்னடத்தோடு நெருங்கிய தொடர்புடைய மொழி துளுவம். ஆயினும் கன்னடத்தில் காணப்படாத சில சொற்கள் தமிழிலும் துளுவத்திலும் வழங்குகின்றன. அத்தகைய சொற்களில் ஒன்று கொக்கு. தமிழில் கொக்கு என்றும், துளுவத்தில் குக்கு என்றும் வழங்கும் சொல் மாமரத்தைக் குறிக்கும். இச்சொல்லைச் சிலேடையாக வைத்துக் குற்றாலக் குறவஞ்சியாசிரியர் முருகன் பெருமையைக கூறுகின்றார். முருகப் பெருமான் முதல் வேட்டைக்குப் புறப்பட்டாராம். ஒரு கொக்கை அடித்தாராம்.

> **"மீறும் இலஞ்சுக் குறத்தியைக் கொண்டசெவ்**
> **வேட்குறவன் முதல் வேட்டைக்குப் போனநாள்**
> **ஆறுநாட் கூடிஒரு கொக்குப் பட்டது"**

என்று பாடுகின்றான். மலைக் குறவன். முருகன் அசுரர் தலைவனாகிய சூரனோடு போர் தொடுத்தார்: ஆறு நாள் அரும்போர் செய்தார். மாயையில் வல்ல சூரன் மறைந்து ஒரு மாமரமாக நின்றான். அம் மாமரத்தை வேலால் எறிந்து வீழ்த்தினார் முருகன். இச்செயலைக் கொக்கு வேட்டையாடினார் குமரன் என்று குறவன் நயம்பட உரைத்தான். இவ்வாறு தமிழ் மொழிக்கும் பிற மொழிகளுக்கும் உள்ள ஒற்றுமையை ஆராயும் பொழுது தென்னிந்திய மொழிகளெல்லாம் ஓர் இனம் என்பது தெளிவாகும். அவற்றுள்ளே கன்னட மொழி காலப் பழமையும் செம்மையும் வாய்ந்த தென்பதும் செவ்விதின் விளங்கும்.

பழங்காலத்திலிருந்தே கன்னடமும் தமிழகத்தோடு தொடர்பு கொண்டிருந்தது. சங்க இலக்கியங்களில் வரும் வடுகர் என்னும் சொல் கன்னடர்களைக் குறிப்பதாக விளக்கப்படுகிறது. ஹொய்சளர்கள் சோழ நாட்டு அரசியலில் தலையிட்டு ஹொய்சள இளவரசன் தமிழகத்திலேயே ஆட்சியை நிலைநாட்டிய காலமாகிய 13ஆம் நூற்றாண்டில் கன்னடச் செல்வாக்கு உச்சநிலை எய்தியது. விசயநகரப் பேரரசர்களில் சிலரும் கன்னடத்தவர்கள் இவர்கள் வழியேயும் கன்னடச் செல்வாக்கு தமிழகத்தில் பரவியது. இத்தகைய செல்வாக்கிற்கான மற்றொரு மூலகாரணம் வீரசைவமாகும். இச்சமயப் பிரிவைச் சார்ந்த துறவிகள் தமிழகத்தில் குடியேறி மடங்களை நிறுவினர். சிவப்பிரகாசரும் சாந்தலிங்கரும் பெரும் வீரசைவப் புலவர்களாவர். மொழி முதலில் கடையண்ண வெடிப்பொலியும் அதைத்தொடர்ந்து குறுகிய முன் உயிரும் வரும் சொற்களில் கன்னடச் செல்வாக்கைத் தெளிவாகக் காணலாம். இக்கடையண்ண வெடிப்பொலி தமிழ், மலையாளம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இடையண்ணவொலியாகிறது. இந்நிலையில் வரும் கடையண்ண வெடிப்பொலி, நேரடிக் கன்னடச் செல்வாக்கையோ அல்லது தெலுங்கு மூலமான கன்னடச் செல்வாக்கையோ காட்டுகிறது.

### பார்வை நூல்கள்:

1. கால்டுவெல் - திராவிட மொழி இலக்கணம்
2. ஜான். சாமுவேல் - திராவிட மொழி ஒப்பாய்வு
3. தெ.பொ.மீனாட்சி சுந்தரம் - தமிழ்மொழி வரலாறு
4. டாக்டர் மு. வரதராசனார் - மொழி நூல்

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய அறம் சார்ந்த சிந்தனையில் திருக்குறள் அளித்த நன்கொடை

**முனைவர் ம ஜெயந்தி**
(புனைப்பெயர் கார்ஜெ)
இணைப் பேராசிரியர் தமிழ்த்துறை
எஸ்.ஆர்.எம் திருச்சி கலை அறிவியல் கல்லூரி, திருச்சி.

*****

உலகம் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரை ஒருவர் மற்றவருடன் தொடர்பு கொள்வதற்கு மொழிகள் பாலமாக இருந்துள்ளன. ஒருவருக்கொருவர் தொடர்பு கொண்டு தமது எண்ணக்கருத்தை நிலைநாட்டுவதற்கு ஆரம்பக்காலங்களில் சைகைகள், வரைபடங்கள் பயன்பட்டாலும், காலப்போக்கில் ஒலியின் மூலமாகவும், ஒளிப்புமுறையின் மூலமாகவும் மொழி என்ற ஒன்று இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளது.

மொழியின் வாயிலாக நாட்டின் நிலையும், மக்களின் நிலையும் விளம்பப்பட்டன. அரசியல், பொருளாதாரம், கல்வி, பண்பாடு, நாகரிகம், வாழ்வியல் போன்ற எண்ணற்றவற்றைப் பதிவு செய்வதற்கு மொழிகள் பயன்பட்டன. அத்துடன் ஒவ்வொரு நாட்டின் வாழ்வியலை மொழி படம்பிடித்துக் காட்டியது என்றால் மிகையாகாது. தமிழ்மொழியும் உலகில் தனது பங்கிற்குப் பல்வேறு வழிகளில் அன்றிலிருந்து இன்றுவரை பல்வேறு கோணங்களில் மக்கள் வாழ்வியலைப் பதிவு செய்து வருகின்றது..

அவ்வகையில் தமிழ்மொழி இந்தியச் சிந்தனைமரபுக்கு அளித்த நன்கொடை என்னவென ஆராய்வது அவசியமாகும். தமிழ்மொழி இந்தியச் சிந்தனை முறைகளுக்கு ஏராளமான நன்கொடை அளித்திருந்தாலும் திருக்குறள் முன்வைக்கும் சில கருத்துக்கள் புதுமையானவையாகும். அதன்மூலம் வள்ளுவரின் திருக்குறளின் சீரிய இடம் புலனாகிறது. அது குறித்து இக்கட்டுரை விளக்குகிறது..

உலகப் பொதுமறையாகப் போற்றப்படும் திருக்குறள் வாழ்வியலின் விழுமியங்களை அறம், பொருள், இன்பம் என்ற நிலைகளில் கருத்துக்களை வழங்கினாலும் ஒவ்வொரு குறளும் கூரியச்சிந்தனையை விளம்புகின்றது. வாழ்க்கையின் இன்ப துன்பங்கள் போன்ற அனைத்து நிலைகளிலும் எவ்விதம் இயங்க வேண்டும் என்ற பண்பாட்டை திறம்பட கூறுகின்றது.அன்பு, பண்பு,, ஒப்புரவு, இன்னா செய்யாமை, வெகுளாமை, களவாடாமை போன்ற பல நிலைகளில் தமிழ் மொழியின் வாயிலாக தமது கருத்துகளைப் பதிவு செய்துள்ளார். தமக்கு ஏதாவது ஒரு சூழலில் யாராவது, ஏதாவது தீங்குவிளைவித்தால், அத்தீங்கினை, நாமும் பிறருக்குச் செய்யக்கூடாது என்ற நற்கருத்தை நன்கொடையாக அளித்துள்ளது.

**"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்
நாண நன்னயம் செய்துவிடல்"** (குறள்-314)

வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும், தமக்கு விரும்பிய வண்ணமே அனைத்தும் நிகழ்வதில்லை. எந்த நிலையிலாவது தம்மால் அல்லாது மற்றவர்களால் தீங்கு ஏற்படும்போது அத்தீங்கினை மறத்தல் வேண்டும். மேலும் தமக்குத் தீங்கு செய்தவருக்கு நாம் நன்மையே செய்ய வேண்டும். இயலாத நிலையில் இரண்டையுமே நாம் மறந்துவிட்டால் வாழ்க்கை செம்மையடையும் என்ற உயர்ந்தப் பண்பாட்டுச் சிந்தனையை தமிழ்மொழி வாயிலாக வள்ளுவர் வழங்கியுள்ளார்.

மற்ற மொழிகளுக்கும், பிறநாட்டினருக்கும் உயரிய நற்பண்பாட்டு நன்கொடையாக வழங்கியுள்ளது திருக்குறள் எனில் அது மிகையாகாது. பிறர் பொருளை களவாடி பிறகு தீங்கு செய்யும் நிலையிலோ

அல்லது உறவுகளுக்குள் நல் உறவு நிலைக்காமல், குறைகூறி தீங்கு செய்யும் நிலையிலோ, பிறரை கொல்ல முயற்சி செய்யும் தீமையோ என எதுவாயினும் அத்தகைய தீமையைச் செய்பவருக்கு நன்மையே செய்யவேண்டும். அல்லது அத்தகையவர்களை மன்னித்துவிட வேண்டும் என்ற உயரிய பண்பாட்டினை நன்கொடையாக வழங்கியிருப்பதுகுறிப்பிடத்தக்கதாகும்.

**"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்**
**என்ன பயத்ததோ சால்பு"** (குறள்-987)

துன்பமான செயல்களை செய்தவர்களுக்கு, அவர்கள் வியக்கும்படியாக இனிய உதவிகளை செய்ய வேண்டும். அத்தகைய இனிய உதவிகளை நாம் செய்யவில்லை என்றால் எந்தப் பயனும் இல்லாமல் போய்விடும். ஆகையால் துன்பத்தை விளைவித்தவருக்கும் நன்மையே செய்யவேண்டும் என்ற பண்பாட்டை இதன்வழி அறிந்து கொள்ளமுடிகிறது. இந்த சிந்தனை பிற இந்திய மொழிகளில் இல்லை என்பதைச் சிறப்பாகச் சுட்டிக் காட்டுதல் பொருத்தம்.

மனிதர் எல்லாரும் சமம். இந்தியப் பண்பாட்டில் மனிதர்கள் சமம் என்ற கருத்தை இந்துமதம் ஏற்றுக் கொள்ளவில்லை. அது மனிதனைப் பிறப்பால் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்று பிரித்து வைத்ததுடன் பிறப்பால் தாழ்ந்தோர் என முத்திரையிடப்பட்ட மக்களை நிரந்தரமாக அடிமைப்படுத்தி வைக்க அடிகோலியது. இது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தோற்றுவிக்கப்பட்ட பிரிவினை. அது இந்தியா முழுவதும் அந்த காலத்திலிருந்தே பின்பற்றப்பட்டு வருகிறது. ஆனால் இந்தியப் பண்பாட்டில் அனைவரும் ஒன்றே என்ற உயர்ந்த நெறி இப்போது பேணப்பட்டு வருகிறது. இந்த உயரிய பண்பாட்டை தமிழ்மொழியின் வாயிலாக மிகப்பழங்காலத்திலேயே வள்ளுவர் நன்கொடையாக வழங்கியுள்ளார். இது திருக்குறளின் மிகப்பெரிய சிந்தனை நன்கொடையாகும்.

**"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமையான்"** (குறள்-972)

எந்த நிலையில் உள்ளவர்களாக இருந்தாலும் பிறப்பினால் அனைவரும் சமமாகும். அரசராகவோ, அமைச்சராகவோ, உயரிய பணியில் இருப்பவரோ, கூலித் தொழிலாளியோ இப்படி எந்த நிலையிலும் இருப்பினும் மனிதன் என்ற பிறப்பில் அவர்கள் அனைவரும் ஒன்றாகவே சமமாகவே மதிக்கப்படுகிறார்கள்.ஆனால் அவர் செய்கின்ற செயல்களினால் வரும் பெருமையும் உயர்வும் மாறும் என்ற கருத்தினையும் பதிவு செய்துள்ளார். ஆகையால் மனிதன் உயர்வு தாழ்வு அவனது பிறப்பினால் இல்லை என்ற கருத்தையும் முன்மொழிவது நோக்கத்தக்கதாகும்.

**குலத்தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்.**

என்றும்

**சிப்பியிலே நல்லமுத்து விளைந்திடும்**
**செய்தியறியாயோ நன் னெஞ்சே**
**குப்பையிலே மலர் கொஞ்சுங்குருக்கத்திக்**
**கொடிவளரா தேன நன்னெஞ்சே!**

பாரதியாரும் பிறப்பில் உயர்வு தாழ்வு பார்த்தல் வேண்டாம் என்று கூறுகிறார்.

ஏழை, பணக்காரன், பிச்சை எடுப்பவன், வேலையில்லாமல் அன்றாடம்பொருள் ஈட்டமுடியாமல் தவிப்பவன் இதுபோன்ற பல நிலைகளில் வேறுபாடுகள் காணப்பட்டாலும் பிறப்பினால் அவர்கள் அனைவரும் மனிதன் என்ற சமநிலைக்குள் வருகிறான். அந்த சமநிலை தொடர வேண்டுமானால் வாழ்வியலின் அனைத்து நிலைகளையும் நெறிபிறழாது வாழும்போது மேலும் கூடுதல் உயர்வு பெற்று புகழ் பெறுகிறான்.

அன்புடன் நடந்துகொள்ளுதல், இயலாதவருக்கு உதவுதல் வறுமையில் இருப்பவருக்கு பசியைப் போக்குதல், கல்விக் கற்பதற்கு வழிஅமைத்துக் கொடுத்தல் போன்ற பல நிலைகளில் நன்மை செய்தால் மனித பிறப்பானது உயர்வு பெறும் என்ற பண்பாட்டுச் சிந்தனையை காணமுடிகின்றது.

**"வாடிய பயிரை கண்டபோ தெல்லாம் வாடினேன்"**

என்று இராமலிங்க அடிகளும் கூறுகின்றார்.

இயற்கையை விஞ்சக்கூடிய அளவிற்கு சிலருக்கு அறிவு இருக்கும். பிரபஞ்சம் பற்றிய பல நிலைகளில் சிறந்த அறிவுடையவர்களாக விளங்கிடுவர். ஆனால் தாம் மனிதன் என்ற நிலையில் பண்புடன் நடந்து கொள்வதற்கு மறந்துவிடுவர். அந்நிலையில் எத்தகைய அறிவு இருந்தாலும், மக்கள் பண்பு இல்லையாயின் சிறந்த இடத்தினை வாழ்க்கையில் பெறவியலாது. ஆதலால் மக்களுக்கு உரிய பண்புடன் நடந்து கொள்ள வேண்டும் என்ற நிலையையும் கூறியுள்ளது நோக்கத்தக்கதாகும்.

**"அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர்**
**மக்கட்பண்பு இல்லா தவர்"** (குறள்--997)

இந்த உலகில் வாழ்வதற்கு முக்கியப் பண்பாகக் கருதப்படுவது குறித்து வள்ளுவர் பல குறள்களில் பதிவு செய்துள்ளார். மக்கள், மக்களுக்குரிய பண்புகளுடன் வாழ வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். அன்பு, பண்பு, அறம், பரிவு, கண்ணோட்டம்….. போன்றவற்றுடன் வாழும்போது வாழ்வு மேன்மையடைகின்றது.

சங்க இலக்கிய நூல்களில் ஒன்றான கலித்தொகையில் கூறியுள்ள பண்புகளும் நோக்கத்தக்கதாகும்.

**"பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்**
**அன்பெனப்படுவது தன்கிளை செறாஅமை**
**அறிவெனப்படுவது பேதையார் சொல் தோன்றல்**
**செறிவெனப்படுவது கூறியது மறாஅமை**
**நிறையெனப்படுவது மறைபிறர் அறியாமை**
**முறையெனப்படுவது கண்ணோடாது உயிர்வௌவல்**
**பொறையெனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்"**

(பா-133-கலித்தொகை)

இத்தகையதொரு சிறப்பான பண்பாட்டினை நம் தமிழ்மொழி, இலக்கியங்கள் வாயிலாக வழங்கியிருப்பது சிறப்புக்குரியதாகும். மனிதனின் வாழ்வியல் நிலைகளைப் பல கோணத்தில் படம் பிடித்துக் காட்டியுள்ளது. குறிப்பாக இந்தியப் பண்பாட்டிற்குப் பல நன்கொடைகளை வழங்கியுள்ளது.

அந்நிலையில் உலகப்பொதுமறையாகப் போற்றப்பட்டுவரும் திருக்குறளும் தமிழ்மொழி வாயிலாக பல பண்பாட்டுச் சிந்தனைகளை வழங்கியுள்ளதை இதன்வழி கண்டுணர முடிகின்றது.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இந்தியமரபும் இராமாநுஜரும்

**முதுமுனைவர் பு சு கணேஷ்மூர்த்தி**
உதவி பேராசிரியர்,தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறை
திராவிடப்பல்கலைக்கழகம்,ஆந்திர மாநிலம்.

*****

**முன்னுரை**

உலகில் தருமத்தை நிலை நிறுத்த திருமால் தன் அந்தரங்க அடியவனான ஆதிசேஷனை இந்நில உலகில் திருபெரும்புதூரில் ஆசூரி கேசவ சோமயாஜி பூமிபிராட்டியார் தம்பதியருக்கு கி.பி.1017 ஆம் ஆண்டு சித்திரைத்திங்கள் திருவாதிரை நட்சத்திரத்தில் இராமனுஜர் பிறந்தார். திருமலை திருவேங்கடமுடையானுக்கு தீர்த்த கைங்கர்யம் செய்தருளிய பெரிய திருமலைநம்பிகளின் மருமகனாகத் திகழும் இராமனுஜர். மிகவும் வைதிக பிராம்மண குலத்தில் பிறந்தமையால் வடமொழி வேதங்களையும் தென்மொழி வேதங்களாகிற ஆழ்வார்களால் பாடப்பெற்ற திவ்விய பிரபந்தங்களையும் கசடறக் கற்றுத் தேர்ந்து தொன்று தொட்டு வரும் இருமொழி ஒருமொழிப்பாட்டு நெறி என்ப்படும் வைணவக் கொள்கைகளை நிலை நாட்டி ஒருமைப்பாட்டின் முழு உருவமாகவே விளங்கினார்.

**திருமந்திரத்தை அனைவருக்கும் உபதேசம் செய்தல்**

இராமனுஜர் பெரிய திருமலை நம்பிகளிடம் திருமலை அடிவாரத்தில் ஓராண்டுகாலம் இராமயண காலஷேபம் கேட்டறிந்தார். பெரிய திருமலை நம்பிகள் திருவேங்கடமுடையானுக்கு சேவை செய்துகொண்டு இராமாயண காலஷேபமும் நடத்தினார். பிறகு பெரிய திருமலை நம்பிகள் சொற்படி ஆளவந்தாருடைய ஆசிர்வாதத்தை பெற்ற திருக்கோட்டியூர் நம்பிகளிடம் சென்று மற்றும் சில அர்த்த விஷேங்களை அறிய நினைத்தார். ஆளவந்தார் திருவடிகளில் அடிபணிந்து கேட்காத குறை தீர , திருக்கோட்டியூரில் வாழும் நம்பிகளிடம் 18 முறை சென்று முடிவில் அவர் திருவருள் பெற்று வைணவர்கள் வாழ்வில் என்றென்றும் பக்தி பெற எப்பொழுதும் சொல்லும் படியான "நலந்தரும் சொல்" என்கிற பெரிய திருமந்திரத்தின் பொருள்களை உபதேசமாகதந்தார் திருக்கோட்டியூர்நம்பி. அப்போதுதாம் கூறப்போகும் திருமந்திரத்தின் உட்பொருளை தகுதியில்லாதவர்க்கோ அல்லது எளிமையானவர்க்கோ கூறமாட்டேன் என்ற வாக்குறுதியை இராமனுஜரிமிருந்து பெற்று கொண்ட பின்பே அவர் உரைத்தார். திருமந்திரத்தை பெற்ற இராமானுஜர் போகும் பாதையில் வைணவ மக்களை ஒன்று திரட்டி அனைவருக்கும் நலந்தரும் சொல் என்கிற பெரிய திருமந்திரத்தின் பொருள்களை உபதேசமாக அளிக்கிறார். இதனை அறிந்த திருக்கோட்டியூர் நம்பி இராமானுஜரை அழைத்து இப்படியும் செய்யலாமோ? இதன் பயன் என்னாகும் என்று அறிவீரோ என்று கேட்க இராமானுஜரும் தேவரீரது நியமனத்தை மீறி வெளியிட்டதன் பயனாக அடியேனுக்கு நரகம் வந்தாலும் பரவாயில்லை. இம்மக்கள் எல்லோரும் தேவரீருடைய திருவடி சம்பந்தத்தாலே உய்ந்து போவார்களே என்று நினைத்தே அவர்களுக்கு திருமந்திரத்தை கூறினேன் என்றார். இராமானுஜர் கூறியதை கேட்ட திருக்கோட்டியூர் நம்பி இராமானுஜரின் கருணையுள்ளம் நமக்கு இல்லையே என்று எண்ணி அவரை பாராட்டி வாரி அனைத்துக்கொண்டு மிகவும் மகிழ்ந்து இராமானுஜருக்கு எம்பெருமானார் என்ற பட்டத்தை அன்போடு வழங்கியதை அறியமுடிகிறது.

**இராமானுஜர் காட்டிய மனிதம்**

சாதி, சடங்கு,சம்பிரதாயங்களை விட மதத்தால் மனிதம் பொலிவு பெற வேண்டும் என விழைந்தவர் இராமனுஜர். உலகம் சத்யம் பொய்யல்ல மனிதன் வாழபிறந்திருக்கிறான். கைங்கர்யமே அவனுக்கு மோட்ச சாதனம் என வேதாந்த நிர்ணயம் செய்தவர்.

**மூன்று வைணவ தத்துவங்கள்**

வைணவத்தில் தத்துவங்கள் மூன்று. அவையாவன, சித் எனப்படும் அறிவுள்ள பொருள், அசித் எனப்படும் அறிவற்ற பொருள் இவை இரண்டையும் தனக்கு உடலாகக்கொண்ட இறைவன் என்று போற்றப்படும் ஸ்ரீமந்நாராயணனே ஈச்வரன். பரம்பொருளான அவனே இவ்வுலகைப்படைத்து, காத்து விளையாடுவதால் இவ்வுலகை லீலாவிபூதி என்று அறிஞர்கள் கூறுவர். விபூதி என்றால் செல்வம் என்று பொருள்படும். இவ்வுலகில் வாழும் மனிதர்கள் தாம் செய்யும் செயல்களுக்கு ஏற்ப புண்ணியபாபங்களுக்கு இலக்காகி இறுதியில் இறைவன் அடி சேராமல் மாறி மாறி பலபிறப்பும் பிறந்து இன்னலுகிறார்கள். ஆனால் நித்யவிபூதி எனப்படும் பரமபதம் ஸ்ரீமந்நாராயணனுடைய உடைமை பொருள். புண்ணிய பாபமென்னும் கர்மத்துக்கு வசப்படாத அனந்தன், கருடன், விஷ்வக்சேனர் முதலானோர் பரமபதத்தையே தங்களுடைய இருப்பிடமாகக் கொண்டுள்ளனர். இங்கேயே ஒருசமயத்தில் முக்திபெற்ற அளவற்ற முக்தர்களும் நிறைந்துள்ளனர். லீலாவிபூதியிலிருந்து விடுபட்டு நித்யவிபூதிக்குச் செல்லும் பக்தர்கள் ஸ்ரீமந்நாராயணனையே அனுபவித்து அவனுக்கே அடிமை செய்வதை உயர்ந்த வீடு பேறு என்று வட மொழி சாத்திரங்களாலும், நல்வீடு, நலமந்தமில்லதோர் நாடு, விண்ணாடு என்று பலபடியாக ஆழ்வார்களாலும் வீடுபேறு துறக்கமென்று சங்ககாலத் தமிழர்களாலும் குறிக்கப்பெறுகின்றது. இந்த வீடு பேற்றை ஒரு மனிதன் அடைய வேண்டுமானால் அவன் அவசியம் அறிந்து தெளியவேண்டிய விஷயங்கள் ஐந்து என்பதை இராமானுஜ நெறி விளக்குகிறது. அவையாவன: இறைவனைப்பற்றிய இறைநிலை, அவன் உடைமைகளில் உயர்ந்த ஜீவனாகிய நம்மைப்பற்றி உண்மையாகிற உயிர்நிலை உயர்ந்த ஜீவனமாகிர நல்வீடு என்னும் பரமபதம் அடைந்து அதன்பயனாகபெறும் வாழ்வு. இந்த மோட்ச சாதனமாகிற பரமபதத்தை அடைய தகுந்ததான நெறி. இந்த நெறியை அடைவதில் ஏற்படும் தடை. இதில் முதல் விஷயத்தைப்பற்றி இராமனுஜ நெறியில் விளக்கியுள்ளதை அறியமுடிகிறது.

**சமத்துவம் கண்ட இராமனுஜர்**

இன்றைய கர்நாடக மாநிலத்தில் உள்ள மேல்கோட்டை என்னும் திருநாராயணபுரம் என்ற ஊரில் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த ஒடுக்கப்பட்ட மக்களுக்குத் திருக்குலத்தார் என பெயரிட்டு அழைத்தார் இராமனுஜர். மேலும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அவர்களைத் திருநாராயணபுரம் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று ஆலய பிரவேசம் செய்ய வைத்த பெரும் புரட்சியையும் செய்தவர் இராமனுஜர். அகத்தே ஆன்மீகவாதியாகவும் புறத்தே சீர்சிருத்தவாதியாகவும் இருந்துள்ளார். வேற்று மதக்கொள்கைகளில் உள்ள குறைகளை எடுத்துக்காட்டி வாதம் செய்து வென்ற இராமானுஜர் எப்பொழுதும் நிறை குறை கண்டாரில்லை.

**அவரவர் தமதமது அறிவறி வகைவகை**
**அவரவர் இறையவர் எனவடி அடைவர்கள்**
**அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்**
**அவரவர் விதிவழி அடைய நின்றனரே**

(திருவாய்மொழி 1-1-5)

என்ற நம்மாழ்வாரின் கருத்தை மனதில் தாங்கி நின்றார். எம்பெருமானை கொண்டாடும் அனைவரும் வைணவ குலமே என்பது இராமானுஜரின் கொள்கையாகும். திருமால் அடியாரிடத்தில் உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்னும் பாகுபாடு கிடையாது. இறைவன் முன் அனைவரும் சமம் என்ற உயரிய மனித நேய கோட்பாட்டைத் துணிவுடன் உரக்கக்கூறினார். மேலும் சாதி வேறுபாடு வைதிக மதத்தின் சாபக்கேடு என்றார். ஒருவருக்கு பிறப்பினால் உண்டாகும் உயர்வு தாழ்வு அவர் தம் வினைப்பயனின் காரணமாகவே ஏற்படுகிறது என்பதை உணர்த்தியவர் இராமானுஜர் ஆவார்.

பிறப்பால் தாழ்ந்தவர் எனப்பட்ட பிள்ளை உறங்காவில்லி தாசர் என்ற பெயரில் மல் யுத்த பயிற்சியாளர் திருவரங்கத்தில் இராமானுஜர் வாழ்ந்த காலத்தில் இருந்தவராவர். இவர் அற்பமான விஷயத்தில் வைத்த அபாரமான பற்றைப் பார்த்து இராமானுஜர் வியந்ததுண்டு. நிலையில்லாத விஷயத்தில் இவ்வலவு பற்று வைத்தவர் என்றும் நிலைகுலையாத அழகுக்கு இருப்பிடமான அரங்கனின் திருகண்களின் அழகைக் காண்பித்தால் இன்னமும் அதிகமான பற்றை வைத்து வில்லிதாஸரும் உய்வார் என்று தமக்கே உரிய கருணையால் இராமானுஜர் அவ்வுண்மையை உணர்த்தினார். தினமும் காவிரிக்கரைக்கு கைப்பிடியாக இராமானுஜரின் பிரதான சீடரான முதலியாண்டானைப்பற்றி செல்லும் இராமானுஜர், நீராடிவிட்டு திரும்பும்போது பிறப்பால் தாழ்ந்தவர் எனக்கருதப்படும் வில்லிதாஸரைப் பற்றிக்கொண்டு வருவதுண்டு. இங்கு நாம் கூர்மையாகக் கவனிக்கதக்கது பிறப்பால் வில்லிதாசர் தாழ்வந்தவராயினும், குணத்தாலும் , பக்தியாலும் சிறந்தவர் என்பது இராமனுஜர் இந்நிகழ்வு மூலம் உணர்த்தினார்.

**சாதாரணவர்க்கும் எம்பெருமானின் அருள் பெற செய்தல்.**

இராமானுஜர் சீடர்களுடன் திருப்பதியில் எழுந்தருளி இருந்த சமயத்தில் படிப்பு அறிவு இல்லாத இடைப்பெண் மோர் விற்றுக்கொண்டு இவர்கள் இருக்கும் இடம் வந்தாள். பெரும் திரளாக இருக்கும் கூட்டத்தைக் கவனித்து வியாபார நோக்கில் மோரை முழுவதையும் விற்க நினைத்தாள். வெப்பம் மிகுதியான காலமாகையால் சீடர்கள் அனைவரும் மோரை வாங்கி பருகினர். இதை கவனித்த இராமானுஜரின் அருளுக்கு மோர்க்காரி இலக்கானாள். ஸ்ரீமந்நாராயணனனின் அருள் வேண்டி வியாபார நோக்கினை முற்றும் துறந்தாள். மோருக்கு விலையாக மோக்ஷத்தை விரும்பினாள். இந்த ஆர்வத்தை இராமானுஜரிடம் தெரிவித்தாள். இராமானுஜரும் அவர் அறச்சூழ்ந்தான் திருவாசலான திருமலைக்கோயில் முன் வாசல் சென்று வேங்கடவனிடம் முறையிடக்கூற, இவர் பெருமை அறிந்த அவளும் சிபாரிசு கடிதம் கேட்டாள். முறையான கல்வி அறிவோ சாஸ்த்ர அறிவோ இல்லாதவளான இந்த இடைபெண்ணின் மாசற்ற பக்தியை மெச்சி இராமானுஜரும் சிபாரிசு கடிதம் வேங்கடவனுக்குக் கொடுத்தார். சாதாரண மோர் விற்கும் பக்தியுள்ள பெண்ணுக்கும் இறையருளை பெறச்செய்த பெருமை இராமானுஜரையே சாரும்.

**இராமனுஜரின் அன்பில் சீடர்கள்**

இராமனுஜர் இல்லறத்தைத்துறந்து துறவறத்தை மேற்கொண்டு வைணவத்தின் தலைமைப்பீடமான திருவரங்கத்தில் இறை சேவையோடு சமூகச்சேவையையும் மேற்கொண்டார். அறிவு ஏக்கத்திலும் அன்பு ஏக்கத்திலும் இருந்த மக்கள் கூட்டம் இராமனுஜரை நாடி திரண்டது. அறிவில் சிறந்த அந்தர்களான கூரத்தாழ்வான் முதலியாண்டான், வடகநம்பி, முதலான சீடர்களோடு உறங்கா வில்லிதாசர், பொன்னாட்சி

போன்ற தாழ்த்தபட்ட சமூகத்தை சார்ந்த அன்பர்களையும் அவர் பெற்றார். விரிந்த பார்வையால் சாதி வேற்றுமையை விளக்கி அனைவரிடத்திலும் அன்பினை பொழிந்தார். இராமானுஜரின் சீடராக பெயர் பெற்ற அமுதனார். இவர் மூங்கில் குடியில் தோன்றி திருவரங்கம் என்னும் ஆலயத்தை கட்டி காத்தவர். இவர் திருவரங்கக் கோயிலின் நிர்வாகத்தைக் கவனித்து வந்தார். அமுதனார் வீட்டிற்கு தம் சீடரான கூரத்தாழ்வாரை அனுப்பி பிதுர் வர்ண போஜனம் செய்து விட்டீரா என்று கேட்க அவர் இல்லை என்று கூறிவிட்டார். அன்றிலிருந்து திருவரங்க ஆலயத்தின் சாவியை தானமாகப் பெற்றுக்கொண்டார் என்று கூறுவதும் உண்டு. பின்னாளில் தன் குருவான கூரத்தாழ்வாரின் மூலம் இராமானுஜரின் பெருமைகளை கேட்டு அவர்பால் அன்பு கொண்டு இராமானுஜரின் சீடராகி இராமானுஜ நூற்றந்தாதியை (100 பாடல்கள் அடங்கிய) கட்டளைக்கலித்துறையில் பாடினார்.

**முடிவுரை**

ஓராண் வழியாய் உபதேசித்த வழி முறையை ஆசை உடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறும் என்று அனைவரையும் உய்வித்து பக்தி பண்பாட்டினை எளியவர்க்கும் கொண்டு சேர்த்த கருணாமூர்த்தி இராமனுஜர். எம்பெருமான் எழுந்தரும் திவ்யதேசங்களை ஆராதித்து, திருவரங்கம் பெரிய எம்பெருமானையும் பெரியகோயிலின் நிர்வாகத்தினையும் சிறப்புற செய்தவர். அதுமட்டுமன்றி, திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள வேங்கடமுடையான் மீது பத்து ஆழ்வார்களால் மங்களாசாசனம் பாடபெற்றுள்ளது. அத்தகு பெருமை வாய்ந்த திருப்பதியை ஆழ்வார்கள் திருவேங்கடத்திற்கு நேரில் செல்லாமல் தங்கள் ஞானத்தால் பாடபெற்ற புனித இத்தலத்தை இராமானுஜரும் திருமலை மேல் பாதம் பதிப்பதே பாவம் என் நினைத்தார். திருமலையின் வளர்ச்சியை மனதினில் கொண்டு இராமானுஜரின் சீடரான திருமலை அனந்தாழ்வான் கோரிக்கை பேரில் திருமலை சென்று வேங்கடமுடையானை சேவித்து பக்தியோடு பற்பல கைங்கர்யம் செய்து தானே முதல் ஜீயராக (மடாதிபதி) பொருப்பேற்று என்றென்றும் வேங்கடமுடையான் சிறப்பை உலகிற்கு அறிமுகம் செய்து வைத்த மகானாக விளங்கியவர் இராமானுஜர். ஸ்ரீ வைஷ்ணவத்தை தேசமெங்கும் பரப்பிய இராமானுஜர் 120 ஆண்டுகள் இம்மண்ணுலகில் வாழ்வாங்கு வாழ்ந்த மகான். இவர் தம் பெருமையைச் சொல்லிட மாளாது, சொற்களும் போதா. இப்படி மெய்பொருளின் எல்லை கண்டு மெய்யுணர்வில் குன்றதாரவராய் விளங்கிய இராமானுஜர் தமிழ் நாட்டின் தவப்பயனே.

**காரேய் கருணை இராமனுச ! இக்கடலிடத்தில்**
**ஆரேயறிபவர் நின்னருளின் தன்மை யல்லலுக்கு**
**நேரேயுறைவிடம் நான் வந்து நீ என்னை யுய்த்தபின் உன்**
**சீரேயுயிற்கு குயிராய் அடியேற்கின்று தித்திக்குமே** (இரா. நூ.25)

**பயன்பட்ட நூல்கள்**

1) திருவரங்கத்தமுதனார் - இராமானுஜ நூற்றந்தாதி
2) மா. வரதராஜன் - வைணவ விளக்கு
3) பூ.சு.கணேஷ்மூர்த்தி - திருமலைக்கோயில் ஒழுகலாறுகளும் திருவிழாக்களும்.
4) பாலசுந்தர் நாயக்கர் - திருமலை ஒழுகு.
5) தி.அ.கிருஷ்ணமாச்சாரியார் - திருமலையப்பன் திருவருள்.
6) ந . சுப்பு ரெட்டியார் - திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்.
7) வேங்கடசாமி ரெட்டியார் - நாலாயிர திவ்ய பிரபந்தம்.
8) மு. வரதராசன் - தமிழ் இலக்கிய வரலாறு.
9) தி.அ.கிருஷ்ணமாச்சாரியார் திருவேங்கடமலை வரலாற்றுமாலை

10) தி.பாஷ்ய இராமானுசதாசன் – வைணவ விடிவெள்ளி இராமானுஜர்.
11) மாடபூசி வரதராஜன் – அருளிசெயல், அருஞ்சொற்பொருள் அகராதி.

**இராமானுஜர் திருவடிகளே சரணம் !**



# இந்திய மதச்சார்பின்மை - தமிழ் இலக்கியங்களின் நன்கொடை

ஞா ச ஞான ஓவியா எம்.ஏ
தமிழ்த்துறை, திராவிடப்பல்கலைக்கழகம்
gnanaoviya97@gmail.com

*****

அன்றைய காலம் தொட்டு இன்று வரை தனி தத்தின் பெயரால் பிரச்சினைகள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. இச்சூழலில்தான் இத்தகைய மோதல்களைத் தவிர்க்கவேண்டும் . மதங்களுக்கு அப்பால் அரசு செயல்பட வேண்டும், மக்களும் மதசார்பின்மையுடன் நடந்து கொள்ள வேண்டுமென சிந்தனயாளர்கள் கூறிவருகின்றனர். அதற்கேற்ப பல நாடுகளும் தம்மை மதச்சார்பின்மை நாடாகவே அறிவித்துள்ளன. நமது இந்திய அரசும் ளுநஉரடயசளை ஆங்கிலத்தில் சொல்லப்படும் மதச்சார்பின்மையை கடைபிடித்து வருகிறது.

பல மதங்கள் பின்பற்றப்படும் இந்திய நாட்டில் மதச்சார்பின்மையை இந்தியஅரசு கடைபிடித்து வருவது மிகவும் சிறப்பானதே. இந்த மதச்சார்பின்மை என்ற கருத்தாக்கம் வெளிநாட்டில் இருந்து வரவில்லை என்பதையும் நாம் புரிந்து கொள்ளவேண்டும். குறிப்பாக தமிழ் இலக்கியங்கள் மற்றும் திராவிட இயக்க சிந்தனையாளர்கள் மதத்திற்கு அப்பால் நின்று செயல்படுவதைக் கண்ணுறமுடிகிறது. அவ்வகையில் மதசார்பின்மை எனும் செயல்பாட்டிற்குத் தமிழ் இலக்கியங்கள் சிறந்ததொரு சிந்தனை நன்கொடையை வழங்கியிருக்கின்றன என்பது உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்குகின்றது. இந்த சிந்தனை நன்கொடையானது சங்க இலக்கியங்களில் மதசார்பற்ற தன்மை, சித்தர்களின் மதசார்பற்ற தன்மை, திராவிட இயக்க இலக்கியங்களின் மதசார்பற்ற தன்மை என்ற மூன்று தலைப்புகளின் இவண் விளக்கப்படுகின்றது.

## சங்க இலக்கியங்களில் மதசார்பற்ற தன்மை

இந்திய இலக்கிய வரலாற்றில் வேதங்கள் மிகப்பழமையானவை . வடமொழி இலக்கியங்களின் செழுமைக்குப் பறைசாற்றும் அவை முழுக்க முழுக்க மதச்சிந்தனைகள் அடிப்படையாகக் கொண்டவை. அவ்வாறே மதம் மற்றும் கடவுள்களைச் சார்ந்து புராண இலக்கியங்கள் செயல்படுவதைக் காணமுடிகிறது. விஷ்ணு புராணம். சிவபுராணம், சக்தி புராணம் போன்றன தமது கடவுள்கள்தான் சக்திபடைத்தவர்கள் என்றும் ஏனைய கடவுள்கள் தம் கடவுள்களால் படைக்கப்பட்டோர் எனவும் கூறுகின்றன. எனவே பண்டையக் கால வடமொழி இலக்கியங்கள் முழுக்க முழுக்க மதம் சார்ந்து இயங்குவதையும் மதச்சார்பின்மைக்கு மாறாக அமைந்திருப்பதையும் கண்ணுற முடிகிறது.

ஆனால் தமிழில் கிடைக்கும் பழமையான இலக்கியங்களான சங்கஇலக்கியங்கள். அற இலக்கியங்கள், இரட்டைக்காப்பியங்கள் போன்றவை எதுவும் மதச்சிந்தனைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. அவை கொடை, போரிடல், அறம், தத்துவம், காதல், வீரம் போன்ற வாழ்வியல் செய்திகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்கின்றன. சங்க இலக்கியங்களில் வழிபாடு சுட்டப்படுகிறதேயன்றி வழிபாட்டிற்கு முக்கியத்துவம் கொடுத்து பாடல்புனைந்த நிலை காணப்படவில்லை என்பது வெளிப்படை. மேலும் கடவுள் நம்பிக்கையும் பிற கருத்துகளுக்குத் தரப்படும் எண்ணங்களுக்கு வலுவூட்டும் விதமாக,

துணைநிலையில் பயன்படுத்தப்பட்டுள்ளனவே தவிர முதன்மை தரப்படுத்தித் தரப்படவில்லை என்பது குறிக்கத்தக்கது. எடுத்துக்காட்டாக-

**ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ**
**ஒருகணை கொண்டு மூவெயி லுடற்றிப்**
**பெருவிற லமரர்க்கு வென்றி தந்த**
**கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்**
**பிறைநுதல் விளங்கு மொருகண் போல**
**வேந்துமேம் பட்ட பூந்தார் மாற**

- எனும் புறநானாற்று 55 ஆம் பாடலைச் சுட்டலாம். இதில் மூன்று எயிலை வென்ற கடவுள் அரசனுக்குத் துணையாகச் சொல்லப்படுகிறதே தவிர கடவுளுக்கு முதன்மை தரப்படவில்லை.

இரட்டைக் காப்பியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியன பல வழிபாடுகளைக் கூறினாலும் அவற்றை மட்டுமே மையமிடவில்லை. மேலும் பிற மதங்களையும் மதிக்கும் மாண்பும் தெளிவாகச் சுட்டப்படுகின்றன. எடுத்துக்காட்டாக,



பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன்'' (மதுரைக்காண்டம்- ஆய்ச்சியர் குரவை) என கிருஷ்ணனைக் குறிப்பிடும் அதேவேளை, பிற சமயம் சார்ந்த கருத்துக்களும் குறிக்கப் பெறுவதையும் கண்ணுறமுடிகிறது. அதாவது எல்லாச் சமயங்களையும் ஒன்றாக மதிக்கும் மாண்பைக் கண்ணுற முடிகிறது. இதுதான் சமயசார்பற்ற நிலை என்பது. இது போன்ற நிலையை நோக்கித்தான் இப்போது இந்தியா நகர்கிறது. இந்த எண்ணத்தை மிகப் பழங்காலத்திலேயே நம் இலக்கியங்கள் தந்துவிட்டன என்பதை எண்ணும்போது மிகவும் வியப்பாக உள்ளது.

ஆக 1.சங்க இலக்கியங்கள் மத்த்திற்கோ வழிபாட்டிற்கோ முக்கியத்துவம் கொடுக்காமல் அவற்றிற்கு அப்பாலான இயல்பான வாழ்வியலுக்கே முக்கியத்துவம் தருகின்றன. 2. நமது இரட்டைக்காப்பியங்களோ பல்வேறு கடவுள்களைப் பற்றி பேசினாலும் பிறகடவுளர்களைப் பழிக்காமல் மத இணக்கத்தை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இந்த இரண்டு கருத்துக்களும் தற்போதைய இந்தியப்பண்பாட்டில் சமயச்சார்பின்மையாகக் கடைபிடிக்கப்படுவதைக் கண்ணுறுகிறோம்.

**சித்தர்ப்பாடல்களில் மதங்களைக் கடியும் தன்மை**

மதங்களின் கடுங்கோட்பாடுகள் பலவேளைகளிலும் தனிமனிதனையும் சமூகத்தையும் வெகுவாகப் பாதிக்கின்றன என்பதே உண்மை. இத்தகைய சூழல்களில் மதக்கோட்பாடுகளின் வேகத்தைத் தணிக்க எடுத்துரைக்கப்படும் கொள்கைகளையும் மதச்சார்பின்மை என்றே கொள்ளலாம். எடுத்துக்காட்டாக- அவ்வகையில் சித்தர்இலக்கியங்கள் இந்துமதத்தை அதாவது அந்த காலத்தில் நிலவியிருந்த வர்ணாசிரதரும சமயத்தை வன்மையாகக் கண்டித்துள்ளனர். இன்றைய காலத்தில் கம்யூனிசநாடுகள் தங்களை மதச்சார்பின்மையாக அறிவித்துவிட்டு மத்த்தை ஏற்காமல் இருக்கிறார்களோ அது போன்ற ஒரு நிலைபாட்டைத் தமிழ்நாட்டுச் சித்தர்களிடம் காணமுடிகிறது. எடுத்துக்காட்டாக ஒரு சில சித்தர்ப்பாடல்களைச் சுட்டலாம்-

**கோயிலாவது ஏதடா. குளங்களாவது ஏதடா**
**கோயிலும் குளங்களும் கும்பிடும் குலாமரே**
**கோயிலும் மனத்துள்ளே குளங்களும் மனத்துள்ளே**
**ஆவதும் அழிவதும் இல்லை இல்லையே** சிவவாக்கியர் -34

''**இருக்கு நாலுவேதமும் எழுத்தை அறவோதினும்**
**பெருக்க நீறு பூசினும் பிதற்றினும் பிரான் இரான்**'' ….சிவவாக்கியர் -37

இது போன்று மத அமைப்புகளைச் சாடும் சித்தர்ப்பாடல்களைத் தமிழில் காணமுடிகிறது. அதவது மதங்கள் மக்களுக்கு தீமைசெய்ய முற்படும்போது மதநம்பிக்கைகளிலிருந்து விலகிநிற்க சித்தர்ப்பாடல்கள் வற்புறுத்துகின்றன. இந்த போக்கானது தற்காலத்திலும் இந்தியாவில் மதச்சார்பின்மையை வற்புறுத்தும் அறிவுசார் மக்களிடம் நிலவுவதைக் காணலாம். எனவே சித்தர்ப்பாடல்கள் இன்றைய கால மதச்சார்பின்மைக்கு ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளன என்பது உறுதியாகிறது.

**திராவிட இயக்கங்கள் முன்வைக்கும் மதச்சார்பின்மை**

கழிந்த இருபதாம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் உருவெடுத்த மாபெரும் சமூக மற்றும் அரசியல் சீர்திருத்த இயக்கம் திராவிட இயக்கம் ஆகும். இந்திய விடுதலைக்கு முன்பே இந்த இயக்கச் சிந்தனைகள் இந்துமதத்திற்கு எதிராகத் தம் கருத்துக்களை முன்வைத்தது குறிப்பிடத்தக்கது. இந்தியத் துணைக்கண்டத்தில் இந்துக்கள் பெரும்பான்மையாக இருந்தாலும் இந்துமத நம்பிக்கைகள் அம்மக்களுக்கு எதிராகவே இருந்தன. மூடநம்பிக்கைகளாலும் கடவுள் பேராலும் இந்துமக்கள் மிகவும் சுரண்டப்பட்டிருந்தனர். அந்த சூழலில் இந்தியாவின் அரசாங்க மதமாக இந்துமதம் அமைந்தால் இந்துமக்கள் மிகவும் பாதிக்கப்படுவர் என்பதை அறிஞர்கள் அறிந்திருந்தனர். எனவேதான் இந்துமதம் அரசாங்கமதமாக அமையாமல் மதசார்பற்றத் தன்மையுடையதாக இந்தியக்குடியரசு அமைக்கப்பட்டுள்ளது. அதாவது இந்திய அரசாங்கமானது சமுதாய, சமய சார்பற்ற அரசு (A Secular State). அரசிற்கு எந்த சமய சார்பும் கிடையாது. எல்லா சமயங்களையும் சமமாகவே அணுகும்.

இந்திய அரசியலமைப்பு கொண்டுள்ள மேற்கூறிய கருத்துக்கு முன்னோட்டமாக மதம் பற்றிய கருத்தாக்கத்தினை இந்தியா முழுவதும் விதைத்ததில் திராவிட இயக்கத்தின் பங்கு முக்கியமானது. அதாவது கடவுள் பற்றிய கருத்தாக்கமாக , கடவுள் இல்லவே இல்லை என்ற கருத்தாக்கத்தை முன்வைத்தது. தந்தை பெரியார் "கடவுள் இல்லை! கடவுள் இல்லை!.கடவுளைக் கற்பித்தவன் முட்டாள்கடவுளைப் பரப்பியவன் அயோக்கியன் கடவுளை வணங்குபவன் காட்டுமிராண்டி. "- என்ற கருத்தாக்கத்தை முன்வைத்தார். இதனால் மதங்களை அரசமைப்பில் ஏற்கக்கூடாது என்ற எண்ணம் அறிஞர்களிடையே நிலவியது. அதன் விளைவாகத்தான் மதம் இந்திய அரசியலமைப்பில் முக்கியப் பொருண்மையாக எடுத்துக் கொள்ளப்படவில்லை. அதேவேளை அறிஞர் அண்ணா கடவுள் மறுப்பாளராக இருந்தபோதிலும் கடவுள்நம்பிக்கையாளர்களின் மனதை நோகடிக்க அவர் விரும்பவில்லை. எனவே ஒன்றே குலம்- ஒருவனே தேவன் என்ற திருமந்திரத்தின் கொள்கையை அவர் திமுக வின் கொள்கையாக ஏற்றுக்கொண்டார். இந்த கொள்கை எல்லா மதங்களையும் சரிசமமாகப்

பார்ப்பதோடு வேறுபாட்டையும் களைகிறது. இந்திய அரசியலமைப்பும் எல்லா மதங்களையும் சரிசமமாகப் பாவிப்பதோடு அரசமைப்பு செயல்பாட்டில் மதங்களை விலக்கி வைக்கிறது.

இன்று இந்தியா மதச்சார்பின்மையைக் கடைபிடித்தாலும் கூட சிறுபான்மை மக்கள் பெரும்பான்மையோரால் தாக்கப்படுவதும் மதசார்பின்மைக்குக் களங்கம் விளைவிப்பதும் நடைபெறுகிறது. ஆனாலும் மதச்சார்பின்மைக்காக உரத்தக் குரல் எழுந்துவருகிறது. குறிப்பாக மத அடிப்படைக்கு எதிராக சமத்துவம் ,எல்லோரையும் நேசித்தல் என்ற கொள்கைகளுக்காகச் செயல்பாடுகள் முன்னெடுத்துச் செல்லப்படுகின்றன. இவ்வாறு செயல்படுவதில் தீவிரமாகச் செயல்படுவது திராவிட இயக்கங்களே ஆகும்.

எனவே இந்திய மதச்சார்பின்மை கருத்திற்குத் திராவிட இயக்கச் சிந்தனைகள் உறுதுணையாக இருப்பது தெளிவாகத் தெரிகிறது. அது போலவே மதச்சார்பின்மை எனும் கருத்துக்கு முன்னோடியாக சங்க இலக்கியங்களும் , சித்தர் இலக்கியங்களும் தம் கருத்துக்களை முன் வைத்துள்ளன . அவையே இன்றைய கால இந்தியாவிற்கு அடிப்படைத் தேவையாக உள்ளன.

(☺)(☺)(☺)(☺)(☺)

.



# சைவ சமயப் பண்பாட்டு வளர்ச்சியில் தமிழ் மொழியின் பங்கு

**முனைவர் க சத்தியபிரியா**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
டாக்டர் எம்ஜிஆர் ஜானகி மகளிர் கல்லூரி
சென்னை – 28.

*****

பண்பாடு என்பது ‘பண்படுத்தப்படுதல்’ என்று பொருள்படும். பண்பாடு என்ற சொல்லானது ‘Cultura’ என்ற லத்தீன் சொல்லிலிருந்து உருவாக்கப்பட்டது ஆகும். Cultura என்றால் ‘சூழலுக்கேற்ற வளர்ச்சி’ என்பது பொருள். இதனையே நாம் பண்பாடு என்று அழைக்கின்றோம். திருந்திய நிலத்தைப் ‘பண்பட்ட நிலம்’ என்று அழைப்பது போல திருந்திய உள்ளத்தை ‘பண்பட்ட உள்ளம்’ என்று அழைக்கின்றோம். மனிதன் சமுதாயத்தின் ஒரு அங்கத்தினன். அவன் அடைந்துள்ள அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைத் தன்னுள் அடக்கிய ஒரு முழுமையான தொகுப்பே பண்பாடு ஆகும். இதனை கலாச்சாரம் என்றும் அழைக்கின்றோம். ஒரு நாட்டின் பண்பாடு அல்லது கலாச்சாரம் என்பது அந்நாட்டின் சமயம், பாரம்பரியம் மற்றும் பொருளாதாரம் ஆகியவற்றைக் கொண்டு நிர்ணயிக்கப்படுவதாக சுவாமி விவேகானந்தர் குறிப்பிடுகிறார்.

உலகின் பண்டைய பண்பாட்டு வளர்ச்சிகளுள் நம் இந்திய தேசம் முக்கிய பங்கு வகிக்கிறது. இங்கு தான் ‘சிந்து சமவெளி பண்பாடு’ தோன்றியது. பொருளாதாரத்தில் பொருள் வாங்குதிறன் சமநிலையில் சிறப்புற்று விளங்கியது. இந்து, புத்தம், சமணம், சீக்கியம் ஆகிய நான்கு தலைமை மதங்கள் இந்தியாவிலேயே தோன்றின.

பொதுவாகவே சமயம் என்பது மானிட சமுதாயத்தை நல்வழியில் வாழ வழிகாட்டும் தன்மை உடையது. எல்லாச் சமயத்திற்கும் அடிப்படையானது ‘இறை நம்பிக்கை’. இந்தச் சமய கொள்கைகள், கோட்பாடுகள், சிந்தனைகள் போன்றவற்றை பரப்பவும் மனிதனிடம் செல்லவும் மொழி என்கிற கருவி தேவைப்படுகிறது.

வர்ணாசிரம சமயம் எனும் இந்து சமயம் காலத்தால் மிகவும் தொன்மையான உலகின் முக்கிய சமயங்களில் ஒன்றெனக் கருதப்படுகிறது. புற சமயங்கள் போலன்றி இந்து சமயத்தை தோற்றுவித்தவர் யாவருமில்லை. இதனை நெறிப்படுத்த அல்லது கட்டுப்படுத்த மைய அமைப்பு கிடையாது. கி.மு.1700 ஆண்டுக்கு அணித்தான வேதகாலப் பண்பாட்டில் தோற்றம் பெற்றது. இந்து சமயமானது சைவம், வைணவம், சாக்தம், சௌமாரம், கௌமாரம், காணாதிபத்யம் என்ற பிரிவுகளைக் கொண்டது. சைவ சமயத்தின் முக்கிய அங்கம் வேதம். வைணவ சமயத்தின் முக்கிய அங்கம் கீதை. இவ்வேதம் மற்றும் கீதையின் மாண்பினை உலகிற்கு உணர்த்தும் உன்னத பண்பினைப் பக்தி இயக்க காலம் முதல் இன்று வரை தம் இலக்கியங்களின் வழியாக எடுத்துச் சென்று அதில் வெற்றியும் கண்டது நம் அன்னைத் தமிழ்.

சிந்து வெளி நாகரிகம் தோன்றிய காலம் முதற்கொண்டே சைவ சமயத்தின் பழமை கால எல்லையைக் கடந்து நிற்கிறது. இங்கு அகழ்ந்து எடுக்கப்பட்ட பண்டைய பொருட்களில் சிவலிங்கங்கள்

குறிப்பிடத்தக்கன. சிறியனவும் பெரியனவுமான சிவலிங்கங்களைக் கண்ட மேனாட்டு ஆராய்ச்சியாளர்கள் வியப்புற்று சைவ சமயம் கணித்தறியமுடியாத பழமை வாய்ந்தது என்று குறிப்பிட்டுள்ளனர். மேலும் இந்த சிவலிங்கங்களைப் பயன்படுத்திய சிந்து சமவெளி மக்கள் **திராவிடர்களே** என்றும் குறிப்பிட்டுள்ளனர்.

வேதங்கள் இறைவனே அருளியது என்பதே சைவத்தின் அசைக்க முடியாத நம்பிக்கை. இறைவன் அருளிய வேதங்களில் இறைவனே போற்றப்படுகிறான்.

"வேதத்தில் உள்ளது நீறு" " வேதம் நான்கிலும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாய" என்கிறார் திருஞானசம்பந்தர்.

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை நூல்களிலும் திருமுருகாற்றுப்படை உட்பட பத்துப்பாட்டு நூல்களிலும் இறைவனான சிவபெருமான் பற்றிய குறிப்புகள் அதிகம் காணப்படுகின்றன. அக்கடவுள் "தாழ்சடை பொலிந்த அருந்தவத்தோன், முக்கட்செல்வன், கறைமிடற்று அண்ணல், நீலமணி மிடற்று அண்ணல், முழு முதல்வன், நீலமேனி மிடற்று அண்ணல், மழை தலை வைத்தவன், புங்கம் ஊர்பவன், ஆலமர் செல்வன் முதலிய பல பெயர்களால் குறிப்பிடப்படுகின்றார்.

அவன் சடையிலும் மார்பிலும் கொன்றை மாலை அணிந்தவன், முடிமேல் பிறை சந்திினைச் சூடியவன், முடி மீது மேகத்தையும் கங்கையையும் தாங்கியவன், வேதத்தை வாயில் உடையவன், அதனை அந்தணர்க்குச் சொன்னவன், எட்டுக் கைகளை உடையவன், புலித்தோல் ஆடையன், உமா தேவியைப் பாதியாகக் கொண்டவன், அரிய தவம் செய்பவன், உயிர்களுக்குப் பாதுகாவலன், முப்புரங்களை எரித்தவன், எரித்த அச்சாம்பலை பூசிக்கொள்பவன், அவன் பல வடிவங்களைக் காட்டியும் ஒருக்கியும் எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுபவன். ஊழி இறுதியில் அவன் ஆடும் கூத்து 'கொடுகொட்டி' எனப்படும். அவன் முப்புரங்களை அழித்து ஆடும் கூத்து 'பாண்டரங்கம்' எனப்படும். அவன் புலியைக் கொன்று அதன் தோலை உடுத்தி கொன்றை மாலை தோளில் அசைய பிரம்மன் தலையொன்றை ஏந்தி ஆடும் கூத்து 'காபாலம்' எனப்படும். அவன் உமையம்மையுடன் இமயமலை மீதுள்ளான். இது போன்ற குறிப்புகளை நம் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

காவிரிப்பூம்பட்டினம், மதுரை, வஞ்சி போன்ற பெரிய நகரங்களில் சிவபெருமானுக்கு ஆலயம் அமைத்து வழிபட்டதையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. 'நீல நாகம் நல்கிய கலிங்கத்தை ஆலமரத்தடியில் இருந்த சிவனுக்கு ஆய்வேள் அளித்தான்' என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

இடைச்சங்க காலத்து பாண்டிய மன்னனான முதுகுடுமிப் பெருவழுதி வேத வேள்விகள் பல செய்வித்தமையால் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி" என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

"நுதல்விழி நாட்டத்து இறையோன்

முதலாப்பதிவாழ் சதுக்கப் பூதமீ றாக ...என மணிமேகலையும்

பிறவா யாக்கைப் பெரியோன் கோவிலும்

அறுமுகச் செவ்வேள் அணிதிகழ்

கோவிலும்...''

என சிலப்பதிகாரமும் தெய்வங்கள் வரிசையில் சிவபெருமானையே முதலிடத்தில் நிறுத்திக் காட்டுகின்றன.

சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் திருமணம் வேதமுறைப்படி ''மாமுது பார்ப்பான் மறை வழிகாட்ட நடந்தது'' என்று வருகிறது. கண்ணகிக கோட்டத்திற்கு சேரன் செங்குட்டுவன் வேத விதிப்படி குடமுழக்குச் செய்வித்தான்: அத்திருவிழாவில் வேள்விச்சாலைக்கு மாடல மறையோனும் செங்குட்டுவனும் சென்ற காட்சி இளங்கோவடிகளால் விவரித்துச் சொல்லப்படுகிறது.

மிகப் பழம் பெரும் அறநூலாகிய திருக்குறளும ''அவி உணவு'' என்று அவிர்பாகத்தை – வேள்வி உணவைச் சொல்கிறது. திருக்குறல் '' அறுதொழிலோர்'' என்று குறிப்பிடுவதில் உள்ள ஆறு தொழில்களில் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஈவித்தல் என்பன சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

சைவ சமயத்தை நாடெங்கும் தழைத்தோங்கச் செய்த பெருமை தமிழகத்தில் தோன்றிய அறுபத்து மூன்று நாயன்மார்களையே சாரும். இறைவன் விருப்பு வெறுப்பு அற்றவன். அவன் அனைவரையும் ஒருமையுடன் நோக்குபவன். சாதி வேறுபாடு அவனிடம் கிடையாது என்ற வேத உட்கருத்தை உலகுக்கு உணர்த்தி சைவ சமய பண்பாட்டை உயர்த்திய பெருமை நாயன்மார்களையே சாரும். ஏனெனில் அவர்களுள் பதினான்கு பேர் பிராமணர், ஆறு பேர் வணிகர், பதிமூன்று பேர் வேளாளர், நான்கு பேர் குருக்கள் ஆவர். மீதமுள்ளோர் வேட்கோவர், வேடர், இடையர், வண்ணார், பரதவர், சாலியர், பாணர், பறையர் போன்ற இனத்தைச் சார்ந்தவராக இருந்தனர்.

அப்பர், சம்பந்தர் ஆகிய இருவரும் நாடெங்கும் சைவசமயப் பிரச்சாரம் செய்தனர். நாயன்மார்களில் சிலர் கோவில் தொண்டுகளில் ஈடுபட்டனர். வேறு சிலர் சிவனடியார்களுக்கு தண்ணீர் பந்தல், உணவு முதலியவற்றை வழங்கினர். சிலர் சிவன் கோவிலைக் கட்டினர்.

பெரும்பாலான கோவில்களில் மூவர் பாடிய திருமுறைகள் இன்றும் இசைக்கப்படுகின்றன. இந்திய தேசம் மட்டுமின்றி அமெரிக்கா, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை போன்ற நாடுகளிலும் சிவ ஆலயங்களில் மூவர் திருமுறை இசைக்கப்படுகிறது. இறைவன் 'ஏழிசையாய் இசைப்பயனாய், இருப்பவன்.' 'பண் அவனே பண்ணின் திறன் அவனே' என்ற உண்மையை நாயன்மார்களே உலகிற்கு பறை சாற்றியுள்ளனர்.

சமய தத்துவங்களில் உயர்ந்தது நாத தத்துவம். நாதத்திலிருந்து இசை தோன்றுகிறது. இசையே இறைவனாய் இருக்கின்றான் என்பது சைவ சமயக் கொள்கை. இதனால் இசையோடு தோத்திரங்களைப் பாடுவதால் இறைவன் மகிழ்வான், அருள் புரிவான் என உணர்த்தியவர் சம்பந்தர்.

சோழர்கள் பேரரசை ஏற்படுத்தி ஆண்ட நானூறு காலத்தில் (கி.பி 900-1300) இந்தியா முழுவதும் சைவ சமயம் நன்கு வளர்ந்தது. காஷ்மீர், நேபாலம், கூர்ச்சரம், கத்தியவார் போன்ற தேசங்களில் சைவ சமயம் செழித்தோங்கி வளர்ந்தது. ஆதித்த சோழன் தொடங்கிய சைவத் திருப்பணிகளை அவனுக்குப்

பின் வந்த சோழ வேந்தர்கள் தொடர்ந்து வளர்த்தனர். நாயக்கர் காலத்திலும் இது தொடர்ந்தது. மண்டபங்கள், மாளிகை, மடம் போன்றவை விரிவுபடுத்தப்பட்டன.

இவ்வாறு தமிழகத்தை ஆண்ட பேரரசர்கள், சிற்றரசர்கள், அரசாங்க அலுவலர்கள் வணிகர் முதலிய குடிமக்கள் தத்தமக்கு ஏற்ற வகையில் சைவ சமயப் பண்பாட்டை அன்றிலிருந்து இன்று வரை காத்து வருகின்றனர். நாயக்கர் கால ஆட்சிக்குப் பின்பு வந்த ஐரோப்பியர்கள் கூட சைவ சமயம் குறித்து தமிழில் எழுதப்பட்ட நூல்களைத் தம் மொழியில் மொழிபெயர்ப்பு செய்து அறிந்து கொண்டனர். கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப வந்த பாதிரிமார்கள் தம்மை அந்தணர்களாக மாற்றிக் கொண்டனர். ஆறுமுக நாவலர், மறைமலை அடிகள், திரு.வி.க போன்றோரால் சைவ சமய இலக்கியங்கள் உரைநடை வடிவில் படைக்கப்பட்டன. இதன் பின் சிறுகதை, நாவல், நாடகம் என அந்தந்த கால கட்டத்திற்கு ஏற்றார் போல சைவசமயப் பண்பாட்டை மக்களுக்குப் புரியும் வகையில் அதன் வரலாறு, கொள்கைகள் மக்கள் மனதில் பதிய வைத்து அதன் மூலம் மக்களை நல்வழிப்படுத்தும் சேவையை நம் இந்திய தேசத்திற்கு காலங்காலமாய் செய்து வருகிறது நம் தாய் மொழியாம் தமிழ் மொழி ஆகும்.

.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இந்தியத் துணைக்கண்டத்தில் தமிழ்மொழி தந்த பண்பாட்டு விழு மியங்கள்

**பேராசிரியர் அ இராஜன் ஜான்**
தமிழ்த்துறை , நல்லமணி யாதவா கலை அறிவியல் கல்லூரி
தென்காசி

*****

**முன்னுரை:**

உயிர்கள் அனைத்திற்கும் உயரிய சிந்தனைகளைக் கொடுப்பதே இலக்கியங்களின் நோக்கமாகும்.மனித வாழ்விற்கு அடிப்படையாக அமைவது விழுமியங்கள் ஆகும்.விழுமம் என்னும் சொல் சீர்மை,சிறப்பு,வறுமை என்ற பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது. விழுமஞ் சீர்மையும் சிறப்பும் இடும்பையும்.. (தொல்-சொல்)என்கிறது தொல்காப்பியம். வாழ்க்கையில் மக்கள் உயர்ந்த கொள்கைகளுடனும் சிந்தனைகளுடனும் வாழவேண்டும். வாழும் நிலப்பகுதியை மனிதன் பகுத்ததிலிருந்தே அவனது பண்பாடுகளும் வளரத் தொடங்கின எனலாம்.தமிழ் இலக்கியங்கள் ஒவ்வொரு மிருகங்களைக் கொண்டும் அதன் வாழ்வியலோடு நமது வாழ்வியலையும் இணைத்துக் கூறியுள்ளது.காரணம்,சங்ககாலத்தில் மிருகங்கள் கூட சிறந்த பண்பாடுகளைக் கொண்டு வாழ்ந்துள்ளன.

**தமிழ் மொழியைப் பாதுகாத்தல்:**

செம்மொழியான தமிழ் மொழி மெல்லமெல்லக் கரைந்து வருவது எவராலும் மறுக்க முடியாத கசப்பான உண்மை. ஒரு மொழி அதன் கருத்துக்களாலேயே முக்கியத்துவம் பெறுகின்றது. தமிழ் மொழியில் உள்ள இலக்கியங்கள் கருத்தாழம் கொண்டவையாகவும் சிறந்த வாழ்வியல் பண்பாட்டு விழுமியங்களைக் கொண்டதாகவும் இருக்கின்றன."ஒரு மனிதன் தன் தாய்மொழியை ஏன் பாதுகாக்க வேண்டும்? என்ற கேள்வியைக் கேட்டுக்கொண்டால், தன்னுடைய அடையாளத்திற்காக, தன்னுடைய முகவரிக்காக, தன்னுடைய பாதுகாப்பிற்காக என்று பதில் வருகிறது. தந்தை பெயர் தெரியாதவனை அநாதை என்கிறோம். மனிதன் ஒரு சமுதாய விலங்கு. எனவே, அவன் சேர்ந்துவாழ்வதில் பாதுகாப்பை உணர்கிறான். தன் பாதுகாப்பிற்கு என்று சிலர் வேண்டும் என நினைக்கிறான். அவன் தன்னைப்போன்ற பொருளாதாரம், தொழில் உடையவரோடு சாதியாக ஒன்று சேர்கிறான்,அதுவும் போதாதபோது பொது எதிரிக்கு எதிராக இனமாக ஒன்று சேர்கிறான். மொழியே ஒரு இனத்தின் அடையாளம்,முகவரி. எனவே, ஒரு மனிதன் தன் அடையாளத்திற்காகவும் பாதுகாப்பிற்காகவும் தன் தாய்மொழியைக் காக்கவேண்டும்" (தமிழ்மொழி,இலக்கியம்,கலை,பண்பாடு காத்தல் வழிகள்-கட்டுரை).என்று தன் கட்டுரையில் முனைவர்.சா.ரமேஷ் கூறியுள்ளார்.

**பண்பாடு:**

பண்பு எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல் - எனக் கலித்தொகை கூறுகிறது. அதாவது பண்பு என்பது சூழ்நிலைக்கு ஏற்ப நடந்துகொள்ளுதல் என்பதாகும். இந்தப் பண்பட்ட நிலைதான் எல்லாவற்றிலும் அமைந்து, சிறந்து பண்பாடு ஆகிறது. இதைத்தான்,"மனிதனின் அகநல ஆக்கமாக விளங்கும் அன்பு - அறிவு - ஆற்றல் - இன்பம் - இயல்பு - உணர்ச்சி - எழிற்சி - வீரம் - தீரம் - ஈவு - இரக்கம் - அமைதி - அடக்கம் - ஒப்புரவு - ஒழுக்கம் - உண்மை - ஊக்கம் - சினம் - சீற்றம் போன்றவற்றின் மேன்மையையும் உயர்வையும் உணர்த்துவது பண்பாடு என்று அழைக்கப்படுகிறது .(பைந்தமிழர் போற்றிய பண்பாடுகள் - இரா.நெடுஞ்செழியன்.) என்பர். உயிர்காக்கும் மருந்தாக இருந்தாலும் விருந்தினர் வெளியே உண்ணாமல் இருக்கும்போது தனித்து உண்ணல் தமிழர் பண்பாடு

இல்லை.அதுபோலவே,நஞ்சாகவே இருந்தாலும் நண்பன் கொடுத்தால் அதனை வாங்கி உண்ணும் நனிநாகரீகம் கொண்டவர்கள் இருந்ததையும்

**''முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்''**

(நற்றிணை 355) என்ற பாடல் நமக்கு உணர்த்துகின்றது. இது வள்ளுவரின்

**"பெயக்கண்டும் நஞ்சுஉண்டு அமைவர் நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர;"** (குறள் 580)

என்ற கருத்தை நமக்கு நினைவூட்டுகின்றது. பாவாணர் கூறுவது போல, பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம், நாகரிகம் என்பது திருந்திய வாழ்க்கை. முன்னது "அகக்கூறு " பின்னது "புறக்கூறு". நாகரிகம் சேர்ந்த பண்பாடுண்டு , நாகரிகம் இல்லாத பண்பாடுமுண்டு . தமிழர் பண்பாடு இவ்விரண்டிலும் மெச்சத்தக்கது.

**தொல்காப்பியத்தில் பண்பாடு:**

**"நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்**
**தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு**
**மாட மதுரை"**

(சிலப்பதிகாரம்,வேனிற்காதை:1-2) என, ஆசிரியர் இளங்கோவடிகளால் போற்றப்படும் மதுரை மாநகர்க்கண் நம் முன்னோர் முதல், இடை, கடையென்னும் முச்சங்கங்கள் நிறுவித் தென்மொழியாம் நம் சீர்சால் தமிழ்மொழியை நன்கு வளர்த்து வளம்படுத்தினாரென்ப. அச்சங்கங்களுள் இடைச்சங்ககாலத்தே தொல்காப்பியனாரால் இயற்றப்பெற்ற முதல் இயல்நூல் தொல்காப்பியம் ஆகும்.மனித நடத்தைகள் மரபுக்களால் உண்டாக்கப்படுபவை என்று கூறப்படுகின்றது.தொல்காப்பியத்தில் பண்பு என்ற சொல் பல இடங்களில் பயன்படுத்தப்படுகின்றது."இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி" (தொல்-உரியியல்)இதில் உள்ள பண்பு என்ற சொல் பொறியால் உணரப்படும் குணத்தைக் குறிக்கின்றது.ஆணுக்குரிய பண்புகளாக

**"பெருமையும் உரனும் ஆடு மேன"** (தொல்காப்பியம்: பொருள்:களவியல்:7)

என்றும் பெண்களுக்குரிய பண்புகளாக

**"அச்சமும் மடமும் நாணும் முந்துறுத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"**
(தொல், பொருள், களவியல்.நூற்.9)

என்றும் தொல்காப்பியர் விளக்குகின்றார்.

**தமிழரும் மானமும்:**

புறப்பாடல்களில் கூறப்பட்டுள்ள போர்களைக் காணும் போது இவற்றில் பல போர்கள் தமிழரின் மானம் காக்கும் வீரத்தினால் அமைந்திருந்ததையும் அறிய முடிகின்றது.அதோடு பழந்தமிழரின் வாழ்க்கையில்

மான உணர்வும் வீரமும் ஒன்றோடு ஒன்று கலந்திருத்தலையும் புறப்பாடல்களின் வழி காணமுடிகின்றது.வீரப்போர் செய்து பெறும் புண் விழுப்புண் (விழுமியதுஸ்ரீ மிகஉயர்ந்தது) எனப்பட்டது. முதுகில் பெறும் இழிந்த புண் புறப்புண் எனப்பட்டது. பெருஞ்சேரலாதன் என்ற மன்னனும் சோழன் கரிகால் பெருவளத்தானும் வெண்ணிப் பறந்தலை என்ற களத்தில் போரிட்டனர். கரிகாலன் எறிந்த வேல் சேரலாதனின் நெஞ்சைத் துளைத்து முனை, முதுகின் வழி ஊடுருவி விட்டது. மார்பின் வழியாகப் பெற்ற புண்தான். ஆனாலும் முதுகிலும் புண் ஆகிவிட்டதே? இது இழிவு என்று கருதிய அந்த வீரன் உண்ணா நோன்பிருந்து (வடக்கிருத்தல் என்று பெயர்) உயிர் விட்டான். புலவர்களும், புகழ்மொழிக்குத் தகுதி இல்லாத ஒருவர் எத்துணைப் பெரிய வேந்தரானாலும் அவரைப் பாடமாட்டார்கள். தகுதி உடையவரைத் தேடிக் கொண்டு பல கற்கள் தொலைவானாலும் நடந்து செல்வார்கள்.

**"ஆங்குஇனிது ஒழுகின் அல்லது, ஓங்கு புகழ்**
**மண்ணாள் செல்வம் எய்திய**
**நும்மோர் அன்ன செம்மலும் உடைத்தே"** . (புறம்**47)**

பகைவர் நாணும்படி தலை நிமிர்ந்து மண் ஆளும் செல்வம் கொண்ட உன்னைப் போன்ற செம்மாப்பு இவர்களுக்கும் உண்டு என்பதை இப்பாடல் நமக்கு உணர்த்துகின்றது.

**தமிழர்களின் கொடை:**



கொடைமடம் என்பது மடைமை குணங்களில் ஒன்றாகும். "மடம்" என்பதற்கு "அறியாமை" என்ற பொருள். இன்னாருக்கு இன்னது கொடுக்க வேண்டும் என்பதை எண்ணாமல், கிடைத்ததை நினைத்தபோதே கொடுப்பதைக் "கொடை மடம்" என்று சொல்வார்கள். இது சரியா, தவறா என்று ஆலோசிக்க அறிவுக்கு இடம் கொடுக்காமல், உள்ளத்தில் கொடுக்கத் தோன்றியபோதே "கொடை மடம்" உடையவர்கள் கொடுத்துவிடுவார்கள்.

பறம்பு தேசத்தை ஆண்ட மன்னன் பாரி வேந்தன், ஒரு நாள் தனது தேசத்திலுள்ள காட்டுக்குள் சென்றான். அங்கே ஒரு முல்லை கொடி தளர்ந்திருந்த்து. அக்கொடியின் தளர்ச்சியை உடனே போக்க வேண்டும் என்று, தன்னுடைய தேரை இழுத்து அந்தக் கொடிக்கருகில் கொண்டு வந்து நிறுத்தச் சொன்னான். அருகில் நின்று, தேரின் மேலே அந்தப் பூங்கொடியை எடுத்தும் விட்டான். பாரிக்கு, "இந்தச் சிறிய கொடி படர்வதற்கு தேரை வைக்கலாமா?" என்ற எண்ணமே தோன்றவில்லை. அந்தக் கொடியின் தளர்ச்சி ஒன்றே அவன் கருத்தில் நின்றது. அருகில் எது இருந்தாலும் ஊன்றுக்கோளாக நிறுத்த வேண்டும் என்ற எண்ணமே முன் நின்றது. இதுவே "கொடைமடத்தின்" எடுத்துக்காட்டு. இதனால், "முல்லைக்கு தேர் கொடுத்த வள்ளல், பாரி" என்ற புகழையும் பெற்றான். சங்க காலத்தில் அரசர்கள் கொடை வள்ளல்களாக இருந்திருக்கிறார்கள். தம்மைப் பாடி வரும் புலவர்களுக்கும் மற்றவருக்கும் பொன்னையும் பொருளையும் வரையாது கொடுத்து மகிழ்ந்தமை சங்க இலக்கியங்களால் உணர முடிகிறது. பாரி, ஓரி, காரி, பேகன் போன்றோர் கடையேழு வள்ளல்கள் என்று போற்றப்பட்டனர்.

**"தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு"** (குறள்:**212)**

பாரி வள்ளல் மழைக்கு நிகராகக் கொடுக்கக்கூடியவன் என்பதைப் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

**பாரி பாரி என்றுபல ஏத்தி**
**ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்**
**பாரி ஒருவனும் அல்லன்**
**மாரியும் உண்டுஈண்டு உலகுபுரப் பதுவே"** (புறநானூறு 107)

**உலக ஒருமைப்பாடு:**

பண்டைத் தமிழர்கள் நாகரிகம் பண்பாட்டில் சிறந்து இருந்தனர். தமிழ்நாட்டில் உழவு, நெசவு, வாணிகம் போன்ற தொழில்களும் அவற்றின் சார்பு தொழில்களும் சிறந்திருந்தன. கடல்கடந்து வெளிநாடுகளுக்கும் சென்று தமிழர் வணிகம் செய்து சிறந்தனர். நமது பண்பாடு, நாகரிகம், மொழி யாவும் வெளிநாடுகளில் சிறக்கக் காரணம் பண்டைத் தமிழர்களே. உலக மக்கள் அனைவரும் ஏற்கும் கருத்துக்கள் கொண்டதால் தான் திருக்குறள் உலகப்பொதுமறை என்று அழைக்கப்படுகின்றது.திருக்குறளில் வள்ளுவனார்

**"உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார் "** (குறள்:140)

என்று உலகத்தோடு சேர்ந்து வாழும் ஒருமைப்பாட்டு நெறியைக் கூறியுள்ளார்.மேலும்



**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்"** (.குறள் 972)

என்ற குறளில் உலகம் அனைவருக்கும் பொது என்றும் கூறுகின்றார்.

**முடிவுரை:**

தமிழ் மொழி என்பது நமது அடையாளம். எனவே,பாரதி

**"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே - அதைத்**
**தொழுது படித்தடடி பாப்பா"** (பாரதி கவிதைகள்)

என்று பாடுகின்றார். தமிழ்மொழி நமக்குக் கொடுத்த கொடைகள் அதிகம் உள்ளன. இன்று நாம் பின்பற்றக்கூடிய பண்பாடுகள் அனைத்தும் நமது மரபு வழியாக நமக்குக் கடத்தப்பட்டவை.மனத்தை நெகிழ்வித்து உருக்குவதற்குத் தேனூறும் தேவார திருவாசகம் தமிழில் வைரமாக ஒளிர்கின்றன. வேற்று மொழிகளில் இல்லாத அளவிற்குத் தொல்காப்பியம் தொடங்கி பன்னூறு இலக்கிய இலக்கண நூல்கள் தமிழுக்கு வளம் சேர்த்திருக்கின்றன."இனிமையும் நீர்மையும் தமிழென லாகும்" (பிங்கல நிகண்டு) என்ற வரிகள் வழியாக நமது மொழியின் தன்மையையும் இம்மொழி தமிழருக்குக் கொடுத்த குணநலத்தையும் அறியலாம்.உலகில் மற்ற மொழிகளெல்லாம் வாயினால் பேசப்பெற்றுச் செவிக்குக் கருத்தை உணர்த்த வல்லவை் ஆனால், தமிழ் மொழி இதயத்தால் பேசப்பெற்று இதயத்தால் உணரவைக்கும் மொழியாகும்.

**துணைநூல் பட்டியல்**

தொல்காப்பியம் சொல்லதிகாரம்-
தமிழ்மொழி,இலக்கியம்,கலை,பண்பாடு காத்தல் வழிகள்-கட்டுரை
கலித்தொகை நற்றிணை திருக்குறள் சிலப்பதிகாரம் புறநானூறு
பாரதி கவிதைகள்
பைந்தமிழர் போற்றிய பண்பாடுகள் - இரா.நெடுஞ்செழியன்

(☺)(☺)(☺)(☺)(☺)



# திராவிட மொழியில் மலையாள மக்களின் பங்கு

மா வேடியப்பன்
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்
அறிஞர் அண்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரி
கிருஷ்ணகிரி.
vedisanthi@gmail.com

*****

சேரநாடு தமிழ் நாட்டின் ஓர் அங்கமாக விளங்கிற்று. சேர, சோழ, பாண்டியர் மூவரும் தமிழ் மன்னராகவே திகழ்ந்தார்கள். சேர நாட்டு மன்னருட் சிலர் செந்தமிழ் நூல்கள் செய்து அழியாப் புகழ் பெற்றனர். ஆகவே, ஆதியில் சேரநாடு தமிழ் மணக்கும் திருநாடாக விளங்கிற்றென்பதில் யாதும் ஐயமில்லை என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பேச்சுத்தமிழின் ஒற்றுமை:**

தமிழும் மலையாளமும் தனித்தனி மொழிகளாகக் கருதப்படுகின்றன. எனினும் இவ்விரு மொழிகளுக்கும் நெருங்கிய ஒற்றுமையுண்டு. பேச்சுத் தமிழுக்கும் மலையாளத்திற்கும் உள்ள ஒற்றுமை உண்டு. ஒன்று என்பதைப் பேச்சுத் தமிழில் ஒன்னு என்பர். மூன்று என்பதைப் பேச்சுத் தமிழில் மூணு என்பர். மலையாளமும் இவ்வாறே ஒந்நு, மூநு என்று வழங்குகின்றது. இன்னும் பன்றியைப் பன்னி என்றும் கன்றை கன்னு என்றும் தமிழில் வழங்குவது போலவே மலையாளமும் வழங்குகின்றது. குன்று என்பது பேச்சுத் தமிழில் குன்னு என்றாகும். தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூரைக் குன்னத்தூர் என்றும் கூறுகிறோம். மலையாளத்தில் குன்றைக் குன்னு என்றே வழங்குகின்றார்கள். இன்னும், ஒன்பதை மலையாளத்தில் ஒம்பது என்றும், ஐம்பதை அம்பது என்றும் கூறக் காண்கிறோம்.

**அரிசியின் ஆதிவடிவம்:**

தமிழ்ச் சொற்களின் பழைய வடிவம் மலையாளத்திலே விளங்குகின்றது. தமிழ் நாட்டில் தொன்று தொட்டு அரிசி உண்டு. பண்டைத் தமிழ் நாட்டினின்றும் அரிசியை ஏற்றுமதி செய்த கிரீக்கர்கள் அதனை அருஸா என்கிறார்கள். அதுவே ஆங்கிலத்தில் ரயிஸ் என்று ஆயிற்று. அரிசி என்னும் சொல் இவ்வளவு பழமை வாய்ந்ததாயினும், பிங்கலந்தை என்ற பழைய தமிழ் நிகண்டில் அரி என்ற வடிவம் காணப்படுகின்றது. திராவிட மொழிகளுள் ஒன்றாகிய துளுவத்திலும் அரி என்ற சொல் வழங்குகின்றது. மலையாளத்தில் இன்றும் அரிசியை அரி என்றே குறிக்கின்றார்கள். ஆதலால் அரி என்பது அரிசியின் ஆதி வடிவம் என்கிறோம்.

**எலும்பு:**

எலும்பு என்பது எல்லோரும் அறிந்த சொல். இலக்கியங்களில் இச்சொல் என்பு என வழங்குகின்றது.

**"அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு"**

என்னும் திருக்குறளில் என்பு அமைந்துள்ளது. கன்னடத்தில் எலும்பை எலு என்கிறார்கள். எலும்பின் ஆதி நிலையினை நாடும் பொழுது மலையாளம் வந்து உதவுகின்றது. எல் என்பது மலையாளத்தில்

எலும்பைக் குறிக்கும். அதுவே கன்னடத்தில் எலு என்றாயிற்று. தமிழில் விகுதி பெற்று என்பு என்றும், எலும்பு என்றும் அமைந்தது.

**உறவுப்பெயர்கள்:**

பிதாவை நாம் தந்தையென்றும், தகப்பன் என்றும் கூறுவோம். அண்ணனைத் தமையன் என்போம். இளையவனைத் தம்பி என்போம். மூத்த சகோதரியைத் தமக்கை என்றும், இளைய சகோதரியைத் தங்கை என்றும் கூறுவோம். தந்தை, தகப்பன், தமையன், தமக்கை, தம்பி, தங்கை இச்சொற்களின் பிறப்பு முறையில் ஓர் ஒற்றுமை இருக்கக் காண்கிறோம். தம் என்ற சொல்லின் அடிப்படையாக இப்பதங்கள் பிறந்தனவாகத் தோன்றுகின்றன. ஆனால், தகப்பன் என்னும் பதத்தில் மட்டும் ககரம் எப்படி வந்தது என்று சிறிது திகைக்கின்றோம். மலையாளம் அம்மயக்கத்தைத் தீர்க்கும் மருந்தாக அமைகின்றது. மலையாளத்தில் தகப்பனைத் தகப்பன் என்கின்றார்கள். ஆகவே, தம் அப்பன் என்பது தமப்பன் என்றாகித் தமிழில் தகப்பன் ஆயிற்றென்று அறிந்து கொள்கின்றோம்.

**வண்ணாரின் செயல்:**

இன்னும், வண்ணான் என்ற சொல்லைப் பார்பபோம்; அழுக்குத் துணிகளைச் சலவை செய்யும் தொழிலே வண்ணான் தொழில். மலையாளத்தில் வண்ணானை மண்ணான் என்பார்கள். மண்ணு என்ற சொல் கழுவு என்ற பொருளில் தமிழில் வழங்குகின்றது. தமிழ்நாட்டில் சிவங்கை மாவட்டத்தில் வண்ணாரவயல் என்னும் ஊர் இன்றும் உள்ளது.

**"மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்**
**உடல்சிறியர் என்றிருக்க வேண்டா – கடல்பெரிது**
**மண்ணீரு மாகாது அதனருகே சிற்றூறல்**
**உண்ணீரு மாகி விடும்"**



என்ற பாட்டில் மண்ணீர் என்னும் பதம் கழுவும் தண்ணீர் என்ற பொருளில் வந்துள்ளது. மண்ணுதற்கு உதவும் நீரை மண்ணீர் என்றார் கவிஞர். ஆகவே, ஆடைகளின் அழுக்கைக் கழுவிப் போக்குகிறவனை மண்ணான் என்று குறிப்பது பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. மண்ணான் என்பது தமிழில் வண்ணானாகத் திரிந்தது.

**மலையமைப்பு:**

மலையாள தேசத்தில் கடற்கரையின் அருகேயுள்ள ஒரு மலை எலிமலை என்னும் பெயர் பெற்றுள்ளது. ஆங்கிலத்தில் அதனை (Rat Mountain) என்று மொழி பெயர்த்து வழங்குகின்றார்கள். அம்மலையின் சரித்திரம் சென்னையிலுள்ள அம்பட்டன் வாராவதியின் கதையை ஒத்திருக்கின்றது. எழில் என்பது அம்மலையின் பெயர். பாண்டி நாட்டில் பொதியில் என்னும் மலை அமைந்திருத்தல் போல மலையாள நாட்டில் எழில் என்னும் மலை விளங்கிற்று. அம்மலையை ஒரு சிற்றரசன் ஆண்டு வந்தான். அவனைக் கண்டு பரிசு பெறக் கருதிய ஔவையார் காடும் நாடும் கடந்து சென்றார். மாளிகையை அடைவதற்கு முன்னே அந்திமாலை வந்துவிட்டது. ஆயினும், எங்கும் விளங்கு எரிந்து கொண்டிருந்தது. இரவு, பகலாகவே காணப்பட்டது. அரண்மனையின் அத்தாணி மண்டபத்தில் அரசன் அமர்ந்திருந்தான். அங்கே சென்றார் ஔவையார். அரசன் ஒன்றும் பேசவில்லை பாராமுகமாய் இருந்தான். அவன் முன்னே நின்று கொண்டு ஒரு தமிழ்ப் பாட்டு இசைத்தார் ஔவையார். அப்பொழுதும் அவன் வாய் திறக்கவில்லை. பாட்டிக்குக் கோபம் வந்துவிட்டது கண்ணிருந்தும் குருடனாய் காதிருந்தும் செவிடனாய், சபை நடுவே இருந்த அரசனது தன்மையை ஒரு பாட்டில் அமைத்துப் பாடினார்.

**"இருள்தீர் மணிவிளக்கத்(து) ஏழிலார் கோவே**
**குருடேயூ மன்றுநின் குற்றம்-மருள்தீர்ந்த**
**பாட்டும் உரையும் பயிலா தனஇரண்டு**
**ஓட்டைச் செவியும் உள"**

என்று அவர் பாடிய பாட்டில் ஏழில் என்னும் மலை குறிக்கப்படுகின்றது. ஏழில் என்னும் பதத்திலுள்ள ழகரம் தாளடைவில் நழுவிற்று. ஏழில்மலை எலிமலை யாயிற்று. அம்மலையில் அரசு புரிந்த மன்னர் குலம் மூசிக வம்சம் ஆயிற்று. மூசிக வம்சத்தைக் குறித்து வட மொழியில் ஒரு காவியமும் எழுதப்பட்டது. இவ்வாறாக எலிமலை என்ற பெயர் அம்மலைக்கு நிலைத்து விட்டது.

**தாக்கோல்:**

பூட்டைத் திறக்கும் கோல் தாக்கோல் எனப்படும். நிலைப் பூட்டுக்குத் தாழ் என்று பெயர். இக்காலத்தில் அது தாழ்ப்பாள் நாட்டில் உண்டு. ஆயினும் தாழ் என்றாலே போதும். திருவள்ளுவர் அன்பின் தன்மையைக் கூறுமிடத்து

**"அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்"**

என்று பாடினார். தாழைத் திறக்குங்கோல் மலையாளத்தில் தாழ்க்கோல் என்றும், தமிழில் திறவுகோல் என்றும் குறிக்கப்படுகிறது. இந்நாளில் நாகரிகத் தமிழ்நாடு திறவுக்கோலைக் கைவிட்டுச் சாவியைப் பற்றிக் கொண்டது. சாவி என்பது போர்ச்சுகீசியப் பதம் அதற்கு மேல் 'கீ' யென்னும் ஆங்கிலப் பதமும் இப்போது **'அடிபடு'** கின்றது.

**பழக்கவழக்கங்கள்:**

கல்யாணத்தில் மணமகன் வீட்டார் கொடுக்கும் புடவையைப் பெண்ணுக்கு உடுத்தும் வழக்கம் தமிழ்நாட்டில் உண்டு அப்புடவையைக் கூறைப்புடைவை என்பார்கள். கூறை என்றாலும், புடைவை என்றாலும் பொருள் ஒன்றே. முற்காலத்தில் புடைவை நெய்யப்பட்ட ஓரிடத்திற்குக் கூறை நாடு என்றே தமிழர் பெயரிட்டார்கள். இக்காலத்தில் அது கொரநாடு என்ற பெயரோடு வழங்குகின்றது. மலையாள மன்னர் குடும்பத்தில் நடைபெறும் திருமணத்திற்குப் 'புடகொட' என்று பெயர். புடகொட என்பது புடைவைக் கொடை என்பதன் திரிபேயாகும். பெண்ணுக்குப் புடைவை கொடுத்தலே திருமணத்தின் சிறந்த அம்சமாகக் கொள்ளப்பட்டதென்பது இதனால் நன்கு விளங்கும் காதல் மண முறையை விவரித்துக் கூறும் தமிழ் நூல்களில் காதலன் தன் காதலிக்கு மலராலும் தளிராலும் செய்யப்பட்ட தழை என்னும் ஆடையைக் கொடுத்து மகிழும் பழக்கம் குறிப்பிடப்படுகின்றது. அவ்வழக்கம் நாளடைவில் திருந்திக் காலத்திற்கேற்றவாறு புடைவைக் கொடையாயிற்று என்று கொள்ளுதல் பொருந்தும்.

**அரசமைப்பு:**

நாடாளும் அரசனைக் குறிப்பதற்குத் தமிழிலும் மலையாலத்திலும் பல சொற்கள் உண்டு. கோ, கோன், கோமான் இம் மூன்று சொற்களும் தமிழிலும் மலையாளத்திலும் அரசனைக் குறிக்கும். இளவரசனை இளங்கோ என்பர். கோயில் என்னும் சொல் தமிழிலும் மலையாளத்திலும் அரசனுக்குரிய அரண்மனையையும் கடவுளுக்குரிய ஆலயத்தையும் உணர்த்துவதாகும். ஆனால், இப்பொழுது தமிழ் நாட்டில் கோயில் என்பது பெரும்பாலும் ஆலயத்திற்கே பெயராய் அமைந்துவிட்டது. சைவர்களுக்குக் கோயில் என்பது சிதம்பரம் வைணவர்களுக்குக் கோயில் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கமாகும். மலையாளத் தேசத்தில் அரசர் குலத்தைச் சேர்ந்தாரிற் சிலர் கோயில் தம்பிரான் என்று அழைக்கப்படுவர். திருவாங்கூர் தேசத்தில் பத்துக் கோயில் தமபிரான்கள் இன்றும் சிறப்புற்று வாழ்கின்றார்கள். சென்ற சில நூற்றாண்டுகளாகத் திருவாங்கூர் மன்னராகத் திகழ்ந்தவர்கள் எல்லாம்

கிளிமானூர்க் கோயில் தம்பிரான் குல்த்தைச் சேர்ந்தவர்களே. தமிழில் தம்பிரான் என்பது கடவுளையே குறிக்கும். சிவபெருமானுக்குத் தம்பிரான் என்பது பெயராகும்.இதனால் சிவபெருமான் தோழராக விளங்கிய சுந்தரமூர்த்திக்குத் தம்பிரான் தோழர் என்னும் சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று. இக்காலத்தில் சைவ சமயத்தைச் சார்ந்த சந்நியாசிகளே தம்பிரான் என்று குறிக்கப்படுகின்றார்கள். அரசன் தெய்வத் தன்மை வாய்ந்தவன் என்பது இந்நாட்டுக் கொள்கையாதலால் மலையாளத்தில் தம்பிரான் என்று அரசர் குலத்தார் அழைக்கப்பெறுகிறார்கள்.

**தெய்வப் பயன்பாடு:**

தெய்வத்தை நம் முன்னோர்கள் குளிர்ந்த சோலைகளில் வழிப்படடார்கள். அதற்குரிய சின்னங்கள் மலையாளத் தேசத்திலும் தமிழ் நாட்டிலும் இன்றும் காணப்படுகின்றன. செங்கோட்டைக்கு அருகே மலையாளத் தேசத்தில் ஆரியங்காவு என்ற ஊர் இருக்கிறது. ஆரியன் காவு என்றால் ஆரியன் சோலை. எனவே ஐயப்பனை ஐயனார் என்றும், சாத்தன் என்றும் வணங்குவார்கள். காலத்தில் மழை பெய்யாவிட்டால் ஐயனாருக்குப் பொங்கலிட்டுப் பூசை செய்வார்கள். அறுவடை முடிந்த பின் ஐயனாருக்குச் சிறப்பாக வழிபாடு செய்வார்கள். தமிழ்நாட்டு ஐயனாரே மலையாளத்தில் ஐயப்பனாக விளங்குகிறார். ஆரியன் என்பது ஐயப்பனுக்கு ஒரு பெயர்.ஆரியன் காவு என்று ஐயப்பன் சோலை அழைக்கப்படுகின்றது. இன்றும் மலையாளத் தேசத்தில் நாகம் வாழ்கின்ற காவுகள் ஆயிரக்கணக்காக உண்டு. பாம்புக்காவு என்பது அவற்றின் பெயர் ஒவ்வொரு நாயர் இல்லத்திலும் பாம்புக் காவு உண்டு. அக்காவில் முளைக்கின்ற மரஞ் செடிகளை வெட்டுவதில்லை. அங்கு வாழ்கின்ற பாம்புகளுக்குப் பால் வார்ப்பார்கள். இவ்வாறு காவில் தெய்வத்தை வழிபாடு செய்யும் வழக்கம் தமிழ்நாட்டிலும் இருந்தது. சீர்காழிக்கு அருகே ஒரு சிவஸ்தலம் உள்ளது. அதன்பெயர் கோலக்காவாகும்.

**“கூத்தனை குருமாமணி தன்னை கோலக்காவினில் கண்டு கொண்டேனே”**

என்பது தேவாரம். கா என்பது சோலையாகும். அதுவே அலையாளத்தேசத்தில் காவு என்றாயிற்று. தேவாரப் பாடல் பெற்ற ஸ்தலங்களுள் பல காவுகள் உண்டு. திருச்சிராப்பள்ளிக்கூ இக்காலத்தில் அன்மையில் உள்ள திரு ஆனைக்கா இப்பொழுது திருவானைக்காவல் என வழங்குகின்றது. நெல்லி மரச்சோலையாகிய திருநெல்லிக்கா இக்காலத்தில் திருநெல்லிக்காவல் என்று பெயர் பெற்றுள்ளது. சோலையைக் கோயிலாகக் கொண்டு வழிபாடு செய்த பண்டை வழக்கத்தைத் தமிழும் மலையாளமும் நன்கு காட்டுகின்றன. மலையாளத்தின் பழக்கவழக்கங்களையும் சொல்லாக்கத்தையும் இக்கட்டுரை வலியுறுத்துகிறது.

மலையாளமும் தமிழ் மொழியைப் பாதித்திருக்கிறது. கன்னியாகுமரி மாவட்டம் என்றழைக்கப்படும் நாஞ்சில் நாடு திருவாங்கூர் அரசின் கீழ் நீண்ட காலம் இருந்தது. தமிழும் மலையாளமும் நெருங்கிய உறவுடையன. எனவே அவற்றை வேறுபடுத்தி அறிவது சிக்கலானதாகும். ‘சக்கை, கஞ்சி, வெள்ளம், அவியல்’ போன்ற சொற்கள் மலையாளத்திலிருந்து கடன் பெறப்பட்டவையாகும். ‘அங்கணம்’ போன்ற தமிழ்ச் சொற்கள் இப்பகுதியில் இன்னும் வழக்கில் உள்ளன.

**பார்வை நூல்கள்:**

1. டாக்டர் தெ.பொ.மீனாட்சி சுந்தரம் - தமிழ்மொழி வரலாறு
2. டாக்டர் சு. சக்தி வேல் - தமிழ் மொழி வரலாறு
3. டாக்டர் ரா.பி. சேதுபிள்ளை - தமிழ் விருந்து
4. டாக்டர் மு. வரதராசனார் - மொழி நூல்
5. ரா. சீனிவாசன் - மொழி ஒப்பியலும் வரலாறும்

(☺)(☺)(☺)(☺)(☺)

# திரௌபதி தொன்மம் : கட்டுடைக்கும் இந்திய மறுவாசிப்புப் பிரதிகள்

**முனைவர் இரா. வெங்கடேசன்**
இணைப்பேராசிரியர்
இந்தியமொழிகள் மற்றும் ஒப்பிலக்கியப் பள்ளி
தமிழ்ப் பல்கலைக்கழகம்,தஞ்சாவூர்
ramavenkatesan80@gmail.com

*****

உலக அளவில் பல தொன்மங்கள் இன்று மறுவாசிப்புச் செய்யப்பட்டுள்ளன. மறுவாசிப்புகளின் தேவையை அத்தொன்மங்களே நிர்ணயிக்கின்றன. தொன்மங்கள் மறுவாசிப்புப் பெறும்போது புதிய தரிசனங்கள் பெறுகின்றன. வாசகர்களும் தொன்மக் கதைகளை விரும்பி ஏற்றுக்கொள்கின்றனர். வாசகன் எதை விரும்புகிறானோ, எதனை-எதிர்ப்பார்க்கின்றானோ அதனை மறுவாசிப்புகள் தருகின்றன. வாசகனுக்கு அப்படியான மனநிலையை இன்றையச் சூழல் ஏற்படுத்தியுள்ளது. கேள்விகள் கேட்பது, புதிதாக எதனையும் ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவம், திறந்த நிலையிலான வாசிப்பு அணுகுமுறை, நவீன சிந்தனை முறைகள் இவைகள்தான் இன்றைய வாசகனை உருவாக்கியுள்ளன. அதனால்தான் வாசகன் திரௌபதி, சீதை, கிருஷ்ணன், இராவணன், பீமன், கர்ணன், துரியோதனன், காந்தாரி, மீரா, கண்ணகி, நந்தன், அகலிகை, போன்ற பாத்திரங்களைப் புதுமையாக நோக்க விரும்புகின்றான். வாசகனின் இந்த எதிர்பார்ப்புகளை மறுவாசிப்பு எழுத்தாளர்கள் பூர்த்திசெய்ய முனைகின்றனர். இதன் வினைவாகத் தொன்மப் பாத்திரங்களின்வழி பழைய வரலாறுகள் புதிதாக அணுகப்படுகின்றன. குறிப்பாகத் திரௌபதி, சீதை, கண்ணகி, அகலிகை போன்றோரின் குரல்கள் வேறுவகையில், நவீனச் சிந்தனை வழிப் புதிதாகக் ஒலிக்கின்றன. மறுவாசிப்புகள் இத்தகைய பெண் தொன்மங்களை நவீனமாக உள்வாங்கி வெளியிட்டுள்ளன. குறிப்பாக இந்திய அளவில் புகழ்பெற்ற தொன்மங்களில் திரௌபதி மீது நிகழ்த்தப்பட்ட மறுவாசிப்புகள் மிகவும் கவனத்துக்குரியன. புனைவுகளாகவும் அல்புனைவுகளாகவும் உள்ள திரௌபதி குறித்த மறுவாசிப்புகளின் வழி மறுவாசிப்புப் படைப்பாளிகள் உருவாக்குகின்ற விமர்சனங்கள், கேள்விகள், வரலாறு, கலை, எத்தகையன என்பதனையும் இதனை இந்திய அளவில் எவ்வாறு புரிந்து கொள்வதென இக்கட்டுரை பேச முயல்கின்றது.

தொன்மங்களை வாசிக்கத் தொடங்கும் வாசகன் அதில் காணப்படும் நுண்குறிப்புக்களைத் தன் கற்பனையால் விரித்தெடுக்கவே முதலில் ஆயத்தமாவான். புனைவு எழுத்தாளர்கள் வாசகனின் அகவெளிக்குள் பயணப்பட்டு வரலாற்றில் விடுபட்ட பக்கங்களை இட்டு நிரப்பத் தொடங்குவான். வாசகன் விருப்பம், புனைவு எழுத்தாளன் தெரிவு இவை, இரண்டும் தொன்ம மறுவாசிப்பை உருவாக்க விழைகின்றன. உலகம் முழுக்கவே இவ்வாறு புராணக்கதைகள், தொன்ம இலக்கியங்கள் மறுபுனைவுக்குட்படுத்தப்பட்டு புதிய பனுவல்களாக வாசகனுக்குப் படிக்கக் கிடைக்கின்றன.

தொன்மம் என்பது புராணம், புராணக்கதை, தொல்கதை, Myth ஆகிய சொற்களில் நிரம்பியிருக்கிறது. தமிழில் தொல் என்ற வேர்ச்சொல்லிலிருந்து தொன்மம் என்ற சொல் தோன்றியது. தொடக்கத்தில் புராணக்கதை என்றும் பழங்கதை என்றும் வழங்கினர். தற்காலத்தில் தொன்மம் என்ற சொல்லாக்கம் கருதிய பொருளின் கருத்துணர்வும் சொல்லாக உள்ளது. (கதிர் மகாதேவன், 2008 : 6) இத்தகைய தொன்மங்களில் கூட்டுச்சமூக நினைவுகளும் கற்பனைகளும் கலந்துள்ளன. இத்தொன்மங்கள் யாரால் எப்பொழுது உருவாக்கப்பட்டவை என்பதனை அரிதியிட்டுக் கூறிவிட முடியாது. இயற்கையின் மாபெரும் சக்தியின்முன் மனிதத்தின் இயலாமையை மாத்திரம் அல்ல.

மனிதத்தின் கற்பனை ஆற்றலையும் தன் வாழ்க்கை அனுபவத்தின்வழி வெடித்த முதல் கலை அமைப்பைத் தொன்மங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. எனவே தொன்மங்கள் மந்திரம், சடங்கு, கடவுள், ஆகியவற்றுடன் தொடர்புடையதாகக் காணப்படுகின்றன. (க.பஞ்சாங்கம், 2005 : 5) இத்தகைய தொன்மங்கள் காலந்தோறும் வாய்மொழி வழியாகவும் இலக்கியங்கள் வழியாகவும் தன்னைத் தகவமைத்துக்கொள்கிறது. இத்தகைய தொன்மங்கள் காலவளர்ச்சிக்கேற்ப புதிய சிந்தனைகளின் வழி நவீனமாகப் பார்க்கப்படுகின்றன. இதன் தொடர்ச்சியாக இந்திய அளவிலும் தென்னிந்திய அளவிலும் தமிழிலும் ஏராளமான மறுவாசிப்புகள் நிகழ்ந்துள்ளன.

மறுவாசிப்பு என்பதில் மறு என்ற சொல்லுக்குக் கதிரைவேற்பிள்ளை அகராதி முற்றம், மச்சம், மாசு, வேறு, எதிர், தீமை, மற்ற (தமிழ்மொழி அகராதி. ப.1125) என்ற பொருள்களையும் குற்றம், மச்சம், மறுவென்னேவல், மற்றை, மாசு, வேறு, எதிர் என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதி (ப.338) பொருள் கூறியுள்ளன.

மீள் என்பதற்குத் திரும்பவும், திரிதல், திரும்பல், மீளவும் (மதுரைத் தமிழ்ப் பேரகராதி ப.428) பொருள் உரைத்துள்ளன. தமிழ் அறிஞர்கள் மறுவாசிப்பு என்று இன்றைக்கு வழங்கப்படுகிற சொல்லுக்கு முன்பாக மறு அவதாரம் (க.கைலாசபதி மறுவாசிப்பு (கா.சிவத்தம்பி) மறுபடைப்பு (ராஜ்கொளதமன்) மறுபுனைவு (ஜெயமோகன்) மறுபுனைவு, நவபுனைவு, மறுவாசிப்பு (எஸ்.ராமகிருஷ்ணன்) என்று பயன்படுத்தியுள்ளனர். இலக்கியங்களைத் திறனாய்வு செய்தவர்கள் சிலப்பதிகார மறுவாசிப்பு (தி.சு.நடராஜன்) மறுவாசிப்பில் கி.ராஜநாராயணன் (க.பஞ்சாங்கம்) மறுவாசிப்பில் தமிழிலக்கியம் (ஞானி) மறுவாசிப்பில் சங்க இலக்கியம் (ந.முருகேசபாண்டியன்) மீண்டெழும் மறுவாசிப்புகள் (ச.சுப்பாராவ்) போன்றோர் இலக்கியங்களை மீள்வாசிப்பு செய்தபோது மறுவாசிப்பு என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். கா.சிவத்தம்பி கூறுவதுபோல இலக்கியங்கள் ஏற்கனவே சொல்லப்பட்டுவிட்டன. அதனை அப்படியே கூறாமல் வெவ்வேறு விதமாகக் கூறவேண்டும் என்பதனை மறுவாசிப்பு இலக்கியம் எனலாம்.

இந்திய அளவில் மறுவாசிப்புக்குத் நேர்ந்த பிரதிகளாக இராமாயணமும் பாரதமும் இருக்கின்றன. இவற்றை மையமாக வைத்தே ஏராளமான மறுவாசிப்புப் பிரதிகள் எழுதப்பட்டுள்ளன. வி.எஸ்.காண்டேகர் - யயாதி (மராத்தி) எம்.டி.வாசுதேவநாயர் இரண்டாம் இடம் (மலையாளம்) பிரதிபாராய் - யஞ்சசேனி (ஒரியா) கே.எம்.முன்ஷி – கிருஷ்ணாவதாரம் (குஜராத்) சிவாஜிசாவந்த் – கர்ணன் (மராத்தி) பி.கே.பாலகிருஷ்ணன் - இனி நான் உறங்கட்டே (மலையாளம்) யார்லகட்ட லஷ்மிப்ரசாத் - திரௌபதியின் கதை (தெலுங்கு) எஸ்.எல்.பைரப்பா – பருவம் (கன்னடம்) சித்ரா பானர்ஜி திவாகருணியின் - தி பேலஸ் ஆ.ஃப் இல்யூ.ஃனி, வாயுநாயுடுவின் சீதாஸ், சி.சசிதரூரின் - தி கிரேட் இந்தியன் நாவல், கவிதா கானேயின் கருணாய் வை.ஃப், தேவ்தத் பட்நாயக்கின் – சிகண்டி, அஷ்வின் சாங்கியின் – கிருஷ்ணனின் ரகசியம், விகாஸ் சிங்கின் – பீமா, சரத் கொமாரராஜீவின் – தி விண்டஸ் ஆ.ஃப்ஹஸ்தினாபூர், கிறிஸ்டோபர் சி.டோய்லியின் – தி மகாபாரத சீக்ரெட், போன்றவை ஆங்கில மொழியிலும் எழுதப்பட்டவை. இராஜாஜி - அகலிகைக் கதை (சிறுகதை) பி.எஸ். இராமையா - தேரோட்டி மகன் (நாடகம்), கு.ப. ராஜகோபாலன் – அகல்கை (நாடகம்) ச.ரா. -

கோதைத் தீவு (நாவல்), எம்.வி. வெங்கட்ராம் அகல்யை (சிறுகதை), பெ.கோ. - சுந்தர்ராஜன் (சிட்டி) – மாசறு கற்பினள் (சிறுகதை), பிரபஞ்சன் அகல்யா (நாடகம்), அம்பை – அடவி (சிறுகதை), எம்.வி. வெங்கட்ராம் - நித்ய கன்னி, இந்திரா பார்த்தசாரதி – கிருஷ்ணா, கிருஷ்ணா, எஸ்.ராமகிருஷ்ணன் – உபபாண்டவம், அருணன் – புருவம்சம், சரயுநதிக்கரையில், தேவகாந்தன் – கதாகாலம், பூமணி – கொம்பை, ஜெயமோகன் – முதற்கனல், மழைப்பாடல், வண்ணக்கடல், நீலம், பிரயாகை, வெண்முகில் நகரம் போன்ற நாவல்களும் இராஜாஜி- பச்சாதாபம், கந்தர்வனின் - காந்தாரி, நாகூர் ரூமியின் - திரௌபதியும் சாரங்கப்பறவையும் ஜெயமோகனின் – திசைகளின் நடுவே, தளம், நதிக்கரையில், அதர்வம், பத்மவியூகம், விரித்த கரங்களில், எஸ்.ராமகிருஷ்ணனின் – புத்தன் இறங்காத குளம், பகல் விளையாட்டு, சாக்கியனின் பல், கடுகினை யாசிப்பவன், மூன்று வான சாஸ்திரிகள், ஆதாமின் பாஷை, ராமச்சந்திரன் உலா, அவள் பத்தினி ஆனாள், கங்காதுரையின் - ஆதிசேடன், அழகு நிலாவின் – தருமன், கல்யாணராமனின் – ஜலசமாதி போன்றவை மிகச் சிறந்த மறுவாசிப்புகளாகும்.

பாரதக் கதையை மறுவாசிப்பு செய்த நாவல்களில் பிரதீபாராய் – திரௌபதியின் கதை, யார்லகட்ட லஷ்மிப்ரசாத்தின் - திரௌபதி, எஸ்.எல். பைரப்பாவின் – பருவம், ஜெயமோகனின் - பிரயாகை போன்றவற்றில் திரௌபதியின் கதையை வேறுவிதமான கதையாடல்களாகத் தரிசிக்க முடிகின்றது. இந்த மறுவாசிப்புகளில் திரௌபதியை நவீன சிந்தனைப் பின்புலத்திலும் மரபு சார்ந்ததும் நிலம் சார்ந்த தன்மைகளிலும் பொருத்திப் புதிய திரௌபதியை நமக்கு அடையாளப்படுத்தியுள்ளனர். திரௌபதி குறித்த மறுவாசிப்புப் பிரதிகள் நான்கு மையங்களை முன்வைத்து மறுவாசிப்பு நிகழ்த்தியுள்ளன.



1. ***திரௌபதியின் பிறப்பு***
2. ***சுயம்வரம் (திருமணம்)***
3. ***போர்***
4. ***இறுதிகட்ட வாழ்க்கை.***

இந்த நான்கு மையங்களை மறுவாசிப்புப் பிரதிகள் (நாவல்கள்) எவ்வாறு அணுகியுள்ளன எனக் காண்பது கட்டுரையின் மையமாகும்.

வியாச பாரதத்தின்படி திரௌபதி நெருப்பிலிருந்து தோன்றியதாக உள்ளது. அவள் தோன்றியபோது பலரும் அவள்மீது ஆசை கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. அவளுக்குக் குழந்தை பருவம் இல்லை. குமரியாகவே வெளிவருகிறாள். துருபதன் மனைவியிடம் யாஜர் ஹவிசைட் உண்ண வருக என்று அழைக்கிறான். அவள் நான் முகத்தில் மஞ்சள் (ஸ்னானம் செய்யவில்லை) பூசிக்கொள்ளவில்லை, இனிய கந்தங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறேன். புத்ரோத்பத்திக்குரிய உம்முடைய இந்த யக்ஞத்தில் நான் பத்தினியாவதற்கில்லை. யாஜரே என் விருப்பப்படி நீர் இருக்கவிட வேண்டும் என்கிறாள். ஹவிஸ் இஸ்ட பலனைத் தராமல் இருக்காது எனக் கூறி ஹவிஸை ஹோமம் செய்கிறார். முதலில் த்ரஸ்துய்மன் அக்னியிலிருந்து வருகிறான். இரண்டாவது ஹோம காலத்தில் மந்திரம் சொல்லி ஹவிஸை அக்கினியில் ஹோமம் செய்தபோது பாஞ்சாலியாகிய குமாரியும் யாக வேதிகையின் மத்தியிலிருந்து எழுந்தாள். பரதச்ரேஷ்டரே ப்ருஹஸ்பதியாகிய கௌஸவி புரோகிதரான யாஜரை மறுத்ததனால் மறுபடியும் அழகிய பாஞ்சாலி என்னும் குமாரியும் யாகவேதிகையின் மத்தியிலிருந்தே உண்டானாள். மனத்தை மிகவும்

கவருகின்றவளும் கறுத்த நிறமும் தாமரையிதழ் போன்ற கண்களும் கறுத்துக் சுருண்ட அளகங்களுமுடையவளுமான அந்தக் கன்னிகை ஸ்ரீதேவியை வேறு நிறத்தோடு மானிட வடிவமெடுத்து வந்ததுபோல் வேதிகைகுள்ளிருந்து உண்டானாள். சிவந்தும் உயர்ந்து மிடுக்கும் நகங்களோடும், அழகிய புருவங்களோடும் அழகிய பெருத்த ஸ்தனங்களோடும் கூடினவளாக இருந்தாள். கருநெய்தல் மலர் மணத்துக்கொப்பான அவளுடைய தேக மணம் ஒரு குரோசம் வரையில் வீசிற்று. அவளுடைய அழகு எல்லாவற்றிற்கும் மேலானது. பூமியில் அவளுக்கு உவமையில்லை. அவள் தேவர்களும் அசுரர்களும் யஷர்களும் விரும்பத்தக்க சிறந்த பெண். அழகிய நிதம்பங்களையுடைய அவள் பிறந்த பிறகும் எல்லாப் பெண்களிலும் சிறந்தவளான கிருஷ்ணை ஷத்திரியர்களுக்கு நாசத்தை உண்டாக்கப் போகிறாள். அழகிய இடையுள்ள இவள் காலம் வரும்போது தேவ காரியத்தை நிறைவேற்றப் போகிறாள். இவள் காரணமாக ஷத்திரியர்களுக்குப் பெரிய பயம் உண்டாகப் போகின்றது என்று அசரீரி வானில் சொல்லிற்று. (ம.வீ. இராமானுஜாரியர், 1923 - ரு கா உ – ரு கூ) திரௌபதி அக்கினியிலிருந்து தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது. வியாசரும் வில்லியும் திரௌபதி அக்கினியிலிருந்து தோன்றியதாகக் கூறுகின்றனர். வாதிச்சந்திரர் தமது பாண்டவ புராணத்தில் துருபதன் – துருபதை இல்லற வாழ்க்கையின் பயனாகப் பிறந்தாள் என்று வேறுவிதமான மறு வாசிப்பினை நிகழ்த்துகிறார்.

மறுவாசிப்பு நாவலான பிரயாகை நாவலில் ஜெயமோகன் பிருஷதி வேள்வியில் இருந்து வெளிவந்த அன்னத்தை உண்டு அதனால் உண்டான கர்ப்பத்தை ஒன்பது மாதங்கள் சுமந்து திரௌபதியைப் பெறுவதாகக் காட்டுகிறார். வேள்வியன்னத்தை உண்ணும்போது அன்னையே என்னை ஆட்கொள்க என்று சொல்லிக்கொண்டாள். கண்கள் கலங்கி வழிய தொண்டை அடைத்து அன்னத்தை உளளே இறக்க முடியவில்லை. நெஞ்சில் சிக்கி அது இறங்குவது தெரிந்தது. அக்கணமே அவள் தன்னுள் குடியேறி விட்டிருப்பதை பிருஷதி உணர்ந்தாள். ஒன்பது மாதம் அவள் அந்த முகத்தையே கனவு கண்டாள் (ஜெயமோகன், 2015 : 34) குமரியாக வெளிப்பட்ட திரௌபதி என்கிற நிலையை ஜெயமோகன் மறுவாசிப்பின் வழி மறுக்கிறார். பிருஷதி, மூலமாகத் திரௌபதி குழந்தையாகப் பிறக்கிறாள். குழந்தையாக வளர்க்கிறாள் அவள் குழந்தையாக வளரும் நிலையை ஜெயமோகன் குறிப்பிடும்போது ஒருபோதும் அவள் அழுவதை அவர் பார்த்ததில்லை. அவளுடைய ஓங்கியக் குரல் கேட்டதில்லை. கைக் குழந்தையாக இருக்கையில்கூட அவள் வீரிட்டு அழுததில்லை. பசிக்கையிலே ஈரமாகும்போதோ இருமுறை மெல்லச் சிணுங்குவாள். அது ஓர் ஆணை. அக்கணமே இது நிறைவேற்றப்பட வேண்டும். இல்லையேல் சினம்கொண்டு கரியில் கனல் ஏறுவதுபோல சிவந்து கைகளை ஆட்டி மேலும் அழுத்தமாகக் குரலெழுப்புவாள். (ஜெயமோகன் 2015 : 334) திரௌபதியைக் குழந்தைப் பருவத்தில் காட்டும் அதே நேரத்தில் அவளை ஆளுமைமிக்கவளாக காட்டத் தவறவில்லை. அறிவும் அழகும் அதிகாரமும் நிறைந்த ஆளுமையாகத் திரௌபதியை நமக்கு அடையாளப்படுத்துகிறார். வியாசர் திரௌபதிக்கு குழந்தைப் பருவத்தைக் காட்டாத சூழலில் ஜெயமோகன் திரௌபதியைக் குழந்தையாக காட்டி அழகு சேர்க்கிறார். கண்ணனையும் இராமனையும் குழந்தையாகப் பாவித்துப் பாடிய பெரியாழ்வாரும் குலசேகராழ்வாரும் வாழ்ந்த தமிழ் மண்ணில் ஜெயமோகனின் நிலைப்பாடும் அதுவாகத்தானே இருக்கமுடியும்.

துருபதனுக்கு இரண்டு மனைவிகள் என்று ஜெயமோகன் காட்டுகிறார். திரௌபதியை அரசியல் ஞானம் படைத்தவளாகக் காட்டுகிறார். மூத்தவள் (அகல்யை) தன் மகனுக்குத்தான் முடிசூட்ட வேண்டும்

என்கிறாள். இளையவள் பிருஷதி தன் மகன் திருஷ்டத்யும்னனுக்குத்தான் பட்டம் சூட்ட வேண்டும் என்கிறாள். துருபதனுக்குத் தான் என்ன செய்ய வேண்டும் என்கின்ற குழப்பம் ஏற்படுகிறது. இக்கட்டான சூழலில் திரௌபதியிடம் தான் என்ன முடிவு எடுக்க வேண்டும் என்று கேட்கிறான். அங்கு அவள் ஐந்து குலங்களைச் சேர்ந்தவர்களைக் கூட்டினால் சோமகக் குலம் (அக்னியை) ஏற்கும்படி நான்கு குலங்களும் ஏற்காது என்று கூறிவிட்டு தொல் குலமாகிய நாம் பெரிய வேள்வி நடத்தி சந்திர குலமாக அறிவிக்க வேண்டும் என்கிறாள். மேலும் சித்ரகேதுவை (அகல்யை மகன்) பட்டத்து இளவரசனாக அறிவியுங்கள். இதனை ஏற்காதவர்கள் சந்திரகுலத்தவர் என்ற பட்டத்தை ஏற்கமுடியாது என்று அறிவியுங்கள் என்கிறாள். சுக்ரநீதியில் கூறப்பட்டுள்ள அரசு முறையை ஆதி தெய்வீகமாக அரசுரிமையை அளிப்பது ஏன் என்று சுக்ரநீதி தெளிவாகவே விளக்குகிறது. அரசுரிமை ஒருபோதும் ஐயத்திற்குரியதாக வாதிடுவதற்குரியதாக இருக்கலாகாது. அது மானிடரால் அளிக்கப்படுவதாக இருந்தால் மானுடரால் விளக்கவும் படலாம். அந்நிலையில் ஒவ்வொருவரும் மன்னரை விளக்க முயல முடியும். ஒருபோதும் அறியனை நிலைத்திருக்காது. தெய்வங்களால் அளிக்கப்பட்ட மணிமுடியை மானுடர் விளக்க முடியாதென்ற விதி இருக்கையிலேயே செங்கோல் அசைவற்றிருக்கிறது. பெரிய சத்ரிய நாடுகளில் வல்லமையே அவற்றில் உறுதியான மணிமுடியால் வருவதுதான் திரௌபதி சொன்னாள் (ஜெயமோகன் 2015:330) நுட்பமாக அதேநேரத்தில் சுக்கிரநீதி போன்ற நூல்களில் சொல்லப்பட்டுள்ள அரசியல் நுணுக்கங்களை எடுத்துக்கூறி பேசும் திரௌபதியை நமக்கு அடையாளப்படுத்துகிறார் ஜெயமோகன். மேலும், அரசியல் சாணக்கியத்தனம் நிரம்பியவளாகக் காட்டுகிறார். பாரதக்கதை கூறாத – காட்டாத இப்பகுதியை ஜெயமோகன் புதிதாக உருவாக்குகிறார்.

திரௌபதி சுயம்வரத்திற்குப் பிறகு பாண்டவர்களுக்கு மனைவி ஆகின்றாள். அர்ச்சுனன் திரௌபதியை வென்றிருக்க ஐவருக்கும் அவள் மனைவியாக வேண்டும் என்ற நிலை வரும்போது அவளுடைய மனநிலையை மறுவாசிப்புப் புனைவிலக்கியங்கள் பெண் என்ற நிலையிலிருந்து விரிவுபடுத்துவதைக் காணமுடிகின்றது. அண்ணனின் மனைவி மீது தம்பிகளுக்கு உரிமை இருக்கிறதே தவிர தம்பியின் மனைவி மீது அண்ணனுக்குக் கிடையாது, அந்த நீதி நெறியை, வரைமுறையை அனுசரித்துத் தன்னை முன்னதாகத் தர்மன் திருமணம் செய்து கொள்ளக் கூடதென்ற நடைமுறையைப் பீமன் விஷயத்தில் ஏன் தர்மன் கடைப்பிடிக்கவில்லை? இடும்பை அரக்கர் இனத்தவள் என்பதாலா? (இளம்பாரதி, 2014:369) இந்தக் கேள்வியைத் திரௌபதி காலம் கடந்து தன் மனதிற்குள்ளாகவே எழுப்பிக் கொள்கிறாள். சுயம்வரம் முடிந்து திரௌபதியை ஐவரும் பங்குபோட்டுக்கொள்ள முடிவெடுத்தபோது இப்படியான கருத்தைத் தெரிவித்திருந்தால் அர்ச்சுனனுக்கு மட்டுமே அவள் மனைவியாகி இருந்திருப்பாள். இப்படியெல்லாம் மறுவாசிப்புச் செய்தவர்கள் சிந்திப்பதற்குக் காலமும் சிந்தனைத்தளமும் இடம்கொடுத்திருக்கிறது.

சுயம்வரத்திற்கு முன்பே கர்ணன், அர்ச்சுனன், பீமன் முதலியோரைத் திரௌபதி காண்பதாகவும் பீமனை அவள் தேரை இழுக்கச் சொல்வதாகவும் அதற்கான பத்துக் கழஞ்சினைப் பீமன் திரௌபதியிடம் பெறுவதாகவும் ஜெயமோகன் காட்டுகிறார். இப்படியெல்லாம் நடந்திருக்குமா என்று யோசிப்பதிலிருந்து மாறுபட்டு ஏன் இவ்வாறு நடந்திருக்கக் கூடாது என்று எண்ணத் தோன்றுகிறது. சுயம்வரத்தின்போது தருமன், துரியோதனன், கர்ணன், அர்ச்சுனன், பீமன் இவர்களில் யாரைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று தோழி மாயையிடம் திரௌபதி கேட்பதாக ஜெயமோகன் படைத்துள்ளார். அவள்

ஒவ்வொருவரைப் பற்றியும் மிகத்தெளிவான புரிதலின் விளைவால் ஒவ்வொருவரையும் அடையாளப்படுத்துகிறாள்.

திரௌபதியை அர்ச்சுனன் சுயம்வரத்தில் வெல்கிறான். பீமன் அர்ச்சுனரே குந்தியிடம் பிச்சைபெற்றதாகப் பாரதக்கதைக் கூறுகின்றனர். மறுவாசிப்பு நாவல்களில் தருமன் கூறுவதாகவும் காட்டப்பட்டுள்ளது. ஐவரும் திரௌபதியை மணக்க விரும்புகின்றனர். இது குறித்து குந்தி தருமனிடம் கேட்கும்போது அவன் மூத்தவன் இருக்க இளையவன் (அர்ச்சனன்) எப்படி திருமணம் செய்ய முடியும் என்கிறான். அப்போது குறுக்கிடும் அர்ச்சுனன் அப்படியென்றால் இவளைத் திருமணம் செய்து கொள்ளும் ஆசை உனக்கும் இருக்கிறதா? அண்ணா நியாயத்தைத் தவிர வேறெதையும் பேசத் தெரியாதவன் நீ என்று இத்தனை நாளும் எண்ணியிருந்தேன். பெரியவனுக்கு மணமாகாமல் சிறியவனுக்கு மணம் முடிக்கக் கூடாது என்று சொல்கிறாயே, இடும்பாசுரனின் காட்டில் உனக்கு ஏன் அந்த ஆசை வரவில்லை? நீ மூத்தவன் என்கிற உரிமையை ஏன் விட்டுக்கொடுத்தாய்? அந்த ராட்ச்சசப் பெண் இடது கையாலே உனது குடுமியைப் பிடித்துத் தூக்கிக் குலுக்கி விடுவாள் என்கிற பயத்தாலா? என்று அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு அவன் எந்தப் பதிலும் சொல்லாமல் குனிந்த தலை நிமிராமல் இருந்தான் (பாவண்ணன், 2016:216) அர்ச்சுனனை இப்படியாகப் பேசவைக்கிறார் எஸ்.எல். பைரப்பா. பாரதத்தில் அர்ச்சுனன் இப்படிப் பேசியிருந்தால் திரௌபதி ஐவருக்கு மனைவியாக ஆகியிருக்கமாட்டாள். புாரதக் கதையும் வேறு விதமாக நடந்திருக்க அர்ச்சுனன் பேசுவது திரௌபதி யோசித்ததற்கு இணையாக இருப்பதனை அறியமுடிகிறது.



பீமன் திரௌபதிமேல் ஆசைகொண்டவனாக எஸ்.எல். பைரப்பா காட்டுகிறார். எம்.டி. வாசுதேவன் நாயர் பீமனை வேறுவிதமாக நமக்கு அடையாளப் படுத்துகிறார். பீமன் திரௌபதியைத் திருமணம் செய்துகொள்ள மறுக்கிறான். அதற்கான காரணத்தைக் குறிப்பிடும்போது, திரௌபதி அர்ச்சுனனுக்கு உரியவள். பல கணவர்கள் அவளை அடைய வேண்டும் என நினைத்தால், நீங்கள் பங்குகொள்ளுங்கள் அதற்குமுன் அவளுடைய அபிப்பிராயத்தையும் கேட்க வேண்டும். அவள்தான் தன் வீரத்தாலும் திறமையாலும் வெற்றிபெற்று அவளை அடைந்தான். அதோடு மட்டுமல்லாமல் திரௌபதியின் பெண்களின் விருப்பு வெறுப்புகளைப் பார்ப்பது நமக்குத்தான் பழக்கமில்லையே (குறிஞ்சி வேலன் 2017:171-172) என்று குறிப்பிட்டுவிட்டு என்னை விட்டுவிடுங்கள் எனக்காகக் காட்டில் இடும்பி காத்துக்கொண்டிருக்கிறாள் திரௌபதி தேவையில்லை என்கிறான். பீமனுக்கு மதிப்பு மிக்க இடம் கேரளத்தில் உண்டு அதன் வெளிப்பாடுதான் இப்படியாக பீமனை எம்.டி. வாசுதேவன்நாயர் படைத்துள்ளார். எஸ்.எல். பைரப்பா, எம்.டி.வாசுதேவநாயர் இருவரும் கூறுவதை மறுக்கும் ஜெயமோகன் ஐவரும் திரௌபதியை மணக்கக்கூடாது அர்ச்சுணன் மட்டுமே மணக்க வேண்டும் என்று தருமன் கூறுவதாக் காட்டுகிறார். ஜெயமோகன் புனிதப்படுத்தும் தருமனுக்குத் தமிழ்நாட்டில் பெரிய மதிப்பு உண்டு. அதனால்தான் ஜெயமோகன் தருமனைத் திரௌபதிமேல் ஆசை இல்லாதவன்போல் பேசவைக்கிறார்.

மறுவாசிப்புப் புனைவுகளில் ஐவரை மணந்துகொள்வதற்குத் திரௌபதியின் சம்மதம் பெறுவதாகக் காட்டப்பட்டுள்ளது. திரௌபதி இனி ஒன்றும் பேசிப் பயனில்லை என்று ஒத்துக்கொள்வதாகக் காட்டப்பட்டுள்ளது. யார்லகட்ட லஷ்மிப்ரசாத் காட்டும் திரௌபதி ஐவரை மணப்பதற்கு ஆவல் கொண்டவளாகவும் உறவில் பெருவிருப்பம் கொண்டவளாகவும் படைத்துள்ளார்.

பஞ்ச பாண்டவர்களின் ஒவ்வொருவருடனும் ஒரு வருடம் திரௌபதி வாழ வேண்டுமென்று மறுபுனைவு செய்தவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொருவர் சொன்னதாகக் கூறியுள்ளனர். குந்தி, கிருஷ்ணன், நாரதர், திரௌபதி இவர்கள் கூறியதால்தான் இப்படியான பிரிவினை எற்பட்டது என்று மறு வாசிப்பு செய்துள்ளனர். அதேபோல் திரௌபதிக்குக் குழந்தை பிறப்பது குறித்து எஸ்.எல். பைரப்பா மட்டுமே மிகச் சரியாகக் கூறுவதாகத் தெரிகிறது. ஆண்டுக் கணக்கு என்பது திரௌபதிக்கு பிற்காலத்தில் ஏற்பட்டது என்று குறிப்பிடுகின்றார். திருமணமாகி குழந்தைகள் பெற்றுக்கொண்ட காலம் வரை ஆண்டுக்கணக்கு வரையறை இல்லை என்கிறார் எஸ்.எல். பைரப்பா. அவளுக்கு இருபத்தைந்து வயது இருக்கக்கூடும். எத்தனையாவது கர்ப்பமோ இது? ஒன்றைத் தொடர்ந்து ஒன்று என ஐந்து பிள்ளைகள். அப்புறம் இரண்டு மாதம் தீட்டுக்காலம், அப்புறம் பசித்த புலியாக இரவுக்கொருவனாக வருபவனுடன் தாம்பத்தியம், அத்தைக்காரிக்கும் பெருமை அடுத்தடுத்த ஆண் குழந்தைகளாய் பிறந்ததாக அவளுக்கு மகிழ்ச்சி… தளர்ந்தப் பசுவாக சாறு பிழிந்த கருப்பச் சக்கையாக ஆன பிறகு நானே அவளிடம் சொன்ன பிறகுதானே அவள் புதிய தாம்பத்திய முறையை ஏற்பாடு செய்து அதைத் தன் பிள்ளைகளுக்கும் சொல்லி ஒப்புக்கொள்ள வைத்தாள். தினந்தோறும் ஒருவன் என்கிற முறை வேண்டாம். ஆண்டுக்கொருவன் முறை. ஒவ்வொருவளுக்கும் நான்கு ஆண்டுகள் பிரம்மச்சரியம் ஓர் ஆண்டு தாம்பத்தியம் இதன் பிறகுதான் ஒருபெண் என்பவள் ஒரு ஆணுக்குச் சமமானாள், என் உடலும் தப்பித்தது. இதனால் உயிரும் பிழைத்தது. (பாவண்ணன் 2016: 227 – 228) ஆண்டுக்கொருவன் என்ற நிலைப்பாட்டைத் திரௌபதிதான் எடுத்திருக்க வேண்டும். ஐந்து பிள்ளைகள் பெற்ற பிறகே இந்த நடைமுறை வந்திருக்க வேண்டும் என எஸ்.எல். பைரப்பா காட்டுவதும் பொருத்தமாக உள்ளது. மேலும் குழந்தைகள் யாருக்குப் பிறந்தார்கள் என்று மற்ற புனைவு எழுத்தாளர்கள் போல எஸ்.எல். பைரப்பா காட்டவில்லை. இப்படி நடத்திருப்பதற்குத்தான் சாத்தியம் அதிகம். குழந்தைகள் யாருக்குப் பிறந்திருந்தாலும் மூத்தவனுக்கான பிள்ளையாகவே இருந்திருக்க வேண்டும். அதுதான் கணசமூகத்தின் அடையாளமாய் இருந்திருக்கிறது.



மகாபாரதத்தில் காட்டப்படுகிற கிருஷ்ணன் – திரௌபதி உறவு மேன்மையானதாகும். இந்த மேம்மையான உறவை மறுவாசிப்புப் பிரதிகள் மறுபரிசீலனை செய்கின்றன. பாரதத்தின்படி ஆதிப் பருவத்தில் இறுதியில் திரௌபதியின் சுயம்வரத்திலேயே கிருஷ்ணன் வருகிறான். அதற்கு முன்பாகப் பாண்டவர்களுடனோ அல்லது கௌரவர்களுடனோ அவனுக்குத் தொடர்பு இல்லை. திரௌபதியை வெற்றிக்கொள்ள சுயம்வரத்தில் பலராமனும் கிருஷ்ணனும் வரவில்லை. சத்திரியர்கள் கூட்டத்தில் பங்கெடுக்கவே அவர்கள் வந்தனர். மகாபாரதத்தில் கிருஷ்ணன் கடவுள் அல்ல. ஆனால் அசாதரண மனிதன். வாசுதேவன் என்று அழைக்கப்பட வேண்டும் என்பதே அவனின் பெரு விருப்பம் (அழகிய சிங்கர் 1994:175) கிருஷ்ணனின் நிலை இவ்வாறு இருக்கத் திரௌபதி கிருஷ்ணமேல் விருப்புகொண்டாள். திரௌபதி கிருஷ்ணனைக் காதலித்தாள் எனக் காட்டுவது மறுவாசிப்பின் அந்தக் கற்பனைக் கொண்ட நவீனத்தன்மை எனலாம். கிருஷ்ணனை மட்டுமல்லாது கர்ணனைக் காதலித்தாள் எனவும் காட்டுகின்றனர்.

பாரதப் போருக்கு குந்தி, கர்ணன், தருமன், பீமன், பீஷ்மர், காந்தாரி, துருபதன், துரியோதனன், சகுனி, கண்ணன், திரிதராட்டிரன் எனப் பலரும் காரணமாக இருக்க திரௌபதிதான் காரணம் என்று மறுவாசிப்புப் பிதிகள் தொடர்நது கூறிக்கொண்டிருக்கின்றன. நுடைபெற்ற போருக்கு வருத்தம் தெரிவித்து அவள் அழுவதுபோல கட்டமைக்கப்படுகின்றன. உண்மையில் திரௌபதியின் தவறு ஏதும் இதில் இல்லை.

திரௌபதி தனக்கு ஏற்பட்ட அவமானங்களுக்காக பழிவாங்க ஆசைப்பட்டாள். அதற்கு தன் கணவன்களைப் பயன்படுத்திக் கொண்டாள். குறிப்பாகப் பீமனை. உண்மையில் பாரதப்போர் அவளுடையது அல்ல. அது காலத்தின் போர்.

திரௌபதியின் இறுதி வாழ்க்கை மோசமானது. தன் கணவர்களால் கைவிடப்பட்ட வாழ்க்கை. பீமன் மட்டுமே சுவர்க்கத்தை நோக்கிச் செல்லும்போது ஆதரவாக நிற்கின்றன. மறுவாசிப்புப் பிரதிகள் பாண்டவர்கள் ஐவரையும் திரௌபதியின் பார்வையின்வழி தோலுரித்துக் காட்டுகிறது. திரௌபதியின் பிம்பம் சில இடங்களில் மிகைப்படுத்தியும் சில இடங்களில் இயல்பாகவும், படைக்கப்பட்டுள்ளது. திரௌபதி குறயீடுகளால் நிரம்பிய பெண்ணாகவே மறுவாசிப்பு நாவல்கள் தெரிவிக்கின்றன.

திரௌபதியை மறுவாசிப்புப் பிரதிகளின் வழி சில முடிவுகளுக்கு வரமுடிகிறது.

- **திரௌபதியை நவீனச் சிந்தனை மரபோடு பொருத்திப் பார்த்துள்ளனர்.**
- **படைப்பாளர்கள் வாழ்கின்ற நிலச்சூழலில் வழங்கப்படுகின்ற நாட்டுப்புறக் கதைகளின் வழி திரௌபதியை அணுகியுள்ளனர்.**
- **படைப்பாளிகளின் மாநிலங்களில் பாரதக் கதாப்பாத்திரங்களுக்கு இருக்கக்கூடிய முக்கியத்துவத்தை அந்தந்த மறுபுனைவுகளுக்குத் தந்துள்ளனர்.**
- **திரௌபதியின் முற்பிறப்புக் கதையினை (நளாயினி) அடிப்படையாக வைத்துக்கொண்டு திரௌபதி தொன்மத்தை காமம் மிகுந்தவளாகப் படைத்திருப்பது.**
- **திரௌபதியை சாதாரனப் பெண்ணாகக் காட்டாமல் அரசியல் ஞானம் பெற்றவளாகக் காட்டுதல்.**
- **பெண்ணிய அணுகுமுறைகளின் பின்னணியில் திரௌபதியைச் சிந்திக்க வைத்திருப்பது.**
- **திரௌபதி தொன்மத்தை மகாபாரதப் போர் நிகழ்வதற்கு அவள்தான் காரணம் எனக் கட்டமைத்திருப்பது.**

எம்.டி. வாசுதேவன்நாயர், எஸ்.எல். பைரப்பா, ஜெயமோகன், பிரதிபாராய், யார்லகட்ட லஷ்மிப்ரசாத் எனப் பலரும் திரௌபதியை மறுவாசிப்பு செய்துள்ளனர். பாரதக் கதை காட்டும் திரௌபதியை ஒன்று மறுக்கிறார்கள், அல்லது புனிதத்தன்மை ஏற்றுகிறார்கள். ஜெயமோகன் திரௌபதியை மிசச்சிறந்த அறிவு ஜீவியாகப் படைத்து புனித பிறவியாக மாற்ற முயல்கின்றார். எல்.எஸ் பைரப்பா மண்ணிற்கான குணங்களைக் கொண்ட பெண்ணாகப் படைக்கிறார். எம்.டி. வாசதேவன் நாயரும் மண்மனம் மாறாமல் படைத்துள்ளார். திரௌபதி என்றத் தொன்மத்தை இந்தக் காலநோக்கோடு மறுவாசிப்பு செய்யப்பட்டதன் விளைவால் திரௌபதியின் அகமும் புறமும் போலி இல்லாமல் புனைவு செய்யப்பட்டுள்ளன. திரௌபதியைப் போல் மகாபாரதத்தில் இடம்பெறக்கூடிய பிற பெண் பாத்திரங்கள் மறுவாசிப்பு செய்யப்பட்டால் புதிய வகையிலான அணுகுமுறைகள் உருவாக்கப்படும்.

***துணைநூல்கள்***


1. கதிர் மகாதேவன், 2008. ***தொன்மம்,*** செல்லப்பா பதிப்பகம், மதுரை.
2. க. பஞ்சாங்கம் 2005. ***தொன்மத் திறனாய்வு,*** தஞ்சாவூர் அன்னம் வெளியீட்டகம்.
3. ஜெயமோகன், 2015. ***பிரயாகை,*** கிழக்குப் பதிப்பகம், சென்னை.
4. பாலச்சந்திரன் தமிழாக்கம், பிரதிபாராய் ஒரியா (மூலம்) 2016. ***திரௌபதியின் கதை,*** சாகித்திய அகாடமி, சென்னை.
5. குறிஞ்சிவேலன் (தமிழில்) எம்.டி. வாசுதேவன் நாயர் (மூலம் ) 2017. இரண்டாம் இடம், சாகித்திய அகாதமி, சென்னை.
6. பாவாணன் (தமிழில்) எஸ்.எல். பைரப்பா, (கன்னட மூலம்) 2016. பருவம், சாகித்திய அகாதெமி, சென்னை.

7. இளம்பாரதி (தமிழில்) 2014. யார்லகட்டலஷ்மிப்ரசாத், (தெலுங்கு மூலம்) திரௌபதி, சாகிடத்திய அகாதெமி, சென்னை.
8. ஸ்ரீநிவாஸாசாரியர் (மொ.ஆ) 1923, ***மகாபாரதம்*** (ஆதிபர்வம்) கமர்சியல் பிரஸ், சென்னை.
9. அழகிய சிங்கர் (தமிழில்) 1984, ***ஐராவதி கார்வே,*** யுகாந்தா, ஓரியண்ட் லாங்மென் லிமிடெட், ஹைதராபாத்.

(:☺(☺)(☺)(☺)(☺)



# இந்தியாவில் ஒடுக்கப்பட்டோர் அடையாளங்களை நிலை நிறுத்தும் தொன்மங்கள்: பறையர் தொன்மம் - சிறப்புப் பார்வை

முனைவர் த பிரகலாதன்
1. தமிழ்த்துறைத் தலைவர், சிந்திக்கல்லூரி,
பூந்தமல்லி, சென்னை
prahalathan10@yahoo.com

*****

எந்தவொரு சமூகத்திற்கும் அதற்கேயுரித்தான இலக்கியங்களோ அல்லது அவற்றை அடையாளங்காட்டும் இலக்கியங்களோ அமைந்திருக்கும் . அவ்வாறு அமையாத சமூகங்கள் முக்கியத்துவம் இழந்தே காணப்படும். ஒரு சமூகத்தை அடையாளங்காட்டும் இலக்கியங்களில் தொன்மக்கதைகளுக்கும் முக்கியத்துவம் உண்டு. இந்த தொன்மக் கதைகள் எப்போது தோன்றின, எப்படித் தோன்றின ,யாரால் தோற்றுவிக்கப்பட்டன என்பது மிகப் புதிராகவே உள்ளன. அவற்றின் நம்பகத்தன்மை கேள்விக்குறியாக இருந்தாலும் பல சமூகங்களும் அத்தகைய தொன்மங்களை ஏதோ ஒரு காரணத்திற்காக அவற்றைத் தம்மோடு இணைத்துக் கொண்டு அத்தொன்மங்களை மதிக்கவும் செய்கின்றன. அக்கதைகளே அம்மக்களின் அடையாளமாகவும் திகழ்கின்றன. இத்தகைய கதைகள் இந்தியத் துணைக்கண்டத்தில் இரண்டுவிதமாக அமைவதைக் காணமுடிகிறது 1. உயர் சாதியினர் சார்ந்தவை 2. ஒடுக்கப்பட்ட சாதியினர் சார்ந்தவை.

உயர்சாதியினர் சார்ந்தவை பெரும்பாலும் அரசப் பரம்பரை அல்லது தெய்வீகப் பரம்பரை என்ற தொன்மத்தால் அல்லது சூரிய வமிசம், சந்திர வமிசம் என்றே தொடர்புறுத்தப்பட்டு தொன்மங்கள் பின்னப்பட்டுள்ளன. இதன் மூலம் அவர்கள் தொடர்ச்சியாக ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் பல்லாண்டுகளாக வாழ்ந்து வருவதாகவும் அவர்களே பெருமைக்குரியவர்கள் என்ற கருத்தும் முன்வைக்கப்படுகின்றன. அதேவேளை ஒடுக்கப்பட்ட மக்களின் நிலைமை எத்தகையது என்ற கேள்வியும் தவிர்க்கவியலாததாகிறது. அவர்கள் குறிப்பிட்ட மண்ணில் அல்லது வட்டாரத்தில் நெடியப் பாரம்பரியம் கொண்டு வாழ்ந்தவர்களா அல்லது வெறுமனே சமூகஅடையாளமற்றவர்களா என்ற கேள்விகளும் எழுகின்றன.நல்ல வேளையாக ஒடுக்கப்பட்ட மக்களும் அவர்களுக்கே உரித்தான தொன்மக்கதைகளைக் கொண்டிருக்கின்றனர். இந்த கதைகள் அவர்களுக்கான அடையாளத்தை நிறுவுவதோடு அவர்களது நெடும்பாரம்பரியத்தையும் காட்டுகின்றன. அந்த வகையில் இந்தியத் துணைக்கண்டத்தில் நிலவிவரும் பல்வேறு சமூகங்களின் தொன்மக்கதைகள் இருந்து வந்தாலும் திராவிட மொழிகளில் அம்மக்கள் பற்றிய தொன்மங்கள் தனித்துவமாகத் திகழ்கின்றன. அவை ஒடுக்கப்பட்ட மக்கள் இம்மண்ணின் மைந்தரென்றும் அம்மக்களுக்கும் இந்த பூமியில் உரிமையுண்டு என்ற கருத்தைப் புலப்படுத்தி நிற்கின்றன. அவ்வகையில் அம்மக்கள் எவ்வாறு தோன்றினர், அவர்களுக்கான தொழில் என்ன, அவர்களது சிறப்பான செயல்பாடு என்ன அல்லது அவர்களது வீழ்ச்சக்கான காரணம் என்ன என்னும் நிலைகளில் இத்தொன்மங்கள் காணப்படுகின்றன. இது இந்தியாவில் உள்ள பல்வேறு ஒடுக்கப்பட்ட மக்ளுக்கும் பொருந்தும். அந்தவகையில் இந்த கட்டுரை தமிழிலும் மலையாளத்திலும் உள்ள பறையர் இன மக்கள் பற்றிய தொன்மங்கள் குறித்து விளக்குகிறது.

**தொன்மக் கதை -1**

பார்ப்பாரும் பறையரும் ஒரே குலத்தவரே என்ற கருத்தைத் தொன்மக்கதை மூலம் நிலைநிறுத்த முயலுகிறது .

ஒரு காலத்தில் பறையன் , பிராமணன் இரண்டு பேருமே சிவபூசை செய்துவந்தனர். பறையன் அண்ணன், பார்ப்பான் அவனது தம்பி. இவர்கள் சிவபூசை செய்து வரும்போது கோவிலுக்குள் தேவலோகத்திலிருந்து ஒரு பசு இரவுநேரம் வந்து செல்லும் வழக்கமிருந்தது. அது பால் உள்பட பல்வேறு உணவுப்பொருள்களை இவர்களுக்கு அளித்துவிட்டு மறுபடியும் காலையில் மேலுலகத்திற்குத் திரும்பிச் செல்லும் .இருவரும் இவ்வாறு பூசை செய்து வாழ்ந்து வருகையில் அண்ணனாகிய பறையன் ரகசியமாக ஒரு வைப்பாட்டியையும் வைத்திருந்தான். அவளுடன் கொஞ்சி குலவும் போது அவள் அவனுக்குச் சுவையான உணவுகள் கொடுப்பது வழக்கம் . ஆனால் அவனோ அவற்றை உண்ண மறுப்பதுடன் அவள் தரும் உணவை விட மேன்மையான ருசி நிறைந்த உணவினைத் தனக்குத் தெய்வலோக பசு தரும் என்றும் கூறிவிடுவான். அவனது கூற்றில் ஆவல் கொண்ட அந்த வைபாட்டியானவள் "நீங்கள் தினம் தினம் இவ்வாறு பொய் கூறுகிறீர்கள். உண்மையிலேயே தெய்வீக உணவு உங்களுக்குக் கிடைப்பதாக இருந்தால் அவற்றை இங்கே கொண்டுவருவதுதானே" என்று சொன்னாள்.

வேறு வழியில்லாமல் ஒரு நாள் இரவு அந்தத் தெய்வீகப் பசு அளித்த உணவைத் தனது தம்பியாகிய பார்ப்பானுக்குத் தெரியாமல் அந்த வைப்பாட்டிக்குக் கொடுத்துவிட்டான் . வைப்பாட்டி மிகுந்த வியப்புடன் அந்த உணவை ருசித்தாள். ஆனால் அவ்வாறு அவளுக்கு உணவை அளித்ததால் தோசம் ஏற்படவே அந்தப் பசுவானது விடியல்காலையில் மேலே பறக்கமுடியாமல் கோயிலுக்குள்ளேயே காலை இழுத்துக் கொண்டு பரிதாபமாக உயிர் இழந்தது. மறுநாள் தம்பியாகிய பார்ப்பான் காலைநேரம் பூசைக்காகக் கோவிலுக்குச் சென்றபோது செத்துப்போன பசுவைக் கண்டான். உடனடியாக வெளியே வந்து அங்குள்ள ஊர்மக்களிடம் பசு இறந்துகிடந்த செய்தியை அறிவித்து கோவிலின் கதவைப் பூட்டினான்.

செத்த பசுவினை வெளியே இழுத்துப் போடும்படி ஊர் மக்கள் பார்ப்பானிடம் கேட்டுக்கொள்ள அவனோ தனது அண்ணன் செய்த தவறுக்குத் தான் பொறுப்பாளியாக முடியாது என்று மறுத்துவிட்டான். எனவே மக்கள் அண்ணனாகிய பறையனிடம் செத்த பசுவை வெளியே இழுத்துப் போடும்படிக் கேட்டுக் கொண்டனர். வேறுவழியின்றி அவனும் பசுவைக் கோயிலிலிருந்து வெளியே இழுத்துக் கொண்டுவந்ததுடன் அதனை ஊருக்கு ஒதுக்குப்புறம் புதைக்கவும் நேரிட்டது. அன்று முதல் அவன் இழுபறையன் என்ற பட்டப்பெயரும் சூட்டப்பட்டான்.

**பகுப்பாய்வு**

இந்தக் கதை பிராமணர்களுக்கும் பறையர்களுக்கும் ஏதோ ஒரு ஆழ்ந்த உறவு ஒரு காலத்தில் இருந்திருக்க வேண்டும் என்பதையும் ஏதோ ஒரு காரணத்தால் அவர்கள் இணையாதபடி பிரிந்துவிட்டார்கள் என்பதையும் உணர்த்திநிற்கின்றது. நண்பர்கள் சென்ம விரோதியாக மாறுவது இவ்வுலகத்திலுள்ள இயற்கைதான். மேலும் பறையர்கள் சமூகத்தில் பின்னடைவு ஏற்பட காரணமாக பசு இந்த கதையில் அடையாளப்படுத்தப்படுகிறது.

**தொன்மக் கதை-2**

பறையர் இனமக்கள் தொடர்பாக மலையாள மண்ணுக்கே உரித்தான பூர்வ கதை ஒன்று உள்ளது. . பல நூற்றாண்டுளாக வாய்மொழியாகக் கூறப்பட்டுவரும் நாராணத்து பிராந்தன் என்பவனது கதையே இது என்பது குறிப்பிடத்தக்கது. அக்கதை ஐதீகமாலை எனப்படும் கதைத்தொகுப்பிலும் இடம்பெற்றுள்ளது. இம்மலையாளக் கதை பறையர்கள் மிகப்பழங்கால குடியினர் என்பதை உணர்த்துகிறது

வரருசி என்னும் ரிஷி வட இந்தியப்பகுதியில் வாழ்ந்துவந்தான். அவனது காலத்தில் அந்த நாட்டை ஆண்டு வந்த மன்னன் தன் அரண்மனை சபையிலுள்ள அனைத்துச் சான்றோர்களையும் விளித்து அவர்களிடம் இராமாயண காப்பியத்திலுள்ள பாடல் வரிகளில் மிகவும் மனதைக் கவரும் வரிகள் எவை என்ற சிக்கலான கேள்வியை முன்வைத்தான். அவனது கேள்விக்குத் தகுந்த விடையைக் கண்டுபிடித்திட கவிஞர்களும் புலவர்களும் பண்டிதர்களும் பல்வேறு நாடுகளுக்கும் சென்று விவாதித்துப் பார்த்தும் அரசனது வினாவுக்கான ஏற்ற விடையைக் கண்டுப்பிடிக்க இயலவில்லை.

மனதைக் கவரும் சிறந்த வரியை யாரும் கண்டுபிடிக்க முடியாத நிலையில் காலமும் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. ரிஷியான வரருசி காட்டில் ஒரு மரத்தின் கீழே அமர்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தபோது அம்மரத்தின் மேலே கிளையில் இரண்டு கிளிகள் பேசிக்கொண்டிருந்தன. ஒரு கிளி ” இராமாயணத்தை வாசிக்கும்போது அதில் நமது மனதைக் கவரும் சிறப்பான வரிகளை உன்னால் எடுத்துப் பாடமுடியுமா ”-என்று கேட்டது. அவ்வாறு கேள்வியை எழுப்பிவிட்டு அதற்கான விடையாக இராமாயணத்திலுள்ள சிறந்த மனங்கவரும் வரிகளை எடுத்துப்பாடியது. இந்த உரையாடலையும் பாட்டையும் மரத்தின் கீழ் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த ரிஷி காதுகூர்ந்து கேட்டதோடு கிளி கூறிய வரிகளை அப்படியே மனப்பாடம் செய்துகொண்டார். கிளிகளின் உரையாடல் மேலும் பின்வருமாறு தொடர்ந்தது:

“இதோ இந்த மரத்தின் கீழே படுத்திருக்கும் வரருசி என்ற இந்த ரிஷி, அடுத்திருக்கும் ஊரில் நேற்று பிறந்த ஒரு பறைச்சியை கல்யாணம் செய்துகொள்ளப் போகிறான்”

இதைக் கேட்டுத் திடுக்கிட்ட வரருசி தனது வர்ணாசிரமத்தைப் பாதுகாக்க உறுதி பூண்டான். தனது நாட்டரசனின் அரண்மனைக்குச் சென்று அரசனைச் சந்தித்து. அவனிடம் இராமாயணத்தில் மனதை உருக்கும் மற்றும் கவரும் அழகிய வரிகளைப் பாடிக்காட்டினான். திருப்தியடைந்த மன்னன் ”வரருசி அவர்களே நீங்கள் எத்தகைய விலையுயர்ந்த பொருளைக் கேட்டாலும் பரிசாகத் தருவேன்” என்று மனமுவந்து சொன்னான். அதற்கு மறுமொழியாக வரருசி –“மன்னா உங்களது வாக்கில் உறுதியாக இருப்பீர்களா? எதைக் கேட்டாலும் தருவீர்களா?” என்று ஐயத்துடன் பேசினான். மன்னனும் தான் கொடுத்தவாக்கை மீறுவதில்லை என மறுபடியும் உறுதி கூறினான். உடனே வரருசி ” அப்படியானால் நேற்றைக்குத் தங்கள் நாட்டில் பிறந்துள்ள எல்லாப் பெண்குழந்தைகளையும் கொன்றுவிட வேண்டும்- இதுதான் நான் விரும்பும் பரிசு” என்றான்.

மன்னனும் வேறு வழியின்றி தன் நாட்டில் பிறந்த பெண்குழந்தைகளைக் கொல்ல ஏற்பாடுசெய்தான். ஆனால் ஒரு பறைச்சி மட்டும் தான் பெற்றெடுத்த பெண்குழந்தையை எவ்விதத்திலாவது காப்பாற்ற தீர்மானித்தாள். தன் குழந்தையின் தலையில் ஒரு கொள்ளிக்குச்சியால் ஒரு வடுவை ஏற்படுத்திவிட்டு

அந்தப் பெண்குழந்தையை ஒரு கூடையில் அடைத்து அதனை ஆற்றில் ஓடவிட்டாள். அந்தக்கூடையும் நதியின் போக்கில் அண்டைய நாட்டுப் பகுதிக்குள் நுழைந்தது. பழங்கால மரபுப்படி நதி ஒரு நாட்டின் எல்லையை அடையாளப் படுத்துவதாக இருக்கும். நதியின் ஒரு கரை ஒரு நாட்டிற்கும் மற்ற கரை இன்னொரு நாட்டிற்கும் சொந்தமானதாகும். அடுத்த கரைக்கு வந்தடைந்த கூடையை அங்கு குளிக்க வந்த பெண் ஒருத்தி எடுத்து அதிலிருந்த குழந்தையைத் தன் குழந்தையாகவே வளர்த்து வரலானாள்.

பதினாறு வருடங்கள் விரைந்தோடியபின் அந்தக் குழந்தை பருவப்பெண்ணானாள். விதியின் வசத்தால் அவள் வாழ்ந்து வந்த பகுதியில் வரருசி ஏதோ ஒரு காரணத்துக்காக அந்த வழியாக வரநேர்ந்தது. அப்போது அவளது அழகில் மயங்கிய அவன் தன் காதலை அவளிடம் தெரிவிக்க அவளும் அவனை ஏற்றுக்கொண்டு , அம்மாவின் சம்மதத்துடன் அவனுடன் திருமணம் செய்துகொண்டு வாழ்ந்து வந்தாள். அதன் விளைவாக அவள் கர்ப்பமடைந்தாள். முழுமாத கர்ப்பிணியாக இருந்த போது ஒரு நாள் அவள் வரருசியின் மடியில் படுத்துக்கொண்டிருக்க அவன் அவளது தலையைக் கோதிக்கொண்டிருக்கவே அவனது விரல்கள் அவளது தலையிலுள்ள வடுவைத் தடவின. தலையில் வடு ஏற்பட்டதற்கான காரணத்தை அவளிடம் வினவவே, அவளும் பக்கத்து நாட்டு அரசனுக்குப் பயந்து , பறையர் இனத்தைச் சேர்ந்த தனது தாய் ஆற்றில் விட்ட நிகழ்ச்சியை விவரித்தாள். அப்போதுதான் வரருசிக்குக் கிளி சொன்ன வாக்குப் பலித்தது புரிந்தது . எல்லாம் விதி என்று அறிந்தும் அன்றைய சமூகக்கட்டமைப்புப்படி பறைச்சியை ஏற்க அவனது மனம் ஒப்பவில்லை.

உடனே அவன் தான் அந்தணன் என்பதால் பறைச்சியுடன் கூடி வாழ்ந்தால் பிறக்கப் போகும் குழந்தையைக் கொன்றுவிடுவதே உத்தமம் எனறு கூறி குழந்தையைக் கொல்ல உத்தரவிட்டான். அவளோ அவனது உத்தரவை ஏற்க மறுத்தாள். இருவருக்குமிடையே கடும் விவாதம் ஏற்பட்டு இறுதியில் ஒரு முடிவுக்கு எட்டுகின்றனர். அதன்படி , குழந்தையை அவள் வளர்க்கக் கூடாது. ஆனால் அவளது உற்றார் உறவினர்களிடம் குழந்தையை ஒப்படைக்கலாம். அவர்களது ஒப்பந்தப்படியே சில நாள் கழித்து ஈன்ற ஆண்மகவினைத் தன் உறவினரிடம் கொடுத்து வளர்க்கச் செய்தாள்.

மீண்டும் அடுத்தவருடம் அவர்களுக்குக் குழந்தை பிறந்தது. இவ்விதம் 12 வருடங்கள் வரருசியுடன் வாழ்ந்த வாழ்க்கையில் ஒவ்வொரு வருடமும் ஓர் ஆண் குழந்தை பெற்ற அவள் மொத்தம் 12 ஆண் மக்களைப் பெற்றெடுத்தாள். ஒப்பந்தத்தின்படி தனது வெவ்வேறு உறவினரிடம் அம்மக்களை வளர்க்கச் செய்தாள். இப்பன்னிரண்டு ஆண்மக்களின் பெயர்களது மூலமாகத்தான் பன்னிரண்டு கோத்திரங்கள் உருவானதாக ஐதீகமாலை நூல் கூறுகிறது. முதல் மகன் பெயர் அக்னி கோத்ரி . மூன்றாவது மகன் பெயர் பாக்கனார் ஆவார். இவரே பறையர்.

வரருசியின் இறுதிக்காலம் வந்தபோதுதான் அவனுக்கு ஞானோதயம் வந்தது. தனது 12 ஆண்மக்களையும் வரவழைத்த அவன் தனது தவறைக் கூறி வருத்தப்பட்டான். பிறகு தனது மரணத்திற்குப் பின் தனக்கான இறப்புச்சடங்கைச் செய்யவேண்டுமென்று மக்களிடம் வேண்டியபோது அந்த 12 மக்களும் தம் தகப்பனார் கேட்டுக்கொண்ட கடமையை நிறைவேற்ற முற்பட்டனர். இப்பன்னிரண்டு மக்கள் ஒவ்வொருவரும் தந்தை இறந்தபிறகு ஆன்மா அமைதியடைவதற்குச் சடங்கினை நிறைவேற்ற, தங்களால் இயன்றளவு ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையான பொருளைக் கொண்டுவந்தனர். ஒருவன் பருப்பு கொண்டு வர, இன்னொருவன் பால் கொண்டுவந்தான். இப்படி

பலவகைப்பட்ட தானியங்களையும் இதரப்பொருள்களையும் கொண்டுவந்தார்கள். பாக்கனார் மட்டும் அவர்களிடமிருந்து வேறுபட்டு ஒரு பசுவின் மடியை அறுத்துக்கொண்டு வந்திருந்தான் . இரத்தம் ஒழுக மடுவைக் கொண்டுவந்த பாக்கனாரைப் பார்த்த அவனது உடன்பிறந்தோர் திட்டினார்கள். மடுவை எடுத்துத் தங்களது வீட்டின் முற்றத்தில் குழியைத் தோண்டி புதைத்துவிட்டனர். அது பிற்காலத்தில் கோவைக்காய் செடியாக உருபெற்று வளர்ந்தது(2).

**பகுப்பாய்வு**

இக்கதையானது கிளிப்பேச்சு, பால்மடு கோவைச்செடியாக மாறியது போன்ற வினோதமான நிகழ்வுகளைக் குறிப்பிட்டிருந்தாலும் கதையிலுள்ள வேறு சில குறிப்புகள் சில உண்மைகளைப் புலப்படுத்தியுள்ளன. அதாவது- பல சாதிகள் இருந்த திருவிதாங்கூர் நாட்டில் பன்னிரண்டு சாதியினரை மட்டும் குறிப்பிட்டுள்ளது. அதில் பறையர் இனத்தவரும் ஒருவர். அதாவது அக்காலத்திலுள்ள சாம்பவர். இதன் மூலம் புலனாவது பழையகாலத்திலேயே பறையர் இனமக்கள் கேரளத்தில் யாரும் புறக்கணிக்க முடியாத சாதியினராக வாழ்ந்துள்ளனர்.

**தொன்மக் கதை .3**

ஆதிசேடன் உலகைச் சுமந்துகொண்டிருந்தபோது பூமியிலுள்ள மக்களின் பாரம் தாளமாட்டாமல் மிகவும் களைப்படைந்தான். களைப்படைந்த அவன் சிவனைப் பார்த்து தனது பாரத்தினைக் குறைத்துத் தனக்கு உதவும்படி கேட்டுக்கொண்டான். சிவபெருமானும் ஒரு பறையரை உருவாக்கி “பழம் உதிரட்டும்” என்ற வாசகத்தை உள்ளடக்கியவாறு பறையை அடிக்கும்படி ஆணையிட்டார். அப்போது பறையர் தான் அந்தப் பணியைச் செய்தால் தனக்குப் பரிசில் ஏதேனும் கொடுக்கப்படவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். அதன்படி சிவபெருமானும் அவரது பணிக்கு உலகில் பரிசில் கிடைக்குமாறு வரம் கொடுத்தார்.

பின்னர் அவர் பழம் உதிரட்டும் என்று பறையடித்ததும் வயதானவர்கள் உடனடியாக இறக்க ஆரம்பித்தனர். சிவபெருமான் கொடுத்த வரத்தின்படி இறந்த வீட்டிற்குச் சென்ற அவர் உடலைப் புதைக்கும் பணியைச் செய்தார். அதற்காகக் கூலியும் பெற்றார். அதன்படி உடல்களைப் பூமியில் புதைப்பதற்கு மண்கூலியும் , துணியும் , வாய்க்கரிசியும் , பிண்டச்சோறும் கொடுக்கப்பட்டன . பிணங்களை எரிப்பதற்காக அவர் விறகு கொண்டுவந்தபோது அவருக்குச் சூட்டுக்கூலியும் கொடுக்கப்பட்டது..

இவையெல்லாம் அவருக்குப் போதுமானதாக இருக்கவில்லை, கூடுதல்பேர் இறந்தால்தான் தனக்கு அதிகப்படியாக இறப்புக்கூலி கிடைக்கும் என்ற எண்ணத்தில் அவர் பழம் உதிரட்டும் என்று தொடர்ந்து அடித்துக்கொண்டிருந்தார். இதன் விளைவாக ஆண்குழந்தைகளும் நடுத்தரவயது ஆண்கள் பலரும் மிக அதிகளவில் இறந்துகொண்டிருந்தார்கள். இதனால் கடவுள் அவனிடம் எதிர்ப்புத் தெரிவித்தார். அவன் தனது வறுமையின் காரணமாகவே அவ்வாறு செய்ததாகக் கூறினான். அதன் விளைவாக அவனுக்குக் கூடுதலாக நான்கு தொழில்களையும் அதற்கான சலுகைகளையும் கடவுள் அளித்தார். அவை தானியங்களை அளப்பதற்கான மரக்கால் எனும் அளவுக்கருவியும் ,நிலத்தை அளப்பதற்கான அளவுக்கருவியும், புல் மற்றும் வயலறுக்க அரிவாளும், வருடம் தோறும் கிராமத்தில்

நடக்கும் நிகழ்ச்சியில் கரகப்பானையை எடுத்துவருவதற்கான சலுகை ஆகியவற்றைக் கடவுள் அளித்தார்(3).

இந்தக் கதையில் குறிப்பிட்டுள்ளதன்படி வெட்டியான் என்ற பெயரில் அழைக்கப்படும் பறையர் இன மக்களுக்கு இறப்புத் தொடர்பான பணியும் அதற்கான கூலியும் கொடுத்துவரப்படுவது கவனிக்கத்தக்கது.

**பகுப்பாய்வு**

இக்கதையும் ஒரு புதைநிலை உண்மையைத் தெரிவிக்கிறது. அதாவது ஏதோ ஒருகால கட்டத்தில் இம்மக்கள் செய்யவேண்டிய பணி இவைதான் என இந்துசமூகக் கட்டமைப்பில் தெளிவாக முடிவெடுத்து அவர்கள் மேல் அந்தப்பணி திணிக்கப்பட்டது. அந்தப் பணி புனிதமானது என நம்ப வைப்பதற்காக இந்தக் கதை உருவாக்கப்பட்டது எனலாம். இந்தக்கதை தோன்றிய காலத்தில் பறையர்களின் மேல் திணிக்கப்பட்ட தொழில்களாகப் பின்வருவனவற்றை இனங்காணமுடிகிறது:

அ.) இறந்தோர் உடலைப் பூமியில் புதைக்கும் பணி . அதற்கான கூலியாக மண்கூலி , துணி , பிணத்திற்கென போடப்பட்ட வாய்க்கரிசி , பிண்டச்சோறு ஆகியன அவர்களுக்குக் கொடுக்கப்பட்டன .

ஆ.) பிணங்களை எரிப்பதற்காக விறகு கொண்டு வந்தபோது அவர்களுக்குச் சூட்டுக்கூலியும் கொடுக்கப்பட்டது.



இ.) ஏதோ ஒரு காரணத்தால் பறையர் மக்களுக்குச் சமூகக்கட்டமைப்பில் அதிகப்படியாக நான்கு வேலைகள் கொடுக்கப்பட்டன. தானியங்களை அளப்பதற்கான மரக்கால் அளவுகருவியும் , நிலத்தை அளப்பதற்கான அளவுகருவியும், புல் மற்றும் வயலறுக்க அரிவாளையும், வருடம் தோறும் கிராமத்தில் நடக்கும் நிகழ்ச்சியில் கரகப்பானையை எடுத்துவருவதற்கான சலுகைகளே அவை.

**.தொன்மக்கதை 4**

ஒரு தடவை ஒரு பிராமணனது வயலில் சாம்பவர் உழுதுகொண்டிருக்கையில் நிலத்தில் புதைந்து கிடந்த தங்கத்தாலான கொளு ஒன்று கலப்பையில் தட்டுப்பட்டது. அதற்குப் பிராமணனும் சாம்பவனும் சொந்தம் கொண்டாடினர். அந்தப் பிரச்சினையை ஒரு பொற்கொல்லன் தீர்த்துவைத்தான். ஆனால் தன் புத்தி சாதுரியத்தால் அதிகபடியான தங்கம் பிராமணனுக்கே கிடைக்கும்படி செய்தான். அதில் ஒரு பங்கு சாம்பானுக்குக் கிடைத்தது. அது பிராமணனுக்கு மிகுந்த கோபத்தை விளைவித்தது. அவனைக் கொல்ல திட்டம் தீட்டினான்.

அதன்படி ஒரு பெரிய விருந்தைக் கொடுத்தான் பிராமணன். அதில் சாம்பவர் இனமக்களும் வேறு இனமக்களும் அழைக்கப்பட்டிருந்தனர். சாம்பவர் இனமக்களுக்கு கல்லாலான பந்தலின் கீழ் விருந்து பரிமாறப்பட்டது. ஏனைய மக்களுக்குத் தென்னையோலையாலான பந்தலின் கீழ் விருந்து பரிமாறப்பட்டது. அப்போது பிராமணன் "புத்தியுள்ள ஆசாரி கல்லைத் தட்டு" என்று கூறவே அந்தக் கல்பந்தலைச் செய்த ஆசாரியும் லேசாகக் கல்லைத் தட்டவே கல் பந்தல் இடிந்தது. அங்கிருந்த சாம்பவர்கள் அனைவரும் கல் இடிபாட்டில் மடிந்துபோயினர். ஆனால் பந்தலின் வாசல் பாகத்தில் இருந்த கர்ப்பிணி ஒரு குழந்தையை ஈன்றவாறே இறந்தாள். அதனை வாசலுக்கு வெளியே நின்றிருந்த வண்ணாத்திப் பெண் எடுத்துத் தனது சொந்தப் பிள்ளையாகவே வளர்த்து வந்தாள்.

அவளது கணவனும் தனது சொந்தப் பிள்ளை என்றே எல்லோரிடமும் கூறிக்கொண்டான். குழந்தை வளர்ந்து சிறுவனானதும் அவனது இயல்பு வண்ணார் இன சிறுவர்களிடமிருந்து வேறுபட்டிருந்தது. ஏனையோர் அனைவரும் துணி வெளுப்பதில் ஆர்வம் காட்ட இவனோ இசைக்கருவியாகிய பறை அடிப்பதில் எந்தப் பயிற்சியுமின்றியே நிபுணனாகத் திகழ்ந்தான். எல்லோரும் வியப்புற்றனர். வண்ணார் இனமக்கள் அவளிடம் உண்மையைக் கூறும்படி வற்புறுத்தவே அவளும் அது தன் குழந்தை இல்லை அது சாம்பவர் இன குழந்தை என்று உண்மையைக் கூறினாள். அந்தப் பையனும் பின்னாளில் பறையடிப்பதில் புகழ் பெற்றுவிளங்கினான்.

**பகுப்பாய்வு** - நடைமுறையில் சாம்பவர் மற்றும் வண்ணார் மக்கள் இடையே சுமூகஉறவு இருந்துவருகிறது. அதை உறுதிபடுத்தும் நிலையில் இந்தக் கதை விளங்குகிறது. இது கதையோ அல்லது உண்மையோ தெரியாது. ஆனால் ஆசாரி இனத்தவரையும் பிராமணரையும் சாம்பவர் மக்களுக்கு விரோதமாகவும் வண்ணார் இனத்தவரை நெருங்கிய உறவினராகக் கதை சித்திரிக்கின்றது. இக்கதை இன்னும் ஆழமான ஆய்வுக்குரியதாகும்.

இதுவரை கூறப்பட்ட தமிழ் மற்றும் தொன்மக்கதைகள் எல்லாம் பறையர்கள், பிராமணர்களுக்குமிடையேயான உறவு, பறையர்களின் நிலைமை தாழ்வதற்குக் காரணமாகப் பசு விளங்கியமை மற்றும் பறையர்களின் தொழில் பற்றி விவரிக்கின்றன. இத்தொன்மங்கள் பறையர் மக்கள் பற்றிய அடையாளத்தைத் தருவதுடன் அவர்கள் ஒரு இம்மண்ணில் நீண்டகால பாரம்பரியம் கொண்டவர்கள் என்பதை இனங்காட்டுகின்றன. இக்கதைகளை வரலாற்று மீட்டுருவாக்கம் செய்து ஆராயந்தால் ஒடுக்கப்பட்டோர் பற்றிய புதுமையான செய்திகள் வெளிவரும் என்பதுடன் இந்திய ஒடுக்கப்பட்ட மக்களது பொதுவரலாற்றையும் சிறப்பு வரலாற்றையும் வெளிகொண்டு வரவியலும்.

**கட்டுரை எழுதப் பயன்பட்ட நூல்**

ஆய்வாளரின் கன்னியாகுமரி மாவட்ட சாம்பவர் மக்களின் வாழ்வியல் எனும் முனைவர் பட்ட ஆய்வேடு. சென்னைப் பல்கலைக்கழகம். 2014

(:☺(☺)(☺)(☺)(☺)

# தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்களும் இந்திய இலக்கியங்களும்

**முனைவர் வனிதா** (நிதா எழிலரசி )
muniarasu@gmail.com

*****

தமிழ்மொழியின் தொன்மையும் அதன் தாக்கமும் இந்திய மொழிகளில் பிரதிபலித்துள்ளன. இந்தப் பிரதிபலிப்பின் ஊடாகப் பல பரிமாற்றங்கள் இந்திய மொழிகளின் ஊடே நுட்பமாக வெவ்வேறு விதங்களில் இலக்கிய ஆக்கங்களின் பின்னிருந்து செயல்பட்டுள்ளன. தமிழ்க்கவிதை மரபும் காப்பிய மரபும் தமிழல்லாத மற்ற மொழிகளின் ஊடாகவும் அவற்றின் வளர்ச்சிப் போக்குகளை நிர்ணயிப்பதாகவும் ஒரு நிழல் அரசியலை சமகாலத்திலும் பிற்காலத்திலும் உருவான இலக்கிய வகைமைகளில் வெவ்வேறு விதங்களாக வடிவம் கொண்டுள்ளன. தமிழ்மொழி வாயிலாகத் தோன்றிய கவித்துவ மரபும் வடமொழி கவித்துவ மரபும் ஒருவித ஒத்திசைவுடன் வெளிப்படுத்திக் கொண்டுள்ளது எனலாம். கால வரையறைபடி இலக்கிய வகைமைகளைப் பகுப்பாய்வு செய்யப்படும் போது தமிழில் தோன்றி வளர்ந்த கவித்துவ மரபும் வடமொழிகளில் தோன்றிய கவித்துவ மரபும் ஒரு சில புள்ளிகளில் ஒத்தவை போல் தோன்றுகின்றன. இதற்கு ஆதாரமாகச் சங்கக் கவிதைகளையும் சிலப்பதிகாரத்தையும் அடியொற்றி வடமொழியில் தோன்றிய காளிதாசனின் குமாரசம்பவம், மேகதூதம், ருதுசம்ஹாரம், ரகுவம்சம் போன்றவற்றில் சங்கக் கவித்துவ தாக்கம் இருந்திருப்பதைப் பல அறிஞர் பெருமக்கள் தங்களது ஆய்வு நூல்களில் முன்வைத்துள்ளனர்.

காளிதாசனின் இலக்கியப் பிரதிகளின் தாக்கம் பெரும்பான்மையாக வட இந்திய மொழிகளிலும் தென்னிந்திய மொழிகளிலும் பரவலாக்கப்பட்டன அல்லது அந்த வகைமை மாதிரியான இலக்கிய வகைமைக்கு முக்கியத்துவம் தரப்பட்டன. காளிதாசனின் பிரதிக் கட்டுமானத்தை அடியொற்றியே வட இந்திய கவித்துவ மரபொன்று உருவாக்கப்பட்டது. இந்த உருவாக்கத்தில் காளிதாசனின் பிரதிகளின் பங்கு மிக அதிகம் என்று கூறலாம். இந்த மாதிரிப்பிரதிகளின் ஊடாகச் சகப்பிரதியாக்கம் செய்யப்படும் போது மூலப்பிரதியின் வடிவம், உள்ளடக்கம், சொல்முறை, அகக்கட்டுமானமென இலக்கிய ரீதியாகவும் இலக்கண ரீதியாகவும் ஒத்திசைவான ஒரு வரைகோடு உருவாகின்றன. இந்த வரைகோட்டின் தோற்றுவாயாகக் காளிதாசனின் பிரதிகளும் காளிதாசனையே உருவாக்கிய சங்க இலக்கியப் பிரதிகளும் உந்துசக்தியாகச் செயல்படுகின்றன. இந்தப் பின்புலத்திலிருந்து நோக்கும்போது தமிழின் பங்களிப்பு இந்திய இலக்கியங்களில் எவ்வாறு கோலோச்சியிருந்தது என்று மிகத் தெளிவாக வெளிப்படுகின்றது. இதனை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சிலப்பதிகாரத்தின் தாக்கத்திலிருந்து உருவாக்கப்பட்டுள்ள ருதுசம்ஹாரம் என்னும் ஆறு பருவ வருணனையைப் பற்றிய சிற்றிலக்கிய வகையையும், அகப்புறத் தூதுக்கவிதைகளால் கவரப்பட்டு மேகதூதம் என்னும் முதல் தூது இலக்கியத்தையும், சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, திருமுருகாற்றுப்படை ஆகியவற்றில் உள்ள விறலி, பாடினி, சூரர மகளிர் ஆகியோர் பற்றிய பாதாதி கேசமும், கேசாதி பாதமும் பற்றிய வருணனைகளின் தாக்கத்தால் பார்வதியின் ‘நக சிகாந்தக’ வருணனையும், திருமுருகாற்றுப்படையும், பரிபாடல்களும் அளித்த உந்துதலால் முருகனின் பெருமை கூறும் குமாரசம்பவம் என்னும் முதல் வடமொழிக் காப்பியத்தையும் ஒரு சேர காளிதாசன்

உருவாக்கியுள்ளான். இந்த உருவாக்கம் காளிதாசனின் பன்மொழிப் புலமையிலிருந்தும் தமிழ் இலக்கியங்களின் தாக்கங்களினாலும் உருவாகியுள்ளது எனலாம்.

காளிதாசனின் மேகதூதம் பிரிந்த காதலரைப் பற்றியும் ருதுசம்ஹாரம் இணைந்த காதலரைப் பற்றியும் பேசுகின்றது. ருதுசம்ஹாரம் போற்றும் காதலர் கூட்டத்தில் துன்பத்திற்கு இடமில்லை. மேகதூதம் காட்டும் காதலில் இருத்தலும், இரங்கலும்,பிரிவும் மிகுதியாக இடம்பெறுகின்றன. ருதுசம்ஹாரத்தை இளமையில் இயற்கையின் அழகால் ஈர்க்கப்பட்டுக் காதல்மேல் காதல் கொண்டு பாடிய பாடல் என்று கூறுவார்கள். காதலுக்கு விடுக்கப்படும் ஓர் அழைப்பாகவே அது அமைகின்றது. அதில் ஒவ்வொரு காண்டமும் ஒரு பருவம் பற்றிப் பேசுகின்ற ஆறு காண்டங்களைக் கொண்டு அமைந்துள்ளது. ஒவ்வொரு காண்டமும் அதன் பாடுபொருளைச் சொல்லித் தொடங்கி ஒரு வாழ்த்தோடு முடிகின்றது. ருதுசம்ஹாரம் என்னும் தலைப்பே பருவங்களின் கூட்டம் என்று பொருள் தந்து ஆறு பகுதிகளையும் ஒரு கவிதையாக இணைக்கின்றது. புத்தாண்டு இளவேனிலோடு தொடங்குகின்றது ஆயினும் காளிதாசனின் முதல் காண்டம் கோடை பற்றியதாகவும் இறுதிக் காண்டம் இளவேனில் பற்றியதாகவும் அமைந்துள்ளன.

இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தில் இடம்பெறும் ‘ஊர் காண் காதை’யில் வரும் பருவங்கள் கோடை, கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில் என்ற வரிசையிலேயே அமைந்துள்ளன. மங்கையர் தம்முடைய கொழுநரோடு பூஞ்சேக்கையில் இருந்து ஏனைய பருவங்கள் எங்குச் சென்றனவென்று வினவுகின்ற காலம் கோடையாதலால் கழிந்து போன பருவங்களைக் குறித்து அவர்கள் எண்ணுவதாகக் கவிதை அமைகின்றது. கோடை தவிர ஐந்து காலமும் கழிந்தது கூற வேண்டி, “உடைப்பெரும் கொழுநரோடு பருவ மென்னும் படர்தீர் காலை” என்று பாடும் கவிஞர் கவிதையின் ஆறுபருவப் பாடுபொருளுக்குக் கலை நுட்பத்தைத் தருகின்றார். இதே வரிசையில் பருவங்களைச் சொல்லும் காளிதாசனின் ஆறு காண்டங்களை இணைப்பது கவிதையின் தலைப்பு மட்டுமேயாகும். கோடையைப் பாடும் முதல் காண்டத்திலும் மேல்நிலை மாடத்தில் அமர்ந்திருக்கும் காதலன் தன் காதலிக்கு ஆறு பருவங்களிலும் இயற்கை கொள்ளும் வெவ்வேறு கோலங்களைக் கூறுவதாகப் படைத்துள்ளான்.

இளங்கோவடிகள் ‘ஊர்காண் காதை’யில் ஒரு நாளில் ஆறு சிறுபொழுதுகளிலும், ஓர் ஆண்டின் ஆறு பெரும்பொழுதுகளிலும் இன்பம் துய்க்கும் நிலையையும் செயல்பாடுகளையும் விளக்கிக் காட்டுகிறார். உதாரணமாக, மேற்றிசைக் காற்று வீசுதலால் மாடங்களிலிருந்த கொடிகள் எழுந்து நுடங்கும் தெருவின்கண் உள்ளோராகிய பொதுமகளிர் தாம் காதலிக்கும் செல்வத்தையுடைய காமுகரோடு கூடி இடையறாது பெருகும் புனலையுடைய வையையாற்றுத் துறை முன்னர்ப் பொலிந்து பரந்த இடைக்குறையில் நடந்தும், நாவாய் முதலியவற்றை ஏறிச் செலுத்தியும், பொலிவுடைய புனைகளைத் தழுவி நீந்தியும், புனல் விளையாட்டை விரும்பியும் இன்பம் துய்த்தனர் என்று இளங்கோவடிகள் படைத்துள்ளார்.

மாதவிக்கும் சகுந்தலைக்கும் பிறப்பிலும் வளர்ந்த சூழலிலும் உள்ள வேறுபாடுகளை மனத்தில் கொண்டு அவற்றிற்கேற்ப மாற்றங்களைச் செய்து இளங்கோவின் கடிதத்தைக் காளிதாசன் பயன்படுத்திக் கொள்கின்றான்.

வடமொழியில் பயின்று வந்த சில குறிப்பிடத்தக்க தமிழின் இலக்கியக் கூறுகள் வடமொழி மரபுக்குரியன அல்லவென்றும் அவற்றிற்கு வேறு மூலம் இருந்திருக்க வேண்டுமென்றும் மேலை நாட்டு வடமொழிப்

பேராசிரியர் இங்கால்ஸ் தமது ஐயத்தை வெளியிட்டுள்ளார். அவரிடம் வடமொழி பயின்ற ஜார்ஜ் ஹார்ட் தமது முனைவர் பட்ட ஆய்வேட்டில் பழந்தமிழர் கவிதை இயலில் குறிப்பிடப் பெறும் இறைச்சி, உள்ளுறை போன்றவற்றிலிருந்தே அவற்றிற்குப் பத்து நூற்றாண்டுகளுக்குப் பின் வடநூலாரால் பேசப்பெற்ற தொனிக்கோட்பாடு உருவாக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும் காளிதாசனின் படைப்புகளில் சங்கப் புலவர்களின் செல்வாக்கு தெளிவாகத் தென்படுகின்றதென்றும் தக்க சான்றுகளோடு நிறுவுகிறார்.

வட இலக்கியங்களில் காணப்பெறும் பல 'கவி சமயங்கள்' சங்க இலக்கியத்திலிருந்து பெறப்பட்டவை என்பதற்கு ஏராளமான எடுத்துக்காட்டுகளைத் தந்தவர் மேலை அறிஞரான சீக்ஃபிரீட் லியன்ஹார்டு ஆவார். காளிதாசனுக்கு ஒரு நூற்றாண்டு காலத்தால் முந்தியவரான பாசனின் வடமொழி நாடகங்களிலும் சங்க இலக்கியத்தாக்கம் இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டியவர்களில் உருசிய நாட்டு அறிஞர் துபியான்ஸ்கிக்குச் சிறப்பிடம் உண்டு. வைணவ சமயத்தார் பெரிதும் போற்றும் வடநூலான பாகவதத்தில் நமது முல்லைத்திணைப் பாடல்கள் அழுத்தமான தடம் பதித்துள்ளன என்பதும் மேலை இலக்கிய அறிஞர்களால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது என்று கூறுகிறார் ப. மருதநாயம்.

தமிழ்ச்செவ்வியல் இலக்கியங்களின் பல கவிதை உத்திகளும் உவமை நயங்களும் காட்சி உருவாக்கங்களும் அகப்புறக் கவிதைகளிலிருந்து காளிதாசனின் காவியங்களுக்கும் நாடகங்களுக்கும் சென்றிருக்கின்றன. மூங்கில் மரக்காட்டில் மூங்கில் துளைகளின் வழியாக வீசுகின்ற காற்று இனிய இசையை எழுப்புகின்றது என்ற கற்பனை அவனுக்குத் தமிழ் அகக்கவிதைகளிலிருந்து கிடைத்திருக்க வேண்டும். வானம் 'எஃகன்ன ஒளி வீசுவதையும்' அவன் சங்கக் கவிதைகளிலிருந்து கற்றறிந்திருக்கின்றான். கதிரவனுடைய ஒளி கடலில் பட்டுப் பிரதிபலிப்பதைப் போல முருகன் ஜொலிக்கின்றான் என்று கூறுகின்றது திருமுருகாற்றுப்படை. ஆற்று நீரில் கதிரவன் ஒளிப்பட்டுத் தெறிப்பதைப்போல முனிவர்கள் ஜொலிக்கின்றார்கள் என்பது காளிதாசனின் வருணனையாக உள்ளது.

'உவமானங்களுக்குக் காளிதாசன்' என்று இந்திய இலக்கிய மரபில் போற்றப்படும் அக்கவிஞனின் தலைசிறந்த உவமைகளில் ஒன்றாகக் கருதப் பெறுவது "சிவனும் பார்வதியும் வாக்கும் அர்த்தமும் போன்றவர்கள்" என்பதாகும். பரிபாடலின் அடிகள் கண்ணனும் பலராமனும் கடலும் கானலும், சொல்லும் பொருளும் போன்றவர்கள் என்று போற்றுகின்றது. இவ்விரட்டை உவமைகளுக்கு உரையாசிரியர், அவர்கள் கடலும் கானலும் போல் நிறத்தால் வேறுபட்டுச் சொல்லும் பொருளும் போல் செயலால் ஒன்றுபட்டவர்கள் என்று விளக்கம் தருகிறார். தலைவி தலைவனிடம் தன் தங்கை என்று அன்னையால் கூறப்பட்ட புன்னை மரம் இருப்பதால் இன்புறுவதற்கு வேறு இடத்திற்குச் செல்லலாம் என்று நற்றிணைக் கவிதை அடிகள் விளக்குகின்றன. சாகுந்தலத்தில் சகுந்தலையை வளர்த்த முனிவர் அவர்களின் வனத்திலிருந்த மலர்க்கொடியை அவளது உடன்பிறப்பாகவே கருதிப் பாதுகாக்குமாறு அறிவுரை கூறியதாகச் சொல்லுவாள். காளிதாசனின் இந்தக் கவித்துவ விளையாட்டிற்கு முந்தைய பிரதியான நற்றிணைப் பிரதியின் தாக்கம் மிகத் தெளிவாகத் தென்படுகின்றது.

காளிதாசன் குமார சம்பவத்தில் பார்வதியின் உடல் அழகை உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை உவமைகள் மூலமாக விவரிக்கின்றான். காளிதாசனுக்கு முன் வடமொழியில் காணப்பெறாத இவ்வருணனை அவனுக்குப் பிறகு வடமொழிக் கவிஞர்களால் 'நக சிகாந்த வருணனை' மரபாக வளர்க்கப் பெற்றுள்ளது. சிறுபாணாற்றுப் படையிலும், பொருநராற்றுப்படையிலும்,

திருமுருகாற்றுப்படையிலும் விறலியும் பாடினியும் சூரர மகளிரும் பாதாதி கேச வருணனையிலும் கேசாதி பாத வருணனையிலும் வருணிக்கப்படுகின்றார்கள். இம்மரபு தமிழ் இலக்கியத்தில் நீண்ட நெடுங்காலமாக வேர் கொண்டுள்ளது என்பதைப் புலப்படுத்துகின்றது. மேலும் சிறுபாணாற்றுபடையில் விறலியின் தொடைகளுக்கு வாழையும் யானையின் துதிக்கையும் இரட்டை உவமைகளாக கையாளப்படுகின்றன. இவ்விரண்டையும் காளிதாசன் உமையின் தொடைகளுக்கு எதிர்மறை உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளான்.

திருமுருகாற்றுப்படையில் ஆவினன்குடி முருகனை நோக்கிச் செல்லும் முனிவர்களின் ஊர்வலத்தில் தேவர்களும் இணைந்து கொள்கின்றனர். அவர்கள் யாவரும் விண்மீன்கள் போல் ஒளிவீசி, தீயின் ஆற்றலும் இடியின் குரலும் பெற்றுக் காற்றென விரைகின்றனர். இதனைக் கீழ்க்காணும் அடிகள் விளக்கி நிற்கின்றன.

**மீன் பூத்தன்ன தோன்றலர் மீன்சேர்பு**
**வளிகொண்டன்ன செலவினர்**
**உருமிடித்தன்ன குரலினர்** (திருமுருகாற்றுப்படை. 161 - 172)

என்று நக்கீரர் அவர்களின் பெருமை விளக்குகிறார். குமார சம்பவத்தின் ஆறாம் சருக்கத்தில் சிவனால் இமவானிடம் அனுப்பப்படும் முனிவர்கள் இதுபோன்றே காணப்படுகின்றனர். அவர்கள் பொன்போல் ஒளிரும் சடைமுடிகளோடு விண்ணில் மனம்போல் விரைந்து செல்கின்றனர்.

குமாரசம்பவத்திலும் ரகுவம்சத்திலும் வசந்தத்தின் வருகையையும் காமனின் ஆணையும் குயில் அறிவிப்பதாகக் காளிதாசன் பாடுகின்றான். சங்க அகக்கவிதை மரபில் வரும் இளவேனில், குயில், காதலர் உறவு காளிதாசனை மிகவும் கவர்ந்திருக்க வேண்டும். அதனை ருதுசம்ஹாரத்திலும், குமார சம்பவத்திலும், ரகுவம்சத்திலும் மீண்டும் மீண்டும் உருவாக்கி(எழுதி) மகிழ்கின்றான். உதாரணத்திற்கு,

**பெண்களின் அகந்தையை அழிப்பதில் வல்லுநனான மதனின்**
**கட்டளையை ஆண் குயிலானது மாந்தளிர்களை உண்டதால் பெற்ற**
**இனியகுரலில் அறிவிப்பதுபோல் தோன்றியது.** (குமார சம்பவம் 3:32)

மதனின் ஆணையென்ன வென்பதை ரகுவம்சம் வெளிப்படையாகச் சொல்கின்றது.

**காதலரிடமிருந்து பிரிந்திருக்கும் பெண்களே! உங்கள் சினத்தை**
**அடக்குங்கள் உங்கள் கணவரோடு கொண்டிருக்கும் பிணக்கை**
**விட்டு விடுங்கள் இப்பருவம் சென்று விடுமானால் அதனை நீங்கள்**
**மீண்டும் பெற இயலாது நீங்கள் அன்பு கொண்டவரிடமிருந்து**
**பிரிந்திருக்காதீர்கள்.**(9:47)

இத்தகைய கவித்துவ மூலத்திற்கு நற்றிணையிலும் கலித்தொகையிலும் காணலாம்.

**……புணர்ந்தீர் புணர்மினோ என்ன இணர்மிசைச்**
**செங்கண் இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்**
**இன்ப வேனிலும் வந்தன்று....** (நற். 224: 4 - 6)

**.......பூங்கண் இருங்குயில்
கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு
அகறல் ஓம்புமின்அறிவுடையீர் என
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய் உற இருந்து மேவர நுவல.....** (நற். 243: 4 - 8)

**.....கூடிப் புணர்ந்தீர் பிரியன்மின் நீடிப்
பிரிந்தீர் புணர்தம்மின் என்பன போல
அரும்பவிழ் பூஞ்சினைதோறும் இருங்குயில்
ஆனாதகவும் பொழுதினான் மேவர
நான் மாடக் கூடல் மகளிரும் மைந்தரும்
தேன் இமிர் காவில் புணர்ந்திருந்து ஆடுமார்
ஆனா விருப்போடு அணி அயர்ப, காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு.** (கலித்தொகை, 92: 61 - 68)

காளிதாசன் மேகதூதத்தின் வாயிலாகத் தூது என்னும் இலக்கிய வகைமையை இந்திய இலக்கியத்திற்கு அளித்துள்ளான். மேகதூதத்திற்கு மூலம் தமிழ் அகப்புற இலக்கியங்களில் உள்ள தூதுக்கவிதைகளேயாகும். அலவனை(நண்டை)த் தூதாக அனுப்புகின்ற அகக்கவிதையும் அன்னச் சேவலைத் தூதாக அனுப்புகின்ற புறக்கவிதையும் பிற கவிதைகளும் காளிதாசனுக்கு வழிகாட்டியாய் அமைந்திருக்கின்றன. தூதுக்கவிதைகள் காளிதாசனுக்கு முன் வடமொழியில் இல்லை. பாமகர் என்ற வடமொழிக் கல்வியாளர் பேச இயலாத பறவை விலங்குகளையும், உயிரற்றனவற்றையும் துது அனுப்புவதாகக் கவிதை எழுதுவது தவறு என்று கண்டித்தது இம்மரபு அங்கில்லை என்பதை உறுதிப்படுத்துகின்றது. ஆனால் தொல்காப்பியம் அஃறிணைப் பொருள்களையும் தூது அனுப்பலாம் என்று கூறுவதோடு அதற்கான பட்டியலையும் கொடுக்கின்றது. காதலர்கள் அவற்றைக் கேட்குந போலவும் கிளக்குந போலவும் கற்பனை செய்துகொண்டு பேசுவதால் பெறும் இன்பத்தையும் வடமொழிக் கவிதையியல் கண்டு கொள்ளவில்லை. மேகதூதத்தின் ஐந்தாம் பாடல் தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் போற்றிய தூது மரபிற்கு அமைதி கூறுவது போல் அமைந்துள்ளது.

**பனியும் ஒலியும் காற்றும் நீரும் கலந்த மேகம் செய்திகளைக்
கொண்டு செல்ல முடியுமா? அறிவும் உணர்வுகளும்
கொண்ட மாந்தர்களே செய்ய முடிந்ததை ஒரு மேகம்
செய்ய இயலுமா? இதை எண்ணிப்பாராது யக்சன் அன்பு
மிகுதியால் ஆராயாது மேகத்திடம் தன் விண்ணப்பத்தை
முன் வைத்தான். காதல் நோயால் பீடிக்கப்பட்டவர்கள்
மதி மயக்கத்தால் அறிவுடையவர்க்கும் அறிவற்றவர்க்கும்
உள்ள வேற்றுமையைக் கருதுவதில்லை.**(மேகதூதம் 5)

காளிதாசனின் முதல் காவியமாகிய குமார சம்பவம் முதல் வடமொழிக் காவியம் என்று கருதப்படுகின்றது. இதன் தலைப்பு, பாடுபொருள், அமைப்பு ஆகியவை பற்றியெல்லாம் வடநூலார் பல சிக்கல்களை எழுப்பியுள்ளனர். பரிபாடலையும் திருமுருகாற்றுப்படையையும் அடிப்படையாகக் கொண்டு இதனைக் காளிதாசன் வடிவமைத்திருக்கின்றான் என்பதை உணர்ந்தால் அவர்கள் எழுப்புகின்ற வினாக்களுக்கெல்லாம் தக்க விடைகளைக் காண முடியும். பதினேழு சருக்கங்களைக் கொண்ட இந்நூலின் முதல் ஏழு சருக்கங்களே காளிதாசனால் எழுதப்பெற்றவை என்பது சில வடமொழித்

திறனாய்வாளர்களின் கருத்தாகும். ஆனால் முதல் ஏழு சருக்கங்களில் குமாரனின் பிறப்பு நிகழவில்லை. குமாரனின் பிறப்பு சொல்லப்பட்ட பிறகும் எட்டு ஒன்பதாவது சருக்கங்களோடு காவியம் முடிந்துவிடவில்லை. 'குமாரசம்பவம்' என்ற தொடருக்குக் குமாரனின் பிறப்பு என்று பொருள் கொண்டால் முதல் ஏழு சருக்கங்களைக் கொண்ட நூலுக்கோ, இப்பொழுது உள்ள பதினேழு சருக்கங்கள் கொண்ட நூலுக்கோ அப்பெயர் பொருந்தாது. குமாரனின் பிறப்போடில்லாமல் காவியம் அவனது வீரச் செயல்களையும் பரக்கப் பேசுகின்றது. இதனால் ஜீவானந்தர் எனும் வடமொழி அறிஞர் குமாரசம்பவம் எனும் தொடர் குமாரனின் பிறப்பும் பெருமையும் என்ற பொருளிலேயே அமைந்துள்ளது என்று விளக்குவார். ஏன் இத்தகைய பெயரைக் காளிதாசன் தேர்ந்தெடுத்தான் என்பதைப் பரிபாடல், திருமுருகாற்றுப்படை உதவியால் அறிய இயலும். முருகனைப் பற்றிய பரிபாடல்களும் திருமுருகாற்றுப்படையும் அவனது பிறப்பைப் பற்றிச் சுருக்கமாகப் பேசுவதோடல்லாமல் அவனது வீரச் செயல்களையும் வெற்றிகளையும் வியந்து கூறுகின்றன. அவனைப் பெரும் பெயர் முருக என்றும் பெரும் பெயர் இயவுள் என்றும் வியத்தகு குமர என்றும் அழைக்கின்றது. இத்தொடர்களால் கவரப்பட்டே காளிதாசன் தனது காப்பியத்திற்கு அப்பொருளே தருமாறு குமார சம்பவம் என்று பெயரிட்டிருக்க வேண்டும்.

குமாரக் கடவுளின் பிறப்புப்பற்றி வடமொழிப் புராணங்கள் பல்வேறுபட்ட வகைகளில் பேசுகின்றன. அவன் அவற்றில் பெரும்பாலும் அக்கினியின் குழந்தையாகவே காட்டப்படுகின்றான். ஆனால் பரிபாடலும் திருமுருகாற்றுப்படையும் அவனைச் சிவனின் குழந்தையாகவும், கொற்றவையால் பிள்ளையாகவே பேணப்பட்டவனாகவும் பெருமைப்படுத்துகின்றன. குமாரனின் பிறப்பு, வளர்ப்புப் பற்றிய செய்திகளில் வடமொழிப் புராணங்களை விட, பரிபாடலும், திருமுருகாற்றுப்படையுமே காளிதாசனுக்கு முன் மாதிரிகளாக அமைந்துள்ளன என்பது தெளிவாகத் தெரிகின்றது. சிவனும் பார்வதியும் முருகனின் பெற்றோர் என்ற முறையில் அவனிடம் அன்பு பாராட்டுவதையும் அவனை மனிதக் குழந்தையைப் போல் சீராட்டி வளர்ப்பதையும் குமார சம்பவத்தில் மட்டுமல்லாமல் தனது வேறு படைப்புகளிலும் உருவாக்கி உருவாக்கிக் காளிதாசன் களிப்படைவதைக் காணமுடிகின்றது.

குமார சம்பவத்தின் அமைப்பிலும் சங்க இலக்கியங்களின் ஆழ்ந்த தாக்கம் வெளிப்படுகின்றது. ஒரு காப்பியத் தலைவனின் பிறப்பு, வளர்ப்பு, வாழ்க்கை, வெற்றி, முடிவு பற்றிக் கூறும் கதையாக அது அமையவில்லை. குமாரனே காப்பியத் தலைவன். ஆனால் அவன் முதல் ஏழு சருக்கங்களில் இடம்பெறாதது வியப்புக்குரியதாக உள்ளது. காளிதாசன் கதையை விரைவாக நகர்த்திச் செல்வதில் ஆர்வம் காட்டவில்லை. ஒவ்வொரு சருக்கமும் இரண்டு மூன்று பாத்திரங்களைக் கொண்டு இயங்கும் ஒரு நாடகக் காட்சியாகவே அமைக்கப்பட்டுள்ளது. முதல் சருக்கங்களில் சிவனிடம் பார்வதி கொண்ட காதலும் அவர்கள் இருவரும் இணைந்து பழகி மணம் செய்துகொள்வதும் விரிவாகத் தமிழ் அக இலக்கிய மரபில் கற்பிற்குமுன், களவு என்ற முறையில் நாடகக் காட்சிகளாக விவரணை செய்யப்படுகின்றன. முதல் சருக்கத்தின் முதல் பகுதியில் இமயத்தின் பெருமையும் இரண்டாம் பகுதியில் உமையின் அழகும் பாடுபொருள்களாகின்றன. இரண்டாவது சருக்கத்தில் தாரகனால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள் பிரம்மதேவனிடம் முறையிடும் நிகழ்ச்சி அங்கதச் சுவையோடு சொல்லப்படுகின்றது. மூன்றாம் சருக்கத்தில் இந்திரன் - காமன் உரையாடல், இளவேனிலின் எதிர்பாராத வருகை, அப்பருவத்தின் அழகிய தோற்றம் ஆகியவை சிறப்பிடம் பெறுகின்றன. இவ்வாறு தொடர் நாடகக் காட்சிகளாக இக்காப்பியம் வளர்த்தெடுக்கப்படுகின்றது.

நக்கீரரின் திருமுருகாற்றுப்படை ஆறு படைவீடுகள் பற்றி விவரிக்கும் ஆறு பகுதிகளைக் கொண்டமைந்தது. முதல் பகுதியில் முருகனின் தோற்றப்பொலிவும் திருப்பரங்குன்றத்தின் அழகிய காட்சிகளும் முருகனைத் தொழும் சூரர மகளிரின் நடனமும் செயல்களும் செல்லோவியங்களாக்கப்படுகின்றன. இரண்டாம் பகுதியில் முருகனின் ஆறு கைகளும் பன்னிரண்டு முகங்களும் நல்லோரைக் காக்கவும் தீயோரை ஒறுக்கவும் எவ்வாறு பயன்படுகின்றன என்பது விளக்கமாகக் கூறப்படுகின்றது. அடுத்த பகுதியில் ஆவினன்குடியில் குடி கொண்டிருக்கும் முருகனைத் தொழச் செல்லும் அடியவர்களின் ஊர்வலம் இடம்பெறுகின்றது. ஏரகம் பற்றிய பகுதியில் முருகனை வணங்கும் அந்தணர் செய்யும் சடங்குகள் விளக்கப்படுகின்றன. முருகனின் பெருமையைக் கூறி அவனை வாழ்த்துகின்றது ஐந்தாம் பகுதி. பழமுதிர் சோலையில் உள்ள அருவி இறுதிப்பகுதியில் காட்சிப் பொருளாக்கப்படுகின்றது.

முருகனைப் பற்றிய ஒவ்வொரு பரிபாடலும் தெய்வத்தையும் காமத்தையும் இணைத்துப்பார்க்கும் காட்சிகளைக் கொண்டுள்ளது. உதாரணமாக, எட்டாம் பரிபாடலில் திருப்பரங்குன்றத்து முருகனின் கோவிலில் தேவரும் முனிவரும் அவனை வணங்கும் காட்சியை அடுத்துக் காதலர் இருவர் புலத்தலும் தோழியால் இணைக்கப்பட்டு முருகனைத் தொழுதலும் கவிதையாக்கப்படுகின்றன. ஒன்பதாம் பரிபாடலில் களவே கற்பினும் உயர்ந்ததென்று புலவர் புகழ்ந்து பேசியபின் முருகனின் இரு துணைவியருக்கிடையே நிகழும் போரை நகைச்சுவை நாடகமாகத் தருகின்றார். பத்தொன்பதாம் பரிபாடல் திருப்பரங்குன்றத்தை நோக்கி மதுரையில் உள்ள மக்கள் கூட்டம் அரசன், அவனது பட்டத்தரசியர் தலைமையில் செல்லும் காட்சியோடு தொடங்குகின்றது. கோவிலில் வைக்கப்பட்டுள்ள ஓவியங்கள் காட்டும் புராணக் காட்சிகளை விளக்குகின்றது. சில பெண்களின் அறியாமையைக் காட்டும் இரண்டு நிகழ்ச்சிகளை நகையுணர்வோடு விவரிக்கின்றது. இறுதியில் முருகனின் பெருமையைச் சொல்லி வாழ்த்தோடு முடிகின்றது. கவிஞர் தாம் மீண்டும் திருப்பரங்குன்றத்திலேயே பிறக்கவேண்டுமென்ற விருப்பத்தைத் தெரிவிப்பதோடு அமையாது மலை அருவியில் நீராடும் காமவுணர்வால் பீடிக்கப்பட்ட பெண்களின் செயல்களைச் சித்திரிக்கவும் முற்படுகின்றார்.

இதனால் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும் ஒரு கதையோ வரலாற்றையோ தொடராகச் சொல்ல முனையாமல் துண்டுதுண்டான நாடகக் காட்சிகளாகவே காட்சிப்படுத்தப்படுகின்றன. நாடக வல்லுநனான காளிதாசன் குமாரசம்பவம் எனும் காப்பியத்திலும் இத்தகைய உத்தியையே கையாளுகின்றான்.

காளிதாசனின் தலைசிறந்த படைப்பான சாகுந்தலத்தில் பார்க்கும் இடமெல்லாம் சங்க இலக்கியத்தின் தாக்கத்தைக் காணலாம். சகுந்தலையும் துஷ்யந்தனும் ஒருவரையொருவர் சந்திப்பது, காதலில் விழுவது, ஒருவரையொருவர் எண்ணி ஏங்குவது, இறுதியில் இணைவது என்ற நிலைகளைச் சங்க அகப்பாடல்கள் காட்டும் களவு மரபிற்கேற்பப் பல காட்சிகளாகக் கவிஞன் விஸ்தரிக்கின்றான். இங்கும் கதையை விரைவாக நகர்த்திச் செல்வதில் அவனுக்கு விருப்பமில்லை. அவர்களது கற்பு வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்ட நாடகமும் இடம் தரவில்லை. எனவே கற்பிற்கு முந்திய களவுக்கு அளவிற்கு அதிகமான இடம் ஒதுக்கப்படுகின்றது. காதலர் இணைவதைக் காந்தர்வ விவாகம் என்று குறிப்பிட்டிருந்தாலும் அவன் படைத்துள்ள காட்சிகள் மனுவும் வாத்ஸ்யாயனரும் கூறும் காந்தர்வ விவாகத்தினின்று முற்றும் வேறுபட்டுத் தொல்காப்பியமும் கபிலரின் குறிஞ்சிப்பாட்டும் காட்டும் களவு மனத்தை நினைவிற்குக் கொண்டு வருவனவாகவே அமைகின்றன. துஷ்யந்தன் சகுந்தலையைக் கூடுதற்கு முன் காட்சி, ஐயம், தெளிவு, வண்டோச்சுதல் போன்றவையெல்லாம் வரிசையாக அடுக்கிக்

காட்டுகின்றான். நாடகமெங்கும் வருகின்ற இயற்கைக் காட்சிகள் பல சங்க இலக்கியக் காட்சிகளை அடியொற்றியே அமைக்கப்பட்டுள்ளன.

புறநானூற்றிலுள்ள பாண்டியன் அறிவுடை நம்பியின் பாடலைக் காளிதாசன் சாகுந்தலத்தில் பாராட்டத்தக்க முறையில் பயன்படுத்திக் கொள்கின்றான். குழந்தைகளால் பெற்றோர் பெறும் இன்பத்தை அறிவுடை நம்பி,

**படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்**
**உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்**
**குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே** (புறநானூறு. 188)

என்ற பாடலில் அழியாத ஓவியமாக்கிவிட்டான். காளிதாசனின் நாடகத்தில் தனக்குச் சகுந்தலையின் மூலம் குழந்தை ஒன்று இருப்பதை அறியாத துஷ்யந்தன் அக்குழந்தையைப் பார்க்கும்போது அதன் அழகாலும் செயல்களாலும் கவரப்பட்டு மக்கட் செல்வத்தின் சிறப்பை எடுத்துரைக்கின்றான்.

சிறுகுழந்தைகள் செவிக்கினிய புரியாத மழலை மொழியில் பேச, தந்தையர் அவற்றைத் தங்கள் மடிகளில் தூக்கி வைத்துக்கொள்வதால் அவர்களுடைய ஆடைகள் சிறார்களின் உடலில் படிந்துள்ள புழுதியால் அழுக்கடைகின்றன. அப்பெற்றோர் பேறு செய்தவராவர். அரும்பு போன்ற பற்கள் சற்றே தெரிய, தக்க காரணமின்றியும் அக்குழந்தைகள் சிரிக்கின்றன. அரசன் அறிவுடைநம்பி மக்கட் செல்வம் பற்றிச் சொல்லியுள்ள கருத்து மன்னன் துஷ்யந்தனின் கூற்றாகவே இங்கு வருகின்றது. ஆண் குழந்தை இல்லாதவனுக்கு மறுமையில்லை. புத்- எனும் நரகத்திற்கே செல்வான் என்ற மனு முதலான வடநூலார் கருத்தைச் சொல்லாமல் மக்கள் தரும் இம்மை இன்பத்தை அறிவுடைநம்பி போல் காளிதாசனும் வற்புறுத்துகின்றான்.

சங்க இலக்கியங்களின் அருமையை உணர்ந்து அவற்றை உரியமுறையில் பயன்படுத்திக் கொண்ட காளிதாசன் அவனுடைய படைப்புக்களைச் சங்கப் புலவர்களின் அப்பட்டமான நகல்களாகத் தரவில்லை தனது தனி முத்திரையைப் பதித்தே அவற்றை வழங்கினான். பெருங்கவிஞனாதலால் இதனைச் செய்வதில் அவன் அரிய வெற்றி பெற்றான். பின்னால் பிற இந்திய மொழிகளில் எழுதிய கவிஞர்களுக்கெல்லாம் முன் மாதிரியாகவும் எடுத்துக்காட்டாகவும் தன் பெயரை நிலைநாட்டினான் என்று ப. மருதநாயகம் முன்வைக்கின்றார்.

சாதாரண எளிய மக்களின் மத்தியில் வழங்கி வந்த வாய்மொழி இலக்கிய வழக்காறுகளாக இருந்த பல இலக்கிய வகைமைகளும் பல நூற்றாண்டுகளாக உருவாகி வந்த தமிழ்ச் செவ்வியல் மரபின் அகப்புற இலக்கியங்களும் தன்னுணர்ச்சிக் கவிதைகளும் இந்திய மரபில் முதலில் தமிழிலும், பின்பு மகாராட்டிரி - பிராகிருதத்திலும் - இறுதியில் சமஸ்கிருதத்திலும் தனக்கான ஒரு செய்யுள் மரபினைக் கொண்டு வளர்ந்துள்ளது என்று கூறலாம். அந்த வகையில் காளிதாசர் அம்மரபின் மிகச்சிறந்த பிரதிநிதியாக விளங்குகிறார் எனலாம். இந்தப் பின்னணியில் தமிழ் இலக்கியங்களின் வகைமை

மாதிரிகளை இந்திய இலக்கியங்களுக்குக் கொண்டு செலுத்தியதில் காளிதாசனுக்கு மிக அதிகமான பங்குண்டு என்று கருதலாம்.

**பயன்பட்ட நூல்கள்:**

1. காளிதாசர், ஆங்கில மூலம்: கோ. கிருஷ்ணமூர்த்தி, தமிழ்: சரஸ்வதி வேணுகோபால், சாகித்திய அகாதெமி வெளியீடு.

2. பிறமொழி இலக்கியங்களில் தமிழிலக்கியங்களின் தாக்கம், ப. மருதநாயகம், தமிழ்ப்பேராயம், SRM, சென்னை.

3. சங்க இலக்கியத்தில் இயற்கைக் குறியீடு, யரோஸ்லவ் வாச்சக், தமிழ்: கோ. பாலசுப்ரமணியன், அடையாளம், திருச்சி.

4. நற்றிணை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், கழக வெளியீடு

5. கலித்தொகை, சி.வை. தாமோதரம் பிள்ளை பதிப்பு

6. புறநானூறு, உ.வே.சாமிநாதையர் பதிப்பு

7. சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார், பதி. உ.வே.சாமிநாதையர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இந்திய மொழிகளில் சங்க இலக்கியத்தின் தாக்கம்

**முனைவர் மு திருநாவுக்கரசு**
muniarasu@gmail.com

*****

தமிழின் வீரயுகக் காலப் போர்க்கவிதைகளும் வடமொழி நாடகங்களும் ஒன்றையொன்று ஒத்தவையாக இருக்கின்றன எனலாம். தமிழிலிருந்து பலவிதமான காட்சி அமைப்புகளும், சூழல்களும், வருணனைகளும், அரங்க அமைப்புகளும், சொல் திறனும் பல வகைகளில் வடமொழி கவிஞர்களைக் கவர்ந்திருக்கின்றன. அதனால் அவர்களின் புனைவுகள்வழிச் சங்க இலக்கிய உள்ளடக்கங்கள் பின்னாளில் படைக்கப்பட்ட புனைவுகள்வழி வெளிப்படுகின்றன. அதாவது சூழல், இடம், காட்சியமைப்பு இவற்றை அவர்கள் சார்ந்த சிற்சில மாற்றங்களுடன் அந்த மண்ணுக்கே உரிய சில குணாதிசயங்களை இணைத்துக்கொண்டு அந்த மண் சார்ந்த மொழி விளையாட்டில் நிகழ்த்திக்காட்டிக் கவித்துவ அழகியலைக் கொண்டு சேர்க்கின்றனர். இந்தக் கொண்டு சேர்த்தலை மேனாட்டு அறிஞர்கள் பலரும் தம் ஆய்வுகள்மூலம் தமிழிலிருந்து இவ்வகையான கருத்தியல் பரிமாற்றமும் இலக்கிய உற்பத்தியும் நிகழ்ந்திருக்கின்றன என்றும் அவற்றைத் தக்க உதாரணங்களுடன் விளக்குகின்றனர். இந்தப் பின்னணியில் இருந்து புறநானூறு, பதிற்றுப்பத்து, குறுந்தொகை, நற்றிணை, சிலப்பதிகாரம் போன்றவற்றின் உள்ளடக்கங்களை வடமொழிக் கவிஞர்களான காளிதாசர், பாசகவியின் படைப்பாக்கங்களோடு இணைத்து பார்த்து தமிழ்ப் படைப்பாக்கங்களின் விரிவாக்கம் இந்திய மொழிகளில் எவ்வாறு மறைமுகமாக விரவியிருக்கின்றன என்பதை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சங்க இலக்கியங்களில் அகக்கவிதைகளிலும் புறக்கவிதைகளிலும் முருகன், வீரம், அழகு, இளமை ஆகியவற்றின் குறியீடாகவே போற்றப்படுவதையும் புறநானூற்றில் மன்னர்கள் முருகனோடு ஒப்பிட்டுப் பாராட்டப்படுவதையும் காணலாம். காளிதாசன் இரகுவம்சத்தில் பேரரசர்களை எல்லாம் முருகனாக வருணிப்பதையும் நினைவு கூர்ந்தால் பாசகவியும் சங்க இலக்கியச் செல்வாக்கின் காரணமாகவே போர்க்கடவுளை இவ்வாறெல்லாம் தன்னுடைய நாடகங்களில் குறிப்பிடுகின்றார் என்பதை உணரலாம். புறநானூற்றில் வரும் “முருகச் சீற்றத்து உருகெழு குரிசில்” “(புறம்.16), “கார் நறுங்கடம்பின் பாசிலைத் தெரியல் ∴ சூர்நவை முருகன்”(புறம். 23), “மணிமயில் உயரிய மாறாவென்றிப் பிணிமுக ஊர்தி ஒண் செய்யோன்” எனும் அடிகளும், அகநானூற்றில் வரும் “சினம் மிகுமுருகன்”, “செருமிகுசேய்” என்பன போன்ற அடிகளும் பாசகவியைப் பாதித்திருக்க வேண்டும். இந்தப் பாதிப்பால் அவனது நாடகங்கள் பெரும்பாலும் சங்க இலக்கியத்தை அடியொற்றியதாகவே இருக்கின்றன.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் கார்காலத்தில் மீண்டும் வரும்போது விரைவாகத் தேரை ஓட்டுமாறு பாகனிடம் சொல்லும் காட்சிகள், கூடியிருக்கும் வண்டுகள், ஆண், பெண் மான்கள் பிரிந்துவிடாமலிருக்க மணியோசையை எழுப்ப வேண்டாமென்று அவன் கூறும் காட்சிகள் நற்றிணை, அகநானூற்றுக் கவிதைகளில் இடம்பெறுவதைக் காணலாம்.

நற்றிணை 121ஆம் கவிதையில் வினைமுடித்து மீண்டுவரும் தலைவனிடம் தேர்ப்பாகன், "நீ விரும்பிய காதலியின் ஊர் இளைய பிணைமான் கலையொடு மகிழ்ந்து விளையாடும் முல்லை நிலத்தில் உள்ளது. நீ அவளை விரைவில் காணுமாறு கதுமெனத் தேரைச் செலுத்துவேன்" என்று கூறுகிறான்.

நற்றிணை 161ஆம் கவிதையில் வினைமுற்றி ஊர் திரும்பும் தலைவன் தேர்ப்பாகனிடம் "மலையிலுள்ள சுனைகளில் பெண்களின் கண் போன்ற குவளைமலர் மலர்ந்திருக்க, வேங்கை மரங்களுடைய அகன்ற நெடிய காட்டில் இம்மென ஒலிக்கின்ற வண்டுகளின் நெருங்கிய கூட்டம் பிரிந்து ஓட, சோழநாட்டிலுள்ள 'நெடுந்தெரு' என்னும் ஊர் போன்ற அழகு பொருந்திய நெடிய வழியிலே நம்முடைய வீரர் ஆங்காங்குத் தங்கிச் செல்ல, வெண் காந்தலின் இதழ்கள் சங்கு உடைந்து கிடந்தது போலக் கிடக்குமாறு குதிரையின் குளம்பு மிதித்து அறுக்க, நெருங்கி வரும் நம் வருகையை நம் காதலிக்கு நிமித்தம் காட்டும் காக்கையாகிய பறவைகள் கரைந்து அறியும்படி தெரிவித்தனவோ?" என்று கூறுவான்.

நற்றிணை 221ஆம் கவிதையில் தலைவன் தேர்ப்பாகனிடம் "நீர் அமையப் பெற்ற பெரிய வாழ்வின் நீண்ட இடமெங்கும் சுவடு பிளப்ப இயங்கும் தொழிலை உடைய உனது நெடிய தேர் விரைவிலே செல்வதாக"(நீரணிப் பெருவழி நீளிடைப் போழ) என்று கட்டளையிடுவான்.



நற்றிணை 321ஆம் கவிதையில் வினைவயிற் சென்று மீளும் தலைமகன் தேர்ப்பாகனை நோக்கி, "நம் காதலி மாலைப்பொழுதில் நாமில்லாத மனையை நோக்கி வருந்தி நிற்பாளாதலால் தேரை விரைவாகச் செலுத்துவாயாக. காட்டை நெருங்கும் போது நம்மூர் மரங்கள் தோன்றுவதைக் காண்பாயாக" என்று சொல்லும் காட்சி இடம்பெறுள்ளதைக் காணலாம்.

'கர்ண பாரம்' எனும் நாடகத்தில் கர்ணன் இரவலனாக வரும் இந்திரனுக்கு யானைகளைத் தருகிறேன் என்று சொல்லும்போது அவை எத்தகையவை என்று எடுத்துரைக்கிறான்.

வெள்ளை நகங்களும் தந்தங்களும் கொண்ட யானைக் கூட்டங்களை உணக்குத் தருவேன் அவை குன்றுகளை ஒத்தவை இடிபோன்று முழங்குபவை அவற்றின், மத்தகத்திலிருந்து வடிகின்ற மதநீரைக் கருவண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கும். (ப. ஐஐ 38) வடமொழிக் கவிதையாக இவ்வருணனை வருகிறது.

சங்கக் கவிதைகளில் யானைகளைப் பற்றிய ஓவியங்கள் பல உள்ளன. மதநீர்க்காக அலையும் வண்டுகளைக் குறிப்பிடும் அடிகளும் பல இருக்கின்றன. உதாரணத்திற்கு, புறநானூற்றில் வரும் ஔவையார் கவிதையைக் கூறலாம். வரியையுடைய தேனீ ஒலிக்கும் வாயில் வந்து புகுகின்ற மதத்தினையுடைய தலைமை பொருந்திய யானை என்ற பொருளில்,

> **வரிஞிமிறு ஆர்க்கும் வாய்புகு கடாஅத்து**
> **அண்ணல்யானை அடுகளத்து ஒழிய** (புறம். 93)

என்று அப்புலவர் பாடுகின்றார்.

பெருஞ்சாத்தனார் பாடிய புறநானூற்றுக் கவிதையில் "குன்றத்தன்ன களிறு" (புறம். 125) பேசப்படுகிறது. "வெண்கோடு செம்மறுக் கொளீஇ(குறுந். 343), "வெண்கோட்டு யானை" (குறுந். 75) என்னும் குறுந்தொகை அடிகள் வெண்கோடுகளைச் சுட்டுகின்றது. யானைக்குக் குன்றை உவமையாகச் சொல்லும் குறுந்தொகைக் கவிதைகள் பல உண்டு. எடுத்துக்காட்டாகச் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**"மாசறக் கழீஇய யானைப் போலப்**
**பெரும்பெயர் உழந்த விரும்பிணர்த் துறுகல்"** (குறுந்.13)

**"கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன**
**கேழிருந் துறுகல்"** (குறுந்.279)

**"களிறுமலைந் தன்ன கண்கூடு துறுகல்"** (மலைப்படுகடாம்.384)

போன்றனவாகும்.



'பிரதிமா நாடக'த்தில் இராவணன் சீதையைக் கொண்டு செல்லப் பிராமண வடிவத்தில் வரும்போது இராமனை முதலில் சந்தித்துப் பேசுவதாகவும் மூதாதையருக்குத் திதி எனும் சடங்கை எவ்வாறு செய்யவேண்டுமென்று சொல்லுவதாகவும் ஒரு காட்சி வருகின்றது. இமயமலையின் ஏழாவது சிகரத்தில் வாழும் பொன்மான்களைப் பலிகொடுத்தால் இறந்தவர் விண்ணுலகம் சேர்வார் என்று இராவணன் கூறுவது கீழ்க்காணும் வடமொழிக் கவிதையாக வருகின்றது.

பொன்மான்களைப் பலிகொடுத்தால் இறந்தவர் மனநிறைவு பெற, அவர்களுடைய ஆவிகள் புதல்வர்களால் பெரும் பயன் அடையும். முதுமையை இவ்வுலகில் விட்டுவிட்டு ஆவிகள் பேரொளியுடன் மேலே சென்று விண்ணுலகை அடையும். தேவர்களைப்போல் அவை வானவூர்திகளில் செல்லும். நிலையற்ற பொருள்களால் அவை இழுத்துச் செல்லப்படமாட்டாது(ப. 188) என்று விளக்குகின்றது.

புறநானூற்றில் உள்ள உறையூர் முதுகண்ணன் சாத்தனாரின் கவிதை புலவர்களால் உரையும் பாட்டும் பெற்றோர் தாம் செய்யும் நல்வினையை முடித்த பிறகு பாகனால் செலுத்தப்படாத வானவூர்தியைச் சேர்வார் என்று கூறுகின்றது. அவ்வடிகள் கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது.

**உரையும் பாட்டும் உடையோர் சிலரே**
**மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே**
**புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்**
**வலவன் ஏவா தம் செய்வினை முடித்தெனக்**
**கேட்பல.....** (புறம். 27)

‘பாலசரிதம்’ எனும் நாடகம் கண்ணனின் இளமை வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை ஐந்து அங்கங்களில் சொல்லுகிறது. அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த உல்னர் கண்ணனைப் பற்றிய பின்னால் வந்த இலக்கியங்கள் யாவும் ஹரிவம்சம், விஷ்ணுபுராணம், பாகவத புராணம் ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொள்கின்றன என்றும் அவற்றிலிருந்து பாசகவியின் நாடகம் வேறுபடும் இடங்கள் எல்லாம் அவரது சொந்தமான கற்பனையின் விளைவா அல்லது வேறு மூலம் எதற்கும் அவர் கடன்பட்டிருக்கிறாரா என்பதை முடிவு செய்ய இயலவில்லை என்றும் கூறுவார். பாசகவி சில காட்சிகளில் தமிழ் மூலங்களுக்குக் கடன்பட்டிருப்பதை மேலே கண்ட உதாரணங்களில் இருந்து நம்மால் நன்கு அறிய முடிகின்றது.

மூன்றாம் அங்கத்தில் கண்ணன் தலைமையில் ஒரு நாட்டுப்புற நடனம் இடம்பெறுகின்றது. வயதில் மூத்த இடையன் ஒருவன் நடனத்தில் பங்கு பெறப்போகும் ஆயமகளிரை முதலில் பெயர் சொல்லி அழைக்கிறான். கோச சுந்தரி, வனமாலா, சந்திர லேகா, மிரிகாச்சி என்னும் பெயர் கொண்ட பெண்கள் அழைக்கப்படுகிறார்கள். “பெண்களே, தாமோதரனும் பால்போல் வெண்ணிறமுள்ள சங்கர்சனனும்(பலராமன்) இங்குள்ளார்கள். ஆய இளைஞர்களோடு தாமோதரன் குகையில் வாழும் சிங்கம்போல் வருகின்றான்” என்று மூத்த இடையன் அறிமுகப்படுத்துகிறான். அதனை விவரிக்கும் காட்சிகள் கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது.

தாமோதரன்: வாருங்கள் பெண்களே! கோச சுந்தரி, வனமாலா, சந்திர லேகா, மிரிகாச்சி ஆயர் மக்களுக்கான இந்த வட்ட நடனத்தை ஆடுவோம்.

சங்கர்சனன்: தாமகனும் மேகநாதனும் மேளத்தை அடிக்கட்டும்.

மூத்த இடையன்: நீங்கள் யாவரும் நடனமாடப் போகிறீர்கள். நான் என்ன செய்வது?

தாமோதரன்: ஏன்? நீ நடனத்தைப் பார்ப்பாய். (எல்லோரும் நடனம் ஆடுகிறார்கள்)

மூத்த இடையன்: நல்ல பாட்டு. நல்ல நடனம்.நானும் கொஞ்சம் நடனம் ஆடுவேன். இப்பொழுது களைப்படைந்துவிட்டேன்.

இத்தகைய நடனக் காட்சிச் சிலப்பதிகாரத்தில் ‘ஆய்ச்சியர் குரவை’யில் இடம் பெற்றுள்ளது. ஆயர்மகளான மாதரி ஏழு இடையர்குலப் பெண்களைக் கொண்டு இந்நடனத்திற்கு ஏற்பாடு செய்கின்றாள். அதனை விவரிக்கும் அடிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**தொழுவிடையேறு குறித்து வளர்த்தார்**
**எழுவர் இளங்கோதையர்**
**என்று தன் மகளை நோக்கித்**
**தொன்றுபடு முறையான் நிறுத்தி**
**இடைமுது மகளிவர்க்குப்**
**படைத்துக் கோட் பெயரிடுவாள்**
**குடமுதல் இடமுறையாக் குரல் துத்தம்**
**கைக்கிளை உழை இளி விளரி தாரமென**
**விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே.** (ஆய்ச். குரவை. 13.2-10)

இந்நடனத்தில் கடல்வண்ண மாயவனும் வெள்ளை நிறத்தவனாகிய பலராமனும் இடம்பெறுவதைக் கீழ்வருமாறு விளக்குகிறார் இளங்கோவடிகள்.

**கதிர் திகிரி யான் மறைத்த கடல்வண்ணன் இடத்துளான்**
**மதிபுரையு நறுமேனித் தம்முனோன் வலத்துளாள்**
**மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்**
**பயிலிதழ் மலர்மேனித் தம்முனோன் இடத்துளாள்.** (ஆய்ச். குரவை.26,27)

இளங்கோவுக்குப் பின் எழுதப்பட்ட பாசகவியின் நாடகத்தில் சிலப்பதிகாரத்தின் தாக்கம் இருப்பது இங்கு நமக்குத் தெளிவாகின்றது.

'மத்தியம - வியா யோகா' என்னும் நாடகத்தில் பீமனின் அசுர மைந்தனாகிய கடோத்கசன் தீக்கடைகோலிலிருந்து பிறக்கும் தீயைப்போல், அவனுடைய தாயாகிய இடும்பாவின் வயிற்றிலிருந்து தோன்றியிருக்கிறான்(ப.144) என்று பாராட்டப் படுகின்றான். இந்த உவமை சங்கப் புலவர்கள் விரும்பிக் கையாண்ட அரிய உவமைகளில் ஒன்றாகும். புறநானூற்றுக் கவிதையில் ஔவை அதியமான் நெடுமானஞ்சியை "இல்லத்தின் உட்கூரையில் செருகப்பட்ட தீக்கடை கோலைப் போலத் தன் ஆற்றல் வெளிப்படாது ஒடுங்கியிருக்கவும் வல்லவன், அதனைக் கடையும்போது பிறக்கும் தீயைப்போலத் தன் ஆற்றல் வெளிப்பட வேண்டுமிடத்துப் பலரும் அறிய வெளிப்படுத்தவும் வல்லவன்" என்று புகழ்ந்து கூறியுள்ளார்.



**இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்**
**தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்**
**கான்றுபடு கனைஎரி போலத்**
**தோன்றவும் வல்லவந்தான் தோன்றுங் காலே.** (புறம்.315)

'அவிராகம்' என்னும் நாடகத்தில் அரசனுடைய நாடுகாக்கும் பணி எவ்வளவு கடுமையானது என்பது ஒரு வடமொழிக் கவிதையாகச் சொல்லப்படுகின்றது. மன்னன் ஒருவனின் கூற்றாகவே வருகின்றது இது.

அந்தோ! அரசு என்பது ஒரு பெரும் கலையாகும். முதலில் சட்டம் கடைப்பிடிக்கப்படவேண்டும். அமைச்சர்களின் உள்ளங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதைத் தானாகவே புரிந்து கொள்ள வேண்டும். அன்பும் சினமும் வெளியில் தெரியாதவாறு மறைக்கப்படல்வேண்டும். ஏற்ற நேரங்களில் தக்கவாறு அமைதியையும் கடுமையையும் காட்டவேண்டும். தன்னுடைய குடிமக்கள் என்ன செய்கிறார்கள் என்பதையும் தனது நாட்டைச் சுற்றியுள்ள நாட்டு மன்னர்கள் எத்தகையவர்கள் என்பதையும் ஒற்றர்களைக் கண்களாகக் கொண்டு அவன் அறிந்து கொள்ளவேண்டும். தனது உயிரைக் காத்துக்கொள்ள எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளவெண்டும். ஆனால் போர்க்களத்தில் முன்னின்று உயிர்க்கஞ்சாது போரிட வேண்டும்.(ப.70)

அரசனின் பொறுப்பு எத்தகையது என்பதைப் புறநானூற்றுக் கவிதை வாயிலாக வெள்ளைக்குடி நாகனார் விளக்கியுள்ளார்.

**மாரிபொய்ப்பினும் வாரிகுன்றினும்**

**இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்**
**காவலர்ப் பழிக்கும் இக் கண்ணகன் ஞாலம்**
**அதுநற்கு அறிந்தனை யாயின் நீயும்**
**நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது**
**படுபுறந் தருநர் பாரம்ஓம்பிக்**
**குடிபுறம் தருகுவை யாயின் நின்**
**அடிபுறம் தருகுவர் அடங்கா தோரே.** (புறம்.35)

என்றும்,

**தொண்டைமான் இளந்திரையன் என்னும் மன்னன்**
**கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்**
**காவற் சாகாடு உகைப்போன் மாணின்**
**ஊறின் றாகி ஆறினிது படுமே**
**உய்த்தல் தேற்றா நாயின் வைகலும்**
**பகைக்கூழ் அள்ளற் பட்டு**
**மிகப் ப∴றீநோய் தலைத்தலைத் தருமே.** (புறம். 185)

என்றும் கூறுவதைக் காணமுடிகின்றது.



--ஊரு பங்கம்- என்னும் நாடகத்தில் பல போர்க்களக் காட்சிகள் வருகின்றன. "போர்க்களச் சடங்கு தொடர்கின்றது. போர்க்கள வேள்வியில் வீரர்கள் பலிகொடுக்கப்பட்ட பொருள்களாக விழுந்து கிடந்தார்கள். மரண ஓலங்கள் வேத மந்திரங்களாக ஒலித்தன. அவ்வேள்வியில் பகைமை என்னும் தீ கொழுந்துவிட்டு எரிந்தது. யாகத் தூண்களாக யானைகளின் கால்கள் தோன்றின. அம்புகள் யாகத் தர்ப்பைகளாகக் காட்சியளித்தன. யானைகளும் கொடிகளும் தேர்களும் விறகுக் குவியல்களை ஒத்திருந்தன."(g.II 46)

அம்பு மழையால் தாக்கப்பட்ட யானை படைக்கலக் கூடாரம்போல் விளங்கியது." (g.II 46)

-மகளின் கணவனை ஒரு பெண் தேரிலிருந்து இறங்க உதவி செய்வதைப் போல், நரிகள் இறந்த வீரனைத் தேர்த்தட்டிலிருந்து இழுத்துச் செல்கின்றன." (g.II 46)

-குருதி ஆறுகளில் இறந்த யானைகளின் உடல்கள் பாலங்களாக அமைந்துள்ளன. இளவரசர்களும், தேரோட்டிகளும் இறந்த பின்னும் அவர்கள் ஊர்ந்த தேர்களைக் குதிரைகள் இழுத்துச் செல்கின்றன. தலைகள் துண்டிக்கப்பட்டபின்னும் முண்டங்கள் அங்குமிங்கும் சுற்றுகின்றன. மதம் பிடித்த யானைகள் ஓட்டுவாரில்லாமல் போர்க்களத்தில் எங்கும் அலைகின்றன. (g.II 47)

மஞ்சள்நிறக் கண்களையும் அங்குசம் போன்ற கூரான அலகுகளையும் கொண்ட பருந்துகள் இறக்கைகளை விரித்துக்கொண்டு, பவளம்போன்ற இறந்த உடலங்களிலிருந்த தசைகளை ஏந்தி விண்ணில் விசிறிகளைப்போல் பறக்கின்றன. (g.II 47)

இவையெல்லாம் புறநானூற்றுப் போர்க்காட்சிகளை நமக்கு நினைவூட்டுகின்றன. அவற்றின் நேரடியான தழுவல்களாகவே வெளிப்படுகின்றன. இதே போன்ற காட்சியமைப்பும் போர்க்களச் சித்திரிப்பும் கீழ்க்காணும் புறநானூற்றுக் கவிதைகளில் காணலாம்.

**எனைப்பல் யானையும் அம்மொடு துளங்கி**
**விளைக்கும் வினையின்றிப் படை யொழிந்தனவே**
**விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்**
**மறத்தகை மைந்தரொடு ஆண்டுப்பட்டனவே**
**தேர்தர வந்த சான்றோர் எல்லாம்**
**தோல்கண் மறைப்ப ஒருங்குமாய்ந் தனரே**
**விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்**
**பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந் தனவே.**(புறம். 63)

மழையென மருளும் பல்தோல் மலையெனத்

**தேன்இறை கொள்ளும் இரும்பல் யானை**
**உடலுநர் உட்க வீங்கிக் கடலென**
**வானீர்க்கு ஊக்கும் தானை ஆனாது**
**கடுஒடுங்கு எயிற்ற அரவுத்தலை பனிப்ப**
**இடியென முழங்கு முரசின்**
**வரையா ஈகைக் குடவர் கோவே.**
**யானையும் மலையின் தோன்றும் பெருமநின்**
**தானையும் கடலெனமுழங்கும் கூர்நுனை**
**வேலும் மின்னின் விளங்கும்.** (புறம். 42)

**இருப்புமுகம் செறிந்த ஏந்தெழில் மருப்பின்**
**கருங்கை யானை கொண்மூ வாக**
**நீண்மொழி மறவர் எறிவனர் உயர்த்த**
**வாள்மின் னாக வயங்குகடிப்பு அமைந்த**
**குருதிப் பலிய முரசுமுழக் காக**
**அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்**
**வெவ்விசைப் புரவி வீசுவளி யாக**
**விசைப்புறு வல்வில் வீங்குநாண் உகைத்த**
**கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை**
**ஈரச் செறுவின் தேர்ஏ ராக**
**விடியல் புக்கு நெடிய நீட்டிநின்**
**செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சால்**
**பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி**
**விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்**
**பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு**
**கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்**
**பூதம் காப்பப் பொலிகளம் தழீஇப்**
**பாடுநர்க்கு இருந்த பீடுடை யாள.** (புறம். 369)

பாசகவி காட்டும் போர்க்களக் காட்சிகள் சிலவற்றை, குறிப்பாக, தலை துண்டிக்கப்படும் முண்டம் நடமாடுகின்ற காட்சியைப் பதிற்றுப்பத்தின் 'மெய்யாடு பறந்தலை' எனும் பாட்டில் காணலாம். பெரிய களிறுகளின் வெண் கொம்புகளோடு, நெடுந்தேர்களின் சக்கரங்களும் விழுந்துகிடக்கும் பெரிய போர்க்களத்தில் தம் பெண் பருந்துகளோடும் கூடியவையாய் ஆண்பருந்துகள் புகுந்து வீழ்ந்து பட்டோரின் உடலங்களை நிறையத் தின்றபடி இருக்கும். அவ்வேளையில், தலைவெட்டப்பெற்று எஞ்சியிருந்த ஓர்

உடலமானது போர்க்களத்தின் உட்பகுதியில் எழுந்துநின்று ஆடத் தொடங்கியது. அந்திமாலைப் பொழுதில் செவ்வானத்தில் கண்டாற்போன்று செவ்வொளி கொண்டதான குருதி பரவியிருக்கும் சிவந்த மன்றத்தில் அவ்வுடலின் ஆட்டத்திற்கேற்பப் பேய்களும் ஆடத் தொடங்கின.(பதிற்றுப்பத்து. 35)

இவற்றிலிருந்தெல்லாம் பாசகவி தமது கவித்துவ ஆற்றலினால் தமக்கு வேண்டிவற்றைச் சூழலுக்கேற்ப தக்க இடங்களில் பயன்படுத்திக் கொள்கின்றார் என்பது தெளிவாகத் தெரிகின்றது. அதில் ஏதேனும் ஐயமிருந்தால் இன்னொரு உதாரணத்தின் மூலம் அதனை விளக்கலாம். இந்தப் போர் வருணனைகளுக்கிடையே போர் பற்றிப் பேசிக் கொண்டிருக்கின்ற மூன்று வீரர்களும் போர்க்களத்தில் உடல்களும் ஆயுதங்களும் குவிந்து கிடப்பதைக் கண்டு ஒரு பட்டியல் தருகின்றார்கள். கிழிந்த கவசங்கள், தோல்கள், குடைகள், சங்குகள், ஈட்டிகள், அம்புகள், வேல்கள், கவசத்தோடு கூடிய தலையற்ற முண்டங்கள், பல்வேறு ஆயுதங்களின் குவியல் - ஈட்டிமுனைகள், குறுங்கத்திகள், ஹாடகங்கள், பிண்டிபாலங்கள், கதாயுதங்கள், சுத்தியல்கள், கணயங்கள், அம்புகள், கத்திகள், மரத்தடிகள் எனப் பட்டியல் நீள்கின்றன.

இவற்றுள் ஹாடகத்தைத் தங்கநிற வேல் என்றும் பிண்டிபாலத்தை 'ரும்புமுனை கொண்ட உலக்கை வடிவிலான ஆயுதம் என்றும் மொழிபெயர்க்கும் மேலை வடமொழி அறிஞர் உ்ளள்னர். கணயம் என்னும் மூலத்திலுள்ள சொல்லைத் தந்து அது என்ன பொருளைத் தருவது என்று புரியவில்லை என்று அடிக்குறிப்பில் சொல்வார். கணையம்என்னும் தமிழ்ச்சொல்லே மூலத்தில் இடம்பெறுகின்றது. மேற்கண்ட புறநானூற்றுக் கவிதையில் வரும் கணையம் கணைய மரமென்னும் ஆயுதத்தைக் குறிக்கும் என்று உரையாசிரியர் எழுதுவார். இரண்டு மூன்று புறக்கவிதைகளில் காணப்பெறும் எழு என்பது வீரர்களின் தோள்களுக்கு உவமையாகப் பயன்படுத்தப்படுகின்றது. 61ஆம் கவிதையில் வரும் எழு உறழ் திணிதோள் என்பது புறநானூற்றுப் பழைய உரையாசியர் தரும் விளக்கம். பதிற்றுப்பத்துக் கவிதைகள் சிலவற்றில் வரும் மரம் என்னும் சொல்லுக்கே உரையாசிரியர்கள் இது கணைய மரத்தையும் குறிக்கலாம். கணைய மரமாயின் கோட்டைக் கதவுகளுக்கு வலுவூட்டக் குறுக்காகப் பின்பக்கமாக இடம்பெற்றுள்ள வலியமரம் எனக் கொள்ளுக என்றும் பொருள் கூறுகின்றனர். பதிற்றுப்பத்தின் 11ஆம் கவிதையில் வரும் துஞ்சமரம் என்பதும் கணைய மரமேயாகும்.

தரித்திர சாருதத்தில் இருள்சூழ்ந்த இரவு அழகிய உவமை கொண்ட வடமொழிக் கவிதையால் தலைவனால் வருணிக்கப்படுகின்றது. எட்டாம் நாள் திங்கள் இருளுக்கு இடம்கொடுத்து மறைந்தது, அது காட்டுயானை நீரில் மூழ்கும்போது அதன் வளைந்த தந்தத்தின் நுனி நீருள் அமிழ்ந்ததைப் போல் தோற்றம் அளித்தது.(ப.90)

சிறிய குளத்தின் வளைந்த கரை எட்டாம்நாள் பிறையைப் போன்று வளைந்திருந்தது என்பார் கபிலர். இதனைக் கீழ்க்காணும் அடிகள் விளக்குகின்றன.

**அறையும் பொறையும் மண்ந்த தலைய**
**எண்நாள் திங்கள் அனைய கொடுங்கரை** (புறம். 118)

காவட்டனார் தமது புறக்கவிதை ஒன்றில் யானையின் தந்தங்களை நிலவு போன்று வளைந்த தந்தங்கள் என்று கூறுகின்றார். அதனை விவரிக்கும் அடிகள் கீழ்வருமாறு அமைந்துள்ளது.

**-நிலவுக் கோட்டுப் பலக ளிற்றோடு-** (புறம். 359)

ஊழின் தன்மை பற்றியும் வலி பற்றியும் பாசகவியின் நாடகங்களில் பல பாத்திரங்கள் வெளிப்படுத்துகின்றன.

பெரும்பாலான வடமொழி அறிவுஜீவிகள் காளிதாசன் கி.பி. 3 அல்லது 4ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்றும் பாசகவி கி.பி. 2 அல்லது 3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்றும் கூறுவார்கள். ஜார்ஜ் ஹார்ட் போன்ற மேலை அறிஞர்களும் கர்நாடகத்து வடமொழிப் பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி போன்றவர்களும் காளிதாசனின் படைப்புகளில் சங்க இலக்கியம் பெரும்பாலான இடங்களில் இடம்பெறுவதைச் சுட்டிக்காட்டியுள்ளனர். மேலை அறிஞர்களில் ஓரிருவர் பாசகவியின் நாடகங்களிலும் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு காணப்படுகின்றது என்றும் குறிப்பிடுகின்றனர். இக்கருத்தாக்கம் முற்றிலும் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியது என்பதை மேற்கூறிய உதாரணங்கள் நிரூபிக்கின்றன.

**பயன்பட்ட நூல்கள்:**

1.காளிதாசர், ஆங்கில மூலம்: கோ. கிருஷ்ணமூர்த்தி, தமிழ்: சரஸ்வதி வேணுகோபால், சாகித்திய அகாதெமி வெளியீடு.

2. பிறமொழி இலக்கியங்களில் தமிழிலக்கியங்களின் தாக்கம், ப. மருதநாயகம், தமிழ்ப்பேராயம், SRM, சென்னை.

3. சங்க இலக்கியத்தில் இயற்கைக் குறியீடு, யரோஸ்லவ் வாச்சக், தமிழ்: கோ. பாலசுப்ரமணியன், அடையாளம், திருச்சி.

4.நற்றிணை, பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், கழக வெளியீடு

5. குறுந்தொகை, உ.வே.சாமிநாதையர் பதிப்பு

6.புறநானூறு, உ.வே.சாமிநாதையர் பதிப்பு

7.பதிற்றுப்பத்து, உ.வே.சாமிநாதையர் பதிப்பு

8. சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லார், பதி. உ.வே.சாமிநாதையர், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# மருத நில வாழ்வியலில் நீர் நிலைகள்

**முனைவர் மூ பாலசுப்பிரமணியன்**
இணைப்பேராசிரியர், தமிழியல்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
nellaibaalaa@gmail.com

*****

பண்டையத் தமிழர்கள் தம் வாழ்வை அகம், புறம் எனப் பகுத்து வாழ்ந்ததைப் போல், தங்கள் வாழ்வியலை நிலவியலும் அடிப்படையில் அமைத்துக் கொண்டனர். நிலப் பாகுபாடுகள் நாடக வழக்கு என்னும் இலக்கிய வழக்கிற்கானது என்று அறிஞர்கள் கூறினாலும், நிலம்தான் பண்பாட்டிற்கு அடிப்படையாக விளங்கியுள்ளமையை யாரும் மறுக்க மாட்டார்கள். நிலம் சார்ந்த உற்பத்தியும் நீர்வளமும் பண்பாட்டுக் கூறுகளை வளர்த்தெடுக்கின்றன. நீர்வளம் அனைத்து நிலங்களிலும் உண்டென்றாலும், உற்பத்திக்கு ஏதுவான நீரால்தான் பயன் உண்டு. அந்தவகையில் மருத நிலத்தின் நீர்வளம் மற்ற நிலங்களின் நீர்வளத்தை விட வேளாண் உற்பத்திக்கு உகந்ததாக இருந்துள்ளது. நிலவியல் சூழல்தான் நீரை வளம் நோக்கி இட்டுச் செல்கிறது. குறிஞ்சி, முல்லை, நெய்தல் நிலங்களில் நீர் நிலைகள் இருந்தாலும், உற்பத்திக்கு முழுமையாகப் பயன்படுத்த முடியாத வகையில் அமைந்திருந்தன. மருத நிலவியலும் அதற்கேற்ற நீர்வளமும்தான் மற்ற நிலங்களைத் தன் பக்கம் திரும்ப வைத்தனவெனலாம். அந்தவகையில் மருத நீர் வளம் வேளாண்மையோடு மட்டும் நில்லாமல் அம்மக்களின் வாழ்வியலின் அடையாளமாக விளங்கியிருந்தமையைச் சங்க இலக்கியங்களின் வழி அறிய முடிகின்றது.

**நீர் நிலைகள்**

புவிப்பரப்பின் மீது காணப்படும் அனைத்து வகையான நீரின் தொகுப்புகளை நீர்நிலை (டிழனல ழக றயவநச) என்பர். நீர்நிலை என்ற சொல், ‘சமுத்திரங்கள், கடல்கள், ஆறுகள், நீரோடைகள், சுனைகள், மடுக்கள்’ போன்ற இயற்கையான நீர்நிலைகளையும், ‘ஏரிகள், குளங்கள், அணைகள்’ போன்ற மனிதனால் செயற்கையாக உருவாக்கப்பட்ட நீர்நிலைகளையும் குறிக்கும்.

> ***“மணி நீரும் மண்ணும் மலையும் அணிநிழற்***
> ***காடும் உடையது அரண்”*** *குறள்: 742*

என்னும் குறளுக்கிணங்க நல்ல அரண்களை உடையதே சிறந்த நாடாகும். நீர் நிலைகள் என்பது பண்டைய நாளில் அரணாக இருந்தாலும், மனித வாழ்வைக் கட்டிக் காத்த அரணாக நீர் இருந்துள்ளமையை இதனால் உணரலாம். மருத நிலம் மேடு பள்ளங்கள் நிறைந்த இடமாக இல்லாமல், சமவெளியாக இருந்தமையால், ஆறுகள் கொண்டு சேர்க்கும் வண்டலும், எளிதில் வடியாமல் தேங்கியுள்ள நீரும் அந்நிலத்தை வளப்படுத்தியுள்ளன. (இல.செ.கந்தசாமி, (1980) வேளாண்மைப் பழமொழிகள், ப. 76) இந்நீர் நிலைகள் இயற்கை சான்ற பகுதியாகும்.

**மருத நில நீர் நிலைகள்**

மருதத்திணைக்கான நீர்நிலைகளாக, 'ஆற்றுநீரும், பொய்கை நீரும், கிணற்று நீரும்' வரையறுக்கப்பட்டுள்ளன. ஐங்குறுநூறு, குறுந்தொகை போன்ற இலக்கியங்கள், 'பொய்கை, புனல், தண்டுறை, பெருந்துறை, காவிரி, தண்புனல், புதுப்புனல், செம்புனல், தன்கயம், இலஞ்சி, பழனம், சோணை, சுயம், நளிநீர் (வெள்ளநீர்), கேணி, தீம்புனல், கயம், குண்டுநீர், ஆறு, மலிபுனல், பெருங்குளம், முதுநீர், வையை, துணிகயம் (தெளிந்தநீர்), நெடுங்கயம், இருங்கயம், அகல்யாறு, கடிபுனல், அரிநீர்(பொய்கை, ஈண்டுநீர்' போன்ற நீர்நிலைகளையும் வகைப்படுத்தியுள்ளன. பண்டைய மன்னர்கள் வேளாண்மை பெருக்கத்திற்குக் காடுகளைத் திருத்தி நீர் நிலைகள் அமைத்துள்ளமையை,

> ***"காடு கொன்று நாடாக்கி***
> ***குளம் தொட்டு வளம் பெருக்கி…"*** (பட்டினம். 283 ௲ 284)

என்ற பட்டினப்பாலை தொடர்களால் அறியலாம். மன்னர்களின் கடமைகளில் நீரைத் தேக்குவதும் ஒழுக்காற்றுவதாகும் என்பதை,

> ***'நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு***
> ***உடம்பும் உயிரும் படைத் திசினோரே"*** புறம். பா. 18: 22 ௲ 23)

என்னும் புறநானூற்று வரிகளால் அறிய முடிகின்றது. நிலம் திருத்தி, நீரின் துணையால் வேளாண்மை செய்வோர் உயிரும் உடலும் படைத்துக் காப்போர் என்பதை மேற்கண்ட பாடல் வரிகள் உணர்த்துகின்றன. ந.சுப்புரெட்டியார்,

> ***"வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என்றும் வற்றாத நீரையடைய ஆறு, கால் வாய்களாகப் பிரிந்து பாயும் நிலத்தையுடையது இப்பகுதி. நிலம் விளைபொருள்களைக் குன்றாது நல்கும். இங்கு வாழும் உழவர்கட்கு ஓய்வு நேரம் அதிகம் இருக்கும் ஓய்வு நேரத்தை அவர்கள் இன்பத்திலும் களியாட்டத்திலும் கழிப்பர். இந்தப் பகுதியில் காணப்பெறும் குளங்களில் நீர் நிறைந்து அதில் செவ்வாம்பலும் தாமரையும் அழகு பெறத் தோன்றும். நீரில் சிறுமீன்கள் துள்ளிப் பாயும். கொக்குகள் கூம்பியிருந்து மீன்களைப் பிடித்துச் செல்லும். எருமைக் கடாக்கள் குளத்துள் பாய்ந்து நீந்தித் தம் களைப்பை ஆற்றிக் கொள்ளும். ஆங்குள்ள செங்கழுநீர் இலைகளையும் உணவாகக் கொள்ளும்."*** (ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப. 40)

என மருத நிலம் குறித்தும், அங்குள்ள நீர்வளத்தையும், நிலவியல் சூழல்களையும் திறம்பட உரைப்பதன் வழி மருத நீர்நிலைகளின் இயல்புகளை அறியலாம்.

**ஆறு**

மருத நிலத்தின் வளத்திற்கு ஆதாரமாக அமைந்தன ஆறுகளே. ஆற்று வெள்ளம் அடித்துவரும் வளங்கள் பயிரின் வளர்ச்சிக்கும் வளத்திற்கு அடிப்படையாக அமைகிறது. இதனை,

> ***'தீம்புனல் உலகம் என்று போற்றப்படும் சிறப்பு வாய்ந்த மருத நிலத்தில் வளம் சான்ற ஆறுகள் பாய்ந்து வேளாண்மைக்கு வளம் சேர்த்தன. ஆற்று வெள்ளத்தில் பலவிடங்களில் அமைந்த வளங்கள் ஒருசேர அடித்து வரப்பட்டுச் சேர்க்கப்படுதலால் பயிரின் வளர்ச்சிக்குத் தேவையான வளமனைத்தும் ஆறு கொண்டுள்ளது. எனவே, ஆற்றுப்பாசன முறையே உயர்ந்ததாகும் என்ற வேளாண்மை அறிவியல் நுட்பம் இவண் விளக்கப்படுதல் அறியத்தக்கதாகும்"*** (செயராமன்,ந.வீ., 1987, 84 ௲ 85)

என்னும் கூற்றால் அறியலாம். இலக்கியங்கள், காவிரி, வைகை, பொருநை, பெரியார், அரிசிலாறு, காஞ்சி, குமரி, சிலம்பாறு, சுள்ளியம், பேரியாறு, சேயாறு, ப.்.றுளி, பெண்ணை, வாணி போன்ற ஆறுகளைப் பதிவு செய்துள்ளன. மருத நிலம், 'விழைவு அறா வியன் கழனிகளைப்' பெற்றிருந்தமைக்கு இத்தகு ஆறுகளே காரணமாக அமைந்தன. சேர நாட்டிலுள்ள பேரியாற்றில் (பெரியாறு) வறண்ட காலத்திலும்கூட வெள்ளம் பாய்ந்தோடியதை,

*"குன்று வறம் கூரச்சுடர் சினம் திகழ,*
*அருவி அற்ற பெரு வறற் காலையும்,*
*அருஞ் செலல் பேர் ஆற்று இருங்கரை*
*உடைத்து..."* (பதி. 5:3.13 - 15)

என்னும் பாடல் பகுதியால் அறியலாம். அதுபோல் காவிரி ஆற்றிலும் மழையில்லாமல் போனாலும், தண்ணீர் பாய்ந்தோடி மருத நில வயல்களைச் செழிக்கச் செய்துள்ளமையை,

*'வான் பொய்ப்பினும், தான் பொய்யா,*
*மலைத் தலைய கடல் காவிரி*
*புனல் பரந்து பொன் கொழிக்கும்"* (பட்டினம். 5 - 8)

என்னும் பட்டினப்பாலை வரிகளால் தெளியலாம்.

**பொய்கை**



இயற்கையாக அமைந்த நீர் நிலைக்குப் பொய்கை என்று பெயர். நிழல் நிறைந்த பகுதிகளில், வெயில் படாமல் தானே ஊற்றெடுக்கும் நீர் நிலை பொய்கை எனப்படுகிறது. இந்நீர் குளிர்ச்சியாக இருக்கும் என்பதால், குளிர்ச்சியின் தன்மையை உணர்த்த பொய்கை நீரை உவமையாகக் கூறுவர். புறநானூற்றுப் பாடல் ஒன்று,

*'வள்இதழ் அவிழ்ந்த தாமரை*
*நள்இரும் பொய்கையும் தீயும்ஓர் அற்றே!"* (புறம். பா. 246:14 ரு 15)

எனக் கூறுவதன் வழி அதனை அறியலாம். நீர்நிலைகள் மருத நில வளத்திற்குப் பெரும் துணை புரிகின்றன. மருத நிலத்தின் தண்ணீர் வளத்தின் அடையாளமாகப் பொய்கை இருக்கின்றது. தண்ணீர் செழித்தால்தான் பொய்கையில் நீர் இருக்கும். மருத நிலச் செல்வ வளத்தையும் பொய்கை காட்டி நிற்கின்றது. பலநாள் களவில் வந்தொழுகிய தலைமகன், தலைவியைத் தந்தை கொடுக்க வரைந்து கொண்டான். அவன் தோழியோ உரையாடுகிற போது தலைவனைக் குளிர்ந்த பொய்கை துறையூரன் என்று குறிப்பு வருகிறது. அதனை,

*"வாழி யாதன் வாழி யவினி*
*வேந்துபகை தணிக யாண்டுபல நந்துக*
*எனவேட் டோளே யாயே யாமே*
*மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத்*
*தண்டுறை யூரன் வரைக*
*எந்தையும் கொடுக்க வெனவேட் டேமே."* (ஐங். பா. 1)

என்னும் பாடலால் அறியலாம். தலைவனின் சிறப்புகளை எடுத்துக் கூறுகிற போது அவனின் அடையாளமாக அவன் ஊர் முன்னிறுத்தப்படுகிறது. அந்த ஊரும் வளமான பூமி என்பதை அங்கு

இருக்கும் நீர் நிலைகள்தான் புலப்படுத்துகின்றன. அவ்வாறு மருத நிலத்தலைவன் செல்வச்செழிப்பானவன் என்பதை பொய்கை என்ற சொல்லால் அடையாளப்படுத்துவதன் வழி மருத நிலத்தின் நீர்வளம் அறிய வருகிறது.

தலைமகள் தன் குறியிட மாற்றத்தைத் தோழி வழியே தலைவனுக்குக் கூறுகிற பாடலொன்று நீர் நிலைகள் பற்றிய பல செய்திகளைப் பதிவு செய்துள்ளது.

***"ஊர்க்கும் அணித்தே பொய்கை பொய்கைக்குச்***
***சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே***
***இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்***
***துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்***
***கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்***
***ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே."*** (குறுந். பா. 116)

என உரைக்கின்றாள். தலைவனே, பொய்கை! ஊருக்கும் அருகிலுள்ளது, சிறிய காட்டாறு அப்பொய்கைக்குத் தூரமன்று அண்மையிலுள்ளது. அங்குள்ள சோலை அப்பொய்கையிலும் ஆற்றிலும் உணவை ஆராய்கின்ற வெள்ளிய நாரைகளை அன்றி வேறு எவ்வுயிரும் நெருங்கல் ஒழிந்ததாகும். நாங்கள் எமது கூந்தலுக்கு இட்டுப் பிசைவதற்கான எருமண்ணைக் கொண்டு வருவதற்காக அங்கே செல்வோம். பெரிய பேதைமையையுடைய தலைவி அங்கும் வருவாள் எனக் கூறுகின்றாள். இதில் ஊர் அருகே உள்ள பொய்கை குறித்தும், பொய்கையின் நீர் வளத்திற்குக் காரணமான காட்டாற்று வெள்ளம் குறித்தும், பொய்கையில் பலநாட்கள் தண்ணீர் இருப்பதால் அங்கு மீன்கள் நிரம்ப உண்டு என்பதும், அவற்றை உண்பதற்காக நாரைகள் இருக்கும் என்பதும் உணர்த்தப்பட்டுள்ளன. எருமண் என்பது பெண்கள் குளிக்கின்ற போது கூந்தலில் இட்டுப் பிசைக்கின்ற பொய்கை வண்டல் மண்ணாகும். இப்பாடல் வழி பொய்கையின் வளம் புலப்படுள்ளது.

**நீர்ப் பாசனம்**

வேளாண் பாசனத்துக்குத் தேவையான ஆற்று நீர் வாய்க்கால் வழியாக ஓடி வயல்களில் பாய்ச்சப்படுகின்ற அறிவுத் திறம் தமிழர்களுக்குப் பழைமையானது. வாய்க்கால் வழியாக ஓடுகின்ற நீரைத் தேவைப்படும் இடங்களில் வாய்க்கால்களின் குறுக்கே சிறு தடுப்புகளை (அணைகளை) ஏற்படுத்தி நீர்ப் பாய்ச்சுகின்றப் போக்கை அகநானூறு விவரிக்கிறது. உழவர்கள் நெற்பயிரை உடைய தம் வயல்களில் காஞ்சி மரத்தின் சிறு துண்டுகளை நட்டு, இனிய சுவைமிக்க கரும்பின் சிறந்த பல கழிகளைக் குறுக்கே நெருக்கமாக வைத்து அடைத்து அணையாகக் கோலி, அப்பள்ளங்களில் நீரைத் தேக்கிப் பாய்ச்சுவர். இதனை,

***"……கலிமகிழ் உழவர்***
***காஞ்சிஅம் குறுந்தறி குத்தி, தீம்சுவை***
***மென்கழைக் கரும்பின் நன்பல மிடைந்து***
***பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி***
***வருத்திக்கொண்ட வல்வாய்க் கொடுஞ்சிறை***
***மீதுஅழி கடுநீர் நோக்கி……….."*** *(அகம். பா. 346: 5 - 10)*

என்று அகநானூற்றின் வழி அறியலாம். செழியன் என்னும் மன்னன் பெரிய குளத்தை அமைத்து, நீர் வழிந்தோடுவதற்காக மடையும் அமைத்துள்ளான். அம்மடையின் வழி வயல்களுக்கு நீர்ப் பாசனம் செய்த வரலாற்றை நற்றிணையின் பாடல் பதிவு செய்துள்ளது. அதனை,

***“புல்லேன் மகிழ்ந புலத்தலும் இல்லேன்***
***கல்லா யானை கடும் தேர் செழியன்***
***படை மாண் பெரும் குள மடை நீர் விட்டு என***
***கால் அணைந்து எதிரிய கணை கோட்டு வாளை***
***அள்ளல் அம் கழனி உள்வாய் ஓடி***
***பகடு சேறு உதைத்த புள்ளி வெண் புறத்து***
***செம் சால் உழவர் கோல் புடை மதரி***
***பைம் கால் செறுவின் அணை முதல் பிறழும்***
***வாணன் சிறுகுடி அன்ன என்***
***கோள் நேர் எல் வளை நெகிழ்த்த நும்மே”*** *(நற். பா. 340)*

என்னும் வரிகளால் அறியலாம். மேலும், நீர்ப் பாசனம் மேற்கொண்டு உழுகின்ற திறத்தையும், மீன் வளத்தையும் அப்பாடல் விவரித்துள்ளது.

**நீர்த்துறை தெய்வங்கள் குறித்த நம்பிக்கை**

நீர்த்துறைகளில் தெய்வங்கள் உறைந்திருக்கும் என்று மருத நில மக்கள் நம்பியுள்ளனர். குறுந்தொகையின் பாடல்,

***“துறை எவன் அணங்கும், யாம் உற்ற நோயே?***
***இறையழிப் புதுப்புனல் பாய்ந்தெனக் கலங்கி”*** *(ஐங். பா. 53:1 ரு 2)*

என நீர்த்துறை தெய்வத்தைப் பாடியுள்ளது. நீரில் உறைந்திருக்கும் தெய்வம் அங்குக் குளிக்கும் இளம் பெண்களை அச்சுறுத்தித் துன்புறுத்தும் என்றும் மருத நில மக்கள் நம்பியுள்ளனர் என்பதை,

***“உண்டுறை அணங்கு இவள் உறை நோய்யாயின்***
***தண்சேறு களவன் விரிக்கும் ஊரற்கு”*** *(ஐங். பா. 28 : 1 ரு 2)*

எனப் பேசியுள்ளது. அதனால் அத்தெய்வங்களுக்குப் படையலிட்டு அமைதிப்படுத்தி யுள்ளமையையும் சங்க மருதப் பாடல்கள் பேசியுள்ளன.

**புனலாடு விழா**

ஆற்றில் புது வெள்ளம் வரும்போது அதனைக் காண செல்லும் மக்கள் அந்நீரில் விளையாடுவர். அதனைப் புனலாடல் என்பர். கழிப்பு மிக்க மருத நிலத்தலைவன் தன் மனைவியோடு, காதற் பரத்தையதோடு அப்புதுப்புனலில் விளையாடுவான். இச்செய்தியை மருதப் பாடல்கள் பலவிடங்களில் பேசியுள்ளன. புனலாடிய ஆட்டனத்தி சுழலில் சிக்கிக் காவிரி அடித்துச் சென்றமையைச் சங்க பாடல்கள் பல பேசியுள்ளன. அகநானூற்றின் மருதப் பாடல்கள் (76, 236, 376, 399) அச்செய்தியைப் பதிவு செய்துள்ளன. தலைவன் பரத்தையோடு வேழக்கரும்பாலான தெப்பத்தில் களிறும் பிடியம் போல் முகமலர்ச்சியுடன் புனலாடியதை,

***“பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்***
***கழை நிலை பெறாஅக் காவிரி நீத்தம்,***

***குழை மாண் ஒள் இழை நீ வெய்யோளொடு,***
***வேழ வெண் புணை தழீஇ, பூழியர்***
***கயம் நாடு யானையின் முகன் அமர்ந்தாஅங்கு,***
***ஏந்து எழில் ஆகத்துப் பூந் தார் குழைய,***
***நெருநல் ஆடினை, புனலே”*** *(அகம். பா. 6: 5 - 11)*

என விவரிக்கின்றது.

**அலவனாடல்**

அலவன் - நண்டு. நண்டுகள் வளம் மிக்க நீர்நிலைகளில் நிறைந்திருக்கும். மருத நிலப் பெண்கள் நண்டுகளைப் பிடித்து, அலைத்து விளையாடுவது அக்கால மரபாக இருந்துள்ளது. இதற்கு, ஷஅலவனாட்டல்' என்று பெயர். மருத நிலம் மட்டுமல்லாது, நெய்தல் நிலத்திலும் இவ்வழக்கம் இருந்துள்ளமையை அறிய முடிகிறது. (சு.சிவகாமசுந்தரி, சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப. 34) இவ்வலவன் ஆடலை,

***“முள்ளி வேர் அளை களவன் ஆட்டி***
***பூ குற்று எய்திய புனல் அணி ஊரன்”*** *(ஐங். 23:1 ௫ 2)*

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

**மழைச் சடங்கு**

மழையின் தேவைக் கருதியே மழை தெய்வமான இந்திரனுக்கு மருத நிலத்தார் விழா எடுத்துள்ளனர். அத்தகைய மழைச் சடங்கை மருத நிலத்தார் மேற்கொண்டமையை பரிபாடல் பதிவு செய்துள்ளது. சங்கு, சிப்பி போன்ற பொருட்களுக்கு நீரை வரவழைக்கும் ஆற்றல் இருப்பதாக மருத மக்கள் நம்பினர். சங்கு, சிப்பி, நண்டு, இறவு, வாளை போன்றவற்றைக் கையால் பிடித்து மீண்டும் ஆற்று நீரில் இட்டு, 'விளைக, பொலிக' என்று வணங்கியுள்ளனர். இவ்வாறு சடங்கு செய்தால் மழைப் பெருகி ஆற்றில் நீர் வற்றாமல் இருக்கும் அதனால் வேளாண்மைச் செழிக்கும் என்று நம்பினர். இதனைப் பரிபாடல்,

***“நத்தொடு, நள்ளி, நடை இறவு, வய வாளை,***
***வித்தி அலையில், “விளைக! பொலிக! ”*** *(பரி. பா. 10: 85 ௫ 86)*

எனப் பதிவு செய்துள்ளது.

**தண்டாங்கோரை**

மருத நிலப் பெண்கள் பூத்தொடுப்பதற்காகப் பயன்படுத்தும் கோரையை, ஷதண்டாங்கோரை' என்பர். இதற்கு, ஷபைஞ்சாய்' எனற பெயருமுண்டு. பெரும்பாணாற்றுப்படை,

***“பஞ்சாய்க்கோரை பல்லிற் சவட்டிப் புணர்நார்ப்***
***பெய்த புனைகவின் கண்ணி”*** *(பெரும்பாண். 217 - 218)*

எனப் பேசுகின்றது. ஐங்குறுநூறும், பைஞ்சாய்க் கோரையால் தொடுக்கப்பட்ட மாலை அணிந்த பெண்கள் குறித்துப் பேசுகையில்,

***"பைஞ்சாய்க் கோதை மகளிர்க்கு***
***அஞ்சுவல், அம்ம! அம்முறை வரினே"*** *(ஐங். பா. 54: 4 ரு 5)*

என விவரித்துள்ளது.

**தழையுடை**

உழைக்கும் மருத நில மக்களான உழவர் களமர் முதலானோர் மாற்றுடைக்கு வழியில்லாமல் கோவணத்துடனும் அழுக்கான ஆடையுடனும் தான் இருந்துள்ளனர். அழுக்கும் கந்தலுமான ஆடைகள் குறித்துப் பரிசிலரும் பாணருமான புலவர்கள் கூறியுள்ள செய்திகளால் அறியலாம். இது கடையர் கடைசியரான உழைக்கும் மக்களுக்கும் பொருந்தும். வயல்களில் தொளி கலக்குதல், நாற்று நடுதல், களைப் பறித்தல் முதலான பணிகளைச் செய்த பெண்கள் கடைசியர் தழையையே உடையாக அணிந்துள்ளனர். உற்பத்திப் பெருக்கமும் செல்வப் பெருக்கமும் ஏற்பட்டிருந்த காலத்தில் வறுமை என்ற நிலையும் சங்க மருத நிலத்தில் இருந்துள்ளது. அடிமைச் சமூகத்திலும் உழைக்கும் மக்கள் வாழ்க்கையில் வறுமை மிகுதியாக இருந்துள்ளதை அவர்கள் அணிந்திருந்த ஆடைகள் நமக்குக் காட்டி நிற்கின்றன. இவ்வாடை நீர் நிலைகளில் கிடைக்கும் ஒருவகை கோரையால் நெய்யப்பட்டுள்ளமையை அறிய முடிகின்றது.

***"கொண்டைக் கூழைத்தண்டழைக் கடைசியர்***
***சிறமாணெய்தல் ஆம்பலொடு கட்கும்***
***மலங்குமிளிர் செறு"*** *(புறம். பா. 60:1 - 3)*

என்ற புறநானூற்று வரிகள் வயலில்களில் களைப் பறித்த கடைசியர் தழையுடையே அணிந்திருந்தனர் என்பதைப் புலப்படுத்துகிறது. மருத நிலப் பெண்கள் தழையுடை உடுத்தியிருந்தமையை,

***"வாளை வாளின் பிறழ, நாளும்***
***பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்***
***கை வண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த***
***வயல் வெள் ஆம்பல் உருவ நெறித் தழை***
***ஐது அகல் அல்குல் அணி பெறத் தைஇ,"*** *(நற். 1 - 5)*

என்னும் நற்றிணைப் பாடலும்,

***"மணல் ஆடு மலிர் நிறை விரும்பிய ஒண் தழை***
***புனல் ஆடு மகளிர்க்கு புணர் துணை உதவும்***
***வேழ மூதூர் ஊரன்***
***ஊரன் ஆயினும் ஊரன் அல்லன்னே"*** *(ஐங். பா. 15)*

என்ற ஐங்குநுறூற்றுப் பாடலும் பதிவு செய்துள்ளன.

**மீன் பிடித்தல்**

மருத நிலம் நீர் வளம் கொண்டமையால், அங்கிருக்கும் நீர் நிலைகளில் மீன்கள் இயற்கையாகவே வளரும். அம்மீன்கள் வயல்களிலும் கூட இருக்கும் நீர்நிலைகளில் உள்ள மீன்களை உழவர்கள் பிடித்து உண்பதோடு, விற்பனை செய்தும் வந்துள்ளனர்.

***"நெடுங் கொடி நுடங்கும் நறவு மலி பாக்கத்து,***
***நாள் துறைப்பட்ட மோட்டு இரு வராஅல்***
***துடிக்கண் கொழுங் குறை நொடுத்து, உண்டு ஆடி,***

*வேட்டம் மறந்து, துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி*
*ஆம்பல் அகல் இலை, அமலை வெஞ் சோறு*
*தீம் புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து,*
*விடியல் வைகறை இடூஉம் ஊர!"* (அகம். 196 1- 7)

என்னும் பாடல் மீன் பிடித்தலையும் விற்பனையும் பண்டமாற்றுமுறையில் உழவர்கள் நெல் கொடுக்க அதற்குப் பதிலாக மீன்களை வாங்கியுள்ளமையைப் பேசியுள்ளது.

**உணவு**

மருத நிலம் உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்ற நிலமாகும். நீர்நிலைகளில் கிடைக்கும் மீன்கள், உணவில் முக்கிய இடத்தைப் பிடித்துள்ளமையை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. ஷகெடிறு' (கெளுத்தி) என்னும் ஒரு மீனை மருத நில மக்கள் விரும்பி உண்டுள்ளனர். அதனை ஐங்குநுறூற்றுப் பாடல் பதிவு செய்துள்ளது.

*"முள் எயிற்றுப் பாண்மகள் இன் கெடிறு சொரிந்த*
*அகன் பெரு வட்டி நிறைய, மனையோள்*
*அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர!*
*மாண் இழை ஆயம் அறியும் நின்*
*பாணன் போலப் பல பொய்த்தல்லே."* (ஐங். பா. 47)

என்னும் பாடலால் அதனை அறியலாம்.



**முடிவுரை**

மருத நிலம் நீர் வளம் மிக்க பகுதியாக இருந்தமைக்கு அங்கு இயற்கையாக அமைந்திருந்த நீர்நிலைகளே காரணமெனலாம். நீர் நிலைகள் வேளாண்மைக்கு மட்டுமல்லாது மருத நில மக்களின் வாழ்வியலிலும் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தன. அவர்களின் பண்பாட்டுப் பெருக்கத்திற்கும், நாகரிக வளர்ச்சிக்கும் நீர் நிலைகள் அடிப்படையாக இருந்துள்ளன. வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் நீர் நிலைகள் முக்கியத்துவம் பெற்றிருந்தமையைச் சங்க மருதப் பாடல்கள் பதிவு செய்திருக்கின்றன. வேளாண்மைக்கு மட்டுமல்லாது, ஆடை, அணி, உணவு, விளையாட்டு, நம்பிக்கை, விழா என வாழ்வியலில் முதன்மையிடத்தை நீர் நிலைகள் பெற்றிருந்தன என்பது தெளிவாகிறது.

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய மொழிகளில் தமிழ் மொழியின் சிறப்பியல்புகள்

**முனைவர் து. கிருஷ்ணன்**
உதவிப் பேராசிரியர் ,தமிழாய்வுத்துறை எம்.ஜி.ஆர் கல்லூரி
ஓசூர் - 635 130,
d.krishnantamil@gmail.com

*****

'மொழி நம் விழி' என்று பேராசிரியர் மா.நன்னன் குறிப்பிடுவார். அதுபோல நம் கண்ணின் கருமணியை இமை எவ்வாறு மென்மையாகப் பாதுகாக்கின்றதோ அவ்வாறு நாமும் நம் மொழியைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும். காரணம், ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொருவிதமான தனித்தன்மைகள் காணப்படுகின்றன. அவ்வகையில் தமிழுக்கும் உயரிய மேன்மைகளும் பெருமைகளும் உண்டு. அதனை எடுத்துரைக்க வேண்டிய காலக் கட்டாயத்தில் உள்ளோம். மொழியுணர்வு என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் உதிரத்தில் ஊறியிருக்க வேண்டியவை. மொழியை இகழ்ந்தால் அவனுடைய இனத்தை இகழ்ந்ததற்குச் சமமாகும். ஆகவே, மொழி வாயிலாக மனித இனத்தின் மாண்புகளை அடையாளம் காணலாம். இதன் அடிப்படையில் 'தொன் மொழியாம் தமிழ் மொழியின்' சிறப்புகளை இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

**இந்திய மொழிகள்**

இந்தியாவில் மொத்தம் 12 மொழிக்குடும்பங்களைச் சார்ந்த 324 மொழிகள் பேசப்படுவதாக இந்திய மானிடவியல் கணக்கெடுப்பு நிறுவனத்தின் ஆய்வு தெரிவிக்கின்றது. மேலும், இந்தியாவில் மொத்தம் 1300-க்கும் மேற்பட்ட மொழிகளும் கிளை மொழிகளும் உள்ளன எனவும் இந்தியாவை மொழிகளின் 'அருங்காட்சியகம்' எனவும் பேராசிரியர் அ. அகத்தியலிங்கம் குறிப்பிடுகிறார். மொழியியலாளர்கள் இந்தியாவில் வழங்கும் மொழிகளை நால்வகை மொழிக்குடும்பங்களுள் அடக்குவர். அதனை,

1. **இந்தோ ஐரோப்பிய மொழிக்குடும்பம்**
2. **திராவிட மொழிக் குடும்பம்**
3. **ஆஸ்திரோ ஆசிய மொழிக்குடும்பம்**
4. **சீனோ – திபெத்திய மொழிக்குடும்பம்**

இவ்வகையினுள் இந்தோ - ஆரிய மொழிகளே இந்தியாவில் வழங்கி வருவதைக் காண்கிறோம். சமஸ்கிருதம், இந்தி, உருது, வங்காளம், பஞ்சாபி, மராத்தி, குஜராத்தி, ஒரியா, போஜ்புரி, மைதிலி, இராஜஸ்தானி, அஸ்ஸாமி, காஷ்மிரி முதலிய மொழிகள் இவ்வகையினவாகும். ஆஸ்திரோ - ஆசிய மொழிக்குடும்பத்தின் கிளையாகிய முண்டா மொழிகள் இந்தியாவில் வழங்குகின்றன. சந்தாலி, முண்டாளி, ஹோ, கொற்கு போன்ற மொழிகளும் இவ்வகையே சாரும். இவைபோன்று இந்தியாவில் வழங்குகின்ற திராவிட மொழிகள் துளு, படகா, கன்னடம், இருளா, கொடகு, கோடா, தமிழ், மலையாளம், தெலுங்கு, கோண்டி, கோண்டா, குயி, குவி பெங்கோ, முண்டா, கொலாமி, நாயக்கி, பர்ஜி, கடபா, ஒல்லாரி, சில்லூர்,குருக், மால்டோ, பிராகுயி போன்றவையாகும். மேலும், நேபாளி மணிப்புரி முதலிய மொழிகள் இந்தியாவில் வழங்குகின்றன. இவை சீனோ - திபெத்திய மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மொழிகளாகும், ஆனால், தமிழ் மொழி திராவிட மொழிக்குடும்பத்தைச்

சார்ந்தவையாக அமைந்திருப்பது சிறப்புக்குரியவொன்றாகும். இம்மொழிக்குரிய சிறப்பியல்புகளை இனிவரும் பகுதிகளில் காணலாம்.

**தமிழ் மொழியின் சிறப்பியல்புகள்**

தொன்மைச் சிறப்பாலும் இலக்கிய வகைமைச் சிறப்பாலும் தனித்தன்மையாலும் பண்பாட்டுக் கூறுகளாலும் தனித்து நிற்கும் ஒரே மொழி தமிழ்மொழி, இம்மொழி உலகச் செம்மொழிகளுள் ஒன்றாகவும் விளங்குகிறது. இந்தியாவில் உள்ள மொழிகளிலேயே ‘பன்னாட்டு மொழி’ என்ற தகுதியுடைய ஒரே மொழி தமிழ் மொழிதான் என்பதை அனைவரும் அறிந்தவொன்றே. மேலும், அதுமட்டுமின்றி, இலங்கை, சிங்கப்பூர், மலேசியாவில் தமிழ் மொழி ஆட்சி மொழியாக நடைமுறையில் இருந்து வருகின்றது. உலக மொழிகளில் எழுந்த முதல் மொழி மற்றும் இலக்கண நூலாகத் தொல்காப்பியம் திகழ்வதையும் இங்கு அறியத்தக்கதாகும். தமிழறிஞர் பரிதிமாற் கலைஞர் ‘தமிழ் மொழியின் வரலாறு’ எனும் நூலில் இலத்தின் கிரேக்கம், முதலியன போலத் தமிழ்மொழியும் உயர்தனிச் செம்மொழி என்பதனை நிறுவியுள்ளார். மேலும், இவரைப் போல் “எடுக்க எடுக்க குறையாதது கொடுக்க கொடுக்க மாளாதது நம் தமிழ் மொழியின் வளம் - வல்லமை தமிழ் இனியது அழகியல் ஆற்றல் மிக்கது, சொற்செறிவும் பொருட் செறிவும் நாகரிக நயமும் நேர்த்தியும் கொண்டது அது தொன்மையானது தூயது” என்று 1967-இல் சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் அறிஞர் அண்ணா ஆற்றிய உரையின் உண்மையை இன்றும் நம்மால் அறிந்து கொள்ளமுடிகிறது.

அண்ணா எடுத்துரைப்பதற்கு முன்பே 15.03.1951-ஆம் நாளன்று சாகித்திய அகாதெமியின் தொடக்க மாநாட்டில் மத்தியில் மத்திய அரசின் கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்றிருந்த திரு. மௌலானா அபுல்கலாம் ஆசாத் உரையாற்றும் போது ‘தமிழ் வளமான, தொன்மையான இலக்கியங்களைப் பெற்றுள்ளது என்றார். தமிழ் உண்மையாகவே ஓர் உயர்தனிச் செம்மொழி’ என்று அவர் குறிப்பிட்டிருப்பதையும் இங்கு அறிந்துகொள்ளலாம். மேலும், தொல்காப்பியத்தில்

தமிழ் என்ற சொல்லில் ‘த’- வல்லினமும் மி - மெல்லினமும் ழ் - இடையினமும்
ஆகிய மூவின எழுத்துச் சேர்க்கை தமிழ் ஆயிற்று என்பர். மேலும், உலகில் தோன்றிய மொழி தமிழ். மாந்தன் பேசிய முதல் மொழி தமிழ். அது திராவிட மொழிகளுக்குத் தாயாகவும், ஆரியத்திற்கு மூலமாகவும் உலக மொழிகட்கு வேராகவும் இருப்பது. ‘முதல் மொழியாகவும், மொழிக்குடும்பத்திற்கும் உலகக் கிளை மொழிகளுக்குத் தாயாகவும் அமைந்ததாகும். உலக மொழிகள் ஐயாயிரத்துள்ளும் வேர்ச்சொல் காண்பதற்கு எளிதாகவும், மிகுதியாகவும் இடம் தரும் மொழியும் தமிழே. அஃது இயன் மொழி ஆதலால் பெரும்பான்மை சொற்களின் வேர் வடிவை அல்லது வேர் உறுப்பை இன்றும் தாங்கி நிற்கிறது’.. என்கிறார் பாவாணர். மனோன்மணியம் சுந்தரனாரும்,

**‘சீரிளமைத் திறம்வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே’** என்றும்,
**‘கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும்’**
**‘உன் உதிரத்து உதித்தெழுந்தே ஒன்று பல அயிடினும்’**

என்றும் புகழ்ந்து பாடியிருப்பதன் மூலம் நம் மொழியின் ஆழத்தை உணர்கிறோம்.

தமிழ் இலக்கியம் கி.மு நூற்றாண்டுகளிலேயே இலக்கியங்களைக் கொண்டு வானளாவி வளர்ந்திருந்த நிலையைக் காண்கிறோம். அதோடு, உலகிலேயே தமிழை பக்தியின் மொழி என்று தனிநாயக அடிகளார் குறிப்பிடுவதும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். மேலும், வடமொழியான பாணிணியத்திற்கும் முற்பட்ட தொல்காப்பியம் உலகின் முதல் இலக்கண நூலாகத் திகழ்கிறது. பொருள் இலக்கணம் உலகில் வேறுமொழிகளில் காணப்படாத ஒன்று. தமிழ் இலக்கியத்தின் காலத்தை நிர்ணயிப்பது கடினம் என்று இந்தியக் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

**‘இனிமையும் நீர்மையும் தமிழ் எனல் ஆகும்’**

என்று பிங்கல நிகண்டு இயம்பும்.

**‘வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் தாமரையே’**

என்ற கம்பன் தொடரில் தமிழ் இனிமை என்ற பொருளில் எடுத்தாளப்படுகிறது. மேலும், தன்னேரில்லாத தமிழ், என்றும்

**‘இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்**
**விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்’**

என்று தமிழ் விடு தூது தமிழின் பெருமையைப் பகர்கின்றது. மேலும்,

**‘தமிழுக்கும் அமுதென்று பேர்’**

என்றும் பாரதிதாசன் பைந்தமிழ் இனிமையைப் பறைசாற்றுகிறார். அதுமட்டுமல்லாமல், சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே என்றும்,

**‘சொல்லின் உயர்வு தமிழ்ச் சொல்லே’**

என்றும்,

**‘யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்**
**இனிதாவது எங்கும் காணோம்’**

என்று பாரதியார் எடுத்தியம்புவதையும் காணலாம். இச்சான்றுகளைக் கொண்டு தமிழ் மொழியின் சிறப்புகளை அறிந்துகொள்ளலாம்.

**தமிழிலக்கியங்களில் மொழியின் சிறப்பியல்புகள்**

மக்கள் அனைவரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உலகளாவிய பண்பாட்டு எண்ணம் தமிழ் இனத்திற்கே உரியதாகும். எனவேதான்,

**‘யாதும் ஊரே யாதும் கேளிர்’** (புறம். 92)

என்று கணியன் பூங்குன்றனார் குறிப்பிடுகிறார். மேலும்,

**‘பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே’**

என்ற சங்கப் பாடல் உயர்வு தாழ்வு இன்றி மக்கள் அனைவரும் ஒன்றே என்ற வாழ்வியல் சிந்தனையை உணர்த்துகின்றது. மேலும், புறநானூற்று 204 ஆம் பாடல் ’எனக்குக் கொடுத்திடு

என்று இரத்தல் இழிந்தன்று, அவ்வாறு கேட்டார்க்குக் கொடுக்க மாட்டேன் எனக் கூறி மறுத்தல் அவ்விரத்தலைவிட இழிந்தன்று- ஒருவன் இரப்பதற்கு முன்பாகவே அவன் குறிப்பை முகத்திலிருந்து அறிந்துகொண்டு இதனைக் கொள்க எனக் கொடுத்தல் உயர்ந்தது. அவ்வாறு கொடுக்கும்போது இரவலர் அதனைக் கொள்ளேன் என மறுத்தல் அக்கொடைச் செயலைக் காட்டிலும் உயர்ந்தது' என்று இரத்தலுக்கு மிக அழகான கருத்தை முன்வைத்திருப்பது எந்த மொழியிலும் இருக்காது ஒன்று என்றே கூறலாம்.

குறுந்தொகையில், ஒருவர்மீது வைத்திருக்கின்ற நட்பு குறித்து சொல்லும்போது நிலத்தைவிட அகலமானது, வானத்தைவிட உயரமானது, கடலைவிட ஆழமானது என்ற சிந்தனையாழம் மிக்க பாடல் எந்தவொரு இலக்கியத்திலும் இல்லை என்றே கூறலாம். இதனை,

**'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரளவின்றே சாரல் ……….**
**……….. ………………….. ……….**
**………. ………. நாடனொடு நட்பே'** (குறுந் - 03)

என்ற பாடல் உணர்த்தி நிற்கின்றது. மேலும்,

**'கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே**
**வாளோடு முன்தோன்றி மூத்தக்குடி'**

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிடுகிறது.

**'கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே'**

எனச் செல்வத்தினும் கல்வியே பெருமை சேர்ப்பது என்று வெற்றி வேற்கையில் அதிவீரராம பாண்டியன் கூறியிருப்பது மேன்மை தரக்கூடியதாகும். மேலும், முரசு கட்டிலில் ஏறிய மோசிகீரனாரை வாளால் வெட்டிக் கொல்லாது கவரி எடுத்து வீசினான் சேரமான் காவலன் இரும்பொறை. இதைப்போன்று அரிதிற்பெற்ற நெல்லிகனி 'நெடுநாள் வாழச் செய்வது' என்பதை அறிந்த அதியமான் தானுண்ணாது ஔவைக்களித்துத் தமிழ் வளர்க்கச் செய்தான். மேலும், குமணன் எனும் புலவரின் வறுமையைப் போக்க தன் தலையையும் கொடுக்க முன் வந்தான். இத்தகைய சங்க இலக்கியச் செய்திகள் தமிழ்ப் புலமையும் புலவர்களின் பெருமையையும் போற்றுவனவாக அமைந்திருப்பதை இதன் தெளிவாக அறிகின்றோம்.

மேலும், சிலப்பதிகாரம் வழக்குரைக் காதையில் இகதலில்லாத சிறப்பினை உடையவரான இமையவரும் வியப்படையுமாறு புறாவின் துயரினைத் தீர்த்தவன் சிபி சக்கரவர்த்தி, அவனல்லாமலும் கடைவாயில் மணியின் நாவானது அசையப் பசுவின் கடைக் கண்களினின்றும் வடிந்த கண்ணீர் தன் நெஞ்சினைச் சுடத் தானே பெறுதற்கரிய புதல்வனைத் தேர்ச் சக்கரத்திலிட்டுக் கொன்றவன் மனுநீதிச்சோழன் என்று எல்லா உயிரும் சமம் என நினைத்து நீதி வழங்கிய

மன்னர்கள் இருந்தார்கள் என்று வேற்றுமொழி இலக்கியத்திலும் இல்லாத செய்தியை நம் செம்மொழிச் சிலம்பின் கண்ணகி பாத்திர வழி அறியலாம்.

**இந்திய மொழிகள் அல்லாத பிறமொழிகளில் தமிழ் மொழியின் சிறப்பியல்புகள்:**

**பிறமொழி அறிஞர்களின் கூற்று**

அமெரிக்க பேரறிஞர் நோவாம் சாம்ஸ்கி, கால்டுவெல், பேராசிரியர் ஜார்ஜ் ஹார்ட், மாக்ஸ் முல்லர், ஹிராஸ் பாதிரியார், ஸ்காட் எலியட் போன்ற மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துக்களை நோக்கும்போது தமிழ்மொழியின் உன்னதத்தை தமிழ்நாட்டினர் உணரும் வகையில் கூறியிருப்பதை எண்ணத்தக்கதாகும்.

ஆய்வியல் அறிஞராகிய **கால்டுவெல்** தாம் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூலில் ‘திராவிட மொழிகள் அனைத்திலும் உயர்தனிச் செம்மொழியால் நிலைபெற்று விளங்கும் தமிழ் என்றும் ‘தமிழ் மொழி’ செம்மொழியே’ என்றும் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும், ‘தமிழ் மொழி பழமை மிகுந்த சிறப்பு வாய்ந்த மொழி’ என்று அமெரிக்கப் பல்கலைக்கழகப் பேராசிரியர் **ஜார்ஜ் ஹார்ட்** தமிழின் தொன்மையினைச் சிறப்புகளைத் தன்னுடைய அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும், பிரிட்டானிகா கலை களஞ்சியம், இந்திய மொழிகள் அனைத்திலும் பழமையானது தமிழ் இலக்கியம் எனக் குறிப்பிடுவதைக் காணலாம். ‘சிந்து சமவெளியில் புதையுண்ட மொகஞ்சதாரோ மற்றும் ஹரப்பா நகரங்களில் தமிழ் முத்திரைகள் காணப்படுகின்றன’ என **ஹிராஸ் பாதிரியார்** குறிப்பிடுவது போற்றத்தக்கதாகும். **ஸ்காட் எலியட்** என்பவர் ‘தமிழ்நாடு லெமூரியாவில் இருந்தபோது எகிப்து நாடு நீருள் இருந்தது’ என்கிறார். எனவே எகிப்து தோன்றுவதற்கு முன்பே தமிழ்நாடு தோன்றியிருக்கவேண்டும் என்பார். மேலும், சமுத்திர குப்தனின் அமைச்சனாகிய சாணக்கியர் தான் எழுதிய அர்த்தசாஸ்திரத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராகிய கபாடபுரத்தினை ‘பாண்டியக் கபாடம்’ என்று குறிப்பிட்டுள்ளார். அசோகரின் கல்வெட்டுக்களிலும், தமிழ் நாட்டைப்பற்றி அதிலும் சிறப்பாக மூவேந்தர் பற்றிய குறிப்புகள் இருக்கின்றன. கி.மு 150-இல் வாழ்ந்த பதஞ்சலி என்பாரும் காஞ்சிபுரத்தைப் பற்றிக் கூறியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**பிறமொழி இலக்கியங்களில் தமிழின் தாக்கம்**

தமிழர்களின் தலை சிறந்த பண்பாடாகக் கருதப்படும் பொங்கல் திருநாளைக் குறித்து தமிழ் இலக்கியங்களில் மட்டுமல்லாமல் பிறநாட்டு இலக்கியங்களிலும் இடம்பெற்றிருப்பதை இக்கட்டுரை வாயிலாக அறியலாம். அதாவது, சங்க இலக்கியங்களுக்கும் மன்யோசு போன்ற ஜப்பானியக் காதல் பாடல்களுக்கும் இடையேயுள்ள உறவு பற்றிய ஆய்வுகள் தொடக்க நிலையில் உள்ளன என்றும், ஜப்பானிய அறுவடைத் திருவிழாவிற்கும் தமிழகப் பொங்கல் திருவிழாவிற்கும் உள்ள ஒற்றுமைகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன என்று கூறப்படுகிறது. மேலும், பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்ற சேர வேந்தன் பாரதப் போரில் படை வீரர்களுக்கு உணவு கொடுத்தான் என்று புறநானூறும், பதிற்றுப்பத்தும் கூறுகின்றன. சுமித்திரா, பர்மா போன்ற கீழை நாடுகளில் நடைபெறுகின்ற திருவிழாக்கள் தமிழர் திருவிழாக்களைப் போன்று நடைபெறுகின்றன. மேலும், அங்குள்ள கோவில்களில் திருப்பாவை அங்கு நடைபெறும் திருமணங்களும் தமிழர் திருமண முறைப்படியே நடைபெற்று வருகின்றன. பட்டினப்பாலையில் தமிழர் கிரேக்க, உரோம் நாடுகளோடு வணிகம்

நடத்தினர் என்பதை அறிகிறோம். கி.மு.10 ஆம் நூற்றாண்டின் அரசனாகியவர்களைப் பொருட்களும் தமிழ் நாட்டுக் கப்பல்கள் மூலம் கொண்டு செயல்பட்டன. கி.மு.5 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே அரிசியும் மயில் தோகைகளும் சந்தனமும் தமிழ்நாட்டிலிருந்து பாபிலோனியாவிற்குக் கடல் வழியாகச் சென்றன. கிரேக்க நாட்டிற்கு இஞ்சியும் மிளகும் சென்றன. ரோமப் பேரரசன் அகஸ்டஸ் காலத்தில் அந்நாட்டுடன் தமிழ்நாட்டிற்குக் கடல் வணிக உறவு இருந்தது. அக்காலத்து ரோம் நாயணங்கள் தமிழ் நாட்டின் புதைபொருள் ஆராய்ச்சியில் கிடைத்துள்ளன. ரோமர்கள் தமிழ் நாட்டு முத்துகளையும் யானைத் தந்தங்களையும், மெல்லிய ஆடைகளையும் பெற்று மகிழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியங்களின் வாயிலாக அறிகின்றோம்.

திருக்குறளை இலத்தீன் மொழியில் வீரமாமுனிவரும், ஆங்கிலத்தில் ஜி.யு.போப்பும், ஜெர்மன் மொழியில் கிராலும், பிரெஞ்சு மொழியில் ஏரியலும், வடமொழியில் அப்பாதீட்சிதரும் மொழிபெயர்த்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். மேலும், தமிழ்மொழியில் வழங்கும் அறத்துறை இலக்கியங்கள் போன்று உலகின் வேறு எங்கனும் இல்லையென்று மேனாட்டறிஞர்களாகிய பெஸ்கி மற்றும் போப் போன்றோர் வியந்து மொழிவதையும் இங்கு எண்ணத்தக்கது.

புராண இதிகாசங்களிலும் மொழி சார்ந்த பதிவுகள் காணப்படுகிறது. குறிப்பாக, வடமொழியின் முதல் வேதமாகிய ரிக் வேதத்திலேயே 'முத்து' முதலிய தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன. மேலும், தருமனின் இராசூய யாகத்திற்குத் தமிழ் மூவேந்தரும் வந்திருந்தனர் என்றும், திரௌபதியின் சுயம்வரத்திற்குப் பாண்டியன் வந்தான் என்றும், அருச்சுனன் பாண்டிய இளவரசி சித்திரங் கதையை மணந்தான் என்றும் மகாபாரதம் பகர்கின்றது. கி.மு. 5 ஆம் அண்டில் தோன்றிய வால்மீகி இராமாணயத்தில் இடைச்சங்கம் இருந்த கபாடபுரம் பேசப்படுகிறது.

**இந்திய மொழிகளில் தமிழ் மொழியின் பங்கு**

உலக மொழிகள் எத்தனையோ இருந்த போதிலும் 'ழ' என்னும் ஒலியன் தமிழ், மலையாளம் ஆகிய இரு திராவிட மொழிகளில் மட்டுமே தற்போது காணப்படுகிறது. தமிழுக்கே உரிய சொற்கள் பிற மொழிகளில் கலந்திருப்பதையும் நம்மால் காணமுடிகின்றது. அவற்றில் குறிப்பிட்ட சொற்களை மட்டும் கீழ்க்காணும் அட்டவணை வாயிலாக அறியலாம்.

| சொற்கள் | தமிழ் | மலையாளம் | கன்னடம் | பாஜி |
|---|---|---|---|---|
| உப்பு | உப்பு | - | - | சுப்பு |
| பன்றி | பன்றி | பன்னி | - | - |
| செவி | செவி | செவி | - | - |
| ஈ (கொடு) | ஈ | - | ஈ | - |
| தான் | தான் | தான் | - | - |
| பால் | பால் | பால் | - | - |
| இரண்டு | இரண்டு | - | ரெண்டு | - |
| நான் | நான் | நான் | - | - |

| | | | | |
|---|---|---|---|---|
| நாம் | நாம் | நாம் | - | - |

இக்கட்டுரையின் வாயிலாகத் தமிழ் மொழியின் சிறப்பியல்புகளையும், இந்திய மொழி அல்லாத பிறமொழிகளில் தமிழ் மொழியின் தாக்கம் மற்றும் இந்திய மொழிகளில் தமிழ் மொழியின் பங்கு ஆகியவற்றை அறியமுடிகின்றது. இதன் மூலம் தமிழர்களின் தாய்மொழியாகிய தமிழின் மேன்மையையும் அதன் தரத்தையும் நன்கு உணர்ந்துகொள்ளமுடிகிறது.

**துணை நின்ற நூல்கள்**

1. தொல்காப்பியம் (பொருளதிகாரம்), இளம்பூரணர் உரை, கழக வெளியீடு, சென்னை, 1998
2. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1903
3. சிலப்பதிகாரம் மூலமும் அரும்பதவுரையும் அடியாருக்குநல்லாருரையும், உ.வே.சா நிலையம், சென்னை,
4. புறநானூறு மூலமும் உரையும், பதிப்பாசிரியர் குழு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004
5. தமிழ் இலக்கிய வரலாறு, க.கோ.வேங்கடராமன், கலையக வெளியீடு, நாமக்கல்.
6. தமிழ் இலக்கிய வரலாறு, அ. ஜெயம், ஜனகா பதிப்பகம், சென்னை,
7. தமிழ் இலக்கிய வரலாறு, ச. ஈஸ்வரன், நிர்மலா பதிப்பகம், சென்னை.
8. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், டாக்டர் ஜி.ஜான்சாமுவேல், மாதவி பதிப்பகம், சென்னை, 1975.

(☺)(☺)(☺)(☺)(☺)

# சித்தர்களின் பார்வையில் வேமனர்

**முனைவர் ப முனுசாமி**
முதுநிலை ஆராய்ச்சியாளர்
தமிழ்த்துறை
திராவிட பல்கலைக்கழகம்
pmunaswamy63@gmail.com

*****

**முன்னுரை:**

மனிதன், மனிதனாக வாழ்வதற்கும், இடைவிடாத முயற்சியின் பயனாகத் தெய்வத்திற்கு ஒப்பாக உயர்வதற்கும் தேவையான மனப்பயிற்சி முறைகளைச் சிரத்தர்கள் தந்திருக்கின்றனர்.

**மனிதரிலே மரமுண்டு, விலங்குண்டு, பறவையுண்டு**
**மனிதரிலே மனிதருண்டு வானவரும் மனிதராய்**
**வருவதுண்டு**

இந்தப் பொய்யான உடலை வைத்துக் கொண்டு மெய்யான இறைவனை நாடி நிலையான மெய்யாக மாற்றிக் கொள்வதற்கு வழிமுறைகளைச் சித்தர்கள் தங்கள் பாடல்கள் மூலமாகத் தெளிவு செய்கின்றனர். சித்தர்கள் தங்களை ஞானிகாளாக்கிக் கொண்டு மனித சமுதாயம் ஞானமார்க்கத்தில் ஈடுபடத் தேவையான வழிகளையும் உபதேசித்து இருக்கிறார்கள். இதனை

**தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனருளாளே**

என்று திருமூலர் தனது பாடல்வழி உணர்த்துவதைக் காணலாம்.

சித்தர்களிடமிருந்து பலதரப்பட்ட கலைகள் இந்த மனித சமுதாயத்திற்கு வந்துள்ளன. வழிபாட்டு முறை இயற்கை அமைப்பின் இரகசியம் மனத்தின் தண்மை மனித உடலில் உள்ள வல்லமைகள் ஆறு ஆதாரங்கள், எட்டு யோகங்கள், பத்து வகையான சித்திகள் முதலிய பல்வகை ஞானங்களும் சித்தர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

இடைகாட்டுச் சித்தர் நவகோள்களையும் மாற்றி அமைத்ததாக வரலாறு கூறுகிறது. வாழும் காலம் வளமாக அமைவதற்கும் இனிபிறவாமை வேண்டின் அதன்வழி முறைகளையும் சித்தர்களால் கூறப்பட்டுள்ளன. மனதினைக் கட்டுப்படுத்துவது சாதாரண காரியமில்லை. முயற்சியினால் அது முடியும் என்பதைத் தமது பாடல்களால் உணர்த்துகின்றனர் சித்தர்கள், இதனை

**தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பார்கள்**
**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவார்கள்**
**சென்னியில் வைத்த சிவனருளாளே**

என்ற பாடல் வழி அறியலாம். மனப்பூட்டைத் திறப்பதற்கும் பேரின்ப வீட்டைத் திறப்பதற்கும் வழி தெரியாமலம் விதி மீது பழி போடும் மனித சமுதாயத்தைச் சாடியும் பாடியிருக்கிறார்கள் சித்தர்கள்.

**வேமனர் பாடல்களிலும் திருமூலர் பாடல்களிலும் வெளிப்படும் சமுதாய நோக்கு:**

வேமனர் பாடல்களையும் திருமூலர் பாடல்களையும் ஆழ்ந்த கற்பாரும், ஆய்வாரும் அவ்விருவர் பாடல்களும் மனித சமுதாயத்தின் நலத்தையும், வளத்தையும் குறிக்கோளாகக் கொண்டு நிற்பதை உணர்வார்.

உலகியல் வாழ்வை விட்டொதுங்கித் தனித்து வாழ்பவர்கள் என்றும் தம் ஆன்ம விடுதலையே குறிக்கோளாகக் கொண்டு முயல்வோர் என்று சித்தர்களைப் பற்றிக் குறிப்பிடுவர். அவ்வகையில், திருமூலர் வேமனர் பாடல்களையும் நேரடியான தொண்டு செயல்களையும் ஆய்வு செய்வோர் அறியாதவை அறிவில் முயலும் ஆய்வாளர்களாக ஆறமுரைக்கும் ஆன்றோர்களாக சமுதாயச் சீர்கேடுகளைத் துணிந்து சாடும் ஆட்சியாளர்களாக விளங்கியதை காணலாம்.



எல்லா வயையில் சமுதாயத்தின் இடர்களைத் துடைத்திடவும் மக்களின் அறியாமையயை அகற்றி அவர்தம் உள்ளங்களில் விழிப்புணர்வை விதைத்திடவும் பாடுபட்டு பெருமக்களாக அவர்கள் விளங்குகின்றார். அவ்வகையில் அவர்கள் தெளிவு படுத்தி விளக்கியுரைத்து கடவுள் கோட்பாடுகளைச் சமுதாயத்திற்கு அவர்கள் வழங்கும் கொடைகளாகவே கட்டுவது இவ்வியலின் நோக்கமாகும்.

சித்தர்கள் சமுதாயத்திற்குச் செய்த மிகப்பெரிய தொண்டு ஒன்று உண்டு என்றால் அது கடவுள் பற்றிய கொள்கையை விளக்கியது ஆகும். ஆலயங்களில் மட்டும் இறைவன் இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்த காலத்தில் கண் மூடித்தனமாக சம்பிரதாயங்களில் நமது பொழுதையும், பொருளையும் விரயம் செய்து வந்த காலத்தில் மிக அரிய கொள்கையை உலகுக்கு உணர்த்தினார்கள் என்று இரா.மாணிக்கவாசகர் குறிப்பிடுவது ஈண்டு இணைந்து நோக்கத்தக்கது.

இவ்வகையில் திருமூலரது பாடல்களையும் வேமனரது பாடல்களையும் நோக்கும் போது அவர்கள் தொண்டினை அறியமுடிகின்றது. இதனைத் திருமூலர்

**படமாடக் கோயில் பகவற் கொன்றியில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கங்காகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கொன்யீயில்**
**படமாடக்கொயில் பகவற்கததாமே**

என்ற பாடல் மூலம் வலியுறுத்துவதை காணலாம்.

தமிழ்நாட்டில் சமூகநீதிக்காகக் குரல் கொடுத்தவர்கள் சித்தர்கள். அவர்களில் தலையானவராகக் கருதப்படும் திருமூலர் தமது பாடல்களில் பலச் சமூகநீதிக் கருத்துக்களை எடுத்துக் கூறியுள்ளார். திருமூலர் யோகம், மருத்துவம், ரசவாதம் முதலியவற்றில் ஈடுபட்டு இருந்தாலும் சமூக ஏற்றத்தாழ்வுகளைப் போக்குவதற்காகப் பாடல்களாலும் திருமூலர் பாடல்களாலும் தம் எளிய நடையில் மக்கள் மொழியில் அமைந்திருந்த ஆழமான குறியீட்டுத் தன்மையும், தத்துவப் பொருண்மையுடையதாக விளங்கக் காணலாம்.

**சித்தரும், வேமனரும்:**

சித்தர் இலக்கியம் அடிப்படையில் வேதம் மற்றும் பிராமண மரபிற்கு எதிரானது மாற்றுமரபைக் கொண்டது. வேமனர், தமிழ்ச் சித்தர்களைப் போல் யோக நெறியில் ஈடுபட்டவர்.

வேமனரது பாடல்களில் சித்தர் இலக்கியத்தைப் போன்றே மறை ஞானத் தன்மையும் சமூகக் குறைகளில் எதிர்ப்பு உணர்வும் கலந்தே காணப்படுகின்றன. சித்தர்களைப் போல வேமனரும் வேதமரபான மரபுக்கு எதிரான ஒரு மாற்றுச் சிந்தனையைத் தனது பாடல்களில் முன்னிறுத்தியுள்ளார். இத்தன்மையே தமிழ்ச் சித்தர்களையும் வேமனரையும் ஒப்பிடுவதற்கு அடிப்படையாக அமைகிறது.

**மாற்றுமரபும் விமர்சன பிரக்ஞையும்:**

நவீன சமூகவியல் அறிஞர்கள் “மாற்றுமரபு (Cornets Tradition) என்ற ஓர் புதிய கருத்தாக்கத்தை உருவாக்கியுள்ளனர். சாதாரண மக்களை விளக்கி நிற்கும் வேத பிராமண உயர்ந்தோர் மரபுகளுக்கு எதிராக விளங்கும் சிந்தனை மரபே மாற்றுமரபு என்று சுட்டப்படுகிறது. மாற்று மரபுச் சிந்தனையில் விமர்சன பிரக்ஞை (Critical Consciousness) ஒரு முக்கியமான கூறாக விளக்கப்படுகிறது. இந்த விமர்சன உணர்வை வேமனரிடமும் நாம் காணலாம். இந்தப் பின்னணியில் சித்தர்களின் சிந்தனைகளை ஒப்பிடலாம்.

**சாதி எதிர்ப்பு:**

சமூகத்திஉல் மேல்தட்டு மக்களின் நலன்களுக்காக ஏற்படுத்தப்பட்ட சமத்துவமற்ற சாதி அமைப்பைச் சித்தர்களும் வேமனரும் எதிர்க்கின்றனர். மேலும், அந்த அமைப்பிலுள்ள முரண்களைப் பகுத்தறிவு பூர்வமாகக் கேள்விக்குள்ளாக்குகின்றனர்.

பாம்பாட்டிச் சித்தர் சாதிப்பிரிவனைக் குறித்து:

**சாதிப்பிரிவிலே தீட்டுவோம்**
**சந்தைவெளியினிற் கோல் நாட்டுவோம்**

என்று கூறுகிறார். குதம்பைச் சித்தரும் தனது பாடல்களில் சாதியினைக் குறித்து கூறும் போது சாதி என்பது கட்டுச் சொல் கற்பனை என்று குறிப்பிடுகின்றனர்.

சிவவாக்கியர் சாதியினைப் பற்றிக் கூறும் போது சாதிமுத்திரை எலும்பு, தோல், சதையில் காணப்படுகிறதா? என்பது கோபக்கனலோடு கேட்கின்றார்.

வேமனரும் தமிழ்ச் சித்தர்களைப் போன்று மனித இனம் கருவில் உற்பத்தியாதல், பிறத்தல் ஆகிய பிறப்பு முறைகளில் ஒரே தன்மையில் விளங்குவதால் மனிதர்களுக்கு இடையில் குல தோத்திர வேறுபாடுகள் இல்லை என்கிறார். ஆணும், பெண்ணும் கூடுவதால் பிண்டம் உற்பத்தி ஆகிறது. இதில் உயர்குலம் தாழ்ந்த குலம் எங்கே இருக்கிறது? என்று கேட்கிறார்.

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்:**

வேமனரும், சித்தர்களும் சமத்துவத்தை முன்னிறுத்தி வேதபிராமண மரபை நிராகரிப்பவன் மூலம் தாங்கள் வாழ்ந்த சமூகத்தின் மீது புறவயமான விமர்சன உடையவர்களாக விளங்குகின்றனர். அவர்கள் கடவுள் என்ற ஒன்றை முழுமுதற் பொருளாக ஏற்றுக் கொள்கிறார்கள். ஆனால், அதே சமயத்தில் பல தெய்வங்களை கொள்கையை அடைவார்கள், மறுக்கிறார்கள். ஒன்றே தெய்வம் என்கிறார்கள்.

**மெய்த்தேவன் ஒன்றென்று வேண்டாத பன்மதம்**
**பொய்த்தேவனைப் போற்றுமுடி சூதம்பாய்**

என்கிறார் குதம்பைச் சித்தர். திருமூலர் தமது திருமந்திர நூலில் ஓரிறைக் கொள்கையினை உறுதிப் படுத்துகிறார். இதனை

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்**

என்ற பாடல்வழி அறியலாம். சிவவாக்கியர் உங்கள் தெய்வம் எங்கள் தெய்வம் என்று பேதங்கள் இல்லை. இது உங்களுடைய பேதமே அன்றி உண்மையில் இரண்டு தெய்வங்கள் இல்லை எனத் தெய்வங்களிடையே பேதம் ஏற்படுவதைக் கண்டிக்கின்றார்.

சித்தர்களைப் போன்றே வேமனரும் ஓர் இறைக் கொள்கையில் அழுத்தமான நம்பிக்கை வைத்துள்ளார். இதனைப் பின்வரும் அழகான உவமைகள் நிறைந்த அவரது பாடல்வரிகள் உணர்த்துகிறது.

**பசுக்களின் நிறங்கள் வேறானாலும்**
**பாலின் நிற மொன்றே**
**பூக்களின் இனங்கள் வேறானாலும் பூசை ஒன்றே**
**தரிசனங்கள் வேறானாலும் தெய்வம் ஒன்றே.**

இவ்வாறு சமயச் சார்பற்ற நிலையில் இறைவனை ஒருவனாகக் குறிப்பிடும் வேமனரும், திருமூலரும் பிற சித்தர்களும் அந்த இறைவனைச் சிவன் என்ற பெயரால் குறிப்பிடுகின்றார்.

கடவுள் வாழ்த்தில் சிவகவிஞர்களுக்கும், சிவனுக்கும் வணக்கம் தெரிவிக்கும் வேமனர் கவிதைகளில் சிவன், சிவபூசை, லிங்கம் என்பன பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

(☺)(☺)(☺)(☺)(☺)

# நாஞ்சில் நாட்டுப் பொருள்சார்ப் பண்பாடு

**முனைவர் சிஜே பிரசில்லா சகாயமேரி**
உதவிப்பேராசிரியர் & தலைவர். தமிழ்த்துறை,
டாக்டர் எஸ்.என்.எஸ். இராஜலட்சுமி.கலை அறிவியல் கல்லூரி (தன்னாட்சி).

*****

இந்தியப் பண்பாடு என்பது பல பண்பாடுகளின் கலவையாகும். அதாவது பல்வேறுபட்ட பண்பாடுகள் கொண்டது. அதாவது இந்தியப் பண்பாடு என்றால் பல்வேறுபட்ட பண்பாடுகள் என்பது பொருள். அவ்வகையில் பார்க்கும்போது இந்தியாவில் ஒவ்வொரு வட்டாரமும், ஒவ்வொரு மொழி பேசிப்பகுதியும் அதற்கென தனியானதொரு பண்பாடு கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. தமது பண்பாடு பிற வட்டாரப் பண்பாட்டினின்றும் வேறுபட்டிருந்தாலும் பிற வட்டாரப்பண்பை மதிப்பது அதை அங்கீகரிப்பது என்பது இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் மக்களின் சிறப்பம்சமாகும். இவ்வாறு பிற பண்பாட்டைப் பார்க்கும் அதே வேளை தமது பண்பாடு எத்தகையது அது எவ்வாறு உள்ளது என்பதையும் கவனிப்பது நமது கடமையாகும். அவ்வகையில் பரந்துவிரிந்த இந்தியாவில் நாஞ்சில்நாட்டுப் பகுதியின் பண்பாடு என்ன என்பதை விளக்கும் முகமாக அமைவது இக்கட்டுரை. அதற்கான தரவுகளை நாஞ்சில்நாடனின் புதின இலக்கியங்களில் காணப்படும் நாஞ்சில் நாட்டுப் பொருள்சாராப் பண்பாட்டுப் பதிவுகளை எடுத்துக் கொள்கிறது.

இலக்கியங்களில் வெளிப்படும் வாழ்வியல் பதிவுகள் அந்தந்த மக்களுடைய பண்பாட்டை நேரடியாகவோ மறைமுகமாகவோ தெரிவிப்பதாய் உள்ளன. பண்பாடு என்பதற்கு பெருமை, சான்றாண்மை ஆகியவற்றில் இருந்து வழுவாது ஒழுகல் என பரிமேலழகர் விளக்கமளிக்கிறார். மேலும், -இயல்பையறிந்து நடக்கும் நற்குணம்- என்று சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி விளக்குகிறது. பழமையைப் போற்றுதலும் புதுமைகளை வரவேற்பதும் ஒரு மொழியில் வளர்ச்சி நிலையை நிர்ணயிக்கிறது.

அவ்வகையில் பண்பாட்டின் அமைப்பினை பொருள்சார் பண்பாடு (Material Culture) பொருள்சாரா பண்பாடு (Non - Material Culture) என்று இரு வகைகளாகப் பிரிக்கலாம் என பக்தவத்சல பாரதி கூறுகிறார். மக்கள் தங்கள் தேவைகளுக்காகச் செய்துகொள்ளும் அனைத்துவகை பொருள்களும் பொருள்சார் பண்பாட்டில் சேரும் . பொருள்சாராப் பண்பாட்டில் பொருள் வடிவம் பெறாத அனைத்துக் கூறுகளும் இடம்பெறும் சான்றாக கருத்துக்கள், பழக்க வழக்கங்கள், நெறிமுறைகள், அறிதிறன், அழகியல் சிந்தனைகள், கற்பனை நடிப்பு, . இலக்கியங்கள், பாடல்கள், இசை, நடனம், உணவு நம்பிக்கைகள் போன்ற பொருள் வடிவம் பெறாத அனைத்தும் இடம்பெறும். அவ்வகையில் நாஞ்சில்நாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள் அவர்களது பண்பாட்டை எடுத்துரைப்பனவாக அமைந்துள்ளதைக் காணலாம்.

**பழக்க வழக்கங்கள்**

ஒரு நாட்டின் பண்பாடு, கலாச்சாரம், மரபு போன்ற கூறுகளில் மாற்றங்களும் ஏற்றங்களும் நிகழும். வேறோர் அண்டை நாட்டின் பண்பாட்டுத் தாக்கத்தால் இம்மாற்றம் நிகழும். ஆங்கிலேயர் வருகையால் இந்திய நாட்டில் அத்தகைய மாற்றங்கள் திணிக்கப்பட்டன. அம்மாற்றம் பண்பாடு, கலாச்சாரம் மரபு

போன்றவற்றோடு பழக்க வழக்கங்களிலும் ஏற்பட்டுவிடுகின்றது. மாற்றங்களைச் சித்திரிக்கும் படைப்பாளர்கள் இன்றும் மாறாமல் நிலைபெற்று நிற்கும் பழக்க வழக்கங்களைக் கருத்தியலாகக் கொண்டு படைத்து வருகின்றனர்.

'தலைமுறை, தலைமுறையாக மக்கள் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும், பழக்க வழக்கங்களும் மரபுகள் சார்ந்த ஒரு தொகுதியே பண்பாடு என்பார் இலப்பியர் '', (வாழ்வியல் கலைக்களஞ்சியம், தொகுதி 12 : 16) என்ற விளக்கத்தால் தலைமுறை தலைமுறையாகக் கடைபிடித்துவரும் பழக்க வழக்கங்களே பண்பாடாக மாற்றம் பெறுவதை அறியமுடிகிறது. ஒவ்வொரு வட்டாரத்திலும் வாழும் மக்கள் கடைபிடித்து வரும் பழக்க வழக்கம் பண்பாடாக மாற்றம் பெறுவதால் பழக்க வழக்கத்தை விட்டுவிடாமல் கடைபிடித்து ஒழுக வேண்டியதன் அவசியத்தைப் படைப்பாளர்கள் நன்கு உணர்ந்து தங்கள் படைப்புகளில் வெளிப்படுத்துகின்றனர்.

பழக்கம் - வழக்கம் என்ற இரண்டு சொற்களும் தனித்தனிப் பொருள் உடையவை. இதனை, தனிமனிதனிடம் இயல்பாக அமைந்த நடத்தையைப் பழக்கம் என்று கூறலாம். ஒரு சமூகத்தின் மன உணர்வோடு கூடிய நடத்தை வழக்கம் என்று கூறலாம் இந்த தனிமனித நடத்தையை, வழக்கத்தை நாஞ்சில்நாடன் தனது புதினங்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

**''பண்புடையார் பட்டுண்டு உலகம்** '' (குறள் : 996) என்ற குறளின் நெறியை நன்கு உணர்ந்த படைப்பாளர்களது சமூக அக்கறையை அவர்களது படைப்பால் அறியமுடிகிறது. அதே சமூக அக்கறை கொண்ட நாஞ்சில்நாடனும் நாஞ்சில்நாட்டுப் பழக்க வழக்கத்தின் வாயிலாக அந்நாட்டுப் பண்பாட்டினைத் தமது படைப்புகளில் நிலைநாட்டியுள்ள திறம் சிறப்பிற்குரியது.

**நாஞ்சில் நாட்டின் பழக்க வழக்கங்கள்**

நாஞ்சில்நாட்டில் நிலவிவரும் பழக்க வழக்கங்களைத் தனது புதினங்களில் நாஞ்சில்நாடன் பதிவு செய்கிறார். காலங்காலமாக இருந்துவரும் பழக்க வழக்கங்களைத் தனது புதினப்பாத்திரங்களின் செயல்கள் மூலம் உணர்த்துகிறார்.

தலைகீழ் விகிதங்கள் புதினத்தில் நாஞ்சில்நாட்டு மக்களிடையே படித்த இளைஞர்கள் வறுமையில் இருந்தாலும் பணக்காரர்கள் தங்களுடைய பெண்களுக்குத் திருமணம் செய்து வைக்கும் வழக்கம் இருந்துவந்தது. 'மருமக்கள் வழி' என்ற வழக்கமும் இருந்ததைப் பதிவு செய்கிறார். தலைகீழ் விகிதங்கள் தலைமை ஆண் கதாபாத்திரமான சிவதாணு பட்டதாரி. ஆனால் அவனது குடும்பம் வறுமையில் வாடியது. வேறுவழியின்றி பணக்காரப் பெண் பார்வதியைச் சூழ்நிலை காரணமாகத் திருமணம் செய்வதாய் ஆசிரியர் படைத்துள்ளார். இது அவர்களிடையே நிலவி வரும் பழக்கத்தை எடுத்துக்காட்டுகிறது.

'சொக்கலிங்கத்துக்கு அம்மை மருமக்க வழிக் காரியாங்கும் உனக்கென்னா நல்ல மக்க வழியிலே பெண்ணா கிடைக்காது?' (தலைகீழ் விகிதங்கள்: 45) என்ற பகுதி அம்மக்களிடையே இருந்த மருமக்கள் வழிப் பழக்கத்தை உணர்த்துகிறது.

திருமணம் முடிந்தவுடன் 'சட்டரசம்' என்ற சம்பிரதாயம் சடங்கு நடத்தப்படுவதைத் தலைகீழ் விகிதங்களில் எடுத்துக்காட்டுகிறார். இதனை, 'பந்திகளின் பரபரப்பு ஓரளவுக்குக் குறைந்திருந்தது சட்டரசம் சாப்பிடுவதற்கு அவனுக்கு அழைப்பு வந்தது. கல்யாணப் பெண், மணமகனுக்கு உணவு பரிமாறி, அவன் பிசைந்து உருண்டையாக்கித் தருகின்ற கவளங்களைப் பெற்றுக்கொள்வதான சடங்குகள் அது பெண்களின் அரசவை, கேலி, கிண்டல், இரைச்சல்.... ' (தலைகீழ் விகிதங்கள்: 64) என்ற பகுதியின் வழியாக அறியலாம்.

திருமணம் முடிந்தவுடன் வரவேற்பும் அதனைத் தொடர்ந்து சில சடங்குகளும் நடைபெறுவது வழக்கம். திருமணச் சடங்குகள் முடிந்தவுடன் மணமக்கள் பெரியவர்களிடம் வாழ்த்து பெறுவதும், பாலும், பழமும் உண்ணும் வழக்கமும் நாஞ்சில்நாட்டில் நிலவி வருகிறது. பின்னர் 'மறுவீடு செல்லும் வழக்கமும் உண்டு' என்பதையும் தலைகீழ் விகிதங்கள் புதினத்தில் ஆசிரியர் எடுத்துரைக்கின்றார்.



'வரவேற்பு முடிந்ததும் மாலைச் சடங்குகள், நாலுமணிக்குத் தொடங்கிய நலங்கு, பூப்பந்து, பல்லாங்குழியின் தொடர்ச்சியாக நாலாநீர், சுருள், தாரைவார்ப்பு. ' (தலைகீழ் விகிதங்கள்: 65) என்ற பகுதி வழி அம்மாக்களிடையே நலங்கு, பூப்பந்து, பல்லாங்குழி ஆகிய விளையாட்டுக்கள் இடம் பெற்று வருகிறது என்பதை இனங்காணலாம். மேலும் நாலாநீர் சடங்கு, ஏழாம் நீர் சடங்கு ஆகிய சடங்குகளும் திருமணத்திற்குப் பின் நடைபெற்றன என்பதும் உணர்த்தப்படுகிறது. குழந்தை பிறந்த எட்டுநாள் கழித்து செய்யும் சடங்கினை 'பாண்ட சுத்தி' என்பர். இவ்வழக்கம் நாஞ்சில்நாட்டில் நிலவி வருவதை, 'எட்டுநாள் கழித்துப் பாண்ட சுத்தி' (தலைகீழ் விகிதங்கள்: 180) என்பதால் தெளியலாம். பண்டைய தமிழர்களிடையே சகுனம் பார்க்கும் பழக்கம் இருந்து வந்தது. இதனை 'விரிச்சி கேட்டல் ' என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது,

**படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி**
**புடைகெடப் போகிய செலவே புடைகெட**
**................. கொடையென**
**வந்த ஈரேழ் வகையிற்று ஆகும்.** (தொல். புறம் : 61)

என்ற நூற்பா வழி அறியலாகிறது.

நாஞ்சில்நாட்டு மக்களிடையேயும் சகுனம் பார்க்கும் பழக்கம் இருக்கிறது என்பதை மாமிசப்படைப்பு புதினத்தின் வழி காணலாம்.

'மாடுபிடிக்க, உழவில் மாட்டைக்கட்ட, புதுக்கலப்பை இறக்க, வீட்டுக்கு அஸ்திவாரம் போட, நிலைவிட, பால்காய்ச்ச நல்லப்பம் விதைக்க, நட, நாற்றுப்பாவ, நாட்கதிர் கொள்ள, அறுக்க, வித்து உணத்த....' (மாமிசப்படைப்பு : 20) என்பதிலிருந்து, விவசாயத் தொழில் முதலாக வீடுகட்டுதல், நற்காரியங்கள், விழாக்கள் என அனைத்திற்கும் சகுனம் பார்க்கும் பழக்கம் இருப்பதை உணரலாம். மேலும் ஜாதகம் கணிப்பது, பலன் சொல்வது, நிச்சயதாம்பூலத்திற்குச் 'சார்த்து எழுதுவது, சடங்குகளுக்கு நேரம் பார்த்தல், பேறு முடிந்த பெண்ணை மாப்பிள்ளை வீட்டிற்கு அனுப்ப என எல்லாவற்றிற்கும் நல்லநேரம் பார்க்கும் பழக்கமும் இருப்பதை மாமிசப் படைப்பு புதினத்தில் பதிவு செய்கிறார்.

கோவில் தீபாராதனை முடிந்தவுடன் மஞ்சள்காப்பு, திருநீறு வழங்கும் வழக்கமும் உண்டு. அதோடு, 'ஊர்வகைச் சிறப்பானாலும், தனியார் சிறப்பானாலும் பிரசாதம் விளம்பி முடிந்தபிறகு, செம்புத்தட்டு ஒன்றில் வெற்றிலை பாக்கு, மூன்று பழங்கள், ஒரு தேங்காய் முறி, மஞ்சள் காப்பு திருநீறு, துண்டுப் பூச்சரம், கணிசமாக பிரசாத வகைகள் வைத்த முதலடி வீட்டுக்குப் போகும், (மாமிசப்படைப்பு: 44) என்ற பகுதி, ஊரினுடைய முதலடிக்குச் செய்யும் மரியாதையையும் பழக்கத்தையும் எடுத்துரைக்கிறது.



நாஞ்சில்நாட்டு மக்களிடையே ஒரு பெண்ணுக்கு அடுத்தடுத்துக் கருத் தாங்காமல் போகுமானால் அதனை அடுத்து பிறக்கும் குழந்தைக்கு மூக்குக் குத்திவிட்டால் அக்குழந்தை இறக்காமல் இருக்கும் என்ற நம்பிக்கை உண்டு,

'சூல்கள் மூன்று முறிந்துபோன துயரத்தில் நான்காவது சூல் மூக்கைக் கோறைப் படுத்திப் போட்டாலாவது தங்கிக்கிடப்பான் என மூக்குக் குத்திவிட்டிருந்தனர். எட்டாம் வகுப்பு படிக்கும் வரைக்கும் மூக்கில் வளையம் கொடுத்துத் திரிந்தான். பிறகு அடம்பிடித்து ஆதாளி செய்து வளையத்தை முறித்து எடுத்தார்கள், ' (எட்டுத்திக்கும் மதயானை :2) என்ற வரிகள் மூலமாக அம்மக்களிடையே மூக்குத்தி குத்தி விடும் பழக்கம் நிலவி வருவதைக் காணமுடிகிறது.

இறந்தவர்களுக்கு ஆண்டுதோறும் வழிபாடு செய்யும் பழக்கம் நாஞ்சில்நாட்டிலும் உண்டு,

'அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இன்று வைத்துக் கொடுக்கிறார்கள் என்று தெரிந்தது சுடலையாண்டிக்கு. ஆண்டுக்கு ஒரு முறை இது வழக்கம். செத்துப்போனவர்களின் நினைவாக,' (என்பிலதனை வெயில் காயும் : 1) என்பதால், 'வைத்துக் கொடுக்கும் பழக்கம் அம்மக்களிடையே இருந்து வருகிறது என்பதை உணரமுடிகிறது. மேலும் நாஞ்சில்நாட்டில் விரதம் இருக்கும் பழக்கம்

உள்ளது. குறிப்பாகக் கடைசி வெள்ளிக்கிழமையன்று விரதம் மேற்கொள்ளுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை,

'இன்று தனக்குக்கூட விரதம் என்பது அவனுக்கு நினைவு வந்தது. நேற்று தோசைக்குப் போட்டு சாயங்காலம் ஆத்தா அரைப்பதைக் கண்டு நாளை ஒடுக்கத்திய வெள்ளிக்கிழமை என்றுதான் நினைத்தான். சாதாரணமாகவே அமாவாசை, கடைசி வெள்ளிக்கிழமைகளில் தாத்தாவுக்கு விரதம். ஆனால் விரதம் மட்டும் முடக்கம் கிடையாது,' (என்பிலதனை வெயில் காயும் :5 - 6) என்ற வரிகளில் விரதமிருக்கும் பழக்கம் நாஞ்சில்நாட்டு மக்களிடையே நிலவிவருவதை அறியலாம்.

வளைகாப்பு செய்து, குழந்தை பிறந்த பின்னர் பெண்களுக்குச் சடங்குகள் செய்த பின்னரே வீட்டின் எல்லா இடத்திலும் செல்லும் வழக்கமும் இருந்து வருகிறது.

**'மதனிக்குச் சீமந்தம் பெரியப்பா மகளுக்குச் சட்டிபானை தொடுதல்.... '** (என்பிலதனை வெயில் காயும் : 68) என்ற வரிகளின் மூலம் வளைகாப்பு செய்யும் வழக்கமும், சட்டிபானை தொடுதல் என்ற வழக்கமும் நிலவுவதை உணரலாம். மேலும், பெண் பூப்படைந்தவுடன் 'தலைக்குத் தண்ணீர் விடுதல் ' என்ற பழக்கமும் இருப்பதை,



'பக்கத்து வீட்டுப் பையனுடன் தலைக்குத் தண்ணீர் வருகிற வீட்டுக்குப் போனான் சுடலையாண்டி,' (என்பிலதனை வெயில் காயும் : 69) என்ற வரிகள் எடுத்துக்காட்டுகின்றன.

நாஞ்சில்நாட்டில் பொருளாதார நிலையில் உயர்ந்துள்ள வெள்ளாளப் பெண்கள் அவ்வூரிலேயே வறுமையில் வாடுவோருக்கு அவர்களிடம் இருந்து பணயமாகப் பொருட்களைப் பெற்றுக் கொண்டு கடன் வழங்கும் பழக்கம் நிலவிவருகிறது.

'ஆண்டுக்கு -எழுபத்தைந்து ரூபாய் எழுபத்தைந்து சதமானம் வட்டி பணயப் பாத்திரங்கள் பல மீளுவதில்லை. நாஞ்சில்நாட்டுப் பண்ணையார் பெண்டுகளுக்கு இப்படி (பணயம்) பிடிக்கும் வழக்கம் உண்டு. பெரிய குத்துப் போணி, செம்பு, அண்டா, பானை, உருளி என்றால் கொண்டாட்டம், '

(என்பிலதனை வெயில் காயும் : 156) என்ற பகுதியால், பண்ணையார் வீட்டுப் பெண்கள் அடகுக்குப் பாத்திரங்கள் பெறும் பழக்கமும் உண்டு என்பதை உணரலாம்.

ஊரில் யாரேனும் இறந்துவிட்டால் கோயில் நடை அடைத்துவிடும் பழக்கமும் நிலவி வருகிறது.

**'அம்மன் கோயில், சாத்தாங் கோயில் நடை திறந்திருக்கமாட்டார்கள்,'**

(சதுரங்கக்குதிரை : 25) என்ற வரிகளின் மூலம் கோயில் நடையை இறந்தவர்களுக்காக அடைத்து வைப்பர் என்பது புலனாகிறது.

மேலும் இறந்தவர்களுக்குத் தேர் கட்டும் பழக்கமும் அம்மக்களிடையே வழக்கில் உண்டு. 'தேர்ப்படை கட்ட வேண்டிய வயதில்லை. அதற்கான வசதியும் இல்லை,' (சதுரங்கக்குதிரை: 25) என்ற பகுதி தேர்ப்படை கட்டும் பழக்கம் இருந்து வருகிறது என்பதைப் புலப்படுத்துகிறது.

இறப்பிற்குப் பின் செய்யப்படும் சடங்குகள் பற்றி, சதுரங்கக்குதிரை புதினத்தில் குறிப்பிடுகிறார்.

'பதினாறு முடியும்வரை வீட்டைவிட்டு எங்கும் கிளம்ப முடியவில்லை. கிழமை முறைகள் கல்லெடுப்பு அடியந்திரம். சுடுகாட்டுக்குப் போய் முடியெடுத்து, முகம் வழித்து குளித்து, கல்லுக்குழிக்குப் பொங்கலிட்டு, பிண்டங்கள் வைத்து, பாறையாற்றில் குளித்து, பிண்டங் கரைத்து, திரும்பிப் பார்க்காமல் வீட்டுக்க நடந்து...... நன்மைக்கு இருத்தினார்கள், சொந்தக்காரர்கள் திருநீறு பூசி, வேட்டி முண்டு கொடுத்தனர். சட்டைத் துணி கொடுத்தனர். காசு கொடுத்தனர். விளக்குக்குப் படையல் போட்டு, எல்லோரும் சாப்பிட்டு முடிந்த பின் புறப்பட்டுப் போயினர். சொல்லிக்கொண்டு போவது மரபல்ல என்பதால், '( சதுரங்கக்குதிரை: 31)



இவ்வாறு, நாஞ்சில் நாட்டு மக்கள் இறப்பிற்குப் பின் செய்யப்படும் சடங்குகளான, பதினாறாம் நாள் முடியும்வரை வீட்டிலிருந்து வெளியேறாமல் இருத்தல், கல்லெடுப்பு அடியந்திரம், சுடுகாட்டுக்குப் போய் முடியெடுத்தல், கல்லுக்குழிக்குப் பொங்கலிடுதல், பிண்டம் வைத்தல், இறப்பு நடந்த வீட்டிலிருந்து வெளியேறும்போது சொல்லிக்கொள்ளாமல் செல்லுதல் போன்ற பழக்கம் இருந்து வருவதை நாஞ்சில்நாடனது படைப்பின்வழி இனங்காணமுடிகிறது.

**நம்பிக்கைகள்**

கன்னியாகுமரி வட்டத்தில் நாஞ்சில் நாடு அமைந்துள்ளது. இங்கு பல்வேறு பிரிவுகளைச் சார்ந்த மக்கள், பல்வேறு தொழில்களைச் செய்து வருகின்றனர். முன்னோர்களால் கூறப்பட்டு வழிவழி வந்தோரால் நம்பப்பட்டு நடைமுறையில் செயல்படுத்தி வெற்றி காண்பது நம்பிக்கையாகும். நாட்டின் முதுகெலும்பாகிய கிராமத்தில் மக்களின் சமுதாயம், பண்பாடு, கட்டுப்பாடு, இனவழிப் பண்பு, சூழ்நிலை வளர்ச்சி, பழக்க வழக்கங்கள் ஆகியவை காரணமாக நம்பிக்கைகள் உருவாகின்றன. தனிமனிதன் ஒருவனது அடிப்படை குணத்தை ஒரு சமூகம் மாற்றும்போது அல்லது தனிமனிதன் தன் பாணியை இழக்கும்போது அவற்றிற்கு ஏற்ப, முன்பே அமைந்திருந்த நடைமுறைகள் நம்பிக்கைகளாய் மிஞ்சி நிற்கின்றன. நம்பிக்கை என்பது முன்னோர்கள் வழிவழியாக வழங்கி வந்த சடங்குகளாகும். பின்னாளில் அது நம்பிக்கையாக வளர்ந்துள்ளது. இந்த நம்பிக்கைகளும் சடங்குகளும் ஒவ்வொரு வட்டாரத்திலும் வேறுபடுகின்றன. புதின ஆசிரியர்கள் அந்தந்த வட்டாரங்களில் நிலவும் நம்பிக்கைகளையும், சடங்குகளையும் தம் புதினக் கதாபாத்திரங்கள் கடைபிடிப்பதாகக் காட்சிப்படுத்துகின்றனர். நாஞ்சில்நாடனும் தனது நாடான நாஞ்சில்நாட்டு மக்கள் அன்றாட வாழ்வில் கடைபிடித்துவரும் நம்பிக்கைகளைப் புதினத்தின் ஊடே குறிப்பிட்டிருப்பதன் மூலமாக அந்த வட்டார நம்பிக்கையை

வாசகர்கள் அறிந்துகொள்ளும் வகையில் படைத்துள்ளார். அவ்வகையில் இவரது ஆறு புதினங்களில் இடம்பெற்ற நம்பிக்கைகள் குறித்து இங்கு ஆராயப்படுகிறது.

**நாஞ்சில்நாட்டு நம்பிக்கைகள்**

முன்னோர்கள் வழிவழியாகக் கடைபிடித்து வரும் நம்பிக்கைகளைக் காரணகாரியம் ஏதுமின்றி ஏற்றுக்கொண்டு இன்றும் அந்தந்த வட்டாரங்களில் வாழும் இன்றைய சமூகத்தினர் வாழ்ந்து வருகின்றனர் என்பதனை இப்புதினங்கள் உணர்த்துகின்றன. இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராத பொழுதும் மனித வாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத பொழுதும் மனித மனமானது சிலவற்றைப் படைத்துக் காரணம் கற்பித்துக்கொள்கிறது. அவையே நம்பிக்கைகளாக உருவாகின்றன. இதனையே, 'ஒரு சமுதாயத்தில் காணப்படும் நம்பிக்கைகளைக் கொண்டு அச்சமுதாயத்தைப் பற்றி அறிய முடிகிறது.... காரண காரியத் தொடர்புகளுக்கு உட்பட்டுச் சான்றுகளின் வாயிலாக நிறுவமுடிவதை நம்பிக்கை என்று குறிப்பிடுவர். ' என்று சக்திவேல் (1983 : 189) குறிப்பிடுகின்றார். மனித வாழ்விற்கு ஆதரவு தரும் இந்நம்பிக்கைகள் மனித வாழ்வில் இன்றியமையாதவையாகின்றன. ஆய்விற்குரிய புதினங்களில் இடம்பெற்றுள்ள சித்திரிப்புகளின் மூலம் நாஞ்சில்நாட்டில் வாழ்ந்து வரும் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளை அறியமுடிகிறது.



எட்டுத்திக்கும் மதயானை புதினத்தில் சூல் தங்கி நிற்காத பொழுது அடுத்துப் பிறக்கும் குழந்தைக்கு மூக்கைக் கோறைப்படுத்திவிட்டால் அப் பிள்ளைக்கு இடையூறு ஏற்படாது என்ற நம்பிக்கை இருந்து வருவதை நாஞ்சில்நாடன் குறிப்பிடுகிறார்,

**'மூக்கைக் கோறைப்படுத்திப் போட்டாலாவ தங்கிக் கிடப்பான். '** (எட்டுத்திக்கும் மதயானை: 2)

முத்தாரம்மனுக்கு வழிபாடு நடத்தினால் நோய்களிலிருந்து காத்து வருவாள் என்ற கடவுள் நம்பிக்கை உண்டு என்பதனை மாமிசப் படைப்பு புதினத்தில் உணர்த்துகிறார்.

'மாங்கோணத்தை பஞ்சம், வறுமையிலிருந்தும் வாந்தி பேதி, வைசூரி நோய்களிலிருந்தும் காத்து பாலித்து வந்தாள், ' (மாமிசப் படைப்பு: 39) என்ற பகுதி முத்தாரம்மனை வழிபடுவதால் கொடிய நோய்களிலிருந்து தங்களை விடுவிப்பாள் என்ற நம்பிக்கை நாஞ்சில்நாட்டு மக்களிடையே நிலவி வருவதை உணரலாம்.

இரட்டைப்பிள்ளை பெற்றவள் சுளுக்கிய காலுக்கு எண்ணெய் விட்டு நீவினால் விரைவில் குணமாகும் என்ற நம்பிக்கை நிலவி வருகிறது. என்பிலதனை வெயில் காயும் புதினத்தில் சுடலையாண்டி நம்பிரான் சுற்றச் சென்றபோது கால் சுளுக்குகிறது. அப்போது பாட்டி அவனிடம் வேலம்மைப் பெரியம்மாவின் வீட்டுக்குப் போய் நீவினால் விரைவில் சரியாகும் என்று கூறுகிறார்.

**'இரட்டைப் பிள்ளை பெற்றவள் தடவினால் சுளுக்கு உடனே தீரும்.'** (என்பிலதனை வெயில் காயும் : 128)

'பணயம் வைத்துத் திருப்பக்கூடாது என்பதற்காக பாத்திரத்தை அடுப்பை மூன்று தரம் சுற்றி வைப்பதும் உண்டு,' (என்பிலதனை வெயில் காயும் : 156) என்ற பகுதி அடகு வைக்கப்படும் பாத்திரங்களை மூன்றுமுறை அடுப்பைச் சுற்றி வைத்துவிட்டால் அதனைத் திரும்ப எடுக்க இயலாது என்ற நம்பிக்கை நாஞ்சில்நாட்டு மக்களிடையே நிலவிவந்துள்ள தன்மையை இனங்காட்டுகிறது.

இவ்வாறு, நாஞ்சில் நாட்டில் வழங்கி வரும் பழக்க வழக்கங்கள் மற்றும் நம்பிக்கைகள் வழி அவர்களது பண்பாட்டை உணர முடிகிறது. பொருள் வடிவம் பெறாத இந்தப் பழக்கவழக்கம் மற்றும் நம்பிக்கை பொருள்சார் மதிப்பிலிருந்து பிரிக்க இயலாது, இவை பொருள்சாரா பண்பாட்டின் கீழ் அமைந்து அந்நிலம் சார்ந்த மக்களின் பண்பாட்டை வெளிப்படுத்துவனவாக அமைந்திருப்பது நோக்கத்தக்கதாகும். இதே பண்பாட்டுக்கூறுகள் இந்தியாவில் பிற வட்டாரங்களில் எவ்வாறு காணப்படுகின்றன என்று ஆராயும்போது மக்களிடையேயான பண்பட்டுப் பரவலை அறிந்து கொள்ளமுடியும்.

(☺)(☺)(☺(☺)(☺)



# இந்திய வரிவடிவங்களில் என்றுமுள தென் தமிழ் வரிவடிவமும் வரலாறும்

**முனைவர் சு சிவசந்திரகுமார்**
தமிழ் -உதவிப் பேராசிரியர்
தூய நெஞ்சக் கல்லூரி
திருப்பத்தூர் மாவட்டம் 635 601

*****

**முன்னுரை**

ஒரு தேசியம் ஓரெழுத்து முறை (**one nation. one script**) என்ற குரல்கள் ஓங்கியொலிக்கும் காலக் கட்டமிது.

ஒன்பது இந்திய மொழிகளின் (தமிழ், மலையாளம் கன்னடம், தெலுங்கு, ஒரியா, குஜராத்தி, குர்முகி, பெங்காலி தேவநாகரி,) இணைவிற்கு ரோமன் வரிவடிவத்திலான ஒற்றை வரிவடிவம் கொடுத்து பாரதி எழுத்துரு (டீாயசயவாை ளஉசனிவ)வடிவமைக்கப்பட்டுள்ள வேளையில் அதில் இடம்பெறும் தமிழ் வரிவடிவம் நோக்கி நகர்தல் காலத் தேவையென்பதைக் கணக்கில் கொண்டு இக்கட்டுரை வரையப்பெற்றுள்ளது. இதன் மூலம் தமிழின் வரிவடிவ நெகிழ்வுத் தன்மையினை அளந்தறியலாம் என்பதும். கால ஓட்டத்தினூடே தமிழ் வரிவடிவம் குழுத்தொடர்பாடலாக (புசழரி ஊழஅஅரநைெயவழைெ) இருக்கும் அதே வேளையில் கும்பல்தொடர்பாடலாகவும் (ஆயளள ஊழஅஅரநைெயவழைெ) இருக்கின்றது என்பது பண்பாட்டு (ஊரடவரசந) அடிப்படையில் மொழிக்குக் கிடைக்கும் தனித் தன்மையாகும். இது வரிவடிவ ஒற்றை அடையாளத்தினின்று எடுத்துப் பத்திரப் படுத்தப்பட வேண்டிய தனித் தன்மை என்பதை தமிழியல்,தொல்லியல் தரவுகள் சார்ந்து நிரல்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.



**இந்திய வரிவடிவங்கள்**

இந்திய வரிவடிவங்களைப் பற்றி 1896 ஆம் ஆண்டில் பூலர் என்பவரால் இந்திய ‘தொல் வரிவடிவ இயல்’ என்ற நூல் ஒன்று வெளியாகியுள்ளது. பூலர், ஓஜா போன்றோர் அறிய இயலாதிருந்த பல கல்வெட்டுக்களைப் பயன்படுத்தி ஏ.எச்.தானி என்பவர் ‘இந்திய தொல் வரிவடிவியல்’ என்ற ஆராய்ச்சி நூலொன்றை 1963 இல் வெளியிட்டுள்ளார். ‘தென்னியந்திய வரிவடிவங்கள்’ என்ற தலைப்பில் 1834 இல் ‘பபிங்டன்’ மாமல்லபுரத்தில் காணப்பட்ட கல்வெட்டுக்களிலுள்ள எழுத்துகளை அட்டவணை செய்துள்ளார். 1837 இல் கப்டன் எச்.ஹார்க்கின்ஸ் வரிவடிவங்களையும், புதிய வரிவடிங்களையும் தொகுத்துள்ளார். ஜேம்சு பிரின் செப் என்பவர் கி.மு.543இலிருந்து கி.பி. 1200 வரை ‘சங்கத மொழி நெடுங்கணக்கு அடைந்த மாற்றங்கள்’ என்ற தலைப்பில் அட்டவணை ஒன்றைத் தயாரித்துள்ளார். காலம் தெரியாத சாசனங்களின் காலத்தை நிர்ணயிப்பதற்கு இந்த அட்டவணை உதவக்கூடும் என்ற கருத்தையும் அவர் வெளியிட்டார். 1974 இல் ஏ.சி பர்னல் என்பவர் வெளியிட்ட ‘தென்னிந்தியத் தொல்வரிவடிவவியலின் மூலாதாரங்கள்’ என்ற நூலிலும் அத்தகையதே. பர்னலின் நூல் வெளிவந்ததற்கு

அடுத்த ஆண்டில் கால்டுவெல்லின் விமர்சனம் அவருடைய திராவிட மொழி ஒப்பிலக்கண நூலின் இரண்டாவது பதிப்பில் வெளிவந்தது.

திருவாங்கூர் புதைபொருளாராய்ச்சி வெளியீடாக வெளிவந்த முதலாம் தொகுதியில் 'தமிழ் கிரந்த நெடுங்கணக்கின் வளர்ச்சி பற்றி ஒரு அத்தியாயம்' என்றும் 'வட்டெழுத்துச் சாசனங்களின் மாதிரிகள்' என்றும் இரண்டு கட்டுரைகளைக் கோபிநாதராவ் எழுதியுள்ளார். சிவராமமூர்த்தி தென்னிந்தியத் தொல் வரிவடிவவியலை ஆராய்ந்து 'இந்தியச் சாசனவியலும் தென்னிந்திய வரிவடிங்களும்' என்ற நூலை 1957 இல் வெளியிட்டார். என்.சுப்பரமணியம் தென்னிந்தியக் கோவிற் சாசனங்களைப் பற்றிய வெளியீட்டில் தம்முடைய கருத்துக்களை வளர்த்து, 'தமிழ் தொல் வரிவடிவவியல்' என்ற பகுதியை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். 'தமிழெழுத்தின் வரிவடிவம்' எனும் நூலைச் சி.கோவிந்தராசனார் எழுதியுள்ளார். 1971 இல் ஆ.வேலுப்பிள்ளை 'சாசனமும் தமிழும்' என்ற நூலை வெளியிட்டுள்ளார். 2003 ஆம் ஆண்டில் ஐராவதம் மாகதேவன் 'நுயசடல வுயஅடை நுிபைசயிால கசழஅ வாந நுயசடநைளவ வைஅநள வழ வாந ளைவா உநவெரசல யு.னு' என்ற நூலை வெளியிட்டுள்ளார். மேற்கண்ட நூல்கள் இந்திய, தென்னிந்திய வரிவடிங்களைப் பற்றியும் தமிழி எழுத்துக்களின் வரிவடிவைப் பற்றியும் ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ளன. மேற்கண்ட நூல்களின் கருத்துக்களில் ஆ.வேலுப்பிள்ளை அவர்களின் பண்பாட்டுத் தொடர்புடைய கருத்து சிந்திக்கத்தக்கது. சிவராமமூர்த்தி,கே.வி.சுப்பிரமணிய சாஸ்திரியிடமும் காணும் குறைகள் முறையே 1) பண்பாட்டுப் பிண்ணணியோடுத் தொடர்பு படுத்தான்மை 2) பழந்தமிழ் இலக்கியங்களைக் கணக்கில் கொள்ளவில்லை என்பதுமாகும். இத்தகைய முறைகளைக் கையிலெடுக்கும் போது பழந்தமிழி வரிவடிவம் வேறொரு கோணத்தில் பயணிக்கிறது.

**இலக்கணமும் வரிவடிவங்களும்**

தமிழ் அகச்சான்றான 'களவியல்' அல்லது இறையனார் அகப்பொருள் எனும் கி.பி.8 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இலக்கண நூல் இந்நூலில் மதுரை ஆலவாயிற் பெருமான் அடிகளால் செய்யப்பட்ட நூலுக்கு நக்கீரனாரால் உரை காணப்பட்டது' என்ற குறிப்பினால் உரைகாரர் பெயர் பெறுகின்றார். இவ்வுரையாசிரியர் முச்சங்கங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இக்குறிப்பின்படி தொல்காப்பியம் இடைச்சங்க நூல்களுக்கும் கடைச்சங்க நூல்களுக்கும் இலக்கண நூலாக அமைந்துள்ளது என்ற உண்மையைப் புலப்படுத்துகின்றனார். இடைச்சங்க நூல்கள் முழுமையும் கிடைக்காத நிலையில் கடைச்சங்கக் காலத்தைச் சார்ந்த இலக்கியங்கள் தொல்காப்பியரின் இலக்கண விதிகளைக் கொண்டு நோக்கப்பட்டு வந்தன. தமிழாய்வுலகில் தொல்காப்பியத்தைச் சங்க இலக்கியங்களுக்குப் பொருத்திக் காணும் மரபில் சிலரும், அதன் பொருத்தப்பாடு சில வேளைகளில் பொருந்தி வரவில்லையென மறுக்கும் சிலரும் உள்ளனர். இத்தகைய மறுப்புரைகளில் முதன்மையாக இடம்பெறுவது தொல்காப்பியரின் கவிதையியல் கோட்பாடாகும். தொல்காப்பியர் அகப்பொருளைப் பாடுவதற்கு கலியும் பரிபாடலும் உரிய பாக்கள் என்பதாகக் குறிப்பிடுகின்றார். ஆனால் கடைச் சங்கத்தைச் சார்ந்த செய்யுள்கள் யாவும் ஆசிரியத்தால் அமைந்தள்ளன. இவ்விடத்தில் அவை தொகுப்புக் கால அரசியல் காரணமாக விடுபட்டிருக்கலாம் என்று கொள்வதற்கு இடமில்லை. ஏனெனில் தொகுப்பில் கலித்தொகையும் பரிபாடலும் இடம்பெற்றிருப்பதுதான் இதற்கான காரணமாகும். இக்கலித்தொகையும், பரிபாடலும் காலத்தால் மிகவும் பிந்தைய நூல்களாகக் கருதப்பெறுகின்றன எனில், தொல்காப்பியர் குறிப்பிடும்

இலக்கண வரையறைக்குட்பட்ட நூல்கள் எங்கே எனும் வினா தோன்றுகின்றது. இதற்குத் தொல்காப்பியத்தைப் போற்றுவோர் கடல்கோளைக் காரணமாகக் காட்டுகின்றனர்.

நடுநிலை ஆய்வாளர்கள் என்று தங்களை அறிவித்துக் கொள்ளும் சிலர் இது களவியல் உரைகாரரின் கதையென்று கூறி மறுக்கின்றனர். இவ்விடத்தில்தான் அறிவியல் முறைப்படித் தமிழ்மொழியின் இலக்கிய வளத்தை அறிவிக்க இயலாமல் போய்விடுகின்றது. இவ்விடைச்சங்க நூல்கள் எனும் கருதுகோளை மறுதலிக்கும் நடுநிலை ஆய்வாளர்கள் எழுப்பும் வினா தமிழின் வரிவடிவத்துடன் தொடர்புடைய ஒன்றாகும். இடைக்கால இலக்கண, இலக்கியங்கள் இருந்திருந்தாலும் அவை யாவும் பிராகிருதமொழி வரிவடிவத்திலிருந்து அல்லது வரிவடிவத்தினை உள்வாங்கிய தமிழி எழுத்துக்கள் தோற்றம் பெற்ற பின்னரே எழுத்தாக்கம் பெற்றிருக்க வேண்டுமென்பதே அவர்களின் வாதமாகின்றது. தமிழின் கவிதையியலை மிக நீண்ட விவாதத்திற்கு உட்படுத்திய கா.சிவத்தம்பி சங்கப்பாடல்களைத் தொகை செய்யும் முறைமை கலித்தொகைக் காலம் வரையும் காணப்படுகின்றதெனினும் அது எப்பொழுது தொடங்குகின்றது என்பது முக்கியமான ஒரு வினாவாகும் என்பதாகக் குறிப்பிட்டு அவ்வினாவிற்கான விடைக்கு வேண்டிய சிறுவெளிச்சம் தமிழிக் கல்வெட்டாராய்ச்சி மூலம் கிடைக்கின்றது என்பதாகக் குறிப்பிடுவார். மேலும் ஐராவதம் மகாதேவனின் ஆய்வுகளின் வழி மேற்கிளம்பும் தமிழி எழுத்து வளர்ச்சி பற்றிய உண்மைகள் மிக முக்கியமானவையென்றும், இது பற்றித் தன்னுடன் உரையாடிய பேராசிரியர் சுப்பராயலு, தமிழிக் கல்வெட்டுக்களின் எழுத்து வளர்ச்சியைப் பார்க்கும் போது தொடக்க நிலையில் (ஏறத்தாழ கி.மு.200 முதல் 150.∴200 வருடங்கள் வரை) சங்க இலக்கியங்களை எழுத்து வடிவில் தொகுத்திருக்க முடியாதென்றும் அரச்சலூர்க் கல்வெட்டுக்களின் காலமான கி.பி.மூன்றாம் நூற்றாண்டிற்குப் பின்பே சங்கப் பாடல்களைத் தொகுப்பித்தற்கான எழுத்துக்கள் காணப்படுவதாகவும் சொல்கின்றார் என்பதைக் குறிப்பிடுகின்றார்.

எனவே, ஏறத்தாழ கி.பி.250 அளவிலேயே ஏற்கெனவே வாய்மொழியாகவிருந்த பாடல்கள் எழுதித் தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது புலனாகின்றது. இது தமிழின் வரிவடிவம் குறித்த இலக்கிய ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகின்றது. பிராகிருத மொழியின் வரிவடித்திலிருந்து வருவித்துக் கொள்ளப்பட்டதே தமிழ் வரிவடிவமும் நெடுங்கணக்கு வைப்பு முறையும் என்பதை நடுநிலை ஆய்வாளர்களால் புறக்கணிக்க இயலாது என்று குறிப்பிட்டுத் தமிழரிடம் இலக்கண இலக்கியங்கள் இருந்துள்ளன எனினும் அவை பிராகிருத மொழியின் வரிவடிவத்திலிருந்து வருவித்துக் கொண்ட பிறகே எழுத்தாக்கம் பெற்றுள்ளன என்பதாகக் குறிப்பிடுவது மொழியியல் அறிஞர்களுள் சிலரின் கருத்தாகின்றது.

**தொல்லியலும் வரிவடிவங்களும்**

இனி, தமிழின் வரிவடிவம் பற்றித் தொல்வரிவடிவவியலில் குறியீட்டெழுத்து ஆய்வாளர்கள் குறிப்பிடும் கருத்துக்களைத் தொகுத்துக் காணலாம். தமிழி (பிராமி) வரிவடிவம் மௌரியப் பேரரசன் அசோகன் மூலமாக, தென்பகுதியில் பெறப்பட்டது. எனவே அசோகன் காலமான கி.மு.3ஆம் நூற்றாண்டிற்கு முன்பாகத் தமிழர்களிடையே எழுத்து வழக்கம் புழக்கத்தில் இல்லை என்பது அறிஞர்களால் சொல்லப்பட்டு வந்தது. இக்கருத்து, புலிமான் கோம்பை, தாதாப்பட்டி, பொற்பனைக் கோட்டை போன்ற ஊர்களில் கிடைத்த நடுகல் சான்றுகளால் மாற்றம் பெற்றது. அசோகனுக்கு முன்பாகவே தமிழகத்தில் தமிழி (பிராமி) எழுத்துக்கள் வழக்கத்தில் இருந்துள்ளன என்பதை ஏ.எம்.எஸ் எனும் அறிவியல்

முறையில் காலம் கணிக்கப்பட்ட பொருந்தல் நெல்மணிகள் அறிவித்தன. எனவே, அசோகன் காலமான கி.மு.3 ஆம் நூற்றாண்டிற்கு முன்பாகவே எழுத்து வரிவடிவம் தமிழர்களிடையே தழைத்தோங்கியிருந்தது என்பது பெறப்படுகின்றது. தொல்காப்பியரும் தன்னுடைய நூலை முந்துநூல் கண்டு முறைப்படத் தொகுத்துள்ளார் எனில் தமிழி எழுத்துக்களில் தொல்காப்பியரின் இலக்கண விதிகள் பொருந்திப் போகவேண்டும். ஆனால், தொல்காப்பியரின் எழுத்தியல் விதிகள் வரிவடிவ அடிப்படையில் தமிழி எழுத்துக்களுடன் பொருத்தமில்லாத தன்மையில் அமைந்துள்ளன. 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' எனும் நூற்பா ஒன்றே இதற்குப் போதுமான சான்றாதாரமாகும். தமிழ் நெடுங்கணக்கினுள் மெய் பதினெட்டும் புள்ளி பெற்றே நிற்கும் என்பதனை,

**'மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்"** (தொல்.எழுத்து.15)

**"மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்"** (தொல். எழுத்து .104)

என்று இரண்டு சூத்திரங்களால் தொல்காப்பியர் கூறுதல் காணலாம். 'ம'ஃகான் புள்ளி, மரபு என்றும் புள்ளி என்பன முதலியவற்றால் புள்ளி என்பது மெய்கட்குக் குறியீட்டு ஆளுதலின் புள்ளியின்றித் தனி மெய்கள் வழங்கா என்றும் தொல்காப்பியர் குறித்துள்ளார்.இராகவையங்கார் மெய்யினியற்கை புள்ளியொடு நிலையல் என்னும் நூற்பாவிற்கு மெய்கள் புள்ளி பெறுவது இழந்துபோன மரபென்றும் எழுதுவோரது சோர்வால் புள்ளியிட்டு எழுதும் மரபு வீழ்ந்துவிட்ட நிலையில் அம்மரபினை மீண்டும் வலியுறுத்தும் முகமாகத் தொல்காப்பியர் இம்மரபினை அடையாளப்படுத்தியுள்ளார் என்றும் குறிப்பிடுவார். இம்மரபினை பின்பற்றும் தமிழிச் சொற்கள் யாவும் கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.2ஆம் நூற்றாண்டு வரை காணப்படவில்லை.

தொல்காப்பியரின் காலம் கி.மு.3 ஆம் நூற்றாண்டு என்பதாக இலக்கிய ஆய்வாளர்கள் வரையறுத்துள்ளனர் என்பது ஏலவே குறிப்பிடப்பட்டுள்ளது. கி.மு.3 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதபெறும் தொல்காப்பியரின் எழுத்தியல் விதிகளில் ஒன்றான மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல் எனும் விதியானது ஏன் கி.மு.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.2ஆம் நூற்றாண்டுவரையிலான காலத்தில் அமைந்துள்ள கல்வெட்டாவணங்களுடன் ஒன்றிப்போகவில்லை? கி.பி.2ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தமிழிச் சொற்களிலும் பின்பற்றப்படும் இவ்விதியமைப்பும் முழுவதுமாகப் பின்பற்றப்படவில்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாக ஆதிக்கம் செலுத்துகின்றது. இப்பொருத்தமின்மை சிக்கலுக்குரிய ஒன்றாகின்றது. இவ்விடத்தில் தொல்காப்பியரின் கவிதையியல் கோட்பாடு சங்க இலக்கியங்களுடனும் தொல்லியல் சான்றுகள் தொல்காப்பியரின் எழுதியல் விதிகளுடனும் ஒன்றிப்போகாதது அ.்.து ஏன் என்பதுதான் வினா. இவ்வினாவிற்குப் பழந்தமிழி எழுத்து முறையின் வரிவடிவ வரலாறு விடையளிக்கும் என்பதாக கருத இடமுண்டு. பழந்தமிழி (பிராமி) எழுத்து முறைக்கு முன்னதாக வழங்கி வந்த எழுத்து முறையினைக் 'குறியீடுகள்' எனப் பெயரிட்டுள்ளனர். இக்குறியீடுகள் சிந்துவெளி முத்திரை யெழுத்துக்களுடன் தொடர்புடையவை ஆகும். சிந்துவெளி வாசகங்களின் (வுநஒவள) மீதான கணினி வழி ஆய்வு அந்த மொழியில் (திராவிட மொழிகளில் உள்ளது போன்ற) பின்னொட்டுகளே உள்ளன என்பதையும், இந்திய ஆரிய மொழிகளில் உள்ளது போன்ற முன்னொட்டுகளோ, முண்டா மொழியில் உள்ளது போன்று இடைநிலை விகுதிகளோ இல்லை என்பதையும் காட்டும்.சிந்துவெளி வாசககங்களுக்குப் பட்டியல்களை உருவாக்கிய ஹண்டர், பர்ப்போலா, மகாதேவன் ஆகிய மூவருமே

சிந்துவெளி வாசகங்களுக்கு ஏற்புடைய மொழி திராவிட மொழியே என்று சுட்டிக்காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது. சிந்துவெளி வாசகங்கள் மிகவும் சிறியவை. சராசரி நான்கு அல்லது ஐந்து குறியீடுகளைக் கொண்டவை. மிக நீண்ட வாசகம், ஒரு முப்பட்டை முத்திரையில் 26 குறியீடுகள் கொண்டது. நீண்ட தொடர் வாசகமோ, கணக்குப் பதிவுகளோ கிடைக்கவில்லை. அவற்றைப் படித்தறிவதற்கு உதவக்கூடிய இருமொழியில் எழுதப்பட்ட வாசகங்களும் இல்லையென்பதுதான் அவ்வெழுத்துக்களை வாசிக்க முடியாததற்கான காரணம் என்று அஸ்கோ.பர்போலா குறிப்பிடுகின்றார். இச்சிந்துவெளி முத்திரையெழுத்துக்கள் சில தென்னிந்தியாவில் கிடைத்துள்ள 'குறியீட்டு' எழுத்துக்களுடன் ஒத்துக் காணப்படுகின்றன. பி.பி.லால் தாம் எழுதியுள்ள கட்டுரையில் சிந்துவெளி எழுத்துக் குறிகளைச் செப்பும் கல்லும் பயன்பட்ட காலத்து மற்றும் பெருங்கற்காலத்துப் பண்பாடுகளில் கிடைத்த மண்பாண்டக் குறிகளோடு ஒப்பிட்டுள்ளார். பெருங்கற்காலத்துக் குறிகளில் 89 விழுக்காடு சிந்துவெளி-செப்புக் காலத்தைச் சேர்ந்ததாகவும், இதற்கு மாறாக, சிந்துவெளி -செப்புக்காலக் குறிகளில் 85 விழுக்காடு பெருங்கற்காலம் வரை தொடர்வதாகவும் கண்டுபிடித்தார். லால் வெளியிட்ட கண்டுபிடிப்புகளுக்குப் பின் ஐம்பது ஆண்டுகளில் தமிழ்நாட்டில் மேலும் பல அகழாய்வுகள் நடைபெற்றன. சிந்துசமவெளிப் பண்பாட்டு எழுத்துக்களின் மறைவிற்கும் தமிழி எழுத்துக்களின் தோற்றத்திற்கும் இடைப்பட்ட சுமார் 1200 ஆண்டுகள் இந்தியாவில் வழக்கில் இருந்த ஒரு வகை வரிவடிவமே இக்குறியீடுகள் ஆகும்.அரப்பாவில் 40 இடங்களிலும் அரப்பாவைத் தவிர வேறு 20 இடங்களிலும் ஏறத்தாழ 3700 சிந்துவெளி வாசகங்களை, சுமார் 400 குறியீடுகளில் அடக்குவர்.

தமிழகத்தில் பெருங்கற்படைச் சின்னங்களில் கிடைத்த 131 குறியீடுகளைத் தொகுத்து 1917 இல் யஸ்தானி வெளியிட்டார். இந்த 131 குறியீடுகளையும் 61 குறியீடுகளாக வகைப்படுத்தியுள்ளார். பி.பி.லால் மேலும் இக்குறியீடுகளில் 47 குறியீடுகள் சிந்துவெளிப் பண்பாட்டிலும், பெருங்கற்படைப் பண்பாட்டிலும் காணப்படுவதாகக் கூறுகிறார். வல்லம் அகழாய்வில் அகழ்ந்த குழிகளில் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் கீழ் அடுக்குகளிலும் தமிழி எழுத்துப் பொறித்தவை மேல் அடுக்குகளிலும் கிடைத்தன. தமிழி எழுத்துப் பொறித்த பானை ஓடுகள் கிடைக்கத் தொடங்கியவுடன் குறியீடுகள் பொறித்த பானை ஓடுகள் மறையத் தொடங்கியது இவ்வகழாய்வின் சிறப்பம்சமாகும்.

தமிழி வரிவடிவம் வழக்கில் வந்தவுடன் இக்குறியீடுகளின் பயன்பாடு குறைந்து விடுவதாகவும் பானை ஓடுகள், நாணயங்கள், கல்வெட்டுக்கள் மற்றும் மோதிரங்கள் என எண்ணற்ற ஊடகங்களின் வாயிலாக இவை வெளிப்படுவதாலும் சங்க காலத்திற்கு முன்பிருந்த கூறுகள் கவனிக்கப்பட வேண்டும். சிந்துவெளி பண்பாடு தொட்டுச் சில வடிவ மாற்றங்களுடன் தொடர்ந்து இவை இருந்து வந்துள்ளமை பெறப்படுவதாலும் இக்குறியீடுகள் சாதாரணக் கீறல்கள் என்பதாகவும் எந்தவொரு ஆய்வாளராலும் ஒதுக்கி விட முடியாது. எனவே, தமிழி வரிவடிவம் தமிழகத்தில் பயன்பாட்டிற்கு வருவதற்கு முன்பாகவே இக்குறியீடுகளும் சமகால மக்களின் எண்ணம் அல்லது கருத்துப் பரிமாற்றத்திற்குப் பயன்படுத்தப்பட்ட ஒருவகை வரிவடிவமே என இதை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதாக இராசன் குறிப்பிடுவார். இலக்கணத்தின் நோக்கக் கூறுகளில் ஒன்று மொழியின் அமைப்பில் புதைந்து கிடக்கும் பொதுமைகளைப் புலப்படுத்துதல் என்பதாகும். தொல்காப்பியர் தன்னுடைய நூலின் நோக்கம் யாதெனக் குறிப்பிடவில்லை. ஆனால், தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரத்தில் 'மயங்கா மரபின் எழுத்து முறை காட்டி' என்று குறிப்பொன்று வருகின்றது.

**இலக்கியமும் வரிவடிவங்களும்**

சிறப்புப் பாயிரத்தின்படி அதங்கோட்டாசானுக்கு மயங்காமரபின் எழுத்துமுறையைத் தொல்காப்பியர் காட்டுகின்றார். இக்குறிப்பு தொல்காப்பியரின் காலத்திற்கு முன்பாக மயங்கிய எழுத்து முறை என்ற ஒன்று நிலவியதோ என்ற வினாவை எழுப்புகின்றது. இவ்வினா சரியானதே என்பதாகச் சங்கப் புலவர்களின் பாடல்களான அகம்.297, 343 ஆகியன சான்று பகர்கின்றன. மதுரை மருதளின நாகனாரால் பாடபெற்றுப் அகநானூற்றுத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள 297,343 ஆகிய இரண்டு பாடல்களும், பாலை நிலங்களில் நாட்டப்பெற்றிருந்த நடுகல்லில் வீரனின் பெயரும், புகழும் பொறிக்கப் பெற்றிருந்தன என்பதைக் குறிக்கின்றன. ஆனால், இவ்வெழுத்துக்கள் பொருளியைபுடன் படிக்க இயலாதபடி அமைந்துவிட்டன. எனவே, வழிப்போக்கர்கள் நடுகல்லில் காணப்படும் எழுத்துக்களைப் படித்துப் பார்ப்பதற்கு இயலாமல் மனம் தளர்ந்து போன காட்சியினை,

> **“பெயர்பயம் படரத் தோன்றுகுயில் எழுத்து**
> **இயைபுடன் நோக்கல் செல்லாது அரைவுடன்**
> **ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியும் “**(அகம். 297:8-10)

என்று பாடல் கூறும். இதேபோன்று அகம் 343 ஆம் பாடலில் உமணர்களின் உப்பு வண்டிச் சக்கரத்தின் காலினால் சிதைக்கப் பெற்ற வலிய நடுகல்லில் கூருளியால் வெட்டப்பட்ட கோடு மாய்ந்த எழுத்துக்கள் காணப்பட்டன் அவ்வழி வந்த புதியவராகிய வழிப்போக்கர்களால் சிதைந்துள்ள எழுத்துக்களின்றும் உண்மைப் பொருளை உணர முடியவில்லை. அவை, வேறு பொருளை வழிப்போக்கர்களுக்கு அறிவித்தன என்ற கருத்துக் காணப்படுகின்றது.

> **‘மரம்கோள் உமண்மகன் பேரும் பருதிப்**
> **புன்தலை சிதைத்த வன்தலை நடுகல்**
> **கண்ணி வாடிய மண்ணா மருங்குதல்**
> **கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்(து)அவ்**
> **ஆறு செல் வம்பலர் வேறுபயம் படுக்கும்’**(அகம் 343: 4-8)

இவ்விரு பாடல்களையும் அகம் 297,343 மதுரை மருதனிள நாகனார் பாடியுள்ளார். தமிழிச் சொற்களில் பெரும்பாலும் பழமையானதும், அதிகமானதும் மதுரையைச் சேர்ந்தவையே என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. மற்றொரு விடயம், இப்புலவர்களின் குறிப்பின்படி வீரர்கள் அம்பைத் தீட்டியதாலும், உப்பு வண்டி உரசியதாலும் மட்டும் எழுத்துக்கள் பொருள் இயைபுடன் வாசிக்க முடியவில்லையென்று கொள்வது அத்துணைப் பொருத்தமுடையதன்று. சங்கப் புலவர்கள் வரிவடிவத்தைப் படிப்பதற்கு மயங்கியிருக்க வாய்ப்புண்டு என்றே கொள்ள வேண்டும். ஏனெனில் கி.பி.11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குற்றாலத்தில் உள்ள கல்வெட்டு வாசகம் ‘கல்வெட்டு வட்டம் ஆகையால் தமிழாகப் படியெடுத்து’ என்பதாகக் குறிப்பிடும்போது வட்டெழுத்தைப் படிப்பதற்கு அப்போதைய ஆட்சியாளர்கள் மயங்கியுள்ளனர் என்பது தெரிகிறது. மதுரை மருதளின நாகனாரின் மயக்கம் இதை ஒட்டியதாகவே காணப்படுகின்றது.

**நிறைவாக**

தமிழியல் சார்ந்த மாணாக்களுக்குக் குழுத்தொடர்பாடல் அடிப்படையில் இன்றளவும் வினாக்களை எழுப்பிச் செல்லும் தமிழி வரிவடிவானாது அந்தந்த காலங்களுக்கு ஏற்றாற் போல் மாற்றமும் கண்டுள்ளது. சமயம், தத்துவம், மருத்துவம், வணிகம் சார்ந்தான மாற்றங்களையும் மிக மிக எளிதாகத் தகுநிலை மாற்றங்களில் கடந்து செல்கிறது. இது வளர்ச்சியா மாற்றமா என்பதிலும் இதனுள் கலை, அறிவியல் என்னும் ஊடாட்டத்தினூடே கலை கும்பல் தொடர்பாக இருப்பதும் அறிவியல் குழுத் தொடர்பாக இருப்பதும் பெருங்குறையாக இருக்கின்றது. முரண்பாடுகளின் ஒருங்கமைவில் இவ்விரு,புலங்களும் சந்திக்கும் தருவாயில் பண்பாட்டு நீட்சியில் இதற்கான பதிலைத் தேடிக் காணலாம்.

**ஆய்விற்கு உதவியன**

அ). சண்முகதாஸ்.அ, செவ்வியல் தமிழ் வரலாறும் பண்புகளும், குமரன் புத்தக இல்லம், கொழும்பு, சென்னை, 2010.

ஆ). சண்முகம்.செ.வை, சங்க கால மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2009

இ). பழனிவேலு.கே. சங்க இலக்கியம் பாட்டுமரபும் எழுத்து மரபும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2010.

ஈ) ராஜ் கௌதமன் ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், தமிழினி, சென்னை, 2009

உ) ராஜன்.க, தொல்லியல் நோக்கில் சங்க காலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

(☺)(☺)(☺)(☺)(☺)



# பெருங்கதை அளித்த இசைக் கொடை

**முனைவர். மு பானுமதி**
banu2sita@gmail.com

*****

**முகவுரை :**

கொங்குநாட்டு வேளிர்களில் ஒருவரான கொங்குவேளிர் என்பவரால் அகவற் பாக்களால் இயற்றப்பட்டது பெருங்கதை. துர்விந்தன் என்ற கங்கமன்னனால் வடமொழியில் இயற்றப்பட்ட 'பிரஹத்கதா' என்னும் நூலைத் தழுவி எழுதப்பட்டது இந்நூல். இந˙ நூலை முதன் முதலில் தமிழிலக்கியம் அறியச் செய்தவர் தமிழ்த் தாத்தா உ.வே.சா.அவர்கள். இந் நூல் 6 ஆம் நூற்றாணைடைச் சேர்ந்ததாகும். தமிழில் முதற்பதிப்பு 19 ஆம் நூற்றாண்டில் வெளிவந்தது.

**பெருங்கதை :**

இந் நூல் பண்டைக் காலத்து வாழ்க்கை முறை அரசாட்சி, நீதி, கலைகள், நாகரீகம் போன்ற அரிய செய்திகளை காட்டுவதாக உள்ளது. கலைகளில் இசைகலை பற்றி இந்நூல் பல நுணுக்கங்களை விவரித்துள்ளது. கௌசாம்பிகை நகரத்து அரசனான உதயணன் என்பவனது பிறப்பு முதல் துறவுவரை உள்ள வரலாறே பெருங்கதையாகும். உதயணன் கற்ற அறுபத்துநான்குகலைகளில் இசைகலை இக்காப்பியத்தில் மிகப் பெரும் இடத்தை பெற்றுள்ளது.



**இசைக்கலை :**

**'இசைப்பு இசையாகும்'**
**'இசை இசைவிப்பு'** - 'தொல்காப்பியம்'

செவிப்புலனால் அறியப்படும் ஒலியின் நீட்சி இசையாகும். அத்தகைய ஒலியின் நீட்சி இயல்பாகவே கேட்போர் உள்ளத்தை இசையவைக்கும். இசை என்பது இசைவிப்பதாகும். தன் வயப்படுத்துவதுமாகும்.

**இசைக்கருவிகள் :**

பண்டைக் காலம் முதல் முத்தமிழாக சிறந்து விளங்குவது தமிழ் இவற்றில் நடுநாயகமாக விளங்கி போற்றி வளர்க்கப்படுவது இசைத்தமிழ். இவ்விசையினை குழல் வழியாகவும்,யாழ் நரம்புகளைத் தெரித்தும்,அவற்றிற்கேற்ப பாடியும் அறியப்படும் ஒலி அணுத்திரளே இசைக்கருவி வழி அறியலாகும் இசை.

**யாழிசை :**

இசைக்கருவிகளில் இனிமையும், நுட்பமும் உடைய கருவி யாழ் எனும் வீணையாகும். நரம்புக் கருவியாகும். யாழ் பற்றிய பல்வேறு செய்திகள் பழமையான இசை நூல்கள் முதல் தற்கால இலக்கியம் வரை கூறப்பட்டுள்ளது.

**"இன்னிசை வீணையர் யாழினர் ஒடுபால்**'என்று வீணையிசையின் இனிமையைக் கூறும் திருவாசகமும்,

**'குழல் வழி நின்றுத யாழே'** என்று சிலப்பதிகாரமும்,

**‘குழல் இனிது யாழ் இனிது’** என்று திருவள்ளுவரும்,

**‘விஞ்சைமன்னா் பால் விரகமங்கைமாா் நஞ்சு வீணையினிடத்து பாடலான்’**,

என்று பிரிவுத்துயருக்கும், பிரிதலில்லாத கிளர்ச்சிக்கும் மங்கையர்க்கு உதவுவது ஒரே வீணையிசை என்று கம்பரும்,

**வீணை செய்யும் ஒலியிலிருப்பவள்** கலைமகள் என்று பாரதியும்,

என பல்வேறு இலக்கியங்களால் யாழிசை எனும் வீணை இசைபற்றியும், ஒருநரம்புள்ள சுரையாழிலிருந்து, ஆயிரம் நரம்புகள் உள்ள ஆதியாழ் எனும் பெருங்கலம் பற்றிய யாழிசைக் கருவி பற்றியும் கூறப்பட்டுள்ளது.

**பெருங்கதையில் யாழிசை :**

இக் காப்பியத் தலைவன் விதி வசத்தால் காட்டில் முனிவா்கள் ஆசிரமத்தில் பிறக்கிறான். காட்டிலேயே பிரம்மசுந்தர முனிவரிடத்து பல கலைகளைக் கற்கிறான். அறிவில் மேம்பட்டு விளங்குகிறான். இசைக் கலையிலும் சிறந்து விளங்குபவனாகிறான். இந்திரனுக்குரியதும் யானை முதலிய மிருகங்களை வசமாக்குவதும் ஆகிய ‘கோடபதி’ எனும் யாழினைப் பெறுகிறான். அதனால் ஒரு தெய்வயானையின் நட்பைப் பெறுகிறான். தனது நாட்டிற்கு அரசனாகிறான். கொடுத்த வாக்கை மீறியதால் தெய்வயானை மறைய மீண்டும் காட்டிற்கு வந்து யாழிசைத்து யானையினைத் தேடுகிறான்.

**இளவரசிக்கு யாழ் கற்பித்தல் :**

உச்சையினி நகர அரசன் பிரச்சோதனன் என்ற மன்னன் உதயணனை எந்திரயானையின் மூலமாக இசைக்கு மயங்குவது போல் செய்து சிறை வைக்கிறான். அந்நாட்டுப் பட்டத்து யானைக்கு மதம் பிடிக்க அதனை அடக்க முடியாது அந்நாட்டினா் திகைக்க இவ்வானையை அடக்குபவன் உதயணனும் அவனது யாழிசையும் மட்டுமே என்று மந்திரிகள் அறிந்து கூற அவ்வாறே செய்வித்து உதயணன் யானையினை அடக்குகிறான்.

**பிரச்சோதனன் வேண்டுதல் :**

**‘தான்பயில் வீணைதங்கையுமொருத்தி**
**காண் குறையுடைமையிற் கவலுமாதலின்**
**வல்லோா்ப் பெறாதுதொல் குறை**
--------------------------------------------------------
**தீா்த்தறன் கடனனென”.** (1 - 55)

ஏன மன்னன் நீகற்றுச் சிறந்த இந்த யாழிசையில் வல்லவா் கிடைக்காததால் எனது மகள் யாழிசை கற்காதது ஒரு குறையாகவே உள்ளது. நீதான் தீா்க்க வேண்டும் என வேண்டுகிறான். உதயணனும் இளவரசிக்கு யாழ் கற்றுத் தர இசைகிறான்.

**கீதாசாலை :**

இளவரசி வாசவதத்தைக்கு யாழ் கற்றுத் தர உதயணனும், வாசவதத்தையும் கீதாசாலைஎனப்படும் இசைஅரங்கிற்கு வருகை புரிகின்றனர்.

**'பொத்தின்றமைந்த புனைவிற் றாகிச்
சொத்துற்றமைந்த சுதையில் செஞ்சுவர்
வெண்கோட்டு நெடுந்தூண் விதானந்துக்சித்
தேறவின்றோங்கிய திருநாறொரு சிறைக்
கீதசாலைவேதி நிறைய .........................
பண்ணமைநல்லி யாழ்ப் பலிகடன் வகீஇய**

போற்றுதலுக்குரிய குற்றமற்ற பொன்னாலும் , யானைத்தந்தத்தாலும் அமைக்கப்பட்ட நெடுந்தூண்களும், விதானங்களும் உடைய தெய்வத்தைப் போற்றிப் புகழும் கீதசாலையில் அமைந்தமேடையில் சாதிலிங்கப் பூவால் வழித்த அரக்கு நிலத்தில் வாசவதத்தையை நிறுத்தி பூசைசெய்த நல்ல யாழினை மீட்டுதற்கு உதயணனை துகில் விரித்த ஆசனத்தில் அமர்த்தி மற்றொரு ஆசனத்தில் வாசவதத்தையை இருத்தினர் என்று யாழ் பயிலத் தொடங்கும் நிகழ்வினையும் கீதசாலையின் பெருமையினையும் கூறுதல் வாயிலாக இசைக்கும்,யாழிற்கும் உரிய சிறப்பிடத்தைக் கூறுகிறார் ஆசிரியர்.

**வாசவதத்தை யாழரங்கேற்ற விழா :**



**வெந்திறல் வேந்தனுநன்றெனவருளி
வாயிற் கூத்துஞ் சேரிப் பாடலும்
கோயிநாடகக் குழுக்களும் வருகென
யாழுங் குழலுமரிச் சிறுபறையும்
தாழமுழவுந் தண்ணுமைக் கருவியும்
இசைசுவை தலீஇ யெழுபவுமெறிபவும்
விசைதெறி பாண்டிலொடு வேண்டுவபிறவும்
கருவியமைந்த புரிவளையாயமொடு
பல்லவையிருந்த நல்லாசிரியர்**

1 – 37 – 85 – 95

வேந்தர்களும், கூத்தர், பாடகர், கோயில் நாடக்குழு (அரண்மனைக்குழு) வருக என அரசன் கூற தாழமுழவு அரிச்சிறுபறை (தவளைஓசையுடையது) யாழும், குழலும், கஞ்சத்தாளம், தண்ணுமைக்கருவி எனும் தோல் கருவியும் முதலிய இசை மற்றும் கூத்துக் கலைஞர்கள் கீதசாலைக்கு வருகை புரிதலோடு அவையில் இசையாசிரியர்களும் கலந்துகொண்டனர் என்ற பாடல் வரிகள் இசை அரங்கேற்றத்திற்குரிய முக்கியத்துவத்தைக் குறிப்பதாக இருக்கிறது.

**வாசவத்தை இசைத்த யாழ்த்திறம் :**

**'பலிகெழுநல்யாழ் பாங்குறத் தழிஇக்
கின்னர கீதத்துக் கேள்வி மாந்தர்
முன்னுற நின்று மூதறி செவிலிறும்
.............................................. வணங்குறும் என
ஐவகைக் கதியுமற்ற மின்றித் தெய்வ
நல்யாழ் திருந்திழைதைவர
..............................................
நாற்பெரும் பண்ணுமெழுவகைப் பாலையும்**

**மூவேழ் திறத்தோடு முற்றக் காட்டி**
**..........................................**
**சுருக்கியும் பெருக்கியும் வலித்தும் நெகிழ்த்தும்**
**குறுக்கியு நீட்டியு நிறுப்புழ நிறுத்தும்**
**மாத்திரை கடவா மரபிற்றாகித்**
**..........................................**
**தேவகீத மொடுதேசிகந் தொடர்ந்த**
**நூலுஞ் செவியு நுண்ணிதினுனித்தே**
**யாழும் பாடலு மற்றமின்றி**
**விலக்கும் விடையும் விதியினறிந்து**
**துளக்கில் கேள்வித் தூய்மையின் முற்றி**
**வத்தவநாடன் வாய்மையிற் றருக்கும்**
**கொற்ற வீணையுங் கொடுங்குழை கொண்டனர்**
(1 – 37 – 125 – 145)

பூசனை செய்யும் மரபுப்படி பூசை செய்த யாழினை வாசவதத்தை யாழினை பிடிக்கும் முறைப்படி மடியில் இருத்தி தழுவி இசைக்க ஆரம்பித்தாள். செவிலித்தாய் கூற சபையோரைவணங்கினாள். லயகதியில் சோர்வின்றி தெய்வ நல்யாழினை மீட்டினாள். நால்வகைப் பண் (பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி), எழுவகைப் பாலை (செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை) பண்ணிலிருந்து பிறக்கும் (குறைந்தசுரம்திறம் எனப்படும்) திறம் போன்ற இசைநுணுக்கங்கள் முழுவதும் காட்டி மாத்திரை எனும் சுருதி விலகாமல் சுருக்கி, பெருக்கி, நீட்டிநிறுத்திவாசித்தாள். மற்றும் தானம், தேசிகம், போன்ற இசைவகைகளில் விளங்கிப்பாட, நூலறிவும், செவியறிவும், (கேள்வி) மிகவும் கூர்மையாக அறிந்த யாழும், பாடலும், மட்டுமின்றி ‘விலக்கு’ என்றபாட்டும், விடை என்ற விடுத்தலாகிய இசையும் நிலைபிறழாமல் குற்றமின்றி வேத இன்னிசை போல் உதயணன் கற்பித்தலால் வாசவதத்தை இனிதாக வாசித்தாள்.

வாசவதத்தையின் யாழ் அரங்கேற்றச் செய்தியில் பலவகைத் தாளம், இசை, பாட்டு போன்ற பலவகைப்பட்ட இசைநுணுக்கங்களைக் கூறிய ஆசிரியர் இத்தகைய இசையறிவு கற்றலாலு, கேட்டலாலும் விரிவாக அறியலாம் என்ற செய்தியினையும் குறிப்பிடுகிறார்.

**நிறைவுரை :**

இலக்கியம் ஈந்த அரும்பெரும் கலைக் கொடைகளில் இசைக் கொடையும் சிறப்பான ஒன்றாகும். பெருங்கதை எனும் இவ்விலக்கியத்தால் நாம் பெற்ற இசைக் கொடையினை உ.வே.சா.அவர்கள் அரும்பெரும்பாடுபட்டு பல்வேறு இடையூறுகளுக்கு இடையே பழஞ்சுவடிகளைத் தேடி அலைந்து பெற்று பதிப்பித்துள்ளர். இவ்வாறான இலக்கியங்களில அறிந்து போற்றிப் பாதுகாக்க வேண்டியது தமிழர்களாகிய நாம் பெற்ற பெறும் பேராகும்.

**பார்வை நூல்கள் :**

பெருங்கதை – உ.வே.சா.அவர்கள்,

இசைச் செல்வம் பெற்ற இலக்கியங்கள்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய நாட்டுப்புறவியலில் தமிழ்ப் பழமொழிகளும் தொடரியல் அமைப்பும் வகையும்

**முனைவர் ஆ ராஜகுமாரி**
உதவிப்பேராசிரியர் தமிழ்த்துறை
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி ஊத்தங்கரை.
arupa740@gmail.com

*****

**முன்னுரை**

நாட்டுப்புற மக்களின் பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும் நம்பிக்கைகளையும் இலக்கியங்களையும் ஆராயும் இயலே நாட்டுப்புறவியலாகும். ஒரு நாட்டின் வாழ்வையும் வரலாற்றையும் குறையையும் நிறையையும் தெளிவாகக் காட்டுவன வாய்மொழி இலக்கியங்கள். இவ்வாய்மொழி இலக்கியங்களில் ஒன்றான பழமொழிகள் தனக்கென சில பண்புகளைப் பெற்று மக்களின் வாழ்க்கையில் ஒன்றுடன் திகழ்கிறது எனலாம். பழமொழிகள் சுருங்கிய முழுத்தொடராகவும், பெரிய தொடர்களாகவும், வந்து தனது பொருளைத் தெளிவாக உணர்த்துகின்றன. இப்பழமொழிகளில் இடம்பெறும் தொடரியல் அமைப்பு வகைகள் பற்றி இக்கட்டுரை விளக்க முற்படுகிறது.

**தொல்காப்பியத்தில் பழமொழி**

பழங்காலத்திலிருந்தே மக்கள் வாழ்வில் வாழ்ந்து வருபவை பழமொழி. தமிழில் பழமொழிக்கு மூதுரை, முதுமை, மொழிமை, முன்சொல், பழஞ்சொல் என ஆறு சொற்கள் இருப்பதாக சேந்தன் திவாகரம் கூறுகிறது. பழமொழி என்ற சொல்லே மிகப் பழமையானவற்றை உணர்த்துவதாகும்.

தொல்காப்பியர் முதுசொல், முதுமொழி என்ற சொற்களால் பழமொழியைக் குறிப்பிட்டுள்ளார். பழமொழியின் தொன்மையை தொல்காப்பியம் நன்கு விளக்குகின்றது. தொல்காப்பியர்,

**'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மை என்று இவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்ததற்கு வருஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப'** (செய்.175)

என பழமொழியைப் பற்றி குறிப்பிடுகிறார். கருதிய பொருளை விளக்கும் வகையில் நுண்மை, சுருக்கம், தெளிவு, மென்மை ஆகிய இயல்புகளும் அமைந்திருத்தல் வேண்டும்.

**தொல்காப்பியத்தில் தொடரியல்**

தொல்காப்பியச் சொல்லதிகாரத்தை ஆராய்ந்து நோக்கின், தொடரியல் கருத்துக்களும், நுட்பங்களும் உள்ளமை தெரிய வரும். கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் போன்ற இயல்களில் காணப்படும் பல நூற்பாக்கள் இவ்வுண்மையைச் சுட்டிக் காட்டுவனவாக உள்ளன. கிளவியாக்கத்தில் ஐம்பத்திற்கும் மேற்பட்ட நூற்பாக்கள் தொடரியல் விளக்கத்தையே அளிக்கின்றன. வாக்கியங்களில் காணப்படும் பல்வேறு சொற்களின் முறை வைப்பு, இரு வாக்கியங்கள் இணையும் போது ஏற்படும் மாற்றங்கள் போன்றவை காணப்படுகின்றன. வேற்றுமை இயலில் வேற்றுமையை எட்டாகப் பிரித்து அவற்றின் உருபுகளைக் கூறிச் செல்லும் ஆசிரியர் அவ்வேற்றுமைகள் எத்தகைய வினைச் சொற்களை ஏற்று நிற்கும் என்பதையும் கூறுவது தொடரியல் விளக்கத்தை காட்டுவதாக உள்ளது.

**தொடரியல் அமைப்பு**

சொற்களும் சொல்லமைப்புகளும் தொடர்களாக முதலில் அமைந்து பின்னர் வாக்கியங்களாக அமைகின்றன. இவ்வமைப்பே தொடரமைப்பு என்றும், வாக்கிய அமைப்பு என்றும் அழைக்கப்படுகிறது. தொடர் என்பது ஓர் அலகாகவும் அடிப்படை விளக்கும் கூறாகவும் செயல்படுவதால் இவ்விளக்கம்

தொடரியல் விளக்கம் (ளலவெயஉவளைந னநளஉவசனிவழைஜெ) எனப்படுகிறது. இதனை வெளிப்படுத்தும் இயல் தொடரியல் (ளலவெயஒ) என்று பெயர் பெறுகிறது.

சொற்களும் சொல்லமைப்புகளும் தனித்தனியாகப் பொருண்மையை உணர்த்தினாலும் அவை ஒன்றோடொன்று தொடர்புபடுத்தும் நிலையில்தான் பொருண்மை வெளிப்பாடு தெளிவாகவும் உரிய முறையிலும் அமையும். எனவே தொடரில் இவ்வாறு சொற்கள் சொல்லமைப்புகள் அமையும் முறையே தொடர்முறை (முசனநச) எனப்படுகிறது. தொடர் அமைப்பு, தொடர் இலக்கணங்களை விளங்குவதே தொடரியல் மொழியில் ஆகும்.

**பழமொழிகளின் அமைப்பு**

பழமொழிகள் சுருங்கிய வடிவில் தான் கூறவந்த பொருளைத் தெளிவாக உணர்த்தும் தன்மையுடையனவாக உள்ளன. பழமொழிகள் ஒரு சொல் உடையதாக வருவதில்லை பெரும்பாலும் இரண்டிற்கு மேற்பட்ட சொற்கள் சொற்றொடராகவே வரும் தன்மையுடையவைகளாக உள்ளன. சான்றாக

**“எச்சில் கையால் காக்கா ஓட்டமாட்டான்”**

என்பதில் எச்சில் கையால் என்பது ஒரு சொற்றொடர், காக்கா ஓட்ட மாட்டான் என்பது மற்றொரு சொற்றொடர். இவை இரண்டும் இணைந்தே மேற்கூறிய பழமொழியை உருவாக்குகின்றன எனலாம். இதனால் பொருண்மையியல் தளத்தில் பழமொழிகளின் அமைப்பை தலைப்பு (வுழிஉை) என்றும் முடிப்புரை (ஊழஅஅநவெ) என்றும் இரண்டாக வகைப்படுத்தி கூறுவதைக் காணலாம். இம்முறையில் பழமொழியின் முதல் சொற்றொடரான ‘எச்சில் கையால்’ என்பது தலைப்பாகவும், இரண்டாவது சொற்றொடரான ‘காக்கா ஒட்ட மாட்டான்’ என்பது முடிப்பாகவும் அமைவதைக் காணலாம்.



**பழமொழியும் தொடரியல் சிந்தனையும்**

தொடரியல் என்பது சொற்கள் ஒன்றுக்கொன்று தொடர்ந்து நின்று அத்தொடரின் பொருளைக் கூறுபவனுக்கும் கேட்பவனுக்கும் தெளிவாக உணர்த்தும் தன்மையுடையது. மக்கள் தம் மனதில் உள்ள கருத்தினை வெளிப்படுத்த சொற்களைப் பயன்படுத்துகிள்றனர். ஆனால் அச்சொற்களின் பொருளைக் கேட்பவன் முழுமையாகவும் தெளிவாகவும் புரிந்து கொள்வதற்குத் தொடரியல் அமைப்பே உதவியாக இருக்கிறது. சான்றாக இக்கருத்தினை ஒரு பழமொழி மூலம் காண்போம்.

**‘ஊருக்கு அரசன் காவல், வீட்டிற்கு நாய் காவல்’** என்பதில் ஊர் என்பது இடத்தைக் குறிக்கும் சொல், அரசன் மன்னனைக் குறிக்கும் சொல், காவல் தொழிலைக் குறிக்கும் சொல் ஆகும். வீடு இடப்பெயராகவும் நாய் என்பது ஒரு விலங்கின் பெயராகவும் தனித்தனியாகச் சொல்நிலையில் பொருள்கொண்டால் இத்தொடரின் பொருளைத் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியாது. இதையே சரியான ஒரு தொடராக அமைத்துக் கொண்டு கூறும்போது தான் இதன் பொருளைக் கேட்பவன் எளிதாகப் புரிந்து கொள்வான் என்பதைப் பின்வரும் பழமொழி மூலம் அறியலாம்.

**‘ஊருக்கு அரசன் காவல், வீட்டிற்கு நாய் காவல்**’ என்ற பழமொழியின் பொருள் தெளிவாக உள்ளது. அதாவது ஒரு ஊரை அரசன் பாதுகாப்பாக பார்த்து கொள்வான். அதேபோல் ஒரு வீட்டை நாய் பாதுகாப்பாக பார்த்து கொள்ளும் என்னும் கருத்தைத் தெளிவாக இந்த பழமொழி காட்டுகிறது எனலாம்.

**தொடரியல் வகைகள்**

பழமொழிகள் பலவகை தொடரியல் அமைப்புகளில் அமைந்துள்ளன. இவைகள் தொடராகவும் வாக்கியங்களாகவும் அமைகின்றன. வாக்கியங்கள் குறைவாக்கியம், நிறை வாக்கியம் என இருவகைப்படுத்தலாம்.

**குறைவாக்கியம்**

ஒரு தொடர் முற்றுப் பெறாமல் எஞ்சி நிற்பது குறைவாக்கியம் எனப்படும். இது கிளவியம் என்றும் கூறப்படும் சான்றாக,

**“பாம்புக்குப் பால் வார்த்தாற்போல”**

ஏன்பதில் தொடர் முற்றுப் பெறாமல் நிற்கிறது. இப்பழமொழியை ஒருவரின் வஞ்சக தன்மையின் போதும், பிறருக்குத் தீமை ஏற்படுத்தும் போதும் இப்பழமொழிப் பயன்படுத்தப் படுவதுண்டு. இம்முறையில் வரும் வாக்கியம் குறை வாக்கியம் எனப்படும்.

குறை வாக்கியமாக இருப்பவைகளைத் தொடர் என்று குறிப்பிடுவதுண்டு. அவ்வாறு வரும்போது தன்னுடைய கருத்தைச் சூழலுக்கேற்ப மாற்றி பல வாக்கியங்களுடன் இணைத்துப் பொருள் உணர்த்துவதுண்டு. தொடர் அமைப்பு கொண்ட பழமொழிகள், ‘‘போல’’, ‘‘மாதிரி என பல சொற்களை இறுதியில் கொண்டு வருவதுண்டு. இதில் போல என்பது உவம உருபாகும்.

சான்றாக,

**‘இஞ்சி தின்ற குரங்கு போல’**
**‘இணைபிரியா அன்றில் போல’**
**‘பூனை கருவாட்டை வெறுத்த மாதிரி’**

போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

**நிறை வாக்கியம்**

நிறை வாக்கியம் என்பது ஒரு தொடர் முற்றுப்பெற்றுத் தனது முழுப்பொருளையும் உணர்த்தும் தன்மையுடையதாய் அமைந்திருக்கும்



சான்றாக,

**‘இளைத்தவன் எள்ளு விதை**
**கொழுத்தவன் கொள்ளு விதை’**

என்பதில் முழுப்பொருளும் தெளிவாக உணர்த்தப்படுவதைக் காணலாம். மெலிந்தவர்கள் எள்ளு விதையை உணவாகக் கொள்ள வேண்டும். உடல் பெருத்தவர்கள் கொள்ளை உணவாக கொள்ள வேண்டும் என்பது இப்பழமொழியாகும்.

**நிறை வாக்கியம்**

1. **தனிவாக்கியம்**
2. **இணைவாக்கியம்**

என இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது.

**தனிவாக்கியம்**

தனி வாக்கியமாக வருபவை வாக்கியம் முற்றுப் பெற்று முழு வாக்கியமாக வரும். இவை முழுப் பொருளையும் உணர்த்தும் தன்மையுடையவை. சான்றாக,

**‘வில்வம் பித்தம் போக்கும்’**

என்பது ஒரு தனி வாக்கியம். வாக்கியம் முற்றுப் பெற்று முழுப் பொருளையும் உணர்த்துவதைக் காணலாம் வில்வம் பித்தத்தை போக்கும் தன்மை கொண்டது என்பதை அறியமுடிகிறது. தனி வாக்கிய அமைக்களில் வரும்போது சில பழமொழிகள் வினா வாக்கிய முறைகளில் வருவதைக் காணலாம். சான்றாக,

**‘அடவி சென்றும் விறகுக்குப் பஞ்சமா?’**

என்ற பழமொழி வினா வாக்கிய முறையில் அமையும் தொடர்கள் ஆகும். இறுதியில் வருமா, ஆகுமா, ஆடுமா, ஏன் என்ற சொற்களையே கொண்டு முடிகின்றன. சான்றாக,

**‘தனி மரம் தோப்பாகுமா?’**
**பதில்: ஆகாது.**
**‘உடையவன் பாராப்பயிர் உருப்படுமா?’**
**புதில்: உருப்படாது.**
**‘முடிமுடியாய் நட்டால் பிடிபிடியாய் விளையுமா?’**
**புதில்: விளையாது**
**கோழி மிதித்து குஞ்சு சாகுமா?**
**பதில்: சாகாது.**

பெரும்பாலும் கேள்வி முறையில் அமைந்துள்ள பழமொழிகளுக்கு விடையாக வருபவைகள் எதிர்மறைப் பொருளில் அமைவதைக் காணலாம்.

**இணை வாக்கியம்**

பழமொழிகளில் சில இரண்டற்கு மேற்பட்ட வாக்கியங்கள் ஒன்றாக இணைந்து இணை வாக்கியமாக அமைந்தும் வருவதுண்டு. சான்றாக,

**‘கல்யாணம் பண்ணியும் சந்நியாசி**
**கடன் வாங்கியும் பட்டினி’**



என்ற பழமொழி இருவாக்கியங்களைக் கொண்டுள்ளதைக் காணலாம். திருமணம் ஆகியும் திருமண பந்தம் சரியாக இல்லை என்றும் கடன்வாங்கி பணத்தேவை நிறைவாகியும் வயிறு நிறையவில்லை என்பதையே இப்பழமொழிக் குறிப்பிடுகின்றது. இணைவாக்கியம் மூன்று பிரிவுகளைக் கொண்டுள்ளது. அவை கூட்டு வாக்கியம், கலவை வாக்கியம், வினா வாக்கியம் ஆகும்.

ஒரு மொழியில் வழங்குகின்ற சொற்கள், தொடர்கள், வாக்கியங்கள் போன்றவை ஏதேனும் ஒரு பொருண்மையை வெளிப்படுத்துகின்றன. அவ்வாறு வெளிப்படுத்தும் பொருளானாது ஏதேனும் ஒரு முறைமையினைக் கொண்டு விளங்குகின்றது. சாம்ஸ்கி, ஹாரிஸ் போன்ற அறிஞர்கள் தொடக்கத்தில் தொடரமைப்பு விதிகளை உருவாக்கி தொடரிலக்கணம் வகுத்து அவற்றை முறைப்படுத்தினர். இவற்றின் வழி வாக்கியமோ, தொடரோ, அல்லது சொற்களின் முழுமைத் தன்மையை அறியமுடிகின்றது.

**முடிவுரை**

இதுவரை மேலே கூறிய கருத்துக்கள் மூலம் பழமொழியில் தொடரியல் அமைப்பு பல வகைகளில் அமைவதைக் காணலாம். ஒரு மொழியில் உள்ள கருத்துக்களைப் புரிந்துக் கொள்வதற்குத் தொடரமைப்புக் குறையுடையதாக இருந்தால் தொடரின் முழுப்பொருளைப் புரிந்து கொள்ள முடியாது. பேச்சு வழக்கில் குறை வாக்கியங்களாக அமைந்துள்ள பழமொழிகள் தனது பொருளை மற்ற பொருள்களுடன் ஒப்பிட்டுப் பார்த்துப் பொருள் அறியுமாறு அமைந்துள்ளன. முழு வாக்கியமாக வரும்போது பழமொழிகள் பலவகை வாக்கியங்களாக அமைந்து பொருள் உணர்த்துகின்றன என்பதை காணமுடிகின்றது.

**துணை நூல்கள்**

1. சக்திவேல்.சு - தமிழ்ப் மொழிகள் ஓர் ஆய்வு
தமிழ்ப் பல்கலைக்கழகம்.
தஞ்சாவூர், 2004.

2. சுப்பிரமணியன் .ச.வே - தொல்காப்பியம் தெளிவுரை மணிவாசகர் பதிப்பகம், சென்னை, ஆறாம்பதிப்பு 2003.

3. தமிழண்ணல் - தொல்காப்பியம்(சொல்லதிகாரம்) மீனாட்சி புத்தக நிலையம், 2010.

4. துரை பட்டாபிராமன் (போன்றோர்) - தற்காலத் தமிழ்மொழி அமைப்பு மொழியியல் இரண்டாமாண்டு, பாடநூல், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்.

5. நடராசன் ஆ.கோ - மொழியியல் வரலாறு மொழியியல் முதலாமாண்டு, பாடநூல், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# தமிழ் மொழியும் இந்திய அரசியலமைப்பும்

**முனைவர் ஆ ரூபா**
உதவிப் பேராசிரியர்- தமிழ்த்துறை .
அதியமான் மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி - ஊற்றங்கரை
arupa740@gmail.com

*****

## நுழைவுவாயில்

பண்டைய கால கல்விமுறையை வைத்து ஒரு நாட்டின் மொழியின் வளர்ச்சியையும் வீழ்ச்சியையும் அறியமுடியும். அவ்வகையில் தொடக்க காலம் முதற்கொண்டு தற்காலம் வரை உள்ள தமிழ்மொழிக்கல்வியின் நிலையை அறிந்தால் தமிழ்மொழியின் நிலையைத் தெளிந்த நீரோடை போல அறிய இயலும். ஒருவரின் அடையாளம் அவர்கள் பேசும் மொழியில் தான் உள்ளது. தமிழர்களின் அடையாளமாக மொழி, பண்பாடு, கலாச்சாரம், கலை என்று பலவிருந்தாலும் முதன்மை பெறுவது அவர்களின் மொழியே. அத்தமிழ்மொழியானது தொடக்க காலத்திலிருந்து தற்காலம் வரை தடைகளையும் தாண்டி பல்வேறு சீர்திருத்தங்களுக்கு உட்பட்டு பல்வேறு மாற்றங்களையடைந்துள்ளது எனலாம். மொழியானது மதம், சமயம், இனம், நாட்டு எல்லை என கடந்து பரவியிருக்கக் கூடிய ஒன்று. மொழியின் வளர்ச்சியினைக் கால கட்டம் அடிப்படையில் வகைப்படுத்தும்பொழுது சங்க காலம், களப்பிரர் காலம், பல்லவர் காலம், சைவ சமயம், வைணவ சமயம், சமணர்காலம், சேரர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், முகமதியர் காலம், நாயக்கர் காலம், கிறித்தவர்காலம் என்று பகுக்கலாம். இப்படி பல்வேறு கால கட்டங்களில் இருந்த மொழியானது சுதந்திர இந்தியாவில் எந்நிலையை அடைந்துள்ளது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

## தமிழ் மொழியின் நிலை

கால கட்டத்தின் அடிப்படையில் பார்க்கும்பொழுது தமிழ் மொழியானது வளர்ந்தும் வீழ்ந்தும் வந்துள்ளது. ஆரம்ப காலத்தில் தங்களின் சமயங்களைப் பரப்புவதற்கே சமய வாதிகள் வந்தாலும் காலப்போக்கில் தமிழ்மொழியைக் கற்றும் தங்களின் சமயக்கருத்துக்களை எடுத்துரைக்க வேண்டி சில நூல்களை எழுதியும் மொழிபெயர்த்தும் வந்துள்ளனர் என்பது நோக்கத்தக்கது.

பதினெட்டாம் நூற்றாண்டில் பள்ளு, குறவஞ்சி, உலா, தூது, பிள்ளைத்தமிழ் என்று சிற்றிலக்கிய காலமாக இருந்தது. இக்காலக்கட்டத்தில் கிறித்துவ பாதிரிகள் தமிழ் மொழியைக் கற்று பல்வேறு சீர்திருத்தங்களையும் தமிழ் மொழியை அச்சேற்றியும் அழகு பார்த்தனர். ஆனால் அதே காலகட்டத்தில் ஆங்கில மொழியும் ஆதிக்கம் செலுத்த தொடங்கியது. ஆங்கில மொழியின் வளர்ச்சிக்கு பிறகு தமிழ் மொழியானது பாட மொழியாக இல்லாமல் வீட்டு மொழியாகவும் புழங்கு மொழியாகவும் இருந்தது என்பது வெள்ளிடை.

**இந்திய அரசமைப்பும் தமிழும்**

வரலாற்று நிகழ்ச்சிகளின் காரணமாக தமிழ் மொழியில் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் அந்நிய மொழிகளின் ஆதிக்கங்கள் குறிப்பாக ஆங்கில மொழியின் கலப்பு நேர்ந்தது. இதன் காரணமாக பயிற்று மொழியில் குழப்பம் ஏற்பட்டது. இதன் விளைவாக 1835 ஆம் ஆண்டு மெக்காலே கல்வித்திட்டம் கொண்டு வரப்பட்டது. அந்நேரத்தில் இந்திய அரசு ஆங்கில மொழியையும் இந்தியையும் ஆதரித்தது. வட்டார மொழி என்றளவிலே தமிழ் மொழியானது சுருங்கி நின்றது. இதனை

"இந்திய அரசமைப்புச் சட்டம் மொழி பற்றி கூறும் பகுதி 17, பிரிவு 343 (1) தேவநாகரி எழுத்துருவில் உள்ள இந்திதான் இந்திய ஒன்றியத்தின் ஆட்சி மொழி என்கிறது. 343 (2) உடனடியாக இந்தியைப் பயன்பாட்டில் கொண்டு வருவதில் உள்ள சிக்கல் கருதி அரசமைப்புச் சட்டம் உருவாக்கப்படும் இந்த 1950 ஆம் ஆண்டிலிருந்து ஒரு பதினைந்து ஆண்டு காலத்திற்கு ஆங்கிலம் பயன்பாட்டில் இருந்து வரும் என்கிறது.

இந்த பதினைந்து ஆண்டுகள் கழித்து இந்தியா முழுமையும் இந்தியைத் திணிக்கும் நோக்குடன் தான் இதற்கு இரண்டு ஆண்டுகள் முன்னதாகவே தில்லி அரசு இந்திய ஆட்சிமொழிச் சட்டம் 1963 ஐ கொண்டு வந்தது எனில் அதற்குக் கடும் எதிர்ப்பு கிளம்பியதில் அது 1965 மொழிப் போராட்டமாக வெடிக்க அதன்பிறகு தான் இந்தித் திணிப்பைத் தற்காலிகமாகத் தள்ளிவைத்து 1967 இல் ஆட்சி மொழிகள் திருத்தச் சட்டத்தைக் கொண்டு வந்து பழைய படியே ஆங்கிலம் நீடிக்க வகை செய்தது தில்லி அரசு.

344 வும் அதன் உட்பிரிவுகளும் இந்தி மொழிப் பயன்பாட்டிற்கும் வளர்ச்சிக்கு ஆணையம் அமைத்தல் மற்றும் அதன் செயல்பாடுகள் பற்றிக் கூறுகிறது. 345, 346, 347 ஆம் பிரிவுகள் முறையே மாநிலங்கள் தங்கள் பயன்பாட்டிற்கான மொழி, மாநிலங்களுக்கிடையேயான தொடர்புக்கான மொழி மாநிலங்களில் உள்ள மொழிச் சிறுபான்மையினர் உரிமைக்கான வாய்ப்பு பற்றிக் கூறுகிறது.

இதில் பிரிவு 345 இன் அடிப்படையில்தான் தமிழ் நாட்டில் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் 1956 இல் நிறைவேற்றப்பட்டது. 348 (1) உயர் நீதி மன்றங்களில் ஆங்கிலம் தான் அலுவல் மொழி என்கிறது. என்றாலும் இதில் பிரிவு (2) ஒரு மாநிலச் சட்ட மன்றம் தீர்மானம் நிறைவேற்றி ஆளுநர் மூலம் குடியரசுத் தலைவர் ஒப்புதலைப் பெற்றால் அந்தந்த மாநில மொழிகளையே உயர் நீதிமன்ற அலுவல் மொழியாக வைத்துக் கொள்ளலாம் என்கிறது.

ஆனால் 1967 இலிருந்து திராவிட இயக்கக் கட்சிகளே தமிழகத்தை மாற்றி மாற்றி ஆண்ட பின்னும் ஒரு கட்சி கூட இச்சட்டத்தைப் பயன்படுத்தி சென்னை உயர் நீதிமன்றத்தில் தமிழை ஆட்சி மொழியாக்க முயலவில்லை என்பதை ஏற்கனவே பார்த்தோம்.

பிரிவு 349 மொழி தொடர்பான சில சட்டங்களைச் செய்யும் உரிமை, பிரிவு 350 மக்கள் குறை தீர்ப்பதற்கான வேண்டுகோள் மனுக்களுக்கான மொழி, பிரிவு 351 தொடக்க நிலைக் கல்வியைத் தாய் மொழியில் கற்பதற்கான உரிமை பிரிவு 352, மொழிச் சிறுபான்மையினர்க்கான சிறப்பு அலுவலர் நியமனம் ஆகியவை பற்றிக் கூறுகிறது.

பிரிவு 351 இந்தி மொழி வளர்ச்சிக்கான வழிவகைகள் ஊக்கங்கள் பற்றி இந்திய அரசின் கடமையை வலியுறுத்துகிறது.

ஆக இந்திய அரசமைப்பின் இப்பிரிவுகள் இந்திய மொழிகளுக்குள் ஏற்றத் தாழ்வு கற்பித்து, இந்திதான் இந்தியாவின் ஆட்சி மொழி என அறிவித்து மற்ற மொழிகளை இரண்டாம் பட்சமாக்குகிறது. பத்து நூற்றாண்டு கூட வரலாறு இல்லாத இந்தியை ஆட்சி பீடத்தில் வைத்து மூவாயிரம் ஆண்டுத் தொன்மையும் வளமும் மிக்க தமிழை வட்டார மொழி என்கிறது. இந்தி மொழியின் வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும், நிதியுதவியும் தந்து பிற மொழிகளைப் புறக்கணிக்கிறது. இதன்மூலம் மொழிகளுக்குள்ளே ஏற்றத்தாழ்வு கற்பித்து மொழிகளின் சமத்துவத்தை மறுக்கிறது.



போதாக்குறைக்கு இந்திய அரசமைப்பு உருவாக்கத்தின் போது மாநிலப் பட்டியலில் இருந்த கல்வியை 1976 இல் அவசர நிலை காலத்தின் போது பொதுப்பட்டியலுக்கு மாற்றி தமிழகக் கல்வியிலும் தில்லி ஆதிக்கம் செலுத்துகிறது.

எனவே “தற்போதுள்ள அரசமைப்புச் சட்டம், தில்லி ஆட்சி, தமிழக ஆட்சி, இவற்றின் பின்னேயுள்ள ஆதிக்க சக்திகள், ஆங்கில இந்தி மொழிகளுக்கு அதன் துணைபோகும் தன்மை, மக்களது மனநிலை, விழிப்புணர்ச்சி, ஆகிய அனைத்து அம்சங்களையும் நாம் கவனத்தில் கொண்டே இதன் அடிப்படையிலேயே நாம் தமிழ் உரிமை காக்கும் கோரிக்கைகளைக் கோட்பாட்டு ரீதியில் முன் வைக்க வேண்டும். அதற்காக மக்களைத் திரட்டிப் போராட வேண்டும். தமிழ்நாட்டில் தமிழே கல்வி மொழி, தமிழே ஆட்சி மொழி, தமிழே தொடர்பு மொழி, என்பதை உருவாக்க பாடுபட வேண்டும்” என்று இராசேந்திரசோழன் கூறுகிறார்.

“பிரிட்டி‘ காலனியாதிக்கக் காலத்தில் ஆங்கிலமொழி அரசின் மொழியாகக் கொலுவீற்றிருந்தது. எனவே தமிழ்மொழி இயல்பாகவே இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டது.

காலனியாதிக்கத்திலிருந்து விடுபட்ட காலத்தையொட்டி, எழுச்சி பெற்ற தேசிய மொழி இயக்கம், இந்திய தேசிய வன்முறை அமைப்பாலும் தமிழ்த்தேசிய துரோகத் தலைமையாலும் பலகீனமடைந்திருந்தது.

பிரிட்டி' காலனியாதிக்க அரசின் நிர்வாக, அலுவல் மொழியாக ஆங்கிலமே இருந்தது. 1861 க்குப் பிறகு ஆங்கிலம் பயன்படுத்தப்பட்டு வந்தமையில் சிற்சில மாற்றங்களுக்குப் பிரிட்டி' ஏகாதிபத்தியம் வழிவிட்டது. அதாவது, 1861 இந்திய மன்றங்கள் கூட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட உள்;ர் நிர்வாக மன்றச் சட்டங்களில் ஆங்கில மொழியை அல்லது வேறு ஏதேனும் மொழியைப் பயன்படுத்திக் கொள்ளும் உரிமை தரப்பட்டிருந்தது. இந்த நிலையே மாநில சட்டமன்றம், மத்திய சட்டமன்றம் ஆகியவற்றுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. மாகாண, மத்திய சட்ட மன்றங்களில் நடவடிக்கைகள் பொதுவாக ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டுமென்றும், ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறாதோர் வேறு மொழியைப் பயன்படுத்தலாமென்றும் குறிப்பிடப்பட்டது (சட்டப்பிரிவு எண்:85,1935). ஆட்சி மொழிக் கொள்கை குறித்து எவ்வித விவாதமுமின்றி ஆங்கிலமே கொண்டுவரப்பட்டது.'' என்பது குறிப்பிடத்தக்கது.

**இருபதாம் நூற்றாண்டில் தமிழ் மொழி**

தமிழ்நாட்டின் ஆட்சிமொழியாகத் தமிழ் மொழி இருப்பதால் அலுவலகங்களில் குறிப்புகளும் ஆணைகளும் தமிழ் வெளிவந்து கொண்டு இருக்கிறது. தமிழ் வளர்ச்சிக் கழகங்கள் தமிழ் அகராதிகளும் குழந்தைகள் கலைக்களஞ்சியமும் வெளியிடப்பட்டுள்ளது. தமிழ் மொழியில் உள்ள நூல்கள் பிற மொழியிலும் பிற மொழியில் உள்ள இலக்கியங்கள் தமிழ் மொழியிலும் பெயர்க்கப்பட்டு வருகின்றன. ஆனால் எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்பது ஏட்டளவிலே உள்ளது என்பது இன்றைய மொழியின் நிலையை வைத்து அறிந்து கொள்ளலாம்.

**தமிழ்மொழிக் கல்வியின் இன்றைய நிலை**

"இந்திய தேசிய விடுதலைக்குப் பிறகும் தமிழ்நாட்டில் ஆங்கிலத்தின் இடம் அகற்றப்படவில்லை. எனவே தமிழ்நாட்டில் இருக்கும் தமிழர்களை மொழிப்பயன்பாட்டு அடிப்படையில் மூன்று வகைகளாகப் பகுக்கலாம் என்கிறார் பேராசிரியர் தி.சு.நடராசன். முதலாவதாகப் பெரும்பான்மையாகவும் இயல்பாகவும் தமிழை வழங்குகிறவர்கள். இவர்கள் பெரும்பான்மையானவர்கள். இவர்களிடம் தமிழ் உலவுகிற இடங்கள்: வீடு, தெரு, மேடை பத்திரிக்கை, கல்வியில் ஒரு பகுதி. அடுத்து இரண்டாம் தரப்பினர் - இவர்கள் மயங்கியும் தயங்கியும், போனால் போகிறது என்ற நினைப்போடு (with reluctance) தமிழை வழங்குகின்றவர்கள். இவர்களுக்கு ஆங்கிலம் சரளமாகத் தெரியாது. எனவே, தமிழா ஆங்கிலமா என்று தீர்மானிக்க முடியாமல், இரண்டுமில்லாமல் இரண்டையும் பல சமயங்களில் வலியக் கலந்து பேசுகின்றனர். இதனை ஒரு நாகரிகமாகக் கருதுகின்றவர்கள் இவர்கள். இனி, மூன்றாவதாக, இவர்களிலும் அடுத்த உயர்ந்த நிலையிலிருக்கிறவர்கள். சிறுபான்மையான

இவர்கள் மத்தியில், தமிழ் வலியவோ, இயல்பாகவோ தவிர்க்கப்படுகிறது. ஆங்கிலம் அந்த இடத்தைப் பிடித்துக் கொள்கிறது. ஆனால், இவர்களிடம், தமிழ், அடுப்படிகள், பின்கட்டுகள், சம்பிரதாயங்கள் முதலிய சூழல்களில் மட்டும் வாழ்கிறது என்பார் அவர். தமிழ்நாட்டில் வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருப்பினும் தமிழே தெரியாது என்று சொல்லிக்கொள்ளுவதில் பெருமை கொள்ளும் தமில(ழ)ர்கள், தமிழகப் பெருநகரங்களில் வாழுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அதற்கேற்பவே தமிழே படிக்காமல் தமிழ்நாட்டில் மேல்நிலைக் கல்வி வரையிலும் போய்விட முடியும் என்பது முக்கியமானது.'' என்கிறார்.

ஒரு வகுப்பில் மூதுரையைத் தமிழ் ஆசிரியர் நடத்திக் கொண்டிருந்தார். சான்றோர்கள் எவ்வளவு துன்பம் வந்தாலும் உயர்வான நிலையிலிருந்து இறங்க மாட்டார்கள் என்பதை விளக்கமாகப் பாடம் எடுத்தார் ஒரு மாணவி எழுந்து ஆசிரியையிடம், ஏன் சான்றோர்கள் மாடி வீட்டிலிருந்து கீழே இறங்க மாட்டார்கள்?" என்று கேட்டாள். அந்த அளவிற்கு இன்றைய தலைமுறைக் குழந்தைகளின் தமிழ் அறிவு இருக்கிறது. குழந்தைகளைச் சொல்லிக் குற்றமில்லை. வீட்டில் ஆங்கிலம், பள்ளியில் ஆங்கிலம், நண்பர்களுடன் ஆங்கிலம் என்று இருந்தால் தமிழ் மொழியில் சரளம் எப்படி வரும்? குழந்தைகள் படிப்பது ஆங்கில நாளிதழ்களையும் ஆங்கிலக் கதைப் புத்தகங்களையும் தாம். இவையனைத்தும் சேர்ந்து இந்தத் தலைமுறையினர்க்கு ஆங்கிலம் தாய்மொழி போல் ஆகிவிட்டது. தமிழ் அந்நிய மொழி போல் ஆகிவிட்டது.'' என்று கூறியுள்ளார்.

தமிழ்மொழி வழிக் கல்வியின் முக்கியத்துவம் மக்கள் மத்தியில் எடுத்துச் செல்லப்படவில்லை என்பார் அறிஞர் மணவை முஸ்தபா. கண்ணுக்குத் தெரிந்து தங்கள் குழந்தைகளின் எதிர்க்காலம் அழிகிறது என்ற அச்சத்தினாலும் சமுதாயத்தில் தங்கள் குழந்தைகள் நன்றாக வாழ வேண்டும் என்ற காரணத்தினாலும் அவர்கள் தமிழ்வழிக் கல்வியை மறுக்கின்றனர் என்பதை கீழ்க்கண்ட கருத்துக்களால் விளங்குகின்றன. ''தாய்மொழிக் கல்வி மூலம் ஒருவர் சிந்தனை ஆற்றலைப் பெறமுடியும் என்ற அறிவியல் உண்மை உரிய முறையில் மக்களிடையே உணர்த்தப் படவில்லை. தாய்மொழி வழிக்கல்வி மூலம் எந்தத் துறைச் செய்தியையும் திட்ப நுட்பமாக அறிந்துணர முடியும் என்பதை உரிய முறையில் உணர்ந்திருந்தால் தாய்மொழி வழிக் கல்வியே நிலை பெற்றிருக்கும். ஆங்கில வழி மனப்பாடக் கல்வி மாணவர் உலகிலிருந்து விடை பெற்றிருக்க முடியும். தமிழ் வழியில் பள்ளிக் கல்வியை முடித்து, கல்லூரிக் கல்வியை ஆங்கில மொழிவழித் தொடரும் மாணவர்கள் ஆங்கில அறிவைப் பெருக்கிக்கொள்ள ஓரிரு ஆண்டுகளைச் செலவிட நேர்கிறது. இதனால் பள்ளியில் திறம்பட்டவனாகத் திகழ்ந்த மாணவன் பாடங்களை ஆங்கில மொழியில் முழுமையாகப் புரிந்து கொள்ளப் போதிய அவகாசமின்மையால் திறன் குறைந்தவர்களாக மாற நேர்கிறது'' இதனால் பெற்றோர்கள் தமிழ்வழிக் கல்வியைக் காட்டிலும் ஆங்கில வழிக் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றனர் என்பது நோக்கத்தக்கது.

**நிறைவாக**

தமிழ் எழுத்து நடையிலும் பேச்சு வழக்கிலும் பிற மொழி சொற்கள் கலந்திருப்பதால் தமிழ் மொழியே அந்நிய மொழிபோல் இன்றைய மக்களிடம் உள்ளது. இந்திய அரசியலமைப்புச் சட்டங்களும் கல்வி நிலையங்களும் வேலை வாய்ப்புகளும் ஆங்கில மொழியின் அடிப்படையிலேயே உள்ளதால் தமிழ் மொழி நிலை மங்கி காணப்படுகிறது. தமிழ் மொழியைப் பயின்றாலும் ஆய்வு செய்தாலும் செம்மையாக வாழ இயலும் என்பதை மாணவ சமுதாயமும் மக்களும் அறியும் வாய்ப்பு ஏற்படுத்தப்படுதல் வேண்டும். பிற மொழி அறிவு வேண்டும். ஆனால் தமிழ் மொழி நிராகரிக்கப்படுதல் தவிர்க்கப்படுதல் வேண்டும் என்பதே கருத்தில்கொள்ளப்பட வேண்டியது.

**துணை நின்ற நூல்கள்**

1. இராசேந்திரசோழன், தமிழே கல்விமொழி, ஆட்சி மொழி, தொடர்பு மொழி, பக் - 31, 32
2. கி.பார்த்திபராஜா, தமிழ் மொழி அரசியல், ப – 180
3. மேலது, பக் - 181, 182.
4. முத்தமிழ் ராஜ்குமார்) (டாக்டர் விஜயலட்சுமி இராமசாமி(தொ.ஆ), கற்பித்தலில் சிக்கல்கள் தீர்வுகள் ப – 12
5. கி.பார்த்திபராஜா, தமிழ் மொழி அரசியல், ப - 184
6. அ.குமரேசன்(த), உலகமயமாக்கல் காலத்தில் ஆங்கிலமும் ‘இதரமொழிகளும்’, ப – 19
7. இராசேந்திரசோழன், தமிழே கல்வி மொழி, ஆட்சி மொழி, தொடர்பு மொழி, ப – 21



(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்தியா போற்றும் தமிழர் பண்புகள்

**முனைவர் வெ.பரமசிவம், உதவிப் பேராசிரியர், தமிழிலக்கியத்துறை,**
துவாரகதாஸ் கோவர்தன்தாஸ் வைணவக் கல்லூரி (தன்னாட்சி), சென்னை,
vpsivam1979@gmail.com

*****

**முன்னுரை**

உலகில் வாழ்ந்த/வாழும் மாந்தக்குழுக்கள் ஒவ்வொன்றும், தாம் வாழும் சூழலுக்கு ஏற்பப் பல்வேறு வகையான நடைமுறைகளைப் பின்பற்றி வாழ்ந்தன/வாழ்கின்றன. அவற்றுள், உலகோரால் உயர்ந்தனவாகக் கொண்டாடப்படுவன எக்காலத்திலும் எந்நாட்டில் வாழ்வோராலும் பின்பற்றப்படும். அவ்வகையில், உயர்ந்தனவாகக் கருதித் தமிழர்கள் கடைப்பிடித்த உலகோர் வியந்து போற்றும் பண்புகளுள் சிலவற்றை எடுத்துக்காட்டும் வகையில் இக்கட்டுரை அமைகிறது.

**குறிச் சொற்கள்**

# பண்பாடு # தமிழர் பண்பு # குறிஞ்சிப்பாட்டு # ஓரறிவுயிர்கள் # யாதும் ஊரே #பாரதியார் # கணியன் பூங்குன்றன் # களவுவழிவந்த கற்பு # பகுத்துண்டு வாழ்தல்.

**பண்பாடு – சொல் வரையறை**

பண்பாடு என்ற சொல்லுக்கு அறிஞர் பெருமக்கள் பல விளக்கங்களைத் தந்துள்ளனர். அவற்றுள், தனிநாயகம் அடிகளின், “பண்பாடு என்றால் ஓர் இனத்தாரின் கொள்கைகள், கோட்பாடுகள், நோக்கங்கள், இலட்சியங்கள், வாழ்க்கைமுறைகள், பழக்கவழக்கங்கள், சமூகச் சட்டங்கள், சமயங்கள், வழிபாட்டு முறைகள், களவொழுக்கம், கற்பொழுக்கம், அகத்திணை புறத்திணை மரபுகள், இலக்கிய மரபுகள், அரசியலமைப்புகள், ஆடைஅணிகலங்கள், திருவிழாக்கள், உணவு, பொழுதுபோக்கு விளையாட்டுகள் இவற்றையெல்லாம் குறிக்கும்”(ப.18) என்ற விளக்கமும் தெ.பொ.மீனாட்சி சுந்தரத்தின், “பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம்”(ப.1) எனும் விளக்கமும் சுட்டத்தக்கன. இவற்றிலிருந்து, மாந்த வாழ்வில் பின்பற்றப்படும் ஒவ்வொன்றிலும் சிறந்தவற்றையே பண்பாடு எனக் கொள்வது சாலப் பொருந்தும்.

**ஆரியர்க்கு உணர்த்திய தமிழர் பண்பு**

பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்று குறிஞ்சிப்பாட்டு. அதனை இயற்றியவர் கபிலர். அது, ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழர்தம் அகவாழ்வின் சிறப்பினைக்கூற எழுந்த நூல். தமிழர் பின்பற்றிய கற்பு வாழ்வு இரண்டனுள் களவுவழிவந்த கற்பின் சிறப்பினைக் கூறுவது. அதனைக் கூறவந்த கபிலர், குறிஞ்சி நிலத்திலிள்ள கருப்பொருள்களின்வழி அந்நில மக்களின் ஒட்டுமொத்த வாழ்வினையும் பதிவு செய்துள்ளார். பெரும்பாலும் களவின்வழிவாராக் கற்பின்படி வாழ்ந்தவர்களுக்கிடையில், ஓரிருவர் களவு வாழ்க்கையில் ஈடுபட்டாலும், அவர்களும் மணம் புரிந்துகொண்டு இல்லறம் நடத்துவதே தமிழர் பண்பு என்றும், திருமணம் செய்துகொள்ளாமல் பிரிந்து செல்வது தமிழர்தம் வாழ்வுமுறையன்று என்றும் உலகிற்கு உணர்த்திய நூல் அது. அதாவது, களவு வாழ்வும் ஒருவகையில் அறவழிப்பட்டதே எனும் தமிழர்தம் உயர் பண்பு அந்நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**உயிர் இரக்கப் பண்பு**

நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக ஆயிரக்கணக்கான போர்களை நடத்தி, இலட்சக்கணக்கான உயிர்களை இரக்கமின்றிக் கொல்லும் இனங்களுக்கிடையே,

**“புல்லும், மரனும் ஓர் அறிவினவே**
**பிறவும் உளவே, அக்கிளைப் பிறப்பே** ”(தொல்.பொருள்.மரபியல்: 28)

எனப் புல்லிற்கும் மரத்திற்கும் உயிர் உண்டு உணர்வு உண்டு என்பதனை அறிந்து, அவற்றையும் தம்முயிர்போல் எண்ணி வாழ்ந்த இனம் தமிழினம். அதனால்தான், ஓர் உயிரைக் காக்க ஒரு மரத்தின் பட்டை முதலானவை பயன்படுமென்றால், அதனை அளவாகக் கொண்டனர். அளவுக்கதிகமாக அதிலிருந்து எடுப்பதனால் அம்மரம் அழிந்துபோகுமென்றால் அச்செயலை அறவே தவிர்த்தனர். இச்செய்தியை,

**“மரஞ்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்”**(நற்றிணை:226:1)

என்ற கணியன் பூங்குன்றன் பாடலால் அறிய முடிகிறது. இப்படிப்பட்ட உயிரிரக்கப் பண்பினை பாரதத்திற்கு மட்டுமன்றி உலகிற்கே உணர்த்தியவன் தமிழன்.

**உலகமும் உறவுகளும்**

மண்ணைத் தாண்டி விண்ணின் பிற கோள்களில் வாழத்துடிக்கும் மாந்தக்குழுக்கள் அதற்கேற்ற கருவிகளைக் கண்டுபிடித்து இயக்கி, அல்லல்பட்டுத் திரிகின்றன. 21-ஆம் நூற்றாண்டிலும் தன் குடும்பம், தன் ஊர், தன் நாடு எனத் தனித்துவம்பேசி அலைகின்றன. ஆனால், அறிவியல் கருவிகளின் ஆர்ப்பாட்டமில்லாமல் அன்பு வாழ்வு வாழ்ந்த தமிழன் அன்றே உலகிலுள்ளோர் அனைவரையும் தன் உறவினன் என்றான். மேலும், ஏதேனும் ஒரு நல்வாய்ப்பினால் ஒருவர் ஒரு சிறந்த செயலைச் செய்தால் அவர்களை வியந்து போற்றியும் அவ்வாறு செய்யமுடியாதவர்களை இழித்துத் தூற்றியும் வாழ்ந்த பண்பும் அவனிடம் இல்லை. இக்கருத்துகளை,

**“யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**..........மாட்சியின்**
**பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே”** (புறம்.:192)

எனும் கணியன் பூங்குன்றனின் பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

ஒரு நாட்டிற்குள்ளேயே சாதி, மதம், இனம், மொழி என்று மாந்தன் பிரிந்து கிடந்த வேளையில், அந்தப் பிரிவு எல்லைகளைத் தகர்த்தெறிந்து ஒற்றுமை காண விழைந்தவன் பாரதி. அதனால்தான் அவனுடைய கவிதை வரிகள்,

**“சிந்து நதியின் மிசை நிலவினிலே**
**சேர நன்னாட்டிளம் பெண்களுடனே**
**சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து**
**தோணிக ளோட்டி விளையாடி வருவோம்**
**கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்**
**காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்**
**சிங்க மராட்டியர்தம் கவிதை கொண்டு**

**சேரத்துத் தந்தங்கள் பரிசளிப்போம்
சிங்களத் தீவினுக்கோர் பாலம் அமைப்போம்
சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்
வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்
மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்"**
(சுப்பிரமணிய பாரதி: "கை கொடுத்த தெய்வம்" திரைப்படப் பாடல்).

என ஒன்றுபட்ட பாரதத்தை வலியுறுத்தின. இலங்கையையும் வங்காளத்தையும்கூட நட்பு பாராட்டின.

உலகின் பிற நாடுகளில் வாழும் மாந்தர்களை மட்டுமன்றி, பிற உயிர்களையுங்கூட உறவுகளாகக் கருதி, நேசித்து வாழ்ந்தவன் தமிழன். அந்த நேசத்தின் தொடர்ச்சிதான்,

**"காக்கை குருவி எங்கள் ஜாதி - நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்"**(சுப்பிரமணிய பாரதி: ஜய பேரிகை)

எனப் பாரதி பாடல் இயற்றக் கரணிய(காரண)மானது.

**பகுத்துண்டு வாழ்தல்**

தனக்குக் கிடைத்தவற்றைத் தான் மட்டும் உண்ணாமல், பிறரோடு பகிர்ந்துண்டு வாழும் வாழ்வே உன்னத வாழ்வு என்பதனையும் பழி பாவங்களுக்கு அஞ்சி வாழ வேண்டும் என்பதனையும் ஒரு செயலைச் செய்வதனால் புகழ் வருமென்றால் உயிரைக் கொடுத்தேனும் அதனைச் செய்தும், பழி வருமென்றால் இந்த உலகத்தையே கொடுத்தாலும் அதனைச் செய்யாமலும் வாழ்வதே உயர்ந்த வாழ்வு என்பதனையும் பண்டைத் தமிழர்கள் உணர்ந்து அதன்படி வாழ்ந்தனர். இக்கருத்துகளை கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியின்,



**"உண்டால் அம்ம, இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும், இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப்,
புகழெனின், உயிருங் கொடுக்குவர் பழியெனின்,
உலகுடன் பெறினும், கொள்ளலர்..."**(புறம்.:182)

என்ற செய்யுள் வரிகள் காட்டுகின்றன. இவற்றுள், பிறரோடு பகிர்ந்துண்ணும் உயர்ந்த பண்பு தெய்வப்புலவர்தம் குறளிலும்,

**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**(குறள்:322).

எனப் பதிவு செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

**முடிவுரை**

மாந்த வாழ்வில் கொஞ்சல்முதல் துஞ்சல்வரை நிகழும் செயல்கள் பலவற்றுள் உயர்ந்தவற்றைப் பின்பற்றியதோடு, அவற்றைப் பண்பாட்டுத் தடயங்களாகப் பதிவு செய்தும் வைத்தவன் தமிழன்.

அவற்றுள் பல, காலவோட்டத்தாலும் கணினி வருகையாலும் கரைந்துபோயிருப்பினும், இன்றும் உலகு போற்றும் ஒப்பற்ற பண்புகளாகப் பரிமளிக்கின்றன் பலரால் பின்பற்றப்படுகின்றன. இவ்வகையில், தமிழகம் மட்டுமன்றித் தரணியே போற்றும் உயர்ந்த பண்புகளை உலகிற்குத் தமிழன் கொடையாக வழங்கினான் என்பதில் பெருமை கொள்ளலாம்.

**கட்டுரைக்கு உதவியவை**

1. தனிநாயகம் அடிகள், தமிழர் பண்பாடும் அதன் சிறப்பு இயல்புகளும், காந்தளகம், காங்கேசன்துறை சாலை, இலங்கை, முதற்பதிப்பு – 1980.

2. தெ.பொ.மீனாட்சி சுந்தரம், தமிழும் பிற பண்பாடும், முல்லை நிலையம், தி.நகர், சென்னை – 17, 2008.

3. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் முழுவதும் விளக்கவுரை, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் - 608001, முதற்பதிப்பு – 2008.

4. புலியூர்க்கேசிகன், நற்றிணை இரண்டாம் பகுதி(தெளிவுரை), பாரி நிலையம், சென்னை – 01, இரண்டாம் பதிப்பு – 2001.

5. புலியூர்க்கேசிகன், புறநானூறு மூலமும் தெளிவுரையும், சாரதா பதிப்பகம், சென்னை – 14, முதற்பதிப்பு – 2010.

6. சி.சுப்பிரமணிய பாரதி, “கை கொடுத்த தெய்வம்” திரைப்படப் பாடல்.

7. பாரதியார் கவிதைகள்.

8. திருக்குறள்.



(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய பண்பாட்டிற்கு வழிகாட்டும் வள்ளுவம்

**முனைவர் க கிருஷ்ணகுமாரி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எம்.ஜி.ஆர் ஜானகி (ம) கல்லூரி

*****

**முன்னுரை**

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே
வாளொடு முன் தோன்றி மூத்தகுடி தமிழ்குடி”**

மனிதனின் தோற்றம் எவ்வளவு தொன்மையானதோ அவ்வளவு பழமையானது தமிழ்ப்பண்பாடு. தமிழர் வாழ்த்த நாட்டை **‘திராடவிடம்’** என்றும் அவர்களின் மொழியைத் திராவிடமொழி என்றும் வரலாறு கூறுகிறது. பண்பாடு மிக்க அவர்கள் பேசிய மொழி தமிழ். மொழியினால் சிறப்புப் பெற்றவர்கள் தமிழர்கள் **‘உணவு தேடல்’** காரணமாக பிரிந்தவர்கள், தங்களுக்குள் தொடர்பு இன்மையால் பேசிய மொழிகளில் மாற்றங்கள் ஏற்பட்டன. அவையே இன்று **‘திராடவிட மொழிகள்’** என்று கூறப்படும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு ஆகும். தமிழ் மொழிக்கு தான் தோன்றிய கால மக்களின் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறை அரசு. அமைச்சர், ஆட்சிமுறை, போர் போன்றவற்றை சங்க இலக்கியம் காட்டுகிறது. அழியா காலத்தில் கண்ணாடி.

தமிழர் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பண்பாட்டிலும் நாகரிகத்திலும் சிறந்திருத்தனர் என்பதை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. மொழிக்கு இலக்கணம் வகுத்த தமிழர்கள் மனித வாழ்வியலுக்கும் இலக்கணம் வகுத்தனர். தமிழர் வாழ்வை,




என இரண்டாக பிரித்து வாழ்த்தனர். இது தமிழர் பண்பாட்டின் அடையாளம். தமிழ் இலக்கியம் இந்தியப் பண்பாட்டிற்கு அளித்த கொடைகள் எண்ணில் அடங்கா. அவற்றுள் வள்ளுவம் இந்திய பண்பாட்டிற்கு அளித்த நெறிமுறைகளை வகைத்தொகைப்படுத்தி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பண்பாடு**

பண்பாடு என்பது ஒரு குழுவின் வரலாறு, போக்குகள், பண்புகள், புரிந்துணர்வுகள், வாழ்வியல் வழிமுறைகள், சமூக கட்டமைப்பு என்பனவற்றைச் சுட்டி நிற்கின்றது. மொழி, உணவு, இசை, சமய நம்பிக்கைகள் தொழில்சார் தெரிவுகள், கருவிகள் போன்றவையும் பண்பாட்டுக்குள் அடங்கும். இதிலிருந்து **பண்பாடு என்பதை மனிதரின் வாழ்க்கை நடவடிக்கை எனலாம்.** பண்பாட்டினை விளங்கி கொள்வதற்கு மூன்று உத்திகளை பயன்படுத்தலாம். அவை,

- பெறுமானம் (எண்ணங்கள்)
- நெறிமுறைகள் (நடத்தை)

- பொருட்கள் (அல்லது பொருள்சார் பண்பாடு)

1. வாழ்வின் முக்கியமானது எது என்பது பற்றிய எண்ணங்கள் பெறுமானமாகும்.
2. நெறிமுறைகள் (ழேசஅள) வெவ்வேறு சந்தர்ப்பங்களில் மக்கள் எவ்வாறு நடந்து கொள்வது நெறிமுறைகளாகும்.
3. பண்பாட்டின் பெறுமானங்கள், நெறிமுறைகள் இவற்றில் இருந்து பெறப்படுவது பொருட்களாகும்.

இம்மூன்று நெறிமுறைகளையும், முப்பாலில் முனைப்போடு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு **தாய் தமிழ் வழி ஈரடியில் இயல்பாய் இந்தியப் பண்பாட்டிற்கு தமிழர் பண்பாட்டை தாரை வார்த்தவர் வள்ளுவர்** என்றால் மிகையாகா. இவ்வள்ளுவர் காட்டும் பண்பாட்டு கூறுகள் கீழே வகைத்தொகை படுத்தப்படுகிறது.

**முன்மைப் பண்பாடு**

திருக்குறள் நீதி நூல் மட்டுமென்று அது ஒரு வாழ்வியல் நூல். **இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட மனிதனுக்காக மட்டுமல்ல, இருபத்தோராம் நூற்றாண்டின் புதிய தலைமுறையினருக்கும் இனி வரும் தலைமுறையிலிருக்கும் வழிகாட்டும் புரட்சி நூல்.** வள்ளுவத்தின் பொருண்மை காலந்தோறும் புதிய புதிய கருத்தாக்கங்களைத் தந்தது, இனம், மொழி, நாடு என்னும் எல்லைகளைக் கடந்து மனித வாழ்க்கையை வளப்படுத்துகிறது.

சங்க காலத்தைத் தொடர்ந்து தமிழுக்கும் தமிழர்க்கும் கிடைத்த அரிய களஞ்சியமான வள்ளுவத்தில் உலகளவிய சிந்தனைகளும் மனிதனை உயர்த்தும் உயரிய நோக்கும் காணப்படுகிறது. வள்ளுவம் தமிழுக்குரியது என்னும் நிலையைக் கடந்து உலகத்தவர் அனைவருக்கும் உரியதாக உள்ளமையை உணர்ந்த **பாரதி வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு** எனப் புகழ்ந்துரைத்தார். வள்ளுவத்தின் பொருட்சிறப்பை அறிந்த மதுரைத் தமிழ் நாகனார் **எல்லாப் பொருளும் இதன் பால் உள** என்று தெளிந்துரைத்துள்ளார். இவை வள்ளுவத்தின் காலமும் எல்லையும் கடந்து நுண்பொருட்ச் சிறப்பை உணர்த்துவன.

**வாழ்க்கை வழிகாட்டி - வள்ளுவம்**

வள்ளுவம் இலக்கியம் என்னும் நிலையில் நின்று விடாமல் மனித வாழ்வியல் கூறுகளை காட்டும் பதிவுகளாக உள்ளது. சராசரி மனிதன் அன்றாட வாழ்க்கையில் ஒழுகவேண்டிய நெறிமுறைகளின் தொகுப்பாகத் திருக்குறள் படைக்கப்பட்டுள்ளது. வள்ளுவத்தில் உள்ள ஒவ்வொரு குறளும் மனித வாழ்க்கையின் நெறிகளை, வழிமுறைகளைத் தருவன. மானிடப்பண்பு இயல்புகளுக்கு ஓர் உரைவிடமாய், வாழ்க்கை வழி நெறிமுறைகளுக்கான வழிகாட்டியாய் அமைந்துள்ளது.

மனித வாழ்க்கையைப் பகுத்து நோக்கி அறம், பொருள், இன்பம் ஆகிய முதன்மைப் பயனை அறிய வைத்துப் பயனுடைய வாழ்க்கை வாழ வள்ளுவம் வழி காட்டுகிறது. **உள்ளத்தை உறுதிப்படுத்தவும் வாழ்வியல் பொருண்மைத் தெளிவுபெறவும் வள்ளுவர் வாக்கு ஊன்று கோலாய் இருக்கிறது.**

.

38 38 x 10 = 380




மேலே உள்ள தளங்களில் மனிதர்கள் பாதுகாக்க வேண்டிய பண்புகள் ஆற்ற வேண்டிய பணிகள், எனப் பன்முகக் கூறுகளை ஒழுங்குற அமைத்து ஒரு முழுமையான வாழ்வியல் கருத்தாக்கத்தை வள்ளுவம் தந்துள்ளது

**ஒழுக்கம்**

சமுதாய ஒழுக்கத்திற்கு தனிமனித ஒழுக்கம் அவசியம். தனிமனித ஒழுக்கத்திற்கு வாழ்வியல் கல்வியே பயனுடையதாக அமைகிறது. ஒழுக்கமில்லாத மனிதனைச் சமுதாயம் புறக்கணித்து விடுகிறது. செல்வம் என்பது பொருளல்ல அது சிறந்த ஒழுக்கமே என்பதை **'திருவொக்கும்' 'தீதில் ஒழுக்கம்'** என்று நான்மணிக்கடிகை கூறுகிறது. ஒழுக்கம் செம்மையை உருவாக்கும் என்பதால் அது உயிரைக் காட்டிலும் உயர்ந்ததுவாகும் என்பதை,

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும்** (131)

என்று கூறுகிறார். உலகத்துச் சான்றோர்கள் சென்ற வழியில் இணைந்து செல்லாதவர்கள் பல நூல்களை கற்றிருந்தாலும் அவர்கள் அறிவில்லாதவர்கள் என்பதை,

**உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்**
**கல்லார் அறிவிலா தார்** (140)

என்னும் குறளின் வாயிலாக அறிவுறுத்தப்படுகிறது. வேதத்திலே உள்ள உயர்ந்த பொருள்களை எல்லாம் திருக்குறலின் மூலம் சொல்லியிருப்பதனால், உலகத்தாரின் ஒழுக்கம் கெடாமல் காப்பாற்றப்பட்டது என்னும் கருத்தினை, **வேத விழுப்பொருளை வெண்குறலால் வள்ளுவனார் ஓத வழுக்கற்றது உலகு என்று பாரதம் பாடிய பெருந்தேவனார்** கூறுவது நோக்கத்தக்கது.

**மரபுகளைத் தகர்த்தல்**

மது அருந்துதலும் புலால் உண்ணுதலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒழுக்கம் என்னும் நிலையை மாற்றி மனித மனத்தினை, வாழ்வின் பயனைத் தடம்மாற்றும் தவறுகள் என வள்ளுவர் சுட்டிக் காட்டியுள்ளார்.

**"இலங்கு இழை மகளிர் பொலங் கலத்து**
**ஏந்திய மணம் கமழ் தேறல் மருப்ப**
**நாளும் மகிழ்ந்து இனிது உறைமதி பெரும் எனவும்**
**சிறியகப் பெறினே யாம்பாடததான் மகிழ்ந்தது உண்ணும் மன்னே"**

என்றும் கள்ளுண்டுகளித்தலையும், கள்ளுண்ணல் பெருமித வாழ்வாக இருந்த மரபுகளையும் பின்பற்றக் கூடிய ஒழுக்கமாய்க் காட்டும் வழக்கினை மாற்றி அதனைச் சமுதாயத் தீமையாக உரைத்தவர் வள்ளுவர்.

**உண்ணற்க கள்ளை** என்றும் அது **ஈன்றாள் முகத்தேயும் இன்னாதது** எனவும், **நஞ்சுண்பார்கள் உண்பவர்** என்றெல்லாம் மது அருந்துதலின் தீமையை உணர்த்தித் **தனிமனித வாழ்வு சிறக்கும் நெறியைக் காட்டியுள்ளார் வள்ளுவர்** எனலாம்.

புலால் உண்பது மனிதநெறி அல்ல என்பது வள்ளுவரின் கருத்தாக உள்ளது. இன்றைய மனிதர்களின் உணவு முறையில் சைவ உணவே சிறந்தது என்பதை அறிவியல் ஆய்வுகள் மூலம் மேலைநாட்டு உணவியல் வல்லுனர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர். தெய்வப் புலவர் வள்ளுவர் **புலால் மறுத்தல்** என்னும் அதிகாரத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இதனை விளக்கியுள்ளார்.

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்**

என்னும் குறட்பா மனிதன் உயர்வதற்கான வழியைக் காட்டுகிறது இன்றைய **அரசு உயிர்க்கொலை, உயிர்ப்பலி கூடாது எனச் சட்டம் கொண்டு வந்துள்ள நிகழ்காலச் சூழலில் வள்ளுவரின் வாழ்வியல் நெறி வெற்றி பெற்றுள்ளதாகவே கருதலாம்.** அன்பு, பண்பு, நட்பு போன்ற வாழ்வியல் இலக்குகளை **எளிய முறையில் மனித மனம் ஏற்கும் வகையில் உரைத்துத் தனி மனித வாழ்க்கையை வள்ளுவர் பண்படுத்தியுள்ளார்.**

**அறநெறிப்பட்ட வாழ்க்கை**

மனித வாழ்க்கை ஒரு குறுகிய வட்டத்திற்குள் நின்றுவிடாமல் விரிந்து பரந்து முக்கியத்துவம் மிக்கதாக அமைய வேண்டும். மனித மனங்களை விரிவுப்படுத்தி **அறவழிப்பட்ட சமுதாயத்தை உருவாக்குவது திருக்குறளின் நோக்காகவும் உள்ளது**. மனமாசின்றி வாழும் வாழ்க்கை சிறப்புடையது. அதுவே அறங்களில் முழுமை மனித வாழ்க்கை நெறி என்பர்.

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற**



என்னும் குறட்பா இதனை உணர்த்துகிறது. அறம் என்பது பற்றிய இலக்கிய மரபுசார் கருத்தாக்கத்தை வள்ளுவர் மாற்றியமைக்கிறார்.

“அறமெனப்படுவது யாதெனக் கேட்பின், மறவாத இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம் உண்டியும் உடையும், உறையுளும் அல்லது கண்டது இல்” என்னும் காப்பியக் கருத்தினை மறு ஆய்வு செய்து அறத்திற்குப் புதிய விளக்கங்களைத் தந்தவர் வள்ளுவர். மனத்தூய்மை, ஈகை, காதல் என்னும் தூயநெறிகளை வாழ்வியில் அறமாகக் கொள்ள வேண்டியதன் தேவையை உணர்த்தியுள்ளார்.

**மும்மை அறம்**

மனிதர்களின் வாழ்க்கை நெறியை உயர்த்தும் கோட்பாடாக வள்ளுவம் மூன்று அறங்களைப் பின்பற்றுமாறு வலியுறுத்துகிறது.




**ஆன்மீக அறம்**

கடவுளை **அறிவு, ஆற்றல், அப்பாற்பட்ட நிலை**

என்னும் கருதுகோள் நிலையில் வைத்து மனித ஒருமைக்கும் சமுதாய அமைதிக்கும் வள்ளுவர் குறள்வழி குரல் கொடுத்துள்ளார். முதற் குறட்பாவில் **உலகு** என நினைவூட்டி **உலகளாவிய நேயத்தை மறைமுகமாக உணர்த்தியுள்ளார்.** கடவுளின் பெயரால், மதத்தின் பெயரால் சண்டையிட்டுக் கொள்ளும் மனிதனுக்கு அவனது மனமாற்றத்திற்கு வள்ளுவம் ஒரு புதிய ஆன்மீக அறத்தை தந்துள்ளது. வள்ளுவம் காட்டும் கடவுள் ஆணும் அல்ல, பெண்ணுமல்ல. வள்ளுவம் காட்டும் கடவுளுக்கும் கோபுரங்கள், கோட்டைகளுமல்ல. கணக்கும் வழக்கும் மல்ல. அது பேரறிவு, தூய்மையான அறிவு. குணங்களின் திருவுரு. இன்பத்தின் திருவுரு. அன்பின் திருவுரு. அறத்தின் அடையாளம்.

**ஈதலறம்**

மனிதப் பண்பினை உயர்த்தும் ஒரு நெறி ஈகை. பிறருக்குக் கொடுத்து மகிழும் மனம் பெற்றால் மனிதன் பக்குவம் அடைந்தவனாகிவிடுவான். போட்டியும், பொறாமையும் அடுத்தவர் பொருளைக் கவரும் எண்ணமும் மனிதனை மிருக நிலைக்குக் கொண்டு செல்லும். ஈகைக் குணம் ஒன்றே மனிதனை மாண்புடையவனாக்கும். **வள்ளுவர் ஈகைக் குணமே உயிரின் ஊதியம்** என்கிறார்.

**ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல**
**ஊதியம் இல்லை உயிர்க்கு**

கொடுத்து வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கை என்பதைக் குறள் உணர்த்துகிறது.

**காதலறம்**

காமாத்துப்பால் அறவழிப்பட்ட காதலுறவுகளை எடுத்துரைத்துள்ளது. காதலையும், ஆண் - பெண் உறவையும் வள்ளுவர் நெறிப்படுத்தியுள்ளார். காமத்துப்பாலில் காதல், காதலர் உறவுநிலை ஆகியவற்றை இனிமை பயக்கப்பாடி அன்பெனும் நெறிக்குள், மனங்களின் சங்கமத்திற்குள் மாசுபடாத வாழ்வியல் படிநிலையை வடித்துத் தந்துள்ளார். **களவையும், கற்பையும் வகைப்படுத்தி மனிதம் அடையும் வாழ்க்கை நெறியை வகுக்கிறது வள்ளுவம்.**

**பிறன்மனை நயத்தலையும், பரத்தையர் உறவையும், பெருங்குற்றமாகச் சொல்லி அன்புடைய காமத்தைச் சமுதாய அறமாகத் தந்துள்ளார்.**

**ஆண் - பெண் சமம்**

ஆண் - பெண் உறவு நிலை, திருமணத்திற்கு முன்னும் பின்னுமான காதல் நிலை ஆகிய செய்திகளைக் குறள் விரிவாகப் பேசுகிறது. **ஆண் பெண் சமத்துவம் வள்ளுவரின் கொள்கையாகக் காணப்படுகிறது.** ஆண் மேலாதிக்க காலத்தில் அதற்கெதிரான துணிவுடைய சிந்தனைகளை வழங்கியுள்ள வள்ளுவரின் அணுகுமுறை புரட்சிகரமானது. பெண்களின் உரிமைக்கும், உலகியல் மாற்றத்திற்கும் வள்ளுவம் வழிவகுக்கிறது. அவர் பாடுபட்டுள்ளார் பெண் ஆணுக்கு இணையானவள், ஆற்றல் மிக்கவள் என்பதை,

**சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்**
**நிறைகாக்கும் காப்பே தலை.**

என்று **ஆற்றலும் அறிவும் நிறையும் மிக்க பெண்களை உலகுக்கு உருவாக்கித் தந்தவர் வள்ளுவர் எனலாம்.** இத்தகைய வள்ளுவரின் வழிகாட்டல்தான் பிற்காலத்தில் பாவலன் பாரதியை

**வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி வைப்போமென்ற**
**விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார்**

என்று பாட வைத்தது எனலாம்.

**பகுத்தறிவு நோக்கு**

**வள்ளுவர் தமிழ் உலகில் தோன்றிய முதல் பகுத்தறிவாளர்** எனக் கூறலாம். எந்தவொரு கருத்தையும், சிந்தனையையும் உள்ளவாறு ஏற்காமல் பகுத்துநோக்கி, உள்ளத் தெளிவு பெற்று ஏற்க வேண்டும் என்பதே வள்ளுவர் கொள்கை.

**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு**

என்னும் குறட்பாக்கள் இதற்குச் சான்றாகும்.

**மானுடத்தின் மலர்ச்சி**



வள்ளுவரின் நெம்புகோல் இரடிகள் மானுடத்தின் மலர்ச்சி எனலாம். மரபுகளைத் தகர்த்துப் புதுமையை நிலை நிறுத்துவது வள்ளுவரின் சமுதாயப் பணியாக இருக்கிறது. **அந்தணர் என்போர் அறவோர், அன்பின் வழியது உயிர்நிலை,** மனநலம் மன்னுயிர்க்குக் காக்கக் அறத்தால் வருவதே இன்பம் என்றெல்லாம் உயரிய சிந்தனைகளை வழங்கி மனித வாழ்க்கையை மலர்ச்சியடையச் செய்தவர் வள்ளுவர். உலகப்பண்பாட்டிற்கு சிறந்த ஒரு வழிகாட்டி நூல் எனலாம்.

**தொகுப்புரை**

1. வள்ளுவம் உலகப்பண்பாட்டின் உன்னத நூல்.
2. மனித வாழ்க்கை நெறி செவ்வனே விளக்கும் சட்டநூல்
3. இந்தியபண்பாட்டின் வழிகாட்டி
4. வள்ளுவத்தை அறிந்தால் ஜாதி, மதப் பேதமின்றி மனிதன் ஒற்றுமையாக வாழமுடியும்.
5. மனித அறியாமை அகற்றி அக இன்பத்தை பெற்று பெறுவாழ்வு வாழ வள்ளும் வழிகாட்டிகிறது.
6. பண்பாட்டு வள்ளுநர்கள் கூறும் பண்பாட்டு கூறுகள் அனைத்தும் வள்ளவத்தின் தெளிவாக வகைத்தொகை படுத்தி கொடுக்கப்பட்டுள்ளது.
7. வள்ளுவம் தமிழரின் பண்பாட்டு அடையாளம் என்றாலும் அதை பின்பற்றினால் உலகமே ஒன்றுபடும் என்பது திண்ணம்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# "இந்தியப்பண்பாட்டு மேம்பாட்டுக்கு குறிஞ்சிப்பாட்டு"

முனைவர் மெய்ஞானி பிரபாகரபாபு

*****

### அறிமுகம்

சங்க கால இலக்கியங்கள் நமது திராவிட மண்ணின், அன்றைய தமிழர் வாழ்வின் முறைமைகளைத் தெளிவுற எடுத்தியம்பும் வரலாற்று ஆவணங்கள். தமிழர் வாழ்வியல்களைப் பிரதிபலித்துக் காட்டும் காலக்கண்ணாடிகள். சங்க காலத் தமிழ்ப்புலவர்களின், உலகளாவி எவரது வாழ்க்கை முறையிலும் ஏற்கப்படக்கூடிய வாழ்வியல் நெறிகள் என்பதைக் காணும்போது வியப்பாக இருக்கும். சங்க கால இல்லறம் அழுத்தமான அன்பின் அடிப்படையிலானது. மனித நேயம் மிக்கது. அன்றைய இல்லறத்தின் தாக்கம் இன்றைய நாகரிக வளர்ச்சிக்காலத்திலும் தமிழ் நிலத்து வாழ்க்கை முறைகளில் அன்றுபோலவே தொடர்கிறது என்று உறுதியாகக் கூறலாம்.

இன்னும் கூட சங்க இலக்கியங்கள் நமது நாட்டிலேயே பெருமளவில் சென்று சேரவில்லை என்பது நோக்குதற்குரியது. பாட்டும் தொகையும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் எவ்வகையில் இந்திய மாந்தரின் உயர்ந்த வாழ்வுக்கு நெறிமுறைகளை வழங்கும் உலக இலக்கியங்களாக விளங்குகின்றன. பத்துப்பாட்டின் பத்து நூல்களும் மக்கள் வாழ்வின் மகத்துவத்தை உயர்த்தவல்ல ஒப்பற்ற இலக்கிய முத்துகள்! அவற்றுள் குறிஞ்சிப்பாட்டு, ஒவ்வொருவர் வாழ்விலும் ஒழுக்கம் ஒரு இன்றியமையாத அங்கமாக போற்றப்படும் இந்திய நாட்டின் பண்பாட்டு மேம்பாட்டுக்கும் நாட்டு மக்களின் இல்லறச்செழிப்புக்கும் எவ்வாறு ஒரு பெரிய பங்களிப்பு வழங்கியிருக்கிறது என்பதை நிலைநிறுத்துவதே இந்த ஆய்வின் நோக்கம்.

### குறிஞ்சிப்பாட்டு - ஓர் அறிமுகம்

அகப்பொருள் திணைகளுள் உயர்ச்சியானது குறிஞ்சித் திணை என்று சொல்வர். அகத்திணையில் குறிஞ்சிக்கு ஈடு இணை இல்லை! தலைவன் தலைவியரின் களவொழுக்கத்தைக் கண்ணியம் விடாமல் புலப்படுத்துவது குறிஞ்சித் திணை. புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சித் திணைக்கு ஒழுக்கம் ஆகும். அந்த ஒழுக்கத்தின் வழியோ குறிஞ்சிப் பாட்டின் நிகழ்வுகளும் போகும்! அறத்தொடு நிற்றலுக்கு ஒரு பாட்டு இக்குறிஞ்சிப்பாட்டு! ஒரு தோழியின் கூற்றாக மட்டுமே பல்வேறு உணர்வுகளைக் கையாளும் உத்தியோடு இயற்றப்பட்ட ஒப்பற்ற இலக்கியம் குறிஞ்சிப்பாட்டு. காதலர்க்குத் தமது தடைகளைத் தாண்டி முறையோடு துணை கூடும் நம்பிக்கையை மேலும் உறுதியாக்கும். நாடளவில் பயன்படுத்த வேண்டிய ஒரு பண்பாட்டுக் களஞ்சியத்தை இயற்றித் தந்திருக்கிறார் கபிலர்.

### தலைவியின் தோழி - அன்றும் இன்றும்

சங்க காலத்தில் இலக்கியக் காதலில் காதல் கொள்பவள் தலைவியாகப் பார்க்கப்படுகிறாள். ஒவ்வொரு தலைவிக்கும் தோழி உண்டு. ஒரு பெண்ணுக்கு ஒப்பற்ற ஒரு தோழியின் துணை தலைவியின் வாட்டத்தைப் போக்கும் களவைச் செல்லுபடி ஆக்கும் என்பதனை இலக்கியங்களில் காண முடியும்! இக்காலத்திலும் காதல் களவுகள் இன்னும் மிகுதியாகத் தொடர்கின்றன. காதலியரும் தம்மைத்தாமே மனத்தளவில் தலையவியராக வரித்துக் கொள்கின்றனர். தோழியர் உறவு சிலருக்கே உண்டென்பது குறிப்பிடத்தக்கது. அவற்றுள் பல, மணம் கொள்ளும் வகையில் வெற்றி கண்டாலும், மற்ற பலவும்

காதலரின் உள்ளார்ந்த உணர்வுகளை இல்லத்தினர்க்கு எடுத்துரைக்கும் இணைப்புப் பாலமின்றி இடையிலேயே முறிந்து விடுகின்றன. சிறந்த தோழியர் இருக்கும் நிலையில் இன்றைய காதல்கள் பலவும் முறிந்திடாமல் மணமுடிக்கும் அளவிற்கு நிறைவேறி இருக்கலாம் என்று குறிஞ்சிப்பாட்டைப் படிப்போருக்கு எண்ணத்தோன்றும்.

**அறத்தொடு நிற்றல்**

குறிஞ்சிப்பாட்டுத் தோழி, தலைவியின் காதலை நேரடியாக நற்றாயிடம் சென்று கூறாமல் தலைவியின் செவிலித்தாயிடம் சென்று உரைக்கிறாள். முதலில் செவிலித்தாயை வாயார வாழ்த்துகிறாள். பின்னர் எனது சொற்களைக் கேட்பாயாக என்று பணிவோடு அனுமதி பெற்றுச் செவிலித்தாயின் நன்மதிப்பைப் பெறுகிறாள். இந்தப்பண்பு முதல் கட்டமாக செவிலித்தாயின் இறுக்கத்தை இளக்கும் தன்மையது. பின்னரே தோழி தலைவியைப்பற்றி கூறத் தொடங்குகிறாள்.

அழகும் பொலிவும் நிறைந்த தலைவி துன்பங்களால் சுரண்டப்படுகிறாள் என்று முன்வைக்கிறாள். அவளது மன வாட்டத்தால் பொலிவிழந்து வருவதைச் சுட்டுகிறாள். தலைவனின் பிரிவு அவளை வாட்டுவதாகக் கூறுகிறாள். மருந்தாலும் தீர்க்க முடியாத மனநோயால், உடல் இளைத்து, அவளது ஆடைகளும் அணிகளும் நெகிழ்கின்றன என்று வருந்துகிறாள். ‘அவள் காதல் தூய்மையானது. நீயோ அவளது நோயின் அடிவேரினை அறிய முடியாமல் சலித்து, இது ஏதோ தெய்வ குற்றம் என்று முடிவெடுத்துக் குறி சொல்லும் வேலனை அழைக்கிறாய் என்கிறாள். நீ எத்தனையோ வழிபாடுகளைச் செய்தும் தலைவியின் நோய் நீங்காததில் நீயும் நோய்க்குள்ளானாய். தலைவி பித்துபிடித்தவளாக இருக்கிறாள்’ என்றெல்லாம் மென்மையான பாங்குடன் செவிலித்தாய்க்கு உரைக்கிறாள் தோழி.

அறத்தொடு நிற்றலுக்குக் காரணமாகத் தலைவிக்குச் சிறைக்காவல் அல்லது உடன்போக்கு நிகழக்கூடாது என்று கவனமாக இருக்கிறாள் தோழி. அவள் நேரடியாக நற்றாயிடம் சென்றால் எல்லாமே தோற்றுவிடும் அச்சுறுத்தல் உண்டு. தலைவி புகலும் அறத்தொடு நிற்றலை பொறுப்புடன் மனத்தில் உள்வாங்கி ஒரு உளவியல் நாடகம் நடப்பது போல் அமைந்தது செய்யுள் நடையின் போக்கு! அறத்தொடு நிற்றலை நுட்ப உயிரோவியமாக ஆக்கியது கபிலரின் புலமைத்திறம்!

**தலைவியின் துயரம் விளக்கும் பாங்கு**

> **எவர் சம்மதமுமின்றிக் காமத்தில் விழுவது களவொழுக்கம் மணமாகி**
> **இல்லறத்தில் விழுவது கற்பொழுக்கம்.**

இங்கே - களவைக் கற்பாக்கும்

பொறுப்புணர்வு தோழியிடம்! தாயும் தந்தையும் தன்னை வேறொருவருக்கு மணமுடிப்பரோ என்று கலங்குவதையும், காதல் நோயால் தானும் பெற்றவர் பாசத்தை மறந்துவிட்டதையும் பெண்மையின் நாணம் துறந்து, காவல் தடுப்புகளையும் கடந்து சென்றதையும் வருந்தி உரைக்கிறாள். தான் களவொழுக்கத்தில் கலவியில் ஈடுபட்டதையும் வெளிப்படையாகக் கூறி தூய்மையான காதலருடன் மெய் கலந்ததில் தவறுண்டோ என்று வினவுகிறாள் ஊனோடு உணர்வு உள்ளவரை தனது காதல் தொடரும் என்கிறாள். பெற்றோர் ஒப்புக்கொள்ளவில்லை என்றால் இறக்கும் வரை வருந்தியிருந்து உயிர் விடுவேன் என்று அச்சுறுத்துகிறாள் தலைவி.

களவு முடிந்தபின் வேறு என்னதான் செய்ய முடியும் என்று செவிலித்தாயைப் பக்குவப்படுத்துகிறாள் தோழி. தலைவிக்கும் தலைவனுக்கும் காதல் வந்த விதத்தையும் விளக்குகிறாள். செவிலித்தாயும் அத்தகையதொரு காதல் கட்டத்தைக் கடந்து வந்திருக்கக்கூடும் அல்லவா? தானும் தலைவியும், அருவியிலும் சுனையிலும் நீராடி ஆடிப்பாடியதையும், பின்னர் தொண்ணூற்றொன்பது வகை பூக்களைப் பறித்ததையும் தன்னடக்கத்தோடு செவிலித்தாய்க்குக் கூறுகிறாள்.

**பெண்ணுக்கு ஒரு பண்பு மிக்க தலைவன்**

மலையடிவாரத் தினைப்புனத்தில் கிளிகளோட்டித் தழைகள் கொய்து ஆடை நெய்ததையும் பூமாலை தொடுத்ததையும் அசோக மரத்தின் நிழலில் இளைப்பாறியதையும் கூறுகிறாள். அந்த நிலையில்தான் வீரமும் அழகும் மிக்க பிச்சிப்பூ மாலைகள் சூடிய, கைகளில் பொன்பூண் அணிந்து சந்தனம் பூசிய, வீரக்கழல்கள் அணிந்த தலைவன், கையில் நாணேற்றிய வில்லோடு, கண்களில் காதல் பார்வையோடு முருகனைப்போல் தோன்றியதை முன்வைக்கிறாள். கொடிய நாய்களுக்கும் மதயானைக்கும் சற்றும் அஞ்சாமல் அம்புகளை எய்து விரட்டித்தங்களைக் காத்த அவனது வீரத்தை விளங்குகிறாள். பின்னர் துணிவோடு தலைவியை நெருங்கி மார்போடு அணைத்தவன் அவன் என்று செவிலித்தாயிடம் கூறி தலைவியைக் காக்கிறாள்.

**தலைவன் தந்த உறுதிமொழி**

தலைவியுடனான களவொழுக்கத்தின்போது தலைவன் தரும் உறுதிமொழியும் தோழி கூறுவதாக அமைந்தது. அதில், தனது இல்லத்தின் மேன்மைகளை உரைக்கிறான் தலைவன். அந்த மேன்மைகளும் தலைவி மணம்புரிந்து தனது இல்லத்திற்கு வந்ததும் இன்னும் உயரும் என்று கூறி நம்பிக்கை தருகிறான். செல்வம் கொழித்து எப்போதும் விழாக்கோலம் போல் தோன்றுவது தலைவன் இல்லம். வருவோர்க்கெல்லாம் வயிறார உணவு தந்து விருந்தோம்பல் சிறந்த இல்லம். உன் வருகையால் இன்னும் விருந்தினர் வருகை பெருகும் என்கிறான் தலைவன். இதில் அவளது வருகையை தலைவனது பெற்றோர்கள் ஏற்பர் என்பது புலனாகிறது. தலைவிக்கு ஒரு பண்புமிக்க சிறந்த துணைவன் அவன் என்று தோழி அழகுறக் கூறுகிறாள்

**தலைவனின் அற உணர்வு**

தலைவன் தன் இல்லத்தின் பெருமைகளைச் சொல்கிறான். விருந்தினருக்குச் சமைத்த புத்துணவில் நெய் மணக்க உன் கைமணக்க பரிமாறுவாய் என்றும் மனம் செழித்த மங்கலப் பெண்டிர் வரிசையில் நீயும் சேருவாய் என்றும் கூறுகிறான். உன்னால் உயர்ந்து விளங்கும் சான்றோர் சுற்றமாய்ச் சூழ்ந்து வருவர் அவர்கள் உண்டு சென்றதும் எஞ்சிய உணவை நீ எனக்கு இடுவதும் உண்பதும் உயர்ந்த அறம் என்கிறான். அந்த இல்லறமே நம்மை உய்விக்கும் உலகில் நம்மை உயர்விக்கும் என்கிறான். உனது கைப்பற்றி கைத்தலம் தரும் நிகழ்வை ஊரறிய நிகழ்த்துவோம் என்று நம்பிக்கை தருகிறான். அன்று முதல் ஒவ்வொரு இரவிலும் வந்து தலைவியைச் சேராமலே செல்கிறான். உயர்ந்த நற்குடியில் பிறந்த அவனது காதல் தூய்மையானது என்று தலைவனைப் புகழ்கிறாள்.

**தலைவன் வரும் வழியில் அச்சுறுத்தல்**

தலைவனுக்கு இரவு நேரத்தில் இன்னல் வருமென தலைவி அஞ்சுதல் அதனாலேயே தலைவியின் விழிகளுக்கு இல்லை துஞ்சுதல்கிறாள். 'கொடிய யானைகள், வலிய புலிகள், காட்டுப்பசுக்கள்,

நாகங்கள், அகழிகளில் முதலைகள், ஆங்காங்கே வழுக்கு நிலங்கள், இடரும் பாறைகள் உள்ளதால், தன்னை வரித்தவனுக்கு இரவுப்பாதையில் இடர் வருமோ என்று நாளும் பொழுதும் அஞ்சுபவள். அதனையே எண்ணி மேனியும் மனமும் களைத்தனள்' என்றெல்லாம் செவிலித்தாய்க்கு விளக்குகிறாள் தோழி.

**நற்றாய்க்கு உரைக்கும் செவிலி**

செவிலி அவை யாவற்றையும் நற்றாய்க்கு உரைக்க, அத்தகவல் தலைவியின் தந்தைக்கும் உடன் பிறந்தோர்க்கும் சேர்க்க அவர்கள் தலையின் காதலை ஏற்பர் என்றும் இரு வீட்டார் இசைவுடன் இருவரும் இல்லறத்தில் இணைவர் என்றும் அவளுக்கு நம்பிக்கை. .

**தோழியின் பல்வகை உரைநயம்**

அறத்தொடு நிற்கும் தோழி தலைவன் எளியவன் என்பதனை அவனது உருவத் தோற்றத்தையும் பண்பையும் எளித்தல் மூலம் உரைக்கிறாள். அருளும் ஆண்மையும் மிக்கவன் என்றும் அவனது இல்லச் சிறப்புகளையும் விருந்தோம்பல் சிறப்புகளையும் ஏத்தல் உரைத்துப் புகழ்கிறாள். ஒருவரை ஒருவர் ஈர்த்து நின்ற காதலில் குழைந்த வேட்கை உரைக்கிறாள். காதல் முகிழ்த்ததின் காரணம் கூறி தலைவன் செய்த உதவிகளை ஏதீடு மொழிகிறாள். தற்செயலாக நிகழ்ந்த எதிர்பாராத காதல்தான் அது என்று தலைப்பாடு விளங்குகிறாள். கடந்து வந்த காட்சிகளைக் காண்பதுபோல் உண்மை செப்பும் கிளவியாகத் துலக்குகிறாள்.



**முடிவுரை**

இனக்கவர்ச்சியை மேம்மையுடையதாக்கி இனிய உறவாக இறைவன் தந்த வரமே காதல். விலங்கினத்துக்கும் மனித இனத்துக்கும் இடையே வேறுபாடு காண்பிப்பது காதல் உறவு. நல்லுள்ளம் கொண்ட நட்பினால் இன்றைய அளவிலும் காதல்கள் பல கைகூடியிருக்கின்றன. கபிலரின் குறிஞ்சிப்பாட்டில் ஒரு தோழி தனது தலைவியின் காதலை வரைவு நோக்கி இட்டுச் செல்கிறாள். பெற்றவர்க்கு அஞ்சி நற்பண்பு மிக்க தலைவி நாளும் படும் மனத்துயரத்தையும், அதனால் அவளது மேனி குலைவதையும் கூறுவதோடு அவளது தலைவனின் நற்குணங்களையும் வீரத்தையும், அவனது இல்லச் சிறப்பையும் செழிப்பையும் எடுத்துரைத்து தலைவி புணர்ச்சியில் ஈடுபட்டதையும் வெளிப்படுத்துகிறாள். தலைவனது இல்லம் சான்றோர்கள் வந்து கலைப்பறிச்செல்லும் இல்லம் என்று பெருமையும் கூறுகிறாள். தலைவன் தலைவிக்குத் தந்த உறுதிமொழியையும், அவனது அற உணர்வுகளையும் எடுத்துச் சொல்கிறாள். தலைவன் இரவில் தலைவியைக் காண வருவதால் ஏதேனும் எதிர்மறையாக நிகழ்ந்தால் அது தலைவியை மேலும் வருத்தும் என்பதாக விளக்குகிறாள். உடனடியாக வரைவுக்கு ஏற்பாடு செய்திட வேண்டும் என்று இறைஞ்சுகிறாள். காதல் வழியே உருவாகும் இல்லறம் தவிர்க்கமுடியாதது என்பதனை குறிஞ்சிப்பாட்டு உணர்த்துவதோடு அது எளிதே இனிதே நிறைவேறுவதற்கான வழிமுறையை விளம்புகிறது. நாடளவில் பரவியிருக்க வேண்டிய நல்லதொரு இலக்கியம் குறிஞ்சிப்பாட்டு. தமிழ் மண்ணுக்கு மட்டுமன்றி இந்திய பண்பாட்டிற்கே மெருகூட்டவல்ல ஒரு காதல் இலக்கியம் குறிஞ்சிப்பாட்டு. ஒவ்வொருவர் வாழ்விலும் ஒழுக்கம் ஒரு இன்றியமையாத அங்கமாக போற்றப்படும் இந்திய நாட்டின் பண்பாட்டு மேம்பாட்டுக்கும் நாட்டு மக்களின் இல்லறச்செழிப்புக்கும் ஒரு பெரிய பங்களிப்பு வழங்கியிருக்கிறது குறிஞ்சிப்பாட்டு என்பதை முடிவு செய்கிறது இந்த ஆய்வு.

# இந்திய ஒற்றுமைக்கு ஓர் ஓணம் பண்டிகை

**முனைவர் சி சிதம்பரம்**
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை
காந்திகிராம கிராமிய நிகர்நிலைப்பல்கலைக்கழகம்
காந்திகிராமம்- 624 302, திண்டுக்கல் மாவட்டம், தமிழ்நாடு.
mudalvaa@gmail.com

*****

இந்தியத் திருநாட்டில் பண்டிகைகளும், விரதங்களும் இந்துக்களின் இரு கண்களாகத் திகழ்கின்றன. பண்டிகைகள் ஒரு நாட்டின் சமூகப் பண்பாட்டை வளர்க்கின்றன. மக்களை ஒன்றிணைக்கும் பாலமாகவே பண்டிகைகள் கொண்டாடப்பெறுகின்றன. மக்களை ஒன்றிணைக்கும் பண்டிகைகள் பல உண்டு. அவற்றில் ஓணம் பண்டிகை குறிப்பிடத்தக்கது. கேரளாவில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெறும் இவ்வோணம் பண்டிகை, ஒவ்வொரு ஆண்டும் ஆவணி மாதம் ஹஸ்த நட்சத்திரத்திலிருந்து திருவோண நட்சத்திரம் வரை பத்து நாள்களும் நடைபெறுகிறது. இன்று கேரளாவில் மட்டும் மிகச் சிறப்பாக நடைபெறும் இவ்வோணம் பண்டிகை பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டில் குறிப்பாக மதுரையில் நடைபெற்றுள்ள செய்தியை சங்க இலக்கியம் சுட்டுகிறது.

**சங்க இலக்கியத்தில் ஓணம்**



தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மதுரையை ஆண்டபோது, அங்கு திருவோணத் திருவிழா நடைபெற்ற செய்தியை மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் விரிவாக விளம்புகிறார். ஆவணி மாதம் நிறைமதி நன்னாளான திருவோணத்தன்று திருமால் பிறந்ததாகவும், (மது.காஞ்சி 590), அதனை மக்கள் அனைவரும் ஒன்று கூடி விழாக் கொண்டாடியதாகவும் குறிப்பிடுகிறார். இதனை,

> **“கணம்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்**
> **மாயோன் மேய ஓண நல் நாள்,**
> **கோணம் தின்ற வடு ஆழ் முகத்த**
> **சாணம் தின்ற சமம் தாங்கு தடக்கை,**
> **மறம் கொள் சேரி மாறு பொரு செருவில்,**
> **மாறாது உற்ற வடுப்படு நெற்றி,**
> **சுரும்பு ஆர் கண்ணிப் வரும் புகல் மறவர்**
> **கடுங் களிறு ஓட்டலின், காணுநர் இட்ட**
> **நெடுங் கரைக் காழகம் நிலம் பரல் உறுப்ப,**
> **கடுங்கள் தேறல் மகிழ் சிறந்து திரிதர”** (ம.கா.590-599)

என்ற மதுரைக்காஞ்சி பாடலடிகள் மெய்ப்பிக்கின்றன. அன்று காய்கறி, கனி முதலிய உணவுப் பெருட்களை விருந்தினருக்குக் கொடுத்து மகிழ்ந்திருந்தனர். வீரர்கள் சேரிப்போர், என்னும் வீர விளையாட்டை நிகழ்த்தினர் என்றும், வெற்றி பெற்ற வீரர்களுக்குப் பரிசுகளைப் பாண்டிய மன்னன் வழங்கினான் என்றும், மதுரையில் நடைபெற்ற ஓணம் பண்டிகையை விளக்குகிறார் மாங்குடி மருதனார்.

அதன் பிறகு எழுந்த இறையனார் களவியல் உரைகாரர் நக்கீரர், தமிழ்நாட்டில் நடைபெற்ற திருவிழாக்களைக் கூறுமிடத்து ”மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளி விழாவே என இவையும்” என்று குறிப்பிடுகிறார். இவர் குறிப்பிடும் மதுரை ஆவணி அவிட்டம்,

திருவோணத் திருவிழாவையே குறிப்பதாக மு. இராகவையங்கார் கருதுகிறார். மேலும் ஆவணி மாதத்தே திருவோண நட்சத்திரத்தில் வரவேண்டிய பௌர்ணமி அடுத்த அவிட்ட நாளிலும் வரக்கூடியது என்பதும் இவ்விரண்டு நட்சத்திரங்களும் சடங்கு, விழா முதலியன நடப்பதற்கு உரியவையாம் அந்தணர் புதுப்பூனூல் தரித்துப் புரியும் சிவாரணச் சடங்கு ஓணத்தை அடுத்த அவிட்ட நாளிலும் நடைபெறுவதால் பாண்டிய நாட்டெழுந்த களவியல் நக்கீரர் சுட்டும் ஆவணி அவிட்டம் திருவோணத்தையே குறிப்பதாகச் சுட்டுகிறார். தமிழ்நாட்டில் நடைபெற்ற ஓணம் பண்டிகையைப் பெரியாழ்வாரும் திருஞான சம்பந்தரும் குறிப்பிடுகிறார்கள்.

திருமாலுக்கு உரிய நாள் திருவோணம் என்ற போதிலும், சென்னை - மயிலாப்பூர் கபாலீசுவரர் திருக்கோயிலில் திருவோண விழா நடைபெற்ற செய்தியை திருஞான சம்பந்தர் குறிப்பிடுகிறார். தமிழகத்தில் பண்டைக் காலத்தில் சிறப்பாக நடைபெற்ற ஓணம் பண்டிகை, பின்னர் ஏனோ வழக்கொழிந்து போயிற்று. ஆனால் இன்று ஓணம் பண்டிகை கேரளா முழுவதும் விழாக் கோலம் பூண்டு இன்பத் திருவிழாவாகக் கொண்டாடப் பெற்று வருகிறது.

**கேரளாவில் ஓணம் பண்டிகை**

கேரளாவில் கொண்டாடப்பெறும் திருவோணம் பண்டிகை மகாபலி சக்கரவரத்தியின் நினைவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. புராண காலத்தில் மகாபலி என்னும் மன்னன் கேரள நாட்டைச் சிறப்பாக ஆண்டுவந்தான். அவன் பெற்ற தவ வலிமையால் மூவுலகையும் ஆளும் மன்னனாகத் திகழ்ந்தான். இதனைப் பொறுக்காத தேவர்கள் அசுர வலிமை கொண்ட மகாபலியை அடக்கித் தங்களின் கீழ் கொண்டுவரத் திருமாலின் உதவியை நாடிச் சென்றனர். திருமாலும் வாமன அவதாரம் எடுத்து மகாபலியிடம் மூன்றடி மண்ணைத் தானமாகக் கேட்டார். திருமாலின் சூட்சமத்தை அறிந்த அசுர குருவான சுக்ராச்சாரியா் அறிவுரையைக் கேளாத மகாபலியும் மூன்றடி மண் கொடுக்க சம்மதித்தார். திருமால் விசுவரூபம் எடுத்து வானத்தை ஒரு அடியாகவும், பூமியை மற்றொரு அடியாகவும் வைத்து அளந்து மூன்றாவது அடியை மகாபலியின் தலைமீது வைத்தார். வாமன மூர்த்தியால் மகாபலிச் சக்கரவர்த்தி பாதாளத்துள் வீழ்த்தப்பட்டான். அதன்பிறகு, தான் ஆட்சி செலுத்திய நாட்டை ஆண்டுக்கொரு முறை வந்து கண்ணுற்று மகிழத் திருமாலிடம் வரம் வேண்டினார். திருமாலும் மகாபலியை ஆட்கொண்டு வரம் நல்கினார். இவ்வாறு மகாபலிச் சக்கரவர்த்தியின் நினைவு நாளாகவும், மகாபலி மன்னன் இந்த திருவோண நன்னாளில் தான் ஆண்ட நாட்டிற்கு வருவதாகவும், அவனை வரவேற்கும் முகமாகவும் இவ்வோணம் பண்டிகை கொண்டாடப் பெறுவதாகக் கூறப்படுகிறது.

கேரளாவில் உள்ள ஒவ்வொரு வீட்டின் வாயிற் படியிலும் மகாபலி மன்னனை வரவேற்கும் முகமாக பல வண்ண மலர்களால் ஆன கோலங்களைப் பெண்கள் வரைகின்றனர். கோலத்தின் நடுவில் குத்துவிளக்கேற்றி வைத்து, அதனைச் சுற்றிப் பல வகையான காய், கனிகளையும் அழகுற அடுக்கி வைக்கின்றனர். இக்கோலத்தை "அத்தப்பூக் கோலம்" என்று அழைக்கின்றனர். திருவோண நன்நாளன்று மக்கள் அனைவரும் புத்தாடை அணிந்து பலவிதமான காய், கனிகளையும் உணவு வகைகளையும் விருந்தினர்களுக்கு வழங்கித் தங்களின் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகின்றனர். திருமால் உறையும் திருக்கோயில்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

**பத்துநாள் திருவிழா**

ஓணம் பண்டிகையின் முதல் நாள் அத்தம், இரண்டாம் நாள் சித்திரா, மூன்றாம் நாள் சுவாதி, நான்காம் நாள் விசாகம், ஐந்தாம் நாள் அனுசம் (அனிளம்), ஆறாம் நாள் திருக்கேட்டை(திரிக்கேட்டா), ஏழாம் நாள் மூலம். எட்டாம் நாள் பூராடம். ஒன்பதாம் நாள் உத்திராடம், பத்தாம் நாள் திருவோணம் என்றும் வழங்கப்படுகிறது. மூன்றாம் நாளான சுவாதி அன்று மக்கள் ஒருவருக்கொருவர் பரிசுகள் வழங்கி தங்கள் மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்வர். நான்காம் நாளான விசாகத்தில், ஒன்பது சுவைகளில் உணவு தயார் செய்யப்படுகிறது. குறைந்த பட்சம் 64 வகையான உணவு வகைகள் இந்தப் பட்டியலில் இடம் பெற்றிருக்கும். இவ்வுணவினை ஓண சாத்யா என அழைப்பர். ஐந்தாம் நாள் அன்று, கேரளாவின் பாரம்பரியமான படகுப்போட்டி நடத்தப்படுகிறது. இந்தப் போட்டியில் பங்கு பெறுவோர் வஞ்சிப்பாட்டு என்ற பாடலைப் பாடிக்கொண்டு படகைச் செலுத்துவது இதன் சிறப்பம்சம் ஆகும்.

**ஓண சாத்யா**

“கானம் விற்றாவது ஓணம் உண்” என்ற பழமொழி ஓண சாத்யா என்ற உணவின் சிறப்பை எடுத்துரைக்கிறது. ஆறு சுவைகளில் கசப்பு தவிர மற்ற சுவைகளில் 64 வகையான ”ஓண சாத்யா” என்ற உணவு தயாரிக்கப்படுகிறது. புது அரிசி மாவில் தயார் செய்யப்பட்ட அடை, அவியல், அடை பிரதமன், பால் பாயாசம், அரிசி சாதம், பருப்பு, நெய், சாம்பார், காலன், ஓலன், ரசம், மோர், தோரன், சர்க்கரப் புரட்டி, கூட்டு, கிச்சடி, பச்சடி, இஞ்சிப்புளி, எரிசேரி, மிளகாய் அவியல், பரங்கிக்காய் குழம்பு பப்படம், காய வறுத்தது, சீடை, ஊறுகாய்கள்என உணவுகள் தயார் செய்யப்பட்டு கடவுளுக்குப் படைக்கப்படும். பெரும்பாலான உணவு வகைகளில் தேங்காய் மற்றும் தயிர் பெரும் பங்கு வகிக்கிறது.

**கைகொட்டுக்களி**

ஓணம் பெண்கள் மகிழ்வோடு ஆடும் நடனம் ”கைகொட்டுக்களி”. கசவு எனப்படும் தூய வெண்ணிற ஆடையை அணிந்து பாடல்களைப் பாடியபடி ஆடுவர். பெரும்பாலும் கைகொட்டுக்களி பாடல்கள் மன்னன் மகாபலியைக் குறித்தும் அவரை வரவேற்பதாகவும் அமையும். ஓணம் திருவிழாவில் தவறாமல் இடம்பெறும் மற்றொரு சிறப்பு யானைத் திருவிழாவாகும். 10 ஆம் நாளான திருவோணத்தன்று, யானைகளுக்கு விலையுயர்ந்த பொன் மற்றும் மணிகளால் ஆன தங்க கவசங்களாலும் பூத்தோரணங்களாலும் அலங்கரித்து அணிவித்து வீதிகளில் நகர்வலம் நடத்துவர். அன்று யானைகளுக்குச் சிறப்பு உணவுகளும் படைக்கப்படும்.

திருவிழாவின் ஒரு பகுதியாகப் பல வகை விளையாட்டுகள் நடைபெறுகின்றன. ”வேலக்களி” என்னும் வீர விளையாட்டு (சேரிப்போர்), ஓணப்பந்து, படகுப் போட்டி முதலிய விளையாட்டுகள் நடைபெறுகின்றன. ஆவணிப் பௌர்ணமியில் நிகழும் இவ்வோண நன்னாள் திருமாலுக்குச் சிறப்புடையதுபோல், மார்கழிப் பௌர்ணமியில் நிகழும் திருவாதிரை நாள் சிவனுக்குச் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. எனவே தான் இவ்விரண்டு பெருவிழாக்களும் சங்க நூல்களிலும், தமிழ்நாட்டிலும் சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஓணம், ஆதிரை என்ற பெயருடன் “திரு“ என்று அடை சேர்த்து வழங்கப்படுகிறது.

கேரளாவில் கொண்டாடப்பெறும் திருவோணத் திருவிழா வைணவ சமயச் சார்போடு தொடர்புடையது என்ற போதிலும், ஏழை, பணக்காரர் என்ற பேதமின்றி கிறித்துவர்கள், இசுலாமியர்கள் என அனைவரும்

ஒன்று கூடித் தேசிய விழாவாகக் கொண்டாடி வருகின்றனர். மதுரைக்காஞ்சி சுட்டும் ஓணம் பண்டிகை முதலில் சைவ சமயத்தவரே கொண்டாடி மகிழ்ந்தனர். பின்னாட்களில் வைணவ, சைன, பௌத்த, சயத்தைச் சார்ந்தவர்களும் கொண்டாடி மகிழ்ந்தனர். இதுபோன்ற பிற பண்டிகைகளும் அனைத்துத் தரப்பு மக்களும் கொண்டாடும் வகையில் அமைய வேண்டும். இதனால் வேறுபட்டுக் கிடக்கும் மனிதர்கள் ஒன்றுபட்டுக் கிடக்கும் ஆலமரமாகத் தழைக்க வேண்டும்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இசைக்கருவிகளும் தமிழர் பண்பாடும்

**Dr P Ammudevi**
Assistant Professor, Department of Tamil
Sri Venkateswara University,Tirupati – 517 502
ammudevivenkat@gmail.com

*****

தமிழ் மொழியை இயல், இசை, கூத்து என மூன்று வகைப்படுத்தி முத்தமிழ் எனப் பழந்தமிழ் மக்கள் அழைத்தனர். எனவே, தமிழ்மொழி வரலாற்றில் இசை ஒரு சிறப்பான இடத்தைப் பெறுகிறது. உலகிலேயே இசைநூல்களைச் சுவடி வடிவில் முதன் முதலாக வெளியிட்டவர்கள் தமிழர்களேயாவர். கடைச் சங்க காலத்தில் அதாவது, சுமார் 2000 ஆண்டுகளுக்கு முன்பே அத்தகைய நூல்கள் பல இருந்தன என்பது சிலப்பதிகார உரைகளின் வாயிலாக நமக்குத் தெரியவருகின்றது. தொல்காப்பியம், திவாகரம் போன்ற இலக்கண நூல்களிலும், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, சூளாமணி, கல்லாடம் முதலிய பழந்தமிழ் நூல்களிலும் இசையின் இலக்கணங்களும் இசை பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றன. சிலப்பதிகாரம், பரிபாடல் முதலியன இசைத்தமிழ் விரவிய இலக்கிய நூல்களே எனலாம். தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளும் திவ்வியப் பிரபந்தமும் திருப்புகழும் இசைப்பாட்டுகளாகிய நூல்களே. இறையனார் அகப்பொருள் உரைப் பாயிரத்தினின்று 'சிற்றிசை' 'பேரிசை' என்ற இரு இசைத்தமிழ் நூல்கள் இருந்தமை தெரிய வருகின்றது.

சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் அடியார்க்கு நல்லார், இசைத் தமிழ் நூலாகிய பெருநாரை, பெருங்குருகு, தேவவிருடி நாரதன் செய்த பாரதீய முதலாகவுள்ள தொன்னூல்களும் இருந்தன எனக் கூறுவதன் வாயிலாகப் பெருநாரை, பெருங்குருகு என்ற இசைத்தமிழ் நூல்களை அறிய முடிகின்றது. இவ்விரு நூல்களே முதுநாரை, முதுகுருகு என்ற நூல்களாகவும் இருந்திருக்கலாம்.

தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இசைத்தமிழைப் பற்றித் தாம் கண்டறிந்த உண்மைகளையும், பல ஆய்வாளர்கள், அறிஞர்கள் ஆகியோரின் கருத்துக் களையும் பழந்தமிழ் நூல்களில் சொல்லப்பட்ட அரிய விளக்கங்களையும் ஒருங்கே தொகுத்தும் சுமார் ஏழு ஆண்டுகள் விடா முயற்சியுடன் உழைத்து 'கருணாமிர்த சாகரம்' என்னும் இசைத்தமிழ் ஆராய்ச்சி நூலை 1917ஆம் ஆண்டு வெளியிட்டார். இசை சம்பந்தமான பல அரிய உண்மைகளைக் கொண்ட இந்நூல் ஓர் ஒப்பற்ற இசைக் களஞ்சியம் ஆகும்.

பழந்தமிழர்களாகிய நம் முன்னோர்கள் இசையில் பல ஆராய்ச்சிகள் செய்து நமக்குக் கொடுத்திருக்கிற இசைச் செல்வங்களையும், பழந்தமிழ் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள இசை பற்றிய செய்திகளையும் இசைக் கருவிகளையும் இக்கட்டுரை விரிவாக எடுத்தியம்புகிறது.

**தொல்காப்பியத்தில் இசைக் குறிப்புகள்**

தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய அறுவரில் ஒருவரான இளம்பூரணர், தொல்காப்பியனாரின் ஆசிரியரான அகத்தியனார் முத்தமிழுக்கும் இலக்கணமாக அமைந்த அகத்தியம் என்ற நூலை இயற்றியிருந்ததாகச் சொல்கின்றார். இறையனார் களவியலுரையிலும் இது கூறப்பட்டு இருப்பது குறிப்பிடத்தக்கது. இந்த நூல் இறந்து போயிற்று. எனினும், தொல்காப்பியத்திற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே முத்தமிழ், மிகச் சிறப்பான நிலையிலிருந்தது என்று இதிலிருந்து நாம் ஊகிக்க இடமுண்டு.

தொல்காப்பியம் ஓர் இலக்கண நூலாக இருந்த போதிலும் இதில் இசைத் தமிழ் பற்றிய குறிப்புகளையும் ஆங்காங்கே காணலாம். உதாரணமாகத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 33வது நூற்பாவில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

**'அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்**
**உளவென மொழிப இசையொடு சிவணிய**
**நரம்பின் மறைய என்மனார் புலவர்'**

தொல்காப்பிய எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரையில் பின்வறுமாறு கொடுக்கப்பட்டுள்ளது. 'உ'யிரெழுத்துக்களெல்லாம் நமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், ஒற்றெழுத்துக்கள் தம்மொலி முன் கூறிய அளபின் நீடலையும், குரல் முதலிய ஏழிசையோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசை நூற்கண்ணும் உள எனச் சொல்லுவர் அவ்விசை நூலாசிரியர் என்று சொல்லுவர் புலவர். இது போன்று இன்னும் பல இடங்களில் இசை சம்மந்தப்பட்ட குறிப்புகளைத் தொல்காப்பியத்துள் காணலாம்.

**திவாகரத்தில் இசை விளக்கம்**

சேந்தன் திவாகர நூலில் ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில் பண்டைக் காலத்தில் வழங்கிய ஏழிசையின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**'குரலே துத்தம் - கைக்கிளை யுழையே**
**இளியே விளரி - தாரமென் றிவை**
**எழுவகை யிசைக்கும் - எய்தும் பெயரே'**

மேலும் அவற்றிற்குரிய எழுத்துக்களையும் குறிப்பிட்டிருப்பதைப் பின்வரும் வரிகளில் காணலாம்.

**'சவ்வும் ரிவ்வும் கவ்வும் மவ்வும்**
**பவ்வும் தவ்வும் நிவ்வும் என்றிவை**
**ஏழும் அவற்றுள் எழுத்தே ஆகும்'**

தமிழிசைமுறை 'வட்டம்' அல்லது 'வட்டப்பலகை' என அழைக்கப்படுகிறது. வட்டத்தின் சுற்றளவில் ஓரிடத்தில் தொடங்கிய சுரம் வட்டமாகச் சென்று மீண்டும் தொடங்கிய இடத்தை அடையும் முறையை இங்கு காணலாம். தமிழிசை முறை தவிர வேறு எந்த இசை முறையிலும் இப்படிப்பட்ட சிறப்பான பெயரும், வழியும் கண்டு பிடிக்கப்படவில்லை என்பது அறிஞர்களின் கருத்து. மற்றொரு சூத்திரத்தில் ஏழிசைக்குரிய எழுத்துக்களைச் சொல்லுகிறார்.

**'ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் இவ்வெழுத்தும் ஏழிசைக்குரிய'**

ஏழு உயிர் நெட்டெழுத்துக்களையும் கொண்டு பூர்வ தமிழ் மக்கள் ஏழிசையைப் பாடினார்கள் என்று இதிலிருந்து நாம் ஊகிக்கலாம். இப்பொழுதுகூட இராக ஆலாபனை செய்யும்போது நாம் அகாரம் இகாரம் போன்ற நெட்டெழுத்துக்களையே பயன்படுத்துகிறோம்.

வடநூலார் 22 சுருதிகள் என்று கூறியவற்றைப் பண்டைத் தமிழர் 22 மாத்திரைகள் அல்லது அலகுகள் என்று அழைத்தனர். பண்டைத் தமிழிசை முறைப்படிச் சுருதிகளின் அளவு கீழ்க்கண்டவாறு உள்ளது.

குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம்

4+4+3+2+4+3+2=22

**சங்க இலக்கியத்தில் இசைக் கருவிகள்**

பண்டைய காலத்தில் தங்கள் வாழ்நாள் முழுவதும் பாடுவதையே தொழிலாகக் கொண்ட பாணர்கள் சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வந்தனர். இவர்கள் யாழ் என்னும் இனிய இசைக் கருவியை இசைத்துக் கொண்டு இனிமையாகப் பாடி இறைவனைத் துதித்து யாவரையும் மகிழ்வித்து வந்தனர். அக்காலத்தில் பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும் நான்கு வித யாழ்களும் வேறுபல யாழ்களும் இருந்தன என்று தெரிகிறது. அக்கால மன்னர்களும் பாணர்களைப் போற்றி ஆதரித்து வந்தனர். பாணர், சென்னியர், வைரியர், சூதர், மாகதர், இன்னிசைக்காரர், மதங்கர் முதலிய பெயர்களால் அழைக்கப்பட்டனர். இன்னிசைப் பணியில் ஈடுபட்ட பெண்களுக்கு விறலி, மதங்கி, பாண்மகள், பாடினி என்னும் பெயர்கள் இருந்தன என்று சேந்தன் திவாகரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

பண்டைத் தமிழர்கள் யாழையும் குழலையும் இசைத்து கேட்போர் செவிக்கு எது இன்மையாய் இருக்கும் என்பதை அறிந்து, அந்தந்த இசைக் கருவியைத் தகுந்த முறையில் இயக்கும்படி செய்து வந்தனர். அப்படி இசைக்கருவிகள் எல்லாம் இசையைப் பிறப்பிக்கும் போது தானும் குறிப்பறிந்து சேர்ந்து வாசிக்கும் இடத்தில் அடக்கி வாசித்தும், மற்ற இசைக் கருவிகளின் குறையை நிரப்பிலும் தன் கலையின் திறனையும் சிறப்பையும் எடுத்துக் காட்டுவதில் வல்லவராய்த் திகழ்ந்தனர். மேலும், தங்கள் நாட்டை இயற்கைச் சூழலுக்கு ஏற்ப ஐந்து வகைகளாகப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் சிறப்பான யாழ், பறை ஆகிய இசைக் கருவிகளைக் கருப்பொருள்களாகக் கொண்டு குறிஞ்சியாழ், நெய்தல் யாழ், முல்லையாழ், மருதயாழ், பாலையாழ் என்ற ஐவகைப் பண்கள் யாழை மையமாக வைத்து வகைப்படுத்தினர்.



**யாழின் தொன்மையும் தோற்றமும்**

உலக நாடுகளின் பல்வேறு இடங்களில் மேற்கொள்ளப் பெற்ற அகழ்வாய்வுகளில் பலவகையான யாழ் கருவிகள் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. இந்தியாவில் நடைபெற்ற சிந்துச் சமவெளி அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பெற்ற பல முத்திரைகளில் யாழும் குழலும் காணப்பெறுகின்றன. இன்றைக்கு 3500 ஆண்டுகளுக்கு முன் பிறந்த எகிப்திய யாழ்கள் சிலவற்றை பிரிட்டன் காட்சி சாலையில் வைத்துள்ளனர்.

இசையை பல்வேறு பரிணாமங்களில் வளர்ச்சியடையச் செய்த மனிதனின் சாதனை யாழ் கண்டு பிடித்ததாகும். பண்டைக் கால மக்கள் வேட்டையாட வில்லினைப் பயன்படுத்தினர். வில்லில் அம்பை நாண் ஏற்றி எய்யும்போது ஒலி பிறக்கும். இவ்வொலியே யாழுக்கு அடிப்படையாயிற்று. இதை மையமாகக் கொண்டு முதன்முதலில் வில்யாழை உருவாக்கினர். இது குறிஞ்சி நிலத்தில் குற மக்களிடையே முதன் முதலில் காணப்பெற்றதால் குறிஞ்சி யாழாக, முதல் யாழாக, தாய் யாழாக மலர்ந்தது. ஆதியில் ஒரு நரம்போடு உருப்பெற்ற வில்யாழ் உருவும் திருவும் மாறி இரண்டு மூன்று ஐந்து ஏழு ஒன்பது பதினொன்று பதினாறு இருபத்தொன்று நூறு ஆயிரம் என எண்ணிக்கையுள்ள நரம்புகளைப் பெற்றது. யாழின் உறுப்புகளை பத்து எனவும் பதினான்கு எனவும் இசை வல்லுநர்கள் வகைப்படுத்துகின்றனர். இதனைத் தொகை நூல்களும் உணர்த்துகின்றன. அதுபோல் இந்த உறுப்புகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு அளவுடையதாய் இருத்தல் வேண்டும் எனவும் கூறுகின்றனர்.

பரிபாடலில் பல்வேறு இசைக் கருவிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவற்றுள் யாழினைப் பற்றிய செய்திகளை அதிகமாகக் காணலாம். 15 இடங்களில் யாழ் பற்றிய செய்திகள் காணப்பெறுகின்றன. மேலும் யாழின் வகைகள், யாழின் குற்றம் தீர்த்தல், யாழில் இசைக்கப்பெறும் பண்கள், யாழிசையோடு வண்டினங்களின் ஒலி ஒற்றுமை போன்ற பல சான்றுகள் கிடைக்கின்றன.

சீரியாழ், பேரியாழ், மகரயாழ், செங்கோட்டியாழ், வில்யாழ் என யாழின் வகைகளை பரிபாடல், திருமால் 2:38 ஆம் பாடல் கூறுகிறது. இவற்றின் நரம்புகளின் எண்ணிக்கை வெவ்வேறாக இருந்தது என்பதையும் இவ்வடி உணர்த்துகிறது.

யாழின் உடற்பகுதியை மரத்தால் அமைப்பது மரபாகும். எந்தெந்த மரத்தால் யாழ் செய்யப் பெறுகிறது என்பதை,

**‘சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருங்கை**
**நல்ல குமிழே தணக்குடனே - மெல்லியலாய்**
**உத்தம மான மரங்க ளிவை யென்றார்**
**வித்தகமா மானே விதி’**

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. யாழின் உறுப்புகளில் கோட்டிற்குக் கருங்காலியும் கொன்றவையும் சிறந்தவை என்றும் பத்தர் என்னும் உறுப்பிற்கு குமிழ், தணக்கு, மென்முருங்கை ஆகியவை சிறந்தவை என்றும் குறிக்கப்பெறுகின்றது.



**குழலிசை**

பண்டைத் தமிழ் இலக்கியத்தில் மிகவும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ள இசைக் கருவிகளுள் குழலும் ஒன்று. இதனை ‘குழலினிது யாழினிது என்பர்’ என்ற குறளடி உறுதிசெய்யும். இது மிகவும் பழைமையான காலந்தொட்டு வழக்கில் இருந்து வருகிறது. நமது முன்னோர் குழலை வேய்ங்குழல் என்றும் புல்லாங்குழல் என்றும் வங்கியம் என்றும் அழைத்து வந்திருக்கின்றனர். புல்லாங்குழல் செய்வதற்குரிய மரங்களையும் உலோகத்தையும் உரையில் குறிப்பிட்டிருக்கின்றனர். மூங்கிலில் செய்வது உத்தமம். வெங்கலத்தில் செய்வது மத்திமம், சந்தனம், செங்காலி, கருங்காலி ஆகிய மரங்களில் செய்வது அதமம் என்று கூறியிருக்கிறனர். குழலை எவ்வாறு செய்வது என்பது பற்றி அடியார்க்கு நல்லார் விவரமாக விளக்கியிருக்கிறார். மேலும் குழலாசிரியனின் அமைதி முதலியவைகளெல்லாம் சிலப்பதிகாரத்தில் சிறப்பாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

**பண் வகை**

பெரும்பண்: ஏறு இறங்கு நிரல்களின் ஏழு கோவைகள் மாறாமல் வரப்பெற்ற முழுமைப் பண்ணே பெரும்பண் எனப்பட்டது. இதனைத் தாய்ப்பண், தலைமைப்பண் எனவும் அழைத்தனர். இதுவே வடமொழியில் ஜனக இராகம், மேளகர்த்தா இராகம், சம்பூர்ண இராகம் என்ற பெயர்களால் அழைக்கப்படுகிறது.

இப்பண்ணுக்குக் காலம் குறிக்கும் முறையானது சங்க இலக்கிய காலத்திலேயே தோன்றியுள்ளது. ஆண்டுக் காலத்தைப் பெரும்பொழுதுகளாகப் பாகுபடுத்தினர். காரே, கூதிர், முன்பணி, பின்பணி, இளவேனில், முதுவேனில் என ஒரு ஆண்டின் ஆறு பெரும்பொழுதுகளையும் முற்பகல், பிற்பகல், நடுப்பகல், முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு என ஒரு நாளின் ஆறு சிறு பொழுதுகளையும் பகுத்தபோது

சங்க காலத்திலேயே பண்ணின் காலமுறை தோற்றம் பெற்றது. இவை இன்றுவரை பல மாற்றங்களுடன் வளர்ந்து வந்து பகல் பண்கள், இரவுப் பண்கள், பொதுப்பண்கள் என்ற வகைபாடுகளுடன் நடைமுறையில் பயன்பாட்டில் உள்ளன.

யாழ், குழல் இவற்றோடு மேலும் பல இசைக்கருவிகள் சங்க மக்கள் இசைத்தமை சங்கப்பாடல்கள்வழி தெரிய வருகிறது. பதலை என்னும் கருவி ஒரு பக்கத்தில் அடித்து இசைக்கப்படும் தாளக் கருவியாகும். இதனை,

**'ஒரு தலைப் பதலை தூங்க ஒருதலைத்**
**தூம்பு அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கி**'[புறம்-103]

என்ற வரிகள் தெரிவிக்கின்றன. பாணர்கள் பரிசில் பெறச் செல்கையில் ஒருபுறம் பதலையும், மறுபக்கம் சிறு முழவையும் தொங்கவிட்டு காவடியைப் போன்று எடுத்துச் சென்றனர். தாளச் சுட்டு அடிகளுக்குப் பயன்படுத்தும் இசைக் கருவியாகப் பதலை இருக்கும் என அறிய முடிகின்றது.

தட்டைப்பறை என்பது காட்டில் நெருக்கமாக வளர்ந்துள்ள மூங்கிலைப் பிளந்து செய்யப்பட்ட கருவியாகும். இக்கருவி கூத்தர் முதலிய கலைஞர்களால் இசைக்கப்படும் கருவியாகும். இக்கருவியை திணைப் புலத்தில் உள்ள கிளிகளை விரட்டுவதற்காகப் பயன்படுவதை,

**'அமை அறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்**
**நறு விரை ஆரம் அறஎரிந்து உழுத**
**உளைக்குரல் சிறுதிணை கவர்தலின் கிளை அமல்**
**பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஒப்பி'** [அகம்-388]

என்னும் அகப்பாடல் வாயிலாகச் சுட்டிக்காட்டுப்படுகிறது. இக்கருவியைத் தட்டி ஒலி எழுப்புவதால் இது தட்டை என்றும் தட்டைப்பறை என்றும் கூறப்படுகிறது. நாட்டின் சுனையிலுள்ள தேரை ஒலியைப் போன்று தட்டைப்பறையின் ஒலி இருப்பதை,

**'இட்டிய குயின்ற துளை வயின் செலீஇயர்**
**தட்டைத் தண்ணுமைப் பின்னர் இயவர்'** [ஐங்குறுநூறு-215]

என்று ஐங்குறுநூற்றுப்பாடலின் மூலம் அறியமுடிகின்றது.

துடி என்னும் பறை நன்கு வைரமேறிய கருப்பு நிற மரத்தால் குடைந்து செய்யப்பட்டதால் இது கருப்பு நிறமுடையதாக இருக்கும். துடியின் இரு கண்களும் தோலால் மூடப்பட்டு தோல் வராமல் இழுத்துக் கட்டப்பட்டிருக்கும். துடி என்பது உடுக்கை, குறிஞ்சிப் பறை, பாலை நிலப்பறை எனப் பதினாறு வகைப் பொருள் கொண்டது என மதுரைத் தமிழ்ப் பேரகராதி பொருள் கூறுகின்றது. இக்கருவி போர்க்களத்தில் இசைக்கப்படும். இதனை இசைப்பவரை துடியன் என்று அழைத்தனர். பகைவன் நாட்டின் மீது போர்த் தொடுக்கப்போகும் போது புலைவன் பெரிய துடியை இயக்குவதை,

**'மலையன் மா ஊர்ந்து போகி புலையன்**
**பெருந் துடி கறங்கப் புற புலம் புக்கு**'[நற்றிணை-77]

என்ற வரிகளின் மூலமாக வேட்டுவனின் முன்னர் புலையன் தன்கை சிவக்கத் துடியை இயக்கினான் என்பதை அறிய முடிகின்றது.

கிணை எனும் தாளவிசைக் கருவியைப் பற்றி சங்க இலக்கியங்களில் குறிப்புகள் இருக்கிறது. வயலில் வாழும் ஆமையின் வயிற்றைப் போன்று வட்டமான வடிவம் உடையது. கிணை ஒருமுகக்கருவி என்பதை,

**'ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி**
**பாடுஇமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை'** [புறநானூறு -394]

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

கிணை என்னும் கருவி இனிய ஓசை உடையது. இக்கருவியைப் போர்க்களத்தில் பயன்படுத்துவார்கள். இறைவனை வழிபாடு செய்வதற்கும் கிணை முழங்கப்பட்டது.

தூம்பு எனப்படுவது ஒரு காற்றுக் கருவியாகும். இது மூங்கிலை அறுத்து செய்யப்பட்டதாகும். இது நெடுவாங்கியம், பெருவாங்கியம் எனக் கூறப்படுகிறது. தூம்பிற்குத் துளை, மூங்கில் என்ற பொருளுண்டு. தூம்பு இளி என்னும் நரம்பின் ஓசை போன்றே ஒலிக்கும் தன்மையுடையதாகும்.

**'ஊக்கிய உயவல் யானை**
**இயம்புணர் தூம்பின் உயிர்க்கும் அத்த'** [ஐங்குறுநூறு-377]

கலைஞர்கள் மன்னனைப் புகழ்ந்து பாடும்போது தூம்பினையும் இசைப்பார்கள். மூங்கில் கணுக்களை அறுத்துச் செய்யப்படும் இக்கருவியானது யானையின் கை போல உருவத்தைக் கொண்டது; யானை நெட்டுயிர்ப்பு கொண்டது போன்ற ஓசையுடன் கூடியது.



மேற்குறிப்பிட்ட சான்றுகளின் வழி பண்டைத் தமிழர் சங்க காலத்தில் இசை நிலையில் நன்கு சிறந்து விளங்கினர் என்பது தெளிவாகிறது.

**சிலப்பதிகாரத்தில் இசைக் கருவிகளும் இசைச் செய்திகளும்**

இன்றைக்குச் சுமார் 1800 ஆண்டுகளுக்கு முன்பு இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் ஓர் இசை கருவூலமாகத் திகழ்கிறது. சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அரும்பத உரையாசிரியர் கி.பி.13ம் அல்லது 14 நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும் அடியார்க்கு நல்லார் கி.பி.15ம் அல்லது 16ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும் தமிழ் மொழியில் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இந்த உரையாசிரியர்கள் காலத்தில் என்ன இசைச் சொற்கள் வழக்கிலிருந்தனவோ அவைகளையே இவர்கள் தங்கள் உரைகளில் பயன் படுத்தியுள்ளனர். உதாரணமாக குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் பெயரில் பூர்வ காலத்தில் வழங்கப்பட்ட ஏழு சுரங்களும் பிற்காலத்தில் சட்ஜம்(ச), ரிஷபம்(ரி), காந்தாரம்(க), மத்யம்(ம), பஞ்சமம்(ப), தைவதம்(த), நிஷாதம்(நி) என்ற வடமொழிப் பெயர்களில் அழைக்கப்பட்டன.

நான்கு நிலத்தினும் வாழ்ந்த பழந்தமிழர் தத்தம் நிலத்திற்குரிய யாழ், பண் முதலிய இசைக் கூறுபாடுகளைப் போற்றிப் பாதுகாத்தனர் என்பதும். தோற்கருவி, துளைக் கருவி, மிடற்றுக் கருவி என்பதும் பல வகை இசைக் கருவிகளைப் பயன்படுத்தினர் என்பதும் சிலம்புவழி அறியமுடிகின்றது. ஆன்றோர், நரம்புக் கருவிகளான பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் ஆகிய யாழ்களை இசைப்பதில் பண்டையோர் சிறந்திருந்தனர் என்பதும், பொருணர் பாணர், கூத்தர், விறலியர் ஆகியோர் இசைகளில் தேர்ந்து விளங்கினர் என்பதும் இக்காப்பிய உரையின்வழி அறிய வரும் செய்திகளாகும்.

காவிரிப்பூம்பட்டினத்து மருவூர்ப்பாக்கத்தில் இசைப் பாணர்க்கு இருக்கைகள் அமைந்திருந்தன. இசைவல்லோர், துளைக்கருவி வாசிப்போர், தோற்கருவி வாசிப்போர் எனப் பலவகையினராகி இசையைப் போற்றி வளர்த்தனர். இச்செய்திகளை,

**‘குழலினும் யாழினும் குரல்முத லேழும்**
**வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டும்**
**அரும்பெறல் மரபின் பெரும்பாண் இருக்கையும்’** [இந்திர.35.7]

என்ற சிலப்பதிகார அடிகள் கூறுகின்றன. இந்நூலுள் வரும் அரங்கேற்றுக் காதை, கானல்வரி, வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை ஆகிய பகுதிகள் பழந்தமிழரது இசையறிவைப் புலப்படுத்துகின்றன.

**தண்ணுமை**

இசைக் கருவிகளுக்குள்ளே தண்ணுமைக்குத்தான் இளங்கோவடிகள் முக்கிய இடம் கொடுத்திருக்கிறார். (தண்ணுமை=மிருதங்கம்) இசையாசிரியனின் இலக்கணத்தைப் பற்றி விவரித்தவுடனே தண்ணுமையைப் பற்றித்தான் சொல்லுகிறார். மேலும், இசையரங்கில் வாய்ப்பாட்டிற்கு அடுத்தாற்போல், நுட்பமான லயச் சொற் கட்டுகளை அமைத்து, வாசித்து, இசைக்கே ஒரு துணைபோல் நிற்பதால், இந்த இன்னிசைக் கருவிக்கு அதிகக் கவனம் செலுத்தியிருக்கிறார். இசையாசிரியருக்குத் தெரிந்தவையெல்லாம் தண்ணுமையோனுக்கும் தெரிந்திருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்.

**யாழாசிரியன் அமைதி**

யாழாசிரியன் அமைதி பற்றிச் சொல்லும் பொழுது பண்ணுப் பெயர்த்தல் (கிரதபேத முறை) முறையின்படி கிடைக்கும் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை ஆகிய ஏழு பாலைப் பண்களையும் மற்றும் பல்வேறு பண்களையும் இசைப்பதில் தேர்ச்சிப் பெற்றிருந்தான் எனக் குறிப்பிட்டிருக்கிறார்.

**தேவாரம்**

சங்க காலத்தில் வளர்ந்தோங்கியிருந்த இசை நூல்கள் அழிந்தொழிந்தன. தமிரல்லாத இனம் (களப்பிரர்) இந்நாட்டை ஆட்சிபுரிந்த போது தமிழ், தன் தனித்தன்மையை இழந்தது என்பர். 6ம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றிய நாயன்மார்கள் ஆழ்வார்கள் காலத்தில் தமிழ் இசை மறுமலர்ச்சியுற்றது. சமயக்குரவர் இறைவனை ஏழிசையாய் இசைப்பயனாய்க் கண்டு இன்புற்றனர். அவர்கள் பண்ணோடு இசைத்த பாடல்களைத் தமிழ்நாடெங்கும் இசைத்தும் பாடினர். திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதிகங்களை யாழில் அமைத்துப் பாடி ஊர்தோறும் சென்று இசை வளர்த்தார் என அறிகிறோம். இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரும் அவருடைய மகனார் முத்தையா செட்டியாரும் தமிழ் இசைக்குத் தொண்டு செய்தது மறக்கற்பாலதன்று.

**யாழ்நூல்**

யாழ் நூல் என்னும் இசைத்தமிழ் நூலை இயற்றிய அருட்டிரு விபுலானந்த அடிகளார், பழங்கால யாழ்கள் பற்றிய விவரங்கள், பாணர் வரன்முறை, ஏழிசையின் பிறப்பு, ஏழ்பெரும்பாலைப் பண்கள்,

பன்னிருபாலை, யாழாசிரியன் அமைதி, தேவாரத்தில் இசையமைதி, இக்காலத்தில் வழங்கும் எழுபத்திரண்டு மேள இராகங்களின் மூர்ச்சனைகள் முதலியவற்றைத் தமது நூலில் விவரித்துள்ளார்.

**இசைக்காகத் தனிச் சங்கம்**

பண்டைக் காலத்தில் இசையின் வளத்தைப் பெருக்குவதற்கு என்றும், இசையினை ஆராய்வதற்கென்றும் தனிச் சங்கம் இருந்தது. அச்சங்கத்திற்கு 'ஏழிசைச் சூழல்' என்று பெயர். தமிழர்கள் தமிழை இயல், இசை, நாடகம் என மூவகைப்படுத்தி ஒவ்வொரு பகுதியிலும் எண்ணற்ற நூல்களை நாம் காண்கிறோம். பழந்தமிழ் இலக்கியங்களில் சிலப்பதிகாரம் ஒன்றுதான் மூவகைத் தமிழும் விரவிவரப் பெற்றுள்ளது.

பழந்தமிழர் நமக்குக் கொடுத்த பழம் இசைக் கருவிகள் எண்ணிறந்தன. இவர்கள் இசை உணர்வோடும் இசை அறிவோடும் வாழ்ந்தனர் என்பதும் மன்னர்கள் இசையை ஆதரித்து வளர்த்தனர் என்பதும் அறிய முடிகின்றது. மக்கள் பண்களை அமைத்து இசையைச் சுவைத்து விரும்பிக் கேட்டுள்ளனர். நிலத்துக்குத் தக்கவாறு இசையும் கருவிகளும் வழக்கத்தில் இருந்துள்ளன. வாய்ப்பாட்டு, கருவியிசை ஆகிய இரண்டும் வளர்ந்து வந்துள்ள நிலையை காணமுடிகிறது. பண்ணிசைக் கருவிகளும் தாளவிசைக் கருவிகளும் பலவாக உள்ளன. விழாக்களில் கூட்டிசை கேட்கப்பட்டது. அது இன்னியங்களால் கேட்கப் பெற்றது. கலைஞர்கள் முழுநிலையாகப் பலவகை நிலைகளில் கலையார்வம் கொண்டு இசைக்கு உயிரூட்டி வளர்த்துள்ளனர். பழந்தமிழ் நூல்கள் சிலவற்றின் வழி இந்த அளவுக்குத் தமிழரின் இசைச் சிறப்பை மதிப்பீட்டுக் காணமுடியுமாயின், அவர்களின் பழக்கத்திலிருந்த உண்மையான இசையின் உயர்நிலையை நாம் உணரவேண்டும்.



எனவே, இசைத் தமிழையும் நமது பண்டைய இசைக் கருவிகளையும் பாதுகாத்துப் போற்றி வருதல் நம் அனைவரின் கடமையாகும். எனவே, அருமையான கருத்துள்ள பல புதிய தமிழ்ப்பாடல்களுக்கு இசை இலக்கணமும் மரபு நெறியும் பிறழாமல் இசை அமைத்து, நம் இசைக்கலையின் வளர்ச்சிக்கும் மறுமலர்ச்சிக்கும் வழிவகை செய்யவேண்டும்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# இயற்றமிழில் பண்ணும் பயனும்

**Dr R Prabagaran**
Tamil Lecturer
BBMP Composite Junior College for Girls
Jogupalya, Halasuru
Bangalore – 560047
prcprabagaran@gmail.com

*****

உலக மொழிகளில் தமிழ் மொழிமட்டும் தனித்துவம் வாய்ந்தது. எம்மொழிக்கு இல்லாத சிறப்பு முத்தமிழ் என்ற அடைமொழியில் அடங்கியது. ஏட்டில் இயற்றமிழைக் ஏற்றியவன். காற்றில் இசைத் தமிழைத் தவழவிட்டவன். அரங்கிலோ நாடகத்தமிழை நாட்டியவன். மொத்தத்தில் வாழ்க்கைக்கு இலக்கணத்தை வகுத்தவன். இன்றோ இணையத்தில் இதயத் தமிழை மிதக்கவிட்டவன். அவ்வகையில் இயற்றமிழில் பண்ணின் பயனைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது. இதை

**“ஓசை யொலியெலாம் ஆனாய் நீயே**
**உலகுக் கொருவனாய் நின்றாய்” நீயே**

என திருத்தாண்டகத்தில் பண்ணின் இனிது புலப்படுகிறது. ‘பண்’ நம் இதயத்தைப் பண்படுத்தும் ஒரு அசை ஆகும். பண்பட்ட எல்லா உயிகளும் தத்தமக்குரிய இசை மரபுகளைக் கொண்டுள்ளனர். எளிய நிலையில் உயிர்களைத் தன்பால் இசைவிப்பதும், உயர்ந்த நிலையில் இறைவனைத் தன்பால் இசைவிப்பதும் பண் எனும் ஆற்றலாகும். இயற்றமிழில் பண் மின்னுவதற்கு உந்தி, தலை, கழுத்து, நெஞ்சு, பல், இதழ், நாக்கு, மூக்கு, அண்ணம் ஆகிய எட்டு தானங்களிலிருந்தும் எவ்வாறு பிறக்கின்றது என்பதை ஆராயமுற்படுகிறது.

**பண்**

ஓர் இயக்கத்தில் உள்ள குரல், துத்தம், கைக்கிளை முதலிய ஒவ்வொரு சுரத்தையும் குரலாக, அதாவது ஆதாரச் சுருதியாக வைத்து ஏழு பெரும் பாலைப் பண்களாகத் தமிழ் மக்கள் வகுத்தனர்.

**‘எடுத்ததன் முதலால் இரு நான்கும்**
**பின்னிப் படுத்தமையால் பண்’**

என்கிறார் அடியார்க்கு நல்லார். மூலாதாரத்தில் தொடங்கி எழுத்தின் நாதம் ஆளத்தியால் பின் இசையென்றும் பண் என்று பெயர்பெற்றது.

‘மூலாதாரம் தொடங்கி தலயுச்சி வரை செல்லும் காற்றை அடக்கி நாதத்தைச் சுரக் கோவைகளால் வகைப்படுத்திப் பாடுதல் பண்ணாகும்’. பண்ணுதல் எண்ணும் வினையால் பண்ணெனப்பட்டது. பல இயற்பாக்களோடு நிறத்தை இணைத்ததால் இசை என்று பெயர் பெற்றது.

தமிழ்ப் பண் (இசை) பாடுவதற்கு உரிய இலக்கணத்தினைப் பண்டைத் தமிழரிசை நூல்கள் குறிப்பிடுகின்றன. இசை மரபு என்றும் நூலை மேற்கோள் காட்டும் நச்சினார்க்கினியர்,

**‘கண்ணிமையா கண்டந்துடியா கொடிநசையா**
**பண்ணளகவும் வாய்கோன்றா பற்றொரியா எண்ணிலிவை**
**கற்றார் நறுந்தெறியற் கைதவனே கந்தருவர்**
**உள்ளாளப் பாடலுணர்’**

என்று சுட்டுகின்றார்.

**பண்கள் பிறக்கும் உறுப்புகள்**

> **'பாடவோ டணை தலிசை யென்றார் பண்ணென்றார்**
> **மேவார் பெருந்தானம் எட்டானும் - பாவாய்**
> **எடுத்தல் முதலா இருநான்கும் பண்ணிய**
> **பகுத்தமையாற் பண்ணென்று பார்'** [சிலம்பு. அரங்கேற்றுக்காதை.26]

இவ்வரியில் பண்கள் பிறக்கும் பெருந்தானங்கள் [சுரங்கள்] எட்டு ஆகும். அவை நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம் (முதல், இடை, கடை), உதடு, பல், தலை என்னும் எட்டு பெருந்தானங்களாகும். இந்த உறுப்புக்கள் உதவி கொண்டு பண்ணைப் பாட வேண்டும். எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்பன எட்டுக் கிரியைகள் ஆகும். இவை பண்ணைப் பாடவும் உண்டாக்கவும் முயற்சிகளாக விளங்குகிறது. ஆதலால், பண்பாடுதல் பண்ணென்று பெயர் பெற்றது.

மேலும், இப்பண்ணுக்குக் காலம் குறிக்கும் முறையைச் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவை, பெரும்பொழுதுகளாக காரே, கூதிர், முன்பணி, பின்பணி, இளவேனில், முதுவேனில் என ஒரு ஆண்டின் ஆறு பெரும்பொழுதுகளைப் பாகுபடுத்தினர். சிறுபொழுதுகளாக முற்பகல், பிற்பகல், நடுப்பகல், முன்னிரவு, நள்ளிரவு, பின்னிரவு என ஒரு நாளின் நிகழ்வாகப் பிரித்துள்ளனர்.



**தமிழிசைப் பண்கள்**

இனிய ஒலிகள் செவி வழிப்புகுந்து, இதய நாடிகளைத் தடவி, உயிரினங்களை இசையவும், பொருந்தவும் வைக்கின்றபோது அவை இசை என்ற பெயரைப் பெறுகின்றன.

இசைக்கு அடிப்படையாக இருப்பது ஒலி, ஒலியே உலகின் முதல் தோற்றம் என்பதும் சமயங்கள் உணர்த்தும் உண்மை. இவ்வுலகமே ஓங்கார ஒலித்திரளின் இருப்பாக உள்ளது. ஏழ்நரம்பிலிருந்து எழும் ஓசையே ஏழிசையாக அமைகிறது. அவை, உயிர் எழுதாக விளங்கும் ஆ ஈ ஏ ஐ ஓ ஔ நெடில் எழுத்துகள் ஏழம்தான் ஏழிசையாக காட்சியளித்தது. தமிழிசை முறை தவிர வேறு எந்த இசை முறையிலும் இப்படிப்பட்ட சிறப்பான பெயரும், வழியும் கண்டு பிடிக்கப்படவில்லை என்பது அறிஞர்களின் கருத்து. மற்றொரு சூத்திரத்தில் ஏழிசைக்குரிய எழுத்துக்களைச் சொல்லுகிறார்.

> **'ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் இவ்வெழுத்தும் ஏழிசைக்குரிய'**

ஏழு உயிர் நெட்டெழுத்துக்களையும் கொண்டு பூர்வ தமிழ் மக்கள் ஏழிசையைப் பாடினார்கள் என்று இதிலிருந்து நாம் ஊகிக்கலாம். இவ்விசைக்கலையே ஆயக்கலைகள் அறுபத்து நான்கனுள் சிறப்புடைய சுவையாகும்.

மொழியறியாது வாழ்ந்த மனிதன் இனம் புரியாத மகிழ்ச்சியிலும் துன்பத்திலும் எழுப்பிய ஓசையும் ஒலியுமே இசையாயிற்று. மகிழ்ச்சி மற்றும் துன்பப் பெருக்கின் உச்சக் கட்டமாக அவன் கைதட்டி எழுப்பிய ஆரவாரமே தாளமாயிற்று. சிலை வளைத்துக் கணை தொடுத்து வேட்டையாட முற்பட்ட போதுஎழுந்த நாதமே இசைக்கருவிகளின் தோற்றத்திற்கும் மூலமாயிற்று.

பண்டைத் தமிழிசை அறிஞர்கள் ஏழுவகை இசைக் குறியீடுகளைக் கொண்டு, நூற்றுக் கணக்கான பண்களைக் கண்டு கொண்டனர். பல நூற்றாண்டுகளாக அவற்றைப் பயன்படுத்திப் பாதுகாத்து வந்தனர். பன்னாட்டு மக்களும், இசை ஆர்வலர்களும் அவற்றை அறிந்து வியந்தார்கள். கற்று மகிழ்ந்தார்கள்.

அகத்தியர் காலத்தில் 108 பண்கள் இருந்தன என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள். பண்டைத் தமிழகத்தில் 11,999 பண்கள் இருந்தமையை அடியார்க்கு நல்லார் உரை பதிவு செய்திருக்கின்றது. முன்னூற்றுக்கும் குறைவான பண்களே இப்போது இசைக் கலைஞர்களின் அறிவுக்கு எட்டுவனவாக உள்ளன.

**“பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழ் அவையும்**
**உண்ணின்றதோர் சுவையும் உறுதாளத்து ஒலி பலவும்**
**மண்ணும் புனல் உயிரும் வருகாற்றும் சுடர் மூன்றும்**
**விண்ணும் முழுது ஆனான் இடம் வீழிம்மிழலையே”**

என முதலாம் திருமுறையின் பதினொராம் பதிகத்தின் நான்காவது தேவாரத்தில் பண், நட்டபாடை என்று திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

இசையைப் பண் என்ற பெயரால் குறிப்பிடுவர். பண் என்ற சொல்லும் காரணப்பெயர்ச் சொல்லாகும். பண்ணுதல் என்ற தொழிலடியாகத் தோன்றிய பெயர்ச் சொல்லாகும்.

**பண்: ஐந்திசையா? ஏழிசையா?**

தமிழகத்தில் மிகப்பழங்காலத்தில் முதன் முதலில் ஐந்திசைப் பண்களே இருந்தன என்றும் இதன் பின்பு இவை ஏழிசைப் பண்களாக வளர்ச்சி எய்தின என்றும் இசை ஆய்வாளர் திரு.கே.கோதண்டபாணிப் பிள்ளையவர்கள் குறிப்பிடுகிறார். பண்டைக் காலத்தில் ஐந்து பண்கள் இருந்தனவா, ஏழு பண்கள் இருந்தனவா என்பது ஆய்வுக்குரியதாக இருக்கிறது. இருப்பினும், ஐந்து துளைகளை உடைய குழல், ஏழு துளைகளை உடைய குழல் பற்றிய செய்திகள் பரிபாடலில் காணப்பெறுகிறது. இதனை,

**‘ஏழ்புழை ஐம்புழையாழிசை சேழ்த்தன்ன இனம்**
**வீழ் தும்பி வண் பொரு மிகுதிறார்ப்ப’**

எனும் அடிகள் உணர்த்துகிறது.

இப்பாடல் மூலம் ஏழ்துளைகளை உடைய குழல்கள் தோன்றியதா? ஐந்து துளைகளையுடைய குழல்கள் முதலில் தோன்றியதா? என்பது ஐத்திற்கு இடமுண்டு. ஆனால் ஐந்து, ஏழு சுரங்களைக் கொண்ட குழல்களை அக்கால மக்கள் பயன்படுத்தியுள்ளனர் என்பது மட்டும் தெளிவாகின்றது.

சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையுள் இளங்கோவடிகள் ஏழு நரம்புகள் நிற்கும் முறைகளில் ஏழு இளம் மங்கயரை நிறுத்தி அம்முறைகளில் ஐந்து நரம்புகளான குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை எனும் நரம்புகளை ஒலிக்கச்செய்து முல்லைத் தீம்பாணி பாடப்பெற்றது என விளக்குகிறார். ஆகவே, முதல் ஏழு சுரங்கள் இருந்தன, அவற்றுள் ஐந்து சுரங்கள் கிளை முறைப்படித் தேர்ந்தெடுக்கப்பெற்றவை என்பதும் இவற்றைக் கொண்டு முல்லைத் தீம்பாணி எனும் பண் பாடப்பெற்றது என்றும் உணர்த்துகிறது.

**பண்களின் வகைகள்**

பண்களாவன பாலையாழ் முதலிய நூற்று மூன்று' என்கிறார் பரிமேலழகர். 'ஈரிரு பண்ணும் எழுமூன்று திறனும்' என்பது பிங்கந்தை. பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி இவை நான்கும் பெரும்பண்கள். நாற்பெரும் பண்ணுக்கும் இருபத்தொரு திறங்கள் கூறப்பட்டுள்ளன. பழந்தமிழ்ப் பண்கள் நூற்றுமூன்றின் அமைப்பினையும் வகைமுறைமையினையும் யாழ்நூல் 'பண்ணியல்' என்ற பகுதியில் அருண்மிகு விபுலாநந்த அடிகளார், சிலப்பதிகாரவுரை, பிங்கலந்தை முதலிய பழந்தமிழ் நூல்கலின் சான்றுகாட்டிப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கியுள்ளார்கள். அவை, பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்னும் நாற்பெரும் பண்களோடு அகம், புறம், அருகு, பெருகு என்னும் நால்வகை நிலைகளில் வகைப்படுத்தியுள்ளார். அவை,

1. பாலையாழ்
2. தேவதாளி
3. நிருபதுங்கராகம்
4. நாக ராகம்
5. குறிஞ்சியாழ்
6. செந்து
7. மண்டலியாழ்
8. அரி
9. மருதயாழ்
10. ஆகரி
11. சாயவேளர்கொல்லி
12. கின்னரம்
13. செவ்வழியாழ்
14. வேளாவளி
15. சீராகம்
16. சந்தி
17. தக்க ராகம்
18. அந்தாளிபாடை
19. அந்தி
20. மன்றல்
21. நேர்திறம்
22. வராடி
23. பெரியவராடி
24. சாயரி
25. பஞ்சமம்
26. திராடம்
27. அழுங்கு
28. தனாசி
29. சோமராகம்
30. மேகராகம்
31. துக்கராகம்
32. கொல்லிவராடி
33. காந்தாரம்
34. சிகண்டி
35. தேசாக்கரி
36. சுருதி காந்தாரம்
37. நட்டபாடை
38. அந்தாளி
39. மலகரி
40. விபஞ்சி
41. காந்தாரம்
42. செருந்தி
43. கௌடி
44. உதயகிரி
45. பஞ்சுரம்
46. பழம்பஞ்சுரம்
47. மேகராகக் குறிஞ்சி
48. கேதாளிக் குரிஞ்சி
49. கௌவர்ணம்
50. பாடை
51. சூர்துங்கராகம்
52. நாகம்
53. மருள்
54. பழந்தக்கராகம்
55. திவ்வியவராடி
56. முதிரிந்த இந்தளம்
57. அநுத்திர பஞ்சமம்
58. தமிழ்க்குச்சரி
59. அருட்புரி
60. நாராயணி
61. குறிஞ்சி
62. நட்டராகம்
63. இராமக்கிரி
64. வியாழக்குறிஞ்சி
65. செந்திறம்
66. தக்கணாதி
67. சாகவகக்குறிஞ்சி
68. ஆநந்தை
69. தக்கேசி
70. கொல்லி
71. ஆரியகுச்சரி
72. நாகதொனி
73. இந்தளம்
74. சாதாளி
75. தமிழ்வேளர்கொல்லி
76. காந்தார பஞ்சமம்
77. பாக்கழி
78. தத்தள பஞ்சமம்
79. மாதுங்கராகம்
80. கௌசிகம்
81. பியந்தி
82. சீகாமரம்
83. சாரல்
84. சாங்கிமம்
85. குறண்டி
86. ஆரியவேளர்
87. தணுக்காஞ்சி

88. வியந்ததம்
89. யாழ் பதம்
90. தாளி
91. கொண்டைக்கிரி
92. சீவனி
93. யாமை
94. சாளர்பாணி
95. நாட்டம்
96. தாணு
97. முல்லை
98. சாதாரி
99. பைரவம்
100.காஞ்சி
101.தாரப்பண்டிறம்
102.பையுள்காஞ்சி
103.படுமலை

இப்பகுப்பு முறைக்குரிய விளக்கத்தை யாழ்நூலில் காணலாம். ஏழு சுரங்களால் ஆன இராகங்களைப் பண் என்றும்; ஆறு சுரங்களால் ஆன இராகங்களைப் பண்ணியல் என்றும்; ஐந்து சுரங்களால் ஆன இராகங்களைத் திறம் என்றும்; நான்கு சுரங்களால் ஆகிவற்றைத் திறத்திறம் என்றும் வழங்குதல் மரபாக கருதுவர். ஆதலால், 'நூற்றுமூன்று பண்கள் என்புழி மேற்குறித்த பண்ணுந் திறமும்' ஆகிய எல்லாவற்றையும் 'பண்' என்ற பெயரால் வழங்கும் வழக்கமாக அமைகிறது.

குறிஞ்சிக்கு குறிஞ்சிப்பண்ணும், முல்லைக்கு சாதாரிப்பண்ணும், மருதத்திற்கு மருதப்பண்ணும், நெய்தலுக்கு செவ்வழிப்பண்ணும், பாலைக்கு பஞ்சுரப்பண்ணும் ஐவகை நிலத்திற்குரிய பண்களாக வகைப்படுத்தினர். அவற்றில் ஒரு சில பண்களைப்பற்றி கீழேக் காணலாம்.



**ஆம்பல்பண்**

ஆம்பல் என்பது ஒருவகைப் பண்ணாகும். இப்பண்ணைப் பற்றிய செய்திகள் நற்றிணை (123:10), ஐங்குறுநூறு (215:3-5), குறிஞ்சிப் பாட்டு (221-222) ஆகிய பாடல்களில் காணப் படுகின்றன. கோவலர்கள் ஆம்பல் பண்ணை இசைக் கின்றனர். தட்டை, தண்ணுமை போன்ற இசைக்கருவிகளுடன் மாலைக்காலத்தில் இசைத்து மகிழ்ந்திருக்கின்றனர்.

**காஞ்சிப்பண்**

காஞ்சிப்பண் துயருறும் மக்களின் துயரம் போக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளது. விழுப்புண் பட்டவர்கள், பேய்பிடித்தவர்களின் வருத்தம் தீர இப்பண்ணினைப் பாடிய குறிப்பு, புறநானூறு 296இல் காணப் பெறுகிறது.

**குறிஞ்சிப்பண்**

மலையுறை தெய்வங்களை மகிழ்விக்க, கூத்தரும் விறலியரும் குறிஞ்சிப் பண்ணைப் பாடியதாக மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது.

**நைவளப்பண்**

நைவளம் எனும் பண்ணைப் பற்றி, குறிஞ்சிப்பாட்டு (146), சிறுபாணாற்றுப்படை (36-38), பரிபாடல் (18-20-21) வரிகளில் குறிப்புகள் உள்ளன.

**பண்ணின் பயன்**

இயற்றமிழ்ச் சொற்பொருட் நலங்களும் இசைத் தமிழ் ஒலிநயமும் சிதையாவகை ஒன்றிப் பொருந்தும் முறையி ல் அமைந்த இனிய பண்களாக தமிழில் அமைந்திருக்கிறது. செவிக்கு இன்பம் ஊட்டும் நாதம் ஓசையாக மாறியது.

அவ்வோசை மக்கள் உள்ளத்தில் பதியும் செவிப்புலனாக அணுத்திரளை 'ஒலி' என பகுப்பர் அறிஞர். உயிர்க்குயிராய் விளங்கும் இறைவன், மேற்குறித்த 'ஓசை' 'ஒலி' ஆகிய இருவகை ஒலி நுட்பங்களாகவும் பிரிப்பின்றி இயைந்து நின்றது.

**'ஓசை யொயெலாம் ஆனாய் நீயே**
**உலகுக் கொருவனாய் நின்றாய்' நீயே**

எனவரும் திருத்தாண்டகம் புலப்படுத்துகிறது. இயல் இசை நாடகம் என்னும் மூன்று துறைகளிலும் வளம் பெற்று வளர்ந்த தமிழ் மொழியானது, பழத்தினிற் சுவையும் கண்ணிடை மணியும் போன்று இசை வளர்ச்சிக்கு இன்றிமையாததாய்ப் பண்ணிடையே கலந்து நின்று இசைக்குச் சுவையும் ஒளியும் தரவல்லதாக அமைகிறது. இந்நுட்பம்,

**'பண்ணினார் பாடலாகிப் பழத்தினில் இரதமாகிக்**
**கண்ணினார் பார்வையாகி'**

எனத் திருநாவுக்கரசரும்,

**'பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்**
**கண்ணிடை மணியொப்பாய்'**

என நம்பியாரூரரும் இறைவனை உவமித்துப் போற்றுதலால் புலப்படுகிறது.

**'இன்பந் தெளிவே நிறையோ டொளியே**
**வன்சொல் இறுதி மந்தம் உச்சமென**
**வந்த எட்டும் பாடலின் பயனே'** [சிலம்பு-ஆரங்கேற்று-உரைமேற்கோள்]

என வரும் பாடலில் இசையால் உலக மக்கள் எய்துதற்குரிய இம்மைப் பயன்கள் இன்பம், தெளிவு, நிறை, ஒளி, வன்சொல், இறுதி, மந்தம், உச்சம் என பண்ணின் பயனாக குறிக்கப்படுகிறது. செவ்விய முறையில் வாசிக்கப்பெறும் நல்லிசையானது மக்கள் உள்ளத்தில் படிந்துள்ள மனமாசுகளைக் கழுவித் தூய நன்நெஞ்சாக எவ்வுயிர்க்கும் அன்புடையராய் வாழும் இன்ப வாழ்க்கையினை பண் அமைத்துக் கொடுப்பதைக் காணலாம்.

முத்தமிழ் என்ற முகவரிக்கு உலகில் உள்ள மொழிகளில் தமிழ் மொழிக்கு மட்டுதான் உண்டு. இதில் தமிழர் இசை பன்னெடுங்காலமாகச் சிறப்புற்று வளர்ந்து வந்துளது. இசைக்கு மயங்காத உயிர்கள் இல்லை. ஆக செவிக்கு இனிமையும் உணர்வுக்கு ஊக்கமும் தரும் நாதமே "ஓசை" எனலாம். அவ்வுணர்வுடன் நற்சிந்தனைகளை வெளிப்படுத்தும் இதயமாக அணுக்கள் உதவுகின்றன. மனிதனின் உள்ளத்தில் பதியும் அணுத்திரள்களின் கூட்டமே ஒலியாக வெளிப்படுகிறது. அவ்வொலியே செவிக்கு பகுத்துணரும் உயிராக ஊடுருவுகிறது. உயிர்க்கு இதயமாய் விளங்கும் இறைவனை இசையாகவும், அவ்விசைக்கு 'ஓசையாக' உதயமாகும் பண்களும் இருவகை நுட்பங்களாக அமைகிறது.

பண்ணில் ஐந்திசையா அல்லது ஏழிசையா என்ற கேள்விக்கு ஐவகை நிலத்தோடு உயிரின் நெடிலாக ஏழுவகை எழுத்துக்களை ஒப்பிட்டு பார்க்க முடிகிறது. பண் பல வகைகளில் உண்டு. அவற்றில் 103 பண் வகைகள் எவ்வகையில் அமைந்துள்ளதைப் பற்றியும் சில பண்ணின் வரைமுறைகளையும் அதன் பயன்பாட்டையும் ஆராயமுற்பட்டிருப்பது ஒரு முயற்சியாகும்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இந்தியப் பண்பாட்டிற்குத் திராவிட மொழி பேசும் மக்களின் பங்களிப்பான உலகாயதக்கொள்கை

**முனைவர் டு செல்வமீனா**
உதவிப்பேராசிரியர்
சென்னை பல்கலைக்கழக உறுப்புக்கல்லூரி
திருவொற்றியூர், சென்னை 600 019
jaishreegeerthiny@gmail.com

*****

இந்தியப்பண்பாடு என்பது மக்களின் நடைமுறை வாழ்வியல் அனுபவங்கள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், மரபுவழி வந்த தகவுகள், அறிவியல், அழகியல், மனவியல், அறிவுத்திறன், சித்த வைத்தியம், புலன் கடந்த காட்சிகள், ஆகியவற்றின் அடித்தளத்தின் மேல் திராவிடம் என்னும் எழில் மாளிகை எழுப்பப் பெற்றுள்ளது. இம் மாளிகையின் உருவாக்கத்தில் காட்டில் உறைந்த முனிவர்கள் மட்டுமன்றி வீட்டில் நிறைந்த வாழ்வினை மேற்கொண்ட லட்சிய இல்லறத்தார்களும் ஈடுபட்டுள்ளனர் என்பது வரலாறு உணர்த்தும் வாய்மையாகும்.

இந்தியத்திருநாட்டின் தெற்கு, வடக்கு, என்ற திசை வேறுபாடின்றி அறிவுகள் பரிமாற்றம் பெற்று வந்துள்ளது என்பதற்குச்சான்றாக பழந்தமிழ் நூல்கள் அரண் செய்வதனைப்பின்வரும் கருத்துகளின் மூலம் நிலை நாட்டுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**திராவிட மொழி பேசும் மக்களின் உலகாயதகக் கொள்கை:**

உலகு, உலகில் பொதிந்துள்ள பொருள்கள், உயிர் வகைகள், வாழ்வியல், உலகுக்கு அப்பால் உள்ளனவாக எண்ணப்பெறும் கருத்தியல்பொருள்கள் முதலியன பற்றிய ஆய்வுகள் வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்தே சிந்தனையாளர்களால் நிகழ்த்தப் பெற்று வந்துள்ளன.

**உடல் -பதி உயிர் -பசு ஆன்மா -பாசம்**

இவற்றில் உடல், உயிர் மட்டுமே திண்ணம் சுட்டத்தக்க பொருள், ஆன்மா என்ற ஒன்று இல்லை என்போரே உலகாயதர் அதை விடுத்து ஆன்மா ஒன்றே உசிதம், உடலும், உயிரும் அழியக் கூடியவை ஆன்மா ஒன்றே நிலையானது என்றுரைப்போர் தத்துவவாதிகள் எனலாம், வேதங்களையும் அவற்றின் வழிநடப்போரையும் உண்மையாகக்கண்டித்த வேத மறுப்புத்தத்துவமாக உலகாயதம் விளங்குகின்றது. இந்நெறி வேதகாலத்திற்கு முற்பட்டே இந்திய நாட்டில் வழங்கி வந்துள்ளது என்பர் தத்துவ வரலாற்று அறிஞர்கள்.

பொருள் முதலியம் -- Meterialism
பொருள் உண்மையியல் -- Realism
இயற்கையியல் -- Naturalism
அனுபவ உண்மையியல் -- Empiricism
இன்பநலக் கோட்பாட்டியல் -- Heclosricsm
இறை நம்பிக்கையியல் -- Athesism

என்றே பல்வேறு கூறுபாடுகளைக் கொண்டது உலகாயதம். மிகப்புராதன சமுதாயத்தில் இயற்கைச்சூழலில் இயல்பான வாழ்வியல் நடைமுறை அனுபவ அடிப்படையில் உலகாயதம் உருவாகியது எனலாம்.

உண்மையோடு பொருந்தியதாகவும், பகுத்தறிவுக்கு ஒத்ததாகவும் அமையும் அனுபவஉண்மையினை அடிப்படையாகக்கொண்டு உலகாயதர் அறிவாராய்ச்சியியலை நிறுவிக்கொண்டனர். இவர்கள் புலன் கடந்த உள்ளுணர்வியலை ஏற்றிலர், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற கருவிகளால் காணப்படும் 'காட்சியளவை' மட்டுமே இவருக்கு உடன்பாடு, காட்சிக்கு உணர்வுகள் கருவியாக பயன்படும் என்பாரின் கருத்திற்கு இசைந்திலர்.

நிலம், நீர், தீ, வளி, என்று நால்வகைப் பூதங்களின் கூட்டமாகிய பிரபஞ்சம் தன்னாட்சியுடையது (Autonomous) அது தன்னைத்தானே இயக்கிக் கொள்கிறது. பரம்பொருட் கோட்பாடு தேவையற்றது என்று உலகாயதர் முடிவு செய்தனர்.

இனி, தமிழிலக்கியங்கள் பொதிந்துள்ள உலகாயதச்சார்புடைய சிந்தனைகளைப்பெருவாறு தொகுத்து நோக்குவோம்.

**தொல்காப்பியத்தில் உலகாயதம்:**

தொல்காப்பியம் என்னும் இலக்கணநூலில் தமிழனின் இலக்கண மரபுகளுடன், இலக்கியவியற் கூறுகள், வாழ்வியல், இறையியல், மெய்யியல், அரசியல், சமுதாயவியல், கலையியல், முதலியன பற்றிய பல்வகைச் சிந்தனைப்படுகைகள் பொதிந்துள்ளன.

உலகம் என்பது பூத சேர்க்கையால் அமைந்தது என்ற உலகாயதக் கருத்தினை,

**நிலம் தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலின்** ( தொல். பொருள். நூ.635 )

என்று தொல்காப்பியர் சுட்டியுள்ளார். ஐம்பெரும் பூதங்களும் தம்முள் கூடி உலகினையும் உலகினுள் காணப்படும் பொருள்களையும் படைத்துள்ளன. என இந்நூற்பாவின் வழி கொள்ளலாகிறது. பொருள் பற்றிய ஆராய்ச்சியில் தொல்காப்பியர் பெரிதும்ஈடுபட்டவர், உயர்திணைப்பொருள், அக்ரினைப்பொருள், இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள், முதற்பொருள், சினைப்பொருள், கருப்பொருள், உரிப்பொருள், அகப்பொருள், புறப்பொருள், என்பனவாகப் பல்வகை நோக்கில் பொருள் ஆராய்ச்சியில் ஈடுபட்டு இலக்கண வரையறை செய்த சிறப்புக்குரியவர் தொல்காப்பியர். இப்பாகுபாடுகள் யாவும் உலகியல் அனுபவ அடிப்படையில் அமைந்தவை.

**சங்க காலத்தில் உலகாயதம்:**

வாழ்கையில் ஆடவன் ஒருவன் அடைய வேண்டிய பேறு இன்பம் என்னும் உறுதிப்பொருளே என்ற உலகாயதக்கருத்துக்கு முன்னுரிமை கொடுத்து.

இளைய மகளிரது வளையணிந்த தோளை முயங்கினான்: காவலையுடைய இளமரக்காவில் பூவைச்சூடினான். குளிர்ந்த மணம் நாறும் சாந்தைப்பூசினான் என்று தெளிவுறுத்தினார்.

மேலும்,

**..பிறரிடம் கை நீட்டியவன் அல்லன்..**
**..இரந்தவர்க்கு இல்லை என்று சொல்லியரியதவன்..**
**..தன்னை நோக்கி வரும் படையினை எதிர்த்து நிறுத்தியவன்..**
**..புறங்காட்டி ஓடும்படைவீரரின் முதுகு கண்டவன்..**

**..பாணர் மகிழும்படி அவர்தம் பசிபோக்கியவன்..**
**..மயக்குடைய சொல்லை விடுத்தவன்..**

என்ற சங்க பாடலடிகள் மூலம் வீரயுகத்தில் தலைமகன் ஒருவன் புரிதற்குரிய சாதனைகள் இவை என்பதும் வாழ்கையின் குறிக்கோள், புகழ் மட்டுமே வினைக்கோட்பாடு, கடவுள், மறுமை போன்ற கருத்துக்கள் இடம் பெறவில்லை என்பதும் மரணத்தின்பின் மனிதநிலையினைப் பற்றி கவலைப்படவில்லை என்பதும் புலனாகிறது.

**வள்ளலார் நோக்கில் உலகாயதம்:**

வடலூர் வள்ளலார் இளமைப் பருவத்தில் சைவ சித்தாந்த நெறியில் நின்றவர். காலப்போக்கில் சுத்தசமரசசன்மார்க்கசங்கம் அமைத்து சாதிமத பேதமற்ற ஒப்பற்ற அருட்கொள்கையினைப் பரப்பினார்.

உலகாயதரின் ஒரே வாழ்க்கைக் குறிக்கோள் விரும்பிய உணவுகளை உண்டு, நன்றாக உடுத்திக்கொண்டு சுகபோகங்களில் மூழ்கிக் கிடத்தலே ஆகும். இவர்களை அருளே வடிவமான வள்ளலார் ‘கயவர்’ என்று கடிந்துரைத்தார்.

**-வத்திரம் அணிந்துமட மாதர்தமை நாடிநறு**
**- மலர்சூடி விளையாடிமேல்**
**கரமேவ விட்டுமுலை தொட்டுவாழ்ந் தவரொடு**
**கலந்துமகிழ் கின்றசுகமே**
**கான்கண்டசுகமிதே கைகண்ட பலன் எனும்**
**கயவரை கூடாதருள்-**

இப்பாடலைப் பயிலும்பொழுதுபல்வேறு சமயங்களின் கொள்கைகளைப் படித்தறிந்து அவற்றில் மக்களுக்குப் பயன்தராத கருத்துக்களை ஒதுக்கிவிட்டு நன்னெறி நிற்றலைக்குறிக்கோளாகக் கொண்டு வள்ளலார் உலகாயதாரைப் பற்றிய செய்திகளை நூலறிவினால் தொகுத்துக்கூறியுள்ளார் என்றே தோன்றுகின்றது.

**பெரியாரின் உலகாயதம்:**

இவ்வியக்கம் மக்களிடையே பரபரப்பை உண்டாக்கித் தூங்கிக் கிடந்த சமுதாயத்தினை ஒரு குலுக்கு குலுக்கி விழிப்படைய செய்துள்ள வரலாற்றுண்மை யாவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

பெரியார் ஒழுக்கத்தைப்பெரிதும் வலியுறுத்தினர் விஞ்ஞானத்திற்கு மரியாதையும் மதிப்பும் கொடுத்த பெரியார் மெய்ஞானத்தை பொய், புரட்டு என்று வெறுத்தார். சமுதாயச் சமநீதிக்கும், பெண் உரிமைக்கும் குரல் கொடுத்தார். தகவுகளைப்பெரிதும் மதித்தார் . அமரர் சந்திர சேகரேந்திரரின் தவம், ஒழுக்கம், சீலம், வைராக்கியம், முதலியவற்றைப்பெரிதும் மதித்துத்தம் நெறியைப்பின்பற்றுவோருள் ஒருவர் கூட அம்முனிவரைத் குறை கூறக்கூடாதென்று அறிவுறுத்திய ஆன்றோர்.

மரபுவழிப்பட்ட உலகாயதர் கூறியவற்றுள் இம்மை, மறுமை, பிறவிச் சுழற்சி என்பன இல்லை என்ற கருத்தமைய ‘கடவுள்இல்லை, கடவுளைப் படித்தவன் முட்டாள், கடவுளைவணங்குபவன் சர்வமுட்டாள்’ என்று முழங்கினார். இதற்கான காரணங்களாக நாள், நட்சத்திரம் பார்த்தல் இராகுகாலம் பார்த்தல், கண்மூடித்தனமாக எதையும் நம்புதல் பொருளற்ற சடங்குகள், சமுதாய அநீதிகள், வருணக்கோட்பாடு

ஏற்றத்தாழ்வுகள் என்பன முன்னேற்றப் பாதையின் தடைகள், இவையாவும் சமயத்தின்பெயராலும், கடவுளின்பெயராலும் நடைபெறுவதால் கடவுளும், சமயமும் தேவையற்ற ஒன்று என்னும் கொள்கையுடையவராக இருந்தார். இவையனைத்தும் உலகியல் நிகழ்வுகளாக அதன் அனுபவங்களாகவே சித்தரிக்கப்பட்டுள்ளதைக்காணலாம்.

**தத்துவப் பிரகாசர் நோக்கில் உலகாயதம்:**

சைவசித்தாந்தத்தின் தனித்தன்மையினையும், சிறப்பினையும் நிலைநாட்டியவர் தத்துவப்பிரகாசர் இவர், அறியவர்க்குப் பணி செய்வதே அறம். அறம் எனப்படுவது பிறிதொன்று இல்லை. அரிவையருடன் கூடி இன்புறுதலே முக்தி. இறந்தபின் வீடுபேறு அடையலாம் என்பது பொய்மையாகும். ஏன் எனில் வீடுபேற்றினை போய்க் கண்டவர்கள் ஒருவரும் மீண்டு வந்து அதுபற்றி ஒன்றும் கூறிலர் என்கிறார்.

தெய்வமே இல்லை என்று பார்த்து வந்த உலகாயதனுக்குத்தெய்வம் உண்டு. அவன்தான் காமன் என்ற கருத்து. காதல் விளைக்கும்கடவுளைக் கருவேள் என்றும் கருணை விளைக்கும் இறைவனைச்செவ்வேள் என்றும் போற்றுவர் தமிழர். இன்பச்சுவைமிக்க கலித்தொகையில் காமன்விழா கூறப்படுதல் இங்கு சுட்டத்தக்கது.

இவ்வாறிருக்கும் உலகாயதனை அறிவுறுத்தும் விதமாகவும் ஊத்தவாயும். உடல்திரங்கி, நரைத்துத் தளர்ந்து இருமி வரும் மங்கையரைத் தெய்வம் என்று பேணும் செயலைக்கைவிட்டு இறையருளைப் பேணிப் பேரின்பம் உண்டாம் என்பதாகவும் தனது உலகாயத மறுப்பினைத் தெரிவித்துள்ளார்.

**சைவ சித்தாந்த நோக்கில் உலகாயதம்:**

**உடம்பே உயிர் = தேகாத்துவவாதம்**
**பொறிகளே உயிர் = இந்திரியாத்துவவாதம்**
**நுண்ணுடலே உயிர் = ஆக்கும் தேகத்துமவாதம்**
**அந்தக் கரணங்களே ஆன்மா = அந்தக்கரண ஆன்மாவாதம்**
**பிராணவாயுவே ஆன்மா = பிரானான்மவாதம்**

உயிர் என்பதொரு பொருள் இல்லை என்று கூறும் உலகாயதரை மறுத்துரைக்கும் முறையில் சித்தாந்த நோக்கில் இங்ஙனம் சுட்டப்பட்டுள்ளதை காணலாம்.

மேலும் முன் ஈட்டிய வினை பின் தொடரும் என்றும் வினைப்பயனை நுகர்பவனாகிய ஆன்மா உண்டு என்று சைவ சித்தாந்தம் பகிர்கிறது.

ஆனால் உலகாயதனோ, இன்பமும், துன்பமும், முறையே நல்வினை, தீவினைகளினால் விளைவன என்ற கருத்தினையும் மறுக்கின்றனர். தண்ணீர்சந்தனம், தண்ணீர்நெருப்பு, இக்கூட்டணி எத்தகைய வினையைச் செய்துள்ளது. இவை பொருட்கு இயல்பு என்று உலகாயதன் மறுத்துரைக்கிறான்.

மேலும் ஆன்மா என்பது உணர்வுடன் வாழும் உடம்பே தவிர வேறன்று. உடம்பைத் தனித்து ஆன்மா இருத்தல் இயலாது. இறைவன் அருவம் எனில், அறிவில்லாத அருவமாகிய ஆகாயம் போலவாம். இறைவன் அருவுரு எனில், அருவமான ஆகாயத்தில் உருவமான கல்லை நிற்க வைத்தல் கூடுமோ என்று விதண்டாவாதம் பண்ணுகின்ற உலகாயாதனை சிற்றின்பமே பற்றிக் கொண்டு நெறியினைக்கைவிடுதல் நல்லுணவினை விடுத்து மலத்தினை வவ்வும் பன்றியின் செயலை ஒத்தது என்று சைவ சித்தாந்தம் குறிப்பிடுவது உணரத்தக்கது.

அறங்கள் என இந்திய தமிழக கலாச்சாரங்களில் போற்றப்பட்டவையும், போற்றப்படுபவையும் பற்றிய எதிர்மறை வாழ்க்கை வாழ்பவனே உலகாயதன் எனப்பட்டான் மணம் போல் வாழ்ந்தவன். மாதா, பிதா குரு, தெய்வம் அதாவது குடும்பம், கல்வி, சமயம் ஆகிய நிறுவனங்கள் குழந்தை பருவம் தொட்டு அவனுக்கு நல்ல காத்திரமான சிந்தனையையும், ஒழுங்கையும் ஊட்டாதது திடீரென்று மரபு சம்பிரதாயம், முன்னோர்கள், சான்றோர்கள், வேதம். சாஸ்திரம், கடவுள், புராணம் பிராமணியம், உபதேசித்தது போன்றவற்றை வாழ்க்கையோடு இணைத்துப்பரிசீலனைகள் செய்து பார்க்க மறுத்துவிடுகிறான். இதுவும், அவரவர் பிறப்பு, பால், சாதி, வர்க்கம், கல்வி, சமயம், மொழியினம், நிறம், ஆகியவற்றைப்பொறுத்தே அவன் வளர்ந்து சமுதாயத்திற்குள் வருகிறான். ஆக இயல்பாகவே கிடைக்காத எந்த ஒரு அறச்சட்டகத்தில் வருவனவற்றிற்கு எதிர்வினையாற்றி வாழத்தலைபடுகிறான்.

மனிதனின் தோற்றம் முதல் இன்று வரையிலான அனைத்து சமன்பாடுகளுக்கும் அறம் என்று பெரியோர்களால் சுட்டப்பட்ட வாழ்வியல் தர்மமும் ஒரு காரணமே எனலாம்.

**சங்கச்சான்றோரின் உலகாயதம்:-**

கணியன் பூங்குன்றனாரின்,

**..யாதும் ஊரே யாவரும் கேளிர்,**
**தீதும் நன்றும் பிறர்தரவாரா,**
**நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன,**
**சாதலும் புதுவது அன்றே வாழ்தல்,**
**இனிதென மாகிழ்ந்தன்றும் இலமே,**
**முனிவின் இன்னாது என்றாலும் இலமே, மின்னொடு**
**வானம் தந்துணி தலைஇ ஆனாது**
**கல்பொரு திரங்கும் மல்லர்பேர்யாற்று**
**நீர்வாழிப் படுவும் என்பது திறவோர்**
**காட்சியிற் தெளிந்தனம் ஆகலின் மாட்சியிற்**
**பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே..** (புறம் 192)

இப்பாடலில், ஓடும் வெள்ளத்துடன் ஒத்தோடும் மிதவையினை நியதிப்படி செயலாற்றும் உயிர்க்கு உவமையாக இத்தமிழ் சொல்லப்பட்டிருத்தல்காணத்தக்கது. நியதியை முறை என்ற அழகு தமிழால் சுட்டுகிறார் ஆசிரியர்.

மனிதனின் செயல்கள் நியதியால் முடிவு சுட்டப்பட்டுகின்றன. நியதியை மீறி எதிர்த்தோ செல்லுதல் இயலாது என்பதும் இவ்வுவமையால் கவிச்சுவை பெருக கணியன்பூங்குன்றனார் தெளிவுறுத்துகிறார். ஆக இத்தமிழ் சான்றோரின் இக்கொள்கை உலகாயாதச்சிந்தனையோடு ஒத்துப்போதல் என்பது தெளிவு.

மனித வாழ்க்கை என்பது உலகாயதரைப் பொறுத்தவரையில் பிறப்பு-துன்பம்-இறப்பு-என்ற மூன்றே சொற்களில் அடங்க முடிவதாகும். பிறப்பு ஒரு பிணி "பிணி தீர்க்கும் மருந்து" கடவுள் என்கிறார். வினைப்பயன் விளையாதபடி கடவுளால் தடுக்க முடியும் என்ற வைதீக நெறியை குரவர்ஆழ்வார்கள் பாடினாலும் வினை தொடரும், மறுப்பிறப்புள்ளது அதனால் துக்கம் பெருகும் என்ற அடிப்படையை மறுக்கவில்லை.

மேலும் தன்னை நன்கு அடக்கிய ஒருவனால் பிறரை அடக்க முடியும் ஏனெனில் ஒருவனுடைய மனதை அடக்குவதுதான் கடினம், என்ற உபதேசம் உலக நாகரிகங்கள் எல்லாவற்றிலும் காணப்படும் பொது

விளக்கமாகும். இதனை உலகாயதர் மேலும் அவர்கள் மனைவி மீது வைக்கும் மிகையான காமம் ஆணின் அறம், பொருள், மதிப்பு, கௌரவம், வினையாட்சி,முயற்சி,பெருமை, ஆண்மை,,சமூகக்கடமை ஆகிய அனைத்தையும் இழக்க செய்யும் என்று எண்ணிய உலகாயாதர் மனைவியை அவனின் அன்றாட பணிகளுக்கு ஏவல் செய்யும் பணியாளாகவே வைத்திருந்தான்.

சம்சாரம் சாகரம் இரண்டிலும் இரைச்சல் ஒருபோதும் ஓயாது என்றும் இரைச்சல் நின்றபிறகு குடும்பத்தில் அறச்செயல்களைச் செய்யலாம். கடலில் குளிக்கலாம் என்றால் அது நடக்காது. இரைச்சலின்வழியாகத்தான் வாழ்ந்ததாக வேண்டும். என்ற உலகாயதக் கற்பிதத்தையும் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் கற்பித்து கொண்டவன் திராவிட உலகாயதன்.

காதலின்பத்தையே உலகாயதர் இன்பமென்று சிறப்பித்துக் கணக்கிட்டனர். பொருளைச் சேர்ப்பதில் அறத்தை செய்வதிலும் தனித்தனியே பலவகையான சிறிய சிறிய இன்பங்கள் தோன்றும். ஆயினும் இவை காதலின் பத்துக்கு துணைக்கருவிகளாவது பற்றியே ஒருவாறு இன்பங்கலென்று உலகத்தில் மனிதர் ருசியான பதார்த்தங்களை உண்டல், நல்ல பாட்டுக்கேட்டல், நல்ல மலர்களை முதலிய இந்திரிய இன்பங்களை விரும்பி அவற்றை அடையும் பொருட்டு மிகவும் பாடுபடுகிறார்கள். அதிகார இன்பம், புகழின்பம், முதலிய எண்ணற்ற வேறுபல இன்பங்களுக்காகவும் உழைக்கிறார்கள் இதையே திராவிட உலகாயதர்கள் சதமென்றும்நம்புகின்றார்கள். அவர்களுக்கு, சத் சித், பரம்பொருள், ஆன்மா, பரவெளி, ஆத்ம சுகம் இவைப்பற்றியெல்லாம் கவலையில்லை இதனையே வள்ளுவரும்,

**..கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்**

**ஒண்டோடிக் கண்ணே யுள..**(குறள்- 620)

கண்டல், கேட்டல், உண்டல், மோப்பு, தீண்டுதல், எனும் ஐவகை இந்திரியங்களையும் ஒருங்கே இன்புறுத்தும் இயல்பு ஒளி பொருந்திய வளையணிந்த இப்பெண்ணிடத்தே உள்ளது என்பது அக்குறளின் பொருள் நான்கு உறுதிப்பொருட்களை மனிதப்பிறவி எடுத்ததனால் ஒருவன் எய்தக்கூடிய பெரும் பயன்களை கணக்கிடப் புகுந்தவிடத்து நம் முன்னோர்கள் காதலின்பத்தையே இன்பமென்னும் பொதுப்பெயரால் சொல்லியிருக்கிறார்கள்.

இந்திய மண்ணின் பண்பாடு, ஆன்மிகம், கலாச்சாரத்திற்கு பெருமதிப்பு அளித்து வந்த வெளிநாட்டவர்கள் இங்கு வந்து தங்கி அவற்றை தங்கள் வாழ்க்கை நெறியாக ஆக்கிக் கொண்ட நேரங்களிலும் கூட திராவிட உலகாயதருக்கு அந்த கற்பிதங்களின் மேல் நம்பிக்கையில்லை, விவேகானந்தரின் சீடரான நிவேதிதை,

**பாரதத்தின் புனித மண்ணே!**
**எங்கள் தெய்வங்களின் புனிதபீடமே**
**மகான்களின் பாதச் சுவடே**
**எங்கள் இல்லங்களின் ஆதாரமே!**
**எங்கள் வீரர்களின் காலடி மண்ணே!**
**உன்னை வணங்குகிறேன்.**
-சகோதரி நிவேதிதை

என்று மேன்மைப்பட்ட பாரத்தினைப் போற்றுகிறார். ஆனால் உலகாயதத்தினர் தமது உழைப்பு போக சஞ்சிய நேரத்தில் சீட்டாட்டம், தாயம், பரமபதம் போன்ற சிற்றின்பக் களிப்பிலே ஈடுபடுகின்றனர்.

இனி தமிழின், தமிழரின், மிகப்பெரும் ஆளுமையான பாரதியைத் தவிர்த்து எந்தக்கட்டுரையும் முழுமை பெறாது என்ற உணர்வில், அவர் தம் மண்ணின் மைந்தர்களுக்குக் கூறிய அறிவுரை, அறிவுரை என்ன என்பதனைக் கண்ணுறலாம்.

தமிழா தெய்வத்தை நம்பு, பயப்படாதே, உனக்கு நல்ல காலம் வருகின்றது. ஜாதி வேற்றுமைகளை வளர்க்காதே. ஜாதியிரண்டொழிய வேறில்லை என்ற பழந்தமிழ் வாக்கியங்களை வேதமாக கொள்.

பெண்ணை அடிமை என்று கருதாதே முற்காலத்துத்தமிழர் மனைவியை வாழ்க்கைத்துணை என்றார். ஆத்மாவும் சக்தியும் ஒன்று ஆணும் பெண்ணும் சமம்.

வேதங்களை நம்பு, அவற்றின் பொருளைத் தெரிந்துகொண்டு பின் நம்பு, புராணங்களைக் கேட்டு பயனடைந்துகொள், புராணங்களை வேதங்களாக நினைத்து மடமைகள் பேசி விலங்குகள்போல் நடந்து கொள்ளாதே.

முந்திய சாஸ்திரந்தான் மெய், பிந்திய சாஸ்திரம் பொய் என்று தீர்மானம் செய்துகொள்ளாதே, .. தகப்பன் வெட்டிய கிணறு என்று சொல்லிய மூடர்கள் உப்பு நீரைக் குடிக்கிறார்கள் .. என்று பஞ்சதந்திரம் நகைக்கிறது.

இவ்வாறு தன இன மக்களுக்கு அவர்கள் உய்யும் பாதையில் செல்ல வேண்டும் என்று கட்டளையிடுகிறார். இன மானத் தலைவனான பாரதி.

**முடிவுரை:**

சமூகங்கள் பல சேர்ந்து ஒரு சமுதாயமாக பிண்ணிப்பிணைந்து இயங்கும்பொழுது உருவாகும் வாழ்க்கை நெறி, பழக்கவழக்கங்கள், கலையுணர்வு, ஆட்சியமைப்புக்கள், சிந்தனை முதிர்ச்சி, கொள்கைகள், கோட்பாடுகள் ஆகிய அனைத்தும் இணைந்து இந்தியப்பண்பாட்டிற்கு திராவிட மொழி பேசும் மக்களின் பங்களிப்பிற்கு துணை நிற்றலை இக்கட்டுரை மெய்ப்பிப்பதை கண்ணுறுகிறோம்.

(☺)(☺(☺)(☺)(☺)

# பழந்தமிழ் மக்களின் புவியியல் மதிநுட்பமும் அவர்தம் புவியமைப்பு சார்ந்த இயற்கை இயல்புக் கூறுகளும்

**முனைவர் ம சக்திவேல்,**
முதல்வர்,சென்னைப் பல்கலைக்கழக உறுப்புக்கல்லூரி,
திருவொற்றியூர்,
mathisakthi22@gmail.com

*****

## முன்னுரை:

காலந்தோறும் தோன்றி வளரும் இலக்கியச்செல்வங்கள் தமிழில் புதிது புதிதாய் தோற்றமுறினும் எக்காலத்தவரையும் தம்பால் ஈர்த்துத் தம்முள் மூழ்கச் செய்கின்ற திறன் சங்க நூல்களாகிய பாட்டுக்கும் தொகைக்குமே உரியது. காலத்திற்கேற்ற கருத்துக்களைக் காலச் சூழ்நிலையிலிருந்து மாறுபடாமல் வாழ்வியலுக்கு மகிழ்ச்சியும்பயனும் நல்குகின்ற இயற்கையினை மரபுகளோடு இயைத்து மனித வாழ்வின் நெறியினை இயற்கை வழியில் ஆராய்வதே பழந்தமிழ் இலக்கியம்.

## புவியியல்:

புவியியல் (Geography) என்றால் பூவுலகில் பரந்துபட்ட பல்வேறு பிரிவுகளையும், சூழ்நிலைகளையும் அவற்றுடன் மனித இனத்திற்குரிய தொடர்புகளையும் பற்றித் தெரிந்துகொள்வது ஆகும்.

புவியியல் என்பது பூமியின் மேற்பரப்பு, மனிதன் வாழ்வதற்குத் தேவையான இயற்கை உற்பத்திக் காரணிகளில் ஒன்று. மண் இல்லையேல் மரம் உள்ளிட்ட புல், பூண்டு, செடி, கொடிகள் இல்லை. அவை இல்லையேல் பூமியில் பசுமை இல்லை. பசுமை இல்லையேல் ஓரறிவு உயிர் முதலான ஆறறிவு உயிரினங்களுக்கும் வாழிடங்கள், உயிர் வாழுதலுக்கு இன்றியமையா பயன்படு பொருள்களான உணவு, காய்கறிகள், பழங்கள் முதலான விவசாய விளைபொருட்கள் இல்லை. காற்று, ஈரப்பதம், அதனால் மழை இல்லை. ஆக மனிதன் பூமியில் நிலைத்து நீடுழி வாழ்வதற்குத்தேவையான அடிப்படைப் பருப்பொருளைக் கொண்ட தரை அல்லது பூமியின் மேற்பரப்பு எனலாம்.

## புவியியல் விளக்கம்:

நிலம் என்பதற்கு உற்பத்திக் கரணங்களில் ஒன்று. முதலும் உழைப்பும் பிற கரணங்கள் ஆகும். நிலம் அடிப்படைக் காரணம். நிலம் என்ற சொல் பொருளாதாரத்தில் பரந்த பொருளில் வழங்குகின்றது. இது வெறும் மண்ணை மட்டும். மண், நீர், காற்று, மண்ணில் மண்டிக்கிடக்கும் தாதுப்பொருட்கள், தட்பவெப்பம் முதலிய இயற்கை வளங்களெல்லாம் “நிலம்” என்பதில் அடங்கும் என்று கலைக்களஞ்சியம் விளக்கம் தருகிறது.

இதனுடன் ஆங்கிலஅகராதி தரும் மற்றொரு விளக்கத்தையும் காணலாம். ”பல்வேறு நாடுகளின் நில அமைப்பு, அதன் இயற்பியல் தன்மைகள், நிலத்தின் இயற்கைப் பிரிவுகளோடு அதன் அரசியற்பிரிவுகள், தட்பவெப்பநிலை, விளைபொருட்கள், மக்கட்பெருக்கம் ஆகியவற்றைத் தன்னுடைய பருப்பொருளாகக் கொண்ட அறிவியலாம்” என்கிறது.

**புவியியலின் உட்பிரிவுகள்:**

புவியியலை நுணுகி ஆராய்ந்தால் அதன்கண் வேறு பல பிரிவுகள் அடங்கியிருப்பதைக் காணலாம். அவற்றைக் கீழ்க்காணுமாறு சுட்டலாம்.

1. மானிடவியல் புவியியல், 2. சமுதாயப் புவியியல் 3.அரசியல் புவியியல், 4.பொருளியல் புவியியல், 5. வரலாற்றுப் புவியியல், 6.நகரப் புவியியல்,
7. கிராமப் புவியியல், 8.மருத்துவப் புவியியல் 9.வட்டாரப் புவியியல்

**திணைப் பாகுபாடு:**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற தமிழர்களின் ஐந்திணை வாழ்க்கை முதல், கரு, உரி என்ற முப்பொருளின் அடிப்படையில் அமைந்துள்ளன. உலகில் உள்ள எல்லாம் இம்முப்பொருளால் ஆனது என்று கொள்ளலாம். இதை நன்குணர்ந்தவர்கள் சங்ககால மாந்தர்களும் புலவர் பெருமக்களும் என்பதற்கு அவர்கள் யாத்த பாடல்களே சான்றாக அமைகின்றன. இவற்றுள் முதலும், கருவும் புவியியல் பாற்பட்ட செய்திகளைப் பெரிதும் விளக்குகின்ற வகையிலும், உரிப்பொருள் அவற்றின் அடிப்படையில் நடைபெறும் அகப்புற வாழ்வு நிகழ்ச்சியைத் தெரிவிக்கும்.

குறிஞ்சியில் தோன்றி வளர்ந்த மனிதன் காலத்திற்கேற்ற வளர்ச்சியும் வசதிகளும் பெற்றதனால் அங்கிருந்து பிரிந்து பரந்து வாழமுற்பட்டான். அந்நிலையில் மலையை அடுத்திருக்கின்ற காடுகளில் அவன் உறைந்திருக்க வேண்டும். மலையில் கிடைத்தது போலத் தன் தேவைக்கேற்ற அத்துணைப் பொருட்களும் நாடுகளில் அவனுக்குக் கிடைக்கவில்லை. எனவே தானாகச் சிலவற்றைப் பயிராக்கக் கற்றுக்கொண்டான். மனித சமுதாயம் வளர அறிவும் பெருகியது. மனிதன் பின்னர் வளம் நிறைந்த மருதநிலம் வந்து சேர்ந்திருக்கலாம். இம் மருத நிலத்தில்தான் மனிதனின் நாகரிகம் முழுமையான நாகரிக வாழ்வை எய்தியிருக்க வேண்டும். பின்னர் தொழில் காரணமாகவும், கடல்விளை பொருள்கள் காரணமாகவும் கடலோரத்தில் நிலைத்த வாழ்வை உண்டாக்கிக் கொண்டிருக்க வேண்டும்.

இவ்வாறு மலையில் தோன்றி வளர்ந்த மனிதஇனம் கடற்கரைப் பகுதிவரை வந்து வாழக் கற்றுக்கொள்வதற்குப் பல நூறாயிரம் ஆண்டுகள் கழிந்திருக்கலாம்.

“கல்தோன்றி மண் தோன்றாக் காலம்” என்று ஐயனாரிதனாரின் கூற்று இதனை மெய்ப்பிப்பதாகவே உள்ளது. மேலும், கடலும் கடல் சார்ந்த நிலமும் நெய்தல். இரங்கல் என்பது தலைவியின் மனம் இரங்குதலாகும். கடல் மேற்சென்ற தலைவன் வாராமையின் அவன் நிலை குறித்துத் தலைவிக்கு ஏற்படும் ஏக்கம் இரங்கல் எனப்பட்டது.

பாலை எனத் தனிநிலம் அமையாது. எல்லா நிலத்தின் திரிபாகவும் இருப்பது போன்றே வளமான நிலம் வளம் பிரிந்து வேனிற் காலத்து வெயிலால் வெம்மை மிகுதியுற்று, சுரஞ் செல்வாரைத் துன்புறுத்தும் நிலமாகப் பாலை அமைவது போலத் தலைவன் சேர்ந்திருந்த காலத்தில் வளமும்பொலிவும் மிக்கிருந்த தலைவி, அவன் பிரிந்த காலத்தில் நலம் கெட்டுப் பொலிவிழந்து வாடித் துன்புறுகிறாள் என்பதே பாலைக்கான குறியீடாகும்.

**புவியியல் அடிப்படை:**

தொல்காப்பியர் புவியியல் அடிப்படையில் பகுக்கப்பட்ட நானிலம் பற்றிக் குறிப்பிடப்படுவதனைப் பின்வருமாறு காணலாம்.

> **“மாயோன் மேய காடுறை உலகமும்**
> **சேயோன் மேய மைவரை உலகமும்**
> **வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
> **வருணன் மேய பெருமணல் உலகமும்**
> **முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்**
> **சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே”** (தொல்.பொருள்.அகத்.5)

என்பதனால் காடு, மலை, வயல், கடல் ஆகியனவும் அவற்றைச் சார்ந்த நிலமும் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என வழங்குமாறு உணர்த்தப்படுகிறது.

**பொழுதுகள்:**

பொழுது என்பது சிறுபொழுது, பெரும்பொழுது என இருவகைப்படும். நாளின் பிரிவுகளாக சிறுபொழுதும், ஆண்டின் பிரிவுகளாக பெரும்பொழுதும் அமையும். வைகறை, விடியல், நண்பகல், மாலை, எற்பாடு, யாமம் என சிறுபொழுதையும், கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என பெரும்பொழுதையும் வகைப்பாடு செய்கிறார் தொல்காப்பியர்.

மேலும், நிலத்தை அடிப்படையாகக் கொண்டு பொழுதுகளை அதனோடு இயைத்து வாழ்வியல் இலக்கணம் வகுத்திருக்கும் திறம் பண்டைத்தமிழரின் வியத்தகு புவியியல் அறிவாற்றலைத் தெள்ளிதின் விளக்குவதாகும்.

நிலத்தின் இயல்பு அங்கு வாழும் ஆடவர் இயல்பிற்கேற்ப அமைவது என்னும் அவர் கூற்று நிலவியல் அடிப்படையில் முகிழ்த்ததாகும்.

> **“நாடா கொன்றோ காடா கொன்றோ**
> **அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
> **எவ்வழி நல்லவ ராடவர்**
> **அவ்வழி நல்லை வாழிய நிலனே”**
> (புறம் - 187∴1-4)

என்பது அப்பாடல்.

நிலத்தின் நீர்நில வளங்களுக்கேற்ப அந்நிலத்து வாழும் மக்கட்குப் பண்பும் செயலும் இயைபுபடுகின்றன. அந்நாட்டவர்க்கு அவ்வக் காலங்களில் செய்வன,பெறுவன பெற்றுக் கல்வி கேள்விகளில் மேம்படும் நலமும் காட்டில் வாழும் வேடுவர்களுக்கு வேட்டைத்தொழிலே முதன்மையாதலாலும், பள்ளத்தில் வாழ்பவருக்கும் நீர்வளம் வாய்த்தற்பொருட்டு ஈதல் மனப்பான்மையும் வாய்க்கப்பெற்றன என்கிறார்.

மேலும், குறிஞ்சி நிலத் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே வாய்த்துள்ள நட்பை தேவகுலத்தார், என்னும் புலவர்,

> **“நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று**
> **நீரினு மாரள வின்றே சாரற்**

**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**
**பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே"**
(அகம் - 13)

என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவன் மீது தலைவி கொண்ட அன்பானது நிலத்தைவிட பெரியதாகவும், வானத்தைவிட உயர்ந்ததாகவும், நீரைவிடவும் ஆழமானதாகவும் கூறியுள்ள தன்மை புலவரின் புவியியல் புரிதலைக் காட்டுவதாக அமைகிறது.

புவியியலின் ஆற்றல் மனித வாழ்வினையும் வளர்ச்சியினையும் தன்வயப்படுத்தவல்லது என்ற உண்மை இக்காலத்துப் புதிதாய் உருவாகி எழுந்துள்ள அறிவியல்துறை. அதனை மானிடவியல் (யுவொசழிழடழபல) என வழங்குகின்றனர். ஆனால் இயற்கையின் சூழ்நிலை மனித வாழ்வினை மாற்றுகிறது என்ற இவ் உண்மையை பண்டைத் தமிழ்ப் புலவர்கள் உணர்ந்துள்ளனர்.

ஆலந்தூர் கிழார் என்னும் அருந்தமிழ்ப் புலவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடும் ஒரு பாடலில்,

**நிலம்புடை பெயர்வ தாயினும்....** (புறம்.34Æ5)

என்ற புறப்பாடலில் ஒரு தொடரை அமைத்துள்ளார். நிலம் கீழ்மேலாம் காலமாயினும் என்றும் அதற்குப் பொருள் தருவர். நிலநடுக்கத்தால் மேடு பள்ளமாதலும், பள்ளம் மேடாதலுமாகிய காலம், இமயம் கடலாகவும், கடல் நிலமாகவும் இருந்த காலமும் உண்டென்பர்.

மேலும்,

**நிலம் பெயரினும் நின் சொல் பெயரல்** ...(புறம். 31Æ4)

என்றும்,

**நிலத்திறம் பெயருங் காலையாயினும்**...(பதிற். 63Æ6)

என்றும் நிலம் புடைபெயர்தல் பற்றிய செய்திகளைக் குறித்திருப்பதும் நிலத்தின் தன்மையினையும், பூகோளத்தின் இயல்பினையும் அறியும் தன்மை புலப்படும். மேலும், நிலம் குறித்த சங்கப் புலவர்களின் அறிவின் நீட்சியாக

**நிலம்புடை பெயரினும் நீர் நீப் பெரினும்**
**இலங்குதிரைப் பெருங்கடற்**......(நற் - 304)

என்று கூறியுள்ளார். இப்பாடல் வரிகள் கடல்கோளுடன் தொடர்புடைய செய்திகளைத் தருகின்றன என்று உய்த்துணரலாம்.

பரணர் நற்றிணைப் பாடல் ஒன்றில் இந் நிலப்புடைப்பெயர்ச்சி பற்றிக் குறிப்பிடும்போது,

**"கால்பொரு திடிப்பின்று கதிமுறை கருகினும்**
**உருமுடன் றெரியினும் உளறுபல தோன்றினும்**
**பெருநிலம் கிளரினும்**...(நற் - 201Æ8)"

என்று குறிப்பிடுகின்றார். காற்று மோதித் தாக்கினாலும், பெருமழை கடுகிப் பெய்யுமாயினும், இடி முழங்கித் தாக்கினாலும், இன்னோரன்ன இடையூறுகள் வந்தாலும் பெரிய நிலம் நடுங்கினாலும் என்று அதற்குப் பொருள்கொள்வர். கடுங்காற்றும், பெருமழையும் பெய்து, நிலம்புடை பெயருதல் உண்டாவது கடல்கோள் ஏற்படும்போதுதான். அதனையே புலவர் பாட்டில் அமைத்து எந்த ஒரு அறிவியல் உபகரணங்களும், போக்குவரத்து வசதியும் இல்லாத காலத்திலும் கூட இயற்கை, பூமி, நிலம் குறித்த தங்களது நுண்ணிதின் உய்த்துணரல் மூலம் பழந்தமிழ் சான்றோர் பாடல் வாயிலாகப் பதிவு செய்துள்ளமையை அறியமுடிகிறது.

சங்ககால புவியியல் என்ற அறிவினைக் கற்றறிந்தோர் மட்டுமே பெற்றிருந்தனர் என்பது இக்கட்டுரையின் நோக்கமன்று. சாதாரண ஐந்நில வாழ் மக்களும் பெற்றிருந்தனர் என்பதை நிறுவும் முயற்சியாகக் கீழ்க்கண்டவற்றைக் காண்போம்.

### மக்களும் புவியியலும்:

தலைவனைப் பிரிந்த தலைவி தோழிக்குப் பருவம் உணர்த்தித் துன்புறுதலும், பிரிவால் வாடிய தலைவிக்குத் தோழி பருவங் காட்டி ஆற்றுவித்தலும் குறித்த பருவம் வந்தது கண்டு தலைவன் பொருளீட்டி மீள்வதும், மலர்கள் அரும்புவதைக் கண்டு பருவத்தையும் பொழுதையும் அறிதலும் ஆகிய இவையும் பிறவும் சங்க காலத்தில் தனிப்பட்ட ஒவ்வொரு மாந்தரும் ஓரளவு புவியியல் அடிப்படை நிகழ்ச்சிகளைச் சிந்தனை செய்தவர்கள் என்பதை நன்கு உணர்த்துகின்றன.

**குறிஞ்சியும் புணர்தலும்:** மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். படரும் கொடிகள், அடர்ந்த மரங்கள், இனிய காய்கனிகள் பெற்று எழில் நடம் புரிகின்ற இடமாகக் குறிஞ்சிநிலம் காட்சிதரும். குறிஞ்சி நிலத்தில் மனிதனின் வாழ்வுக்கு வேண்டிய உணவுப் பொருட்கள் உழைப்பின்றி இயற்கையில் கிடைக்கிறது. மேலும், இல்லறம் அமைத்து நல்லறம் புரிவதற்கு அடிப்படையாகவும் முதலாகவும் அமைவது குறிஞ்சிப் புணர்ச்சி.

**முல்லையும் இருத்தலும்:** காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை. இது பயிர் செய்து காலம் வரும்வரை காத்திருந்து பயன்பெறும் ஒருநிலம். அதுபோன்றே தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, தலைவன் சொன்ன பருவம் வரும்வரை தன் கற்புத்திறம் காத்து அப்பருவம் வந்தவுடன் தலைவனுடன் இல்லத்தில் இருக்கும் நிலை இருத்தல். முல்லை நிலத் தலைவன் தலைவியிடையேயும் சமரசம் நிலவுவதை உணரமுடியும்.

**மருதமும் ஊடலும்:** வயலும் வயல்சார்ந்த நிலம் மருதம். நீர் வளமும் நிலவளமும் சிறந்தமைந்த பகுதி. உழைப்புக் குறைவும் பயன் மிகுதியும் தருகின்ற நிலம். ஆதலால், தலைவன் நிலைமாறிப் போதல் என்பது ஆடவரின் மனச் சலனத்தை எடுத்துக்காட்டுகிறது. அவ்வாறு மாறுபட்டுப் போகிற தலைவனைத் தன்வழிப்படுத்தற் பொருட்டு தலைவி கையாளுகின்ற கருவி ஊடல்.

**நெய்தலும் இரங்கலும்:** கடலும் கடல் சார்ந்த நிலம் நெய்தல். இரங்கல் என்பது தலைவியின் மனம் இரங்குதலாகும். கடல்மேற் சென்ற தலைவன் வாராமையின் அவன் நிலை குறித்து தலைவிக்கு ஏற்படும் ஏக்கம் இரங்கல் எனப்பட்டது. மாலை நேரங்களில் மகளிர் தங்கள் கணவர் மீன் பிடித்துத்

திரும்பி வருகிறார்களா என்று கடற்கரை வந்து காத்திருப்பர். எனவே இரங்கல் நெய்தல் எனப் பெயர்பெற்றது பொருத்தமே.

### பாலையும் பிரிவும்:

பாலை எனத்தனிநிலம் அமையாது. எல்லா நிலத்தின் திரிபாகவும் இருப்பது போன்றே பிரிவும் எல்லா நிலையிலும் அமையும். வளமான நிலம் வளம் குன்றி வேனிற் காலத்து வெயிலால் வெம்மை மிகுதியுற்று, சுரஞ்செல்வாரைத் துன்புறுத்தும் நிலமாகப் பாலை அமைவது போலத் தலைவன் சேர்ந்திருந்த காலத்தில் வளமும் பொலிவும் மிக்கிருந்த தலைவி, அவன் பிரிந்த காலத்தில் நலம்கெட்டுப் பொலிவிழந்து வாடித்துன்புறுகிறாள். பாலை எவ்வாறு நிலையான நிலமாக இல்லாமல் பருவமழை பெய்ததால் வளமான வாழ்வு பெறுகிறதோ, அதுபோன்று நலம் கெட்ட தலைவி தலைவன் கூட்டம் நிகழ்வுறின் வளம்படத் திகழ்தல் இயல்பாகிறது.

### நகரப் புவியியல்:

ஒரு நாட்டின் பெருமையினையும் நாகரிக மேம்பாட்டினையும் உலகுக்கு உணர்த்துவன நகரங்களே ஆகும். அவற்றுள்ளும் தலை நகராய் ஆற்றங்கரையில் அமைந்த நகரங்களும், வளநகராய்க் கடல் முகத்தில் அமைந்த துறைமுக நகரங்களும் சிறப்பு மிக்கனவாகும். இத்தகு நலம்வாய்ந்த நகரங்களின் அமைப்பு, வாழ்வு, சிறப்பு முதலான பல்துறை ஆய்வுக்கு அடிப்படையான நிலவியற்பகுதி 'நகரப் புவியியல்' அல்லது 'நகர புவியியல்' (ருசடியெ புநழபசயிால) என்று பெயர் பெற்று விளங்குகிறது. பண்டைத் தமிழாக நகரங்களின் ஆய்வு 'நகர புவியியல்' துறையில் தமிழ்ச் சான்றோர் விளக்கமும் தெளிவும் கொண்ட தன்மையினை நமக்கு நன்கு உணர்த்துகிறது.



### தமிழர் நகர நாகரிகம்:

தமிழர் நகரத்தை அடிப்படையாகக் கொண்ட பண்டைய நாகரிகம் உலக நாகரிகத்தின் அடிப்படையாக அமைந்திருந்தது. "எகிப்தியர் நாகரிகமே முற்பட்டது என்று சிலரும் கூறி வாதிப்பர். அவ்விருவர் நாகரிகமும் தமிழரான் வந்ததே அன்றி வேறல்லவென்பது பாண்டியர் குடியேறிய நாடே எகிப்தென்றும், சோழர் குடியேறிய நாடே சாலதியா வென்றும், சாலதியர் குடியேறிய மெசபடோமியாவாகிய நாடே பாபிலோனியாவென்றும் வழங்கப்பட்டனவென்று முற்கூறிப் போந்தவற்றால் விளங்காநிற்கும்" என்னும் மறைமலையடிகளாரின் கூற்றில் உலக நாகரிகம் தமிழர் நாகரிகத்தின் விரிவே என்ற கருத்து அமைந்திருப்பது நோக்கற்பாலது.

### மிகப் பழங்கால நகரங்கள்:

நாகரிகத்தின் மேம்பட்ட பழந்தமிழரின் தொன்மைத் தலை நகரங்கள் காலப் பழமை கொண்டு விளங்குவன. அவை இன்றிருக்கும் தமிழகத்தின் எல்லை கடந்து, புவியியலார் கருத்தின் எல்லைக்குட்பட்டுக் காணப்படுகின்ற தென்மதுரை, கபாடபுரம், மணவூர் முதலான பெருநகரங்களாகும்.

முதலாம் நிலந்தரு திருவிற்பாண்டியன் ப.்.றுளி யாற்றங்கரையில் அமைந்திருந்த தென்மதுரையைத் தன் தலைநகராகக் கொண்டு ஒளிநாடு, பெருவளநாடு, குமரிநாடு முதலிய நாடுகளை உள்ளிட்ட பாண்டியப

பெருநாட்டை ஆண்டுவந்தான் என்றும், தென்மதுரையில் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்தான் என்றும், அ.சிதம்பரனார் குறிப்பிடுகிறார்.

இவர்களின் கூற்றுக்களால் தமிழகத்தின் தென்கோடியில் மறைந்துவிட்ட பெரும் நிலத்தில் தென்மதுரை, கபாடபுரம், மணவூர் முதலான பல நகரங்கள் இருந்தன வென்பதை அறிகிறோம். கடலுள் செலுத்தும் ஆய்வின் பயனாக அக்கால இலக்கியங்கள் கிடைக்கப்படுமேயானால் இவற்றிற்கெல்லாம் விளக்கமும் தெளிவுங் கிட்டும். இந் நகர நாகரிகம் தொன்மை மிக்கதாகவும், உலக நாகரிகங்களுக்கும் அடிப்படையானதாகவும் விளங்கியது எனலாம்.

### உறந்தை:

'அறந்துஞ்சு உறந்தை' என்று புறநானூற்றுப் புலவரால் போற்றப்படும் இவ்வுறந்தைப் பெருநகர் சோழரின் தலைநகராகும். இந்நகரைச் சங்க இலக்கியம் 'உறந்தை' என்றும் , சிலப்பதிகாரம் 'உறையூர்' என்றும் வழங்கும்.

**"உறையூர் நொச்சி யொருகுடை யொதுங்கி"**
**என்பது சிலப்பதிகாரம்.**
**உறையூர் காவிரி ஆற்றங்கரையில் அமைந்த நகரம் என்பதை,**
**"காவிரிப் படப்பை உறந்தை அன்ன"**



(சிலம்பு – 10.∵.242)

எனவரும் அடி உணர்த்துகிறது.

"கடல் வாணிகம் வளர்த்த வளமார்ந்த நகராய் விளங்கிய புகார், ஒருசில காலம் சோணாட்டின் தலைநகராய்ச் திகழ்ந்தது என்றாலும், சோணாட்டின் நிலைத்த தலைநகராய்ச் சங்க காலத்தில் விளங்கியது உறையூர் ஒன்றே" என்பர் புலவர் கா. கோவிந்தன் அவர்கள்.

**"நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்**
**ஓடாப் பூட்கை உறந்தை"**

(அகம் - 137.∵.5-7)

என்னும் சிறுபாணாற்றுப் படை அடிகள் சோழநாட்டுப் பெருந்தலை நகராக உறையூர் விளங்கியதைக் காட்டுவனவாகும். 'தன்பால் வாழும் குடிமக்கள் இல்லாமை காரணமாக வேறிடம் பெயர்ந்து செல்லாமல் எல்லாம் கொண்ட தலைநகராக விளங்கியது உறையூர்' என்பதை 'ஓடாப் பூட்கை' என்று வரும் நத்தத்தனார் தொடர் உணர்த்துகிறது.

### கோழியூர்:

உறந்தைக்குக் 'கோழியூர்' என்ற பெயரும் உண்டு: 'வாரணம்' என்றும் அழைக்கப்படும். ஒரு கோழிக்கும் யானைக்கும் நடந்த போரில் கோழி வென்றது, யானை தோற்றது. அதனால் இந்நிகழ்ச்சி நடந்த இடமே 'கோழி' அல்லது 'வாரணம்' எனப்பெற்றது. கோழியின் வெற்றி அதன் ஆற்றலால் நிகழ்ந்தது: ஆதலால் இவ்வாற்றல் வாய்ந்தநிலமே தலைநகர் கட்டுதற்குச் சிறந்த இடம் என்ற கரிகாலன் இந்நகரை எழுப்பினான் என்பர்.

இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் உறையூர் பற்றிப் பின் வருமாறு குறிப்பிடுகிறார்:

**“முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர்”**
(புறம் - 170.∴7-9)

என்னும் இவ்வடிகட்கு உரையெழுதுகிற அடியார்க்குநல்லார்,

“வாரணம் - கோழி: அதாவது உறையூர். முற்காலத்து ஒரு கோழி யானையைப் போர்த் தொலைத்தலான் அந்நிலத்திற் செய்த நகர்க்குக் கோழியெனப் பெயராயிற்று” என்று விளக்கம் எழுதியுள்ளமை ஈண்டுக் கருதத்தக்கது.

நிலத்தின் தன்மையறிந்து உறையூர் என்னும் இந்நகரம் நிறுவப்பட்டது எனின் அதன் சிறப்புக்கு அதுவே எடுத்துக்காட்டாகிறது. வளமான நிலம் இருப்பதோடு அந்நிலத்தில் வாழும் மக்களின், மற்ற உயிர்களின் மனத்திண்மையும் உடல்வன்மையும் விளக்கும் நிலமாகவும் அது விளங்கியது.

**புகார்:**

காவிரியாற்றின் புகார்முகத்தில் அமைந்திருந்த இச்சிறப்புமிக்க பட்டினம் புகார், பூம்புகார், புகார்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம் முதலான பல பெயர்களால் அழைக்கப்பெற்றது. பூம்புகார் என்னும் தொடர் அழகிய புகார் நகரம் எனப் பொருள்படும். புகார் என்னும் பெயர் பொதுவாகத் துறைமுக நகரங்களைக் குறிக்குமென்றாலும் அது சிறப்பாகக் காவிரிப்பூம்பட்டினத்தை மட்டுமே குறிக்க வழங்கப்பட்டது. இது சோழரின் தலைசிறந்த துறைமுகம் ஆகும். புகாரின் வளத்தினையும் சிறப்புகளையும் சங்கச் சான்றோர் பலர் பாடியிருக்கின்றனர். பத்துபாட்டிலொன்றான பட்டினப்பாலை புகாரின் பெருஞ்சிறப்பைவிளக்கும் பாடலாக அமைந்திருக்கிறது. இந்நகரின் சிறப்பினைக் கூறுவதற்காகவே எழுதப்பட்ட நெடும்பாடல் பட்டினப்பாலை.

புகார் வெளிநாட்டவர் பாராட்டையும் பெற்ற நகரம் ஆகும். ‘பெரிப்ளுசு’ என்னும் கிரேக்க நூலின் ஆசிரியர் காவிரிப்பூம்பட்டினத்தைக் ‘கமரா’ என்று கூறுகிறார்: தாலமி என்னம் யவனர் இப்பட்டினத்தைக் ‘கபேரிசு எம்போரியன்’ என்று எழுதியிருக்கிறார்.

புகார் பலநாட்டு வணிகர்களும் தங்கியிருந்த பெருநகரமாய் விளங்கியது: பெரியதும் சிறியதுமாகிய நாவாய்கள் அத்துறைமுகத்தில் வந்து போய்க்கொண்டிருந்தன. பல்வேறு வகைப்பட்டவரும் அங்குப் பாங்குடன் இருத்தற்கேற்ற பகுதிகள் அமைக்கப்பட்டிருந்தன. அரசர், வணிகர், அரசர்க்குத் துணைபுரிவோர், பிறநாட்டுப் பெருமக்கள் ஆகியோர் தங்கும் மாளிகைகளும், பல்வேறு தொழில்புரிவோர் இருக்கைகளும் ஆக அவரவர்க்கேற்றாற் போல இடங்கள் புகார் நகரில் அமைந்திருந்தன.

காவிரி பாய்வதனால் நீர்வளம் சிறந்த, வானளாவ உயர்ந்த சோலைகளும் மாடங்களும் பெற்று அழகிய காட்சியுடையதாய் விளங்கியது: சுறாமீன்கள் உலவும் பெரிய சுழிகளைக் கொண்டது புகார்த் துறைமுகம்: பல்வேறு பண்டங்களைச் சுமந்துவரும் பெருங்கலங்கள் புகாரில் வந்து புகுந்தன.

**பட்டினப்பாலை:**

காவிரிப்பூம்பட்டினமாகிய புகாரின் அழகிய காட்சிகள் பலவற்றைப் பட்டினப்பாலை நன்கு விளக்கிக் காட்டுகிறது.

புகார்த்துறையியல் குதிரைகள் நிற்பதுபோலப் படகுகள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அங்கிருந்த குளத்தில் மூழ்கினால் இம்மையிலும் மறுமையிலும் காம இன்பம் கிட்டும்.

காவிரிப்புனல் கலக்கின்ற மிக்க ஓசையுடைய புகார்த் துறையில் தங்கள் தீவினைகள் தீரும்பொருட்டு மக்கள் நீராடினார்.

களி மிகுதியால் மைந்தர் சூடுதற்குரிய கண்ணியை மகளிர் சூடவும், மகளிர்க் கோதையை மைந்தரணியவும் ஆக இவ்வாறு இன்ப மயக்கத்தால் களித்திருந்தனர் நகர மக்கள்.

இரவில் கடலில் மீன்பிடிக்கச் சென்ற மீனவர்கள் ஊரின்கண் அணையாமல் எரிந்துகொண்டிருக்கும் மாளிகைகளின் விளக்குகளை எண்ணுவர்.

கடற்கரையில் விலை உயர்ந்த பொருள்கள் குவிந்திருக்கும்: அவற்றைக் கள்வரும் பிறரும் கவர்ந்து செல்லாதவாறு கடுமையான காவல் இருந்தது: அப்பொருட்களுக்கெல்லாம் சோழனின் இலச்சினை பொறிக்கப்பட்டது. மலைபோல் குவிந்திருந்த அப்பொருட்களின் மேல் ஆட்டுக்கிடாய்கள், வருடைகள் முதலாயின் ஏறி விளையாடின.

பல மொழிகளைப் பேசும் பலநாட்டு வாணிக மக்கள் பலரும் கூடித் தாங்கள் வாழும் மக்களோடே உள்ளங் கலந்து மகிழ்ந்து உறைதற்கிடமாகக் குறைவற்ற தலைமைச் சிறப்பிடமாக விளங்கியது காவிரிப்பூம்பட்டினம். எனவே புகார் பன்மொழி மக்கள் வாழ்ந்த ஒரு சிறப்பு நகராகத் திகழ்ந்தது. (ஊழளஅழிழடவையெ ஊவைல) எனலாம்.



### மதுரை:

பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரை. இது வையை ஆற்றங் கரையில் அமைந்திருந்தது. சங்கம் வளர்த்துத் தமிழ் தழைக்கச் செய்த பெருமையினைக் கொண்டது.

> **“தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்**
> **மகிழ்நனை மறுகின் மதுரை”**
> (சிறுபான் - 24)

என்கிறது சிறுபாணாற்றுப்படை.

மதுரையின் பல்வேறு சிறப்புகள் சங்க இலத்தியத்தில் பேசப் பெறுகின்றன. நகரின் அழகிய அமைப்பும், அதன் அகன்ற தெருக்களும், உயர்ந்த மாட மாளிகைகளும் பண்டைத் தமிழரின் கலை அறிவுத் திறன்மிக்க நுணுக்கமான கட்டடக் கலைப் பெருமையினை நிலைநாட்டுவன. பத்துப்பாட்டும், மதுரைக்காஞ்சியும், நெடுநல்வாடையும், சிறுபாணாற்றுப்படையும், மதுரை நகரின் வளத்தையும் பெருமையையும் விளக்கிக் காட்டுகின்றன.

### கொற்கை:

கொற்கை பண்டைக்காலத்துப் பாண்டிய நாட்டின் தலைநகரமும் துறைமுகப் பட்டினமும் ஆகும். சேரன் செங்குட்டுவன் காலத்தில் வெற்றிவேற்செழியன் என்னும் பாண்டியன் கொற்கையிலிருந்து அரசாண்டான் என்று சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரை குறிப்பிடுகிறது.

'கொற்கையம் பெருந்துறை முத்து' என்னும் தொடர் முத்துக் குளிக்கும் கொற்கையின் சிறப்பைக் காட்டுவதாகும். மதுரைத் தலைநகரிலிருந்த பாண்டியன் நெடுஞ்செழியனைக் கொற்கைவேந்தே என்று அழைப்பதனால் அவனுக்கு உரியதாக இது இருந்தது என்பது தெளிவாகிறது. ஆனால் தற்போது கொற்கை திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரு சிற்றூராக விளங்குகிறது.

"கொற்கையில் முத்துக் குளிப்பவர் சிறையிலுள்ள குற்றவாளிகள் எனப் 'பெரிப்ளுசு' என்னும் நூலால் அறியலாம். அது தொடர்ந்து கூறுவதாவது: குமாரி தொடக்கம் 'கொல்சி' (கொற்கை) வரையும் இந்நாடு உள்ளது. கொல்சியில் முத்துக் குளிக்குமிடம் பல உள. முத்துக் குளிப்பவர் சிறையிலிடப்பட்ட குற்றவாளிகள். இவ்வாறு மேனாட்டவர்களால் சிறப்பிக்கப்படுவது கொற்கை" என்கிறார் பேராசிரியர் சு. வித்தியானந்தன் அவர்கள்.

மேற்கூறிய கூற்றுகள் கொற்கை பாண்டிய நாட்டுத் துறைமுகம் என்பதையும், அது முத்துவளத்தால் சிறந்து விளங்கியது என்பதையும் தெரிவிக்கின்றன.

### வஞ்சி:

வஞ்சி சேரர் தலைநகரமாகும். சேரநாட்டில் தன் பொருநை ஆற்றங்கரையிலுள்ளது. மதுரையைப் போன்று, சேரர்க்குப் பெருமை தரும் தொன்மையான நகரம் வஞ்சிமாநகரம். இவ் வஞ்சி பற்றியும் கருத்து வேறுபாடு உள்ளது. வஞ்சி என்பது சேரநாட்டின்கண் உள்ள வஞ்சியா? அன்றிக் கொங்குநாட்டுக் கருவூர் எனப்படும் இப்போது திருச்சி மாவட்டத்திலுள்ள் கரூரா? என்னும் வாதம் தொடர்ந்து நடைபெறுகிறது. 'வஞ்சிமாநகரம்', 'சேரன் செங்குட்டுவன்', 'சேரன் வஞ்சி', ஆகிய புத்தகங்கள் இக்கருத்து பற்றித் தனித்தனியே நீண்ட ஆராய்ச்சிகளைச் செய்து முடித்துள்ளன.

கல்வெட்டுகள், செப்பேடுகள் ஆகியவற்றைச் சான்றாகக் கொண்டு இரா. நாகசாமி அவர்கள் தற்போது கரூர் என்ற பெயருடன் இருக்கும் கொங்குநாட்டுப் பகுதியே சேரர் தலைநகரமான வஞ்சி என்று விளக்கமாக எழுதியுள்ளார்.

"சேரநாட்டுத் தலைநகர் மலைநாட்டிலுள்ள திருவஞ்சைக்களமே வஞ்சிமாநகர் என்பாரும், திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ளதும் கொங்குநாட்டதுவுமான கருவூரே வஞ்சிமாநகர் என்பாரும், மலைநாட்டு மேற்குமலைத் தொடர்ச்சி மலை அடிவாரத்தில் பேரியாற்றங்கரையிலுள்ள திருக்கருவூரே வஞ்சிமாநகரம் என்பாரும் எனப் பலவகை ஆராய்ச்சியாளர் உளர்......... இங்கு விரிப்பிற் பெருகும்" என்று கலைக்களஞ்சியம் விளக்கம் தந்து விடை கூறாது விட்டுவிடுகிறது.

### எல்லைகளும் பயனும்:

தமிழகத்தின் நான்கு திசைகளிலும் நல்ல பாதுகாப்பு அமைந்திருந்தது. இப்போதுள்ள குமரிக்கு அப்பாலுள்ள தமிழகம் பரந்துகிடந்தது என்றாலும் அதுவும் தமிழ் நிலமாகவே இருந்திருக்கிறது. படையெடுக்கின்ற மன்னர்கள் வாழ்ந்த நிலப்பகுதி தெற்கில் இல்லை. எனவே குணக்கு, குடக்கு, தெற்கு ஆகிய மூன்று எல்லைகளாலும் (திசைகளாலும்), எந்த தொல்லையையும்

பண்டைத்தமிழகம் கண்டதில்லை. இம்மூன்று எல்லைகளும் தொல்லையில்லா பாதுகாப்போடு அமைந்தன. மேலும் தமிழகத்தின் வாணிபத்தைப் பெருக்குவதற்கும் வாய்ப்பாக இருந்தன. தமிழகத்திற்கு வளம் பல சேர்த்துப் பொலிவுறச் செய்தன. கிழக்கில் புகாரும் மேற்கில் தொண்டையும், முசிறியும் சிறந்த துறைமுகப் பகுதிகளாக விளங்கின.

வடக்கு மட்டுமே நிலம் சூழ்ந்த பகுதியாகத் திகழ்ந்தது. வேங்கடம் தமிழகத்தின் பரம்பரை எல்லையாக இருந்து வந்தது. அடர்ந்த காடுகள் நிறைந்த மலையடுக்குகள் கொண்டது. மாற்றான் எளிதில் படையெடுத்து வர இயலாதவாறு பாதுகாப்பாக அமைந்திருந்தது. தமிழ் வேந்தர்கள் வட எல்லையில் சற்று எச்சரிக்கையுடன் இருந்தனர். வாய்ப்பேற்பட்டபோதெல்லாம் வடநாட்டுப் படையெடுப்பு நடத்தி, அம்மன்னர்களை அடக்கிவைத்து இமயத்தில் கொடி பறக்க வைத்தனர். வடநாட்டு மன்னர் தமிழர் ஆற்றலை பழித்துப் பேசினர் என்பதற்காக உடனே படையெடுத்துச்சென்று வென்று அடக்கிய அரசனைப்பற்றிச் சிலப்பதிகாரம் தெரிவிக்கின்றது.

இவ்வாறு அக்காலத் தமிழ் மன்னர்கள் விழிப்புணர்ச்சியுடன் அரசு நடாத்தி வந்ததனால் வடநாட்டினரால் தமிழகத்திற்கு என்றும் தொல்லை ஏற்பட்டதில்லை. இமயத்தைத் தங்கள் ஆட்சி எல்லையாகக் கொண்டு இருந்ததனால் தமிழகத்தின் பாதுகாப்பு எல்லை தமிழ் எல்லையினும் வெகு நீண்ட தொலைவில் அமைந்து தமிழகத்தை பெரிதும் பாதுகாத்து வந்தது. மேலும் வடநாட்டில் உண்டான பல்வளப் பொருள்களும் தமிழத்திற்குக் கிடைக்கவே தமிழகம் மேலும் சிறந்து விளங்கியது.

எனவே தமிழகத்தில் எல்லை மாற்றம் என்பது சேர, சோழ, பாண்டியர்களுக்குள்ளே அவ்வப்போது அவரவர் ஆற்றலுக்கேற்ப ஏற்பட்டதே ஒழியப் பிறநாட்டவர் போரிட்டுக் கைக்கொண்டதனால் எல்லை மாற்றம் ஏற்பபட்டதாக கூற இயலாது. முப்பெரு வேந்தர் மீதும் படையெடுத்துப் பிற நாட்டவர் எவரும் வெற்றி பெற்ற வரலாறு இல்லை. இயற்கையான எல்லைப் பாதுகாப்பும் மன்னர்களின் விழிப்புணர்ச்சியும் மக்களின் கட்டுப்பாட்டு உள்ளமும் பழந்தமிழ் மாந்தருக்கு நல்ல அமைதியையும் சிறந்த வளத்தையும் தந்து நிறைவான வாழ்க்கையை அளித்தன.

**நாடுகளும் எல்லைகளும்:**

உலகம் தோன்றிய காலம் தொட்டு இன்றுவரை இயற்கைளின் சீற்றங்கள் பலவற்றைக் கொண்டு தொல்பழ நிலமாய்த் தொடர்ந்து காட்சியளிப்பது நம் தொல் தமிழ் நிலமே. தமிழகம், தமிழ்நாடு என்ற இப்பெயர்கள் தமிழ் மொழி பேசும் மக்கள் வாழ்கின்ற பகுதியைக் குறிப்பதாகவே அமைந்தன. தமிழக மக்கள் மிகுதியாகப் பரவியுள்ள நிலமே தமிழ்நாடு. இத்தமிழ்நாடு மொழி அடிப்படையில் ஒன்றாகக் கருதப்பட்டாலும் ஆட்சி அடிப்படையில் பல பிரிவுகளைக் கொண்டே இயங்கி வந்துள்ளது. சேர, சோழ, பாண்டியர் என்ற முப்பெரு வேந்தர்களும், குறுநில மன்னர்களும், வள்ளல்களும் தனித்தனிப் பகுதிகளை ஆட்சி செய்து வந்தபோதிலும் அவர்கள்

மூவேந்தர்களின் ஆட்சியின் அளவிற்கும் வரையறைக்கும் உட்பட்டே ஆண்டு வந்திருக்கின்றனர். மொழி அளவில் தமிழகத்தின் எல்லை ஒன்றாகவும் ஆட்சி அளவில் வேறாகவும் அமைந்திருந்த பாங்கினைச் சங்க இலக்கியம் சுட்டிக்காட்டுகிறது. அரசனின் ஆற்றலுக்கேற்பத் தமிழகத்தின் எல்லை விரிவடைந்த நிகழ்ச்சி சங்க இலக்கியத்துள் உண்டு. ஆனால் அடிப்படையான மொழியும் இனமும் வாழ்ந்த எல்லை சங்க காலத்தில் எந்நிலையிலும் சுருங்கியதாகக் கூற முடியாது.

**முடிவுரை:**

சங்ககால புவியியல் அறிவு எனும் இக்கட்டுரையின்கண் சங்கப் புலவர்களும், மாந்தர்களும் எதையும் புவியியல் சூழ்நிலையோடு அமைத்துப் பாடும், வாழும் இயற்கை இயல்புடன் புவியமைப்பு சார்ந்த இயற்கை மதிநுட்பமும் பெற்றவர்கள் என்பதை நிலைநாட்டும் வகையில் அமைந்துள்ளதைக் காணலாம். மேலும், பண்டைத் தமிழர் வாழ்வியல் புவியியல் அடிப்படையில் பொருத்தமுற அமைந்துள்ளது என்பதனையும் புவிப்புலத்தோடு மக்கள் கொண்டிருந்த தொடர்பு வெளிப்படுவதைக் காட்டி நிற்பதாகவும் அமைந்ததைக் காணமுடிகிறது.

**பார்வை நூல்கள்:**

ENCYCLOPAEDIA BRITANNICA, (A new study of Universal Knowldege) Encyclopaedia Britannica Ltd., London, 1950.
JOURNAL OF TAMIL STUDIES, International Institute of Tamil Studeies, Madras, 1973.

நற்றினை, ஒளனை சு. துரைசாமிப்பிள்ளை உரை, அருணா பதிப்பகம், சென்னை,1969. (இரு பகுதிகள்)

அகநானூறு, வேங்கடசாமி நாட்டார் உரை, கழகம்,1970

பத்துப்பாட்டு, பொ.வே. சோமசுந்தரனார் பதிப்பு, கழகம், 1962

திருக்குறள், மு.வ. தெளிவுரை, கழகம், 1973.

இராசமாணிக்கம், டாக்டர் மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சென்னைப் பல்கலைக்கழகம்,1970.

கிரு'ணசாமி, எஸ்., (தமிழாக்கம்: ஆர். வேங்கடராமன்) நிலவியல், தென்மொழி புத்தக டிரஸ்ட், சென்னை, 1967.

குழந்தை, புலவர், தொல்காப்பியர் காலத்தமிழர், பாரி நிலையம், சென்னை, 1968.

சேதுப்பிள்ளை, ரா.பி., தமிழகம் ஊரும் பேரும், இராசன் எலக்டிரிக் பிரஸ், சென்னை, 1946.

மாணிக்கம், சு., அந்தியத் தரையியல், பாரிநிலையம், சென்னை, 1962.

வேங்கடசாமி, மயிலை சீனி, அஞ்சிறைத் தும்பி, ஸ்டார் பிரசுரம், சென்னை, 1971.

தமிழாய்வு, தொகுதி-2, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை, 1973 தினமணி, நாளிதழ், 25-10-1973, சென்னை.

மதுரைத் தமிழ்ப் பேரகராதி, இ.மா. கோபாலகிரு'ணக்கோன், மதுரை, 1956.

(☺)(☺)(☺)(☺)(☺)

# திருவிளையாடற்புராணத்தில் சிவபெருமானின் வடிவங்கள்

**முனைவர் இரா பத்மா**
உதவிப் பேராசிரியர்
தமிழாய்வுத்துறை,
தேசியக்கல்லூரி, திருச்சி.
padma.sampath42@gmail.com

*****

## முன்னுரை:

இவ்வுலக மாந்தர்க்கு இயல்பாக இல்லாத உடல் உருமாறல் ஆற்றலும் பண்பும் இறவாக் கவிஞர்கள் படைத்தளிக்கும் இலக்கியப் பாத்திரங்களுக்கு உரியனவாகப் பெரும்பாலான காப்பியங்களிலும் புராணங்களிலும் மனப்படைப்புப் புதினங்களிலும் அமைகின்றன. இயற்கையில் மீறிய இவ்மீவியல்புத் திறனாகிய பாத்திரத்திற்குச் சிறப்பும் பெருமையும் கூட்டுவதாக மட்டும் அமையாது. காப்பியத்தை புராணக்கதை நிகழ்ச்சிகளுக்கும் கதையின் முக்கிய கரதிருப்பு மையங்களுக்கும் ஏதுவாகவும் இவ்வுரு மாறும் வடிவமாற்றம் துணைபுரிகிறது. தொன்மத்தைச் சித்தரிக்கும் புராணக்கதை நிகழ்ச்சிகளின் போக்குக்கு இவை உறுதுணையையாகச் செயல்படுவதாலும், இவ்வுரு மாறல் இல்லையெனில் கதையோட்டம் மாறுபட்டிருக்கும் என்பதாலும் பல உருமாறல் நிகழ்வுகள் தவிர்க்க இயலாதவையாக மிகவும் தேவையானவையாக அமைகின்றன. சிவபெருமான் தன் உருவை மாற்றிக் கொள்வதும், பிறர் உருவைத் தான் ஏற்றுக் கொள்வதும் வெகுண்டும் அருளியும் பிற உயிரின் உருவை மாற்றுவதும் ஆகிய பலநிலைகளைப் பரஞ்சோதியார் தனது திருவிளையாடற் புராணத்தில் படைத்துக் காட்டுகிறார். அதைப் பற்றி இக்கட்டுரையில் காணலாம்.

## சிவபெருமானின் உருமாற்றம்

திருவிளையாடற்புராணத்தில் சிவபெருமான் மேற்கொண்ட உருமாறுதல்கள் இயற்கையில் நிகழ்ந்த நிகழ்வாய் கடவுள் உண்மைமையைப் புலப்படுத்தி, பக்திக் காப்பியத்திற்கேற்ற தன்மையைச் சிறக்கக் காட்டுகின்றன. சிவபெருமான் தன்மீது அயரா நம்பிக்கை கொண்டு தன்னை வழிபட்டவர்களுக்காகப் பல்வேறு வேடங்களில் தோன்றி அருள்புரிகின்றார். சித்தர், புலவர், ஆசிரியர், அரசர், வணிகர், தொழிலாளர், வேடர் ஆகிய வேடங்கள் தாங்கிய பாத்திரங்களாக இப்புராணக் கதைகளில் சிவபெருமான் தோன்றுகிறார். இவற்றோடு வாளாசிரியராகவும், அந்தணராகவும், முதியவராகவும், தவசியாகவும் குதிரைப் பாகராகவும், மாமனாகவும், வலைஞராகவும், பன்றியாகவும் சிவபெருமான் வடிவங்கொண்டு தம் திருவிளையாடல்களை நிகழ்த்துகிறார்.

சித்தராக ஐந்து படலங்களிலும், புலவராக ஐந்து படலங்களிலும், ஆசிரியராக மூன்று படலங்களிலும், அரசராக எட்டு படலங்களிலும், வணிகராக இரண்டு படலங்களிலும், வேடராக மூன்று படலங்களிலும், தொழிலாளராக இரண்டு படலங்களிலும், அந்தணன், முதியவர், பிட்சாடணர், தவசி, சேனைத்தலைவன், குதிரைப்பாகர், மாமன், வலைஞர், பன்றி முதலிய வேடங்களில் முறையே ஒவ்வொரு படலத்திலும் சிவபெருமான் தோன்றுகிறார்.

மேலும் அவர்தான் இருந்த படியே அருளுவதாக ஐந்து படலங்களிலும், அடியார்களுக்குக் காட்சிதரும் அருளாளராக ஏழு படலங்களிலும் பிறர் வாயிலாக அருளல்; மூன்று படலங்களிலும், கனவில் தோன்றி அருளல் ஐந்து படலங்களிலும், ஆசிரியராக மொழிந்து அருளல் ஆறு படலங்களிலுமாகச் சிவபெருமான் திருவிளையாடற் கலைகளுள் ஆற்றும் செயற்கறியச் செயல்கள் வாயிலாக அவர்தம் பன்னரும் பெருமை புலப்படுத்தப்படுகின்றது.

### சித்தர்

ஐந்து கதைகளில் சிவபெருமான் சித்தராகத் தோன்றி உலகத்தார்க்குப் பல அரிய செயல்களை நிகழ்த்திக் காட்டுகிறார். இச்செயல்களின் வாயிலாகச் சித்தருடைய செயல் திறத்தையும், பெருமையையும் பரஞ்சோதியார் நன்குப் புலப்படுத்துகிறார். இறைவனோடு ஒன்றும் இல்லை. இவ்வுண்மையினைச் சிவபெருமான் சித்தர் உருவம் கொண்டு என்று கூறி தேற்றினாள். இதனை,

**"பொய்யார் ஆகுதல் தெளிந்தனம்**
**மைஈர் ஓதி மட மொழியோயே"**
**(கலி 150:2223)**

என்ற பாடல் அடிகளால் அறியலாம்.

### தோழி தலைவனுக்கு கூறும் அறிவுரை

தலைவன் தவறு செய்யும் நேரங்களில் அந்தத் தவறை சுட்டிக்காட்டி தலைவனுக்கு அறிவுரை கூறி அவனை நல்வழிபடுத்துபவளாகவும் தோழி காணப்படுகிறான்.

தலைவன் பரத்தையிடம் சென்று திரும்பி வந்ததை அறிந்த தோழி எம் தலைவி இல்லத்திற்கு வேண்டுவனவற்றை விரும்புவாளே தவிர வேறொன்றையும் விரும்பமாட்டாள். அவள் ஒழுக்கத்தை உடையவள். உனக்கும், உன் ஒழுக்கத்திற்கும் தீங்கு வருமென்று அஞ்சி யாணர் ஊரன் வாழ்க என்றும் பாணனும் வாழ்க என்றும் நாங்கள் விரும்பினோம் என்று கூறினாள் என்பதனை,

**"யாணர் ஊரன் வாழ்க,**
**பாணனும் வாழ்க என வேட் டேமே".**

பூக்களின் ஒளிமயமான ஊரனே, பழையனின் வேல் போன்றே உன் பழைய நல்ல சொற்களை நம்பி தெளிந்தவள் இவள். இவளது கொங்கைகள் தளர்ந்து சாய்ந்த காலத்திலும், கூந்தல் நரையோடு முடிக்கப்படும் முதுமைக் காலத்திலும் இவளைக் கைவிடாது காப்பாயாக என்று தலைவனின் கையில் தலைவியை ஒப்படைத்து,

**"பழையன் வேல் வாய்த்தன்ன நின்**
**பிழையா நல் மொழி தேறிய இவட்கே"**
(நற் 10:89)

என்று தோழி கூறினாள்.

### பகல், இரவுக்குறிகள்

தலைவனும், தலைவியும் தம்முள் ஒத்த அன்புடையவர்களாய் பெற்றோர், உற்றோர், உறவினர் யாரும் அறியாமல் பகல், இரவு நேரங்களில் சந்தித்து மகிழ்வர்.
பகற்குறியில் தலைவியை சந்திக்க விட்டு தலைவனை எதிரே பார்த்து தோழி தலைவனிடம் கூறுகின்றான்.

**“கல்சேர்ந் தன்றே, பல்கதில் ஞாயிறு**
**மதர் எழில் மழைக்கண் கழுழ இவளே**
**பெருநாண் அணிந்த சிறுமென் சாயல்**
**அழல் தொடங் கினளே – பெரும்”**
(அகம் 120:59)

உன்னுடைய பிரிவால் தலைவி அழத்தொடங்கி விட்டாள். அன்றில் பறவை துணை பிரிந்தால் வாழாதுது இறக்கும். அதுபோல தலைவியும் உன்னைப் பிரிந்தால் உயிர் வாழமாட்டாள் என்று தலைவியின் மனநிலையை எடுத்துக்கூறி தலைவியின் உயிரைக் காக்க வேண்டிய கடமை தலைவனுக்கும் உள்ளது என்பதை உணர்த்துகின்றாள்.

களவு வாழ்க்கையை நீட்டிக்க விரும்பிய தலைவன் தினந்தோறும் இரவில் தலைவியை சந்தித்து தினந்தோறும் இரவில் தலியை சந்தித்து மீள்கின்றான். அவனைத்தோழி தனியாகச் சென்று அவன் வரக்கூடிய வழியின் இடையூறுகளை எடுத்துக்கூறி தலைவியை மணந்து கொள்ளுமாறு வலியுறுத்துகிறாள்.



**“உறுபுலி யுருவேப்ப பூத்த வேங்கையைக்**
**கறுவுகொண் டதன்முதற் குந்திய மதயானை**
**நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்.**
**கோடுபுய்க் கல்லா துழக்கு நாட கேள்”**
(கலி.38:69)

புலியினது வடிவையொப்பப் பூத்த வேங்கை மரத்தைப் புலியெனக் கறுவுதல்கொண்டு அதன் அடியிலேயே குத்திய மதத்தையுடைய யானையை உடைய நாடனே. அவ்யானையைப் போன்று மயங்கிய நீடித்தற் கொடியதாகும். அதனை விடுத்துக் கற்பின்கண் இல்லறப் பயனோடு கூடிப் பேரின்பத்தைத் தரும்படி வரைவு கடாவுதல் வேண்டும் என எடுத்துரைப்பாள்.

### நிறைவாக

“உலகில் எல்லா உயிர்களும் மேன்மை பெற ஆசைப்படுங்கள்” என்ற மனவியல் நிபுணர்களின் கருத்துக்கு ஏற்றுபடி தோழி காணப்படுவதை இங்கு காண முடிகிறது. தோழி தலைவி மீது காட்டும் அக்கறையிலிருந்து தோழியின் உண்மையான உறவு வெளிப்படுவதை அறிய முடிகிறது. அரும்பெரும் செயல்களால் உலகினர்க்கு உணர்த்துகிறார்.

கடல்சுவற வேல்விட்ட படலம், எல்லாம் வல்ல சித்தரான படலம், கல்லானைக்குக் கரும் பருத்திய படலம், விடையிலச்சினையிட்ட படலம், இரசவாதஞ் செய்த படலம், திருவாலவாயான படலம் ஆகிய படலங்களில் சித்தராக தோன்றுகிறார். கடல்சுவற வேல் விட்ட படலத்தில் உக்கிர பாண்டியனுக்கு வருணதேவனால் வரவிருக்கும் துன்பத்தை எடுத்துக்கூறி அதை போக்க நேரில் சித்தராக வந்து வேல்

எறிந்துத் தடுக்குமாறு பாண்டியனிடம் உத்தரவிடுகிறார். எல்லாம் வல்ல சித்தரான படலத்தில் மதுரை நகர் வீதிகளில் சித்தராக திரிந்து பலசித்து விளையாட்டுக்களைப் புரிகிறார். ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் ஆக்குகிறார். குழந்தையில்லாத பெண்ணை மகப்பேறு அடையச்செய்கிறார். கூன், செவிடு, ஊமை, குருடு, முடம் ஆகிய உடற்குறைகளை யாவரும் காணப் போக்குகிறார். அபிஷேக பாண்டியன் முன்னிலையில் கல்லானையை உயிர் பெற்றுக் கரும்பு தின்னமாறு செய்கிறார். பிறகு அந்த கல்லானையையை ஏவி அவனுடைய கழுத்தில் உள்ள கண்டமாலையைப் பறித்துக் கொள்ளுமாறும் செய்கிறார். அவரை அடிக்க முயற்சி செய்த பாண்டியனின் ஏவலாளர்களைக் கற்சிலைகளாக மாற்றுகிறார். முடிவில் பாண்டியன் தன் பிழை பொறுக்குமாறு வேண்ட யானை விழுங்கிய முத்துமாலையைப் பாண்டியன் திரும்பிப் பெறுமாறு செய்கிறார்.

காடு வெட்டிய சோழன் பக்தி மேலிட்டால் மதுரையில் எழுந்தருளியுள்ள சோமசுந்தரப் பெருமானைத் தொழும் ஆர்வத்தோடு மதுரையை நோக்கி வரும்போது வைகையில் வெள்ளம் பெருக்கெடுத்து அவன் கடந்து செல்வதற்குத் தடையாக இருப்பதைக் குறித்துப் பெரிதும் வருந்தி நிற்கிறான். அப்போது சிவபெருமான் சித்தராக அவன் முன் தோன்றி வையை நீரை வற்றச் செய்து அவனை கோயிலுக்கு அழைத்துச் சென்று சோமசுந்தரப் பெருமானையும் மீனாட்சியம்மையையும் தொழுமாறு செய்கிறார்.



சிவபெருமான் திருவுருவத்தைப் பொன்னால் அமைக்க வேண்டும் என்னும் தன் விருப்பம் நிறைவேறாமல் வருந்தும் பொன்னனையாள் என்ற உருத்திர கணிகையின் முன், இறைவன் சித்தர் வடிவில் தோன்றி அவருடைய வீட்டில் உள்ள வெள்ளி இரும்பு, ஈயம், பித்தளை, வெண்கலம் முதலிய உலோகங்களை பொன்னாக மாற்றி அவருடைய விருப்பத்தை நிறைவேற்றி அருள் செய்வதை, இரசவாதஞ் செய்த படலம் கூறுகிறது.

ஊழி முடிவிற்குப் பின்பு பழைய மதுரை நகரின் எல்லையை வரையறுத்து அறிய இயலாத வங்கிய சேகரன் என்னும் பாண்டியனுடைய பக்திக்கு இரங்கி இறைவன் சித்தராக வந்து, தன் கையிலுள்ள பாம்பினை ஏவி நகரத்தின் எல்லையை வரையறுத்துக் காட்டுமாறு செய்கிறார். சித்தர்களால் எத்தகைய செயற்கரிய செயல்களையும் செய்து முடிக்க இயலும் என்பதனைப் பரஞ்சோதி முனிவர் சிவபெருமானைச் சித்தராகப் படைத்துக் கூறிய நிகழ்ச்சியிலிருந்து விளங்க வைக்கிறார்.

### புலவர்

சிவபெருமான் நான்கு படலங்களில் புலவராக வருகிறார். இப்பாத்திரப்படைப்பு வாயிலாக, பரஞ்சோதியார் உலகில் பொய்யான கலைகள் ஒழிந்து உண்மையும் தரமும் வாய்ந்த கலைகளே நிலைக்க வேண்டும். என்ற விருப்பை வெளிப்படுத்துகிறார். இசைவாது வென்ற படலம், சங்கப்பலகை கொடுத்த படலம், தருமிக்குப் பொற்கிழியளித்த படலம், சங்கத்தார் கலகம் தீர்த்த படலம் ஆகிய படலங்களில் புலவராகத் தோன்றுகிறார். இசைவாது வென்ற படலத்தில் ஆற்றல் மிகுந்த புலவனுக்கு முன்பு நியாயம் தவறும் புவியரசனும் பொலிவற்றுப் போவான் என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

சங்கப்பலகை கொடுத்த படலததில் சிவபெருமான் புலவராகத் தோன்றிப் புலமையைச் சீர்னக்கியளக்கும் கருவியாகச் சங்கப் பலகையொன்றைச் சங்கப் புலவர்களுக்கு அளிக்கிறார். அறிவால் முதிய புலவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இருக்கையளிக்கும் தன்மையுடையது. மேலும்

அவர் சங்க புலவர்களுக்குத் தலைமைப்புலவராக வீற்றிருந்து புலவர்களின் பாடல் ஐயங்களைத் தீர்க்கிறார்.

தருமிக்குப் பொற்கிழியளித்தபடலத்தில், எத்தகைய புலமை பெற்றிருப்பினும் ஒருவனுக்குச் செருக்கு இருத்தல் கூடாது என்பதை அறிவுறுத்தவே சிவபெருமான் நக்கீரரைப் பொற்றாமரைக் குளத்தில் அழுந்தித் துன்புறச் செய்கிறார். நக்கீரர் முடிவில் தன் தவறு உணர்ந்து இரங்குவதின்றும் அவர் குற்றம் செய்தார் என்பதும் இறைவனின் எச்சரிக்கையினைப் பொருட்படுத்தாமல் இருந்தும் இறைவனோடு எதிர்வாதம் தொடுத்ததும் அவருடைய பெருங்குறை என்பதும் தெளிவாகிறது.

சங்கப்புலவர்கள் இயற்றிய பாக்களின் தரத்தைப் பற்றி அவர்களுக்குக் கருத்து வேறுபாடு எழுந்தபோது சிவபெருமான் புலவராய்த் தோன்றி உருத்திரசன்மன் என்னும் உமைச் சிறுவனிடம் பாடல்களைப் படித்துக் காட்டிக் குழப்பத்தை நீக்கிக் கொள்ளுமாறு அருள் செய்கிறார்.

இங்ஙனம் சிவபெருமான் புலவர் வேடங்கொண்டு வரும் நிகழ்ச்சி ஒவ்வொன்றும் இசை, இலக்கியம் போன்ற கலைகளின் தரத்தை நிலைநிறுத்தும் செயலாக இருப்பதை நாம் காணலாம். உலகில் கலை செம்மையுற்று வளர்ச்சியெய்த வேண்டும் என்ற உண்மையை உணர்த்தவே பரஞ்சோதியார் இறைவனைப் புலவராக படைத்துக் காட்டினார் எனலாம்.

### ஆசிரியர்

ஆன்மீக ஞானமே மாந்தரை உயர்த்தி உய்விக்கவல்லது என்ற உண்மையினைச் சிவபெருமான் வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம், அட்டமாசித்தி உபதேசித்த படலம் ஆகிய இரு படலங்களிலும் ஆசிரியர் உருவத்தில் தோன்றி மெய்ப்பிக்கிறார். வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலத்தில் சிவபெருமான் ஞானாசிரியராக எழுந்தருளி திருவாதவூரரின் ஞானமுதிர்ச்சியையும் அன்பில் தன்மையும் கண்டுணர்ந்து அவர் மும்மலங்களையும் கடைக்கண்ணருளால் போக்கி அவருக்கு வக்கும் பஞ்சாட்சரத்தையும் உபதேசிக்கிறார். அட்டமாசித்தி உபதேசித்த படலத்தில் கார்த்திகை பெண்கள் தாம் மனம் ஒன்றுபட்டு நிலை நிறுத்தாமல் கேட்டதால் சிவபெருமானின் முன்தோன்றி சாபத்திலிருந்து விடுவித்து அவர்களின் வினைகெடுத்து மறுபடியும் அவர்களுக்கு அட்டமாசித்திகளை உபதேசிக்கிறார். இந்நிகழ்ச்சிகள் சிவபெருமானின் பக்தர்களின் ஆன்மீக ஞானத்தின் சிறப்பினை உணர்த்துவதாக அமைந்துள்ளது.

### வணிகர்

மாணிக்கம் விற்ற படலம், வளையல் விற்ற படலம் ஆகிய படலங்களில் சிவபெருமான் வணிகராக வந்து அரசுரிமை, கற்பு ஆகிய இரண்டு இன்றியமையாத அறநெறிகளை வற்புறுத்துகிறார். வீரபாண்டியன் இறந்தபிறகு அவனுடைய காமகிழத்தியின் மக்கள் மணிகள் இழைத்த முடியினைக் கவர்ந்து சென்று விட்டமையால் அவனுடைய மகனுக்கு முடிவட்டி 'அபிஷேக பாண்டியன் என அழைக்குமாறு அறிவித்து அருள் செய்கிறார். வளையல் விற்கும் வணிகராகிய பாத்திரம் கணவனையே தனக்குரிய தெய்வமாகக் கொள்ளும் கற்புடைய நங்கை இறைவனிடத்தும் தன் கருத்தை இழக்கக் கூடாது என்ற் உண்மையை உணர்த்துகிறது.

### தொழிலாளர்

சிவபெருமான் தொழிலாளராக விறகு விற்ற படலத்தில் வருகிறார் விறகாளனாக வந்து தன்பால் பக்தி கொண்ட இசை பாணனாகிய பாணபத்திரன் அருள் புரிகிறார். ஒருவர் எத்துணை அளவு புலமை மிக்கவராக இருப்பினும் அதைக் குறித்தச் செருக்கு எய்தக்கூடாது என்ற உண்மையினைச் சிவபெருமானின் விறகாளர் வேடம் நமக்கு உணர்த்துகிறது. உலகப் புகழ் வாய்ந்த ஒரு பெருங் கலைஞனாயிருப்பினும் அவனை ஓர் எளியவன் தக்கார் துணையிருப்பின் தன் புலமையினால் வெல்லக்கூடும் என்பதும் இவ்விறகாளர் பாத்திரம் உணர்த்துகிறது.

### கூலியாள்

மண்சுமந்த படலத்தில் வந்தி என்னும் மதியவளுக்கு அருள் செய்யும் பொருட்டு சிவபெருமான் ஒரு கூலியாளராக உருவந்தாங்கி வருகிறார். அழுக்கேறிய பழையதுணி ஒன்றை இடையில் அணிந்துகொண்டு, தலையில் உள்ள சும்மாட்டின் மேல் கூடையைக் கவிழ்த்திக்கொண்டு, தம் தோள்மேல் மண்வெட்டியை வைத்துக் கொண்டு வருகிறார். கூடையில் மண்ணை எடுத்துக் கரையை அடைக்கும் கூலி வேலையும் இழிவல்ல என்பதையும், ஒருவன் தன்னுடையட தொழிலினைச் செய்யத் தவறின், அதனால் அவன் மேலதிகாரிகளிடமிருந்தோ அரசரிடமிருந்தோ தண்டணை பெறுவதற்குரியவன் என்பதை அரசன் கூலியாளைப் பிரம்பால் அடித்த நிகழ்ச்சி நமக்கு அறிவிக்கிறது.

### வேட்டுவர்

பெரிதும் துன்புற்றுத் தம்மை அடைக்கலம் அடைந்த மாபதகஞ்செய்த ஒருவனுக்கும் ஒரு பாண்டிய மன்னர்களுக்கும் வேடனாக வந்து உதவி செய்கிறார். யானை எய்த படலம், சோழனை மடுவில் வீழ்த்திய படலம், மாபாதங்தீர்த்த படலம் ஆகிய படலங்களிலும் சிவபெருமான் வேட்டுவ உருவத்தில் வருகிறார். யானை எய்த படலத்தில் சமணர்கள் மதுரையை அழிக்கும் எண்ணத்தில் அனுப்பிய கொடிய அரக்க யானையை வேடனாக வந்து யானையை தனது வில் அம்பினால் கொல்கிறார். பிராமண மகன் ஒருவர் கழி காமத்தால் தாயைக் கூடித் தந்தையைக் கொல்கிறான். தந்தையைக் கொன்றதன் விளைவாய் மாபாதகம் அவனைப் பற்றுகிறது. சிவபெருமான் அவன் மேல் இரக்கம் கொண்டு வேட்டுவ உருவத்தில் உமாதேவியாருடன் வந்து அவள் செய்த கொடியப் பாவச்செயல்களுக்கான பரிகாரத்தைக் கூறுகிறார். தனக்கு நேர்ந்த தன்பம் நீங்கும் வழி இன்றி அழியும் நிலையில் உள்ள ஒருவனைக் காப்பதுவே உண்மையான பாதுகாப்பாகும். இதனால், இறைவன் பிராமண மகன் உய்வதற்குரிய வழியினை அருளிச் செய்தார் இது உமாதேவியார் தன்னைக் கேட்ட கேள்விக்கு சிவபெருமானே பதில் கூறும் வகையில் படலத்தில் பரஞ்சோதியார் அமைத்துள்ளார். சுந்தரேசபாதசேகரன் என்னும் பாண்டியன் பொருள்கள் அமைத்தையும் கோயில் திருப்பணிகளுக்கே செலவு செய்து விட்டதால் தனது போர் படையைப் பெருக்க முடியவில்லை. அதையறிந்த சோழன் பெரும் படையோடு பாண்டியனை நோக்கி படையெடுத்து வருகிறான். பாண்டியன் இறைவனிடம் வேண்டி சிவபெருமான் வேடனாக வந்து சோழமன்னனைத் துரத்துகிறார். ஒரு போர் வீரனை விட ஒரு வேடனுக்கு அம்பெய்யும் திறமை அதிகம் என்பதைக் காட்டுவதாக உள்ளது.

### பாண்டியர்

சிவபெருமான் பாண்டியராக வேடம் பூண்டு வந்து உலகிற்கு அருள் புரிகிறார். உலகினருக்கு சிறந்த அரசியல் நடத்திக் காட்டவும், பகைவர்கள் எதிர்க்குங்கால் அவர்களை அழிக்கும் உபாயங்களை வலியுறுத்தவும் சிவபெருமான் பாண்டிய மன்னனாக வேடம் கொள்கிறார்.

### வாளாசிரியர்

தன் வாளாசிரியருடைய மனைவியை வலிந்து அடைய முயன்ற சித்தன் என்ற மாணவனோடு சிவபெருமான் அவ்வாளாசிரியனாகவே வேடங்கொண்டு வந்து, எல்லாரும் காண போரிட்டு அவனுடைய உடலுறுப்புகளை வெட்டி வீழ்த்துகிறார். தன்னைக் காப்பாளன் என நினைந்து முறையிட்ட வாளாசிரியனின் மனைவியைப் பாதுகாக்கவும் தன்னாசிரியர் மனைவியின் கற்பைக் கெடுக்க முயன்ற மாணவனைத் தண்டித்து காமத்தின் பேரழிவை உணர்த்துவதாக அங்கம் வெட்டிய படலம் அமைந்துள்ளது.

### அந்தணர்

வேதத்தின் உட்பொருளை அறிய வேண்டும் என்ற ஆர்வத்தோடு மதுரையில் கல்லால் நிழலில் வீற்றிருந்த இறைவன் தட்சிணாமூர்த்தியினை அரபத்தர் முனியர் கூறியபடி வந்து எய்திய கண்ணுவர், கருக்கர் முதலிய முனிவர்களுக்கு இறைவன் பதினாறு வயதுடைய ஓர் அந்தணன் வடிவங்கொண்டு தோன்றி வேதத்தின் உட்பொருளை அருளிச் செய்கிறார்.

### சிவனடியாராகிய முதியர்

வைணவகுடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட கௌரி சிவனடியார்களுக்கு விருந்தோம்பி சிவத்தொண்டு ஆற்ற இயலாத நிலைக் குறித்து வருத்தமுற்றிருந்த நிலையில் சிவபெருமான் வேற்றுருவில் வந்து அவளுக்கு அருள் செய்வதை விருத்த குமாரபாலரான படலம் கூறுகிறது.

### தவவேடம்

இராசேந்திர பாண்டியன் சிவபக்தன். அறம், திறம்பாதவன். ஆகவே, அவனது சோழனுக்கு எதிரானப் போரில் பாண்டியனின் படைகள் சோர்வுற்றுத் தளர்ந்த போது சிவபெருமான் அவன் சோழனை வெல்வதற்குக் தண்ணீர்ப் பந்தல் வைத்துத் தவசியாய்த் தோன்றி உதவுவதை தண்ணீர் பந்தல் வைத்த படலம் கூறுகிறது.

### குதிரைப் பாகர்

அரிமர்த்தன பாண்டியன் கொடுத்த பொருள்களையெல்லாம் இறைவன் பொருட்டே செலவிட்ட திருவாதவூரருக்கு உதவி செய்யும் பொருட்டுக் காட்டிலே திரியும் நரிகளையெல்லாம் பரிகளாக்கி சிவபெருமான் குதிரைச் சேவகர் வேடங்கொண்டு தோன்றி அரசனிடம் அக்குதிரைகளைக் கயிறு மாற்றிக் கொடுத்து மன்னனை மகிழ்விப்பதை நரிபரியாக்கிய படலம் உணர்த்துகிறது.

### மாமனாக வருதல்

தனபதி என்னும் தன் தமையனால் தன் மகனுக்குத் தரப்பட்ட பொருட்கள் அனைத்தையும் அபகரித்துக் கொண்ட தாயத்தாரர்கள் மீது வழக்குத் தொடுத்த தாய் தன் சார்பாகத் தக்க சான்று சொல்வதற்கு வேறுயாரும் ஒரு பற்றுக்கோடும் இல்லாததைக் குறித்து வருந்துகின்றாள். அப்போது சிவபெருமான் மாமனாக அதாவது அவளுடைய தமையன் தனபதியாக, வேடம் கொண்டு மருமகனையும், தங்கையையும் தழுவி தேற்றித் தீர்ப்புக் கூறுமாறு அவையோரைக் கேட்கிறார். அவையோர் தனபதி அல்ல என மறுக்க இறைவனார் தான் தனபதி தான் என தக்க சான்றாதாரங்களைக் கூறி தாயத்தார் கவர்ந்து சென்ற சொத்துக்களைத் தனபதியின் தங்கை மகனுக்கு உரிமையாக்குகின்றார்.

### வலைஞர்

சிவபெருமான் கூறிய மறைப்பொருளை நன்கு செவிமடுக்காதக் குற்றத்திற்காக இறைவன் மீனாட்சி யம்மையைப் பரதவர் மகளாகப் பிறக்கும் படி சாபமிட்டார். அதனால் பரதவர் மகளாக பிறந்த உமையம்மையை மீட்க சிவபெருமான் வலைஞராக உருமாறி அவரை திருமணம் செய்து சாபத்திலிருந்து விடுவிக்கிறார்.

### பன்றியாக உருமாறுதல்

தன் பக்தர்களுக்கு அருள் செய்வதற்கு சிவபெருமான் இவ்வாறு பல மானிட வடிவங்களில் மட்டும அல்லாமல் விலங்கு வடிவிலும் தோன்றி அருள் செய்கிறார். சுகலன், சுகலையர் என்ற இரு வேளாளர் பெற்ற பன்னிரு மக்களும் பிரகஸ்பதி முனிவரின் கோபத்திற்கு ஆளானதால் கொடுக்கப்பட்ட சாபத்தால் காட்டு பன்றியின் வயிற்றில் பன்றிக்குட்டிகளாகப் பிறக்கின்றனர். அதன் தாய் பன்றி இறந்தால் பசியின் கொடுமையினால் அவதிப்படுகின்றனர். அப்பொழுது சிவபெருமான் தாய் பன்றியாக உருவெடுத்து அதற்கு தன் முலைப்பால் கொடுத்து அருள் பாலிக்கிறார்.

### சிவபெருமான் தான் இருந்தபடியே அருளல்

இறைவன் தன்மேல் அன்பும் பக்தியும் கொண்ட மெய்யன்பர்களுக்கு தான் இருக்கும் இடத்தில் இருந்து கொண்டே அருள் செய்கிறார். நாகமெய்த படலத்தில் சமணர்கள அனுப்பிய நாகம் சிந்திய நஞ்சை சிவபெருமான் தனது சடாமுடியிலிருந்து சிந்திய அமுதத்தினால் நீங்கும்படிச் செய்கிறார். மாயப்பசு வதைத்த படலத்தில் மதுரையை அழிக்க சமணர்கள் அனுப்பிய பசுவடிவம் கொண்டு அவுணனை அனுப்ப அதை சிவபெருமான் தன் இடபத்தை செலுத்தி அப்பசுவே தன் வீரியத்தை விடுத்து வீழ்ந்திறக்குமாறு செய்கின்னறார். பரிநரியாக்கிய படலத்தில் திருவாதவூரருக்கு அருட்செய்யுமாறு சிபெருமான் வையை நதியை வெள்ளப்பெருக்கெடுத்து வருமாறு செய்து திருவினையாடல் புரிகின்றார். வன்னியும் கிணறும் லிங்கமும் அழைத்த படலத்தில் மதுரை வணிகனின் இரண்டாம் மனைவி தன்னிடம் நீதி கேட்டு வரும்போது அவளுக்குத் துணையாக இருந்து அருள் புரிகிறார்.

### காட்சி தந்து அருளல்

இந்திரன் பழிதீர்த்த படலத்தில், இந்திரன் கடம்பவனத்தில் சிவபெருமானை நெஞ்சுருக வேண்ட இறைவன் இந்திரன் முன் தோன்றி அவனுடைய பாவத்தைத் தீர்த்தருளி மறைகிறார். வெள்ளையானை சாபந்தீர்த்த படலத்தில் துருவாசர் முனிவர் ஐராவதயானைக்கு இட்ட சாபத்தினால் அது காட்டானையாக மாறி நிலவுலகில் சுற்றத்திரிய இறுதியில் கடம்பவனத்தினும் நுழைந்ததும் தன் நிலையை உயர்ந்து சிபெருமானை உளமாற வேண்டுகிறது. இதனல் சிவபெருமான் யானைக்கு காட்சியளறித்து அதன் சாபத்தைப் போக்குகிறார். நான்மாடக் கூடலான படலத்தில் வருணதேவனின் வயிற்று நோய் நீங்க பெற்று அவன் சோமசுந்தரக் கடவுளைப் பூசிக்க இறைவன் வருணபகவானுக்குக் காட்சிக் கொடுத்து அருளுகிறார். கால்மாறியாடிய படலத்தில் இராசசேகரபாண்டியன்தான் பரதநாட்டியம பயின்றபோது தனக்கு உடல்வலி உண்டாவதையறிந்து, இறைவனை, நின்ற் திருவடியை எடுத்து வீசி எடுத்த திருவடியைக் கீழேயூன்றி தான் காணும்படி மாறியாட வேண்டும் என்று வேண்டியதற்கிணங்கச் சிவபெருமான் கால்மாறி நடனம் புரிகிறார். மேலும் கரிக்குருவிக்கு உபதேசித்த படலம், நாரைக்கு முக்தி கொடுத்த படலம் ஆகிய படங்களில் கரிக்குருவி நாரை இவற்றின் வழிபாட்டுக்கு இரங்கி அவை நினைத்த வடிவத்திலேயே தோன்றி வரம் தந்து அருளுகிறார். கீரனைத் கரையேற்றிய படலத்தில்

பொற்றாமரைக் குளத்திலிருந்து நக்கீரனை கரையேற்றி சிவபெருமானே நேரில் தோன்றி அருள்புரிகின்றார்.

### பிறர் வாயிலாக அருள் புரிதல்

வரகுணனுக்குச் சிவலோகங்காட்டின படலத்தில் வரகுணபாண்டியனின் தன்னைப் பற்றிய கொலைப் பழியினை நீக்குமாறு சிவபெருமானைக் துதிக்க அக்கொலைப் பழியினை திருவிடைமருனரில் தீர்த்து அவன் விருப்பத்தின் படி நந்திதேவரைக் கொண்டு சிவபெருமான் சிவலோகத்தைக் காட்டியருளுகிறார். கீரனுக்கு இலக்கணம் உபதேசித்த படலத்தில் நக்கீரனைப் பொற்றாமரைக் குளத்திலிருந்து கரையேற்றிய பின்பு, உமாதேவியாரின் படியே அகத்தியர் மூலமாகக் கீரனுக்கு இலக்கணம் கற்பிக்குமாறு செய்கிறார். இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் சிவபெருமான் பிறர் வாயிலாகவும் அருள் புரிகின்றார் என்பதற்குச் சான்றாக அமைகின்றன.

### கனவில் காட்சியளித்தல்

சிவபெருமான் தன்மேல் பக்தி கொண்டவர்களின் கனவிலேயும் தோன்றி அருள்புரியும் விதத்தை சில படலங்கள் மெய்ப்பிக்கின்றன. சோமசுந்தரர் பங்கேற்கும் கனவுகள் நனவாகும் போது கண்ட கனவுகள் கடவுட் தன்மையன என்ற பழங்கால மக்களினத்தின் நம்பிக்கைக்குச் சிறந்த சான்றாகின்றன. சிவபெருமான் கனவுகளின் மூலமாக

1. செய்தி கூறி உண்மையுணர்த்தல்.
2. வழிகாட்டி நெறிபடுத்துதல்.
3. ஐயம் தீர்த்துக் தெளிவு தருதல்.
4. அருள் அல்லது பொருள் நல்கல்.



ஆகியவற்றை செய்கிறார். திருநகரங்கண்ட படலம், கடல்சுவற வேல்விட்ட படலம், மேருவை செண்டாலடித்த படலம், உலவாக்கிழியருளிய படலம், திருமுகங் கொடுத்த படலம், பன்றிக்குட்டிகளை அமைச்சர்களாக்கிய படலம் ஆகியவற்றில் மேற்கூறியவாறு கனவில் தோன்றி அருளுகிறார்.

### அசராரியாக அருளுதல்

திருவிளையாடற்புராணத்தில் சிவபெருமான் அசராரியாகவும், திருவாய் மொழிந்தருளித் தம் பக்தர்களுக்கு அருள் புரிகிறார். இவ்வசராரரி சிவபெருமானின் அருவநிலைச் செயல் பாட்டினைக் குறிக்கின்றது. தடாதகைப் பிராட்டியார் திருவவதார படலத்திலும், பழியஞ்சிய படலத்திலும், மெய்காட்டிட்டப் படலத்திலும், வரகுணனுக்கு சிவலோகங் காட்டிய படலத்திலும், பலகையிட்ட படலத்திலும், இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலத்திலும், சமணரைக் கழுவேற்றிய படலத்திலும் சிவபெருமான் தம்மை நெஞ்சார நினைத்து வழிபடுபவர்களுக்கு அசராரியாக அருள் செய்ததன் மூலமாக அன்பர்களுக்கு பின்னிகழ்வதனை முன்னறிவித்து அவர்தம் செயல்களை நம்பிக்கையோடும் உறுதியோடும் ஆற்றுவதற்கு ஊக்கமளிக்கிறார்.

### தொகுப்புரை

திருவிளையாடற்புராணத்தில் சிவபெருமானின் உருமாற்றம் அனைத்தும தன்னை நாடிய பக்தர்களுக்கு அருள்புரிவதையே அடிப்படையாகக் கொண்டமைகிறது. துன்பதைத்தைக் கொடுத்துச் சோதிப்பதின் மூலமாக உயிர்களைப் பக்குவ மடையச் செய்கிறது. சிவபெருமான் அறத்தையும் நீதியையும் மக்களுக்கு உணர்த்த பல வடிவங்களை எடுக்கிறார். மேலும் கதையின் போக்கில் ஒரு திருப்புமுனை

ஏற்படுத்த சிவபெருமான் கதாப்பாத்திரம் திருவிளையாடற் புராணத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது. தன்னை நினைத்து வழிபடும் பக்தர்களுக்கு இறைவன் பின்னர் நிகழவிருக்கும் துன்பத்தை முன்னறிவிப்பு செய்பவ்ராகவும் உதவி புரிபவராகவும் திகழ்கிறார். பரஞ்சோதியின் திருவினையாடற் புராணத்தில் சிவபெருமான் அனைத்துக் கதைகளிலும் ஒரு வினையூக்கி போலச் செயல்படுகிறார். கதை நகர்த்தலுக்கும், காரணமாகிறார். அறுபத்து நான்கு கதை படலங்களிலும் சிவபெருமான் ஏதேனும் ஒரு உருவத்தில் வருவதால் அறுபத்து நான்கு கதைகளும் ஒருங்கிணைக்கப் படுகிறது எனலாம். மேலும் அறுபத்துநான்கு கதைகளும் தனித்தனியாக இருந்தாலும் வேறு வேறு காலக்கட்டத்தில் கதை நிகழ்த்தப்பட்டிருந்தாலும் கதையின் களம் மதுரையை மையமாகக் கொண்டு நடைபெற்றுள்ளது. அறுபத்து நான்கு கதைகளிலும் சிவபெருமான் இவ்வுலக நிகழ்வுகளில் பங்கேற்பதாக அமைந்துள்ளது. கதை நகர்வின் இறுதியிலேயே இவற்றையெல்லாம் செய்வித்தது சிவன் எனப் பிற பாத்திரங்கள் அறிவர். சிவன் இவ்வுலகில் சாதாரண மனிதர்களைப்போல் உருமாற்றி வருகை தருவதால் கதைகள் புராணியத் தன்மை பெறுகின்றன. இப்பண்புகளே திருவினையாடர் புராணத்தைப் பழமரபுக்கதையாகக் கருதுவதா? அல்லது புராணமாகக் கருதுவதா? என்ற மயக்கத்தைத் தருகின்றனது.

### துணை நூற்பட்டியல்

1. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம், (மதுரைக் காண்டம்) வேங்கடசாமி நாட்டார், ந.மு, கழகம், சென்னை, மறுபதிப்பு 1956.
2. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம், (கூடற் காண்டம்) வேங்கடசாமி நாட்டார், ந.மு, கழகம், சென்னை, மறுபதிப்பு 1928.
3. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற்புராணம், (மதுரைக் காண்டம்) வேங்கடசாமி நாட்டார், ந.மு, கழகம், சென்னை, மறுபதிப்பு 1931.
4. கோபாலன் ப.பரஞ்சோதி திருவிளையாடற்புராணம் இலக்கிய மதிப்பீடு, இலட்சுமி பதிப்பகம், கோயம்புத்தூர்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# தொல் தமிழகத்தில் திராவிடமொழியின் பங்கும், தமிழ்மொழியின் சிறப்பும்

**திருமதி மு புவனேஸ்வரி,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எம்.ஜி.ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்,
அடையாளம்பட்டு, மதுரவாயல், சென்னை – 600 095.

*****

**முன்னுரை :-**

தொல்பழங்காலந்தொட்டு வீறுமிக்க இலக்கியங்களைப் பெற்றுத்திகழும் மொழி தமிழ். எம் தந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவிய தமிழில் செழித்த இலக்கியங்கள் எழிலுடையன. ஏற்றமிக்கன எண்ணிலடங்காதன. முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குகிற தமிழ் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் இலக்கியம் பெற்ற உயர்தனிச் செம்மொழியாகும். மக்கள் வாழ்வில் பிறந்து மக்களால் வளர்க்கப்பட்டு மக்களின் வாழ்வை நாகரிகமுடையதாக உயர்த்தி வரும் அரிய கலை மொழியே.

**இடைக்காலமும் வளர்ச்சியும் :- (மொழி)**

ஐரோப்பிய வரலாற்றில் ரோம பேரரசின் வீழ்ச்சிக்குப் பின் அதாவது கி.பி. ஐந்திலிருந்து பன்னிரண்டாவது நூற்றாண்டு வரை இருந்த இடைப்பட்ட காலத்தை இடைக்காலம் என்பர். இக்காலக்கட்டத்தில் கிறிஸ்தவமும் வட்டார மொழிகளும் ஓரளவிற்கு வளர்ந்திருந்தது. இலத்தின் மொழி அறிஞர்களின் மொழியாகவும், கல்வி மொழியாகவும், ஆட்சி மொழியாகவும் இருந்த காலத்திற்கு பின் புதிய மொழிகளான பிரெஞ்சு, ஜெர்மன், இத்தாலின், ஸ்பானிஷ் போன்ற மொழிகளும் வளரத்தலைப்பட்டன. அவை : கி.பி. 14, 15ஆவது நூற்றாண்டுகளில் பிரெஞ்சு மொழி பற்றிய இலக்கணக் குறிப்புகள் காணப்படுகின்றன. கி.பி. 16ம் நூற்றாண்டில் பிரெஞ்சு மொழியின் இலக்கண ஆசிரியர்கள் வாழ்ந்துள்ளனர். (மைகிரேட், எஸ்டின், தியோடர்) கி.பி. 16, 17ஆவது நூற்றாண்டில் இலத்தீன் மொழி வீழ்ச்சிக்குப் பின்னர் ஆங்கில மொழியின் இலக்கணங்கள் பல உருவாயின. 19ம் நூற்றாண்டே மொழியைப் பற்றி ஆராய்ச்சிக்கு வித்திடப்பட்ட காலம் எனலாம். இருபதாம் நூற்றாண்டின் முதற்பகுதியில் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் மொழியியல் வேகமாக வளரத் தொடங்கியது. இந்நூற்றாண்டே விளக்க மொழியியலின் "பொற்காலம்" என்பர்.

**விளக்க மொழி :-**

ஒரு மொழியின் குறிப்பிட்ட காலத்தை அடிப்படையாக வைத்து அக்கால மொழியினை ஆராய்வது விளக்க மொழியாகும். அவை சங்க தமிழையோ, இடைக்காலத் தமிழையோ இன்றைய காலத் தமிழையோ விளக்க மொழியியல் அடிப்படையில் காணலாம். தொல்காப்பியக் காலந்தொட்டு இன்று வரை தமிழ்மொழி அடைந்த மாற்றத்தை ஆராய்வது வரலாற்று மொழியாகும். திராவிட மொழிகளில் பழமையான இலக்கியங்களையும் இலக்கணங்களையும் கொண்டுள்ளது தமிழ்மொழி. பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்குவது தமிழ்மொழியாகும். சங்க தமிழுக்கும் தற்காலத் தமிழுக்கும் நிறைய வேறுபாடு உண்டு. மொழியானது காலத்துக்குக் காலம் மாற்றம் அடைந்து கொண்டிருக்கும். தமிழ் மொழியின் வரலாற்றை இலக்கியம், இலக்கணம், கல்வெட்டு போன்ற சான்றுகளின் அடிப்படையிலும் அறியலாம்.

**இலக்கியங்கள், இலக்கணங்கள் :-**

ஒரு நாட்டின் வரலாற்றிற்கும் மொழியின் வரலாற்றிற்கும் இன்றியமையாத சான்று இலக்கியமாகும். பேச்சு வழக்கை அடிப்படையாகக் கொண்ட வாய்மொழி இலக்கியங்களே உண்மையான மொழியின் இயல்பைக் காட்டுவனவாகும். மொழி பேசும் சமுதாயம் என்பது படித்தவர்களும், படியாத பாமரர்களும் அடங்கியதாகும். தொல்காப்பியம் தமிழில் தோன்றிய மிகப் பழமையான இலக்கணம் சிலப்பதிகாரம் தொல்காப்பியத்தற்குப் பின் தோன்றிய காப்பியம் இவ்விரண்டு நூல்களையும் ஒப்பிட்டு நோக்கையில் அதன் வளமை தெளிவாக விளங்கும். தமிழில் காலந்தோறும் பல இலக்கண நூல்கள் தோன்றின. தொல்காப்பியம் நன்னூல், வீர சோழியம் நேமிநாதம் இலக்கண விளக்கம், இலக்கண கொத்து, தொன்னூல், முத்துவீரியம் போன்ற பல இலக்கண நூல்கள் தமிழில் பல்வேறு காலங்களில் தோன்றியுள்ளன.

**அகராதியும் கல்வெட்டும் :-**

திராவிட மொழியின் பேரறிஞர்கள் பர்ரோவும் எமனோவும் இணைந்து வெளியிட்ட திராவிடச் சொற்பிறப்பியல் அகராதி “திராவிட மொழியியல் உலகில் குறிப்பிடத்தக்க சாதனையாகும். திராவிட ஒப்பிலக்கண ஆய்வு வளர்ச்சி பெற்றதற்கு முக்கிய காரணமாக அமைகின்றது. இவ்வகராதி வெளிவந்த பிறகுதான் திராவிட மொழியியலைப் பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் பெருகின. தமிழ்மொழியைப் பிற திராவிட மொழிகளுடன் ஒப்பிட்டு ஆய்வு செய்வதற்கு இவ்வகராதி பெரிதும் பயன்பட்டது, தமிழ்நாட்டில் கல்வெட்டுகள் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் தான் கல்வெட்டுகள் கிடைத்தன. கல்வெட்டுகளைப் போன்று ஏடுகளில் எழுதப்பட்டவை மொழி ஆகும்.

சமணத்துறவிகளால் எழுதப்பட்டவை குகைக்கல்வெட்டுகள் என்று குறிப்பிடப்பட்டன. சான்று பிராமி எழுத்தில் எழுதப்பட்டவை கூறலாம். கல்வெட்டுகள் அனைத்தும் பழம்பெரும் வரலாறுகள் பலவற்றைப் பறைசாற்றி நிற்பதோடு அவை எழுதப்படடிருக்கும் மொழிகளின் தன்மையையும் காட்டி நிற்கும். பல்வேறு கல்வெட்டுகளால் ஒலிமாற்றத்தை அறியலாம். காலத்தை நிர்ணயிக்க முடியாத கல்வெட்டை மொழியியல் மாற்றங்களைக் கொண்டு ஓரளவு கணிக்கலாம். பல்லவன் கோவில் செப்புப் பட்டயத்தில் காணலாம். திராவிட மொழியாளர் ஆள், அழு என்று இரு சொற்களும் பழந்தமிழில் யாள், யழ என்று வழங்கி இருக்க வேண்டும். மூல திராவிடத்தில் யகர ஒலி இடைக்காலத்தில் ‘யகரம்’ வழங்கிவிட்டது. இவ்வாறு கல்வெட்டுக்களில் தமிழ்சொற்கள் கிரந்தம், பிராகிருதம், தேவ நாகரி போன்ற அயல்மொழி எழுத்துக்களும் எழுதப்பட்டுள்ளன, எனவே பிற மொழிக் கல்வெட்டுக்களும் தமிழ் மொழி வரலாற்றுக்குச் சான்றாக அமைகின்றன என்பதை அறியலாம்.

**தொல்திராவிட மொழியும் தமிழும் :-**

எல்லாத் திராவிட மொழிகளுக்கும் மூலமாக இருந்த மொழியினை மூலத்திராவிட மொழி அல்லது தொல் திராவிட மொழி என வழங்கினர். திராவிட மொழிகளில் மிகப்பழமையான இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே இலக்கிய இலக்கணங்களைக் கொண்ட தமிழ்மொழி, தமிழ் நாட்டில் மட்டுமின்றிப் பர்மா, மலேசியா, சிங்கப்பூர், பிஜித்தீவு, இலங்கை (ஸ்ரீ லங்கா) தென் ஆப்பிரிக்கா, பிரிட்டிஷ் கயானா, மடகாஸ்கர், திரினிடால் போன்ற நாடுகளில் பேசப்படுகின்றது. திராவிட மொழிகள் தென்திராவிடம், நடுத்திராவிடம், வடதிராவிடம் என மூன்று பெரும் பிரிவாகப் பிரிக்கப்பட்டதையும் அவை வழங்கும் நிலப்பரப்பையும் தொல் திராவிட உயிர், மெய் ஒலியன்கள் தமிழ், மலையாளம், கன்னடம், கொடகு, துளு, கோத்தா, தோடா போன்ற மொழிகள் தென்திராவிடப் பிரிவைச் சார்ந்தனவாகும்.

**முன்பழந்தமிழ் பின்பழந்தமிழ் வளமை :-**

முன்பழந்தமிழ் என்பன சங்கத் தமிழ் என்றும், பின் பழந்தமிழ் சங்கம் மருவிய காலம் எனப்படும். இவற்றில் பத்துப்பாட்டு எட்டுத்தொகை சங்க கால நூலாகும். திருக்குறள், மணிமேகலை, சிலப்பதிகாரம் சங்கம் மருவிய காலமாக காணப்படுகின்றன. இவற்றில் "சங்க இலக்கிய மொழி அமைப்பு என்ற கட்டுரையில் பரிபாடல், கலித்தொகையும் சங்க நூல்களாயினும் பல புதுமைகளைக் கொண்டு விளங்குகின்றன. சங்கத் தமிழில் காணப்படும் குறில் வடிவங்களையுடைய வினை விகுதிகள், சங்கம் மருவிய கால தமிழில் நெடில் வடிவங்களையுடைய வினை விகுதியாக மாறுகின்றன. இதைத் தவிர சமஸ்கிருத விகுதி 'கார்' தமிழ் விகுதியான 'அர்' உடன் இணைந்து சிலம்பிலும் மணிமேகலையிலும் காணப்படுகின்றன. தற்காலத் தமிழும் மணிமேகலையிலும் காணப்படுகின்றன. தற்காலத் தமிழும் இத்தகைய வடிவங்கள் நிறைய உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

**தமிழில் பிற மொழிகளின் கலப்பு :-**

சங்க காலத்திலிருந்தே தமிழுக்கும் வடமொழிக்கும் இருந்த தொடர்பைத் தொல்காப்பியம் மூலம் காலத்தில் சமண சமயச் செல்வாக்கினால் பிராகிருத மொழித் தொடர்பு ஏற்பட்டது. ஆழ்வார், நாயன்மார் காலத்திலும் வடமொழிச் செல்வாக்கைக் காண்கிறோம். சோழர் காலத்தில் வடமொழிச் செல்வாக்கு மிகுந்துவிட்டது, அதன் விளைவாகப் பவணந்தியார் பதவியியல் என்ற இயலில் வடமொழியாக்கம் பற்றிப் பேசுகிறார். கி.பி. 14ஆம் நூற்றாண்டில் மாலிக்காபூர் படையெடுப்புக்குப் பின், தமிழகத்தின் ஒரு பகுதியை முஸ்லீம்கள் ஆண்டனர். வட நாட்டிலிருந்த பெர்சியன், உருதுமொழிகள் வாயிலாக அரபுச் சொற்கள் தமிழில் புகுந்தன. கி.பி. 16ஆம் நூற்றாண்டளவில் விஜயநகர நாயக்கர்கள் தமிழகத்தின் ஒரு பகுதியை ஆளத் தொடங்கிய பொழுது, தெலுங்குச் சொற்கள் தமிழில் புகுந்தன. கி.பி. 16ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் மேலை நாட்டாரின் வரவால் போர்ச்சுக்கீஸ், டச்சு, பிரெஞ்சு, ஆங்கிலச் சொற்கள் தமிழில் கலக்க தொடங்கின. இவ்வாறு தமிழின் பெருமையை தெரிந்து பிறமொழிகளும் கலந்து தன் தன்மையை விளக்க விரும்பினார்கள் என்பதை அறிந்து கொள்ளலாம்.

**தமிழ் வரிவடிவ வரலாறு :-**

பேச்சு மொழி ஆறு போன்றது எனின் எழுத்து மொழி அவற்றில் மிதக்கும் பனிக்கட்டி போன்றது. இவற்றில் இருபத்து இரண்டு திராவிட மொழிகளிலே தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளுக்குத்தான் எழுத்து வடிவம் உண்டு இன்றைய மனிதன் இருபதாம் நூற்றாண்டு மனிதனாக வாழ்ந்திருக்க முடியாது. பேச்சு மொழி மனிதனை மனிதாக்கியது எனின் எழுத்து மொழியோ மனிதனை நாகரிக மனிதனாக இயற்கையையே வெல்லும் ஒரு சக்தியாக மாற்றியது என்பது மிகையாகாது. பழமையையும் புதுமையையும் கொண்டு பழமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலமாக எழுத்து மொழி விளங்குவன காணலாம். திராவிட மொழிகளிலே தமிழ் மொழியிலேயே மிகப் பழமையான எழுத்துருவத்தைக் காணலாம். இவை மற்ற திராவிட மொழிகளுக்கு முந்தியது என கூறலாம்.

**இந்திய தொல் வடிவ வளர்ச்சி :-**

நாகரிக மக்களின் மொழிகள் அனைத்தும் எழுத்துருவத்தைப் பெற்ற மொழியாக மிகப் பழங்காலத்திலேயே இருந்துள்ளன. எகிப்து நாகரிகம், சீனா நாகரிகம், இந்திய நாகரிகம் அனைத்தும் பழமையான நாகரிகங்களாகும். பல்லவ காலத்தில் பல்லவ கிரந்தம், தமிழ், நாகரி, வடமொழிகளில் எழுதப்பட்ட கல்வெட்டுகள் கிடைக்கின்றன. சோழர் காலத்தில் நாணயங்களில் 'நாகரிக' எழுத்து

காணப்படுகின்றன. வட்டெழுத்து பாண்டி நாட்டிலும் சேர நாட்டிலும் வழக்கிலிருந்தன. கி.பி. பதினாறு, பதினேழாம் நூற்றாண்டில் தான் தற்போது வழக்கிலிருக்கும் தமிழ் எழுத்துகள் வளர்ச்சி பெற்றன. சிந்து வெளியின் சித்திர எழுத்துக்களே திராவிடம் பெருங்குடிமக்களது எழுத்துக்களின் மூல வடிவாக இருக்கலாமென ஹீரஸ் அடிகள் குறிப்பிடுகின்றார். மொஹஞ்சதாரோ ஹரப்பா சிந்து வெளி எழுத்துக்கள் பழந்திராவிடமாக இருக்கலாம். பிராமி எழுத்து முறையில் வடபிராமி, தென்பிராமி என்பனவற்றுள் தென் பிராமியைத் “திராவிடி” என்றும் வழங்கி உள்ளார்கள்.

**முடிவாக :-**

மிகப் பழைய கல்வெட்டுக்களில் உள்ள வட்டெழுத்து தமிழரின் பழைய எழுத்து என்றும் தொல்காப்பியர் குறிப்பிடும் எழுத்து வட்டெழுத்து என குறிப்பிடுகிறார். மு.வரதராசனார் தமிழின் மிக தொன்மையான சிலப்பதிகாரத்தில் சித்திர எழுத்தையும் தமிழ் எழுத்து என கூறுவர். எனினும் தமிழில் தோன்றிய இல்ககியங்களில் திராவிட மொழியின் எழுத்து வடிவங்களின் பங்கு காணப்படுதலை உணரலாம்.

பல்லவர் கால பக்தி இலக்கியங்களில் சமஸ்கிருதச் செல்வாக்கினை மிகுதியாகக் காணலாம். பல்லவர் காலக் கல்வெட்டுக்கள் கிரந்தம், வடமொழி போன்றவற்றில் எழுதுப்பட்டமை இங்குக் குறிப்பிடத்தக்கது. அப்பர் தேவாரம் போன்றவற்றில் சமஸ்கிருதச் சொற்கள் ஓரளவு தமிழாக்கம் செய்யப்பட்டதையும் காண்கிறோம். இவ்வாறு திராவிட மொழியானது சங்கத் தமிழிலும் சங்கம் மருவிய காலத் தமிழிலும் பிற்காலத்திலும் எல்லா இடங்களிலும் இலக்கியங்களிலும் தழைத்தோங்கியுள்ளதை நாம் பருகி மகிழ்ந்து கொண்டு தான் இருக்கின்றோம். இப்பெரும் தமிழ் மொழியின் வளமை தமிழின் மேன்மையை பறைசாற்றி நம்முடன் பகுருகின்றது என்பது மிகையல்ல. தண்டமிழின் வளமை தமிழுக்கு மட்டுமன்று இந்திய இலக்கிய வளமைக்கு ஊன்றுகோலாய் மிளிர்ந்து கொண்டே இருக்கின்றன.

(☺)(☺)(☺)(☺)(☺)

# தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு திருக்குறளின் பங்கு

**திருமதி சு ஈஸ்வரி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எம்.ஜி.ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்,
அடையாளம்பட்டு, மதுரவாயல், சென்னை – 600 095

*****

**முன்னுரை :-**

இந்திய நாடு முழுவதிலும் மிகப் பழங்காலத்திலிருந்து ஒரே மொழி தான் பேசப்பட்டுவந்தது. அதை பழந்திராவிட மொழி என அழைப்பர். இன்று திராவிட மொழியாக உள்ள மொழிகளில் முக்கியமானவை : கோலமி (Kolami), பார்ஜி (Parji), நாய்கி (Naiki), கோந்தி (Kolami), கூ (Ku), குவி (Kuvi), கோண்டா (Konda), குருக் (Khurukh), பிராகூய் (Nrahui), மால்டா (Malda), ஒரொவன் (Oroan), கட்பா (Gadla) போன்றவை ஆகும்.

**இலக்கணப் பிழை :-**

கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தொல்காப்பியம் என்னும் பழைய இலக்கண நூல் இயற்றப்பட்டது. அதில் முன்னோர் சொன்ன கருத்துகள் என நிறைய இடங்களில் இடம்பெறுவதால் அதற்கும் முன்பாக நிறைய இலக்கண நூல் இருந்திருப்பதாக தெரிய வருகிறது. தொல்காப்பியத்தில் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடச்சொல் என சொற்கள் நான்காக வகுக்கப்பட்டுள்ளது. இயற்சொல் என்பது அன்றாட வழக்கிலுள்ள சொற்களாகும். திரிசொல் என்பது செய்யுளில் மட்டும் வடிவ வேறுபாட்டுடன் காணப்படும் சொற்களாகும். திசைச்சொல் என்பது பல்வேறு பகுதிகளில் வழங்கக்கூடிய வட்டார வழக்கு சொற்களாகும். வடசொல் என்பது சமஸ்கிருதத்திலிருந்து தமிழில் வழங்கப்படும் சொற்களாகும். இவை தமிழ் மொழியின் வரலாற்று மாற்றத்தை விளக்குகிறது.

**தமிழ் எழுத்துக்கள் :-**

தமிழில் அ,இ,உ,எ,ஒ என்னும் ஐந்தும் குறில் உயிர் எழுத்துக்களாகவும், ஆ,ஈ,ஊ,ஏ,ஓ என்னும் ஐந்தும் நெடில் உயிர் எழுத்துக்களாகவும், பிற ஐ, ஔ என்ற இரண்டு சார்ந்த எழுத்துக்களாகவும் வழங்கப்பட்டு வருகிறது. க,ச,ட,த,ப,ற என்னும் வல்லெழுத்து ஆறும், ங,ஞ,ண,ந,ம,ன என்னும் மெல்லினம் ஆறும், ய,ர,ல,வ,ழ,ள என்னும் இடையின எழுத்து ஆறுமாக பதினெட்டும் மெய்யெழுத்துகளாகக் கருதப்படுகிறது.

**நீதி இலக்கியம் :-**

தமிழில் நீதியை உணர்த்தும் நூல்கள் அதிகமாக எழுந்துள்ளன. அதிலும் திருக்குறள் முதன்மை நூலாகக் கருதப்படுகிறது. சங்க இலக்கியத்திற்கு பின் எழுந்த பதினெண் கீழ்கணக்கு நூல்களை நீதி நூல்கள் என்றும், சங்க காலத்துக்கு பின் வந்த காலத்தை நீதி நூற்காலம் என்றும் அழைத்தனர். திருக்குறளின் பெருமையை உணர்த்தும் பல்வேறு பழமொழிகளையும் தமிழ் இலக்கியங்களில் காணலாம்.

**“ஆலும் வேலும் பல்லுக்குஉறுதி
நாலும் இரண்டும் சொல்லுக்குஉறுதி
பழகுதமிழ்ச் சொல்லருமைநாலிரண்டில்
நாலடி இரண்டடிகற்றவனிடத்தில்**

**வாயடிகையடிசெல்லாது"**

இப்பழமொழிகளில் இடம் பெற்றுள்ள நாலு என்பது நாலடியாரையும் இரண்டு என்பது திருக்குறளையும் குறிப்பிடுவதைக் காணலாம்.

**ஒழுக்கமும் இல்லறவாழ்வும் :-**

திருவள்ளுவர் மனைவியைப் போல கணவனுக்கும் கற்பு நிலையானது என்பதை அவள் மனைவியைப் பார்த்து, அவளைப் போல கணவனும் கற்புடையவனாய் இருக்க வேண்டும் என இல்லற ஒழுக்கத்தை பொதுவாகப் போற்றியுள்ளார்.

**"ஒருமை மகளிரே போலப் பெருமையும்**
**தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு"** (குறள்-974)

மேலும் இக்குறளில் வள்ளுவர் ஒழுக்கத்தைப் பற்றியும், இல்லறத்தைப் பற்றியும் தெளிவாக எடுத்துரைத்துள்ளார். மேலும் ஒரு இல்லற வாழ்விற்கு ஒழுக்கம் மட்டும் போதுமானதாகாது. ஒழுக்கத்துடன் சேர்ந்து அன்பும் உடனிருந்தால் மட்டுமே இல்லற வாழ்வு முழுமையடையும் என அன்பின் சிறப்பை தெளிவாக விளக்கியுள்ளார்.

**"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது"** (குறள்-45)

அதுமட்டுமல்லாது இல்லற வாழ்விற்கு மேலும் சிறக்கக்கூடியதாக அறம், பொருள், இன்பம் இம்மூன்றும் தேவையானது என்கிறார் வள்ளுவர்.

**"தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்**
**ஆம்மா அரிவை முயக்கு"** (குறள்-1107)

கணவன் மனைவி இடையே பிரிவு ஏற்பட்டாலும்கூட தன்நிலை மாறாமல் அன்பு செய்வது சிறந்த அறமாகும். மேலும் தன் கணவன் பெற்றிருக்கும் வருவாய்க்கு தகுந்தாற்போல மனைவியும் மக்களும் வாழ வேண்டும் என்பதை இக்குறளின் வாயிலாக அறியலாம்.

**ஈகைப்பண்பு :-**

ஈகை என்பதற்கு கொடுத்தல் அல்லது தானம் செய்தல் என்று பொருள். பிறரிடமிருந்து பெறுவதைவிட, பிறருக்கு ஒன்றைக் கொடுப்பதே இன்பமான செயலாகும். ஈகையைப் பற்றி ஆத்திச்சூடியில் ஔவையார் கூறுகையில்,

**"தானமது விரும்பு**
**ஈவது விளக்கேல்"**

இல்லாதவர்க்கு உதவி வாழ்தலை விரும்ப வேண்டும் என்றும், இல்லாதவர்க்குப் பிறர் செய்யும் உதவியைத் தடுக்க கூடாது என்று ஔவையார் கூறியுள்ளார்.

வறுமையில் உள்ளோருக்கு கொடுத்து உதவுவதே ஈகை எனப்படும். ஏனைய எல்லாம் ஒரு பயனை எதிர்பார்த்துக் கொடுப்பதை போன்றது என ஈகைப் பண்பை வள்ளுவர் விளக்கியுள்ளார்.

**"வலியார்க்கு ஒன்றுஈவதே ஈகை மற்றுஎல்லாத்**
**குறியெதிர்ப்பை நீரது உடைத்து"** (குறள்-221)

என்ற குறளின் வாயிலாக இல்லாதவருக்கு கொடுத்து அதன் மூலம் இன்மபம் அடைவதே ஈகை என்பதை வள்ளுவர் கூறிய வழி அறியலாம்.

மேலும், ஈதலால் வரும் புகழினைப் பற்றி கூறுகையில்,

**"ஈதல் இசைபட வாழ்தல் அதுஅல்லது**
**ஊதியம் இல்லை உயிர்க்கு"** (குறள்-231)

என்ற குறளின் வழியாக பிறருக்கு ஒரு ஒரு பொருளை கொடுத்து அதனால் வரும் புகழோடு வாழ வேண்டும். அதை தவிர உயிருக்கு ஊதியம் வேறு எதுவுமில்லை என்பதை வள்ளுவர் தெளிவாகக் கூறியுள்ளார். சங்க இலக்கிய நூலாகிய புறநானூற்றில், ஈகை பற்றி கூறுகையில்,

**"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**
**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று**
**கொள்ளெனக்கொடுத்தல் உயர்ந்தன்று**
**கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"** (புறம்-204)

என்ற புறநானூற்றுப் பாடலில் சங்க காலத்தில், இரப்பது இழிவான செயலாகக் கருதப்பட்டது. ஈயாமலிருத்தல் அதைவிட இழிவான செயலாகக் கருதப்பட்டது. எந்தப் பயனையும் எதிர்ப்பார்க்காமல் கொடுப்பது உயர்ந்ததாகக் கருதப்பட்டதை சங்க இலக்கிய நூலின் வழி அறியலாம்.

**விருந்தோம்பல் :-**

விருந்து + ஓம்பல் = விருந்தோம்பல் என்பது புதிதாக வந்தவரை உபசரித்தல் என்ற பொருளில் கழக அகராதியின் மூலம் அறியலாம். வீட்டிற்கு வந்த உறவினரையோ, முன்பின் அறியாதவர்களையோ அவர்களுடைய முகமோ, மனமோ புண்படாத வகையில் உபசரிப்பதே விருந்தோம்பல் எனப்படும்.

விருந்தோம்பலைப் பற்றி வள்ளுவரின் திருக்குறளில், வந்த விருந்தினரை உபசரித்து அனுப்பிவிட்டு மேலும் வரவிருக்கும் விருந்தினரை எதிர்பார்த்து இருப்பவன் தேவர் உலகுக்கு நல்விருந்தாகச் செல்வான் என்பதை,

**"செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு"** (குறள்-86)

என்ற குறளின் வழியாக விருந்தோம்ல் பண்பை மேற்கொள்பவனைத் தேவர் உலகுக்கு விருந்தாகச் செல்வான் என்ற கருத்தை வள்ளுவர் வலியுறுத்துகிறார்,

மேலும் விருந்தோம்பலைப் பற்றி ஆசிரியர் பெயர் அறியா விவேகசிந்தாமணியிலும் விருந்து உபசரிக்கும் மேன்மைத் தன்மையை அறியலாம்.

**"ஒப்புடன் முகம் மலர்ந்தே**
**ஊபசரித்து உண்மைபேசி**

**உப்பில்லாக் கூழு: இட்டாலும்
உண்பதே அமிர்தம் ஆகும்
முப்பழமொடுபால் அன்னம்
முகம்கடுத்து இடுவார் ஆயின்
கப்பிய பசியினோடு
கடும்பசி ஆகும் தானே"**

ஒருவரை உள்ளன்போடு வரவேற்று உபசரித்து உப்பில்லாத கூழ் உணவை அளித்தாலும் அதை உண்பது அமிர்தம் போன்றதே. ஆனால் அன்பில்லா முகத்தில் வெறுப்பைக் கொண்டு மா, பலா, வாழை ஆகிய முக்கனியோடு பால் சோறு அளித்தாலும் கடும் பசி உண்டாகுமே அன்றி பசி நீங்காது என்ற விருந்து உபசரிப்பின் மேன்மைத் தன்மையை அறியலாம்.

**அறம் கூறும் சிறந்த பகுதிகள் :-**

திருக்குறளில் எல்லாம் சிறந்தவையே.

- **பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்**
- **அறத்தான் வருவதே இன்பம்**
- **மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்**
- **புண்புடையர்பட்டுண்டு உலகம்**
- **முயற்சி திருவினையாக்கும்**
- **அறிவுடையார் எல்லாம் உடையார்**
- **பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
- **தொகுத்தவற்றுள் எல்லாம் தலை**
- **வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்**
- **தீமை இலாத சொல்**
- **ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
- **உயிரினும் ஓம்பப் படும்**
- **அறம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
- **மக்கட் பண்பில்லா தவர்**

**செய்நன்றி போற்றுதல் :-**

எந்த அறத்தை அழித்தவர்க்கும் அதிலிருந்து தப்பிப் பிழைக்க வழி உண்டு, ஆனால் ஒருவர் செய்த உதவியை மறந்து அழித்தவனுக்கு உயர்வு இல்லை. இதனை வள்ளுவர்,

**"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"** (குறள்-45)

என வள்ளுவர் செய்நன்றி மறத்தல் அறம் ஆகாது எனவும், செய்த நன்றியை நினைத்திருப்பதுதான் அறம் எனவும் குறிப்பிடுகிறார்.

**ஒழுக்கத்தின் மேன்மை :-**

ஒழுக்கம் அனைவருக்கும் மேன்மையைத் தருவதாக இருப்பதால் அவ்வொழுக்கத்தை உயிரைவிடச் சிறந்ததாகப் போற்ற வேண்டும். நாம் செய்யும் ஒவ்வொரு செயலிலும் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். நல்லொழுக்கம் நன்மையைக் கொடுக்கும். தீயொழுக்கம் துன்பத்தையே கொடுக்கும். இதனை,

**“நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்** (குறள்-11)

என வள்ளுவர் தனது குறளில் எடுத்துரைக்கின்றார்.

**வாய்மை :-**

வாய்மை – பொய்பேசாமை. வாய்மை என்பதையே தலையை அறம் என்கிறது திருக்குறள். இது பொய்மையை கோலோச்சும் இக்கால மனித சமுதாயத்திற்கு வள்ளுவர் கருத்துகள் மலர்ச்சியை உண்டாக்கும் மருந்தாக கொள்ளப்படுகிறது.

**“பொய்மை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று”** (குறள்-297)

அறங்களில் எல்லாம் சிறப்புடையது பொய்பேசாமை என்னும் நல்வழியை கடைப்பிடிப்பதாகும். அவ்வாறு பொய்கூறாமல் இருப்பானாயின் அவன் அதைவிட அறம் செய்வதற்கு வேறு ஒன்றும் இல்லை என்பதை இக்குறளின் மூலம் அறியலாம்.

**முடிவாக :-**

தமிழ் இலக்கியத்தில் நீதி இலக்கியம் முக்கிய பங்காற்றியுள்ளது. அதிலும் திருக்குறள் அறம், பொருள், இன்பம், வீடுபேறு நான்கையும் விளக்குவதாக உள்ளது. வள்ளுவர் இரண்டு அடியில் அன்பு, ஒழுக்கம், ஈகைப்பண்பு, வாய்மை, ஒழுக்கம், நன்றி மறவாமை, வாய்மை, விருந்தோம்பல், நட்பு ஆராய்தல், கல்வி, கேள்வி என பல அற செய்திகளை தெளிவுபட நமக்கு எடுத்துரைக்கிறார்.



(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய மொழி வளமையில் தமிழ்மொழியின் பங்கு

**திருமதி இரா ஷர்மிளா**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எம்.ஜி.ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்,
அடையாளம்பட்டு, மதுரவாயல், சென்னை – 600 095.

*****

**முன்னுரை :-**

"இந்திய நாடு மொழிகளின் காட்சி சாலையாக விளங்குகிறது" என்பது ச.அகத்தியலிங்கம் அவர்களின் கூற்று. பற்பல மொழிகளின் பிறப்பால் இந்திய நாட்டின் மொழி எண்ணிக்கை எவ்வாறு உயர்ந்ததோ அதைப்போலவே இந்திய நாட்டின் இலக்கிய கலாச்சார வளமையானது நாட்டில் உலவிவரும் மொழியின் வளமையாலேயே வளர்ந்தது என்பது ஆன்றோர் கூற்று. அவ்வகையில் இந்திய நாட்டின் மொழி மற்றும் கலாச்சார வளமைக்கு திராவிட மொழிகளும் பங்கு வகிக்கின்றன.

திராவிட மொழியானது தென் திராவிட மொழி, நடுத்திராவிட மொழி, வடதிராவிடமொழி என்று மூவகைப்படும். இவற்றுள் தென்திராவிட மொழியானது மூன்று. தமிழ், கன்னடம், மலையாளம் ஆகும். இம்மூன்று மொழிகளுள் தமிழ்மொழியை மட்டும் கையில் எடுத்து தமிழ் மொழியின் வளமையால் இந்திய நாட்டு மொழியின் இலக்கிய மற்றும் கலாச்சார வளமைக்கு அளித்த பங்கு இங்கு சுட்டப்படுகின்றது.

ஒரு மொழியின் வளர்ச்சியே அம்மொழிக்கும் அம்மொழி வளர்ந்த நாட்டிற்கும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அந்நிலையில் தமிழ் மொழியின் அளப்பரிய வளர்ச்சி இந்திய நாட்டின் மொழி வளர்ச்சிக்கும் கலாச்சார வளர்ச்சிக்கும் உதவியது என்பது மிகையல்ல.

> **"தொன்மை இயன்மை தூய்மை தாய்மை**
> **முன்மை வியன்மை வளமை மறைமை**
> **எண்மை இளமை இனிமை தனிமை**
> **ஒண்மை இறைமை அம்மை செம்மை**
> **எனும்பதி னாறும் இன்றமிழி இயல்புஎனப்**
> **பன்னுவர் மொழிவலர் பாவாணர் தாமே"**

என்று தமிழ் மொழியின் பதினாறு இயல்புகளையும் எடுத்துரைக்கிறார் பாவாணர்.

> **"உலகின் மிகவும் தொன்மையான தூயமொழி தமிழ்; ஞால முதல்மொழி என்பார் தேவநேயப் பாவாணர்."**

இவ்வாறாய் ஆன்றோர்கள் தமிழை போற்றிப் புகழக் காரணம் தமிழ்மொழி இலக்கண இலக்கிய வளங்களைத் தன்னகத்தே கொண்டு ஓங்கி வளர்ந்தமையேயாகும். தமிழர்களும் தமிழின் வளமைக்கு மெருகூட்டும் வண்ணம் இலக்கண இலக்கியங்களை ஏட்டில் வடித்து உலக மக்களுக்கும் மற்ற மொழிகளுக்கும் அளித்த அளப்பரிய செயலாலேயே இது நிகழ்ந்தது.

தமிழ் இலக்கியங்கள் மானுட வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்தவையாகும். அவற்றின் பண்பாட்டு கூறுகளே இம்மொழியின் வளமைக்கு மிகப்பெரிய காரணமாகும். சங்க நூல்களில் மனிதன் பண்பாட்டோடு வாழ்ந்தமைக் காணப்படுகின்றது.

**“பண்புடையார் பட்டுண் டுலகம் அதுவின்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்” (996)**

என்று வள்ளுவரும் பண்பாட்டின் சிறப்பினைக் கூறுகிறார்.

**வணிகரின் பண்புநிலை :-**

பண்டைய வணிகர்கள் பெரும் லாபத்தை ஈட்டும் காலத்திலும் பொய் கூறாது வாழ்ந்தனர். ஒழுக்கமும் நேர்மையும் உடையவர்களாய் திகழ்ந்தனர். நடுவுநிலை தவறாது மக்களுக்கு நேர்மையுடன் நல்பொருட்களைக் கொண்டு சேர்த்தனர்.

**“கொடுமேழி நசை உழவர்**
**நெடுநுகத்துப் பகல்போல**
**நடுகின்ற நல்நெஞ்சினோர்”** (பட்டினப்பாலை-2:5-7)

என்று பட்டினப்பாலை வணிகர்களின் மென்மையையும் பண்பாட்டையும் கூறுகின்றன.
உயிரின வகைப்பாடு

**“ஒன்றறி வதுவே உற்றறி வதுவே**
**இரண்டறி வதுவே அதனொடு நாவே**
**மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே**
**நான்கறி வதுவே அவற்றோடு கண்ணே**
**ஐந்தறி வதுவே அவற்றோடு செவியே**
**ஆறறி வதுவே அவற்றோடு மனனே**
**நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே”** (தொல்-பொருள்-மரபு : 27)

என்று தொல்காப்பியர் உயிரினங்களை அறுவகையாய்ப் பாகுப்படுத்திக் காட்டியதோடு ஒன்றறி உயிர்க்கும் உற்ற வகைமையை எடுத்துக்காட்டியுள்ளார். உயிர்களுக்கு மரியாதை அளித்தலும் தமிழரின் பண்பாடு என்பது இதிலிருந்து வெளியாகின்றது.

**தொழிலுக்கு மரியாதை :-**

உழவுத் தொழிலுக்கு மரியாதை செலுத்துவதில் பண்டைய தமிழர்கள் முன்னோடிகளாவர்.

**“சுழன்றும் ஏர்பின்னது தலை அதனால்**
**உழந்தும் உழவே தலை”** (குறள்-1031)
**“உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்**
**தொழுதுண்டு பின் செல்பவர்”** (குறள்-1033)

என்று செய்யும் தொழிலுக்கு மரியாதை செலுத்தியவர்கள் தமிழர்கள். தமிழர்கள் தத்தம் செய்யும் தொழிலை உயர்வாய்க் கருதினார். அவற்றுள் உழவுத்தொழிலையும் உழவர்களையும் மேன்மையாய் பல இலக்கியங்களில் எடுத்துக்காட்டியுள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டு உழத்திப்பாட்டு மற்றும் முக்கூடற்பள்ளு இலக்கியங்கள் உழவன் உழத்தியிடம் உழவுத் தொழிலின் மேன்மையையும் உழவுப் பொருட்களையும் கூறி எடுத்தாண்டுள்ளனர். மேலும் உழவன் ஒருவன் உழவுத் தொழிலை செய்யாது

சோம்பினால் அவன் நிலமானது அவன் மனைவிப் போல அவனோடு சண்டையிட்டு நிற்கும் என்று கூறுவதிலிருந்து உழவுத் தொழிலானது நம் பண்பாட்டின் அங்கமாகத் திகழ்வது எடுத்துக்காட்டப்படுகின்றது.

**“சீரைத் தேடின் ஏரைத் தேடு”**

என்னும் பழமொழியும் வேளாண் தொழிலின் மேன்மையை நமக்கு உணர்த்துகின்றது. மனித சமூகத்தை வாழ்விக்கும் ஓர் அளவுகோல் உழவுத்தொழில் என்பது இலக்கியக் கருத்து. இப்பெரும் பண்பாடு தமிழ் இலக்கியங்களைக் காட்டிலும் மற்ற மொழிகளில் எப்பெரும் அளவிற்கு மிகும்?

**ஈகை :-**

சங்ககால மன்னர்கள் பரிசில் பெறுவதற்கு ஒருவர் எத்தனை முறை வந்தாலும் இல்லையெனாது ஈன்றனர்.

**“ஒருநாட் செல்லலாம் இருநாள் செல்லலாம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாப் போன்ற விரும்பினன் மாதோ”** (புறநானூறு-101)

அவ்வாறு ஈதலே தமிழரின் பண்பாடு என்பது புறநானூற்றின் பதிவு.

**“பாணர் பாடுநர் பரிசிலர் ஆங்கவர்**
**துமதெனத் தொடுக்கவ ராயின் எமதெனப்**
**பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயம்”** (புறம்-135)

என்று அதியமானின் ஈகைத் திறத்தை அவ்வையார் சிறப்பித்துப் பாடியிருப்பது, ஈகை பண்பை சங்ககாலத்தினர் எவ்வாறு போற்றினர் என்பது தெளிவாகும். ஆனால் தமிழ் இலக்கியமோ சங்க காலத்தில் நிகழ்ந்த ஈயும் நிலையை மட்டும் போற்றாது ஈத மன்னனின் மனமகிழ்ச்சியையும், கொடைத்தன்மையையும் போற்றும். ஈகையையும் ஈந்தவனையும் போற்றும் இலக்கியம் தமிழிலக்கியம். இவை ஈதவனின் உள்ளத்து உணர்வைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. இப்பெரும் பண்பாடு தமிழனின் தலைப்பெரும் சொத்து என்பதில் ஐயமில்லை.

**கல்வியின் சிறப்பு கூறுதல் :-**

தனிமனித வாழ்க்கைக்குக் கல்வி மிக அவசியமான ஒன்று. கற்றவரே கண்ணை உடையவர் கல்லாதவர் கண்களை அல்ல புண்களையுடையவர் என்பது தமிழிலக்கியம் கூறும் கல்வியின் சிறப்பு. உலகப்பொதுமறையாம் திருக்குறளும் கல்வியின் சிறப்பைப் பகருகின்றது.

**“கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்கு தக”** **(குறள்)**

தமிழ்விடு தூது நூலும் கல்வியாளர்கள் கல்வியறிவால் பெற்ற அறிவைக் கண்டு இன்புறுவர். அவர் பெற்ற இன்பத்தைக் கண்ட மக்கள் பலர் கல்வியின் மீது விருப்பம் கொள்வார்கள். ஆயினும்

திருபாற்கடலில் இருந்து தோன்றிய அமுதம் உண்டவர்க்கே பசியைப் போக்கும் பிறருக்கு அல்ல? எனவே கல்வியை எல்லோரும் கற்றல் நன்று கற்கும் கல்வியை விருப்புடன் கற்க என்றும் கூறுகிறது.

**"தாமின்புறுவது உலகு இன்புறக் கண்டு**
**காமுறுவர் கற்றறிந்தார் என்னும் - மாமகிமை**
**சேர்ந்தது உன்பாலன்றோ திருப்பாற்கடல் அமுதால்**
**ஆழ்ந்தவர்க்கு அல்லாது பசியாறுமோ"** (தமிழ்விடுதூது-196,197)

சிற்றிலக்கியமும் கல்வியின் பெருமையைக் கடலளவு காட்டி நிற்கின்றது.

**ஒருவனுக்கு ஒருத்தி என்னும் மாண்பு :-**

தமிழச்சமுதாயம் ஒருவனுக்கு ஒருத்தி என்னும் உயரிய கோட்பாட்டைத் தன்னகத்தே கொண்டது. ஆயினும் அக்கோட்பாட்டைத் தகர்க்கும் முறையில் இலக்கியம் பல வரினும் புலவர் பெருமக்கள் இலக்கியங்களைப் படைத்தமைக்கு காரணம் வாழ்வில் ஏற்படும் இன்னல்களை உலக மக்களுக்கு பறைசாற்றி நிற்பதற்கே. இதற்கு சான்று முக்கூடற்பள்ளு நூல்.

**"கஞ்சிக்குத் தன்னிலே தான்**
**கெஞ்சிப் புகுந்த வளல்ல**
**கண்டாசைப் பட்டே கொள்ளும்**
**பெண்டா னவரர்"**



**வாழ்வியல் அறநெறி :-**

பேசும் சொல்லானது பிறர் மனத்தைப் புண்படுத்தாது இருப்பது நன்று. நல்ல சொல் மனதை ஆற்றுப்படுத்தும் தீய சொல் தீப்புண்ணாய் வடுவாய்த் தோன்றும். எனவே தவறைத் திரும்ப திரும்ப செய்யாதே தண்டனை உண்டு என்று கூறுவது தமிழிலக்கியம்.

**"பருந்தாட்டங்கொண்டு கொப்பத்தில் ஆனை**
**பட்டாப் போல் அகப்பட்டாய் மரத்தில்**
**பொருந்தத் தன்வினை தன்னைச் சுற்றும் விதி**
**பொய்க்குமோ சொல்லாய் முக்கூடற்பள்ளா"**

துன்பம் பெருமை சிறுமை இரண்டையும் நல்கும் என்று எடுத்துரைக்கின்றது.

**இயற்கை வழிபாடு :-**

இயற்கையை வணங்குதலை பண்பாட்டின் அங்கமாய் கொண்டிருந்தனர். கதிரவன், பகலவன், மழை, கடல், மலைப் போன்றவைகளை வழிபாடு செய்வதில் ஆர்வம் காட்டினர். இதன் பொருட்டு மக்கள் செய்யும் தவறுக்கு அச்சம் கொள்ளலானர்.

**"ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்"**
**"திங்கள் போற்றுதும் திங்கள் போற்றுதும்"**
**"மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்"**(சிலம்பு-புகார்-மங்கல வாழ்த்துப்பாடல்)

என்னும் சிலப்பதிகார பாடல்கள் இதற்கு உதாரணமாய் உள்ளன. இயற்கைத் தெய்வங்களுக்கு படையலிட்டு வணங்கும் வழக்கமும் மக்களிடையே நிலவின.

**"காலை யிளங்கதி ருக்கெதிர் முதிரும்**
**கதிர்செம் பவளமுடன்**
**கதிர்முத் திட்டு வணங்க"**(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் தாலப்பருவம்-பா-எண்-6)

என்னும் முத்துக்குமாராசாமிப் பிள்ளைத்தமிழ் நூலானது எடுத்துரைக்கின்றன.

**போர் அறம் :-**

தமிழர்கள் போர் செய்வதில் வல்லவர்கள் போரில் வீரப்புண் பட்டு இறத்தலையே சொர்க்கமாய்க் கருதினர். செய்யும் போர் முறைக்கும் நெறிமுறைகளை வகுத்தவர்கள் தமிழர்கள் போர் செய்யும் வீரனின் தலைமுடியானது அவிழ்ந்தாலோ, எடுத்த அடியை பின் வைத்தாலோ, கண் இமைத்தாலோ, வாளை கையிலிருந்து தவறவிட்டாலோ அவனைக் கொல்லுதல் அறம் ஆகாது என்பதில் உறுதிபூண்டனர். எதிர்த்து நிற்பவன் அவனோடு போர் புரிதல் வீரத்திற்கு இழுக்கு என சிந்தித்தவன் தமிழன். புறநானூற்றுப் பாடலும் இதனை உறுதி செய்கின்றது.

**"ஆவு மானியிற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதலவர்ப் பெறாஅ தீரும்**
**எம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மனென்"** (புறம்-9)

செய்யும் போருக்கும் இலக்கணம் வகுத்தது சிறப்புடையது.

**முடிவாக :-**

தமிழர்களின் பண்பாட்டுக் கூறுகளாய் மேற்கொண்டவைகளைக் கருத்தில் கொண்டால் அவை பறைசாற்றுவது தனி மனிதனின் ஒழுக்க பண்புநிலைகளை மேம்படுத்த நினைக்கும் உத்திகளாகும். இத்தகு உத்திகளால் மனித வாழ்வின் நிலை உயர்ந்தது. உயர்ந்த நிலையினை வெளிகாட்டும் பொருண்மைகளாய் இலக்கியங்கள் மலர்ந்தன. தமிழ் இலக்கியம் அளப்பரிய வளர்ச்சியை மேற்கொண்டது. தமிழ் இலக்கிய வளர்ச்சியானது நாட்டின் இலக்கிய வளமையை பறைசாற்றி நின்றன. திராவிட மொழியின் வளமை இந்திய நாட்டு மொழியின் வளமைக்கு ஊன்றுகோலாய் அமைந்தது என்பதை இக்கட்டுரையின் வழி அறிந்துகொள்ளலாம்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# தமிழ் மொழியின் சிறப்பும் இலக்கியச் சிந்தனையும்

**திரு வெ பாலாஜி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
டாக்டர் எம்.ஜி.ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்,
அடையாளம்பட்டு, மதுரவாயல், சென்னை – 600 095.

*****

**முன்னுரை :-**

**"திங்களொடும் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
பொங்குகடல் இவற்றோடும் பிறந்த தமிழ்"**

என்றார் பாவேந்தர் பாரதிதாசன். தமிழ் இல்லாத காலம் இத்தரணியில் இல்லை என்பதே சான்றோர்களின் துணிவான கருத்தாகும். தரணியின் மூத்த மொழியாக தமிழ் மொழி திகழ்வதால் உலகத்தின் தொன்மையான மொழிகளில் எல்லாம் தமிழ் மணம் வீசுகிறது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இந்தியா முழுவதும் ஒரு மொழி மட்டுமே பரவியிருந்தது. அதுவே திராவிட மொழிகளுக்கு முந்திய மொழியாக பழந்திராவிட மொழி திகழ்ந்த்திருக்கிறது. பழந்திராவிட மொழியிலிருந்து பல புதுத்திராவிட மொழிகள் தோன்றின. இந்தியாவின் வடமேற்கே பலுசிஸ்தானத்தில் வழங்கும் பிராகூய் எனும் மொழி திராவிட மொழியே ஆகும்.

**மொழிகள் உருவான விதம் :-**

இந்தியாவின் பன்னிரண்டு திராவிட மொழிகள் இருந்ததாக வரலாற்று அறிஞர் கால்டுவெல்லின் கூற்று. அண்மை காலங்களில் 20க்கும் மேற்பட்ட திராவிட மொழிகள் இருப்பதாக சொல்லப்படுகிறது. பேச்சுவழக்கு மட்டும் உள்ள மொழிகள், எழுத்து வழக்கு மட்டும் உள்ள மொழிகள், பேச்சும் எழுத்தும் உள்ள மொழிகள் இருப்பதை காணலாம். இத்திராவிட மொழிகளில் சிறந்ததாக தமிழ்மொழி உள்ளது. வட இந்தியாவில் பாலி, பிராகிருதம் முதலிய மொழிகள் பேசப்பட்டு வந்தன. வேங்கடத்துக்குத் தெற்காக இருந்தவர் பேசிய மொழி தமிழ் என்றும், வடக்கே இருந்தவர்கள் வழங்கிய மொழி தெலுங்கு என்றும், கருநாடகப் பகுதியினர் உரையாடின மொழி கன்னடம் என்றும், கேரளத்து மக்கள் பேசிய மொழி மலையாளம் என்றும் வழங்கப்பட்டன.

தமிழும் வடமொழியும் கலந்து பிறந்தது தான் தெலுங்கு மொழியாகும். வடதிசையிலே உள்ளவர்கள் பேசியதால் வடுகு (வடகு) எனவும் வடுகர் என்றும் பின்னாளில் அழைக்கப்பட்டனர். தமிழும் வடுகும் கலந்த கலப்பினில் பிறந்ததே கன்னட மொழியாகும்.

**"மழலைத் திருமொழியிற் சில வடுகும் சில தமிழும்
குழறித் தரு கருநாடியர் குறுகிக் கடைதிறமின்"**

என்று கலிங்கத்துப்பரணி பாடலால் அறிய முடிகிறது. தெலுங்கும் கன்னடமும் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் தமிழிலிருந்து பிரிந்து தனி மொழியாகிவிட்டன. கேரளத்தில் கி.பி பத்தாம் நூற்றாண்டு வரை செந்தமிழே செல்வாக்குப் பெற்று திகழ்ந்தது. சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே மலையாளம் தனிமொழியாக செல்வாக்கு பெற்றன.

**மொழியின் தோற்றம் :-**

மொழி என்பது மக்களின் மனத்தை பிரதிபலிக்கும் கால கண்ணாடியாகும். மக்களின் கருத்துக்கள் மாற்றம் அடையும்போது மொழியும் அதற்கேற்றார் போன்று மாறுதல் அடைகின்றன. உலகில் வாழ்கின்ற உயிரினங்கள் தம் உணர்ச்சியை வெளிப்படுத்த ஒலியெழுப்புகின்றன. மயில் அகவும், குயில் கூவும், யானை பிளிறும், நாய் குரைக்கின்றது. உயிரினங்களின் ஒலியினை நாம் சிறப்புச் சொற்களால் குறிக்கின்றோம். ஆனால் மக்கள் மட்டும் பேசுகின்றனர். ஒருவர் தம் உணர்ச்சியையோ, கருத்தையோ மற்றவருக்கு வெளிப்படுத்தக் கருவியாய் இருக்கும் எதனையும் நாம் மொழியென்று கூறுவது பொருத்தமானதாகும். பொருள்களுக்குரிய ஒலி வடிவமான குறியீடுகளைக் கொண்டது பேச்சு மொழி எனவும் ஒலிகளுக்கு வரி வடிவமான குறியீடுகள் உடையது எழுத்து மொழியாகும்.

மொழி என்பது மக்கள் படைத்துக் காக்கும் அரியதொரு கலையாகும். மொழியே மக்களின் அறிவை வளர்த்து உயர்த்தும் கருவியாக உள்ளது எனலாம். மனம் என்பது பெரும்பாலும் மொழியால் இரண்டறக் கலந்தது. மக்கள் அனைவரும் மொழிக்கு ஆசிரியராகவும், மாணவராகவும் உள்ளனர். மொழியை வளர்ப்பவரும் மொழியால் வளர்பவரும் மக்களே ஆவர். பலர் சேர்ந்து ஒரு சமுதாயமாக ஓர் இனமாக பழகி வாழ்வதற்குத் துணையாக உள்ள சிறந்த கருவியாக மொழி கருதப்படுகின்றது.

**திருந்தியன திருந்தாத மொழிகள் :-**

திராவிட மொழிகளைத் திருந்திய மொழிகள் எனவும் திருந்தா மொழிகள் என்றும் இருவகையாகப் பாகுபாடு செய்தவர் கால்டுவெல்' ஆவார். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு, குடகு என்னும் ஆறும் இலக்கியம் பெற்ற மொழிகளாகும். தோடா (Toda), கோடா (Kota), படகா (Badaga), கோலமி (Kolami), பார்ஜி (Barji), நாயகி (Naiki), கோந்தி (Godhi), கூயி (Kui), குவி (Kuwi), கோண்டா (Konda), மால்டா (Malta), ஒரொவன் (Oroan), கட்பா (Gadba), குருக் (Kurukh) என்பவை எழுத்து இலக்கியம் அற்றனவாய் உள்ள திராவிட மொழிகள் ஆகும்.

**தொன்மையான மொழி தமிழ் :-**

உலகில் பல மொழிகள் தோன்றி வாழ்ந்து மறைந்துள்ளன. ஒரு சில மொழிகள் மட்டுமே இன்னும் அழியாமல் நிலைபெற்றுள்ளன. மிகப் பழங்காலத்திலேயே தோன்றி செல்வாக்குடன் வலம் வருகின்ற மொழிகளாக தமிழ், சீனம் முதலிய சில மொழிகளே ஆகும். பழமைக்கும் பழமையாக இலக்கியவளம் உடையதாகவும், புதுமைக்கும் புதுமையாக கருத்து இலக்கியம் நிறைந்ததாகவும், என்றும் இளமைப் பொலிவுடன் மணம் வீசும் மொழியாக தமிழ் மொழி விளங்குகிறது. தமிழ் மிகவும் தொன்மையான மொழி என்பதால் இது சிவபெருமானால் உண்டாக்கப்பட்டது என்றும் சிவபெருமான் தமிழை அகத்தியருக்கு உணர்த்தியதும் இதனை 'தழற்புரை நிறக்கடவுள் தந்த தமிழ்' என்றும் ஆதியில் தமிழ் நூல் அகத்தியற்கு உணர்த்திய மாதொருபாகன்' என்பதாலும் தமிழின் பெருமையை அறிந்து கொள்ள முடிகிறது.

தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்று பொருளாகும். 'இனிமையும் நீர்மையும் தமிழ் எனலாகும் எனறு 'பிங்கல நிகண்டு' கூறுகிறது. 'இன்றமிழ் இயற்கை இன்பம்' எனச் சீவக சிந்தாமணியும் 'தமிழ் பாட்டிசைக்கும் தாமமையே' என்றும் கம்பன் பாடலிலும் தமிழ் மொழி இனிமையானது என்பதை அறிந்து

தெளிந்து கொள்ளலாம். வால்மீகியும் தமிழை "மதுரமான மொழி" என்றே குறிப்பிடுகின்றார். "வானம் அளந்து அனைத்தும் அறிந்த வளர்மொழி" என்று பாரதியாரும், இனிமைத் தமிழ்மொழி எமது என்றும் "தமிழுக்கு அமுதென்று பேர்" என்றும் பாரதிதாசன் பாடினார்.

**"என்னவளே இனியவளே எழில்முகம் கொண்டவளே!**
**உன்னாலே வருவானேன் உருவாகி உயிரானேன்!**
**தன்னாலே கவியெழுதி தரணியில் நூலானேன்**
**எந்நாளும் எழுத்தாலும் உனதாகவே நான் வாழ்வேன்!"**
(கவிஞர் இனியன் பாலா)

ப∴றுளியாற்றுடன் பன்மலையடுக்கத்திலே அரசோச்சிய தமிழணங்கு, அவற்றை கொடுங்கடல் கொண்ட பின்னும் வாழ்ந்தது! ஆரிய மொழியின் ஆதிக்கம் தென்னாட்டில் புகுந்தபோதும் தமிழ் வாழ்ந்தது வளர்ந்தது! ஆங்கில மொழியின் செல்வாக்கு ஓங்கிய நிலையிலும் தமிழ் வாழ்ந்தது! வளர்ந்தது! இந்தியை எப்படியேனும் இந்நாட்டில் புகுத்திடப் பல்துறை முயற்சி நடைபெற்றும் வருகிறது. இருப்பினும் அவற்றையெல்லாம் தகர்த்து இன்றும் தமிழ் வாழ்கிறது! வளர்கிறது! அன்றும் இன்றும் என்றும் வண்டமிழ் வளமையான மொழியாக வாழ்வதற்குக் காரணமே அதன் இலக்கண இலக்கியச் செழிப்பும் சிறப்புமே ஆகும்.

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகம்' என்று பழங்காலத்திலேயே தமிழ் வழங்கிய நாட்டின் எல்லையாக கூறப்பட்டுள்ளது. இலங்கையின் வடபகுதியாகிய யாழ்ப்பாணத்திலும் வேறு சில பகுதிகளிலும் பினாங்கு, சிங்கப்பூர், மலேசியா, ஆஸ்ரேலியா போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட நாடுகளில் தமிழ் பேசுவாரின் எண்ணிக்கை உயர்ந்து வருகின்றன. தெலுங்கர்களும் கன்னடர்களும் தமிழை அரவம் என்பர். தெலுங்கர் தமிழை அரவாளு என்பர். அறம் உடையவர் அறவர் அல்லது அருவா நாட்டினர் எனவும் அழைப்பதுண்டு. திராவிட மொழியினம் என்று தமிழ் முதலிய மொழிகளைக் கூறும் வழக்கு, சென்ற நூற்றாண்டில் வளர்ந்தது எனலாம். தமிழ் மிகத் திருந்திய மொழியாகவும் இருத்தலை கண்டு ஐரோப்பியர் தமிழ் மொழியினம் அல்லது மலபார் மொழியினம் என்று வழங்கினர். (The Tamillan Group of Family)

**பழம் பெருமை :-**

வடமொழியின் முதல் காவியமான வால்மீகி ராமாயணத்தின் தமிழர் பாராட்டப் பெற்றுள்ளனர். மதுரையின் சிறப்பையும், பாண்டியரின் வாயிற் கதவினையும் பொன்னாள் மணியால் செய்யப்பட்ட அழகு ஓவியங்களை போய்க் காண்பீர் ன ராமன் கிஷ்கிந்தையில் இருந்த வானரப் படையினருக்கு சொன்னதாக அக்காவியம் கூறுகிறது. தமிழ்நாட்டுக் கடற்கரைப் பட்டினங்கள் உலக வாணிபத்தின் தலைமையிடமாக விளங்கியிருந்தன எனலாம். கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சேர நாட்டின் தேக்கமரம். தமிழ்க்கப்பல்களின் வாயிலாக வெளிநாடுகளுக்குச் சென்று பல நகரங்களில் பெரிய கட்டிடங்களை கட்டியுள்ளது. பல்வேறு பொருள்கள் எகிப்து, சிரியா, பாபிலோனியா முதலிய நாடுகளுக்குத் தமிழகத்திலிருந்து சென்றிருந்தன. கி.மு. 969-930 இல் இருந்த சாலமன் என்ற ஹுப்ரு மன்னம் பொன், வெள்ளி, தந்தம், குரங்கு மயில், அகில் ஆகியவற்றைப் பெற்றாக வரலாறு கூறுகிறது. தமிழ்நாட்டு அரிசி பாபிலோனியாவுக்கு கி.மு. ஆறாம் நூற்றாண்டில் அனுப்பப்பட்டது. சந்தனமும் அனுப்பபட்டது. அரிசி, சந்தனம் என்ற தமிழ்ச் சொற்கள் அந்நாட்டு மொழியில் இடம்பெற்றுள்ளதை வரலாற்றுகளால் அறிந்துகொள்ள முடிகிறது. கடற்பயணத்தில் தமிழர்கள் கைத்தேர்ந்தவர்களாக

காணப்பட்டனர். ஆழி, புணரி, முந்நீர், பவ்வம், பரவை, ஆர்கலி, கடல் முதலிய பல சொற்கள் ஒரே பொருளையே குறித்து வழங்குகிறது என்பதை நாம் அறியலாம்.

**வணிகச் சிறப்பு :-**

கி.பி. இரண்டாம் நூற்றாண்டு மூன்றாம் நூற்றாண்டுகளில் ரோமர்கள் தமிழர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். முசிரி என்னும் சேரர் துறைமுகத்தில் ரோமர் பலர் தங்கி வாழ்ந்தனர். பழைய ரோம நாணயங்கள் பல தமிழ் நாட்டுக் கடற்கரைகளில் கணடெடுக்கப்பட்டவை இதற்கு சான்றுகாளக உள்ளன. முத்துக்களுக்காக இருபது லட்சம் ரோம் நாட்டுச் செல்வம் ஆண்டு தோறும் தமிழ்நாட்டுக்குச் சென்று விடுகிறதே என்று பிளைனி (Pliny) என்னும் ரோம் வரலாற்று ஆசிரியர் மிகவும் வருந்தி கூறியதாக வரலாற்று நூலில் குறிப்பிடப்பட்டுள்ளன. கிழக்கே சீனா முதலிய நாடுகளுடனும் ஜாவா, சுமத்ரா, மலேயா போன்ற தீவுகளுடன் தமிழ்நாடு வாணிகம் முதலிய துறைகளில் தொடர்பு கொண்டிருந்தது. இலங்கை நாட்டுப் பழைய வரலாற்று நூல்களாகிய மகாவமிசம், ராஜவழி, ராஜரத்னாகரி என்பவற்றிலும் தமிழரின் வணிகச் சிறப்பும், போர்த்திறனும், ஆட்சிப் பெருமையும் பொறிக்கப்பட்டுள்ளதை காணமுடிகிறது. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் பாண்டிய இளவரசன் இலங்கை அரச குடும்பப் பெண்ணை மணம் புரிந்துக் கொண்டதாக கூறப்பட்டுள்ளது. கிமு.20 ஆம் நூற்றாண்டில் பாண்டிய வேந்தன் ஒருவன் ஐரோப்பாவின் அப்போது புகழ் பெற்று விளங்கிய அகஸ்டஸ் என்ற வேந்தருக்கு தூது அனுப்பி உள்ளான். வேறொரு வேந்தன் கிரேக்க வீரர்களை வரவழைத்து தன் மெய்க்காப்பாளராக வைத்துக் கொண்டான். இவ்வரலாற்றுச் செய்திகள் எல்லாம் இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு தமிழிலக்கியத்தின் வளர்ச்சி முக்கிய பங்காற்றுகிறது.

இவ்வரலாற்றுச் செய்திகள் எல்லாம் பிறநாட்டுக் குறிப்புகளால் அறியப்பட்டவையே ஆகும். தமிழ் நூல்கள் கூறுவன அல்ல. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் நூலாகிய தொல்காப்பியம், பத்துப்பாட்டு, புறநானூறு முதலிய நூல்களின் இலக்கியச் சான்றுகள் நிறையவே உள்ளன. மதுரை மாநகரின் சிறப்புப்பற்றித் தமிழ் இலக்கியம் உயர்வு நவிற்சி இன்றிக் கூறும் குறிப்புகள் அனைத்தும் வரலாற்றுச் சான்றுகளாக கொள்ளத்தக்கனவாகும். மிகமிகப் பண்பட்ட மொழியாகவும், தனக்கே உரியதாக இயல்பாக வளர்ந்த சிறந்த இலக்கியச் செல்வம் நிறைந்த மொழியாகவும் தமிழ் உள்ளது என்றும் தமிழ் மொழியை எந்த மொழியும் விஞ்ச முடியாது என்றும் உள்ளத்தின் வெற்றியை எடுத்து இயம்புவதில் வேறு எந்த மொழியும் தமிழைவிட சிறந்ததில்லை என்று பெர்சிவல், மாக்ஸ்முல்லர், ஜியு.போப் போன்ற அறிஞர்கள் எடுத்துரைதுள்ளதை காணும்போது இந்திய இலக்கியங்களின் வளர்ச்சிக்கு தமிழ் மொழியின் பங்களிப்பு என்பது ஈடுஇணையற்றது ஆகும்.

ஒரு மொழியின் வளர்ச்சி என்பது அந்த மொழியைப் பேசுகின்ற மக்களின் திறமையான செயற்பாடுகளின் தொடர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது. தமிழ் மொழியின் தொன்மையும் அந்த மொழியில் தமிழர்கள் வைத்திருக்கும் நேசமும் பக்தியும் இன்று உலகெங்கும் வாழும் தமிழர்கள் தமிழை வளர்த்து வருகின்றனர். இலங்கைத் தமிழர்கள் முற்போக்குத் தமிழ் இலக்கிய சங்கத்தை 1942ம் ஆண்டிலேயே யாழ்ப்பாணத்தில் தொடங்கி மேற்கு நாடுகளில் முக்கியமாக தமிழின் மகிமையை உலகுக்குப் பரப்புவதில் முன்னணி நிலை எடுத்து 1950 ஆம் ஆண்டு தொடக்கம், மேற்படிப்பு, உத்தியோகம் போன்ற காரணங்களால் வண்டனில் குடியேறியவர்கள் இலங்கைத் தமிழர்கள் ஆவர். இவர்களால் லண்டனில் தொடங்கப்பட்ட வானொலிகள், பத்திரிக்கைகள், பாடசாலைகள், அச்சுக் கூடங்கள், கோயில்கள் பல தரப்பட்ட தமிழ்ச் சங்கங்கள் நடத்திய தமிழ் மாநாடுகள் என்பன உலகம் பூராவும் தமிழை நிலைபெற

செய்தார்கள். இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு திராவிட மொழிகளின் அன்னையாக விளங்கும் தமிழ்மொழி முக்கிய பங்காற்றுவது பெருமை கொள்ளத் தக்கதாகும்.

உலக நாடுகளில் எல்லாம் தமிழ் காலூன்றி நிலைபெற தொடங்கிவிட்டன. இந்திய இலக்கியத்தின் வளர்ச்சி பாதையில் தமிழிலக்கியம் முக்கிய பங்காற்றி வருவதை காண முடிகிறது. இளம் தமிழர்கள் இலண்டனில் குடியேறினார்கள். 1916ம் ஆண்டிலிருந்து ஆங்கிலப் பேராசிரியர்களால் தமிழ்மொழி இங்கு கற்பிக்கப்பட்டது. சென்ற நூற்றாண்டின் ஆரம்ப காலத்திலிருந்து இந்திய தமிழர்களால் தமிழ்மொழி பற்றிய செயற்பாடுகளைப்பற்றி ஆலோசிக்க தமிழ்ச் சங்கத்திற்கு ஒரு கட்டிடம் கட்டப்பட்டது. தமிழ்ச் சார்ந்த நிகழ்ச்சிகள் 1960ம் முதல் நடந்து வருகின்றன 1972-76 கால கட்டத்தில் சாதி, சமய, இன வேறுபாடற்ற முறையில் தீபாவளி, பொங்கல் போன்ற விழாக்கள் கொண்டாடப்பட்டன. இலண்டன் சைவ இந்து சங்கம் திரு.சோ.சபாபதிப் பிள்ளையவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. இலண்டன் முரசு 1970ம் ஆண்டும், 1976ல் 'தமிழ்த்தேசியமும் சுயநிர்ணய உரிமையும்' என்ற தமிழ்ப்புத்தகம் வெளியிடப்பட்டது. 1977 ஆம் ஆண்டு லண்டனில் வாழ்ந்த தமிழ் மானவர்களால் 'ஈழமாணவர் பொது மன்றம்' என்ற அமைப்பு தொடங்கப்பட்டது. 1978ல் புரட்சி என்ற தமிழ்ப் பத்திரிக்கை வெளியிடப்படப்பட்டது. இன்று லண்டனில் ஏறத்தாழ முப்பது தமிழ்ப் பாடசாலைகளில் 6000க்கு மேற்பட்ட குழந்தைகள் தமிழ் கற்கிறார்கள். இப்படி எல்லா நாடுகளிலும் தமிழ் படிப்போரின் எண்ணிக்கை உயர்ந்த வண்ணம் உள்ளன. பண்பாடு, அரசியல், ஒழுக்கம், விருந்தோம்பல், நட்பு, நாகரிகம், கலாச்சாரம், மொழி உணர்வு போன்றவற்றில் தமிழர்கள் சிறப்புத் தன்மை வாய்ந்தவர்களாக வளர்ந்து வருகின்றனர். இந்திய இலக்கியமானது உலகலாவிய அளவில் நல்லதொரு இடத்தை வகிக்கிறது என்பதில் ஐய்யமில்லை!

**முடிவாக :-**

'தமிழன் என்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா' என்று பாடியனார் நாமக்கல் கவிஞர். தமிழனைத் தலைநிமிர்த்தி நிற்குமாறு செய்ததே இலக்கியங்கள்தான். இங்குள்ள தமிழர்கள் மட்டுமல்லாமல் உலகெங்கும் வாழும் தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட்டு இந்திய இலக்கிய வளர்ச்சிக்கு அரும்பெரும் தொண்டாற்றி வருகின்றனர். தடம் பார்த்தும் தடம் பதித்தும் வருபவர்கள்தான் தமிழர்கள் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக நாம் அறிந்து கொள்ளமுடிகிறது.

**"செந்தமிழே செந்தமிழே செழுமையான வண்டமிழே!**
**சீர்திருத்தம் செய்யவந்த தென்னகத்தின் தீந்தமிழே!**
**சங்ககால காவியமே சரித்திரத்தின் ஓவியமே!!**
**முத்தான முத்தமிழே மூவேந்தரின் நற்றமிழே**
**தெவிட்டாத தெல்லமுதே அகிலத்தின் நல்லமுதே**
**தெய்வத்தின் அருள்மொழியே திராவிடத்தின் முதுமொழியே வாழியவே"**
(கவிஞர் இனியன் பாலா)

**பார்வை நூல்கள் :-**

1. இலக்கிய வரலாறு – டாக்டர் மு.வரதராசனார்
2. தமிழ் இலக்கிய வரலாறு – டாக்டர் பூவண்ணன்

(☺)(☺)(☺)(☺)(☺)

# கடவுளுக்கு எதிரான இந்திய இலக்கியம் – தமிழ் மொழியின் நன்கொடை

**முனைவர் ஆ முத்தையன்**
உதவிப் பேராசியர், தமிழ்த்துறை,
தூய நெஞ்சக்கல்லூரி, திருப்பத்தூர்
******

கடவுள் வழிபாடு என்ற ஒன்று கீழடியில் மேற்கொள்ளப்பட்டு வரும் அகழ்வாராய்ச்சிகளின் விளைவாகத் தமிழ் சிந்தனைமரபில் இருந்திருக்க வாய்ப்பில்லை என்பதை அறிகிறோம். இந்திய இலக்கியம் என்பது வடமொழியிலும் தமிழிலும் மிகப்பழங்காலந்தொட்டே தொடங்கிவிட்டது. ஆயினும் வடமொழி இலக்கியங்கள் கடவுள் பக்தியினை முன்னிறுத்தியே செயல்பட்டு வந்துள்ளன. தமிழ்ச் சிந்தனை மரபில் நமக்குக் கிடைத்துள்ள முதல் நூலான தொல்காப்பியம், சங்க இலக்கியம் தொட்டு கடவுள் வழிபாட்டிற்கான எச்சங்கள் காணப்படுகின்றன என்பது ஆய்வாளர்களின் கருத்து. அந்த வகையில் தொல்காப்பிய காலத்திற்கு முன்பாகவே ஆரியர்களின் தாக்கம் உருவாக ஆரம்பித்துவிட்டது என்றும் அவர்களுடைய வழிபாட்டு மரபு தமிழ் இலக்கியத்தையும் பாதித்துள்ளன என்பதையும் நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது.

> **''கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
> **வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
> **கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே''** (தொல்.புற.*33)*

என்ற நூற்பா கடவுள் வாழ்த்தோடு பொருந்தி வருவனவற்றைக் குறிப்பிடுகிறது. இதில்வரும் கொடிநிலை, கந்தழி, வள்ளி ஆகிய மூன்றிற்கும் தெய்வத் தன்மை ஏற்றி வழிபட்டனர் என்றும் இதனை இயற்கை வழிபாட்டுடன் தொடர்புப்படுத்திப் பார்க்கலாம் என்றும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கந்தழி எனும் சொல்லிற்குப் 'பொருளற்ற சொல்' என்றும் அதற்கு கடவுள் இல்லை என்ற பொருளைப் புகுத்திதான் சொல்லை உண்டாக்கி இருக்கிறார்கள் என்றும் பெரியார் விளக்கம் தருகிறார். (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*2203)*

பெ.மாதையனின் நூலினை வாசிக்கும் போது, கடவுள் தன்மையோடு ஒத்துப்போகிற ஏராளமான செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன. அதாவது ''சங்க இலக்கியங்கள் முழுக்க முழுக்கச் செல்வநிலையில் உயர்ந்த நால் வருணத்தவர் பற்றிய பாடல்களாகவே உள்ளன. தொல்காப்பியத்தில் உயர்ந்தோர், மேலோர், கீழோர், இழிந்தோர் எனும் சொற்கள் இடம் பெற்றுள்ளன என்றாலும் தொல்காப்பியம் சுட்டும் 'வழக்கு' எனப்படுவது அனைத்துப் பேச்சுவழக்குகளையும் உட்படுத்திய சொல்லாட்சியன்று. உயர்ந்தோர், மேலோர் எனும் சொற்கள் முதல் மூன்று வருணத்தாரை மட்டுமே குறிப்பிடப் பயன்படுத்தப்பட்டுள்ளன' என்றும்
''மேலோர் மூவர்' என்பதற்கு அந்தணர், அரசர், வணிகர் எனவும் 'கீழோர்' என்பதற்கு வேளாளர் எனவும் உரை கூறப்பட்டுள்ளது. வேளாளர் எஞ்சிய ஏனையோர் இழிந்தோர் எனப்பட்டுள்ளனர். இந்த இழிந்தோர் பற்றியதல்ல சங்க இலக்கியம்.'' (சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும், பெ.மாதையன், ப.*128-29)* என்றும் குறிப்பிட்டுள்ளார். இவற்றின் அடிப்படையில் தொல்காப்பியம்

காலந்தொட்டே ஆரியரின் (வடமொழி) கடவுள் வழிபாட்டுச் சிந்தனை தமிழில் புகுத்தப்பட்டுள்ளது என்பது விளங்குகிறது.

மேலும், அவர் வைதீக சமயங்கள் பின்பற்றுகிற வேள்வி, வைதிக நெறி, சுவர்க்கம், வினைப்பயன், இறைவழிபாடு, வடபுலத் தொன்மக் கலப்பு முதலானவை சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன என்றும் அதற்கு சான்றாகப் பாடல் எண்களையும் தந்து சென்றிருக்கிறார். அவற்றைக் கொண்டு அப்பாடல்களை எழுதியோரின் பின்னணியினை ஆராயும்போது பெரும்பாலும் ஆரிய பின்னணியோடு இருக்கலாம் என்றே எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில், மேற்கண்ட மதம் சார்ந்த தகவல்களைத் தம்முடைய பாடல்களில் குறிப்பிட்டுள்ளவாகளில் முதன்மையானவர்களாகக் கபிலர், பரணர், கடியலூர் உருத்திரங்கண்ணனார், நக்கீரர், பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் முதலானோர் உள்ளனர். இவர்கள் அந்தணர்களில் முதன்மையானோர் என்பது யாவரும் அறிந்ததே. அதேபோன்றதொரு குறிப்பிட்ட பின்னணி கொண்டவர்களைப்போல அதாவது கிழார், கண்ணனார், கீரன் முதலான பெயர்களைத் தங்களுக்குப் பின்னொட்டாகக் கொண்ட புலவர்களின் பாடல்களிலும் மேற்கண்ட செய்திகள் இடம்பெற்றிருக்கின்றன. சான்றாக,

- **மாங்குடிக்கிழார், ஆவூர் மூலங்கிழார், கூடலூர் கிழார், காரிக்கிழார்**
- **கடியலூர் உருத்திரங்கண்ணனார், எருகாட்டூர்த் தாயங் கண்ணனார், பாண்டியன் ஏனாதி பெருங்கண்ணனார், செல்லூர் கோசிகன் கண்ணனார்**
- **தும்பிசேர் கீரனார், கீரனார், நக்கீரர்.**

இவர்களைத் தவிர வேறு பெயர்கொண்ட புலவர்களும் தங்களுடைய பாடல்களில் மதம் சார்ந்திருக்கக்கூடிய செய்திகளைத் பாடிச் சென்றிருக்கிறார். அவர்கள் மன்னனின் இயல்பினையும், அரசவாகை, இயன்மொழித் துறையாகப் பாடிச் சென்றிருப்பதும், அவ்வாறு அரசவாகை, இயன்மொழி என்று வரும்போது அவர் பின்பற்றிய வேள்வி, வைதீக நெறி, சுவர்க்கம், வினைப்பயன், இறைவழிபாடு முதலானவற்றைப் புகழ்ந்துரைப்பதாகவும் பாடிச்சென்றுள்ளனர். மன்னர்களின் பெயர்களிலும் தாம் எந்த அளவிற்கு யாகங்களை நடத்தியவர் என்பதை அறியும் பொருட்டு அல்லது அவருடைய செயல்பாட்டினை விளக்கும் விதமாக தம்முடைய பெயர்களுக்கு முன்னால் (பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என) அடையிட்டு வழங்கியிருப்பதையும் நாம் காணமுடிகிறது. இந்த செய்திகளின் அடிப்படையிலும் சங்க இலக்கிய காலகட்டத்தில் பரவியுள்ள கடவுள், மதம் என்கிற பின்னணியின் தொடக்கத்தினை அறிந்து கொள்ளமுடிகிறது.

இதனையடுத்த வந்த சங்க மருவியக் காலம், காப்பியக் காலம், பக்தி இயக்க காலம், சிற்றிலக்கிய காலம், ஆங்கிலேயர்களுடைய ஆட்சிக்காலம் என எல்லாக் காலங்களிலும் இத்தன்மை இலக்கியத்தில் தொடர்ந்திருப்பதைக் காணலாம். ஆனாலும் கடவுள், மதக் கொள்கைகள் பரப்பப்பட்ட அதே காலத்திலும் அதற்கு எதிரான குறளும் பதிவுச் செய்யப்பட்டு வந்துள்ளன என்பதற்கும் ஏராளமான சான்றுகள் உள்ளன. ஒவ்வொரு மதமும் வேறொரு மதத்தை விமர்சிக்கும் வகையிலும் மறுத்துக் கூறுவதற்கான காரணமாகவும் அவை தமிழ் இலக்கியங்களில் வெளிப்படுவதை காணமுடிகிறது. தொல்காப்பிய நூற்பாவான,

**‘நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்**
**கலந்த மயக்கம உலகம் ஆதலின்”**

(தொல். பொருள். மர.*90)*

எனும் நூற்பாவில் தொல்காப்பியர் இவ்வுலகம் எவ்வாறு உருவானது என்பதை விளக்குகிறார். அதாவது நிலம், தீ, நீர், காற்று, வான் என்ற ஐம்பூதங்களின் கலவைதான் உலகம் என்பதை முன்வைக்கும்போது வைதீகம், கிறஸ்துவம், இஸ்லாம் முதலான மதங்கள் கூறும் உலக உற்பத்திக்கான கதைகள் உடைப்பட்டுவிடுகின்றன. இதில் தொல்காப்பியரின் அறிவியல் கடவுளுக்கு எதிரானதாக, மதத்திற்கெதிரானதாக இருப்பதைக் காணலாம்.

சங்க இலக்கியக் காலக்கட்டத்தில் வெளியான முருகனுக்குக் கொடுக்கப்படும் பலிக்கு எதிர்ப்புப் பாடலாகக் குறுந்தொகை *362* ஆவது பாடலை எதிர்ப்புப் பாடலாகச் சுட்டுகின்றனர். அதாவது தோழி, 'நான் கேட்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே. முருகனுக்குப் பலி கொடுப்பதாகச் சொல்லி ஆட்டுக் குட்டியைக் கொன்று அந்த இரத்தத்தைத் தலைவியின் நெற்றியில் தடவுகிறீர்களே இந்தப் பலியிடுதலைக் குறிஞ்சி நிலத் தலைவனான சிலம்பனின் மார்பு உண்ணுமோ?' என்று கேட்கிறாள்.

கடவுளுக்குப் பலி கொடுப்பதால் என்ன நேர்ந்துவிடப்போகிறது எனும் கேள்வி முற்போக்குவாதிகளாலும் சுயமரியாதைகாரர்களாலும் திராவிட இயக்கச் சிந்தனையாளர்களாலும் பொதுவுடமை சித்தாந்தவாதிகளாலும் இன்றைக்கும் எழுப்பப்பட்டு வரும் ஒன்றாகவே உள்ளது. துன்பத்திற்கான மூலப்பிரச்சனையைக் கண்டு அதற்கு தீர்வு காணாமல் பலியிடுவது எந்த வகையில் சரி? என்று கேட்கிறது.

அதேபோல், காப்பிய காலத்தில் உருவான சீவக சிந்தாமணியில் மதம் பற்றிய விமர்சனத்தை சீவகன் முன்வைக்கிறான். காட்டு வழியில் செல்லும்போது தான் கண்ட திருமால் பக்தர்களைப் பார்த்து 'அல்லிக்காயில் உள்ள அரிசியையும், புல்லரிசியையும் உண்டு வாழ்ந்தால் தீவினைகள் போகுமென்றால் கற்கள் உண்டு வாழும் புறாக்கள் தம்முடைய தீவினைகளைப் போக்கி இருக்கும் அல்லவா?' என்பதும் 'நீண்ட சடைமுடியை வளர்த்து நீரிலே குளித்து, நிலத்திலே வாழ்ந்து வருத்திய உடலைப் பெற்றால் வீடுபேறு அடைவோம் என்றால் காட்டில் வாழும் கரடிகூட வீட்டின்பம் அடையவேண்டுமல்லாவ?' என்பது போன்ற கேள்விகள் ஒவ்வொரு மதத்திற்கும் உள்ள குறைகளை விமர்சிக்கும் விதமாகவே உள்ளது. மணிமேகலையில் வரும் ஆபுத்திரன் போன்ற கதாபாத்திரங்களும் வைதீகத்திற்கெதிரான கருத்துக்களை முன்வைக்கின்றன.

இதனை ஒரு மதத்திற்கெதிரான கேள்விகள் என்று எடுத்துக்கொள்வதைவிட அவற்றின் சிந்தனை குறைபாடாக எடுத்துக்கொண்டால் அம்மதம் தம்மைச் சீர்ப்படுத்திக்கொள்ள உதவும். அப்பொழுது காலத்திற்கேற்ப மதம் தம்மை தகவமைத்துக்கொள்ள, சீர்படுத்திக்கொள்ள முடியும். ஒருவகையில் காப்பியங்களில் வரும் கதாபாத்திரங்கள் மதம், கடவுளைப் பற்றி விமர்சிப்பது என்பது அம்மதத்திற்கான, கடவுளுக்கான எதிர்ப்பு என்கிற வகையிலும் எடுத்துக்கொள்ளலாம். இவ்வாறு கடவுள், மதம் ஆகிய சிந்தனைகள் தமிழ் இலக்கியத்தைப் பொருத்தவரை காலத்திற்குக் காலம் இருந்தாலும் அவற்றை மறுக்கின்ற, எதிர்க்கின்ற சிந்தனையும் காலத்திற்குக் காலம் தொடர்ந்து கொண்டே வருவதைக் காணமுடிகிறது.

இந்திய இலக்கியம் என்பது வடமொழியிலும் தமிழிலும் மிகப் பழங்காலந்தொட்டே தொடங்கிவிட்டது என்பதை அறிவோம். அவற்றில் வடமொழி இலக்கியம் கடவுள் பக்தியை முன்னிறுத்தியே வந்துள்ளதையும் அறிவோம். ஆயினும் தமிழ்மொழி கடவுளை முன்னிறுத்தாமல் மக்கள் இலக்கியமாக வளர்ந்து வந்திருப்பதை சங்க இலக்கியம் முதற்கொண்டு தற்கால இலக்கியம் வரை அவற்றின் வளர்ச்சியினை அறியமுடியும்.

இருப்பினும் வடமொழி இலக்கியங்களோடு ஒப்பிடும்போது தமிழில் கடவுளுக்கு எதிரான எண்ணங்கள் அதிகமாகத் தோன்றியிருப்பதைப் பார்க்கமுடிகிறது. சங்கமருவிய காலத்தில் எழுந்த திருக்குறள் உள்ளிட்ட நூல்களிலும் கடவுள் பெயர்கள் எங்கும் வெளிப்படாதிருக்கின்ற வகையில் எழுதியிருப்பது என்பதே மிகப்பெரிய கடவுள் மறுப்புக் கொள்கையாகவே நாம் காணமுடியும். அதற்கு பரிமேலழகர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் விளக்கம் தரும்போது 'மனு', 'கௌடில்யம்' முதலான வைதீக மதம் சார்ந்த நூல்களின் கருத்துகளோடு பொருத்திக் கூற முற்படுகின்றனர். ஆனால், பெரியார் உள்ளிட்டோர் திருக்குறளைத் திராவிட நூல் என்றும் அது ''ஆரிய பண்புகளுக்குத் திராவிட நாடு ஆட்பட்டிருந்த சமயத்தில் – திராவிடர்களை அதனின்று விடுவிக்கத் திராவிட பெரியார் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்ட நூல்தான் திருக்குறள் ஆகும்'' ((பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*1933)* என்றும் குறிப்பிடுவதைக் காணலாம். திருக்குறளுக்குப் பின்னால் வரும் சித்தர்களுடைய காலக்கட்டத்தில் கடவுள் எதிர்ப்பு இன்னும் சற்றே அதிகம் என்று சொல்லலாம்.
சித்தர்கள், ''போலிச் சடங்குகளையும் பொருளற்ற செயல்களையும் மூடநம்பிக்கைகளையும் கண்டித்து, மனிதநேயத்தைப் போற்றுவதையும் தம்கடமையாகக் கொண்டிருந்தனர். மனித வாழ்வு உயர்ந்தது என்றும் உடம்பைப் பேணிக்காக்க வேண்டும்'' என்பதும் (திருமூலர் வேமனர் பாடல்களில் காணப்படும் சமய, சமுதாயச் சிந்தனை, முனைவர் பா.அ.முனசாமி, ப.*71)* அவர்களுடைய தலையாய கொள்கைகளாக இருந்தன.

அப்படிப்பட்ட சித்தர்கள் வைதீக மரபைப் போற்றி, பேணி வளர்த்த சோழ அரசின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாகவும் இருந்துள்ளனர். இதுகுறித்து தொ.பரமசிவன், ''சோழ அரசின் வீழ்ச்சிக்கு முக்கியமான காரணங்களில் ஒன்று. அடித்தள மக்களைச் சார்ந்து நிற்கிற வணிக குழுக்களை அது புறந்தள்ளியதாகும். இதனால் மக்களுடைய எதிர்ப்பு அரசுக்கு உருவானது. மக்களுடைய எதிர்ப்பை அணிதிரட்டியவா்கள் சித்தர்கள்.'' (தமிழ்ப் பண்பாட்டில் மருத்துவம், தொ.பரமசிவன், ப.*8)* என்கிறார். சோழ மன்னர்களுடைய வைதீக ஆட்சி மக்கள் மத்தியில் இருந்த மருத்துவத்தைப் பிடுங்கியது. சமஸ்கிருதம் தெரிந்தால் மட்டும் மருத்துவ படிப்பு, உயர்சாதியார் மட்டுமே மருத்துவம் செய்தல் வேண்டும் என்ற கட்டுப்பாடுகளெல்லாம் சேர்ந்து மக்களைத் துண்டாடியது. கடவுளைக் காண்பதிலும் கோயிலுக்குள் நுழைவதிலும் கட்டுப்பாடுகளை விதித்தது. இதுபோன்ற செயல்கள் சித்தர்களைப் புரட்சியாளர்களாக உருவாக்கியது. அதுவே பின்னால் சோழர்களுடைய ஆட்சி கலைப்பிற்கான சூழலை உருகவாக்கியது என்பதை சித்தர்களைப் பற்றி ஆராயும்போது அறியலாம்.

இதே சமகாலத்தில் கருநாடகத்தில் ஒரு மிகப்பெரிய சிந்தனைமாற்றம் ஏற்பட்டது. பசவண்ணர் என்பவர், இந்தியா கண்ட மிக முக்கியமான சமய புரட்சியாளராக அறியப்பட்டார். பிராமணராகப் பிறந்து

லிங்காயத்தர் என்கிற சிவ வழிபாட்டை மட்டும் ஏற்றுக் கொண்ட தனி நெறியினை முன்வைத்தவர். சித்தர் நெறியோடு பொருந்திப் போகிறவகையில், கோயிலில் நுழைய தடை ஏற்படுத்திய மேல்சாதியினரின் ஆதிகத்திற்கு எதிராக 'காயகமே கைலாயா' (ஊனுடம்பே கைலாசம்) என்ற கோஷத்தை முன்வைத்தவர் தீண்டதகாதர்வர்கள், ஒதுக்கப்பட்டவர்கள், தலித்துகள், பிற்படுத்தப்பட்டவர்கள் என பல சாதியினரையும் அவரின் அடித்தொற்றி ஒன்று திரட்டிய வலிமை பசவண்ணருக்கு இருந்தது.

அவர் விக்கிரக வழிபாட்டினையும் பல தெய்வ வழிபாட்டினையும் கண்டித்தவர், கோயில் வழிபாட்டையும் சடங்கு, சம்பிரதாயம் மற்றும் சாதிமுறைகளையும் ஆதரிப்பதில்லை, பூணூல் தரிப்பதற்குப் பக்தியில் மனதைக் கட்டுங்கள், பேதம் காண்பது பாவம், கள்குடிப்பதைக் கைவிடுதல், விதவை மறுமணத்தை ஆதரிப்பது, புலால் உண்ணாதிருந்தால் மேல்சாதி ஆகிவிடலாம் முதலான பல்வேறு கொள்கைகளை முன்னெடுத்தவர்,. வீரசைவர், கள் என்பவர்களையும் இணைத்துக் கொண்டு சமூக, மக்கள் முன்னேற்றத்தை முன்னெடுத்தவர்,. மிகப்பெரிய வகையில் சமய புரட்சியை மேற்கொண்டவராக அறியப்படுகிறார். அவரால் உருவாக்கப்பட்ட லிங்காயத்தர்கள் கருநாடகம், மகாராட்டிரம், மத்தியப் பிரதேசம், குஜராத், தெலுங்கான, ஆந்திரபிரதேஷ் மற்றும் தமிழகத்தின் சில மாவட்டங்களிலும் பரவியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது. அவருடைய சிந்தனைத் தாக்கம் கன்னட இலக்கியங்களிலும் வெளிப்பட்டன. இதற்கு தமிழகத்தில் இருந்த சித்தர் மரபு சிந்தனைகள் காரணமாக இருந்தன என்லாம்.



இவ்வாறு பசவண்ணரால் ஆரம்பிக்கபட்ட லிங்காயத்தர் அமைப்பின் கொள்கைகள் தற்போது நீர்த்துப்போய்விட்டதே என்றே கூறலாம். லிங்காயத்திற்கான கடவுள் சிவன், உருவ வழிபாடு கூடாது என்று லிங்க உருவத்தை ஏற்று சைவ வழிபாட்டின் ஒரு எச்சமாக இருப்பதும், பூசை, சடங்குகள் கூடாது என்று அம்மக்கள் பூணூல் அணிய பக்தி செலுத்துதல் வேண்டும், மாமிசம் உண்ணக்கூடாது முதலான உணவுமுறை கட்டுப்பாடு, சிவனை மட்டுமே வணங்குவோம் என்று கூறிப் பின்னால் மடாதிபதிகள் தெய்வத்திற்குச் சமமானர், என்பது போன்ற கருத்துகளால் பிராமணியம் குறிப்பிடும் பழக்கவழக்கங்களுடன் ஒத்துப்போகின்ற தன்மையைப் பின்பற்றி வந்துள்ளனர். இதனால் காலப்போக்கில் அனைத்து சாதி ஒடுக்கப்பட்ட மக்களையும் இணைப்பதற்காக ஆரம்பிக்கப்பட்ட அவருடைய இயக்கத்தில் உள்ள மக்களின் மனநிலையில் உயர்வு, தாழ்வு பேதைமை உருவாக வழி ஏற்பட்டது எனலாம். மேலும், 'லிங்காயத்தர் மதம் தனிமதம்' என்கிற வகையில் அரசியல் சட்ட சாசனத்தில் தங்களுக்கான கோரிக்கைகளை நிறைவேற்றிக்கொள்ளும் வகையில் அரசியல் ரீதியாகவும் பலம் பொருந்தியவா்களாகவும் உயர்ந்துள்ள அம்மக்களிடையே பசவண்ணரின் கொள்கைகளைக் காணமுடியுமா? என்பது சற்றே சிந்திக்கதக்க வகையில் உள்ளது.

இதேபோல் தமிழகத்திலும் வைதீக மதம் மீதான விமர்சனத்தைப் பதினெண் சித்தர்களின் இலக்கியங்கள் மட்டும் செய்யவில்லை. வைதீக மதத்திற்குள் பக்திமரபை வளர்த்தவர்களான சித்தர்களாகக் கருதப்பட்ட திருமூலர் தொடங்கி அருணகிரிநாதர், தாயுமானவார் இராமலிங்கர் முதலான பலரும் செய்துள்ளனர்.

திருமூலர், 'ஒன்றேகுலம் ஒருவனே தெய்வம்' என்ற புரட்சிகரமான அறிவிப்பையும் 'சைவத் தமிழ்த் தேசியத்தையும்' முன்வைத்தவராக உள்ளார். ''புற வழிபாட்டை மறுத்து அக வழிபாட்டை முன்வைக்கிறார். இது புறவழிபாட்டைப் பிரபலப்படுத்திய வைதீக சைவத்தை எதிர்த்த குரல் என்பதில் சந்தேகமில்லை. கோயில், வேள்வி, விக்கிரக ஆராதனை, சடங்குகள், ஆசாரங்கள் முதலானவைப் புறவழிபாட்டிற்குள் அடங்குபவை. அகவழிபாட்டிற்கு ஆதாரம் மனித உடலாகும். உள்ளமே கருவறை உடம்பே ஆலயம், வாய்கோபுரவாசல், உயிரே சிவலிங்கம், ஐம்புலன்களே கதிர்மணி விளக்குகள் (*1799*) என்று மனித உடம்பை நடமாடும் கோயிலாக மூலர் உருவகம் செய்துள்ளார்.'' (ராஜ்கௌதமன், கண்மூடி வழக்கம் எலாம் மண்மூடிப்போக..! சி.இராமலிங்கம் (*1823- 1874*), ப.*48*) என்றும்,

''அந்தணர்களுக்காக அக்கிரகாரங்களையும் மாடமாளிகைகளையும் அமைத்துக் கொடுப்பதால் என்ன பயன்? மகேசுவரனுக்குக் கொடுப்பதற்கு இவை நிகராகுமா? என்று கேட்டுள்ளார் (*1833*) இதனைத் தொடர்ந்து, கோடி அந்தணர்களுக்கு அன்னதானம் செய்வதைவிட, திருநீறு பூசிய தொண்டர் சிலருக்கு உண்ண உணவு தருவதால் கிடைக்கும் பயன் பெரியது. அந்த உணவு ஒரு பிடிச் சோற்றளவாக இருந்தாலும் சரி (*1834*) என்று சித்தர்களின் வைதீக எதிர்ப்பை மூலர் எடுத்துரைக்கின்றார்'' (ராஜ்கௌதமன், கண்மூடி வழக்கம் எலாம் மண்மூடிப்போக..! சி.இராமலிங்கம் (*1823- 1874*), ப.*48*) என்றும் ராஜ்கௌதமன் கூறுகிறார்.



இந்தக் கொள்கைகளில் அருணிகிரியாரும் தாயுமானவரும் இராமலிங்கரும் ஒன்றுபடுகின்றனர். சித்தர்கள் கோயில்வழிபாடும், விக்கிரக ஆராதனையும் நிராகரிக்கப்பட்டு, உடலைப் பேணுவது, சாதிசமய சழக்குகளை கைவிடுவது, எல்லா உயிர்களிடத்திலும் அன்பு காட்டுவது முதலான பல்வேறு கொள்கைகளை முன்வைத்தனர். அதிலும் இராமலிங்கர் ஆரியத்திற்கு எதிராக காவிஉடை தரிக்காது வெள்ளை ஆடை அணிந்ததோடு மட்டுமல்லாமல் சன்மார்க்க சங்கம் ஆரம்பித்து அவற்றின் கொள்கைகளாக,

- **''உயிர்களுக்கெல்லாம் அன்பு செய்தல்**
- **பொய் கலவாத வாய்மை பேசுதல்**
- **பேசுதல் போல் செயல்படுதல்**
- **இறந்த உயிர்களை மீட்டும் எழுப்புதல்** (*4079-80*)
- **உயர்வு தாழ்வின்றி அனைவரும் சமத்துவ நிலையில் கூடி உலகியல் நடைபெறுதல்**
- **அழியாத உடலோடு சிவத்துடன் கலத்தல்**
- **உலகமெலாம் ஒரே ஒழுக்கம் உறுதல்**
- **கொலை, புலை சிறிதுமின்றி எல்லா உயிர்களும் உவந்திருத்தல்** (*4082-83*)
- **விருப்பு வெறுப்பு நீங்குதல்** (*4084-85*)
- **ஆறு அந்தங்கள் எல்லாம் அறிந்து அடைதல்**
- **உயிர்களுக்கு இதம் புரிதல்**
- **சாதி சமய விகற்பங்கள் நீங்கிச் சகலரும் சன்மார்க்கப் பொது நிலையை அடைதல்**
- **சித்தாந்த வேதாந்த பொதுமைநிலை சிறத்தல்**
- **எல்லா உயிர்களும் இன்பமடைதல்** (*4087-88*)'' (ராஜ்கௌதமன், கண்மூடி வழக்கம்

எல்லாம் மண்மூடிப்போக..! சி.இராமலிங்கம் (*1823- 1874*), ப.*119*) முதலானவற்றோடு
'சாத்திரங்கள், புராணங்கள் ஆகியவை முடிவான உண்மையைக் கூற மாட்டா, காது, மூக்குக் குத்துதல் (நகை அணிய) கூடாது, இறந்தோரை புதைக்க வேண்டும். கருமாதி, திதி கூடாது (ராஜ்கௌதமன், கண்மூடி வழக்கம் எலாம் மண்மூடிப்போக..! சி.இராமலிங்கம் (*1823- 1874*), ப.*121*) என்று பல

கொள்கைகளை வைதீகத்திற்கெதிராக முன்வைத்துள்ளனர். இவையாவும் சித்தர்கள் முன்வைத்த கருத்துகளோடு பொருந்தி போகின்றன. அவர்களுடைய இலக்கியங்கள் இன்றும் நம்மிடையே ஏராளமான முற்போக்கு எண்ணங்களை உருவாக்குவதோடு அரசியல் தெளிவிற்கும் பயனுள்ள வகையில் இருப்பது கண்கூடு.

இவருக்குப் பின்னால் அயோத்திதாசர் (காத்தவராயன்) *(1845-1914)* என்கிற ஆங்கிலம், வடமொழியோடு பாலிமொழி அறிவும் நிரம்ப பெற்ற சிந்தனையாளர் வருகிறார். இவருடைய குடும்பம் வைணவ மரபைப் பின்பற்றுபவா்களாக இருந்தனர். இவரும் அத்வைத வேதாந்தத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவராக இருந்தவர். *1892*-ல் விஷ்ணு, சிவன் கோவில்களில் நுழைய அனுமதி கேட்டு மறுக்கப்பட்டதால் அவதிப்பட்டவா், நாம் யார்? இந்துக்களா? சாதி இழிவுகள் ஏன் நம்மீது திணிக்கப்படுகிறது? என்று எண்ணி வேதம், இந்து, பிராமணியம், சடங்குவாதம் முதலானவற்றைக் கேள்விக்குட்படுத்தினார். *1890*-களில் பௌத்தம் சார்ந்தார். அவர் திராவிடப்பாண்டியன் *(1185)*, ஒரு பைசாத் தமிழன் (தமிழன், *1907-1914)* முதலான இதழ்களையும் ஆரம்பித்து நடத்தி வந்தார். ஏராளமான நூல்களையும் கட்டுரைகளையும் எழுதியவர். அவற்றில் அரிச்சந்திரன் பொய்கள், இந்திரர் தேச சரித்திரம், இந்திரர் தேச பௌத்தர்கள் பண்டிகை விவரம், சாக்கிய முனி வரலாறு, நந்தன் சரித்திர தந்திரம், முருக கடவுள் வரலாறு, யதார்த்த பிராமண வேதாந்த விவரம், விபூதி ஆராய்ச்சி, வேஷ பிராமண வேதாந்த விவரம் முதலான நூல்கள் ஆரிய சிந்தனைக்கு எதிராகவும் பௌத்தத்திற்கு ஆதரவாகவும் இருந்ததை அறியலாம். திராவிட இயக்க முன்னோடிகளில் ஒருவராகவும் அறியப்படுகிறார். (அயோத்திதாசர் விக்கிப்பீடியா)

இவா்போன்ற பலரும் தம்முடைய படைப்புகளின் வாயிலாக மதத்திற்கு வெளியேயும் உள்ளேயும் மாற்று சிந்தனைகளை முன்வைத்ததோடு கடவுள், மத சிந்தனைகளுக்கு எதிராகவும் பலரும் வெளிப்படையாகவும் பேசியும் எழுதியும் வந்திருக்கின்றனர். இது இந்திய அளவில் ஐரோப்பியர் காலத்திலும் ஆங்காங்கே தோன்றின.

கடவுளுக்கெதிரான இலக்கியங்கள் ஐரோப்பியர் காலத்திலும் விடுதலை காலக்கட்டங்களிலும் தமிழில் மட்டுமே அதிகமான அளவில் தோன்றின என்றே கூறலாம். அவ்விலக்கியங்களுக்கு முன்னோடியாக பலரும் இருந்தாலும் அதை மிக தீவிரமாக இயக்க அரசியல் பலத்துடன் வளர்த்தெடுத்தவா் ஈ.வெ.ராமசாமி என்கிற தந்தை பெரியார் *(1879 -1973)*. அவரே இருபதாம் நூற்றாண்டில் தமிழில் மட்டுமில்லாமல் தேசிய அளவிலும் மிகப்பெரிய சிந்தனை மாற்றத்தைக் கொண்டுவந்தவா். அவருடைய எழுத்துக்கள், உரையாடல்கள் மற்றும் விவாதங்களின் விளைவாக தேசிய அளவிலும் அரசியல் மாற்றங்களும் உருவானது என்பதும் அறிந்ததே.

பெரியார் இந்திய காங்கிரஸில் இருந்து பிரமணர், பிரமணர் அல்லாதார் என்கிற வகையில் ஏற்பட்ட கசப்பான சம்பவங்களால் வெளியேறினார். 'தேசப்பகத்ர்களையும் தேசிய வீரர்களையும் உற்பத்தி செய்வதற்கு வி.வி.எஸ் அய்யரால் நடத்தப்பட்டு வந்த பரத்துவாச ஆசிரமத்திற்கு (குருகுலத்திற்கு) காங்கிரசு கமிட்டியும் உதவி செய்து வந்தது. அக்குருகுலம்தான் பெரியார் காங்சிரசில் இருந்து வெளியேறுவதற்கான காரணமாக இருந்தது. அங்கு நடந்த ஏற்றத் தாழ்வுகள், பாகுபாடுகள் தான் அவரைக் காங்கிரசில் இருந்து வெளியேற்றியது. அதாவது, *1.* சாப்பாட்டில் சாதி வித்தியாசம், *2.* படிப்பில்

சாதி வித்தியாசம், 3. கடவுள் பிரார்த்தனையில் சாதி வித்தியாசமென்ற' (பார்க்க: பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.4:2, பக்.3938-3940) %ன்று சிக்கல்கள்தான் அதுவரை கோயில் அறிநிலையத்துறை காரிய கமிட்டியில் இருந்து வந்தவரான பெரியாரைக் கடவுள் குறித்தும், மதம் குறித்தும், சுயமரியாதை குறித்தும் சிந்திக்கத் தூண்டிய இடங்களாகும். 1922 இல் காங்கிரஸ் மகாநாட்டில் இராமாயணத்தையும் மநுதர்ம சாஸ்திரத்தையும் நெருப்பில் இட்டுப் பொசுக்கவேண்டும் என்ற கூறிய (ப.3857) நிகழ்விற்குப் பிறகு 1929-ல் செங்கற்பட்டில் முதல் சுயமரியாதை மாகாண மாநாடு நடந்து முடிந்தது குறிப்பிடதக்கது. அக்குருகுலத்தில் ஏற்பட்ட அனுவத்திற்குப் பின்னால் கடவுள், மதம், புராணங்கள், இதிகாசங்கள், மூடநம்பிக்கைகள் பழக்கங்கள், மூட பண்டிகைகள் மற்றும் சாதி குறித்தான தம்முடைய எதிர்ப்புகளை மிகவும் திடமாகவும் தெளிவாகவும் முன்வைத்து வந்துள்ளார்.

அந்தவகையில் பக்தி, தொண்டு, அகிம்சை என்பதற்கு ''மக்களிடம் காட்டும் அன்புதான் நாம் பக்தி செய்யத்தக்க கடவுள் அவா்களுக்குச் செய்யும் தொண்டுதான் கடவுள்தொண்டு. அம்மக்களின் விடுதலைதான் மோட்சம். அச்சீவன்களிடம் கருணைகாட்டுவதும் அவைகள் வேதனைப்படாமலிருப்பதுந்தான் அகிம்சை. மாமிசம் சாப்பிடுவதில்லை என்பது மாத்திரமே அகிம்சையாகாது'' (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.4-1, ப.1795) என்கிறார்.

மதம் பற்றிப் பேசும்போது, ஜோதிடவியல் துறைப் பேராசிரியரான டாக்டர் டி.விமலன் என்கிறவர் நினைவுக்கு வருகிறார். அவா் தன்னுடைய வலையொளி (லழரவரடிந) பக்கத்தில் பேசிக்கொண்டிருக்கும்போது, 'சைவம், வைணவம் என்கிற சமயம் இந்து சமயத்தின் உட்பிரிவாக இருப்பதற்கு வாய்ப்பில்லை. இந்து மதம் என்கிற ஒரு மதமே கிடையாது. இந்து மதம் என்ற சொல்லப்படுகிற ஒன்றிற்குக் கடவுள் என்பதே கிடையாது. அவர்களிடம் இருப்பதெல்லாம் வேதங்களும், அக்னியை மையமிட்ட வேள்வியுமே ஆகும் என்கிறார். ஆரிய மதத்திற்கு தனிக்கோயில் என்பதே இல்லை. அவா்கள் வேதங்களைக் கொண்டு யாகம் நடத்தி வழிபாட்டிற்கென்று ஆகமங்களை உருவாக்கி சைவம், வைணவ கோயில்களைத் தங்களது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தனர் என்கிறார். அதற்குச் சான்றாக, சைவ சமயமும் வைணவ சமயமும் தமிழர் மதம். அதற்கான சான்று தமிழர்களிடம் உள்ள தேவாரமும், திருவாசகமும், நாலாயிரத் திவ்ய பிரபந்தங்களுமேயாகும். வட இந்தியாவில் இதுபோன்றதொரு தேவாராம், திருவாசகங்களையோ, நாலாயிர திவ்ய பிரபந்தங்களையோ காணக் கிடையாது. அதேபோல் தென்னிந்தியாவில் காணப்படும் சைவ, வைணவ திருத்தலங்களைப்போல் வட இந்தியாவில் எங்கும் திருத்தலங்களைக் காண இயலாது என்றும் குறிப்பிடுவார். இன்னும் சொல்வதென்றால் தென்னிந்திய சைவத்திருத்தலங்களும், வைணவ திருத்தலங்களும் ஒரு நோா்கோட்டில் அமைந்திருப்பதைக் காணலாம் என்கிறார்.' (www.youtube.com/watch?v=n85QWCQhFy4) இது ஒரு வகையில் சற்றே சிந்திக்க வேண்டிய ஒன்றாகவும் உள்ளது. ஆனால் பெரியார் சைவமும் வைணவமும் தமிழர் மதமாக ஏற்றுக்கொள்வதில்லை. அதற்கான சான்றுகளையும் முன்வைக்கிறார்.

வேதத்தையும் வேள்வியையும் தள்ளிவிட்டு, அவற்றைக் காப்பாற்ற வந்த கடவுள்களையும் தள்ளிவிட்டு, ஆரியர்களால் புனையப்பட்ட புராணங்களையும் தள்ளிவிட்டால், தேவாரத்திற்கோ, திருவாசகத்திற்கோ

மற்றும் ‘தமிழ்மறை’க்கோ எங்காவது இடமிருக்கிறதா என்றும் கடவுள் என்று சொல்லப்படுகிற சைவக் கடவுள்கள் பெயரும், அக்கடவுள்களின் மனைவியர், பிள்ளைகளின் பெயரும் ஆரிய பெயர்களே தவிர வேறில்லை என்றும் அப்பெயர்களுக்கு ஆரியர்களால் கற்பிக்கப்பட்ட கதைகள் ஆதாரம் என்றும் புராணங்கள் பெரும்பாலும் ஆரிய மூலத்திலிருந்து மொழி பெயர்க்கபட்டிருப்பதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும் என்கிறார்.

தென்னாட்டில் மாமிசம் உண்ணாதவருக்கு சைவன் என்று சொல்லப்படுகின்றது. அதுபோல், வடநாட்டில் மாமிசம் உண்ணாதவருக்கு வைணவன் என்று சொல்வதாகக் கூறுகிறார். மேலும், சைவ வைணவ கடவுள்கள் மத்திய ஆசியாவிலிருந்து காப்பியடிக்கப்பட்டது என்கிறார். வேதத்தில் காணப்படுகிற அத்தனைத் தேவர்களும் எகிப்தியர், கிரேக்கர், காக்கேசிய மலைச்சாரலில் வசித்த காக்கேசியர்கள் முதலானவர˙கள் வணங்கி வந்ததாகக் கருதப்படும் தெய்வங்களேயாகும் என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார்.

| | |
|---|---|
| **இந்தியக் கடவுள் சிவன், இந்திரன.** | **-மேல்நாட்டுக் கடவுள் .ஜுப்பிட்ட** |
| **இந்தியக் கடவுள்- கிருஷ்ணன.** | **மேல்நாட்டுக் கடவுள்- அப்போலோ** |
| **பிரம்மா -** | **சாட்டர்னஸ்** |
| **நாரதன் -** | **மெர்குரியன்** |
| **யமன் -** | **மைனாஸ்** |
| **இராமன் -** | **பர்கஸ்** |
| **வருணன் -** | **நெப்டியூன்** |
| **கந்தன் -** | **மார்ஸ்** |
| **சூரியன் -** | **சோல்** |

(பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, பக்.*2230-31)*

அதிலும் சிவன் பற்றிக் குறிப்பிடும்போது, தீயிடம் ஏற்பட்ட அச்சத்தால் சிவந்தவன் என்ற சொல்லால் சிவன் எனும் பெயரிட்டழைத்தனர் என்கிறார். ‘‘பாபிலோன் மக்கள் வழிபட்ட ‘தந்தைக் கடவுள்’, கிரேக்க நாட்டு மக்களது வழிபாட்டுக் கடவுளை ஒத்திருப்பதைக் காணலாம். அங்குள்ள பழைய நகரம் ஒன்றுக்கு ‘சிவன்’ என்றே பெயர் இப்போதும் அப்படியே வழங்குகிறது. எனவே, சிவன் ‘காப்பி’யடிக்கப்பட்ட பெயர் என்று கொள்ளலாம்.

சிவன் பாம்பை அணிபவராகக் குறிப்பிடுவதும் மேல்நாட்டுத் தொடர்புடையதே. மொகஞ்சதாரோவிலும் சிவக் கடவுள் பாம்போடு காணப்படுவதும் இடப வணக்கத்தைப்போல் பாம்பு வணக்கமும் இருந்திருக்கிறது. ஞாயிறு வணக்கம், சிவ வணக்கமுள்ள எல்லா நாடுகளிலும் பாம்பு வணக்கமும் காணப்படுகிறதாதலின், பாம்புகள் சிவலிங்கத்தோடு – சிவன் கடவுளோடு தொடர்புடையனவாகவே உள்ளதைக் காணலாம்.

சிவனுடைய கைகளில் இருப்பதுபோன்ற சூலம், மழு (கைக் கோடரி) முதலிய ஆயுதங்கள் மேற்கு ஆசியாவில் கிரேத்தா முதலிய நாடுகளில் வழிபட்ட கடவுள்களின் கையிலுமிருந்திருக்கின்றன’’ (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*2229)* என்றும் தகுந்த சான்றுகளுடன் பொருத்திக்காட்டுகிறார்.

மேலும், இந்து மதம் பற்றிப் பேசும்போது இந்து என்பது எந்த பாஷை வார்த்தை என்றும்? அதற்கு வேதம் உள்ளிட்ட எங்காவது குறிப்பிருக்கிறதா என்றும் கேட்கிறார். அதோடு இந்து என்பதற்கான பொருள் என்ன? என்றும் அதனுடைய ஆசாமி யார் என்றும் வினா எழுப்பி, ஒவ்வொரு மதத்திற்கும்

பெயர் வைப்பு முறை என்பது ஏதோ ஒரு காரணத்தைப் பற்றி வந்திருக்கிறது என்றும் சான்றாக, இராமனுஜர் மதம், சங்கராச்சாரிய மதம், கிறிஸ்து பிறந்தார் ஆகையால் கிறித்துவ மதம், முகமது நபி பிறந்தார் ஆகையால் மகமதிய மதம், புத்தர் பிறந்தார் புத்த மதம் என்றும் இந்து மதத்திற்கான கர்த்தா யார்? என்றும் வினா எழுப்பி அப்படி ஒரு மதமே இருந்ததில்லை என்றும் கூறுகிறார்.

*‘‘*வெள்ளைக்கார அரசாங்க முறையும் பார்ப்பனர்களின் ஆதிக்கமும் நமது மானத்திற்கும், அடிமைத் தனத்திற்கும், தரித்திரத்திற்கும் ஆதாரமாயிருக்கின்றன*’’* (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*1821)* என்றும் ‘இந்திய மக்கள் கல்வி அறிவில்லாமல் இருப்பதற்கும், அறிவு, ஆற்றல், ஒழுக்கம் ஆகியவற்றிற்கு நமது மதமோ மதாச்சாரியர்களோ அல்லது சாமிகளோ ஏற்றதாக இருக்கின்றனவா என்பதைப் பாரபட்சம் விருப்ப வெறுப்பில்லாமல் யோசித்துப் பார்க்கும்படியும்*’* கூறுகிறார். ‘மதம் மக்களுக்குக் கூட்டு வாழ்க்கையையும், ஒற்றுமையையும், சகிப்புத் தன்மையையும், வாழ்க்கை ஒழுங்குகளையும் ஒழுக்கங்களையும் போதித்து வருகின்றதா என்றும் கேட்கிறார்*’*. உலகத்தில் மதம் சம்பந்தமான கற்புக்கரசிகள் முதலிய பெண்களிடத்தில் காணும் பொய், பித்தலாட்டம், ஏமாற்று, விபச்சாரம், பலாத்தகாரம் ஆகியவை வேறு மதத்தில் – மத ஆதாரங்களில் காணப்படுவதில்லை. இதற்குத் தகுந்த சான்றுகளை புராண, இதிகாசங்களைக் கொண்டு விளக்குகிறார்.

இந்துமதம் குறித்தும், கிறித்துவ மதம் குறித்தும் தம்முடைய காத்திரமான விமர்சனத்தை முன்வைக்கும் அதேவேளையில் இஸ்லாம் மதத்தில் உள்ள மூடநம்பிக்கைகளையும் சீர்திருத்தி கொள்வதன் வாயிலாக அது ஒரு நல்ல மதமாக உருவாகும் என்றும் பௌத்த மதக் கருத்துக்கள் மனித தர்மத்திற்கும் அனுவத்திற்கும் ஒத்ததாக இருக்குமென்று சொல்லபடுவதாகவும் குறிப்பிட்டுச் செல்கின்றார்.

மேலும், நாம் கல்வி, வளர்ச்சி, பொருளாதார மேன்மை ஆகியவற்றில் வளர்ச்சிபெறாமைக்கு மதமே அடிப்படை காரணம் என்பதைப் புரிந்து கொண்டு அதற்காக சுயமரியாதை இயக்கம் தொடர்ந்து போராடி வந்ததையும் நாம் காணலாம். அவருடைய சிந்தனை அண்ணா, கலைஞர் கருணாநிதி, இரட்டைமலை சீனிவாசன், கண்ணதாசன், பாரதிதாசன் முதலான பலரின் படைப்புகளிலும் வெளிப்பட்டன.

கடவுள் உணர்ச்சி வளர்ந்தால் அறிவும் ஆராய்ச்சியும் மங்கும். கடவுளின் பெயரால் மக்கள் பலவீன அடைந்திருக்கிறார்கள். ஆகையால்தான்
தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார் என்ற சொல்லப்படும் கடவுள், மனித உருவத்தோடு இருப்பதாகவும் பெண்டாட்டி, பிள்ளை, தாய்தகப்பன், வீடுவாசல், சொத்து சுகம் உண்டென்றும் நம்பகிறான். கல்யாணம், ருதுசாந்தி, படுக்கைவீடு, சீமந்தம், பிள்ளைப்பேறு உண்டென்றும் நினைக்கிறான். அதனால்தான் ஆயிரக்கணக்கான கடவுள்கள், ஆயிரக்கணக்கான பெயர்களினால் இருக்கிறதாகவும் அபிஷேகம், பூசை, தீபாராதனை, உற்சவம் செய்வதுதான் பக்தி என்பதாகவும் நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள். இதனால் சமூகம் உருப்படியாவதற்கான மார்க்கம் இல்லை. மனிதர்கள் இவ்வளவு அக்கிரமங்கள் செய்வதற்குக் காரணம், கடவுள் என்றால் என்ன? என்பதை அறியாமலிருப்பதாலேயாகும். கடவுள் பற்றிச் சொல்லும் மதப்புரட்டுகளை நம்பி மனிதர்கள் நடைபிணமாய் வாழும்படி இருக்கிறார்கள் என்றும் கூறுகிறார்.

''அது ஒரு உருவமல்ல, ஒரு உருப்படி அல்ல என்றும், உற்பத்தி, வாழ்வு, அழிவு என்னும் தன்மையையும் அத்தன்மைக்கு ஆதாரமான குற்றங்களையுந்தான் கடவுள் என்றோ, ஆண்டவன் என்றோ கருதுகிறோம் என்பதாகவும், தானாகத் தோன்றிற்று, தானக வாழ்ந்தது, தானாக அழிகின்றது என்கின்ற யாவும் இயற்கையென்றும், அந்த இயற்கைக்குத்தான் கடவுள், ஆண்டவன், சாமி,. தெய்வம் என்றும் சொல்லுகின்றோம் என்பதாகவும் மற்றும் அந்த இயற்கைத் தோற்றங்களுக்கு ஏதாவது ஒரு காரணமோ அல்லது ஒரு சக்தியோ இருக்கவேண்டுமே என்றும் அந்தக் காரணத்திற்கோ சக்திக்கோதான் கடவுள், சாமி, ஆண்டவன், தெய்வம் என்கின்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பதாகவும் சொல்லிக்கொண்டு மாத்திரம் இருப்பவா்களிடத்தில் நமக்கு இப்போது அவ்வளவாகத் தகராறு இல்லை'' (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*1815)* என்றும் விளக்கம் தருகிறார்.

அதாவது உருவத்தோடும், பிறப்பு கற்பிதத்தோடும், உயர்வுதாழ்வைப் போற்றியும் மனிதர்களைப் பிரித்தும் வைத்திருக்கிற ஒன்றைக் கடவுளாக ஏற்கமுடியாது. உள்ளதைப் பங்கிடவும் உழைப்பைப் பங்கிடவுமான நிலை ஏற்பட்டால் கடவுளுக்கு வேலையோ, அவசியமோ இருக்காது என்கிறார்.

கடவுள் விஷயத்தில் மக்கள் பொய்யர்களாக, அயோக்கியர்களாக, முட்டாளாகத்தான் இருக்கமுடியும் என்றும் அவற்றை விட்டொழித்தால், மக்கள் வாழ்க்கைத் தரம் உயரும். ஒழுக்கம், நேர்மை, நல்லெண்ணம், மனிதாபிமானம், அன்பு பரஸ்பர உதவி முதலியவைத் தானாக வளரும். அப்பொழுதுதான் குறைவற்ற செல்வத்துடனும் நிறைவுற்ற ஆயுளுடனும் மக்கள் வாழ்வார்கள். கடவுள் என்பதும் பிரார்த்தனை என்பதும், கடவுள் அருள் என்பதும் கைத்தேர்ந்த பித்தலாட்டக்காரர்களின் மோசடி, தந்திரம் என்றுதான் சொல்லவேண்டும் என்கிறார்.

இராமலிங்கசாமி சொன்னதைபோல அறிவுதான் கடவுள் என்றும் சாதி, சமயம், மோட்சம், நரகம், மோட்ச நரகங்களைக் கொடுக்கும் கடவுள்கள் ஆகியவை எல்லாம் பித்தலாட்டங்கள் என்றும் பச்சையாகச் சொல்லிவிட்டார் என்று குறிப்பிட்டதோடு, அன்பு, அறிவு, உண்மை ஆகியவற்றை எவன் ஒருவன் கடைபிடிக்கிறானோ அவனுக்கே கடவுள் என்று ஒருவர் இருந்தால் கருணைக்காட்டுவார் என்றும் கூறுகிறார்.

புராணங்கள், இதிகாசங்கள் பற்றி கூறும் பெரியார், 'புராணங்கள், இதிகாசங்கள், தேவசாஸ்திரங்கள், ஸ்மிருதிகள் என்பவைகளுள்பட ஆரியர்கள் தங்கள் உயர்வுக்கும் – திராவிடர்களை இழிவுப்படுத்தவும் செய்து கொண்டவைகளே தவிர வேறில்லை'' (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*1933)* என்கிறார். திராவிடர்களால் எழுதப்பட்ட உதாரணத்திற்கு திருக்குறளை எடுத்துக்கொண்டால் அது ஒழுக்கத்தையும், அறிவையும் பற்றற்ற தன்மையையும் கடவுளாகக் காட்டி செல்வதாகவும் அதுவே 'மனித தர்மநூல்' என்றும் குறிப்பிடுகிறார். ஆரிய மையமிட்டு உருவான இதிகாச, புராணங்களைக் காணும்போது ஒவ்வொரு பாத்திரமும் ஒழுக்கத்துடன், நேர்மையுடனும் பற்றுள்ளவகையிலும் இல்லை என்றே கூறுகிறார். இராமாயணத்தில் வரும் ராமன் உள்ளிட்ட ஏனைய மற்றும் பாரத கதைகளில் வரும் பாண்டவா்கள் உள்ளிட்ட அனைவரது பிறப்பு, வளர்ப்பு, குணநலன்களைக் கதையினைக் கொண்டு ஆராயும்போது அது யதார்த்தத்திற்கு முரணான வகையிலும்

ஒழுக்கமற்ற வகையிலும் குரோத மனப்பான்மையுடனும் சூழ்ச்சி, வஞ்சம், தந்திரம் ஆகிய குணங்களும் தெய்வத் தன்மையும் அதிகமாக இருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். அவற்றில் ஆபாச தன்மைகள் அதிகம் இருப்பதாகவும் அடையாளப்படுத்துகிறார்.

புராணங்களில் காணப்படும் ஆரிய கதாபத்திரத்தில் வரும் பெண்களில் கன்னிகைகளுக்குச் சான்றாகக் திராவிட இனத்தைச் சார்ந்தவர்களே உள்ளனர் என்றும் பார்ப்பன படைப்பாளாரான வால்மீகி முதலானோர் ராமன், சீதை, இலட்சமணன் ஆகியவர்களை மிகவும் கீழ்த்தரமாகவும் இழிவாகவும் சிருஷ்டிக்க அவர்களுடைய சூழ்ச்சிக்குப் பலியான கம்பர் கடவுளாகப் படைத்திருப்பது எவ்வகையில்? என்றும் 'இனத் துரோகி கம்பன்' (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*1938)* என்றும் சாடுகிறார்.

அவர் மிகச்சிறந்த ஆய்வாளராகவும் இருக்கிறார். அதாவது, கந்தபுராணத்தையும் இராமாணத்தையும் ஆய்வு செய்த பெரியார் கந்தபுராணமே தமிழில் முதலில் தோன்றியிருக்க வேண்டும். அதற்குப் பிறகுதான் இராமாயணம் தோன்றியிருக்கும். கந்தபுராண கருத்தை காப்பியடித்து கம்பர் இராமாயணத்தை உருவாக்கியிருக்கிறார் என்றும் சான்றுகாட்டி விளக்குகிறார்.

மூடநம்பிக்கைகள் பற்றி கூறும் பெரியார் ''ஒரு நம்பிக்கை மிகவும் பழைமையானது என்ற ஒரே காரணத்தினால் மட்டும் அது ஆதாரமுடைய உண்மையாகிவிடமாட்டாது'' (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*2068)* என்று கடவுள் நம்பிக்கை மிக நீண்ட காலமாகத் தொடர்ந்த வருவதையும் அது உண்மையான ஒன்றாக இருக்க முடியுமா? என்றும் கேட்கிறார். ரஷ்யா, ஜப்பான் முதலிய நாடுகளெல்லாம் முதலில் மதக் கொடுமைகளை ஒழித்து மக்களைக் கண்விழிக்கச் செய்த பின்பே நாட்டையாளும் தகுதியை அடைந்தனர். நமது நாட்டிலுள்ள எல்லா கெட்டக் காரியங்களுக்கும் கடவுள்களே காரணம். அதாவது சூது, வாது, வஞ்சகம், பொய், புரட்டு, திருட்டு, விபச்சாரம், குடி, கூத்தி, கொலை, ஜீவ இம்சை முதலிய எதை எடுத்துக்கொண்டாலும் சில கடவுள்களிடத்தில் மொத்தமாகவும், சில கடவுள்களிடத்தில் தனித்தனியாகவும், சில்லரையாகவும் இருப்பதைக் காணலாம். ஆகையால் மோசமான பண்புகளைக்கொண்ட கடவுள்களை நம்பி வீண்போக வேண்டாம் என்கிறார்.

மேலும், கடவுள் திருத்தலங்களில் தாசிகளை முன்னிறுத்துவது, சிவன், திருமால் முதலான கடவுள்களின் அவதார கதைகளில் உள்ள ஆபாசங்களை முன்வைப்பது முதலான தன்மைகளுக்காகவும் கடவுள் என்கிற மூடநம்பிக்கையற்று இருங்கள் என்கிறார். சோதிடத்தின் மீதான அவநம்பிக்கையையும் பூர்வ ஜென்ம பலன்கள், மாமிசம் உண்ணக்கூடாது என்று கூறுவதையும் மறுக்கிறார். மொத்தத்தில் கடவுள் கற்பனையைவிட பிரார்த்தனை கற்பனை, பாவ மன்னிப்பு என்பது போன்ற தன்மைகள் மிகவும் தீங்கானது என்று குறிப்பிடுகிறார். மற்றநாடுகளைப்போல் பொருளாதாரத்தில், விஞ்ஞான அறிவில் நம்நாடு சிறக்காதிருப்பதற்குக் காரணம் மூடநம்பிக்கைகளே என்றும் கூறுகிறார்.

பண்டிகைகள் பற்றி குறிப்பிடும்போது, நமது நாடு அறிவுள்ள நாடாகவும். செல்வமுள்ள நாடாகவும் சுயமரியாதை உள்ள நாடாகவும் இருக்க வேண்டுமானால் உற்சவம், பண்டிகை, சடங்கு, கோயில், பூசை ஆகியவைகள் ஒழிய வேண்டும். காரணம் கால விரயம், பொருளாதார விரயம், அதனால் உருவாகும் சுரண்டல், ஏழ்மைநிலை முதலான பாதகங்கள் உருவாகிறது என்பதை எடுத்துக்காட்டுகிறார். மேலும், இந்து சமயத்தில் கொண்டாடக்கூடிய தாரா தசாங்கம், சிவராத்திரி, தீபாவளி, சரசுவதிபூசை, வைகுண்ட ஏதாதசி, கார்த்திகை தீபம், வருடபிறப்பு, தசரா, பிள்ளையார் சதுர்த்தி, இராமநவமி, மாரியம்மன் பண்டிகை முதலான பண்டிகைகளுக்குக் கூறும் கதைகள் பெரும்பாலும் ஆபாசமாக இருப்பதாகச் சாடுகிறார். இவற்றை விளக்கி வீடுவீடாகச் சென்று பிரச்சாரம் செய்ய வேண்டும் என்றும் கூறுகிறார்.

சாதி பற்றிக் கூறும்போது ‘‘சாதி, ஆசாரம் என்பவை மதம் எனும் மரத்தைச் சுற்றிக்கொண்டிருப்பதாகவும், மதமானது வேதம், புராணம் என்பவைகளுடன் கட்டிப் பிணைக்கப்பட்டிருக்கிறது என்றும் கூறுவார். சாதியின் கொடுமையால் நாற்றமெடுத்த மலத்தைவிட மனிதன் கேவலப்படுத்தப்படுகிறான்’’ (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1*, ப.*2245)* என்கிறார். எனவே சாதியை ஒழிக்க வேண்டுமானால் இந்து மதத்தை ஒழித்தால் மட்டுமே முடியும். மதத்தை ஒழிக்க புராண, இதிகாசங்களையும், வேத, ஆகமங்களையும், மக்கள் கோயில் வழிபாட்டையும் அவற்றின் பாதுகாவலர்களையும் ஒழித்தாக வேண்டும். அப்பொழுதான் சாதி ஒழியும். சாதி விகத பங்கு அடிப்படையில் இரண்டு சாதி மக்களுக்கும் சரிசமத்துவ விகிதத்தில் எல்லாப் படிப்பும் கிடைக்கும்படிச் செய்தல்,இரண்டு சாதி மக்களுக்கும் உத்தியோகம், பதவி, ஆட்சி தலைமை ஆகியவைகளில் ஜனத்தொகை எண்ணிக்கைக்கு ஏற்ற விகதப்படி, சாதிவாரி உரிமையளித்து அந்தப்படி அந்தந்தச் சாதியை அமர்த்துதல், சாதிமறுப்பு திருமணங்களை அனைவரும் செய்வது, சாதிபெயர்களோடு இருப்பவர்களைச் சிறை செலுத்துவது முதலான பல்வேறு திட்டங்களைப் பரிந்துரைச் செய்கிறார்.

இவ்வாறு யாரும் குறைசொல்வதற்கு அஞ்சுகிற கடவுள்களையும் மதங்களையும் விமர்சனத்திற்குட்படுத்தி அதனைச் சீர்த்திருத்தம் செய்வதற்கான ஆலோசனைகளை வழங்கியதோடு மட்டுமில்லாமல் தங்களைத் திருத்திக் கொள்ளாத மதங்களுக்கெதிராகப் போர்க்கொடி உயர்த்தித் தொடர்ந்து அம்மதத்திற்கெதிராகப் போராடிய பெருமை தமிழகத்தில் பிறந்த தந்தை பெரியார் ஒருவருக்கே உண்டு. அவரே கடவுள், மதம் மறுப்பு ஒன்றே மக்களை ஏற்றத்தாழ்வுகளிலிருந்தும் பொருளாதார பாதிப்பிலிருந்தும் விடுபடுவதற்கும் சுயமரியாதையாக வாழ்வதற்கும் சமத்துவத்தைப் பேணுவதற்குமான வழியாக இருக்கும் என்று கருதி கடவுள் மறுப்பு, மதம் மறுப்பு கருத்தியலை பெரியதொரு மக்கள் இயக்கமாக வளர்த்தெடுத்தார். அதற்கான ஊடகமாக இலக்கிய வடிவங்களையும், உரைநடை வடிவங்களையும் அவர் கையாண்டது, அவருடைய பற்றாளர்களையும் அபிமானிகளையும் கையாளச்செய்தது என்கிற வகையில் ஒரு பெரிய முன்னோடியாக தமிழ் இலக்கியச் சூழலை உருவாக்கிச் சென்றிருக்கிறார் என்றே கூறலாம். அவருடைய கடவுள் மறுப்பு சிந்தனை தமிழகம் மட்டுமல்லாமல் இந்திய அளவிலும் பரவியிருந்தது. இன்றும் கன்னடம் உள்ளிட்ட இந்திய மொழிகளில் பெரியாரின் சிந்தனைகள் மொழிபெயர்க்கப்பட்டு வருவதுடன் அவருடைய சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்ட படைப்புகளையும் உருவாக்கி வருகின்றனர் என்பது மிக முக்கியமான ஒன்றாகும்.

அந்த வகையில் தமிழ்மொழி இலக்கியங்களைப் பொறுத்தவரையில் பன்னெடுங்காலமாகக் கடவுள் எதிரானச் சிந்தனை தொடர்ந்து வந்துகொண்டே இருப்பதை காணமுடிகிறது. தமிழ் இலக்கியச் சூழலில் உருவாகி வளர்ந்துள்ள இச்சிந்தனை இந்திய மொழிகளுக்கெல்லாம் முன்னோடியாக 'கடவுளுக்கு எதிரான' என்கிற கருத்தியலை முன்வைத்துச் சென்றிருக்கிறது எனலாம். இதுவே தமிழ்மொழி இந்திய மொழிகளுக்கு வழங்கிய நன்கொடையாகக் கூறலாம்.

**துணைநின்றவை**

*1.* பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், பதி: வே.ஆனைமுத்து, தொ.*4-1* ரூ *2*, *2009.*

*2.* கண்மூடி வழக்கம் எல்லாம் மண்மூடிப்போக..! சி.இராமலிங்கம் (*1823-1874)*, ராஜ்கௌதமன், தமிழினி, *2001.*

*3.* சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும். பெ.மாதையன், பாவைபப்ளிகேஷன்ஸ், *2004.*

*4.* திருமூலர், வேமனர் பாடல்களில் காணப்படும் சமய, சமுதாயச் சிந்தனைகள், முனைவர் பா.அ.முனுசாமி, தமிழ்ச்செல்வி பதிப்பகம், *2010.*

*5.* தொல்காப்பியம் தெளிவுரை, ச.வே.சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், *2006.*

*6.* சீவக சிந்தாமணி விளக்கவுரை, டாக்டர் துரை இராசாராம், முல்லைநிலையம், *2009.*



(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய இசை வளர்ச்சிக்குத் தமிழிசையின் பங்களிப்பு

**முனைவர் க புவனேஸ்வரி,**
உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,
தேசியக்கல்லூரி (தன்னாட்சி),
திருச்சிராப்பள்ளி – 1.
muthu.rcfs@gmail.com

*****

தமிழிசை மிகமிகத் தொன்மையானது. தமிழிசை என்பது தமிழன்கண்ட இசை. உலகில் முந்திப்பிறந்த மூத்த இசை. இந்தத் தமிழிசையை அடிப்படையாகக் கொண்டே இந்துஸ்தானி இசையும், மேற்கத்திய இசைகளும் வளர்ச்சிபெற்றன என்பதைத் தமிழ் இலக்கியங்களில் தொல்காப்பியம் தொடங்கி, சங்க இலக்கியம், காப்பியங்கள், தேவாரப் பாடல்கள் போன்ற பல்வேறு காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் எடுத்தியம்பியுள்ளன. இத்தகைய தமிழிசையின் வளர்ச்சி நிலைகளைப் பற்றிக் கூறுவதே இக்கட்டுரையின் அய்வுப்பொருண்மையாகும்.

**தமிழிசையும் கருநாடக இசையும்**

விந்திய மலைக்குத் தெற்குப் பகுதி முழுவதும் தமிழ்நாடாக இருந்தபோது தமிழிசையானது தமிழ்நாடு முழுவதும் பரவியிருந்தது. தமிழிசை இயக்கப்பகுதி ஆந்திரம், கருநாடகம், தமிழ்நாடு, கேரளம் என்று மாறி இருப்பினும் இன்றுவரை தமிழிசை இம்மாநிலங்களில் வழக்கில் இருந்து வருகிறது. **'கருநாடு'**எனப்பட்ட தமிழ்நாட்டின் மேற்குப்பகுதி **'கர்நாடகம்'**ஆகிப் பின் தென்னாட்டுக்கே அப்பெயர் வந்தது போலவே தமிழ்நாட்டு இசையும் **'கருநாடக இசை'**என உரைக்கப்பட்டது எனலாம்,

பழந்தமிழ் இசை என்பது தமிழரின் மரபு வழியான மிகப்பழமையான இசைச் செல்வமாகும். பழந்தமிழ் மக்கள் வேறு இன மக்களுடன் தொடர்புகொள்ளும் முன்பே இசைக்கலை தமிழகத்தில் சிறந்து விளங்கி இருந்தது. **"முச்சங்க காலத்திலேயே இசை தொடர்பான நூல்கள் தமிழில் எழுந்தன. எனவே தமிழிசையின் பழமை என்பது 3000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. கி.பி. 16ஆம் நூற்றாண்டில் தோன்றியதே கர்நாடக இசையாகும். இதைத் தமிழிசையின் மறுவடிவம்"**[1]என்கின்றனர் (பழந்தமிழ்இசை, கு. கோதண்டபாணிப்பிள்ளை, ப. 61).

இசைக்கு முதன்முதலில் இலக்கணம் வகுத்தது அகத்தியம். பஞ்சமரபு– அறிவனார்; பஞ்சபாரதீயம் - தேவவிருமுடி நாரதன்;இசைநுணுக்கம் - சிகண்டி என்னும் முனிவர்;பெருநாரை, பெருங்குருகு, முதுநாரை போன்ற பழந்தமிழ் நூல்களும் இசை பற்றியனவே. நுமக்குக் கிடைக்கும் இசை பற்றிய நூல்களுள் தொன்மையான நூல் தொல்காப்பியமே.

**இசைத்தமிழ் இலக்கியங்கள்**

தொல்காப்பியம் ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய இசை பற்றிய குறிப்பைத் தருகின்றது.

மக்களின் தொழிலுடன் இயைந்து, தொழிலுக்கு உதவும் கருவியின் இசையைப் **'பறை'**என்றும், பொழுதுபோக்காகவும், இன்பத்துறையாகவும் அமைத்துப் பாடும் இசையை **'யாழ்'**என்றும் தொல்காப்பியர் பாகுபடுத்தியுள்ளார்.

**‘தெய்வம் உணாவே மாமரம் புள்பறை’** (தொல்.அகத்.20)

பண் வகைகளை **‘யாழின்பகுதி’**எனவும், இசையை **‘நரம்பின் மறைய’** எனவும் குறிக்கின்றார்.

பண் இசைக்கும்போது நிலங்களின் வகைளுக்கு ஏற்ப குறிஞ்சிப்பண், முல்லைப்பண் எனப் பாடுவதற்கு ஏற்ற வகையில் அதைத்ததோடன்றி காலை, மாலை, நண்பகல் என நேரத்திற்குத் தகுந்தாற்போல் பாடுவதற்கும் பண்களைப் பாகுபடுத்தியுள்ளனர். இசை என்னும் சொல் 24 இடங்களில் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது.

**சங்க இலக்கியங்கள்**

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற சங்க இலக்கியங்களில் பழமைவாய்ந்த இசைக்கருவிகள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.

பாட்டு, வண்ணம் போன்றவையும் இசையுடன் தொடர்புடையவை. புரிபாடல்,கலித்தொகை போன்றவை பாடல் அமைப்பால் பெயர் பெற்றவையே. பாணன், கூத்தன், பாடினி, விறலி எனப் பழந்தமிழ் இலக்கியங்களில் இடம்பெறுபவர்களும், அவர்கள் இசைத்த இசைக்கருவிகள் பற்றிய செய்திகளும் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. பரிபாடலில் செல்வேள் பற்றிய பாடலில் **இசையின் தோற்றம், இசைக்கலைஞர்கள் பற்றியும், புறநானூற்றில் சீறியாழ், பேரியாழ், வேய்ங் குழல், தண்ணுமை, முழவு போன்ற இசைக்கருவிகள் பற்றியும், அகநானூற்றில் குறிஞ்சிப்பண் இசைத்து யானையைத் தூங்க வைத்த செய்தியும் இடம்பெற்றுள்ளது.** பதிற்றுப்பத்தில் காணலாகும் துறை, தூக்கு, வண்ணம் என்பவையும் ஆற்றுப்படையில் இசை தொடர்புடைய பல நுட்பமான கருத்துக்களும் உள்ளன.

**சிலப்பதிகாரம்**

பழங்காலத்தில் 11991 இசைகள் (இராகம்) இருந்ததாகச் சிலம்பு கூறுகிறது. **“இசை என்பது நரப்படையா வாலுரைக்கப்பட்ட பதினோராயிரத்து தொள்ளாயிரத்து தொன்னூற்றுஒரு ஆதியிசைகளும்” (சிலம்பு. அரங்கேற்றுக்காதை ப.89)**

பண் என்பதைப்பற்றிக் கூறும் இடத்து

**“யாழும் குழலுஞ் சீருமிடமும் தாழ்குரற்றண்ணுமை
யாடலொ டிவற்றின் இசைத்த பாடலிசையுடன்
படுத்து அசையா மரபினிசை யொன்றாகும்”**
(சிலம்பு. அரங்கேற்றுக் காதை ப.92)

இதற்கு அடியார்க்கு நல்லார் தன் உரையில், மூலாதாரம் தொடங்கிய எழுத்தின் நாதம் ஆளத்தியாய் பின் இசையென்றும் பண்ணென்றும் பெயராம் என விளக்குகிறார்.

1. ஏழு சுரங்களைக்கொண்டது பண்.
2. ஆறு சுரங்களைக்கொண்டது பண்ணியல்
3. ஐந்து சுரங்களைக்கொண்டது திறம்
4. நான்கு சுரங்களைக்கொண்டது திறத்திறம்

கிரகபேதம் என்பது குரல்திரிபுமுறை, இராகம் எனப்படும் பண், ஆளத்தி எனப்படும் பண் இசைக்கும் முறைகள் பற்றியும் விரிவாக விளக்குகிறது. இக்காலத்தில் கையாளப்படும் ஏழு சுரங்களுக்குப் பண்டைய காலச் சொல்லானது **'நிரம்'** எனப்பட்டது.

**பக்தி இலக்கியங்கள்**

தமிழிசையானது வீறுகொண்டு எழுந்த மறுமலர்ச்சிக்காலம் என்று தேவார இசை பரவிய **'பக்தி இலக்கிய'**காலத்தைக் கூறலாம்.

**"இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்மந்தன்"**எனவும்

**"ஏழிசையாய் இசைப்பயனாய் இருப்பவன் இறைவன்"**எனவும்

**"தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்"**எனவும் தமிழிசை தனிச்சிறப்புடன் நடைபயின்றது. இந்த இசைக்கு இறைவனே மயங்கினார் எனவும், தெய்வீகத்தமிழ் இசையாய் ஏற்றம் பெற்றது என்பதையும் அறிகின்றோம். இப்படித் தமிழ் இசையின் இராகங்களுக்கு ஆணிவேராகத் திகழ்ந்தவை தேவாரப்பாடல்களேயாகும். இந்திய இசைக்கு ஓர் அடிப்படையாக ஆதி இலட்சியமாகத் திகழ்ந்ததும் தேவாரப்பாடல்களே. அமைப்பு **'மாலைமாற்று'; பண் - கௌசிகம், பாடல் 'யாமாமா நீ யாமாமா'– சம்மந்தர். நாலடிமேல் வைப்பு, பண் - காந்தார பஞ்சமம்,'தக்கன் வேள்வி தகர்த்தவன் ஓர்ந்தாய்' திருத்தாண்டகம் - இது வரிகளாய் அமைக்கப்பெற்ற எண்சீர் விருத்தம். அரிகாம்போதியால் (செம்பாலைப்பண்) பாடப்படும். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே'** இவை தேவாரப் பண்களுக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

**ஆதி இசை தமிழிசையே**

கி.பி. 13 நூற்றாண்டு வரைத் தென்னிந்திய இசையென அழைக்கப்பட்ட தமிழிசை மட்டுமே இந்தியா முழுவதும் பரவியிருந்தது. **"தமிழகத்தில் தோன்றி, தென்னிந்தியாவில் வளர்ந்த தமிழிசை வட இந்தியாவிலும் பரவி மாறுபட்ட பெயர்களோடு வழங்கி வந்தது. காலப்போக்கில் ஆட்சி மாற்றங்களினால் பிற நாடுகளின் தாக்கத்தால் இந்த இசைக்கலை சில மாற்றங்களைப் பெற்று இந்துஸ்தானி இசையாக மாறியது"** (தமிழ் இலக்கியங்களும் தமிழிசையும், சோ. சிவசுப்பிரமணின், ப. 81)

"14 ஆம் நூற்றாண்டின் முற்பகுதயில் ஹரிபாலர் எழுதிய **'சங்கீத சுதாகரம்'** எனும் நூலில்தான் முதன்முதலாக கர்நாடக இசை, இந்துஸ்தானி இசை என 2 வகைகள் குறிக்கப்பிடப்பட்டுள்ளன" (அ.ஶ்ரீ. கந்தராசா, தமிழ் இசையா? கர்நாடக இசையா? ப. 78).

**"கன்னடம் தனிமொழியாகத் தோன்றி 1100 ஆண்டுகளும், தெலுங்கு தோன்றி 900 ஆண்டுகளும் ஆகின்றன. ஆனால் 1300 ஆண்டுகளுக்கு முன்பே பக்தி இலக்கியங்களும், 2000 ஆண்டுகளுக்கு முன்பே சங்க இலக்கியங்களும், தொல்காப்பியத்தில் தமிழிசை பற்றிய செய்திகளும் காணக்கிடைக்கின்றன"** (தமிழிசை வரலாறு – ஒரு விளக்கம், இராஜ. தியாகராஜன், ப. 139).

இப்படிப் பல்வேறு ஆய்வுகளிலும் ஆய்வாளர்களாலும் நாம் அறிந்துகொள்வது கருநாடக இசை, இந்துஸ்தானி இசை எனப் பல்வேறுபட்ட இந்திய இசைகளுக்கும் அடிப்படையாக, ஆணிவேராகத் திகழ்வது தமிழிசையே என்ற உண்மையேயாகும்

(☺)(☺)(☺)(☺)(☺)



# இந்திய நாடகக்கலை வளர்ச்சியில் தமிழ் நாடகக்கலையின் பங்கு

**முனைவர் செ ராஜேஷ் கண்ணா**
ஆய்வுத்திட்ட உதவியாளர்
தமிழ்த்துறை
காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகம்
காந்திகிராமம்
திண்டுக்கல் மாவட்டம், தமிழ்நாடு, இந்தியா.
rajeshkanna.bed@gmail.com

*****

இந்திய நாடகக்கலையின் தோற்றம் குறித்தும் அவற்றின் விளக்கம் குறித்தும் பரதர் இயற்றிய நாட்டிய சாஸ்திரம் எடுத்தியம்புகிறது. இந்நூல் நம்பிக்கைகளையும் புராணங்களையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. சிவபெருமான், பிரம்மனிடம் 'பார்ப்பதற்கும் கேட்பதற்குமான' ஒன்றை படைக்கும்படி கேட்டுக்கொண்டுள்ளார். இதனால் பிரம்மன் 'சொல்லை' ரிக்வேதத்தில் இருந்தும், 'பாடலை' (இசையை) சாம வேதத்தில் இருந்தும், 'உணர்ச்சி பாவங்களை' அதர்வண வேதத்தில் இருந்தும், 'நடிப்பை' யஜுர் வேதத்தில் இருந்தும் பெற்று நாட்டியத்தை உருவாக்கியுள்ளார். ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்கள் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு மறுக்கப்பட்ட வையாக இருந்தன. இதனால் எல்லா இனத்து மக்களுக்கும் உரியதாக நாடகம் உருவாக்கப்பட்டு அதனை ஐந்தாம் வேதம் என்று அழைத்தனர். பிரம்மனிடமிருந்து நாடகத்தை கற்ற பரதமுனிவர் கந்தர்வர்களையும் யட்சகர்களையும் சேர்த்து நாடகத்தை மேடை ஏற்றியுள்ளார். பரதரின் காலம் கி.மு இரண்டாம் நூற்றாண்டு ஆகும். இவர் இயற்றிய நாட்டிய சாஸ்திரம் இந்திய நாடகக்கலை வளர்ச்சி பற்றியும், அதன் சிறப்பம்சங்கள் பற்றியும் விளக்குகிறது.

இந்திய நாடகக் கலை வளர்ச்சியை விளக்கும் நூலான நாட்டிய சாஸ்திரத்தைப் போலவே தமிழிலும் பல நூல்கள் இருந்துள்ளன. கி.பி இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலான சிலப்பதிகாரத்தில், அதன் உரையாசிரியரான அடியார்க்குநல்லார் பரதம், அகத்தியம், முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், பஞ்சமரபு, பரதசேனாபதியம், மதிவாணர் நாடகத்தமிழ் போன்ற நாடக நூல்கள் குறித்து எடுத்துரைத்துள்ளார். இவையாவும் நாடக இலக்கண நூல்கள் ஆகும். இலக்கணம் என்பது இலக்கியங்களிலிருந்து தோன்றுவது ஆகும். எனவே தமிழ் மொழியில் தொல்காப்பிய காலத்திற்கு முன்பே பல நாடக நூல்கள் இருந்துள்ளதை உணர முடிகிறது. இதன்மூலம் தமிழ் நாடக வரலாற்றின் நீண்ட நெடிய பாரம்பரியத்தையும் தொடர்ச்சியையும் காணமுடிகிறது.

நாட்டிய சாஸ்திரமும் சிலப்பதிராமும் நாடகங்கள் குறித்த செய்திகளைத் தருவதில் ஒத்துள்ளன எனலாம். நாட்டிய சாஸ்திரம் பேசும் அரங்க வகைகள், அரங்கம் அளக்கும் அளவுகோள், வாயில்கள், திசைச்சிலைகள் போன்றவற்றை போலவே சிலப்பதிகாரமும் விரிவாகப் பேசியுள்ளது. இதனால் இந்திய நாடக வளர்ச்சியில் தமிழ் செவ்வியல் கால நாடகக் கூறுகள் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தி வளர்ச்சி கண்டது என்றே கூறவேண்டும்.

தொன்மை வாய்ந்த தமிழ் மொழியில் நாடகம் இருந்ததற்கான சான்றுகள் பெருமளவில் காணக் கிடைக்கின்றன. “நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்” (தொல்.பொருள்.நூற்.53) என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இது தமிழ் நாடக வரலாறு நீண்ட நெடிய பாரம்பரியத்தையும் தொடர்ச்சியையும் கொண்டிப்பதைப் புலப்படுத்துகிறது. நாடக வழக்கு என்பதற்கு தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர், “புனைந்துரைவகை”

(தொல்.பொருள்.நூற்.53) என்று பொருள் கூறுகிறார். தமிழ் செவ்வியல் நூல்களில் இவ்வாறு புனைந்து கூறும் பாக்களை பரவலாகக் காணலாம். இவை யாவும் நாடகப் பாங்குடையவைகளாகும்.

**செவ்வியல் நூல்களில் நாடகக் கூறுகள்**

சங்ககால நாடகக் கூறுகள் பற்றி ஆய்ந்த அ.கா.பெருமாள் அவற்றை விவரித்துக் கூறியுள்ளார். இதாவது, "சங்ககாலப் பாட்டும் தொகையும் நூற்களில் நாடகக் கூறுகள் உள்ளன என்பது பொதுவான கருத்து. ஒருவர் அடுத்தவருக்குக் கூறுவது, ஒருவர் தனக்கே கூறுவது, ஒருவர் அடுத்தவரின் முன்னே தன்னிடம் கூறிக் கொள்வது என்ற நிலையில் எல்லா பாடல்களும் அமைந்திருக்கின்றன. ஆசிரியர் கூற்றாக அமைந்த அகப்பாடல்கள் இல்லை. பிற நூல்களைவிட கலித்தொகையில் நாடகத் தன்மை அதிகம். தலைவன் தோழி உரையாடல்களாக 64 பாடல்களும், தலைவி தோழி உரையாடல்களாக 61 பாடல்களும் உள்ளன. யாப்பு அமைப்பு கூட நாடகப் பாங்குடையது (தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம்)" (தமிழர் கலையும் பண்பாடும், ப.41) என்று கூறியுள்ளார். இந்நாடகக் கூறுகளைக் கொண்ட சங்கப்பாக்களை நுணுகிப் பார்க்கும் போது அக்காலத்தில் நாடகம் ஓர் ஒழுங்கு முறையில் நடைபெற்றது என்பதை உணரலாம். சங்ககால நூலான மலைபடுகடாம் ஓர் அரசகுடியின் வரலாற்றை நாடகமாகச் சுட்டியுள்ளது. இதனை வெளிப்படையாகக் காணமுடியாவிட்டாலும், நுண்ணிதின் நோக்கும் போது உணர முடியும். இவற்றைக் கொண்டு தமிழ் நாடக மரபின் நிகழ்முறையினை ஓரளவேனும் அறியமுடிகிறது. இதனை,

**"………………………. யானைத்**
**தாதெருத் தகைந்த முற்ற முன்னி**
**மழையெதிர் படுகண் முழவுகண் இகுப்பக்**
**கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர**
**மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்**
**நரம்புமீது இறவாது கருங்கோட்டுச் சீறியாழ்**
**நரம்மீது இறவாது உடன்புணர்ந்து ஒன்றிக்**
**கடவது அறிந்த இன்குரல் விறலியர்**
**தொன்றொழுகு மரபில் தம்மியல்பு வழாஅது**
**அருந்திறற் கடவுள் பழிச்சிய பின்றை**
**விருந்திறற் கடவுள் பழிச்சிய பின்றை**
**விருந்திறற் பாணி கழிப்பி நீண்மொழிக்**
**குன்ற நல்லிசைச் சென்றோர் உம்பல்**
**இன்றிவன் செல்லாது உலகமொரு நிற்ப**
**இடைத்தெரிந்து உணரும் பெரியோர் மாய்ந்தெனக்**
**கோடைக்கடன் இறுத்த செம்ம லோய்என**
**வேன்றிப் பல்புகழ் விறலோடு ஏத்தி"** (மலை.531-544)

என்ற வரிகள் எடுத்துரைக்கின்றன. இதில் சங்ககாலத்தில் நிகழ்த்தப்பட்ட நாடக மரபுகள் சுட்டப்பெற்றுள்ளன. இதில்,

1. 'தாதெரு' எனப்படும் யானைச் சாணத்தால் தெளித்துத் திடப்படுத்தப்பட்ட முற்றத்தில் கூத்து நிகழ்ந்தது.
2. முழவு (தோல்கருவி) முதலில் முழங்கியது.
3. தூம்பு (நெடுங்குழல் - துளைக்கருவி) அடுத்து ஒலித்தது.
4. சீறியாழ் (நரம்புக்கருவி) மூன்றாவதாக இசைக்கப்பட்டது.

5. யாழில் மருதப்பண் (கோடிப்பாலை) மீட்டப்பட்டது.
6. (காலை நேரத்திற்குரிய மருதப் பண்ணியல்) விறலியர் இனிய குரலெடுத்துப் பாடினர்.
7. நாடகத்தின் தொல்மரபின் இயல்பு கெடாமல் கடவுளை வணங்கிப்பாடி ஆடினர்.
8. அதன்பின் புதிய பாடல்கள் தாளக்கணக்கோடு பாடப்பட்டன.
9. அதன்பிறகே நாடக நிகழ்வு தொடங்கியது.
10. அரசனை, 'கூறிய வஞ்சினம் குன்றாத புகழ்க் குடியின் வழி வந்தவனே! நின் முன்னோர் மாய்ந்துவிட்டாலும் அவர் வழியில் கொடைக்கடன் செலுத்தும் செம்மலே! என்று புகழ்ந்து அரசனது முன்னோரின் வெற்றி வரலாற்றை விறலியோடு நாடகமாக நடித்தது முதலான கூறுகள் குறிக்கப்பட்டுள்ளன.

நாடகம் தொடங்கும் முன் செய்யப்படும் வேலைகளையும், அதன் பின் நாடகம் நிகழ்த்திய முறைமைகளையும் மேற்கண்ட சங்கப்பாடல் தெளிவாக உணர்த்துகிறது. இப்பழங்கால நாடக மரபுகள் இன்று தெருக்கூத்து முறைகளில் நிலை கொண்டுள்ளன. எனவே செவ்வியல் காலத்தில் நாடகம் குறிப்பிடத்தக்க வளர்நிலையை எய்தி இருந்தது எனலாம்.

**பாணனின் நாடக நிகழ்வு**

கூத்தர்களைப் போலவே பாணர்களும் நாடகம் நிகழ்த்தியதற்கான சான்றுகளைக் காண முடிகிறது. முழவு, யாழ், தூம்பு (வங்கியம்), பதலை, சிறுபறை முதலிய இசைக்கருவிகளை விறலியர் இசைக்க, பாணன் முறையாக இருபத்தொரு துறைகளையும் இசைத்து நாடகம் நடத்தியுள்ளான். இதற்கு,

"பாடுவல் விறலியோர் வண்ணம், நீரும்
முண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்
கண்விடு தூம்பின் களிற்றுயிர் தொடுமின்
எல்லரி தொடுமின் ஆகுளி தொடுமின்
பதலை யொருகண் பையென இயக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்று
இறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி" (புறம்.152)

என்ற பாடலைச் சான்றாகக் கூறலாம். இப்பாடலில் விறலியர்களின் குலத் தலைவனான பாணன் விறலியர்களுக்குக் கட்டளையிடுகிறான். பாணன் வண்ணம் பாடுகிறான். அவன் பாட்டுக்குப் பின்னணி இசைகளைப் பல்வேறு வாத்தியங்களால் விறலியர்கள் அமைக்கின்றனர். 'யான் பாடுவேன் ஒரு வண்ணம். நீங்கள் முழாவின் கண்ணே மார்ச்சுனையை இடுமின். யாழிலே பண்ணை நிறுத்துமின். கண் திறக்கப்பட்ட தூம்பாகிய களிற்றினது கைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை இசையுங்கள். சல்லியை வாசியுங்கள். சிறுபறையை அறையுங்கள். பதலையில் ஒரு முகத்தை மெல்லெனக் கொட்டுங்கள். கரிய கோலை என் கையில் தாருங்கள்' என்று பாணன் கூறியுள்ளான். நாடகம் காண்பவன் அரசனாதலாலே சொல்லும் ஒவ்வொரு முறையும் அவனை நெருங்கி முன்சென்று ஆடி (சொல்லுபு குறுகி), இருபத்தொரு துறையையும் முறைப்படி பாடி ஆடி முடித்தான் என்பதை இப்பாடல் மூலம் அறியமுடிகிறது. இங்கே நடந்த நாடக நிகழ்வுகளாவன,

1. முதலாவதாக பாணன் வண்ணம் பாடுகிறான்.

2. முழவு முழக்கப்படுகிறது.
3. யாழ் பண்ணறுத்தப் பாலைப்பண்ணை இசைக்கிறது.
4. ‘கண்விடு தூம்பின் களிற்றுயிர்’ தொடுக்கப்படுகிறது. இதனைச் செய்பவர் விறலியர். ‘தூம்புக்காரன்’ (கட்டியங்காரன்) பணியினை விறலியர் மேற்கொண்டனர்.

எல்லரி, ஆகுளி, பதலை என்னும் பல்வகைப் பறைகள் இசைக்கப்படுகின்றன. பதலை மாக்கோலினைக் கையிலெடுத்துப் பாணன் நாடகத்தைத் தொடங்குகிறான். எதிரே நாடகம் பார்ப்பவன் அரசன். அரசன் முதலான அரசியல் மாக்கள் பார்வையாளராக உள்ளனர். ஆதலால், நாடகப் பாட்டில் அரசனுக்குச் சொல்லும் பாடலடி வரும்போது உடல்குறுகி ஆடும் முறையறிந்து, இருபத்தொரு துறைகளையும் முறைப்படிப் பாடி நாடகத்தை முடிக்கிறான். இது இருவகை நாடக மரபில் அரசர்கள் காணும் வேத்தியல் வகையினைச் சார்ந்ததாகும்.

**முடிவாக…**

மேற்கண்ட இரண்டு சான்றுகள் சங்ககாலத்தில் நாடகம் அடைந்திருந்த வளர்நிலையை எடுத்தியம்புகிறது. இந்திய நாடகக்கலை வளர்ச்சியடைந்த அதே காலக்கட்டத்தில் தமிழிலும் நாடகம் சிறப்பான வளர்ச்சியை கண்டது. இதனால் இந்திய நாடகக்கலையும் தமிழ் நாடகக்கலையும் ஒருமித்து வளரத் தொடங்கின. இந்திய நாடகக் கலையின் முதன்மை நூலாகக் கருதப்படும் நாட்டிய சாஸ்திரம் குறிப்பிடும் பல்வேறு நாடக குறிப்புகளை சிலப்பதிகாரம் உள்ளிட்ட பல்வேறு செவ்வியல் நூல்களில் காணமுடிகிறது.



(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய இலக்கிய வளமைக்கு திராவிட மொழிகளின் பங்களிப்பு

**ரா.கணேசன், எம்.ஏ.தமிழ்**
அலகு II - அலுவலகம்
Data Entry Operator
டாக்டர். எம்.ஜி.ஆர். கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
மதுரவாயல், அடையாளம்பட்டு, சென்னை - 600 095.
rajalakshmiganesan04@gmail.com

*****

## முன்னுரை:-

திராவிட மொழிகளை ஒரு குடும்பமாக மொழியிலார் கருதுவதற்கு காரணம் மொழிக் கூறுகளில் காணும் ஒற்றுமையே ஆகும். உலகில் மிகப் பழமை வாய்ந்த மொழியாகக் கருதப்படுவன தமிழ் மொழியாகும். தமிழின் தொன்மையான இலக்கியமான சங்க கால இலக்கியத்தோடு ஒப்பிட்டு ஆராயலாம். அவ்வாறான இலக்கியங்களில் சிற்றிலக்கிய வகையின் சிறப்புகளைப் பற்றி நாம் அறிந்து கொள்வோம்.

## சிற்றிலக்கிய வகைகள்:-

சிற்றிலக்கிய வகைகளை 96 என்றும் தொகையில் அடக்கிக் கூறுவது ஒரு மரபு. எனினும் இதுவரை அவையாவை என வரையறுத்துக் கூறினார் எவருமிலர். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பன கூட சிற்றிலக்கிய வகைப்படுகின்றன.



சிற்றிலக்கியங்கள் சில நாட்டுப்பாடல் மரபில் தோன்றியவை. குறவஞ்சி, பள்ளு, திருப்பள்ளி எழுச்சி போன்றவற்றைக் கொண்டு அறியலாம். சிற்றிலக்கியத்தின் வடிவம், கட்டமைப்பு போல்வன சிந்திக்கத்தக்கன. ஆற்றுப்படை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருப்பள்ளியெழுச்சி போன்றவற்றை எடுத்தக்காட்டாகக் கூறலாம். திருப்பாவை முதலானவை மகளிர் விளையாட்டின் அடிப்படையில் தோன்றியவை. பக்தி, காதல், வீரம் ஆகிய மூன்று உணர்ச்சிகளுக்கே சிற்றிலக்கியங்களில் மிகுந்த இடம் தரப்பட்டது. இயற்கை மீறிய கற்பனைகளைப் புலவர்கள் மிகுதியாகப் புனைந்து கூறியுள்ளனர். கருத்து, கற்பனை, உணர்ச்சி, வடிவம், கவிதைக்கலை, சொல்லாட்சி, நடை ஆகிய அனைத்திலும் சிற்றிலக்கியங்கள் புதுமை நெறிகளை மேற்கொண்டன.

## திருப்பாவை:-

சிற்றிலக்கிய வகைகளுள் பாவை இலக்கிய வகையும் ஒன்று. ஆண்டாள் பாடிய திருப்பாவை முப்பது பாசுரங்களைக் கொண்டுள்ளது. திருப்பாவையில் முதல் ஐந்து பாசுரங்கள் பாவை நோன்பின் சிறப்பைக் கூறுவதாகவும், அடுத்த பத்து பாசுரங்கள் உறங்குகின்ற தோழிமார்களை எழுப்புவதாகவும், அடுத்த ஆறு பாசுரங்கள் கோயில் காப்பவன், வாயில் காப்பவன், நந்தகோபன், யசோதை, நப்பின்னை, கண்ணன், பலராமன் ஆகியோரைத் துயில் எழுப்புவதாகவும், அடுத்த நான்கு பாசுரங்கள் கண்ணனை எழுப்பியபின் அவனது அருட்பார்வையை வேண்டி நிற்பதாகவும், இறுதியாக வரும் ஐந்து பாசுரங்கள் கண்ணணிடம் வேண்டுவனவற்றைக் கேட்பதாகவும் அமைந்துள்ளன. திருப்பாவை மிகப் பலரால் போற்றிப் பாராயணம் செய்யப்படுகிறது. சிறப்பாக மார்கழி மாதந்தோறும் திருமால் கோயில்களில் பக்தியோடு பாடப்பட்டு வருகிறது. தமிழர் மட்டும் அல்லாமல் கன்னடரும், ஆந்திரரும் தத்தம் மொழிகளில் ஆண்டாளின்

பாடல்களைப் படித்து வழிபாடு செய்கின்றனர். கிழக்காசிய நாடுகளிலும் பாவைப் பாடல்கள் பாடப்படுகின்றன.

**அந்தாதி:-**

சிற்றிலக்கிய வகைகளில் அந்தாதியும் ஒன்று. அந்தாதிப் போக்கினைச் சங்கப்பாடல் ஒன்றில் காணலாம்.

**'மண்டிணிந்த நிலனும்**
**நிலனேந்திய விசும்பும்**
**விசும்புதைவரு வளியும்**
**வளித்தலை இய தீயும்**
**தீ முரணிய நீருமென் நாங்கு'**

ஒரு பாடலின் இறுதியிலுள்ள எழுத்தோ, அசையோ, சீரோ அடுத்த பாடலுக்கு முதலாக வருவது அந்தாதி. அபிராமி அந்தாதியை இயற்றியவர் அபிராமி பட்டர். அபிராமியந்தாதி அபிராமி பட்டருடைய பக்திச் சிறப்பினைப் புலப்படுத்தும் அழகிய நூல், அம்மையின் திருவுருவம், திருவடி, திருக்கரங்கள், புன்முறுவல் ஆகியவை பக்திச்சுவையுடன் புனைந்துரைக்கப் படுகின்றன.

**தூது:-**

சிற்றிலக்கிய வகைகளில் தூது இலக்கியமும் ஒன்று தலைவனது வரவினை எதிர்பார்க்கும் தலைவி, அவன்பால் தன் மனக்கருத்தினைத் தெரிவித்து வருமாறு தூதுப் பொருளிடம் கூறுதலாகும். தமிழ் மொழியில் உள்ள தூது இலக்கியங்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். புறத்தூது, அகத்தூது என்பன அவை. ஓர் அரசன் மற்றோர் அரசனிடம் அனுப்பும் தூதும், ஒரு புலவர் ஓர் அரசனிடம் அனுப்பும் தூதும் புறத்தூது ஆகும். தலைவி தலைவனிடமோ, தலைவன் தலைவியிடமோ அனுப்பும் தூது அகத்தூது ஆகும். இவ்விரு வகைகளுக்கும் சங்கப்பாடல்களிலும் சான்றுகள் உண்டு. தலைவனுடைய அழகில் ஈடுபட்ட தலைவி, அன்னம் முதலான அஃறிணைப் பொருள்களையோ, தோழி முதலான உயர்திணை மாந்தரையோ தலைவனிடம் தூதாக அனுப்பி அவனுடைய உடன்பாட்டிற்கு அறிகுறியாக அவனது மாலையை வாங்கித் தருமாறு வேண்டுவதாக இது அமையும்.

**பரணி:-**

சிற்றிலக்கிய வகைகளுள் பரணியும் ஒன்று. போர்க்கள வெற்றியைப் புகழ்ந்து பாடுவதே பரணியாகும். சோழ மன்னன் முதலாம் குலோத்துங்கனுக்கும், கலிங்க மன்னன் அனந்தவர்மனுக்கும் கலிங்க நாட்டில் போர் நடைபெற்றது. சோழனது சார்பில் படைத்தலைவன் கருணாகரத் தொண்டைமான் படை நடத்திச் சென்று கலிங்கத்தை வென்று வாகை சூடிய நிகழ்ச்சியைக் கலிங்கத்துப்பரணி சுவைபடக் கூறுகின்றது. குலோத்துங்கனையும் கருணாகரனையும் சிறப்பிக்க எழுந்த இந்நூல் பரணி இலக்கணப்படி தோற்றோடிய கலிங்கரையொட்டி "கலிங்கத்துப்பரணி'' என்று வழங்கப்படுவதாயிற்று. இதுவே பரணி இலக்கியங்களுள் சிறந்து விளங்குகிறது.

**பிள்ளைத்தமிழ்:-**

இது குமரகுருபரால் இயற்றப்பட்டது. மதுரை மீனாச்சியம்மன் மீது பாடப்பட்டதாகும். இந்நூல் திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டது. அப்போது மீனாட்சி அம்மையே அர்ச்சகர் மகள் வடிவில்

சிறு குழந்தையாக வந்து, மன்னன் மடியில் வீற்றிருந்து, இந்நூலைக் கேட்டுத் தன் கழுத்திலிருந்த முத்து மாலையை எடுத்துப் புலவருக்கு பரிசாக அளித்தாள் எனக் கூறுவர். அம்மையின் இச்செயலுக்குக் காரணமாக விளங்கியது வருகைப் பருவத்தில் காணப்படுகின்ற 'தொடுக்கும் கடவுள்' எனத் தொடங்கும் பாடலே என்பர். இப்பாடலை நாள் தோறும் தவறாமல் பாடி வருபவர்களுக்கு மீனாட்சியம்மையின் அருள் கிடைப்பது உறுதி என்று தெரிவிப்பர்.

### குறவஞ்சி:-

சிற்றிலக்கியங்களில் குறவஞ்சி வெளிப்படுத்தும் குறவர் வாழ்வியலையும், அக்கால மக்களிடையே நிலவிய குறி சொல்லும் வழக்கத்தையும் குறிகேட்கும் வழக்கத்தையும் எடுத்துக்காட்டல், குறவஞ்சி இலக்கியத்தில் காணப்பெறும் நாடகப் பாங்கை நாம் அறியலாம். தெய்வத்தையோ அரசனையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு குறவஞ்சி பாடப்பெறும். தலைவன் உலாவரல், தலைவி பந்தடித்து விளையாடுதல், உலா வரும் தலைவனைக் கண்டு காதல் கொள்ளுதல், காதல் மேலீட்டால் வருந்தும் தலைவி திங்கள், தென்றல், முதலியன பழித்தல், குறத்தி வருதல், குறத்தி தன் மலைவளம் கூறல், தலைவியின் கைபார்த்து, அவள் விரும்பிய தலைவனைக் கணவனாகப் பெறுவாள் எனக் குறி கூறல், குறிகேட்டு மகிழ்ந்த தலைவி குறத்திக்குப் பரிசளித்தல், குறவன் குறத்தியைத் தேடி வருதல், குறத்தி அணிகலம் கண்டு ஐயுறல், குறத்தி ஐயம் தெளிவித்தல் ஆகியவற்றை உள்ளடக்கியதாகக் குறவஞ்சி இலக்கியம் அமைகிறது.



### பள்ளு:-

பள்ளு என்ற சிற்றிலக்கியம் பலவகைப் பாக்களாலும் பாவினங்களாலும் பாடப்பெறும் சேரி மொழியால் எளிதில் சாதாரண மக்கட்கும் புரியும் வண்ணம் எளிமையான சொற்களைக் கொண்டிருக்கும் குறவர், குறத்தி, பள்ளன், பள்ளியர் போன்ற சாதாரணத் தொழிலாளர் வர்க்கத்திற்கும் இலக்கியங்கள் எழுந்தன. குற்றாலக் குறவஞ்சி, மீனாட்சியம்மைக் குறம், முக்கூடற்பள்ளு போன்ற நூல்கள் இவ்வகையைச் சார்ந்தனவே. கடவுள் வணக்கம், பண்ணையார் இயல்பு, பண்ணையில் பணி செய்யும் பள்ளன், பள்ளியர் இயல்பு, நகர் வளம், நாட்டு வளம், சைவ வைணவ சமயச் சிறப்புகள் முதலியன இடம் பெறுகின்றன. பண்ணையாட்கள் வழிவழியாகப் பண்ணையார்க்கு அடிமையாக இருந்து உழவுத் தொழிலைச் செய்து வந்திருக்கிறார்கள்.

சிற்றிலக்கிய வகைமை பற்றிய பின்வரும் செய்திகளை நினைவில் கொள்ளலாம். காலச்சூழ்நிலைக் கேற்பப் புதிய சிற்றிலக்கிய நூல்கள் அவ்வப்போது தோன்றி வளர்ந்தன.

**"விருந்தே தானும்**
**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"**

(தொ.செய்.237)

என்னும் தொல்காப்பிய நூற்பா இங்ஙனம் புதிய நூல்கள் தோன்ற இடமளிக்கிறது. அதனைப் பிற்காலப் புலவர்கள் பெரிதும் பயன்படுத்திக் கொண்டனர்.

**முடிவுரை**:-

இவ்வாறாக தொல்காப்பியர் காலத்தில் இடம் பெற்ற சிற்றிலக்கிய வித்து சங்ககாலத்தில் ஆற்றுப்படையாக முளைவிட்டு, அந்தாதியாய்த் துளிர்த்து, கோவையாகச் செடியாகி, மரமாகி கலம்பகமாகக் கிளைத்து, சதகமாகவும் பரணியாகவும் அரும்பி, பிள்ளைத்தமிழாக மொட்டாகி, தூதாகப் பூத்து, பள்ளாகக் காய்த்து, குறவஞ்சியாகக் கனிந்தது. சிற்றிலக்கியப் பெருமரத்தில் இன்று ஆயிரக்கணக்கான கனிகள் கனிந்துள்ளன. பறவைகளாகிய நாம் அவற்றைச் சுவைத்து மகிழ்வோமாக.

(☺)(☺)(☺)(☺)(☺)



# இருவகை நூல்கள்

**முனைவர் ஜி பத்மநாபன்**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை, திராவிடப் பல்கலைக்கழகம்
*****

ஒரு நூலின் நோக்கம் யாது? நூலைத் துய்ப்பதன் நோக்கம் யாது?

இன்பம் அடையும் விருப்பத்திற்காகவா?

அல்லது அறிவைப் பெறும் நோக்கத்திற்காகவா?

என்ற விவாதம் வெகு நாட்களாக இருந்துவரும் ஒன்றே. இலக்கிய உலகில் கலை என்பது கலைக்காகவே, கலை, வாழ்க்கைக்காகவே என்ற தளத்தில் இது நடந்திருப்பதை நாம் அனைவரும் அறிவோம்.

நவீன காலத்திற்கு முற்பட்ட காலத்திலும் இத்தகைய ஒரு கேள்வி அறிஞர்களிடையே இருந்தமையை இலக்கணம், இலக்கியம் என்று நூல்களை பகுத்திருப்பதன் மூலம் ஒருவாறாக உய்த்துணர முடிகிறது. இலக்கண நூல்களைக் கற்பதன் முதன்மையான நோக்கம் விதிகளை அறிந்து அவற்றை முறை வழுவாமல் பின்பற்ற வேண்டும் என்பதுதான். அதே போல, இலக்கிய நூல்களைக் கற்பதன் முதன்மையான நோக்கம் நூல்நயம் கண்டு இன்புற வேண்டும் என்பதுதான்.



**ஒப்புயர்வற்ற சில நூல்கள்**

சில நூல்கள் மேற்குறிப்பிட்ட அறிவுறுத்துதல், இன்புறுத்துதல் ஆகிய இரு பண்புகளையும் ஒருங்கே நிகழ்த்தி வருவது கண்கூடு. வள்ளுவர் வகுத்தளித்த குறள், பாரதியின் எழுத்துகள் இவை ஒரே நேரத்தில் இலக்கணப் பனுவலின் உறுதியையும், இலக்கியப் பனுவலின் எழிலையும் கொண்டிலங்குகின்றன.

**சைவமும் தமிழும்**

தமிழின் வள மேம்பாட்டிற்குச் சமணம், பௌத்தம், சைவம், வைணவம், கிறித்துவம், இஸ்லாம், சமய மறுப்பு ஆகிய அனைத்து நிலைகளிலிருந்தும் தொண்டு நிகழ்த்தப்பட்டிருப்பதை இலக்கிய வரலாற்று நூல்கள் சிறப்புற எடுத்தியம்புகின்றன. அவற்றுள் சைவ நூல்களை சாத்திர நூல்கள் மற்றும் தோத்திர நூல்கள் என இரு பெரும் வகைப்பாட்டிற்குள் உட்படுத்தி நோக்குவது மரபு.

மெய்கண்டார் இயற்றிய ‘சிவஞானபோதம்’ முதலிய பதினான்கும் சாத்திர நூல்களாக அறியப் பெறுகின்றன. சைவ இலக்கணம் அறிவிப்பதால் அவை அப்பெயர் பெற்றன. சாத்திரம் என்ற சொல்லிற்கு இலக்கணம் என்பதே பொருள், பன்னிரு திருமுறைகள் அனைத்தும் தோத்திர நூல்கள் என்ற பகுப்பின் பாற்படுகின்றன. இவற்றுள் ஒன்றாக உள்ள திருவாசகம் போன்ற நூல்கள் உலக இலக்கியமாகக் கற்கப்பெறும் தகுதி வாய்க்கப்பெற்றவை.

சாத்திர நூல்கள் என்பதற்காக அவற்றுள் இலக்கிய எழில் அமையப் பெறாது என்றும், தோத்திர நூல்கள் என்பதற்காக அவற்றுள் இலக்கண ஆழம் அறவே அமையப்பெறாது என்று எண்ணி மயங்கலாகாது. நூலில் பெரும்பான்மையாகக் காணக்கிடைக்கும் பண்பு பற்றியே அவை மேற்குறிப்பிட்ட இரண்டு பெயர்களையும் முறையே பெற்றிலங்குகின்றன.

**நெஞ்சுவிடுதூது ஓர் அறிமுகம்**

"உமாபதி சிவாச்சாரியார்" என்ற ஆசிரியரால் இயற்றப்பட்டது "நெஞ்சுவிடுதூது. சைவ சித்தாந்த ஆசிரிய மரபில் 'மெய்கண்டார்', 'அருணந்தி சிவாச்சாரியார்' 'மறைஞானசம்பந்தர்' ஆகிய ஆசிரியர்களின் மரபில் தோன்றியவர் இவர். இந்த நால்வரையும் 'சந்தானக் குரவர்கள்' என்று குறிப்பது சைவ மரபு.

உமாபதி சிவாச்சாரியார் தம் ஆசிரியரை இறைவனாகவே கருதி அவரையே தலைவனாகவும், தன்னைத் தலைவியாகவும் கற்பித்துக் கொண்டு அவரிடமிருந்து தமக்குரிய மாலையை வாங்கி வரும்படி தம் நெஞ்சையே தூதாக அனுப்புவதாக அமைந்திருக்கும் நூல் நெஞ்சுவிடுதூது. இதை முப்பெரும் பிரிவுகளாகப் பகுத்தமைத்துக் கற்க முடியும்.

இறைவன், உயிர், தளை ஆகிய முப்பெரும் பொருள்களின் இயல்பை விரிப்பது முதற்பிரிவு .

இறைவனாகிய சிவபெருமானின் பத்துச் சிறப்புகளை விரித்துரைப்பது இரண்டாம் பிரிவு.

தூதாக நெஞ்சு செல்லும்போது அது வழியில் சந்திக்க நேரிடும் சில மாந்தர்களின் சிந்தனை இயல்பை விவரிப்பதாக அமைவது இறுதியாக அமைந்த மூன்றாவது பிரிவு.

**தூதாக நெஞ்சமே செல்வதில் உள்ள சிறப்பு**

தூது என்பது இந்திய மொழிகளில் அமைந்த இலக்கியங்களில் காணப்பெறும் மிகப் பொதுவான உள்ளடக்கம் ஆகும். அகம், புறம் ஆகிய இரு வாழ்வியல் அனுபவங்களிலும் இந்தத் தூது ஒரு முதன்மையான இடத்தைப் பெற்றுச் சிறந்திருக்கும் மாண்பை இலக்கியங்கள் காட்டுகின்றன.

வடமொழியில் மகாகவி காளிதாசர் மேகதூதம் என்ற பெயரில் ஒருநூல் கண்டார். நம் பழந்தமிழ் இலக்கியமாகிய சங்க இலக்கியத்தில் தலைவி தலைவன் நலம் விரும்பி தோழி தூதாகச் செல்லும் சான்றுகள் கிடைக்கின்றன. பிற்காலத்தில் இந்தத் தூது என்ற உள்ளடக்கமே ஒரு தனிப்பட்ட இலக்கிய வகையாகச் சிறந்துயர்ந்தது. சிற்றிலக்கிய காலகட்டம் என்று அறியப்பெறும் காலப் பகுதியில் இந்தப் போக்கு ஏற்றம் பெற்றது.

தூது இலக்கியத்தில் தூதாக அனுப்பப் பெறும் பொருளின் மாண்பு உயர்த்தப்பட்டும் மற்ற பொருட்களின் மாண்பு குறைக்கப்பட்டும் கூறப்படுவது வழக்கு. அத்தகைய நிலையில் மேலே சுட்டிக்காட்டப்பட்ட உயர்வும் இழிவும் சில நேரங்களில் மிகையாகவும் செயற்கையாகவும் தோன்றிவிடுவது உண்டு.

ஆனால் 'நெஞ்சுவிடுதூது' தலைவி தன் நெஞ்சத்தையே தூதாக அனுப்பியதன் மூலம் அவளின் எண்ண நிறைவேற்றம் எவ்வித இடையூறும் இன்றிக் கைகூடுகிறது. காரணம் வேறு எந்தப் பொருளைத் தூதாக அனுப்பினாலும் அது அவளின் துயரத்தை அறிந்ததை விளக்குதல் என்ற நிலையிலேயே விளக்க நேரிடும். ஆனால் நெஞ்சமே தூதாகச் சென்றால் அனுபவித்ததை விளக்குதல் என்ற நிலையில் அது அமையும். எனவே, தூதாக அனுப்புவதற்கு நெஞ்சையே தெரிந்தெடுத்ததன் பின்னுள்ள உமாபதி சிவாச்சாரியாரின் கவியுள்ளம் போற்றுதற்குரியதே ஆகும்.

**திருக்குறளில் நெஞ்சம்**

திருக்குறளில் நெஞ்சம் எவ்வாறு புனையப்பெற்றுள்ளது என்ற கேள்வி ஒரு வகையில் நகைப்பிற்குரியதே ஆகும். காரணம் குறள், அதன் காமத்துப்பால், அதில் காணப்பெறும் காதல் தருணங்கள் இவையனைத்தும் நெஞ்சத்தின் சித்திரங்கள் அன்றி வேறில்லை. அவை ஒரு புறம் அமையட்டும்.

தலைவி தம் நெஞ்சோடு கிளத்தலாகவும், புலத்தலாகவும் இரு அதிகாரங்கள் குறளில் இடம் பெற்றுள்ளன. புலத்தல் அல்ல கிளத்தலே நெஞ்சுவிடுதூதில் உள்ள உணர்வுச் சூழலுக்கு இசைவாக இருப்பதால் இங்கு நெஞ்சோடு கிளத்தல் என்ற அதிகாரமே ஒப்பீட்டிற்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது. நெஞ்சுவிடுதூது பற்றி விரிவாகவே அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக அதன் உள்ளடக்கம் இயன்றவரை இங்கு விளக்கியுரைக்கவும் படுகிறது.

வள்ளுவரின் நெஞ்சோடு கிளத்தல் என்ற அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள செய்திகள், பின்வருமாறு:

தலைவி 'தன் நோயைத் தீர்க்கும் மருந்தொன்றை ஆராய்ந்து சொல்லாயோ' என்று கேட்கிறாள்.

காதல் இல்லாதவரை நினைப்பது பேதைமை அல்லவா என்கிறாள்.

அவருக்குத் தன்மேல் அன்பு இல்லாத போது அவரை நினைத்து வருந்துவது ஏன்? என்று வினவுகிறாள்.

காணவேண்டும் என்ற விருப்பத்தில் தன்னையே தின்றுவிடவும் தயங்காத இந்தக் கண்களையும் உடனழைத்துச் செல்லவேண்டும் என்று நெஞ்சத்தைக் கேட்டுக்கொள்கிறாள்.

அவரைக் கைவிடத்தான் இயலுமா என்று தன் இயலாமையை விளக்குகிறாள்.

ஒன்று காமத்தை விட்டுவிடு, இல்லை, நாணத்தை விட்டுவிடு என்று நிபந்தனை விதிக்கிறாள்.

பிரிந்தவரின் பின் செல்கிறாய் பேதை நெஞ்சமே என்று கடிந்துகொள்கிறாள்.

எங்குதான் செல்கிறாய் நெஞ்சமே என்று வினவுகிறாள்.



அவர் நெஞ்சத்தில் இருப்பதால் இன்னும் அழகை இழக்கிறாய் என்று தனக்குத்தானே கூறிக்கொள்கிறாள்.

மேற்கண்ட அனைத்துச் சூழல்களிலும் நெஞ்சத்துடனான ஒரு இணக்கத்தை நோக்கியே தலைவி செல்வது புலனாகிறது. மாறாக நெஞ்சோடுபுலத்தல் என்ற அதிகாரத்தில் இதனினும் வேறுபட்ட ஒரு பிணக்கு முரண்பாடே தலைவிக்கு அவள் நெஞ்சத்தோடு நிகழ்கிறது.

**நெஞ்சுவிடுதூதின் அமைப்பு**

தொடக்கத்தில் இறைவன், உயிர், தளை ஆகிய மூன்று அடிப்படைப் பொருள்களின் இயல்பு உரைக்கப் பெறுகிறது. அதில் இறைவன் நான்முகனும், நாரணனும் முறையே சிவபெருமானின் முடியையும் அடியையும் காணப் புறப்பட்டு இயலாமல் போன செய்தி இடம்பெற்றிருக்கிறது. மேலும் வேதத்தாலும் அறிய இயலாத சிறப்பு மிக்கவன் இறைவன் என்ற கருத்தும் உள்ளது. இந்த இரண்டு செய்திகளும் வடமொழிக்கு மாறான குரல்கள் நன்கு ஒலித்த காலச் சூழல் ஒன்று தமிழகத்தில் நிலவியது என்ற உண்மையையும் குறிப்பாக உணர்த்துகின்றன.

**உயிர் பற்றிய குறிப்புகள்**

நெஞ்சுவிடு தூதில் 'உயிர்' என்றும் இருக்கும் ஒரு பொருளாக விவரிக்கப்பட்டுள்ளது. உயிர் எவராலும் படைக்கப்பட்டதன்று என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப்படையான கொள்கையாகும். காரணம் சைவசித்தாந்தம் சற்காரிய வாதத்தின் அடிப்படையில் நிறுவப்படும் ஒரு கொள்கை.

'இல்லாதது தோன்றாது; இருப்பது இல்லாமல் போகாது' என்பது சற்காரிய வாதம். இத்தகைய உயிர் ஆணவம், கன்மம், லோபம், மதம், மாச்சரியம் ஆகிய ஐந்து குற்றங்களாலும் ஐம்பொறிகளினாலும் அலைக்கழிக்கப்பட்டு அல்லலுகிறது. இந்த இடத்திலேயே திருக்குறள் பற்றிய குறிப்பு வருகிறது.

**திருக்குறளும் நெஞ்சுவிடுதூதும்**

நெஞ்சுவிடு தூது என்ற நூலில் திருக்குறள் இரு நிலைகளில் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. ஒன்று, நேரிடையான எடுத்தாள்கை, இரண்டு குறளை நினைவுபடுத்தும் சொல்லாட்சிகளைப் பயன்படுத்துதல். இறைவனின் பத்துச் சிறப்புகளை விளக்கும் பகுதியில் இறைவனுக்கு உரிய மலை என்பது குணக்குன்று என்றே குறிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு, உயிர் ஐம்பொறிகளுக்கும் உரியவையே செய்து இறப்பிற்கும் பிறப்பிற்குமிடையே உழலும் இயல்பு ஓரளவு பண்பட்டிருக்கும் நெஞ்சத்திற்குத் தலைவியால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

நெஞ்சுவிடு தூதில் தலைவனின் சிறப்புகள் தலைவியால் தன் நெஞ்சிற்குக் கூறப்படுகின்றன. அத்தகைய பத்து சிறப்புகள் பத்து உறுப்புகள் என்ற பொருள்படும் 'தசாங்கம்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளன. அவையாவன:

**1. மலை**

சிவ பெருமானுக்கு உரிய மலை கட்புலனாகும் கற்களால் அமையவில்லை. மாறாக அது குணத்தால் உருவாகியிருக்கிறது. இப்படி மலை, ஆறு எனப்படும் பருப்பொருள்களைக் கண்களுக்குப் புலனாகாத நுண்பொருள்களாக உருவகித்திருப்பதில்தான் உமாபதி சிவாச்சாரியாரின் இலக்கிய வெற்றி கை கூடியிருக்கிறது. இலக்கியத்தை மரபு ∴ நவீனம், சமய மறுப்பு முதலிய எல்லைக் கோடுகளைக் கடந்து திறந்த மனத்துடன் அணுகும்போது ஒரு தமிழ் மாணவன் என்று எண்ணி எண்ணிப் பெருமை கொள்வதற்குரிய எத்தனையோ தருணங்கள் வாய்க்கப் பெறும் என்ற உண்மை இங்கு இன்னொரு முறையும் உறுதிப்பட்டிருக்கிறது.



சிவபெருமானுக்குரிய மலை 'குணக்குன்று'. பண்புமலை என்று சொல்லாமல் குணமலை என்று சொல்லியிருப்பதில் திருக்குறளின் தாக்கம் மறைமுகமாத் தெரிகிறது. குணம் என்னும் குன்றேறி என்பது வள்ளுவத்தின் வாக்கு.

**2. ஆறு**

சிவபெருமானுக்குரிய ஆறு தருமகிரி எனப்படும் அறமலையில் தோன்றுகிறது. இருவினைகளையும், ஐந்து குற்றங்களையும் வேருடன் களைந்தபடி பாய்கிறது. 'தொம்' என்று ஒலிக்கிறது. மும்மலம் என்ற காட்டின் வேர்களையும் பறிக்கிறது. ஐம்பொறிகளின் தாகம் தணிக்கிறது. செயற்கருவிகளைத் தூய்மைப்படுத்துகிறது.

முக்குணங்களையும் அழித்து ஐம்பூதங்கள் என்ற நிலங்களில் ஓடுகிறது. உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று நிலைகளையும் கடக்கிறது. எல்லா உயிர்களுக்குள்ளும் பாய்ந்தோடுகிறது. முடிவில் இறையொளி என்ற பேராழியில் சென்று கலக்கிறது அந்த ஆனந்தம் என்ற வற்றாப் பேராறு.

**3. நாடு**

சிவபெருமானுக்குரிய நாட்டின் பெயர் இங்கு நேரிடையாகக் கூறப்படவில்லை என்பது உண்மையே என்றாலும் அந்த நாடு ஆகமங்களாலும் வரையறுத்து உரைக்க முடியாத அளவிற்குப் பெருஞ் சிறப்புகளைக் கொண்டது என்று எடுத்தோதப்பட்டிருக்கிறது.

**4. ஊர்**

சிவஞான சிந்தையில் அசைவற்று ஊன்றியிருப்பதையே வாழ்வின் முழுமுதல் நோக்கமாகக் கொண்ட மக்கள் வாழ்ந்திருக்கும் ஊர் எதுவோ, அதுவே சிவபெருமானுக்குரிய ஊர் ஆகும்.

**5. மாலை**

பொய்யற்றவர்களின் உள்ளங்களைக் கவர்ந்திழுக்கும் மாலையே சிவபெருமானுக்குரியதாகும். நூலின் பிறிதொரு இடத்தில் தலைவி தலைவனாகிய சிவபெருமானுக்குரிய கொன்றை மாலையை வாங்கிவரும்படி கேட்டுக்கொள்வதாகவும் ஒரு குறிப்பு இந்த நூலில் காணப்படுகிறது.

**6. குதிரை**

இவருக்குறிய குதிரை வானம், ஏழ் உலகம், அலைகடல் அனைத்தையும் கடந்து நினைப்பவர்களின் உள்ளங்களில்கூட நிலையாக நிற்காத மிகுவேகமுடையது.

**7. யானை**

சிவபெருமானின் யானை எங்கும் பரவியிருக்கும் காமம், கோபம் முதலிய ஐங்குற்றங்களை அழிக்கிறது. சமயக்கணக்கரின் வலிமையையும் அழிக்கிறது. அன்பர்களின் உடலில் புகுந்து அன்பென்னும் தேனைப் பருகுவது அந்த யானை.

**8. கொடி**

சமயம் கடந்ததாக இருக்கிறது சிவபெருமானின் கொடி. இந்த இடத்தில் திருக்குறளுக்கும் நெஞ்சுவிடு தூதிற்கும் இடையே அமைந்த வேறுபாட்டையும் பதிவு செய்ய வேண்டும். குறளில் எந்தச் சமயத்திற்கும் முற்றாதரவு என்பதில்லை. ஆனால் நெஞ்சுவிடு தூது முற்றாக ஒரு சைவநூல். அதுமட்டுமல்ல அது சைவத்தின் ஒப்புயர்வை நிலைநாட்டுதல் பொருட்டே எழுந்தது. அவ்வாறு அமைந்த தன் நோக்கத்தை நிறைவேற்றும் விதமாகவே அங்குக் கொடி எந்தவித அடையாளத்தின் தேவையின்றி , ஏன் சைவ அடையாளத்தின் தேவையுமின்றிப் பறப்பதாகக் குறிப்பு வருகிறது.

**9. முரசு**

ஒளியில் திகழ்ந்து உடலில் உள்ள வாயுவை அடக்கி, வானத்து வாயுவையும் உறவாக்கித் திகழும் இன்ப அருளே சிவபெருமான் தம் முரசு இத்தகைய விளக்கங்கள் சைவசித்தாந்தத்திற்கும் யோகக்கலைக்கும் இடையே உள்ள உறவை விளக்குவனவாக உள்ளன.

**10. ஆணை**

சிவபெருமானின் ஆணை இந்த உலகம் மட்டுமல்ல, நான்முகன், நாரணன் ஆகியோர் கட்டுப்படுத்தும் எந்த உலகிலும் தடையின்றி நடக்கும் தன்மையுடையது.

இவ்வாறு, தலைவனாக விளங்கும் சிவபெருமானுக்குரிய பத்துச் சிறப்புகள் எடுத்தோதப்படுகின்றன. அதன் பிறகு சிவபெருமான் அவனே ஞானாசிரியராய் அமைந்த விதம், அந்த ஆசிரியரின் அறிவுரை ஆகியவை நூலில் நவிலப்படுகின்றன. சிவபெருமானே சம்பந்தமாமுனிவராய் வந்தவர். அவர் கற்றவர் வாழ் தில்லையில் இருப்பவர். அன்பர்களின் மனத்தாலும் முற்றாக அறியப்படாத சிறப்பினைக் கொண்டவர். அவர் திருவடிகளை தலைவி தன் தலை மீது சூடியிருக்கிறாள். அவர் பவனிவரும் போது எல்லோரையும் போலவே தலைவியும் அந்த இறைவனைத் தலைவனை, ஆசிரியப் பெருந்தகையைப் புகழ்ந்திருக்கிறாள். அவர் தலைவியின் ஐந்து வினைகளையும் நீக்கி,

1. வெண்ணீறு

2. சிவவேடம்

இவையே மெய்யென்று

1. செல்வம்

2. உலக வாழ்க்கை இவை பொய்யென்றும் அறிவுரை கூறுகிறார்.

ஐந்தெழுத்து மந்திரத்தை அறிவித்து உள்ள ஒளியை எழுப்புவிக்கிறார். அதன் பிறகு அவர் இருக்கும் இடமும், அந்த இடத்தை அடைவதற்காகச் சென்று கொண்டிருக்கும்போது எதிர்ப்படும் புறச்சமயத்தவர்களின் இயல்புகளும் கூறப்படுகின்றன. இந்த இடங்களிலெல்லாம் பல்வேறு சமயங்கள் கண்டிக்கப்பெறுகின்றன.

**உலகாயுதம்**

உலகாயுதர்கள் பெண்களுடன் களிப்பதையே முத்தி என்று சொல்கிறார்கள். எனவே அவர்களிடம் செல்ல வேண்டாம்.

**சங்கராத்வைதம்**

பிரம்மத்தைக் கண்டவர்களைப்போல் தம்மையே கண்டு தாமே பிரம்மமென்று மயங்கித்திரியும் அத்வைதிகளிடமும் சென்றுவிட வேண்டாம்.

**பௌத்தம்**

உணவுக்காகக் கொலை செய்கிறார்கள். ஆனால் அந்தக் கொலையைக் கடியாமல் அறமே தெய்வமென்று சொல்லும் பௌத்தர்களிடம் செல்லவேண்டாம்.

**சமணம்**

நாணமின்றி ஆடையகற்றி உரோமம் பறித்து இருப்பதையே முக்தி என்று சமணர்கள் சொல்கிறார்கள். அவர்களுடனும் சேரவேண்டாம்.

**மீமாம்சை**

வேதம் ஓதியும் அதன் பயன் உணராதவர்களாய் வாழும் அந்தணர்களுடனும் சேர வேண்டாம்.

இது மட்டுமல்ல. திருநீற்றையும் சிவாலயத்தையும் வெறுப்பவர்களிடம் செல்லவேண்டாம். அரனைப் பழிப்பவர்களைப் பார்க்கவும் வேண்டாம் என்றெல்லாம் தலைவி தன் நெஞ்சிற்கு அறிவுரை கூறுகிறாள். இத்தகைய அறிவுரைகள் பண்டைய மரபின் மீது உமாபதி சிவாச்சாரியருக்கு இருந்த அழமான அறிமுகத்தை உய்த்துணர உதவுகின்றன.

ஆற்றுப்படை இலக்கியங்களில் பரிசில் பெற்றுத் திரும்பும் ஒருவன் மற்றவர்களுக்கு வழியின் சிறப்புணர்த்துவதாகப் பாடப் பெற்றிருக்கும். இங்கு வழியின் சிறப்பிற்குப் பதிலாக அதன் அருமை உணர்த்தப்பட்டிருக்கிறது. அதாவது, வழியில் உலகாயுதர்கள் உட்பட பிறச்சமயத்தவர்கள் மயக்கிவிடவும் கூடும். அவர்களிடம் ஏமாந்துவிட வேண்டாம் எனத் தலைவி தன் நெஞ்சிற்கு அறிவுரை கூறுவதாக காணப்படுகிறது.

இத்தகைய போக்குகள் தமிழ்ச் செவ்விலக்கிய மரபு கால மாற்றத்தால் தேய்ந்தாலும், நிலத்தில் அடியில் இருக்கும் ஊற்றுபோல மறைமுகமாகப் பிற்கால மரபுகளின் மீது செல்வாக்கு செலுத்துகின்றன என்ற எண்ணத்தை வலுப்படுத்துகிறது.

**மாலை வேண்டுதல்**

இத்தகைய அரிய வழியைக் கடந்து போனால் சம்பந்த மாமுனிவருக்கும் அரியவனாகிய இறைவன் எதிர்ப்படுவான். அவன் திருவடிகளை வணங்கி அவனிடமிருந்து கொன்றை மாலை வாங்கிவரும்படித் தலைவி தன் நெஞ்சத்தைக் கேட்டுக்கொள்வதாக நெஞ்சுவிடு தூது அமைந்திருக்கிறது.

**நிறைவாக சில சொற்கள்**

திருக்குறள் நெஞ்சுவிடு தூது என்ற நூல் மீது இரு நிலைகளில் செல்வாக்கு செலுத்தியிருக்கிறது. மேலும் வள்ளுவரின் நெஞ்சோடு கிளத்தல் என்ற அதிகாரத்தில் இடம் பெற்றிருக்கும் நெஞ்சமும் இந்த நூலில் இடம் பெற்றிருக்கும் நெஞ்சமும் ஒரே தன்மையிலான நல்லியல்புகளைக் கொண்டு தலைவியுடன் இணக்கமான முறையில் அவளுக்கு உதவும்பான்மையில் விளங்குகின்றன. மேலும் ஆற்றுப்படை தூது போன்ற பிற தமிழ்ச் செவ்வியல் உள்ளடக்கங்களும் நெஞ்சுவிடு தூது என்ற பனுவல் மீது தாக்கம் செலுத்தியிருக்கின்றன.

ஒப்பிலக்கியம் என்பது நூல்களிடையே காணப்பெறும் ஒற்றுமைகளை மட்டும் கண்டு அவற்றை மிகையாக உரைப்பதன்று. அதற்கு மாறாக வேற்றுமைகளையும் அடையாளம் கண்டு அவற்றுக்குரிய காரணங்களையும் தேட முயல்வதே உண்மையில் ஒப்பிலக்கியமாகும். அந்த வகையில் சமயச் சார்பு என்ற ஓர் நிலையில் குறளுக்கும் இந்த நூலிற்கும் இடையே வேறுபாடு காணப்படுகிறது என்பதையும் இங்குப் பதிவு செய்ய வேண்டும். இதற்குக் காரணம் பிற்காலத்தில் தோன்றிய நெஞ்சுவிடு தூது என்ற நூலிற்குரிய வரலாற்றுச் சூழலே ஆகும்.

(☺)(☺)(☺)(☺)(☺)

# மீனவர்களின் மரபுவழி அறிவியலும் மருத்துவமும்

**முனைவர் க இராமபாண்டி**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகக் கல்லூரி,
நாகம்பட்டி.
mathupandi99@gmail.com

*****

இராமநாதபுரம் மாவட்டம், இராமேஸ்வரம் வட்டம், பாம்பன் வட்டாரத்தில் வாழ்கின்ற மீனவர்கள் தங்கள் கடல் தொழிலின் அனுபவத்தினால் கடல் பரப்பு, கடல் நீவாடு (நீரோட்டம்), கடலில் அடிக்கும் காற்று, கடலில் உருவாகும் புயல், மழை, சித்திரைக் குழப்பம், கடல் பெருக்கம். கடல் வடு, கடலில் மீன் பிடிக்கச் செல்லும்போது கடலில் இருந்துகொண்டு அலைகளின் மூலமும், நட்சத்திரங்கள் மூலமும் திசைகளையும், நேரத்தையும் கண்டறியும் முறை ஆகியவை குறித்து மரபுவழியாக அறிந்துவைத்துள்ளனர். கடல்வாழ் உயிரினங்களுள் மருத்து வத்திற்குப் பயன்படும் மீன்கள், ஆமைகள் பற்றியும் மரபுவழியாகக் கட்டமைத்துள்ளனர். இங்கு கட்டுரை அளவின் தேவை கருதி கடல் நீவாடு, மருத்துவத்திற்குப் பயன்படும் மீன்கள், ஆமைகள் குறித்து மட்டும் ஆராயப் பெற்றுள்ளன.

**நீவாடு (நீரோட்டம்) குறித்து மரபுவழி அறிவு**

கடல் எப்பொழுதும் ஒரே சீராக இருப்பதில்லை. அமாவாசை, பௌர்ணமி, அஷ்டமி, நவமி ஆகிய நாட்களில் கடலின் தன்மை மாறிக்கொண்டே இருக்கும். சில இடங்களில் அதிகாலையில் கடல்நீர் வற்றியநிலையிலும் மாலையில் பெருகியும் காணப்படும். கடல் நீர், குளத்து நீர் போன்று ஒரே இடத்தில் நிலையாக இல்லாமல், ஒரு திசையிலிருந்து மற்றொரு திசையை நோக்கி ஓடிக்கொண்டிருக்கும் நீரோட்டத்தை ‘நீவாடு’ அல்லது ‘நீரோட்டம்’ எனக் குறிப்பிடுவர்.

**நீவாடு குறித்து பரதவர்களின் மரபுவழி அறிவு**

பரதவர்கள் கடலில் ஓடும் நீரோட்டத்தைக் கரையில் இருந்துகொண்டே அறிந்து கொள்கின்றனர். வெண்மேகத்திற்கு (பஞ்சு மேகம்) மேல் ஒரு மேகம் இருக்கின்றது. இந்த மேகம் ஓடுவதைக் கண்டு கடலில் ஓடும் நீரோட்டத்தைக் கண்டுகொள்ளலாம். கடல் நீர் ஓடுவதால் இந்த மேகம் ஓடுகிறது என்று குறிப்பிடுகின்றனர். இந்த நீரோட்டம் மணிக்கு ஐம்பது கிலோ மீட்டர் வேகத்தில் ஓடும் என்று கூறுகின்றார்கள். இந்த நீரோட்டத்தில் மீன்கள் அதிகமாகப்படுவதால் இதனைக் கண்டறிந்து மீன்பிடிக்கச் செல்கின்றார்கள். இந்நீரோட்டம் மே மாதத்தில் அதிகமாக ஓடும்; ஏப்ரல் மாதத்தில் நீரோட்டம் ஓடாது; மற்ற மாதங்களில் ஒரு சில நாட்களுக்கு ஓடும். இந்நீரோட்டத்தின் வழியாக மீன் பிடிக்கச் சென்றால் அதிக மீன்கள் படும் என்று கூறுகின்றார்கள்.

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள மீனவர்களுள் முக்குவர்கள் நீரோட்டங்கள் குறித்து மரபுவழியான சிந்தனைகளைக் கட்டமைத்துள்ளதை இவற்றிக்கு சான்றாகக் கொள்ளலாம். கரையில் நின்று கொண்டு வானத்திலுள்ள மேகம், நட்சத்திரம், நிலவு ஆகியவற்றைப் பார்த்து விட்டு கடலில் என்ன நீரோட்டம் ஓடுகிறது எனக் கூறிவிடுவர். இதற்கு சில வானியல் அறிகுறிகளை ஆதாரமாகக் கொள்கின்றனர். கரைப்பகுதிக்குத் தெற்கில் (கடற்பரப்பின் மேல்) காணப்படும் மேகம், நட்சத்திரம் ஆகியவற்றையே முக்குவர்கள் தம் கணிப்பிற்கு கணக்கில் எடுப்பர். மேகங்களும் நட்சத்திரங்களும் ஓரிடத்தில் ஒதுங்கி நிற்பதை இவர்கள் நீத்தாரம் என அழைப்பர். நீத்தாரம் தோன்றுபோது வான வெளியும் நட்சத்திரங்களும் பிரகாசமாக மின்னிக்கொண்டிருக்கும். நீத்தாரம் அமையும் திசைகளைக் கொண்டு நீரோட்டத்தைக்

கணிப்பர். நீத்தாரம் தென்கிழக்கில் இருந்தால் கடலில் சோணுவாடு நீரோட்டம் பலமாக இருக்கும். நீத்தாரம் கிழக்கில் இருந்தால் சோணுவாடு கரவலு வாணுவாடு நீரோட்டமும், நீத்தாரம் தென்மேற்கில் இருந்தால் வாணுவாடு நீரோட்டமும், நீத்தாரம் மேற்கில் இருந்தால் வாணுவாடு கரவலு நீரோட்டமும் அமையும் என்பது இவர்களது கணிப்பு. நீத்தாரம் உச்சிக்கு நேராக இருந்தால் கடல் அமைதியாகவும் நீரோட்டங்கள் இல்லாமலும் இருக்கும் என நம்பப்படுகின்றது. நிலவைச் சுற்றிப் பிரகாசமான வட்டம் காணப்பட்டால் (கொடை சூழ்ந்து வந்தால்) கடலில் ஏதாவது ஒரு நீரோட்டம் அதிகச் சக்தியுடன் அமைந்திருக்கும் என நம்புகின்றனர். இந்நேரத்தில் மீன் கிடையாது. நிலவைச் சுற்றிய பிரகாசமான வட்டம் மறையும்போது நீரோட்டத்தின் சக்தியும் குறைந்து விடுவதாகக் குறிப்பிட்டுள்ளார்(ஞா.ஸ்டீபன்,2005:49).

**நீவாட்டின் வகைகள்**

நீரோட்டினை பரதவர்கள் இரண்டு வகையாகப் பிரித்துள்ளனர். அவை 1.வா நீவாடு (வா நீரோட்டம்), 2.கச்சா நீவாடு (கச்சா நீரோட்டம்) ஆகும். 1. வா நீவாடு: வா நீவாடு என்பது கடலில் வடக்குத் திசையிலிருந்து தெற்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். 2. கச்சா நீவாடு: கச்சா நீவாடு என்பது கடலில் தெற்குத் திசையிலிருந்து வடக்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும்.

**நீவாடு குறித்து வலையர்களின் மரபுவழி அறிவு**

வலையர்கள் கடலில் ஓடும் நீரோட்டத்தை நான்கு வகையாகப் பிரித்தறிந்துள்ளனர். அவை 1. வா நீவாடு 2. சோழக நீவாடு, 3.கச்சா நீவாடு, 4.கொண்டல் நீவாடு ஆகும்.

**1.வா நீவாடு**



கடலில் வடக்குத் திசையிலிருந்து தெற்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். இந்நீவாட்டின் வழியாக மீன்கள் பிடிக்கச் செல்லும்போது இறால், குமுளா, குதிப்பு, பண்ணா, கட்டிக்காளை போன்ற மீன்கள் கூடுதலாகக் கிடைக்கும் என்று குறிப்பிடுகின்றனர்.

**2.சோழக நீவாடு**

சோழக நீவாடு என்பது கடலில் தெற்குத் திசையிலிருந்து வடக்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டாகும்.

**3.கச்சா நீவாடு**

கடலில் மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். இக்கச்சா நீவாடு ஓடும்போது காற்று வேகமாக அடிக்கும்.

**4.கொண்டல் நீவாடு**

கிழக்குத் திசையிலிருந்து மேற்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டாகும். இந்தக் கொண்டல் நீவாட்டின்போது காற்று வேகமாக அடிக்கும். இந்நீவாட்டையும், காற்றையும் எதிர்த்து இயந்திர படகின் உதவியின்றிச் செல்லமுடியாது என்று கூறுகின்றனர்.

**ஒற்றுமை**

பரதவர்கள் இரண்டு வகையான நீவாட்டையும், வலையர்கள் நான்கு வகையான நீவாட்டையும் குறிப்பிடுகிறார்கள். இந்த இரண்டு இனத்தவர்களும் கூறிய நீவாடுகளில் வா நீவாட்டில் மட்டும் ஒற்றுமை காணப்படுகிறது. இந்நீவாட்டின் பெயர்களிலும், நீர் ஓடும் திசைகளிலும் ஒற்றுமை காணப்படுகின்றது.

**வேற்றுமை**

பரதவர்கள் இரண்டு வகையான நீவாடுகளைக் கூறுகின்றனர். ஆனால், வலையர்கள் நான்கு வகையான நீவாடுகளைக் குறிப்பிடுகின்றனர். பரதவர்கள் கூறிய கச்சா நீவாடு தெற்கிலிருந்து வடக்கு நோக்கி ஓடும் என்றும், வலையர்கள் கூறிய கச்சா நீவாடு மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடும் என்றும் தெரியவருகின்றன. இந்நீவாட்டின் பெயர்களில் ஒற்றுமை காணப்படுகிறதே தவிர, இந்நீவாடு ஓடும் திசைகள் வேறுபடுகின்றன. பரதவர்கள் கூறிய கச்சா நீவாட்டை, வலையர்கள் சோழக நீவாடு என்று கூறுகின்றார்கள். பரதவர்கள் கூறிய கச்சா நீவாடும், வலையர்கள் கூறிய சோழக நீவாடும் பெயர்களில் வேறுபடுகின்றனவே தவிர, இவை ஓடும் திசைகள் ஒன்றுபட்டுக் காணப்படுகின்றன. பரதவர்கள் கூறாத இரண்டு (சோழக நீவாடு, கொண்டல் நீவாடு) நீவாடுகளை வலையர்கள் கூறுகிறார்கள்.

**நீவாடு குறித்து கடையர்களின் மரபுவழி அறிவு**

கடையர்கள் கடலில் ஓடும் நீரோட்டத்தை நீர் என்று குறிப்பிடுகிறார்கள். இவர்கள் ஐந்து வகையான நீரோட்டத்தைக் கண்டறிந்துள்ளனர். அவை. 1.வாடை நீர், 2.சோழக நீர், 3. கொண்டல் நீர் 4.கச்சான் நீர், 5.அரை நீர் ஆகியனவாகும்.

**வாடை நீர்**

வடக்குத் திசையிலிருந்து தெற்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். இவ்வாடை நீர் ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய மாதங்களில் ஓடும் என்று குறிப்பிடுகின்றனர்.

**சோழக நீர்**

தெற்குத் திசையிலிருந்து வடக்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். இச்சோழக நீர் சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி ஆகிய மாதங்களில் ஓடும் என்று கூறுகிறார்கள்.

**கொண்டல் நீர்**

கடலில் கிழக்குத் திசையிலிருந்து மேற்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும். இந்தக் கொண்டல் நீர் பங்குனி, சித்திரை ஆகிய மாதங்களில் ஓடும் என்று கூறுகிறார்கள்.

**கச்சான் நீர்**

கடலில் மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசையை நோக்கி ஓடும் நீரோட்டமாகும்.

**அரை நீர்**

கடல் தண்ணீரின் மேல்நீர் மட்டும் ஓடினால் அந்நீரோட்டத்தை 'அரை நீர்' என்று குறிப்பிடு கிறார்கள். அரை நீரோட்டம் ஓடுவதைத் 'தாத்தி' என்ற கருவியின் மூலம் அறிந்து கொள்கின்றார்கள். 'தாத்தி' என்பது ஒன்பது அங்குல நீளமும், நான்கு அங்குலச் சுற்றளவும் கொண்ட ஒரு இரும்புத் துண்டாகும். இந்த இரும்புத் துண்டில் அளவுகள் குறிக்கப்பட்ட நூல் கட்டப் பட்டிருக்கும். இத்தகைய தாத்தி எனும் கருவியைப் பயன்படுத்திக் கடலின் அடியில் இருக்கும் மணல்பரப்பு, சேறு, பாறை, கடலின் ஆழம் ஆகியவற்றை அறிந்துகொள்கிறார்கள். மணல் பரப்பு, சேறு, பாறை, கடலின் ஆழம் போன்றவற்றை அறிய தாத்தியைப் பயன்படுத்தும்போது தாத்தியில் கட்டப்பட்டு இருக்கும் நூலின் மேற்பகுதியை மட்டும் நீரோட்டம் இழுத்துச் சென்றால் அந்நீரோட்டத்தை 'அரை நீர்' என்று கூறுகிறார்கள். கீழ்ப்பகுதியில் உள்ள தாத்தியை (இரும்புத் துண்டை) இழுத்துச் சென்றால் அந்நீரோட்டத்தை முழு நீரோட்டம் என அழைக்கிறார்கள்.

**ஒற்றுமை வேற்றுமை**

கடையர்கள் ஐந்து வகையான நீரோட்டத்தைக் கூறுகிறார்கள். பரதவர்களும் வலையர்களும் கூறிய நீரோட்டத்தை விடக் கூடுதலாக அரை நீரோட்டம், முழு நீரோட்டம் ஆகிய இரண்டையும் கூறியுள்ளார்கள். பரதவர்களும், வலையர்களும் நீரோட்டத்தை 'நீவாடு' என்று அழைக்கிறார்கள். ஆனால், கடையர்களோ, நீரோட்டத்தை 'நீர்' என்று கூறுகின்றார்கள். வலையர்கள் கூறிய சோழக நீவாடு, கச்சான் நீவாடு, கொண்டல் நீவாடு என்ற மூன்று நீரோட்டங்களும் கடையர்கள் கூறிய சோழக நீர், கச்சான் நீர், கொண்டல் நீர் என்ற மூன்று நீரோட்டங்களும் ஒற்றுமையுடையன. அதாவது, நீரோட்டத்தின் பெயர்களிலும், அவற்றின் திசைகளிலும் மாற்றம் இல்லை. பரதவர்களும் வலையர்களும் 'வா நீவாடு' என்று கூறியதைக் கடையர்கள் 'வாடை நீர்' என்று அழைக்கின்றார்கள். கடையர்கள் அரை நீரோட்டத்தை மட்டும் கூடுதலாகக் கூறியுள்ளனர்.

**மீனவர்களின் மரபு வழி அறிவியல் மருத்துவ முறைகள்**

இந்தியக் கடலிலுள்ள தாவர, விலங்கினங்களை மருத்துவப் பயன்பாட்டிற்கு உட்படுத்துவதில் துவக்கநிலையில் தான் உள்ளோம். இப்பயன்பாட்டிற்கான ஆய்வு சிறிதளவேதான் செய்யப்பட்டுள்ளது. இருப்பினும் வாய்ப்புகள் அதிக அளவிற்குள்ளதெனத் தெரியவருகின்றது. உலகச் சுகாதாரக் கழகத்தின் அறிவிப்பின்படி மருத்துவத்திற்கு தேவையான 252 அத்தியவசியமான வேதிப்பொருள்களில் 11-1 விழுக்காடு தாவரங்களிலிருந்தும், 8.7 விழுக்காடு விலங்குகளிலிருந்தும் பெறப்படுகின்றன (C.N.Eraldo Medeiros,1999:6). மனிதர்கள் தங்கள் உடல்நலத்திற்கென எண்பது விழுக்காடிற்கும் மேலாக தாவர, விலங்கினங்களைச் சார்ந்துள்ளனர் என உலகச் சுகாதாரக் கழகத்தின் அறிக்கை கூறுகிறது (S.Rajan,2002:64).

மீனவர்கள் தங்கள் கடல் தொழிலில் ஏற்பட்டுள்ள அனுபவத்தின் மூலம் கடல்வாழ் உயிரினங்களைத் தங்கள் வாழ்க்கைக்குப் பயன்படுத்துகின்றனர். மீனவர்கள், மீன்பிடித்தொழிலில் கிடைக்கின்ற வருமானத்தின் மூலம் தங்கள் பொருளாதாரத் தேவையை நிவர்த்தி செய்கின்றனர். அதேபோல், தங்களுக்கு ஏற்படுகின்ற நோய்களுக்கு மீன்கள், ஆமைகள், பாசிகள் போன்ற கடல் வாழ் உயிரினங்களை மருந்துப் பொருள்களாகப் பயன்படுத்துகின்றனர்.

**சிமிலி மீன் (அ) திமிலி மீன் மருத்துவம்**

இம்மீனைத்தொட்டால் மின்சாரம் போல் சாக்கடிக்கும். பித்தம் உள்ளவர்களுக்கு அதிகமாகச் சாக்கடிக்கும். வாதம் உள்ளவர்கள் இம்மீனைத் தொட்டால் வாதம் சரியாகிவிடும் என்கின்றனர்.

**சுறாமீன் மருத்துவம்**

சுறா மீனிலிருந்து தயாரிக்கப்படும் மீன் எண்ணையை இளம்பிள்ளை வாதத்தால் பாதிக்கப் பெற்ற குழந்தைகளின் உடல்முழுவதும் தடவியும் உள்ளுக்கும் கொடுத்தால் இளம்பிள்ளை வாதம் சரியாகிவிடும். குழந்தைகள் 'கணை' என்ற நோயால் பாதிக்கப்படும் போது மீன் எண்ணையை காலை, மாலை ஒரு தேக்கரண்டி வீதம் உள்ளுக்குள் கொடுத்தால் கணை, கபம் போன்ற நோய்கள் குணமாகிறது(ப.மகாலெட்சுமி,2005:109).

**தேள் மீன் மருத்துவம்**

தேள் மீன் மிகவும் அரிதான ஒரு மீன் வகை. இம்மீனைப் பெருஞ்சீரகம், தேங்காய் சேர்த்து மஞ்சள் தூள், மிளகாய்த் தூள் சேர்த்து வறுத்துச் சாப்பிட வேண்டும். எப்படிப்பட்ட புற்றுநோயும் குணமாகும்.

**போத்தல் மீன் மருத்துவம்**

மீன் வகையில் சிறப்பான மீன் வகையாகும். இம்மீனில் புரதச் சத்தும், சுண்ணாம்புச் சத்தும் நிரம்பியுள்ளது. பாரிச வாயு என்ற பக்க வாயுவினால் பாதிக்கப்பட்டவர்களின் ஒரு காலோ, கையோ அல்லது ஒரு பக்கமோ துவண்டு விட்ட நிலை காணப்படும். இந்நிலை மாற இம்மீனைத் தொடர்ந்து ஒரு வாரம் சாப்பிட்டு வந்தால் நலம் பெறலாம் என்கின்றனர்.

**கருங்கெளுத்தி மீன் மருத்துவம்**

மீன் வகைகளுள் கருங்கெழுத்தி மீன் என்ற ஒரு வகை மீன் உண்டு. இம்மீனைக் கொண்டு வந்து சுத்தம் செய்து பூண்டுடன் வேகவைத்துத் தொடர்ந்து மூன்று நாட்கள், மூன்று வேளை சாப்பிட மஞ்சள் காமாலை நோய் குணமாகும். செங்காலா மீனும் மஞ்சள் காமாலை நோய்க்கு மருந்தாகப் பயன்படுகிறது(ப.மகாலெட்சுமி,2005:118,119,126).

**பன்னா மீன் மருத்துவம்**

பல்லில் புண்ணும், பூச்சியும் ஏற்பட்டு பல்லில் துர்நாற்றம் சிலருக்கு வீசும். அவர்கள் பன்னா மீனைப் புளியில் கரைத்து வேகவைத்து தக்காளி சேர்த்து சமைத்து தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் பல்நோய் குணமாகும்.

**கடல்பசு மீன் மருத்துவம்**

‘கடல் பசு’ என்ற மீனைத் தொடர்ந்து சாப்பிடுவதால் உடம்பில் உள்ள சர்க்கரை அளவைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க இயலும். சர்க்கரை நோயாளிகளுக்கு வரக்கூடிய உடல் அரிப்பு, உடல் எரிச்சல், உடல் புண் போன்றவைகளைக் கட்டுப்படுத்துகிறது.



**நெய் வெட்டி மீன் மருத்துவம்**

நெய் வெட்டி மீன் சிறுநீரகக் கல்லைக் கரைப்பதில் சிறந்த மருந்தாகச் செயல்படுகிறது. சிறுநீரகத்தில் பழுது ஏற்பட்டு சிறுநீருடன் இரத்தம் கலந்து வெளியேறும்போது அந்நோயைக் குணப்படுத்தும் மருந்தாகப் பயன்படுகிறது.

**உளுவ மீன் மருத்துவம்**

உளுவ மீன் நெஞ்சு வலியால் அவதிப்படுவர்களுக்கு சிறந்த மருந்தாகப் பயன்படுகிறது. இருதயத்திற்கு வலிமை தரும் மீனாக உள்ளது. இரத்தக் குறைபாடு உள்ளவர்கள் இம்மீனைத் தொடர்ந்து சாப்பிட இரத்தம், உடலில் ஊறும். இரும்புச் சத்தும், தாமிரச் சத்தும் அதிகளவில் இம்மீனில் உள்ளது தனிச்சிறப்பாகும்(ப.மகாலெட்சுமி,2005:122-124).

**ஆமை மருத்துவம்**

ஆஸ்துமா, மூலநோய் போன்ற நோய் உள்ளவர்கள் பேராமை, பங்குனி ஆமை ஆகிய ஆமைகளின் இரத்தத்தைக் குடித்துவிட்டு சிறிது தூரம் ஓடினால் இவ்விரு நோய்களும் குணமாகி விடும். இந்த ஆமைகளின் ஓட்டுப்பகுதிகளைப் படச்சுருள் (film role) தயாரிக்கப் பயன்படுத்து கின்றனர்.

**ஆடை முட்டை மருத்துவம்**

ஆமை முட்டையைப் பொரித்துச் சாப்பிடுபவர்களுக்கு தீராத காசநோய், தொண்டை வலி, கக்குவான் இருமல், வாந்தி, இரத்த வாந்தி போன்ற நோய்கள் குணமாகும்.

**ஆமைத் தோல் மருத்துவம்**

ஆமைத் தோலை வெய்யிலில் நன்றாகக் காயவைத்து பின் நெருப்பிலிட்டு கருக்கவேண்டும். அவ்வாறு கருக்கிய பின் வரும் சாம்பலை தேங்காய் எண்ணெய்யுடன் கலந்து காலை, மாலை, இரு வேளை உடலில் புண் ஏற்பட்டிருக்குமிடத்தில் பூச எப்படிப்பட்ட புண்களும் குணமாகி ஆறிவிடும். இந்த மருந்துக்கு ஆமைத்தோல் சூரணம் என்று பெயர். சொறி, சிரங்கு, பெருங்சிரங்கு நீங்கிவிடும். கரப்பான், தேமல், படை போன்றவற்றிற்கு சிறந்த மருந்தாக விளங்குகிறது. தலையில் ஏற்படும் ரொட்டை, புழுவெட்டு போன்ற இடங்களில் சூரணத்தைத் தடவி ஒரு மணி நேரம் ஊற வைத்துப் பின் பயத்தம் பருப்பு மாவைக் கொண்டு அலசவேண்டும். நோய்களால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் முடிகொட்டும். வாரம் இரண்டு முறை எனத் தொடர்ந்து நான்கு வாரங்கள் தடவ வேண்டும். பாதிக்கபட்ட இடங்களில் முடி முளைக்கும்(ப.மகாலெட்சுமி, 2003:69,70).

இறுதியாக, மீனவர்கள் இயற்கையோடு வினையாற்றும்போது ஏற்படுகின்ற அனுபவத்தின் வாயிலாக இயற்கையைப் புரிந்துகொண்டு அவை குறித்த கருத்துகளைக் கட்டமைத்து வைத்திருக்கிறார்கள் என அறிந்துகொள்ளமுடிகின்றது. இது அவர்களின் மரபுவழி அறிவியலாகக் கருதப்படுகின்றது. நீவாட்டைக் கண்டறிந்து மீன் பிடிக்கிறார்கள் என்பதை இக்கட்டுரை உணர்த்து கின்றது. இத்தகைய மரபுவழி அறிவியல் கருத்துகள் சில வட்டாரத்திற்கு வட்டாரம் வேறுபடும். அதே நேரத்தில் அவற்றிற்கிடையே பொதுப்பண்புகளும் காணப்படுவது புலனாகின்றன. மீனவர்களின் மரபுவழி அறிவியல் பன்முகத்தன்மை கொண்டது என அறிந்துகொள்ளமுடிகின்றது.

**துணைநின்ற நூல்கள்**


1. இராமபாண்டி, க., 1997: **கடல்சார் தொழிலாளர்களின் மரபுவழி அறிவியல் நோக்கு மற்றும் தொழில் நுட்பம்** (பாம்பன் வட்டாரம்), மதுரை: தமிழியற் பள்ளி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்ட ஆய்வியல் நிறைஞர் (எம்ஃபில்) பட்ட ஆய்வேடு.
2. மகாலெட்சுமி, ப., 2003: **நாகூர் வாழ் மீனவர்களின் மரபுவழி மருத்துவம்,** தஞ்சாவூர்: நாட்டுப்புறவியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு,
3. மகாலெட்சுமி, ப., 2005: **மீனவர்களின் மரபுவழி மீன் மருத்துவம்** (கட்டுரை), நாட்டுப்புறவியல் ஆய்வுத்தளங்கள் (தொகுப்பு நூல்) க.சாந்தி(ப.ஆ), சென்னை: அகல்வெளியீடு.பக்.108–131.
4. ஸ்டீபன், ஞா., 2005: **முக்குவர் கடலும் நிலமும்,** அலைகளினூடே, அ.கா.பெருமாள், ஞா.ஸ்டீபன் (தொ.ஆ), சென்னை: தமிழினி வெளியீடு.
5. Eroldo Medeiras, C.N., 1999: **Traditional use and sale of animals as medicines in feina de Santana city,** Bahia, Brazil, Indigenous knowledge, Devel mohifor 7 (2).
6. Rajan, S., 2002: **Medico Ethno Bioligical studies on the Irulas And paniyas of the Nilgiri District in Tamil Nadu,** India, Thanjavur: Dept. of Ancient science and Tribal Research Centre. Thesis submitted to Tamil university in partial Fulfilment for the award of the Degree of Doctor of Philosophy of Botany.


(☺)(☺)(☺)(☺)(☺)

# தமிழரின் வாழ்க்கை முறையில் திராவிட மொழியின் பங்கு

**முனைவர் மு சுமதி**
தமிழ்த்துறைத்தலைவர்
இசுலாமியா மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி
நியுடவுன், வாணியம்பாடி 635 752

*****

## முன்னுரை

தமிழ் மொழிக்கு சொல்வளம் உண்டு. பேசுவதற்கு மென்மையானதும், இனிமையானது ஆகும். தமிழ் மக்கள் தாம் பேசிய மொழியுடன் இணைந்து வாழ்ந்தனர். தமிழர் வேறு, தமிழ் வேறு என்ற பிரிக்க முடியாத அளவு அம்மொழியானது தமிழர் வாழ்வில் இடங்கொண்டது தமிழரின் வாழ்வு தமிழர் பேசிய மொழி தமிழர் வாழ்ந்த நிலம் ஆகிய இம்மூன்றும் தமிழரின் நாகரிகத்தில் அடிப்படைத் தத்துவமாக அமைந்துள்ளது இத்தத்துவத்தை விளக்குவது சங்க இலக்கியமாகும். தமிழ் நிலத்தின் உயிர்நாடி தமிழ் மக்கள் தமிழ் மக்களின் உயிர்நாடி தமிழ்மொழியாகும் தமிழைப் போற்றி வளர்ப்பதும் தமிழ்ப் புலவரைப் பாராட்டிப் புகழ்ந்து வருவதுமே தமிழ் மன்னரின் முதற்கடமையாக இருந்து வந்தது. தமிழ் மன்னன் ஒருவன் தனக்கு கிடைத்ததை புலவர் ஒருவருக்கு அளித்துத் தனக்கும் அவருக்கும் தமிழ்மொழிக்கும் இறவாத புகழைப் பெற்றுக் கொடுத்தான் அப்படிப்பட்ட தமிழ் மக்கள் திராவிட மொழியோடு எப்படி வாழ்க்கையை மெற்கொண்டனர் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்

## தமிழ் மொழி

மொழிக்கு மட்டுமின்றி மக்களுடைய வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்துக்கொண்ட பெருமை பழந்தமிழரைச் சாரும் வாழ்க்கைக்கு ஒழுங்குமுறைகளை வகுத்துக்கொடுத்த இலக்கணத்துக்குப் பொருள் இலக்கணம் என்று பெயர் அது மட்டுமல்லாமல் மக்கள் வாழ்க்கைக்கு இலக்கண விதிமுறைகள் வகுப்பதற்கு முன்னர் அவ்வாழ்க்கை நன்கு வளர்ச்சியும் வளமும் பெற்றிருக்க வேண்டும்.

வளர்ச்சி பெற்ற நிலையில் வாழும் சமூகத்துக்குத்தான் ஒழுக்க விதிகள் தேவைப்படும், ஒழுக்கமுறைகளை வகுத்து, அவற்றின்படியே மக்கள் வாழ வேண்டும் என்பது இயற்கைக்கு முரணானது எனவே தமிழில் பொருள் இலக்கணம் ஒன்று தோன்றுவதற்கு முன்பே மக்கள் அதில் வகுத்த வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர்.

## வாழ்க்கை முறைகள்

உலகில் வாழும் மக்களின் வாழ்க்கையை அகம் என்றும், புறம் என்றும் வகைப்படுத்தி வாழ்ந்து வாழ்ந்தனர். பல வகையிலும் ஒத்த தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் விரும்பி வாழும் வாழ்வு உள்ளத்தால் மட்டுமே உணரக்கூடியது அகம் ஆகும்.

புறம் என்பது போர் வீரம் ஆகியவற்றால் ஏற்படுவது. அதாவது பசி பிற ஆசைகள், மானம், வீரம் என்ற உணர்வுகள் உள்ளத்திற்குப் புறத்தே உண்டாகுவன புறம் ஆகும். இவ்வாறு இரு கூறுகளாக்கித் தனித்தனியே பகுத்து அதில் ஊடுருவிக் காணும் நுட்பம் உலகில் எந்த மொழிகளிலும் இல்லை பழந்தமிழகத்தில் மக்கள் இல்லறவாழ்க்கையை பெரிதும் விரும்பி வந்தனர். மேலும் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கற்பறத்தோடும் சேர்ந்தும் நடத்தும் இல்லறத்துக்குத் தனிச்சிறப்பு இருந்தது.

**கற்பு**

விரும்பியவரை மணக்கத் தடை ஏற்பட்டாலோ, இடையுறுகள் ஏற்பட்டாலோ தலைவனும் தலைவியும் சேர்ந்து ஊரைவிட்டே வெளியேறி விடுவார்கள் இவ்வாறு தாமே இணையும் இவ்வாழ்க்கைக்கு களவு என்று பெயர் **(பாலைக்கலி பாடல் 8)**

அகத்திணையுல் திருமண வாழ்க்கையை கற்பு என்ற அழைப்பதுண்டு. இருவரின் பெற்றோரும் திருமணத்திற்கு உட்படுவர் **(தொல்.பொருள் கற்பு)**

திருமணத்தை ஒரு நல்ல நாளில் திங்களும் உரோணியும் கூடிய நல்ல நாளில் திருமணத்தை நடத்தி வைப்பர்இ மேலும் விடியற்காலையில் புது மணல் பரப்பி, மாலைகள் தோரணங்கள் தொங்கவிடப்பட்டு அழகிய விளக்குகள் ஏற்றி வைக்கப்படும் முதலில் கடவுள் வழிப்பாடு தொடங்கி ஆரம்பிப்பார்கள் மணமகன் மணமகளுக்கு தாலி கட்டியதாக சான்றுகள் இல்லை ஆனால் திருமணம் ஆகிவிட்டது என்பதை தெரிவிக்க அக்காலப் பெண்கள் மங்கல அணி ஒன்றை ஊர்வலமாக கொண்டு வரும் வழக்கம் இருந்தது என்பதை சிலப்பதிகாரத்தில் காணமுடிகிறது மேலும் மணமகன் மணமகளுக்கு

தாலிகட்டும் பழக்கம் பத்தாம் நூற்றாண்டு வரை இல்லை மணமகன் மணமகளுக்கு தாலி கட்டும் பழக்கத்தை தெரிவிக்கும் முதல் கல்வெட்டு கி.பி 958 ஆம் ஆண்டில் காணப்படுகிறது.

**கல்வி**

கல்வி பயிலும் உரிமை சங்க காலத்தில் தனப்பட்ட ஒரு சிலரின் உரிமையாக இருந்ததில்லை எக்குலத்தைச் சேர்ந்தோரும் செல்வர்களும் வறியோரும் மன்னரும் எளிய குடிமக்களும் ஆண்களும், பெண்களும் கல்வியை தேடிபெற்றனர். திண்ணைகளிலேயே பள்ளிகள் நடைபெற்றன. மாணவர்கள் ஓலைகளின் மேல் எழுத்தாணி கொண்டு எழுதி பழகினர். கணிதம், சோதிடம் வானவியல் போன்ற பல இயல்களை மாணவர்கள் கற்றனர். கணவன் தன்னைப் பிரிந்து சென்றால் மனைவிக்கு ஊடல் ஏற்படுவதுண்டு ஒருவர் இருவர் வழக்கில் தலையிட்டால் மட்டுமே அவ்வூடல் தீரும். கணவன் மனைவியிடையே அடிக்கடி ஊடல் ஏற்பட்டால்தான் வாழ்க்கையில் இன்பம் ஊற்றெடுக்கும் என்கின்றனர் இதனை நீடிக்க விடக்கூடாது என்று திருவள்ளுவர்

**"உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது**
**மிக்கற்றால் நீள விடல்"** (குறள்-1302)

என்று கூறுகின்றார்.

திருமணத்திற்கு பிறகு கணவன் கல்விக்காகவோ அல்லது பொருள் ஈட்டுவதற்கோ பிரிவதும் உண்டு அவை மூன்றாண்டுகளுக்கு மேல் நீடிக்க கூடாது என்பது மரபாகும்.

**இல்லற வாழ்க்கை**

பண்டைய தமிழ் மக்கள் அளவற்ற இன்பத்தோடு மணவாழ்க்கையில் ஈடுப்பட்டனர் என்பதற்கு அடையாளமாக பல எடுத்துக்காட்டுகள் சங்க இலக்கியங்களில் காணபடுகின்றன. திருமணமான புதியதில் ஒரு இளம்பெண் தன் கைவிரல்களால் புளித்த தயிரை பிசைந்து தாளித்து புளிக் குழம்பு வைக்கிறாள் கண்ணில் புகை ஏற்பட்டு தன் முகத்தால் கரிபூசி இருப்பதை பொருட்படுத்தாமல் தன்

கையை அப்படியே முந்தானனையில் துடைத்துக் கணவனுக்கு பரிமாறுகிறாள் கணவனும் அவளை மிகவும் பாராட்டுகிறான். இதை குநற்தொகை பாடலில் காணலாம். **(குறுந்தொகை 167)**

**மேலும்,**

உங்கள் ஊரில் குடிநீர் நல்லாயிருக்காதே எப்படி குடித்தாய் என்ற தோழி கேட்க அதற்கு அவள் எங்கள் ஊரில் சிறய குட்டையில் தண்ணீர் இருக்கும் அதிலே தழைகள் உதிர்ந்திருக்கும் மான்கள் அதை கலக்கி விட்டதால் அது கலங்கி இருக்கும் ஆனால் தேனும் பாலும் உண்ணும் சுவையைக் காட்டிலும் அந்த தண்ணீர் மிகவும் சுவையாக இருக்கும் என்று தன் புகுந்த வீட்டின் பெருமையை நிலைநாட்டுகிறாள். என்பதை ஐங்குறுநூறு பாடல் தெரிவிக்கிறது.

இல்லற வாழ்க்கைக்கு சிறபான ஊதியம் என்னவென்றால் நல்ல மக்களை பெறுவது,

**"ஈன்று புறந்தருதல் தாய்க்குக் கடன்**
**சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே"**

ஒரு தாய் நல்ல மக்களைப் பெற்றெடுப்பதும் அதனை நல்ல முறையில் வளர்த்து சான்றோனாக்குவதும் தந்தை கடனாகவும் அன்றே சுட்டிக்காட்டபட்டுள்ளது.

**கைம்பெண்**



கணவனை இழந்த பெண்கள் அக்காலத்தில் கைம்மை நோன்பு நோற்பர் பாயில் படுக்க மாட்டார்கள் வெறுந்தரையில் படுப்பர் பழைய சோற்றை பிழிந்து சாப்பிடுவர் பிராமணர் பெண்கள் இவ்வாறு தலையில் முக்காடிட்டு கைம்மை கோலம் பூண்டு இருந்தனர். இப்போதெல்லாம் தாலியும், நெற்றிபொட்டும், மஞ்சள் பூசுவதும், மலர் சூட்டுவதையும் தவிர்த்து ஏனையை ஒப்பனைகளை அவர்கள் செய்வதை நாம் பார்க்கிறோம்

**உணவு**

அரிசி சோற்றையையே பண்டைய தமிழர்கள் முக்கிய உணவாக கொண்டனர் மேலும் புழுங்கல் அரிசி மட்டுமல்லாமல் வரகையும், சாமையையும் சமைத்து உண்பதை அகநானூறு என்னும் நூலில் பார்க்கமுடிகிறது.

தமிழகத்தில் பல வகையாக நெல்கள் விளைந்தனர் அதை சமைத்து பலவகையான காய்கறிகளோடு கடுகு, மிளகு தாளித்து புளிவிட்டு சமைப்பதை **(குறுந்தொகையிலும் 167)** இல் காண்கிறோம்.

இன்றும் கூட பல வகையான நெல் இருந்தாலும் மக்கள் வரகு, சாமை, குதிரைவாலி, தினை ஆகியவற்றை உணவாக உட்கொள்கிறார்கள். மேலும் கொள்ளு, பயற்றம் பருப்பு, கோதுமை, கேள்விரகு, கம்பு, சோளம், பார்லி, உளுத்தம் பருப்பு ஆகியவற்றை வறுத்து சத்து மிகுந்த பானமாக உட்கொள்கிறார்கள். பழங்கள் மற்றும் கிழங்கு வகைகளையும் சமைத்து உண்டனர்

பண்டைய தமிழர்கள் ஊன் உண்ணும் பழக்கம் புறநானூற்றில் 14 இருப்பதை போன்றே இன்றும், தமிழக மக்கள் கோழி, நண்டு, வெள்ளாடு, செம்மறியாடு காடை, உடும்பு, மான், முயல் மீன் வகைகள் ஆகியவற்றை மக்கள் சாப்பிடுகின்றனர். கறியோடு சேர்த்து புலவு சமைப்பதும் உண்டு.

பழந்தமிழ் மக்களை போலவே இக்கால மக்களும் உப்பு கண்டம் போட்டு இரும்பு கம்பியில் கோர்த்து நெருப்பில் வாட்டுவர் இதனை தமிழக மக்கள் அதிகமாக சாப்பிடுகின்றனர்.

பழந்தமிழரிடையே கள்ளுண்ணும் வழக்கம் மிகுதியாகக் காணப்பட்டது. கனங்கள், தென்னங்கள், ஈச்சங்கள் முதலியவற்றோடு அரிசி, புளித்த சோற்றுக்காடி ஆகியவற்றில் காய்ச்சி இறக்கிய மது, யவனர் கப்பலில் கொண்டுவந்த தேறலையும் அருந்தி மகிழ்ந்தனர். சங்க காலத்தில் இறுதியில் கள்ளுண்ணும் வழக்கம் எல்லை மீறிக் காணப்பட்டது.

**உடை**

பழந்தமிழ் மக்கள் கம்பளி ஆடைகளை அணிந்திருந்தார்கள். அதோடு பட்டு, பஞ்சு, சிறுவிலங்குகளின் மயிராலும் ஆடைகள் நெய்தார்கள் என்பதை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் முப்பதாறு ஆடை வகைகளை குறிப்பிடுகிறார்.. உயர் குடியில் பிறந்த ஆண்மகன்கள் வேட்டியும் மேல்சட்டையும் அணிவதைபோன்று தமிழகத்தில் எல்லா இடங்களிலும் தமிழ் பண்பாடான வேட்டி சட்டையும் அணிவதையும், பெண்கள் இடையில் புடவை அணிவார்கள் அதுவும் தமிழ் பண்பாடு கலாச்சாத்தோடு மக்கள் ஒன்றியுள்ளார்கள் எக்பதை அறியமுடிகிறது.

**அணிகலன்கள்**

பண்டைய மக்கள் பல்வேறு அணிகலன்கள் அணிந்திருப்பதை போன்று இன்றும் மக்கள் பொன், வெள்ளி, வைரம், முத்து, பவளம் ஆகியவற்றாலான அணிகலன்களையே மக்கள் தேர்ந்தெடுக்கின்றன. மோதிரம் காதணி, வளையல்கள், மெட்டி, கொலுசு ஆகியவை மட்டுமல்லாமல் பெண்கள் தம் காதுகளில் சிமிக்கைகள் தொங்கத் தொங்க அணிந்துக் கொள்ளும் காதணிக்கு சங்க இலக்கியங்களில் குதம்பை என்று பெயர்



**ஒப்பனை**

தலைக்கோலம் செய்துக்கொள்வதில் பழந்தமிழ்ப் பெண்கள் அளவுகடந்த விருப்பம் கொண்டதை போலவே இன்றும் தமிழ் மக்கள் தலைக்கோலங்களை திருமணத்தின் போதும், வெளியிடங்களுக்குச் செல்லும் போதும் பலவகையான ஒப்பனைகளை செய்துக்கொள்கின்றன. கூந்தலில் சுருள் முடி, நீண்ட முடி, வறண்ட முடி என்ற பல வகை உண்டு. கண்களுக்கு மை தீட்டிக்கொள்வர் அதற்கு கோல் என்ற பெயர் உண்டு மை தீட்டப்பெற்ற கண்களுக்கு உண்கண் என்ற குறுந்தொயையில் கூறுவர். ஆடவரும் தலைமயிர் வளர்த்து இருந்தனர் அவர்கள் சுருள் முடி, குடுமி வைத்து பின்புறம் முடித்திருந்தனர்.

**உறையுள்**

தமிழ் மன்னர்களின் அரண்மனைகளை போன்று நகரங்களை மிகப்பெரிய மாடி வீடுகள் அணி செய்தனர். அவை சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. ஓடுகள் பலவகையாக வைத்து அழகுபடுத்துகின்றன. அரண்மனைகளில் இருப்பதை போன்று சமையற் கூடம், வாசல் என்று பல அறைகள் கொண்ட வீடுகளை இப்போது பார்க்க முடிகிறது. சுண்ணாம்பினால் பூசப்பெற்ற இடங்களெல்லாம் இன்ற பலவகையான வண்ணப்பூச்சுகளை கொண்டு அலங்காரப்படுத்துகின்றன. தரைகளில் சாணம் இட்டு மெழுகுவதை அக்காலத்தில் வழக்கமாக கொண்டு இருந்தனர். அதனால் பூச்சிகள் சேராது எனவும் பலவகையான கிருமி நாசினிகளை கொண்டது என்றும் கூறுவர். இப்பொழுதுதெல்லாம் தரைகள் பாலிஸ் செய்தும், கற்கள் பதித்தும், சிமெண்ட் தரைகள் என பலவகை வேலைப்பாடு கொண்டு வீடுகள்

அமைக்கப்பெறுகின்றன. மணிமேகலையில் காணப்படுவதைப்போன்றே பளிங்கறைகளும், வீட்டைச் சுற்றி பூங்கா அமைத்து அழகு படுத்தியுள்ளன.

**கலைகள்**

இசை, நாடகம், நாட்டியம் ஆகிய கலைகளில் பழந்தமிழ்மக்கள் மிக உயர்ந்த நிலையை எட்டியிருந்தனர் என்பதற்கு சிலப்பதிகாரம் ஒரு சான்று. நாடக அரங்கில் அழகான வண்ணங்களால் செய்யப்பட்ட ஓவியங்கள், சீலைகள், திரைவிரிப்புகள் ஆகியவற்றை இன்றும் தமிழக மக்கள் சிறப்பாக செய்து வருகிறார்கள். தமிழர்கள் கூத்துகள் நாட்டியம் என்ற பெயரில் நடத்திவருகின்றனர். கருநாடக இசையும் இன்று சிறப்பு பெற்று வருகிறது. சரிகமபதனி என்று ஏழிசைகளின் தமிழ்ப் பெயரான குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்ற இசைகள் குறைந்தாலும் நாட்டியங்கள் மீது இருக்கும் ஆர்வம் தமிழ் மக்களிடையே குறைவில்லை என்றே சொல்லலாம்

**உழவுத்தொழில்**

தமிழகத்தின் மிகச்சிறந்த தொழிலாக விளங்கியது உழவுதான். சங்க இலக்கியத்தில் இதற்கு அளவற்ற சிறப்புக் கொடுக்கப்பட்டுள்ளது நிலத்தை உழுவதும், எரு இடுவதும், நாற்று நடுவதும், தண்ணீர் கட்டுவதும், களை எடுப்பதும், பயிரைக்காவல் காப்பதும், உழவுப் பணிகளுள் ஒன்றாகும்.

பழந்தமிழரின் வாணிகத்தில் மிக சிறப்பானது உப்பு மற்றும் உடை வாணிகம் இவை பெரும்பாலும் பண்டமாற்று முறையிலேயே வாணிகம் நடைபெற்றது. சில பண்டங்கள் உற்பத்தியான இடத்திலேயே விற்பனையாயின. சிலவற்றை ஊர் ஊராக எடுத்துச் சென்று விற்று வருவார்கள் அப்படி விற்கப்பட்ட பண்டந்தான் உப்பு, வணிகர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடித் தம் பண்டங்களை வண்டிகளிலும், கழுதையின் மேலும் பல ஊர்களுக்கு சென்று விற்பனை செய்வர்.

**தமிழ்மொழி**

தமிழ்மொழிக்குச் சொல்வளம் உண்டு ஒரு பொருளைக் குறிக்க அதன் தன்மைகேற்கப் பல சொற்கள் படைக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக இலை என்ற ஒரு பொருளை குறிப்பிட தாள் தோகை ஓலை மடல் என்ற பல சொற்கள் உண்டு தழை என்கிறோம் மலராத புக்களை மொட்டு, அரும்பு, முகை, மொக்கு என்று கூறுகிறோம் இவ்வறெல்லாம் தமிழ் மொழியில் சிறப்புகள் அதிகமாக இருப்பதை பார்க்கிறோம்.

**முடிவுரை**

பண்டைய தமிழரின் வாழ்க்கை முறைகள் திராவிட மொழியோடு ஒத்திருப்பதை காணமுடிகிறது. கல்வி, திருமணம், கைம்மைநோம்பு, உழவுத்தொழில், வாணிகம், உணவு உடை, அணிகலன் ஆகியவற்றோடு பழந்தமிழ் மக்கள் வாழ்ந்திருந்தநிலையை இக்கட்டுரை எடுத்தாண்டுள்ளது. தமிழரின் பண்பாடு மற்றும் வாழ்க்கை நிலைகள் இன்றைய தமிழ் மக்களோடு பலவகையில் ஒத்திருப்பதை பார்க்க முடிகிறது.

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்தியமொழி வழக்காற்றில் தமிழ் மற்றும் கன்னடம்

**மா செந்தாமரை**
முனைவர்பட்ட ஆய்வாளர்
தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறை
திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம்-517 426
thamaraimani103@gmail.com

*****

**முன்னுரை**

இந்தியாவில் எண்ணற்ற மொழிகள் வழக்கில் உள்ளன. மொழிகள் பேசும் மக்களுக்கிடையில் கலாச்சாரம், பண்பாடு, உணவு, உடை, பழக்கவழக்கங்கள் போன்றவற்றில் வேறுபாடுகள் இருப்பினும், அவற்றுள் சில மொழிகளை ஒன்றுக்கொன்று தொடர்புப்படுத்த இயலும். எடுத்துக்காட்டாக திராவிட மொழிக்குடும்பத்தில் உள்ள மொழிகளைக் கூறலாம். அவ்வாறு தொடர்புபடுத்தி ஆராயும் பொழுது மொழிகளுக்கிடையே உள்ள உறவுகள், பண்பாட்டுப பரவல் வாய்மொழிப் பரவல் போன்றவற்றை அறியமுடிகின்றன. அவ்வகையில் குடகுமக்களின் (பெண்கள்) உடை வழக்கத்தை அறிமுகப்படுத்துவதன் மூலமாக அதைச்சார்ந்த தமிழ் மற்றும் கன்னட மொழிக்களுக்கிடையில் உள்ள களைப் பற்றி ஆராய்வதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

**மக்கள் அறிமுகம்**

கர்நாடக மாநிலத்திலுள்ள குடகு மாவட்டத்தில் வாழும் மக்களின் உயிர்நாடியாக விளங்குவது அங்கு உறபத்தியாகும் காவிரி எனும் பெயருடைய நதி. அந்நதியை தெய்வமாக வழிபடுவதுடன் அவர்கள் உடுத்தும் உடைக்கும் அந்நதியின் நீர்போக்கையே காரணமாக கற்பிக்கின்றனர். பழமையான எல்லா இனங்களிடத்தும் பல நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. அவற்றில் பலவும் இன்று வரையில் ஆற்றலோடு வாழ்ந்து வருவது வியப்புக்குரியதாகும். நன்மையின்பால் உள்ள ஆர்வமும் தீமையின்பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைக்கு அடிப்படை எனலாம்1. இன்றளவும் உடை பற்றிய நம்பிக்கைகள் குடகு மக்களிடம் காணப்படுகின்றன.

**மணிமேகலையில் காவிரியின் தோற்றம்**

சூரியனின் குலமாகிய சோழர்கள் தழைக்கும் பொருட்டு, சோழநாட்டின் நீர்வளத்தினைப் பெருக்க ஆசைக்கொண்டவர் காந்தமன் எனும் மன்னன். அவர் வேண்டவும் அகத்தியர், தனது கமண்டலத்தை கவிழ்த்தியதும் அவ்விடத்தில் காவிரி தோன்றினாள்.

அக்காவிரியாள், அவ்விடத்திலிருந்து நேர்கிழாக்காக ஓடி பூம்புகாருக்கு அருகில் கடலோடு கலந்தவளாகத் தோன்றினள். அவ்வாறு, தன்னருகே வரும் காவிரியை அவ்விடத்தே வீற்றிருக்கும் தவமுதிர்ச்சியுடைய சம்பாபதியாள், பெருகி வரும் நீர் அணங்கான காவிரியை மகிழ்ச்சியுடன் எதிர்க்கொண்டு விருப்பந்தரும் வானத்தே உள்ளவளான ஆகாயகங்கையே! காந்தமனின் விருப்பத்தினைத் தீரத்துவைத்த விளக்கமே! வருக! வருக! என அவளை வரவேற்றாள். இக்கருத்தினை பின்வரும் அடிகள் சுட்டுகின்றன.

**செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்**
**கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட**

**அமர முனிவன் அகத்தியன் தனாது**
**கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை-**
**செங்குணக்கு ஒழுங்கியச் சம்பா பதியயல்**
**பொங்குநீர்ப் பரப்பொடு பொருந்தித் தோன்ற**
**ஆங்கினி திருந்த அருந்தவ முதியோள்**
**ஓங்குநீர்ப் பாவையை உவந்தெதிர் கொண்டாங்கு,**
**ஆணு விசும்பின் ஆகாய கங்கை**
**வேணவாத் தீர்த்த விளக்கே வா வென**

மணிமேகலையில் இடம்பெற்றுள்ள காந்தமன் மன்னன் பெயர் போன்றே சற்று மாறுபட்டு, கர்நாடகமாநிலம் குடகு மாவட்டத்தில் வழங்கப்பெறும் ஒரு வாய்மொழிக்கதையில் தேவகாந்த மன்னன் என அப்பெயர் இடம்பெற்றுள்ளது. அவ்வாய்மொழிக்கதை பின்வருமாறு.

**குடகில் வழங்கப்பெறும் வாய்மொழிக்கதை**

குடகு மாவட்டத்தில் மூர்நாட்டிற்கு பக்கத்தில் உள்ள பலமுரி குடகு மக்களின் புனித தலம். முன்பு பலமுரிக்கு வலம்புரி என்ற பெயர் இருந்தது என்று இதிகாசங்களின் மூலமாக அறியமுடிகிறதாம். வலமுரி எவ்வாறு பலமுரி ஆனது என்பதற்கு ஒரு கதை இருக்கிறது.

வலமுரியை ஆட்சிசெய்த தேவகாந்த மன்னன் தன்னுடைய குலதெய்வமான காவிரித்தாயை நினைத்து வணங்கி தன்னாட்டிற்கும் வருக என்று வேண்டிக்கொண்டான். இவரின் வேண்டுதலுக்கு இணங்கி காவிரித்தாய், தலைக்காவிரியிலிருந்து பாகமண்டலத்திருக்கு வந்து, அங்கிருந்து பலமுரிக்கு வருவதாக இசைவளித்தாள். காவிரியை வரவேற்பதற்கு தேவகாந்த மன்னனும், அவரின் பரிவாரங்களும் மற்றும் அந்நாட்டு மக்களும் காத்துக்கொண்டிருந்தனர். அப்போது திடிரென பெருக்கெடுத்து வந்த காவிரியின் வேகத்திற்கு அங்கு காத்துக்கொண்டிருந்த இளம் பெண்களின் சீலை முந்தானை மற்றும் கொசுவம் வலப்பக்கம் திரும்பி பின்புறம் சரிந்ததாம். இதனால்தான் குடகுமக்களில் இளம் பெண்கள் இன்றைக்கும் தம் சீலையின் கொசுவம் பின்புறம் அமைத்து சீலையின் ஒருமுனை தோள்பட்டையின் மேல்வருமாறு உடுத்தி வலப்பக்கம் முடிச்சுப்போடுகின்றனர். வலப்பக்கமாக சீலையின் கொசுவம் திரும்பிக்கொண்டதால் இவ்விடத்திற்கு பலமுரி என்ற பெயர் வந்ததாக கூறுகின்றனர். இவ்வாறு குடகு மக்கள் தங்கள் உடைப்பண்பாட்டிற்கு காவிரி நதியின் நீர்போக்கை காரணமாக கூறுகின்றனர்.

**தமிழ் மற்றும் கன்னட மொழிகளில் பாத்திரப்படைப்பு ஒப்பீடு**

காந்தமன் மன்னன், அகத்தியரை வேண்டியதால், அகத்தியர், தன் கமண்டலத்தை கவிழ்த்தியதும் காவிரி தோன்றியதாக மணிமேகலை கூறுகிறது. ஆனால் தமிழ்ப்புராணக் கதைகள் மற்றொரு கதை வடிவத்தைக் கொண்டிருக்கிறது. பிள்ளையார்தான் காக்கை வடிவில் வந்து அகத்தியரின் கமண்டலத்தைக் கவிழ்த்தியதாக கூறுகிறது. இவ்வாறு ஒருமொழிக்குள்ளே இருவேறுபட்ட கதை வடிவங்கள் உள்ளன.

குடகு மக்களின் வாய்மொழிக்கதையில் தேவகாந்த மன்னன், தன்குல தெய்வமான காவிரித் தாயை நேரடியாக வேண்டுவதாக உள்ளது. குடகு மாவட்ட பலமுரியில் அகத்திய முனிவரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அகத்தீஸ்வரர் கோயில் உள்ளது. புனித நீராடலின்போது தலைக்காவிரி செல்ல இயலாதவர்கள் பலமுரியின் காவிரியில் நீராடுகின்றனர். தமிழ் நாட்டில் காவிரி நதியின் வெவ்வேறு இடங்களில் புனித நீராடுவர். காவிரி குடகுமலையில் உற்பத்தியாவதை “குடமலைப் பிறந்த கொழும்பல்

தாரமொடு என சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.3 சோழர்களின் குலக்கொடி காவிரி என மணிமேகலைச் சுட்டுகிறது. குடகு மக்களின் பண்பாட்டில் குலம் காக்கும் தெய்வம், தாய் எனற நிலையில் பார்க்கப்படுகிறது. இதுகாறும் குறிப்பிட்டவைகளிலிருந்து, கதைகளை அப்பகுதியின் சூழலுக்கேற்றவாறு பொருள் கொண்டால்தான் அவர்களின் பண்பாட்டை அறிய முடியும் என்பது தெளிவாகிறது.

**இடப்பெயர்வு**

அக்காலத்தில் போர்,வணிகம், புனிதயாத்திரை, சாதி-சமயப்பூசல்கள்,போதிய வாழ்வாதாரம் இன்மை போன்ற காரணங்களுக்காக மக்கள் இடம்பெயர்ந்து கொண்டேயிருந்ததால் மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள் என மனிதனின் அனைத்து நிலைகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டு அவை பரவலாகின்றன. மனிதனின் செயல்களையே நாம் பண்பாடு என குறிக்கிறோம். அவ்வகையில்தான் கதைகளிலும் வாய்மொழிப் பரவல் ஏற்படுகிறது. அந்தந்த இனங்களின் பண்பாடு மற்றும் நிலச்சூழலுக்கு ஏற்ப கதைகளில் மாற்றமடைந்தபின் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன என்பதை இக கதை வடிவங்களின் மூலாக அறியமுடிகிறது. இவற்றை உறுதிப்படுத்தும் வகையில் சில இலக்கியச் சான்றுகளையும் குறிப்பிடலாம்.

**குடகு பற்றிய சங்க இலக்கிய குறிப்புகள்**



**குடவர் கேவ கொடித்தேர் அண்ணல்..4**
**குடவர் புழுக்கிய பொற்கு அவிழ்ப் புன்கம்..5**
**வரையா ஈகைக் குடவர் கோவே..6**
**வடவர் வாடக் குடவர் கூம்பர்..7**

**கன்னட இலக்கண நூல் சுட்டும் கன்னட நாடு**

**காவேரி முதல் கோதாவரி வரை,**
**மக்கள்திரலுள்ள பூமண்டலப் பகுதியே**
**கன்னட நாடு என்று கருதப்பட்டது"8.**

**முடிவுரை**

மேற்கண்டவற்றிலிருந்து தமிழ் மற்றும் குடகு இன மக்களிடைய உள்ள கதை வடிவங்களிலிருந்து, இரு இனங்களுக்கும் இடையில் பண்டைக்காலம் முதல் பண்பாட்டு நிலையில் உறவுமுறைகள் இருந்திருக்கலாம் என கருதமுடிகிறது.

**துணை நூல்கள்**

1. அ. தட்சிணா மூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.245.
2. மணிமேகலை : பதிகம்: 9-18 (அடிகள்.)
3. சிலப்பதிகாரம்:புகார் காண்டம்: நாடுகாண் காதை:106(அடி.)
4. பதிற்றுப்பத்து: பா55: அடி9.
5. அகம்: பா393: அடி16.
6. புறம்: பா17: அடி40.
7. பட்டினப்பாலை: அடி276.

8. கவிராஜமார்கம்:நூற்பா36

குடகு மக்களின் வாய்மொழிக்கதைக்காண தரவு- ஆய்வாளர் பயின்ற கன்னட மொழி பட்டயப்பயிற்சியின் பாடநூலில் இருந்து எடுக்கப்பட்டது.(மத்திய மொழி ஆய்வு நிறுவனம்.)

(☺)(☺)(☺)(☺)(☺)



# திருமந்திரத்தில் மனிதவள மேம்பாட்டுச் சிந்தனைகள்

**முனைவர் ப.கோமளா**
முனைவர் பட்ட மேலாய்வாளர்
மாநிலக்கல்லூரி (UGC)
சென்னை – 600 005

*****

**முன்னுரை**

திருமூலரின் பிறப்பு வரலாறு உறுதிசெய்யப்படாததாக இருந்தாலும் அவர் வடநாட்டில் இருந்துவந்தவர்தான் என்பதற்குப் பல சான்றாதாரங்களைக் காட்டுகின்றனர் ஆய்வாளர்கள். வடநாட்டில் இருந்து வந்தபோதிலும் தமிழ் மரபினையும் தமிழ்ப் பண்பாட்டினையும் உள்வாங்கிக்கொண்ட திருமூலர் அந்த மரபிலிருந்தே சிந்திப்பதைப் பார்க்க முடிகின்றது. அவர் சிந்தனைகள் ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள் அடைந்துவிடும் அளவிற்குக் குறுகியதல்ல. அவர் எந்த நாட்டவர்கும் பொதுவானவர் என்பதை,

**ஒன்றே குலம் ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின் நமனில்லை நாணமே**
**சென்றே புகுங்கதி யில்லை நுஞ் சித்தத்து**
**நின்றே நிலைபெற** (திரும.2066)

என்று அனைவருக்கும் ஒரே கடவுளெனக் குறிப்பிட்டு எல்லோரையும் ஒரு குலமாகவே பார்ப்பதன் வழியாக உணர்ந்துகொள்ளலாம். இதிலிருந்தே அவரின் உலகியல் பார்வையைப் புரிந்துகொள்ளலாம். இன்றைக்கும் இமையமலை போன்ற வடக்குப் பகுதிகளில் சித்தர்கள் வாழ்ந்து கொண்டிருக்கின்றனர் என்னும் பேச்சினைப் பரவலாகக் கேட்கமுடிகின்றது. அதனடிப்படையில் பல நூறாண்டுகளுக்கு முன்னர் வடதேசத்தில் இருந்து வந்த மரபினரான திருமூலர் இந்திய பண்பாட்டினையும் மக்களின் வாழ்வியலையும் நன்கு அறிந்திருப்பர். அதனடிப்படையில் ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்கோ இனத்திற்கோ அல்லாமல் ஒட்டுமொத்த மானுடத்திற்குமான கருத்துக்களையே தமது நூலில் எடுத்தியம்புகின்றார். அந்தவகையில் அவர் எடுத்துரைக்கும் மானுடமேம்பாடு பற்றியும் இந்திய பண்பாட்டிற்கு அவற்றின் பங்களிப்பு குறித்தும் இக்கட்டுரை ஆராய்கின்றது. இக்கட்டுரையில் திருமூலர் எடுத்துரைக்கும் மனிதவள மேம்பாடும், மனத்தை நடுநிலைப்படுத்துவதால் விளைகின்ற நன்மைகள் குறித்தும், இறைவழிபாட்டின் பயன், பண்புடைமை, ஈகை, அரசன், உணவு குறித்து திருமூலரின் பண்பாட்டுப் பார்வைகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

**திருமந்திரமும் மனிதவள மேம்பாடும்**

இன்றைக்கு ஏறத்தாழ 20,000 ஆண்டுகட்கு (Chalcolithic age) முற்பட்டதாய், இன்றுவரை உயிர்ப்பாற்றலுடையதாய் நிலவி வரும் பழம்பெரும் சமயம் சைவ சமயமே எனச் சர் ஜான் மார்ஷல் என்னும் அறிஞர் நடுவுநிலை பிறழாது ஆராய்ந்து நவின்றிருத்தலால், திருவள்ளுவர் வாழ்ந்து திருக்குறள் இயற்றிய காலத்தில் ‘சைவசமயம்’ அதன் தொன்மைத் தன்மை நிலையில் இருந்திருத்தல் கூடும் என்பது தெளிவு. மேலும் பிற சமயங்களைப் போல வடக்கே இருந்தோ, மேற்கே இருந்தோ, புதியதாக வந்து புகுதராமல், தமிழகத்திற்கே யுரியதாய், (Autochthonous religion) அதன்கண் தொன்றுதொட்டே நிலவி வருதலாலும், திருவள்ளுவர்க்கும், அவர் இயற்றிய திருக்குறள் நூலுக்கும்,

சைவசமயம் ஓரளவு மிக நெருங்கிய தொடர்புடையது என்பது பெறப்படும்- (திருக்கோயில், திங்கள் வெளியீடு, ஆகஸ்ட், 1967, ப.505) எனலாம். மேலும், சைவ திருமுறைகளின் வரிசையில் பத்தாவது திருமுறையாக இடம்பெற்றிருக்கும் திருமந்திரம், திருமூலரால் தமிழில் இயற்றப்பெற்ற சிவ ஆகமமாகும். ஒன்பது தந்திரங்களாக இயற்றப்பட்டுள்ள இந்நூலுள் மொத்தம் மூவாயிரம் பாடல்கள் அடங்கியுள்ளன. இந்த ஒன்பது தந்திரங்களும் ஆகமங்களின் ஒன்பது சாரங்களாக அமைந்துள்ளன. இந்நூல் ஆகமங்களின் சாரமாக அமைந்திருந்தாலும் அனைவரும் எளிதில் உணரும் வகையில் இனிமையான பல பாடல்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. உலகில் தோன்றிய மூத்த மொழியும் முதல் மொழியுமாகிய தமிழ் மொழியில் திருமந்திரத்தை யாத்தளித்துள்ள திருமூலர், இறைவனைப் பற்றித் தமிழில் எழுதுவதற்காகவே இறைவன் தன்னைப் படைத்தான் என்பதை,

**பின்னைநின் றென்னே பிறவி பெறுவது**
**முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்**
**என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே** (திரும.152)

என்று குறிப்பிடுகின்றார். தவம் செய்வது அனைவரது கடமையாகும் என்பதை இப்பாடலின் வழியாக வலியுறுத்துகின்றார் திருமூலர். மானுட குலம் தவம் செய்யாமல் எப்படி உயர்ந்த நிலையினை அடையமுடியும் என்று இதன் வழியாக அவர் கேள்வியெழுப்புகின்றார். வாழ்வில் முன்னேற்றமடைய விரும்பும் ஒவ்வொருவரும் தவம் செய்தலைக் கடைபிடிக்க வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுவதோடு, தமிழன் தனது வாழ்வில் மேன்மையெய்துவதற்குத் தமிழ் மொழியினைக் கசடறக் கற்றுக்கொள்ளுதல் நல்லதாகும் என்கின்றார் திருமூலர். திருக்குறளுக்கு இணையான வலிமையான அறக்கருத்துக்களை முன்வைக்கும் திருமந்திரம் அது உருவாக்கப்பட்டுள்ள மொழியின் அடர்த்தி காரணமாகவோ, பிறமொழிகளில் மொழிபெயர்க்குமளவிற்கு அவர் கையாண்டுள்ள சொற்களுக்கு இணையான சொற்கள் இல்லாமையின் காரணமாகவோ அல்லது சித்தர் மரபினைப் பிற இனத்தவர்கள் அறியாததன் காரணமாகவோ திருமந்திரம் நாடு முழுமைக்கும் சென்று சேராமல் குறுகிய வட்டத்திற்குள்ளேயே இருக்கின்றது. ஆனால், அதன் சிந்தனைகளும் கருத்துக்களும் வானளாவி நிற்கின்றன என்பது யாவரும் அறிவர்.

யான் பெற்ற இந்த இன்பத்தினை மனித சமுதாயம் அனைத்தும் பெறுதல் வேண்டும். வானளாவி நிற்கும் இரகசியமாகிய சிவ இரகசியத்தை நான் வெளிப்படுத்த இருக்கின்றேன். அந்த இரகசியத்தினை உணர்ந்து, உடலுக்குள் இறையுணர்வை உண்டாக்கும் மந்திர வித்தையைத் தொடர்ந்து பின்பற்ற வேண்டும். அவ்வாறு பின்பற்றினால் தொடக்கத்தில் விட்டுவிட்டு வரும் அந்த மின்சார மெய்யுணர்வு, முடிவில் இடைவெளியின்றித் தொடர்ந்து பாய்ந்து நம்மை இன்பத்தில் ஆழ்த்தும் என்பதை,

**வானுக்குள் ஈசனைத் தேடும் மருளர்காள்**
**தேனுக்குள் இன்பம் சிவப்போ கறுப்போ**
**தேனுக்குள் இன்பம் சிறந்திருந் தாற்போல்**
**ஊனுக்குள் ஈசன் ஒளிந்திருந் தானே** (திரும.671)

என்று குறிப்பிடுகின்றார். அதாவது, தேனுக்குள் இருக்கும் இனிப்பைத் தேனுக்கு வெளியே தேடும் அறியாமை நிறைந்த மக்களே! ஊனுக்குள்ளேயே உணர்வாக ஒளிந்திருக்கும் இறையின்பத்தை வானுக்குள் வெளியே தேடி வீணாக வேண்டாம் என்பதே இதன் ஆழமான கருத்தாகும்.

பொதுவாக மனிதர்களுக்கு மூன்றுவகை மரணங்கள் நிகழ்கின்றன அதில், முதலாவதாக, விபத்துகளால் நேரிடும் மரணங்கள், கொலை, தற்கொலை போன்றவை அடங்கும். இரண்டாவதாக, மாரடைப்பு, நீரிழிவுநோய், இரத்தக் கொத்திப்பு, புற்றுநோய் போன்றவை தோன்றி மருந்து மற்றும் மருத்துவர்களால் நிகழ்வது. மூன்றாவதாக, என்பது, தொண்ணூறு, நூறு வயதில் மரணிப்பது. இது இயற்கையான மரணமாகும். இவ்வகை மரணமே சிறந்த மரணமாகும். இதேபோன்று தவமிருக்கும் முனிவர்களுக்கும் கீழ்க்கண்ட மூன்று வகைகளில் மரணங்கள் நிகழ்கின்றன. அவை,

1. உயிரினை உள்ளடக்கி உடலைச் செயலற்றதாக்கும் தியானநிலை
2. உயிரை உள்ளடக்குவதோடு மட்டுமல்லாமல் உடலையும் மண்ணுக்குள் புதைக்காமல் வெளியில் என்ற நிலையில் அடையும் தேக சமாதி.
3. உயிரையும் உடலையும் பிரபஞ்சமாக்கித் தன்னை மறைத்துக்கொள்ளும் ஞானசமாதி.

இதனை,

**உடம்பார் அழியில் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்**
**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே**
**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே** (திரும.704)

என்று திருமூலர் குறிப்பிடுவதன் வழி அறியலாம். அதாவது, கள்ளம் கபடமற்ற குழந்தைப் பருவத்தில் நமக்கெல்லாம் முகம் களையாக உள்ளது. மிகவும் அழகாக, காண்போர் தூக்கிக் கொஞ்சும்படி உள்ளது. மாடியிலும் மரத்திலும் ஏறியிறங்குகின்ற சுறுசுறுப்பும் மிகுதியாக உள்ளது. ஆனால், நமக்கு வயது ஆக ஆக முகத்தில் சுருக்கம் விழுந்துவிடுகிறது. உடல் தோற்றத்தில் மாறுபாடு தென்படுகின்றது. மூட்டுவலி வந்து வாட்டுகின்றது. கூடவே முதுகுவலியும் வந்துவிடுகின்றது. உடல் வளர்ந்ததோடு கூடவே உயிரும் வளராமையையே இதற்கெல்லாம் காரணமென கூறலாம். உடலால் உயிரினை வளர்க்கின்ற நாம் தவத்தால் உயிரை வளர்க்கத் தவறிவிடுகின்றோம் என்பதே இதன் உண்மை நிலையாகும். உயிரின் உன்னதத்தையும் அந்த உயிரையும் உடம்பையும் பேணுதலின் முக்கியத்துவத்தையுமே இதன்மூலம் விளக்குவதற்கு முற்படுகின்றார் திருமூலர்.

உலகியல் வாழ்விலும் மறுமையிலும் உலக மக்கள் விரும்பிய பயன்களை அளிக்கக்கூடிய மந்திரங்கள் நெடுங்காலமாகத் தமிழகத்தில் நிலைபெற்று வழங்கிவந்துள்ளன என்பதை,

**கோவலன் நாவிற் கூறிய மந்திரம்**
**பாய்கலைப் பாவை மந்திரமாதலின்** (சிலப்.காடுகாண்.196-7)

எனவும்,

**அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்**
**வருமுறை மரபின் மந்திர மிரண்டும்**
**ஒருமுறையாக வுளங்கொண்டோதி** (சிலப்.காடுகாண்.128-130)

எனவும் வரும் சிலப்பதிகாரப் பாடலடிகள் குறிப்பிடுவதின் வழியாகவும்,

**ஆறெழுத்தடங்கிய அருமறைக்கேள்வி**
**நாவியல் மருங்கின் நவிலப்பாடி** (திருமுருகு.186-187)

என்ற திருமுருகாற்றுப்படை பாடல் வரிகள் குறிப்பிடுவதின் வழியாகவும் அறியலாம்.

உடம்பையும் அதற்குள் இருக்கும் வலிமையான ஆற்றலையும் கூறுவதற்கு முற்படும் திருமூலர், தொடக்கத்தில் உடம்பை சளியும், சீழும், மலமும் சிறுநீரும் உற்பத்தியாகும் அழுக்குப் பிண்டம் என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால், தவநிலை தொடர்ந்து சென்றபொழுது உடம்புக்குள்ளே சுயம் பிரகாசமான சோதி வடிவாய்த் திகழும் மெய்ப்பொருளான இறைவனைக் கண்டேன். அப்போதுதான் ஓர் உத்தமன் கோவில் கொண்டுள்ள திருக்கோயிலாக நம் உடல் திகழ்கின்றது என்பதை உணர்ந்தேன். இக்காரணத்தினால் உடம்பைத் தூய்மையாகப் பேணிக்காக்கத் தொடங்கிவிட்டேன் என்கிறார். இதனை,

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்**
**கள்ளப் புலனைந்துங் கானா மணிவிளக்கே** (திரும.1792)

என்கிறது திருமந்திரம். அதாவது, உடல் நலமுடனும் அழகுடனும் இளமையுடனும் இருக்கும்போதே தவ முயற்சிகளைத் தொடங்குங்கள். உடம்பினுள் உத்தமனைக் காணுங்கள். உடம்பையும் உயிரையும் ஒருசேர வளர்த்து உடம்புடன் மறையும் உயிர் சமாதிநிலை அடையுங்கள். ஒரு பொருளை விரும்புதல் என்பது ஒருவகை அறியாமை என்றால் வெறுப்பது வேறொரு வகை அறியாமையாகும். இவ்விரண்டு அறியாமைகளிலிருந்தும் விடுதலைபெற்று நடுவுநிலைக்கு மனதைக் கொண்டுவருவதே ஞானம் என்று திருமூலர் குறிப்பிடுவதைப் பார்க்க முடிகின்றது. இதே கருத்தினையே அப்பரடிகள்,

**காயமே கோயில் ஆக, கடிமனம் அடிமை ஆக,**
**வாய்மையே தூய்மை ஆக, மனமணி இலிங்கம் ஆக,**
**நேயமே நெய்யும் பாலா, நிறைய நீர் அமைய ஆட்டி**
**பூசனை ஈசனார்க்குப் போற்று அவிக் காட்டினோமே** (தேவா.நா.தி.739)

என்று குறிப்பிடுகின்றார். திருவள்ளுவரும் தூய்மைக்கு விளக்கம் தருகையில் தூய்மையென்பது அவாவில்லாத நிலையாகும் என்கிறார். இத்தகைய அவ்வாற்ற தன்மையானது மெய்ப்பொருளை விரும்புதலால் உண்டாவது என்பது குறிப்பிடத்தக்கது. இதனை,

**தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது**
**வாய்மை வேண்ட வரும்** (குறள்.364)

என்று குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர்.

**மனத்தை நடுநிலைப்படுத்துதல்**

மனம்தான் எல்லா பிரச்சினைகளுக்கும் அடிப்படைக் காரணி. இதனை ஒழுங்காகச் செயல்படச் செய்தாலே பெரும்பான்மைப் பிரச்சினைகளைத் தவிர்க்கலாம். இதனைக் கட்டுப்படுத்தாமல் அதன் போக்கில் விட்டுவிட்டால் இன்பத்திற்குப் பதிலாகத் அதிகமான துன்பத்தையே எதிர்கொள்ள வேண்டியிருக்கும். இத்தகைய மனத்தைப் பேணுதல் குறித்து திருமூலர், மனத்தை நடுவுநிலைக்குக் கொண்டுவந்தவர்கட்கே நடு நாடியாகிய சுழுமுனை திறக்கும். சுழுமுனை திறந்தால் மட்டுமே சகஸ்ரதளத்தில் விளக்கும் அருள் ஒளியை தரிசிக்கும் ஞானம் கிட்டும். அந்தப் பேரின்பத் தளத்தைத் தீணியவர்கட்கு மடுமே நரகத் துன்பமே இரு காட்சிக்கும் ஞானம் வாய்க்கும். அந்தப் பேரின்ப தளத்தைத் தீணியவர்கட்கு மட்டுமே நரகத் துன்பமிருக்காது. ஏழாம் அறிவானது மலர்வதன் காரணமாகத் தேவநிலையும் அவர்களுக்கும் வாய்த்தல் உறுதி. எனவே, மனத்தை நடுவுநிலைக்குக் கொண்டுவந்த ஞானியர்களின் தவநெறியில் தானும் செல்ல விரும்பியதாக குறிப்பிடுகின்றார். இதனை,

**நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை**
**நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை**

**நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்**
**நடுவுநின் றார்வழி நானுன்நின் றேனே** (திரும.307)

என்கிறது திருமந்திரம். மேலும், இதே கருத்தினை வலியுறுத்தும் திருமூலர், விருப்பு -வெறுப்புகளை வென்று மனத்தை நடுவுநிலைக்குக் கொண்டுவந்தவர்களில் சிலர் ஞானிகளாக மாறுவர். இன்னும் சிலர் தேவநிலையும் அதைத் தொடர்ந்து தெய்வநிலையும் எய்துவர். இன்னுஞ் சிலர் அதையும் தாண்டி எல்லாம் வல்ல இறைப் பேராற்றலுடன் இரண்டறக் கலக்கின்ற கடவுள் நிலையினையும் அடைவர். மனத்தை நடுவுநிலைக்குக் கொண்டுவருவதன் மேன்மையினை உணர்ந்து நடுவுநிலை எய்திய மேலோருடன் தானும் இணைந்து நின்றேன் என்கிறார். இதனை,

**நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்**
**நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்**
**நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்**
**நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே** (திரும.309)

என்கிறது திருமந்திரம். இக்கருத்தினையே வலியுறுத்தும் அப்பரடிகள்,

**ஊனப்பே ரொழிய வைத்தார் ஓதியே யுணர வைத்தார்**
**ஞானப்பேர் நவில வைத்தார் ஞானமு நடுவும் வைத்தார்**
**வானப்பே ராறு வைத்தார் வைகுந்தற் காழி வைத்தார்**
**கானப்பேர் காதல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப நானாரே**
(தேவா.நா.தி.300)

என்று குறிப்பிடுகின்றார். இக்கருத்திற்கு அறண் சேர்ப்பதைப் போல், தன்னை நடுநிலைப் படுத்திக்கொண்டு பிற பொருட்களின் எடையினைக் காட்டும் தராசினைப் போல, ஞானியர்கள் முதலில் தங்களின் மனத்தை நடுவுநிலைப் பண்பில் வைத்துக்கொண்டே உலகத்தை எடைபோடுவர். விருப்பு வெறுப்புகளில் சிக்கிக்கொண்டு மனத்தைத் தடுமாற விடமாட்டார்கள் என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். இதனை,

**சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து, ஒருபால்**
**கோடாமை – சான்றோர்க்கு அணி** (குறள்.118)

என்ற திருக்குறள் அடிகளால் அறியலாம்.

**இறைவழிபாட்டின் பயன்**

ஞானிகள் பொதுவாக உலகில் உள்ளவர்கள் நலமுடனும் வளமுடனும் வாழவேண்டும் என்பதையே தம் குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். இத்தகைய ஞானிகள் தங்களின் விருப்பு வெறுப்புகளைத் துறந்தவர்கள். இறை நினைப்பிலேயே தங்களை இயக்கிக் கொண்டிருப்பவர்கள். இத்தகையவர்கள் கூறும் அறிவுரைகள் யாவருக்கும் பயன் தரக்கூடியன. இதனைப் புறந்தள்ளுதலால் இழப்பு அவர்களுக்கில்லை, மானுடத்திற்குத்தான். எத்தனைப் பணிகள் இருப்பினும் குளித்து முடித்தவுடன் ஒரு பச்சிலையையோ, பூவையோ பறித்து இறைவன் முன்னால் வைத்து வணங்குதல் எல்லோருக்கும் இயலக்கூடிய செயலேயாகும். நம் கண்களில் தென்படுகின்ற பசுவிற்கோ அல்லது பிற உயிரினங்களுக்கோ நீட்டுவது எல்லோருக்கும் எளிமையான செயலாகும். உணவில் கைவைப்பதற்கு முன்னர் அவ்வுணவின்றி வாடுகின்ற ஓர் ஏழைக்கென ஒரு கைப்பிடி சோற்றை ஒதுக்கி வைக்க விரும்புவது எல்லோருக்கும் இயலக்கூடிய செயலாகும். இதில் நம்மால் எதையுமே செய்யமுடியவில்லை எனில் குறைந்தபட்சம் பிறரைப் பார்க்கும்போது இனிமையான சொற்களையும் ஊக்கம் தருகின்ற சொற்களையுமாவது பேசவாவது செய்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார் திருமூலர். இதனை,

**யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை**

**யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை**
**யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே** (திரும.109)

என்ற பாடலால் அறியலாம்

மேலும், இறைவனிடம் அன்பு வையுங்கள். இறையாற்றலின் தேவையினை உணர்ந்துகொள்ளுங்கள். ஆனால், இறைவனை உடனே அடைய வேண்டுமென்று ஆசைப்படாதீர்கள். எந்த ஒரு பொருளின்மீது வைக்கின்ற ஆசையும் துன்பத்தில் தான் போய் முடியும். ஆசையை விடவிடத்தான் மனிதர்களுக்கு ஆனந்தம் கைக்கூடும் என்று திருமூலர் ஆசையின் விபரீதத்தை, பொருள்மீது கொள்கின்ற வேட்கையினையும் குறிப்பிட்டு அதிலிருந்து விலகியிருக்குமாறு வேண்டுகின்றார். இதனை,

**ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்**
**ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்**
**ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்**
**ஆசை விடவிட ஆனந்த மாகுமே** (திரும.2570)

என்ற திருமந்திரப்பாடல் வரிகள் உணர்த்தி நிற்கின்றன.. இத்தகைய ஆசையறுத்தலை, அவா அற்ற நிலைமை போன்ற சிறந்த செல்வம் இவ்வுலகினில் இல்லை, வேறு எங்கிலும் அதற்கு நிகரான ஒன்று இல்லவே இல்லை என்கிறார் திருவள்ளுவர். இதனை,

**வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**ஆண்டும் அஃதொப்பது இல்** (குறள்.363)

என்ற திருக்குறள் பாடல் வரிகளால் அறியலாம். மேலும்,

**இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்**
**துன்பம் துடைத்தூன்றும் தூண்** (குறள்.615)

என்ற திருக்குறளடிகள், இன்பத்தை விரும்பாதவனாய்ச் செயல் செய்வதையே விரும்புபவன், தன்னுறவும் நட்புமாகிய பாரத்தின் துன்பத்தைப் போக்கி, அதைத்தாங்கும் தூணாவான் என்கின்றன. அவா அறுத்தல் பற்றி மணிமேகலை,

**பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்**
**பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்**
**பற்றின் வருவது முன்னது பின்னது**
**அற்றோ ருறுவ தறிகென் றருளி** (மணிமேகலை, 2.ஊரல்.64-7)

என்று குறிப்பிடுகின்றது. இதனால் பிறவியால் வருகின்ற துன்பத்தினையும் பிறப்பற்றவர்களின் இன்பத்தையும் அறியமுடிகின்றது. அப்படியே பிறவியெடுத்தாலும் தேவையற்ற ஆசைகளைத் தவிர்த்தால் இன்பமெய்தலாம் என்று குறிப்பிடலாம்.

**பண்புடைமை**

பாத்திரத்தின் தீமையால் அதனுள் இருந்த பால் கெட்டுப்போகும். அதைப்போல பண்பில்லாதவனிடம் இருந்த செல்வமும் நல்ல செயலுக்குப் பயன்படாமல் கெட்டொழியும் என்பதையே இக்குறள் குறிப்பிடுகின்றது. இதே கருத்தினைத் தழுவியதாகக் காணப்படும் திருமந்திரம்,

**நீதியிலோர் பெற்ற பொன்போல் இறைவனைச்**
**சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை** (திரும.2058)

என்று குறிப்பிடுகின்றது. இப்பாடல் வரிகள் நீதியில்லாதவர்கள் பெற்ற செல்வமானது தமக்கும் தம் வழியினுள்ளவர்களுக்கும் சான்றவர்க்கும் பயன்படாமல் தீயவர்களுக்கே பயன்படும் என்று குறிப்பிடுகின்றன.

**ஈகை**

இம்மண்ணில் வாழும் உயிர்களுக்கு இன்ப துன்பங்கள் என்று மாறி மாறி வருவதற்குக் காரணம் அவர்கள் முற்பிறவியில் செய்த நல்வினை தீவினைதான் இதற்குக் காரணம் என்பதை,

**இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது**
**முன்பவர் செய்கையி னாலே முடிந்தது**
**இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்**
**அன்பிலார் சிந்தை அறம் அறியாரே** (திரும.124)

என்று குறிப்பிடுகின்றார் திருமூலர். ஈகையின் முக்கியத்துவத்தினை உணர்ந்ததின் காரணத்தினாலேயே ஈகை பெற்றி எடுத்துரைக்கும் திருமூலரின் ஒட்டு மொத்த மானுடத்திற்கும் பொதுவானதாகும்.

**வேந்தன்**

ஒரு தவமுனிவர் அரசியல் குறித்துப் பேசுதல் தகுமாவெனின் தகும். அவர்கள்தான் சார்புத் தன்மையில்லாமல் அரசர்களைக் கண்டிக்க முடியும். அந்தவகையில் அரசதிகாரத்தையும் கேள்விகேட்டுள்ளார் திருமூலர். அதாவது, அரசு இயந்திரம் மக்களின் வரிப்பணத்தில்தான் அன்றுமுதல் இன்றுவரைக்கும் இயங்குகின்றது என்பதை அனைவரும் அறிவர் அந்தவகையில், ஒருவர் ஈட்டிய பொருளை ஆறு கூறாக்கி ஒரு கூறினை அரசனுக்குக் கொடுக்கவேண்டும் என்பதை,

**சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையும்**
**அறைந்திடில் வேந்தனுக் காறிலொன் றாமே** (திரும.101)

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். இதனை,

**தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு**
**ஐம்புலத்தாறு ஓம்பல் தலை** (குறள்.43)

என்று திருக்குறள் குறிப்பிடுவதைக் காணலாம்.

**உணவு**

பசியோடு இருப்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்களையும் உடன் அழைத்து உண்ணுங்கள் என்று குறிப்பிடும் திருமூலர், மீதியான உணவினைக் கொடுப்பதற்குத் தகுதியான ஏழை மக்கள் இருந்தும் அவர்களுக்குக் கொடுக்காமல் பத்திரப்படுத்தி வைத்தல் கூடாது என்கிறார். மேலும், உணவின்மீது எவ்வளவு விருப்பமும் ஆசையும் இருந்தாலும் விரைந்து உண்ணுதலைத் தவிர்த்தல் வேண்டுமென்றும் பொறுமையாய் ரசித்து, ருசித்து மென்று உண்ணுதலே நலமென்றும் குறிப்பிடுகின்றார். அதையும் மன ஒருமையுடன் செய்யுங்கள். காகம் சிறிதளவு உணவினைக் கண்டால் கூட எப்படித் தன் இனத்தை அழைத்துக் கூட்டாக உண்கிறதோ அதைப்போல் உணவினைப் பகிர்ந்துண்ணுங்கள் என்று திருமூலர் அறிவுறுத்துகின்றார். இதனை,

**ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்**
**பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்**
**வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்**
**காக்கை கரைந்துண்ணுங் காலம் அறிமினே** (திரும.107)

என்று திருமந்திரம் குறிப்பிடுகின்றது. மேலும், உணவின் அளவில் சிறிது குறைத்து உண்டால் உயிர்ப்பு மிகுதியாகத் தங்கும் (திரும.715:1) என்று குறிப்பிடும் திருமூலர், சடங்குநெறியில் பற்றுகொண்டு மனிதனின் பசிக்கு உணவளிக்க விரும்பாமல் இறைவனுக்கு படையலிட்டு மகிழ்வதைக் கண்டிக்கின்றார்.

அவ்வாறு படையலிடுகின்ற உணவையும் உண்டு மகிழ்கின்றவர்களைப் பார்த்து அப்படையலுணவானது இறைவனின் கணக்கில் இடம்பெற வேண்டுமெனக் கருதினால் பசித்திருப்போருக்கு உணவளியுங்கள். அதுவே அவனை சென்றடையும் அரிய பெருநெறி என்று வலியுறுத்துகின்றார் (திரும.1857). இதனால் திருமூலரின் பன்முகத் தன்மையான சிந்தனைகளையும் அவர் சிந்தனைகளில் புதைந்துகிடக்கும் மானுடத்துவத்தையும் உணர்ந்துகொள்ளமுடிகின்றது.

**புலால் உணவு**

ஓர் உயிரை அடித்து மற்றொரு உயிரினத்தைக் கொன்று அதனை உணவாக்கிக் கொள்ளுகின்ற வழக்கம் இன்றைக்கும் நம்மிடையே நிலவுகின்றது. குறிப்பாக வலிமைமிகுந்த விலங்குகள் தம்மிலும் வலிமை குறைந்த விலங்குகளை அடுத்துச் சாப்பிடுதல் ஏற்ருக்கொள்ளக் கூடிய ஒன்றுதான். ஏனெனில் அவைகள் ஆறறிவு படைத்த மனித இனங்களல்ல. ஆனால், நன்கு பகுத்தறியும் தன்மையும், ஆழ்ந்த, அகன்ற அறிவையும் ஆற்றலையும் பெற்றுள்ள மனிதன் புலால் உண்ணுதல் என்பது வன்மையாகக் கண்டிக்கத்தக்கதாகும். இதனடிப்படையிலேயே புலால் உண்ணுதலை,

**பொல்லாப் புலாலை நுகரும் புலையரை**
**எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்**
**செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்**
**மல்லாகத் தள்ளி மறித்துவைப் பாரே** (திரும.242)

என்று குறிப்பிடுகின்றார் திருமூலர். இதனால் புலால் உண்ணுதல் பொருட்டாகவே பலர் நரகத்திற்குச் செல்ல நேரிடும் என்பதை இதனால் அறிந்துகொள்ள முடிகின்றது.

**முடிவுரை**

பிறன்மனை நயவாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை, கல்வி, கல்லாமை, அறன் வலியுறுத்தல் என்று மானுடம் தொடர்பான பல்வேறு அதிகாரங்களைத் தாமியற்றியருளிய திருமந்திரத்தில் படைத்தளித்து திருவள்ளுவருக்கு நிகரான அறக் கருத்துக்களையும் வாழ்வியல் கருத்துக்களையும் திருமூலர் வலியுறுத்தியுள்ளார். அவர் சிந்தனைகள் மானுடம் சார்ந்த வாழ்வியலின் கூறுகளை உள்ளடக்கியுள்ளதுடன் இவரிவருக்குத் தான் தம் கருத்துக்கள் போய்ச் சேரவேண்டும் என்று வரையறுத்துக் கூறவில்லை. அந்தவகையில் அவரின் சிந்தனைகள் அனைத்தும் ஒட்டுமொந்த இந்தியாவையும் உட்பட்டுத்தியே வெளிப்படுத்தப்பட்டுள்ளது என்பதை அவரின் பாடல்களின் வழியாக உணரமுடிகின்றது. வெறும் இறைவழிபாட்டுச் சிந்தனைகளை மட்டும் விதைத்து அதன்மூலம் ஒத்த கருத்தை மட்டும் வலியுறுத்தாமல் மானுட வாழ்வியலின் இன்பதுன்பங்களை எடுத்துரைத்து அதிலிருந்து மீண்டு எவ்வாறு இறைநிலையையும் இன்பநிலையையும் அடைவது என்னும் உத்தியை தாமியற்றியருளிய மூவாயிரம் பாடல்களிலும் ஆங்காங்கே எடுத்துரைக்கும் திருமூலர் ஒரு குறிப்பிட்ட மக்களுக்காகவோ, சமூகத்திற்காகவோ தம் கருத்துக்களை இந்திய பண்பாட்டோடு மட்டும் சுறுக்கிவிடாமல் உலகம் முழுமைக்குமான கருத்துக்களையே தம் பாடல்களில் வைத்துள்ளார் என்பதே பொருத்தமுடையதாகும்.

**துணைநின்ற நூல்கள்**

1. எட்டுத்தொகை 2004. சென்னை: நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்.
2. சிலப்பதிகாரம் (ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1940.
3. தமிழ்ச் சித்தர் மரபு, டி.என்.கணபதி, எல்.கே.எம்.பதிப்பகம், 2016
4. திருமந்திரம் (இராமநாத பிள்ளை உரை), சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், ஐந்தாம் பதிப்பு, 1995.
5. மணிமேகலை (ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1940.

(☺)(☺)(☺)(☺)(☺)



# தென்திராவிடமொழி பேசும் மக்களின் வாய்மொழிப் பாடல்கள் காட்டும் பண்பாட்டுக் கூறுகள்

**முனைவர் ப பாக்கியலட்சுமி**
தமிழ்த்துறை சென்னைப் பல்கலைக் கழகம், உறுப்புக் கல்லூரி .நெம்மேலி,
bakiyajha1980@gmail.com

*****

மனித சமூகம் வாழ்வியல் நெறிமுறைகளை மறந்திடக் காரணமாக இருப்பது பண்பாட்டுக் கூறுகளை மறந்ததாகும். இன்றைய காலகட்டத்தில் நிலவும் நாகரீக மாற்றத்திற்கும் மக்கள் பண்பாட்டுச் சிதைவுக்கும் ஆதி நாகரீகம் தேய்ந்ததெ காரணம் எனலாம். அதோடு மட்டுமின்றி நாட்டுப்புற இலக்கியங்களின் தேய்வும் அழிவும் நாகரீக ஊடுருவலுக்கு காரணமாகும். பழந்தமிழரின் வாழ்க்கை நடப்புகளையும் போலித் தனமற்ற பண்பாட்டினையும் பாதுகாப்பது வாய்மொழி இலக்கியமும் எழுத்து வடிவ இலக்கியங்களும் ஆகும். பாரதகண்டத்தில் வாழும் பலகோடி மக்களின் ஆதிசமுகத்தினர் பழையப் பாடல்களை நாடோடிப் பாடல்கள், பாமரர் பாட்டு, கிராமியக்கவிதை, பாமரப் பாட்டு, படியாதான் பாட்டு, மலையருவி, எளியோர் பாடல்கள், ஏட்டில் எழுதா கவிதை என வழங்கினர். ஆயினும் இன்று யாரும் அவ்வாறு வழங்குவதில்லை. மாறாக நாட்டுப்பாடல், நாட்டார் பாடல், நாட்டுப்புறப் பாடல் என்றே இன்றைய ஆசிரியர்கள் வழக்கத்தில் பயன்படுத்துகின்றனர்.

நாட்டுப்புறப் பாடல்கள் நேற்று தோன்றியவை அல்ல. ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனிதன் பேசத்தொடங்கிய நாளன்றெ முகிழ்த்தவை, தொடக்கக்கால மனிதர்கள் ஏடும் எழுத்தாணியும் கொண்டு கவிதை புனைவதற்கு முன்பே நாட்டுப்புறப் பாடல்கள் தோன்றிவிட்டன எனத் தொல்காப்பியம் மூலம் அறிகிறோம். ஆதிகால மனிதனின் இயற்கையொடு இயைந்த வாழ்க்கையில் தெய்வங்களாக இயற்கை வழிபாடே இருந்தது. பக்திப்பாடல்களில் இயற்கை. சிறுதெய்வம் பெருந்தெய்வங்கள் வழிபாடே இருந்துள்ளதை நாட்டுப்புறப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

இப்பழங்குடியினரிடையே வாழும் இலக்கியங்கள் ஏட்டில் எழுதாதவைதான் எழுத்தில் வராதவைதான். எனினும் பரம்பரை பரம்பரையாக அவர்கள் நாவிலே வாழும் இலக்கியங்களில் சிறந்த உத்திகளை இயல்பாக கலந்திருப்பதைக் காணமுடிகிறது. வாய்மொழிப் பாடல்கள் காட்டும் பண்பாட்டுக் கூறுகளை நாம் நாட்டுப்புறப் பாடல்களின் வழியாக அறிந்துக்கொள்கிறோம். இந்திய பண்பாட்டிற்குத் திராவிட மொழி பேசும் மக்களின் பண்பாட்டுக் கூறுகளை வாய்மொழி பாடல்கள் வழியாக அறிய முற்படும் போது இன்றைய வரலாற்றில் பல உண்மைகளை நமக்கு வழங்குவதில் நாட்டுப்புற இலக்கியம் தனித்தன்மை பெற்றுள்ளது.

- **திருமணம்**
- **சடங்குகள்**
- **நம்பிக்கை**
- **சகுனம்**
- **ஏகாலி**
- **விழாக்கள்**
- **நிமித்தம்**
- **உணவு**

- **உடை**

என்பன வாய்மொழிப் பாடல்கள் காட்டும் பண்பாட்டுக் கூறுகள். திராவிட மொழி சிந்தனைகள் யாவும் பண்பாட்டு கூறுகளோட தொடர்புடையனவே ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த வாழ்வியல் நெறிமுறைகளை இன்றும் இலக்கியங்கள் தருகின்றன.

**திருமணமும் சடங்குமுறைகளும்**

திருமணம் என்பது **"ஆயிரங்காலத்துப் பயிர்"** என்று கூறுவர். இலக்கியங்கள் எண்வகை திருமணங்களை வரையறுக்கின்றது. காலகாலமாகத் திருமணத்தின் அடையாளமாக தாலி கட்டுதல் வழக்கமாக இருந்தது. திருமணத்தின் போது நலங்கிடும் முறையும் இருந்தது பெண்களுக்குப் பரிசம் போடுவதைப் பழக்கமாகக் கொண்டனர். ஆரம்பத்தில் நகைப் பணம் கொடுத்து பெண்ணை ஆடவர் திருமணம் செய்து கொள்வர். இதனை இலக்கியங்களும் சுட்டுகின்றன.

தற்கால திருமண முறையில் குடும்ப பெருமையும் சமூகத்தில் தங்களுக்காக அங்கீகாரத்தையும் வகுத்துக்கொள்ள விரும்பிய மனிதன் நகை, பணம், பாத்திரம் என அதிகமான வரதட்சணைகள் கொடுத்து பெண்களை மணமுடித்து வைக்கின்றனர், தாய்மாமன், அத்தைமாமன் வரிசை, நலங்கு வைத்தல், பந்தக்கால் நடுதல் என திருமண விழா ஆடம்பரமாக அமையும். அவரது பொருளாதாரத்திற்கேற்ப திருமணத்தை நடத்துகின்றனர்.

பெண்களுக்கு அரை திருமணம் போல் வரிசை எடுக்கிறார் தாய்மாமன். தாலியும் ஆளும் வாகனமும் மட்டும் இருந்தால் போதும் திருமணமே முடித்துவிடலாம் அந்த அளவிற்கு ஆடம்பரமாக செலவிடுகின்றனர். மூன்று நாள் நலங்கு ஐந்து நாள் நலங்கு என்று பந்தக்கால் நட்டு கொண்டாடுவர். நலங்குப் பாடல்கள் திருமணப் பாடல்கள் பெரும்பான்மையாகப் பாடப்படுவதில்லை பாடும் மரபு தேய்வுற்றமைக்குக் காரணம் ஒலி பெருக்கிகள் பயன்பாட்டில் உள்ளக் காரணத்தாலே ஆகும். திருமணம். மகப்பெறு. நம்பிக்கைகள், சடங்குகள் யாவும் மனிதனின் வாழ்க்கையில் முக்கிய அங்கமாக உள்ளன.

இலக்கியங்கள் வழி இவற்றை படித்து அறிந்துக்கொள்கிறோம். மொழி ஆய்வுகளைப் பொறுத்தவரை இந்திய பண்பாட்டினை உணர்த்தும் வரலாற்று தரவுகளில் நாட்டுப்புறப் பாடல்களுக்கு மிகப்பெரிய பங்கு உள்ளதை யாராலும் மறக்க இயலாது. அன்றாட வாழ்வின் நிகழ்வுகள் பற்றிய குறிப்புகள் நாம் அறிந்துக்கொள்ள ஏதுவாக இருப்பது திராவிட மொழிகளின் இலக்கியங்களே. மொழி வரலாறு பற்றியக் குறிப்புகள் பெரும்பாலும் ஏட்டு இலக்கியமாகவும் வாய்மொழி இலக்கியமாகவும் இருந்துள்ளதை எவராலும் மறக்க இயலாது. தென் திராவிட மொழிகளாகிய தமிழ் , தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலானவற்றில் வாய்மொழி பாடல்கள் தனி இடம் பெற்றுள்ளதை மறக்க இயலாது.

**சகுனம் பார்த்தல்**

இன்றும் சகுனம் பார்க்கும் முறை உள்ளது.

- பல்லி விழுதல்
- முதியோர் - விதவை குறுக்கிடுதல்
- பூனை குறுக்கிடுதல்
- விக்கல் - தும்மல் வருதல்
- பறவைகள் அலறுதல்

போன்ற சகுனங்களை இன்றும் பார்க்கின்றனர்.

**“நாளும் முள்ளும் பிறவற்றினிமித்தமும்”** என்று வாய்ப்புள் பறவைப்புள் பற்றிய குறிப்புகளால் பறவையின் சமிக்கைகள் வைத்து சகுனம் பார்த்துள்ளனர்.∴ **கூகை அலறினால் சாவு வரும்** என்பது பாமரமக்களின் நம்பிக்கைகளாகும். பண்டைத் தமிழரும் பறவைகள் வைத்து சகுனம் பார்த்தது தமிழிலக்கியங்கள் மூலம் அறிந்துக் கொள்ளலாம்.

1. **அஞ்சுவரு குராஅல் குரலுந் தூற்றும்**
2. **மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை**
3. **அன்புடை மரவினின் கிளையொ டார**

இலக்கியம் காட்டும் இச்செய்திகள் **காகம் கத்தினால் விருந்தினர் வருவர்**; என்பதையும் நல்ல காரியத்திற்குச் செல்லும் போது காகம் இடப்புறமிருந்து வலதுபுறம் சென்றால் நல்லது என்றும் நம்பினர். கண்துடிப்பதும் நம்பிக்கையாகக் கொண்டனர். காதல் காலத்தில் கண் துடித்தலைப் பற்றி இலக்கியங்கள் கூறும் தகவல்களைப் போல நாட்டுப்புறப் பாடல்களும் கூறுகின்றன.

1. **;நல்லெழி லுண்கணு மாடுமா விடனெ;**
2. **நுண்ணேர் புருவத்த கண்ணு மாடும்;**

கண் துடித்தலால் தலைவன் விரைவில் வருவான் என்று நம்புகின்றனர்.

**“சென்றவள் உள்ளிய தன்மையர் போலு மடுத்தடுத்து**
**ஒள்ளிய தும்மல் வரும்”**

தும்மலும் நம்பிக்கையான சகுனம் ஆகும். சாப்பிடும் போது தும்மல் திடீரென தும்மல் வந்தால் நூறாண்டு வாழ்க என்பர். பல்லி சொல்லுதல் தமிழர்களது வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்றுள்ளது. இதனை அகநானூறும். நற்றிணையும் எடுத்தியம்புகின்றன.

1.∴ **;பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி**
**நல்ல கூறென நடுங்கிப்**
**புல்லென் மாலையொடு பொருங்கொ றானே;**
2.∴ **நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கிற்றேற்றம்,**

தமிழர்களது சகுனத்தில் பூனை குறுக்கேச் செல்வது சகுனமாக கருதினர்.

**யாரு கண்ணுல பட்டபோதும்**
**பூனையார் கண்ணுல படாதே**
**பச்சியும் பல்லியும் உச்சியில்**
**பந்தியில் கிடக்க வீட்டில**
**முந்தியில் வரும் விருந்தாளி கூட்டமெ**

**தும்மலும் விக்கலும்**
**கண்ணுல நிக்குற - என்**
**மாமனச் சொல்லுதே**
**முன்னால கண்ட கனவதான்**
**பல்லி வந்து கூறுதே**

**பறவை வுட்டம் எல்லாம்**
**கல்யாணச் செய்தி சொல்லக்**
**கூவி கூவி அழைக்குதே - மச்சான்**
**கண்ட கனவ போல - தாலி**
**கட்டிட வந்து விடு**

**வந்து கூட்டி போயிடு**

வாய்மொழி பாடலில் காதல், கற்பு இரண்டிற்கும் உதவும் சகுனங்களின் ஒற்றுமைத் தன்மையினை இணைத்து கூறியிருப்பதைக் காணலாம். தமிழ் மக்களின் நாகரீகம் பண்பாடு இவற்றை அவர்களின் பாடல்கள் பதிவு செய்வது போல நம்பிக்கைகளையும் அவர்களது பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

பிள்ளைப் பேற்றிற்காக அரசமரம். வேப்பமரம் சுற்றி வருவது நம்பிக்கையாக இருந்தது **“அரசமரத்தைச் சுற்றி வந்து அடிவயிற்றைப் பார்த்தாளாம்**” என்பது **பழமொழி** ஆகும். அரசமரத்தை சுற்றி வருவதால் மலட்டுத்தன்மை நீங்கும். அரசமரம் வழிபாடு மலட்டுத் தன்மையை நீக்கவல்லது என **சங்கர் சென் குப்தா** குறிப்பிட்டுள்ளார். குழந்தைகளுக்கு கண்ணேறு கழித்தல் மிகவும் முக்கிய நம்பிக்கையாகும். கண்ணடிபடுவதைக் “கல்லடி பட்டாலும் கண்ணடிப்படக் கூடாது” என்பர். பூசணிக்காய். எலுமிச்சை. தேங்காய். கற்பூரம் போன்றவை கண்ணேறு கழித்தலுக்கு உகந்த பொருட்களாக மக்கள் நம்புகின்றனர்.

**“கண்ணான கண்ணுக்கு கண்ணேறோ**
**கண்டவங்க உன் அழகுல வைச்ச கண்ணேறோ**
**சுண்ணாம்பும் மஞ்சளும் கலந்து சுற்றி ஆலத்த ஊத்து**
**பூசணி குங்குமம் பொட்டு ரோட்டுல உடைச்சு போடு”**

குழந்தைக் கொடிச் சுற்றிப் பிறந்து விட்டால் குடும்பத்துக்கு ஆகாது மாலை சுற்றி பிறந்தால் தாய் மாமனுக்கு ஆகாது என்பது பழமொழி ஆகும். வலது பக்கம் அசைவானால் ஆண்குழந்தை என்றும் நான்காவதாக ஆணோ பெண்ணோ பிறப்பது சிறப்பல்ல அதிலும் மூன்று ஆண் குழந்தைக்குப் பின் பெண், மூன்று பெண் குழந்தைக்குப் பின் ஆண் குழந்தை பிறந்தால் அது நல்லதல்ல என்பது நம்பிக்கையாகும்.

- **கனவில் திருமணம் நடப்பது**
- **ஆடி மாதத்தில் பெண் பார்ப்பது**
- **பாம்பு கடிப்பது**
- **பூமிக்குள் புதைவது**

இவையெல்லாம் நல்லதல்ல நாட்டுப் புறப்பாடல் ஒன்றிலும் கனவு பற்றிய அழகான வரிகள்,

**நனவொடு நானிருந்த ராசா**
**கனவாகி நீ மறைந்தாயெ**
**கனவொடு நானிருந்த போது**
**களையாது நீ நிறைந்தாயே**

**உன் விட்ட மனம் நானெண்ணி**
**என் தொட்ட மனம் தவிக்கிறேனே**
**தினமும் கனவிலே தவிக்கிறேனே**
**கனவாகி கழிக்கிறேன் நானே......**

ஒவ்வொரு மாதத்திற்கும் பருவமடையும் போது சகுனம் பார்ப்பது உண்டு,

**பருவம் ஆகும் பெண்ணே**
**வந்த மாதம் என்னே**
**செவ்வாயில வந்தவன் நல்லவனில்ல**
**ஞாயிற்றுக்கிழமை பருவமென்றால் நாய்படாத பாடு**

**சித்திரையில் பருவமடைந்தால்**
**பெண்களுக்கு கணவன் குலம் கெடுமே**

**ஆனியில பருவமடைந்தால் பொருளாதார நட்டமே**
**ஆவணி பருவமடைந்தால் பெண்களுக்கு வாயாடி பட்டமுண்டு**

இவ்வாறு பருவம் அடையும் திங்களைக் கொண்டு நம்பிக்கைகளை வளர்த்தனர். மருத்துவக் குணமுடைய செடிகளை, பாம்பை, உப்பை, சர்க்கரையை ஆறுமணிக்கு மேல் பறிக்கக்கூடாது மீறினால் பலன் கிடைக்காது என்பர். அவற்றை,.

**பாம்பு - செடி**
**உப்பு - ரவணம் - பெரிய சீனி**
**மு:லிகைச் செடி - தட்சணம்**

மாலை 6 மணிக்கு மேல் விளக்கு வைத்தப் பிறகு உப்பு, தண்ணீர், கடுகு, அரிசி, தரக்கூடாது. மரக்கா. உலக்கை இவற்றையும் தரக்கூடாது.

**கோலமிடுவதால்,.**

- **இலட்சுமி தங்குவாள்**
- **பேய் பிசாசு வராது**
- **ஆயள் பெருகும்**
- **வளம் பெருகும்**

சிறந்த கோலமிட்டால் சிறந்த கணவன் கிடைப்பான் சூரியன் வருவதற்கு முன் கோலமிடுதல் சிறப்பு கோலமிடாத வாசல் முன்பாக தேவதைகள் முக்காடிட்டு அழுவதாக நம்புகின்றனர்.

**“மாக்கோலம் மாக்கோலம்**
**எறும்புகளுக்கு விழாக்காலம்**
**பூக்கோலம் பூக்கோலம்**
**தென்றலுக்கு விழாக்காலம்**

**புள்ளி வைச்சுப் போட்டாளாம்**
**புதுப்பெண்ணா ஆனாளாம்**
**மாமனுக்கு மயக்கம் வர**
**மச்சினி போட்ட மாக்கோலம்**
**மாக்கோலம் மாக்கோலம்.......**

இதுபோல கார்த்திகை திருவிழாக் காலங்களில் கும்மிப்பாட்டு பாடுகின்றனர். திருமணம் என்பது சொர்க்கத்தில் தெய்வத்தின் துணையால் நிச்சயிக்கப்படுவதாகவே கருதுகின்றனர்.

**“கல்யாணம் கல்யாணம்**
**மூணு முடிச்சுப் போட்டு**
**பெண் கைகோர்க்கும்**
**கல்யாணம் கல்யாணம்**

**வரிசை போல**
**வாழ்ந்து சிறக்க பெண்ணை**
**வழியனுப்பும்**
**கல்யாணம் கல்யாணம்**

**வானத்துல பூதூவ**
**வானவர்தான் வாழ்த்துப்பாடும்**
**கல்யாணம் கல்யாணம்.....;**

என்று திருமணத்தை பற்றி கிராமியப் பாடல் உண்டு. இதேப் போல,

- **சத்தியம் செய்தல்**
- **கொடும்பாவி கட்டி இழுத்தல்**
- **வாய் சிவத்தல்**

ஆகியவற்றிற்கும் நம்பிக்கைகள் உண்டு. நாட்டுப்புறத்து மக்கள் சத்தியம் செய்தால் மீற மாட்டார்கள் தலையில் அடித்து, சூடம் எறியவிட்டு அணைத்து, பால் தொட்டு, வேட்டிப் போட்டுத் தாண்டுதல், குழந்தையைத் தாண்டி சத்தியம் செய்வர். சத்தியத்தை தவற விட்டால் தெய்வக் குற்றம் என்றும் தெய்வமே தண்டனைக் கொடுக்கும் என்றும் நம்புகின்றனர்.

மழை இல்லாவிடில் ஊருக்குள் கொடும்பாவி கட்டி இழுப்பர் அவ்வாறு செய்தால் மழைத் தெய்வத்தின் அருள் கிடைக்கும் என நம்பினர். தற்காலத்தில் யாகம் வளர்க்கின்றனர். வெற்றிலைப் போட்டு வாய்சிவந்தால் கணவன் மனைவி மீதும் மனைவி கணவன் மீதும் அன்பு கொண்டுள்ளதாகக் கருதினார்கள். மனைவி கர்ப்பம் தரித்திருக்கும் போது கணவன் முகச்சவரம் செய்தல் கூடாது. அது குழந்தைக்கு கேடளிப்பதாகும்.

**;ஊரான் ஊரான் தோட்டமில்ல**
**ஊட்டிவிட்ட தோட்டத்துல**
**வேண்டாம் வேண்டாம்**
**வெட்ட வேண்டாம்**

**கருவுக்கு கேடும் தரவேண்டாம்**
**மச்சான் மச்சான் வீட்டுக்குள்ளே**
**மரிக்கொழுந்து மணக்குதுல**
**வேண்டாம் வேண்டாம்**



**வெட்ட வேண்டாம்**
**கருவுக்கு கேடும் தரவேண்டாம் ....”**

**ஏகாலி பாடல்கள்**

ஊரில் உள்ளவர்களின் துணிகளை ஏரி, குளம், ஆறு, கிணறு இங்கெல்லாம் கொண்டு சென்று துவைப்பார்கள். கிராமங்களில் இன்றும் பூப்படைந்த பெண்ணின் துணிகள், திருமணத்திற்குப் பிறகு முதல் நாள் மணப்பெண் - மணமகன் உடுத்தியிருந்த துணிகள் எல்லாம் இவர்களைக் கூப்பிட்டு கொடுப்பார்கள். **“ஏகாலி”** என்று சிறப்புப் பெயருடன் அழைக்கப்படும் இத்தலைமுறையினர் தீப்பந்தம் பிடிப்பார்கள். திருமணம், பெண் அழைப்பு , மாப்பிள்ளை விருந்து, வரிசை எடுத்தல், திருவிழா என எல்லா காலங்களிலும் இவர்கள் இருளை விரட்ட தீப்பந்தம் பிடிப்பார்கள். நாள் முழுவதும் தண்ணீரில் நின்று கொண்டு பல வீட்டினரின் துணிகளைத் துவைக்கும் ஏகாலி இசைக் கச்சேரி நிகழ்த்துவான்.

. **“ஓடத்தண்ணிலே ஓரமாக நின்றலசி**

**ஓடியாரும் நீரடைச்சு**
**தோய்ச்ச துணி பிரிச்சுடனும் - ஏலம்மா ஏலு**
**கேளம்மா கேளு”**

இப்படியாக பாட ஆரம்பிப்பான். அவன் துவைச்சு முடியும் போது வரையிலும் உணவு உண்ட நேரம் போக மற்ற நேரமெல்லாம் பாட்டுக் கச்செரிதான். அதில்,.

- நல்லதங்காள் கதை
- தமயந்தி கதை
- மீன் - கருவாடு – பாடல்கள்
- உயர்ந்தவர் பாடல்கள்
- தெய்வப் பாடல்கள்

என வரிசை வரிசையாக அவர்கள் விரும்பிய படிக்கு பாடுவார்கள்.

**“கன்னிப் பொண்ணுகக் கால்முளைச்சு - ஏலொ லம்பா கேளு**
**கடுக்குதடி காலுக்குள்ள - ஏலொ லம்பா கேளு**
**கட்டவிரல் மரத்துபோச்சு - ஏலொ லம்பா கேளு**
**கரியக்காரன் எங்குவரான் - ஏலொ லம்பா கேளு**

**பிடிச்சா நல்லா போடு - ஏலொ லம்பா கேளு**
**காயவச்சு - ஏலொ லம்பா கேளு**
**உப்பு உறைக்கும் பாரு - ஏலொ லம்பா கேளு**
**ஊரைசுத்தி வந்திறங்கு - ஏலொ லம்பா கேளு**
**உருவாகும் காசு - ஏலொ லம்பா கேளு்**
**என்று மீன் , கருவாடு பற்றி பாடுகின்றனர்.**

**குருவிக்காரர்கள் பாடல்கள்**

நரிக்குறவர்கள் காடை, கவுதாரி, ஊசி, பாசிமணி விற்பனை செய்யும் இவர்களை குருவிக்காரர்கள் என்பார்கள்.



**குறவன் -** **“ஊசிவித்த காசி எங்கெ பெண்ணே,**
**உள்ளான் வித்த காசி எங்கெ**

**குறத்தி -** **ஊசிவித்த காசிக்குத் தான் மாமா**
**உண்டை வாங்கித் தின்னேன்டா**
**உள்ளான் வித்த காசிக்கே**
**உப்பு வாங்கி வைச்சேன்டா**

**காடவித்த காசி எங்கே மாமா**
**கவுதாரி வித்த காசி எங்கே மாமா;**

**குறவன் -** **;காடவித்த காசியெல்லாம் பெண்ணே**
**கள்ளு வாங்கிக் குடிச்சேன் மாமா;**

இப்படி பாட்டுப்போல அவர்கள் மாலையில் போடும் சண்டை அமைந்திருக்கும்.

**மொழிநடை**

மனித பண்பாட்டு வளர்ச்சியின் தொடக்கம் யாதென்று அறிய முற்படும் போது அதன் விளைநிலமாக விளங்கியது மொழியே. மொழியின் தொடக்கத்தையும் மொழி உருவாக்கிய மனிதக் குழுமத்தையும் இவையென உறுதியிட்டு கூறவியலாத போதும் சில தமிழ் இலக்கியங்கள் தரும் ஆதாரங்களைக் கொண்டு ஒரளவிற்கு வரையறுக்கின்றனர் ஆய்வாளர்கள்.

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே - வாளொடு**
**முன்தோன்றிய மூத்தக்குடித் தமிழ்க்குடி”**

(கரந்தைத்திணை - துடிநிலைத்துறை (உதாரணம் பாடல்)
புறப்பொருள் வெண்பாமாலை - ஐயனாரிதனார்)

இவ்வரிகள் மனித குல தோற்றத்தையும் அவை உருவாக்கிய மொழியையும் பற்றிய தெளிவைத் தரக்கூடிய ஆதாரமாக உள்ளது. மொழியின் துவக்கம் என்னவாக இருந்திருக்கும் என்று சிந்தித்தால் கருத்துப் பரிமாற்றத்துக்கென ஏற்பட்டதென அறிந்து கொள்ள முடிகிறது

பண்பாடு என்பதன் பிரதிபிம்பமாகத் திகழ்வதும் அதனை உருவாக்க உதவும் கருவியாக அமைவதும் மொழியெனலாம். மனிதனின் ஆதி மொழியாக சைகை மொழி இருந்ததென்பது ஆய்வாளர்கள் பலரது கண்டறிதலாகும்.

உழைப்பைத் தேடிய மனிதன் உருவாக்கிய தொழில் விவசாயம் அந்த விவசாயம் தான் ஆணையும் பெண்ணையும் இனம் பிரித்தது. கடுமையாக உழைக்கும் ஆற்றல் பெற்றவனே வீரனாக கொள்ளப்பட்டான். தாய்வழி சமு:கம் தந்தை வழி சமூகமாகியது ஆணாதிக்க உலகம் புத்துயிர் பெற்றது. அப்பொது தேவைப்பட்ட கருத்துப் பரிமாற்றத்திற்கும் களைப்பினைக் களைவதற்கும் மொழி எனும் ஆயுதம் உருவானது அதுதான் மனிதமொழி, பாமர மொழி, நாட்டுப்புற மொழி எனலாம். நாட்டுப்புற மக்களின் வாழ்க்கை முறை. நாகரீகம். பண்பாடு. தொழில், சமு:க அமைப்பு யாவற்றிலும் உள்ள உண்மைத் தன்மை அறிந்து கொள்வதற்கு மொழிநடை தேவைப்படுகிறது. மக்களின் நாகரீக பண்பாட்டு வளர்ச்சிக்கு மூல ஆதாரமாக மொழிநடை வளர்ச்சி அமைகிறது.

**விழாக்கள்**



இந்திய மக்களின் பண்பாட்டை உணர்த்த வழிபாடும் விழாக்கால சிறப்புகளும் முக்கிய இடம் பெறுகிறது. அனைத்து இன மக்களும் தங்களது உணவு , உடை, ஆடல், பாடல் இவைகளில் தங்களது பாரம்பரிய உணர்வுகளை வெளிக்காட்டி மகிழ்கின்றனர். நடனத்தின் மூலமாக மொழி மற்றும் பண்பாட்டு உணர்வுகளை விழாக்காலங்களில் ஆடிப்பாடி கருத்துகளைப் பகிர்வதுடன் மகிழ்வை வளப்படுத்தி பிற மத நம்பிக்கைகளுக்கும் மதிப்பளிக்கின்றனர். இத்தகைய உணர்வு இந்திய பண்பாட்டின் பெருந்தன்மைக்கு உரியதாகும்.

**நடனம், பாடல், ஆடல், இசை, கச்சேரி, அரிதாரம், கூத்து, நாடகம், சிலம்பம்**

என இவை போல இன்னும் பல கலைகளை விழாக்காலங்களில் நிகழ்த்தி மக்கள் மகிழ்கின்றனர்.

**முடிவுரை**

பண், பழமொழி, ஒப்பாரி, தாலாட்டு என நாட்டுப்புறப் பாடல்கள் பற்றிய தகவல்களை பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய தொல்காப்பியம் முதல் பல இலக்கிய நூற்கள் மூலமாக சான்றுகளாக அறிந்துக்கொள்ளலாம். பிறந்தது முதல் இறக்கும் வரை மனித நாகரீகத்திற்கும் பண்பாட்டுக்கும் களனாக இருப்பது புன்னகையும் இழப்பீடுமாகும். மனிதன் தன் வாழ்நாளில் பெற்றவையும் பெறப் போகின்றனவையும் சாதித்தமையும் சாதிக்கப் போராடுபவையும் பற்றியத் தகவல்கள் அவர்களது கிராமத்துப் பாடல்களில் அமைந்ததெனலாம். வாய்மொழிப் பண்களாக செவிவழி கதைகளாக பாடப்பட்டவை நாட்டுப்புறவியல் பாடல்கள் என்பது உண்மை.

அறிவியல் வளர்ச்சியினால் நாகரீகமும் பண்பாடும் வீழ்ச்சியடைந்து உண்மையான,

- **பாசம்**
- **விருந்தோம்பல்**
- **ஒற்றுமையுணர்வு**
- **காதல்**
- **விட்டுக் கொடுத்தல்**

❖ நாட்டுப்பற்று

போன்றன யாவையும் மங்கிப் பின் மறையும் நிலைமைக்குள் விழுவதால் நாட்டுப்புறப் பாடல்களை உள்ளது உள்ளவாறு ஆய்வுச் செய்து வெளிப்படுத்துவது கலைச் சேவையாகும். இதன் மூலமாக மூத்தோர் வாழ்வியல் முறைகள் அறிந்துக்கொள்வது இந்திய பண்பாட்டின் முக்கிய தேடலாகும். அன்று இருந்த பாடல்களும் அதன் வளர்ச்சியும் இன்று அதன் மாற்றமும் பற்றிய தகவல்களை கிராமத்து மக்கள் பழையப்பாடல்களைக் கொண்டு அறிந்த உண்மையாகும். பாடல்களின் வடிவமாற்றம். தற்கால வளர்ச்சியில் பல மாற்றங்களைத் தந்துள்ளது. தற்கால மனித பண்பாடு மனிதம் மறந்து மனித நாகரீகம் மறந்து பண்பாட்டை இழந்து அனுபவங்களைப் புதிய வடிவில் பெற்றுக் கொண்டு பழமை மறந்து வாழ்கிறோம்.

**"நாமிருக்கும் இடம் நமதென்று அறிவோம்"** நம் முன்னோர், நம் மக்கள், நம் உறவு, நமது பண்பாடு என்ற உணர்வை வளப்படுத்தி பண்பாட்டுப் பாடல்களை முழுமையாக சேகரித்து அதனை வடிவம் சிதையாமல் சுவை குன்றாமல் பாதுகாத்திட வேண்டிய கட்டாயம் நமது சமூகத்திற்கு ஏற்பட்டுள்ளது. இன்றைய இளைய சமூகம் அதனைப் பாதுகாத்திட முயன்றிட வேண்டும். எந்தத் துறையிலும் தன்னைத் தன் கவனத்தை செலுத்திட விரும்பும் இளையோர் நாட்டுப்புறப் பாடல்களையும் சேகரிக்கும் ஆர்வம் கொள்ள வேண்டும். தமது மூதாதையர் வாழ்ந்த வாழ்க்கை நெறிகளை உள்வாங்கி ,

**அன்பு, இரக்கம், பாசம், ஈகை, விட்டுக்கொடுத்தல், ஒழுக்கம்**

போன்ற வாழ்வியல் நெறிகள் பற்றிய கருத்துக்களை பின்பற்றிட முனைதல் வேண்டும்.

கற்றல் என்பது சாகும் வரை நம்மொடு பயணிக்கும். எனவெ எந்தத்துறையில் வேண்டுமானாலும் வல்லவனாக இருக்க முயற்சிக்கலாம். எனினும் பொழுது போக்கை வீணாக்காமல் கற்கவும் நாட்டுப்புற மக்களின் வாழ்வியல் நெறிகள் கலந்த பாடல்களைச் சேகரிக்கவும் கூடிய எண்ணங்களை வளர்த்தால் நிச்சயமாக பண்பாடும் பாரம்பரியம் பண்படும் சமூகம் உயர்வுறும் என்பது உறுதி.

**மேற்கோள் நூல்கள்**


❖ தொல்காப்பியம்
❖ புறநானூறு
❖ நற்றினை
❖ நாட்டுப்புறவியல் நூல்கள்
❖ இணையம்
❖ ஆய்வுக்கட்டுரைகள்


(☺)(☺)(☺)(☺)(☺)

# திருக்குறளில் வாழ்வியல் அறம்

ST Lakshamanan MA
Tamil Department
Sri Venkateswara University
Tirupathi-517502.

*****

என்றும் அழியாமல் நின்று நிலைபெறும் அறங்களை உலகிற்கு உணர்த்தி அனைவரும் ஏற்றுக்கொள்ளும் கருத்துக்களை எடுத்தியம்புவது திருக்குறள் ஆகும். எனவே, உலக இலக்கியங்களிலும், தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலும் அதன் கருத்துத் தாக்கம் காணப்படுவது இயல்பான ஒரு நிகழ்வாக அமைந்துள்ளது. திருக்குறளை எடுத்தாளாத நூல்களே இல்லை என்று கூறுமளவுக்கு அதன் செல்வாக்கு மிக உயர்நிலையில் அமைந்துள்ளது.

பண்டைத்தமிழ் மாந்தர் அறநெறி போற்றி வாழ்ந்தவர்கள் ஆதலால்,

> ***"அறத்தி னூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை***
> ***மறத்தலின் ஊங்கில்லை கேடு"*** (குறள்.32)

என்பது அவர்கள் வாழ்க்கைக் குறிக்கோளாக அமைந்திருந்தது. மன்னர்களும் அறநெறி வழுவாது ஒழுகினர். 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்பது சங்க கால அறக்கொள்கையாக அமைந்திருந்தது.

அறம் என்பதனைப் பண்டைத்தமிழ்ச் சான்றோர் ஒரு கொள்கையாகவோ, கோட்பாடாகவோ, சமயமாகவோ கருதவில்லை. இதனை அவர்கள் வாழ்க்கை நெறியாகவே கருதிப் போற்றினர். ஒழுக்க நெறிக்குரிய விதிமுறைகளின் தொகுப்பாகவே அறம் கொள்ளப்பட்டது. அறம் தனிமனிதன் ஒருவனுடைய கடமைகளையும், செயல்முறைகளையும் சமுதாயத்தின் ஓர் உறுப்பினன் என்ற முறையில் நெறிப்படுத்துகிறது என்பதும், மனிதனைப் படிப்படியாகப் பண்பட்டு விளங்கச் செய்கின்றது என்பதும், மனித வாழ்க்கையின் இலட்சியமாகிய பேரா இயற்கைப் பெருநிலையாகிய வீடுபேற்றை அடைய முயலுமாறு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கிறது என்பதும் நம்முடைய முன்னோர்களின் நம்பிக்கையாகும். காலத்தையும் இடத்தையும் கடந்த நிலையில் இயன்றவை எல்லாம், பிறருக்கு உள்ளத்தாலும் உரையாலும், செயலாலும் நன்மை செய்வதையே அறத்தின் பொதுநிலையெனக் கொண்டு நம் முன்னோர்கள் ஒழுகினர்.

ஒருமனிதன் தனியே நின்று ஒழுக்கத்தோடு வாழ்வதற்கும் அல்லது சமூகத்தோடு கலந்து வாழ்வதற்கும் அவனுக்குக் குறிக்கோளைத் தந்து, பண்பு நலன்களைத் தந்து உதவுவது அறம் என வழங்கப்பட்டது.

## சமய அறம்

அறம் என்பது வாழ்வியலின் அனைத்து நிலைகளுக்கும் துணைநிற்கும் கூறாகச் சங்ககாலத்தில் கருதப்பட்டது. அது ஆன்மீக உணர்வு தோன்றுவதற்கும் துணை செய்வதாக அமைந்தது. இதனை, "ஒழுக்க நெறி அறநெறியின் ஒரு பகுதியாகும். அறநெறியின் இலட்சியங்கள் எல்லாம் ஆழ்ந்த பொருள் உடையவனாக அமையுமானால், அவை ஆன்மீக உணர்வு கலந்தவனாக அமையும். அந்நிலையில்

அறநெறிக் கொள்கைகளே சமயத் தத்துவமாக அமைந்துவிடும். ஆகவே, அறநெறி என்னும் ஒளிவிளக்கை நமக்குத் தந்துதவுவது சமயத்தின் தலைசிறந்த பண்பாகும்" என்று மாத்யூ ஆர்னால்டின் கூற்று உணர்த்துவதனைக் காணலாம். எனவே, துறவறம் மேற்கொள்பவர்களுக்கும் அறமே வழிகாட்டியாக அமைவதனை உணரலாம்.

அறம் என்பது வறியவர்களுக்கு உணவும், உடையும், வசிப்பிடமும் வழங்குதலே என்ற கருத்தாக்கமும் சங்கம் மருவிய காலத்தில் நிலவியுள்ளது. இதனை,

***"அறம் எனப்படுவது யாதெனக் கேட்பின்***
***மறவாது இதுகேள்; மன்னுயிர்க் கெல்லாம்***
***உண்டியும் உடையும் உறையுளும் அல்லது***
***கண்டதில்"***

என்று மணிமேகலை கூறுவதால் அறியலாம். இவற்றால் அறம் என்பது ஒழுக்கம் என்பதும், வாழ்க்கைக்கு வேண்டிய பண்புகளே அறம் என்பதும், ஏழை எளியவர்களுக்குச் செய்யும் தருமமே அறம் என்பதும் புலனாகின்றது.

அறம் என்ற தமிழ்ச்சொல்லுக்கு எதிக்ஸ் என்னும் ஆங்கிலச் சொல் கூறப்படுகின்றது. இதற்கு, "தனிமனிதன் பிறருடன் தொடர்பு கொள்ளத் துணைசெய்யும் பொது இயல்பான ஒழுக்கம்" என்று ஆங்கில அகராதி விளக்கம் தருகின்றது.

எதிக்ஸ் என்ற சொல் கிரேக்க மொழிச் சொல்லாகும். எதோசு என்னும் வேர்ச்சொல்லின் அடியாகத் தோன்றிய சொல்லுமாகும். இவ்அடிச்சொல் முதன் முதலில் பழகிப்போன நடத்தை வழக்கம் என்னும் பொருள்களையே உணர்த்தி வந்தது. பின்னர், நடத்தை என்னும் பொருளே அவற்றுள் சிறப்பு மிக்கதாக வழங்கிற்று. நாளடைவில் அவ்வேர்ச் சொல்லின் அடியாகப் பிறந்த, எதிக்ஸ் என்பது ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்ட அறிவியல் கலை என்று வழங்கத் தலைப்பட்டது.

## ஒழுக்கநெறி

நம்முடைய முன்னோர்கள் அறம் என்னும் சொல்லிற்கு ஒழுக்கவிதி என்ற பொருளையும் குறித்துள்ளனர். எதிக்ஸ் என்னும் ஆங்கிலச் சொல்லுக்குத் தரப்படும் பொருள் விளக்கத்தோடு இதனை இணைத்துக் கூறுகின்றனர்.

"எதிக்ஸ் என்பது, சமுதாயத்தில் வாழும் மனிதர்களின் நடத்தையைப் பற்றி ஆராயும் கலை" என்று பொருள் தருகின்றார் க.த.திருநாவுக்கரசு.

இதன் அடிப்படையில் நோக்குவோமாயின் மனிதன் நலமாக வாழ்வதற்கும், அந்நல்வாழ்வின் பயனாகிய இன்பத்தை அடைவதற்கும் அவன் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய நல்ல பழக்கவழக்கங்களையும், தீயவை என்று கடிந்து ஒதுக்க வேண்டிய செயல்முறைகளையும் அறிந்து, நல்லனவற்றை மட்டும் பின்பற்றி ஒழுகுவதே அறம் எனக் குறிக்கப்படுவது புலனாகும்.

அறமே ஒழுக்கமாக எதிரொலிக்கின்றது. ஒழுக்கமாகிய செயலுக்கு அடிப்படையாக இருப்பது எண்ணாகும். எண்ணம் தூய்மையாக இருந்தால்தான் சொல்லும் செயலும் தூய்மையாக அமைய

முடியும். எனவே, எண்ணம் தூய்மையாக இருக்க வேண்டுமானால் எண்ணத்தின் எழுச்சிக்கு நிலைக்களனாக உள்ள மனம் மாசற்றுத் தூயதாக இருக்க வேண்டும். மனம் மாசற்றுத் தூய்மையாக உள்ள நிலையே அறம் எனப்படும். மனத்தில் மாசு நிறைந்து கிடக்கும் நிலையில் செய்யும் செயலும், உரைக்கும் சொல்லும் வீண் ஆரவாரமாகவே அமைந்திருக்கும். அவை அறம் ஆகாது. மனத்தின் மாசைப் போக்குவதற்குத் துணைபுரிவனவே அறம் ஆகும். அதற்கு மனத்தில் பொறாமையுணர்வு, அவா, வெகுளி ஆகிய தீய உணர்ச்சிகள் தோன்றாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இதனைத் திருவள்ளுவர்

**"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற"** (குறள்.34)

**"அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்ற தறம்"**(குறள்.35)

என்னும் குறள்களின் வழி புலப்படுத்துவார். இவ்வடிப்படையில் நோக்குவோமாயின் அறம் என்பது எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றும் சேர்ந்த அறிவுப்புலம் சார்ந்து விளங்குவதனை உணரலாம்.

## ஈகை அறம்

ஒருபொருளும் இல்லாத வறியவர்க்கு, அவர் வேண்டிய பொருளைக் கொடுத்து உதவுவதே ஈகை ஆகும். இல்லை என்று வருபவர்க்கு இல்லை என்று கூறாது, அவர்க்கு வேண்டிய பொருளைக் கொடுத்துதவும் அறச்செயலே ஈகை ஆகும். மற்றவர்க்குக் கொடுப்பதெல்லாம் பயனை எதிர்ப்பார்த்துக் கொடுக்கும் தன்மையுடையதாகும். இதனை,

**"வறியார்க்கொன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்**
**குறியெதிர்ப்பை நீர துடைத்து.** *(குறள்.221)*

**"ஆற்றுதலென்பதொன் றலர்ந்தவர்க் குதவுதல்"**

என்னும் பாடல்களால் அறியலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த ஈகை அறச்செயல்களுள் முதன்மையானதாகச் சான்றோரால் குறிக்கப்படுகின்றது. அருள் புரிதல் என்பதன் அடிப்படையாகத் தோன்றிய ஈதல் என்னும் பண்பு பரந்த பொருளில் அறம் என்னும் பொருள்தருவதாய் அமைந்துள்ளது.

## அறமும் புண்ணியமும்

மனிதன் செய்கின்ற செயல்கள் பல திறந்தனவாகும். அவற்றை நல்ல செயல்கள், தீய செயல்கள் என்று அச்செயல்களினால் உண்டாகும் பயனைக் கருத்தில் கொண்டு பாகுபாடு செய்யலாம். ஒருமனிதன் செய்கின்ற செயலின் விளைவாக அவனுக்கும், பிறருக்கும் நன்மை உண்டாகுமானால் அதை நல்ல செயல் என்று கூறுவர். ஆனால், ஒரு மனிதன் செய்கின்ற குறிப்பிட்ட ஒரு செயலால் அவனுக்கு நன்மையும் பிறருக்கு எவ்வழியிலேனும் தீமையும் உண்டாக்குமானாலும் அதை அறச்செயல் என்று உலகம் ஏற்றுக்கொள்வதில்லை. எனவே, எனைத்தானும், எஞ்ஞான்றும், யார்க்கும் நன்மை பயக்கத்தக்க செயல்களையே அறமென்று சான்றோர்கள் கூறுகின்றனர். அத்தகைய நற்செயல்களைச் செய்வதனால் ஒருவனுக்குப் புகழ் உண்டாகிறது. மறுமைக்கு ஒரு பயனும் விளைகின்றது. அப்பயனையே புண்ணியம் என்று கூறுகின்றனர்.

சமயத்துறையில் அறமானது புண்ணியம் என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றது. நற்செயல்களின் விளைவாகக் கிடைக்கும் பயன்களே புண்ணியம் எனப்படுகின்றது. புண்ணியத்தை அறம் என்று குறிக்கும் வழக்காறு தமிழ் இலக்கியத்தில் பன்னெடுங்காலமாக வழக்கிலிருந்து வந்துள்ளது. இதனை,

**"அறனும் அன்றே! ஆக்கமும் தேய்ம்"[6]**

**"அறம் பெரிதாற்றி அதன் பயன் கொணமார்"[7]**
**அல்லவை தேய அறம் பெருகும்" (குறள்.96)**

**"அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்**
**பேணாது அழுக்கறுப் பான்" (குறள்.163)**

என்னும் பாடற்பகுதிகள் கொண்டு உணரலாம்.

**பயன்பட்ட நூல்கள்**

1. மு.வரதராசன், (மேற்கோள்) இலக்கிய மரபு,ப.36
2. மணிமேகலை, வ-ள். 25:228-231
3. Universal Dictionary, p.327
4. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.25
5. கலித்தொகை, பா.133:6
6. நற்றிணை, பா.63:3
7. பரிபாடல், பா.19:31



(☺)(☺)(☺)(☺)(☺)

# கோதைத்தமிழ் ஐயைந்தும் ஐந்தும்

**Dr C Govindaswamy MA PhD**
Academic Consultant,
Dept of Tamil,
Sri Venkateswara University
Tirupati – 517502.
govindaswamy133@gmail.com

*****

உலகில் கடவுள் நெறி பல்லோராலும் போற்றப்படுகின்றது. வழிபடு முறையும் வாழ்த்தும் நெறியும் எத்தனையோ வகையில் மாறுபாடுகின்றன. என்றாலும், முடிவில் அனைத்தும் ஒன்றாகவே முடியும் என்பது சமயச்சான்றோர்களின் கருத்தாகும். சமயங்களை ஆறுகளாகவும், இறைவனை ஆறுகள் எல்லாம் சென்று சேரும் கடலாகவும் காட்டப் பெறுவது உண்டு. கி.பி.ஆறாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் சைவ, வைணவ பக்தி இயக்கங்கள் தோன்றி வளர்த்து தமிழ்மொழி வளர்ச்சிக்கும், திராவிட மொழிகளின் எழுச்சிக்கும் பெரிதும் உதவின.

**வைணவம்:**

சமயம் என்றால் என்ன? மனித உள்ளங்களை இன்ப அன்பின் விளைநிலமாகத் தகுதிப்படுத்திய பக்குவப்படுத்தும் தத்துவத்திற்கு, வாழ்க்கை முறைக்குச் சமயம் என்று பெயர். மனித வாழ்க்கையை சமைத்துப் பக்குவப் படுத்துவதே சமயத்தின் நோக்கம் என்பார் குறைக்குடி அடிகளார். அவ்வகையில், அன்பு நெறியே உய்ய வைக்கும் உயர்ந்த நெறி என்பதை நிலை நிறுத்தி, வைணவச் சமயத்திற்குப் புத்துணார்ச்சி அளித்த இறை நெறியாளர்களே ஆழ்வார்கள். “ஆழ்வாகள்” என்ற சொல்லுக்கே, “இறைவன் குணங்களில் ஆழ்ந்து கிடப்பவர்கள்” என்பது பொருள் என்பர். இவர்கள் உயர்வறவுயர் நலம் உடையவனும், அயர்வனும் அமரர்கள் அழிபதியுமான இறைவனால் பக்தியும் ஞானமும் அருளப்பெற்று உலகுய்ய வந்த உத்தமர்கள் என்பது வைணவச் சமயம் நெரியோர்கிளன் கருத்தாகும்.

மனத்துக்கண் மாசிலனாகி மெய்யன்புடன் திருமாலைக் சரண் அடைந்தால் முக்தி பெறலாம் என்பது ஆழ்வார்களின் கொள்கை. இவர்கள் தாம் கண்டுணர்ந்த கொள்கைகளையும் அனுபவங்களையும் திவ்வியப் பிரபந்தப் பாடல்களாக அருளிச் செய்தனர். அவர்களுடைய அருள் செயல்கள்யாவும் தமிழ் உபநிடதம் என்றும், திராவிட வேதம் என்றும். போற்றப்படுகின்றன. நாலாயிரத் திவ்வியப் பிரந்தங்கள் ஸ்ரீ ஆண்டாள் பாடிய கோதைத் தமிழ் ஐயைந்தும் ஐந்தும் “மாகிய முப்பது பாசுரங்களை கொண்ட திருப்பாவை பல சிறப்புகளைக் கொண்டு விளங்கின்றது.

**ஆண்டாள்:**

திருவில்லிப்புத்தூரில் பெரியாழ்வாரால் அமைக்கப்பட்ட நந்தவனத்தில் திருத்துழாய் அடியில் கி.பி.9ம் நூற்றாண்டில் நள அண்டு, ஆடி மாதம் வளர்பிறையில், சதுர்த்திசி திதியில் செவ்வாய்க் கிழமையன்று பூர நட்சத்திரத்தில் பூமிப்பிராட்டியார் அம்சத்தில் ஆண்டாள் அவதரித்தாள். அப்பெண் குழவியைப் கண்டெடுத்தப் பெரியாழ்வார் தன் அன்பு மகளாக வளர்த்தெடுத்தார்.

**ஆண்டாளின் பெருமை அளவு கடந்தது.**

> **பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த**
> **திருவாடிப்பூரத்தின் சீர்மை – ஒரு நாளைக்**
> **குண்டோ மனமே யுணர்ந்துயிர் ஆண்டாளுக்**
> **குண்டாகி லொப்பிதற்கு முண்டு.**

என்று ஆண்டாளின் பெருமையை உபதேசரத்தின மாலை(23) உணர்ந்து உரைக்கின்றது.

ஆண்டாளின் பக்தி சிறப்பை எடுத்துக்காட்டும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியர் அவர்கள்'' இருடிகளையும் ஆழ்வார்களையும் ஒப்பு நோக்கினால் இருடிகளின் பக்தி அனுவளவாகவும் ஆழ்வார்களின் பக்தி மலையளவிலும் காணப்பெறும். அங்ஙனமே மற்றைய ஆழ்வார்களின் பக்தியும் பெரியாழ்வாரின் பக்தியும் ஒப்பு நோக்கினால், மற்றையோர் பக்தி அணுவள்வாகவும் பெரியாழ்வாரின் பக்தி மலையளவாகவும் தோற்றம் அளிக்கும். பெரியாழ்வாரின். பக்தியையும் அவர்தம் அருமை மகள் ஆண்டாள் பக்தியையும் சீர்தூக்கினால், பெரியாழ்வார் பக்தி அணுவளவிலும் ஆண்டாள் பக்தி மலையளவிலும் தோன்றா நின்கும்' என்பார். மேலும், ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை அவர்கள் ''ஸம்ஸாரத்திலே உறங்குகிறவர்களை எழுப்பி எம்பெருமான் தானே தன்னைக் காட்டக் கண்டார்கள் ஆழ்வார்கள் ஆண்டாள் தானே சென்று எம்பெருமானை எழுப்பித் தன் குறையை அறிவித்தாள். அகையாலே அவர்களிலும் இவள் விலகஷ்ணை'' என்று ஆண்டாளைப் பெருமை பாராட்டுவார். அம்மட்டுமின்றி ஸ்ரீவைஷ்ணவ சாம்பிரதாயத்தின் வளர்ப்புத் தாயாகிய ஸ்ரீ ராமானுஜர், தம்மைத் ''திருப்பாவைச் சீயர்'' என்று அனைவரும் சிறப்பித்துப் பேசுமளவிற்கு இநிதப் பிரபந்தத்தில் ஈடுபட்டிருந்தார் என்று விசேஷித்துக் கூறப்பபித்தும் நோக்கத்தக்கது. இங்குத் திருப்பாவை என்னும் தீங்கரும்பின் சுவையை சற்று சுருக்கமாகச் சுவைப்போமாக.



**திருப்பாவை தீங்குரும்பு:**

பாதகங்களைத் தீர்த்துப் பரமனடியைக் காட்டும் திருப்பாவைக்கு மூவாயிரப்படி என்னும் வியாக்கியானத்தை பெரியவாச்சான் பிள்ளை அவர்களும், ஆறாயிரப்படி என்னும் வியாக்யானத்தை அழகிய மணவாளவ் பெருமாள் நாயனாரும் அருளியுள்ளனர். மார்கழி மாதம் முழுவதும் வைணவத்திருக்ரோயில்களில் திருப்பாவை சிறப்பாக ஓதப்படுவதோடு பாராயணம் செய்யப்பட்டும் வருகிறது. மேலும், திருக்கோயில்களிலும் திருமாளிகைகளிலும் நடைபெறும் திருவாராதனத்தின் போது திருப்பாவை சேவையும் திருப்பாவை சாத்து முறையும் சிறப்பாக விளங்குகின்றது. இப்பிரபந்தம் வைணவ சமய உலகில் மட்டுமின்றி இலக்கிய உலகிலும் ஈடும் இணையுமற்றுத் திகழ்கின்றது.

பெரியாழ்வாரால் வளர்க்கப்பட்ட ஆண்டாள் பிறந்தது முதலாக எம்பெருமானிடம் அளவில்லாத அன்பு பூண்டு தான் பிறந்த ஸ்ரீவில்லிப்புத்தூரையே திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை இடைப்பெண்களாகவும், தானும் அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோயிலே ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகையாகவும் அங்குள்ள இறைவனை ஸ்ரீ கிருஷ்ணனாகவும் பொருட் சுவையும் இலக்கிய வளமும் மிகுந்து மிளர்ந்து இருத்தலைக் காணமுடிகிறது.

**முப்பதும் முத்துக்கள்:**

திருப்பாவை முப்பது பாசுரங்களில் முதல் ஐந்து பாசுரங்கள் முன்னுரையெனச் சொல்லத்தக்கன. மேலும், அப்பாசுராஸ்கள் ஐந்தும் இறைவனின் நிலைகளைக் காட்டுவனவாக விளங்குகின்றன. அவை பரத்துவம்,

வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அச்சாவதாரம் என்பவையாகும் - ஊரெல்லாம் வியக்கும்படி இளமையிலேயே ஸ்ரீ மந்நாரயனா மீது பக்திப் பெருங்காதல் கொண்டு, அவனையே திருமணம் செய்யவேண்டுமெனத் தீர்மானித்தாள். அவளுடைய பக்திக் காதலை தனது திருப்பாவை முதல் பாசுரத்தில்

**“நாராயணனே நமக்கே பறை தருவான்.**
**பரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய்”** என்று

பரத்துவ நிலையில் இருக்கும் ஸ்ரீமந் நாராயணனின் பெருமையை வெளிப்படுத்துகிறாள்.

‘வையத்து வாழ்வீர்காள்’ என்ற இரண்டாவது பாசுரத்தில் நோன்புக்கு அங்கமாகக் கொள்ள வேண்டுவன இவை என்றும் தள்ள வேண்டுவன இவை என்றும் எடுத்துக்கூறி, மேலும் “பாற்கடலுள் பையத்துயின்ற பரிமன் அடிபாடி” என்று பாடி இறைவனின் இரண்டாவது நிலையான வியூகத்தை விளக்கமுடி செய்கிறாள்.

மூன்றாவது பாசுரத்தில் நீர்வளம், நிலவளம், பால்வளம், செல்வளம் மிக்கிருக்க உத்தம் சீவலளம், உலகளந்த மூர்த்தியை வேண்டுகிறாள். இப்பாசுரத்தில் இறைவனின் விபவ நிலையை விளக்கும் முகமாக “ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி” என்று பாடுகிறாள்.

“ஆழிமழைக் கண்ணா” என்கிற பாசுரத்தில் கடவுளான வருண தேவனை அழைத்து, அவனைத் திருமாலின் திருவுருவம்போல் மெய்கறுத்து, அவன் கையில் உள்ள ஆழிபோல் மின்னி, வலம்புரிபோல் நின்றதிர்ந்து, சாரங்கம் என்ற வில்லில் இருந்து புறப்பட்ட அம்புகள் யுத்தத்தில் சரமழை பெய்தாற்போல் உலகம் வாழ மழை பெயதல் வேண்டும் எனப்பாடித் தனது பக்திப் பெருக்கை வெளிப்படுத்துகின்றாள்.

மாயக் கண்ணனை மனத்தூய்மையுடன் தூய நறுமலர்க் கொண்டுத் தூவி வழிபட்டு, வாயினால் அவன் நாமத்தைப்பாடி, மனத்தினால் சிந்தித்தால் எல்லாத்துன்பமும் தீயில் இட்ட பஞ்சுபோல் எரிந்து, நல்ல பயன் உண்டாகும் என்று சொல்லும் விதமாக “மாயனை மன்னு வடமதுரை மைந்தனை’ எனப்பாடி ஐந்தாம் பாசுரத்தில் அச்சாவதாரம் மகிமை பற்றி பேசுகிறார்.

இனி ஆறாம் பாசுரம் தொடங்கிப் பதினைத்தாம் பாசுரம் வரையில் உள்ள பத்துப் பாசுராங்களில் இறையனுபவத்தை பாகவத சமூதாயத்தோடு கூடி அனுபவிக்க வேண்டும் என்று தம்மோடு ஒத்தவர்களை எழுப்புகின்றாள். நோன்பினைப் பற்றி அறியாதவளையும், நோன்பினைப்பற்றி அறிந்தும் மறந்து கிடப்பவளையும், கண்ணனுக்கு மிகவும் இனிமையானவளையும், கண்ணன் வரும்போது வரட்டும் என்று அலட்சியத்தோடு உறங்குபவளையும், கிருஷ்ண பக்தியில் தலைசிற்ந்தவனாக விளங்குகின்ற ஒருத்தியையும் எழுப்புகிறாள்.

மேலும், குலம், குணம், உருவம் முதலானவற்றில் உயர்ந்து கண்ணனுக்கு ஒப்பாக இருப்பவளுமான ஒருத்தியை எழுப்புகிறாள். பன்னிரண்டாம் பாசுரத்தில் “கண்ணனுக்கு ஒரு லட்சுமனன் என்று சொல்லும் வகையில் பிரியாது பணி செய்யும் செல்வனின் தங்கையை எழுப்புகிறாாள். மேலும், “போதரிக் கண்ணினாய்” என்று கூறித், தன் கண்ணழகின் பெருமையை நினைத்திருந்த “மான் விழியான் உணர்த்துகிறாள்.

தான் முன்னதாக எழுந்து எல்லோரையும் துயில் எழுப்புவதாகச் சொல்லி, அப்படிச் செய்யாமல் உறங்கும் ஒருத்தியை எழுப்புகிறாள். பிறகு ஒரு மான்விழியாளை எழுப்பியது போன்று, இப்பாசுரத்தில் 'எல்லே இளங்கிளியே' என்று விளித்து ஒரு 'கிளி மொழியாளை' பத்தாவது பெண் மணியை எழுப்புகிறார்.

'நாயகனாய் நின்ற' என்ற பாசுரத்தில் எல்லோருமாகத் திரண்டு கண்ணனுடைய தகப்பனாரான நந்த கோபார் திருமாளிகை வாசலை அடைகிறார்கள். இப்பாசுரத்தில் கோயில் காப்பானையும் தோரணவாயில் காப்பானுமாகிய காவலரை ஏழுப்பி அவர்களுடைய அனுமதி பெற்று திருமாளிகைக்குள் செல்கிறார்கள்.

''அம்பரமெ தண்ணீரே'' என்ற பாசுரத்தில் நந்தகோபன், யசோதைப் பிராட்டி, கண்ணன், பலராமன் ஆகியோரை எழுப்புகிறார்கள்.

''உந்து மத களிற்றன்' என்ற பாசுரத்தில் புருஷாகரமாக நப்பின்னையை முன்னிட்டு எம்பெருமானை பற்றுவதே முறையென்று நப்பின்னைப் பிராட்டியைச் சரணமடைகிறார்கள். அடுத்தடுத்த பாசுரங்களில் நப்பின்னைப் பிராட்டியின் போக வைபவத்தையும், திருமேனி அழகையும் புருஷகரை வைபவத்யையும் சொல்லி எழுப்புகிறார்கள். மேலும், ஊற்றமுடையாய், பெரியாய் உலகினில் தோன்றமாய் நின்ற அடரே என்று. கண்ணனுடைய நீர்மை குணங்களைச் சொல்லிப் பாராட்டுகிறார்கள்.

கண்ணனல்லால் தெய்வமில்லை என்கிறபடியே வேறொரு தெய்வத்திற்கு ஆட்படாது இருத்தலைச் சொல்லி தங்களைக் காப்பாற்ற வேண்டும் என்றும் அறிவிக்கின்றனர்.

''மாரிமலை முழைஞ்சில்' என்ற பாசுரத்தில் சிங்காசனத்தில் வந்தமர்ந்து, தாங்கள் வந்த காரியத்தை ஆராய வேண்டும் என்று வேண்டுகிறார்கள். தங்கள். மனம் மகிழும்படியாக அவதார தெய்வங்களுக்கு. 'அன்றிவ்வுலகம்' என்ற பாசுரத்தில் பல்லாண்டு பாடுகின்றனர்.

பறையாகிய கைங்கர்யத்தை எங்களுக்குத் தர வேண்டும் என்று பிராத்தித்து, அது கைகூடும் காலை மகிழ்ச்சி அடைவோம் என்றும் வேண்டுகின்றனர். மேலும் தாங்கள் யாசித்து வந்ததை விண்ணப்பித்துக் கொள்கிறார்கள். ''கூடாரை வெல்லும்' பாசுரத்தில் நோன்பு நோற்றதால் தாங்கள் பெறும் சன்மானமாக சூடகம், தோள்வளை, தோடு, செலிப்பூ, பாடகம் ஆகிய பல ஆபரணங்களையும், ஆடையுடுத்து பாற்சோறு உண்டு குளித்ந்திருக்க விண்ணப்பித்துக் கொள்கிறார்கள்

இருபத்து எட்டாம் பாசுரத்தில் தங்கள் சிறுமைளையும் குறை வென்று மில்லாத கோவிந்தனுடைய பெருமையையும் அவனோடு உள்ள உறவையும் சொல்லிக் கொண்டு அறியாமையால் செய்த பிழைகளைப் பொருத்தருள வேண்டுகின்றனா.

திருப்பாவையின் பரம தாத்பரியமும் வெளிப்படுவது இருபத்தொன்பதாம் பாசுராமகும்.

> ''**உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்**
> **மற்றைநம் காமங்கள் மாற்று''** என்று கூறி

தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் எனப் பிரார்த்தித்துக கொள்கிறார்கள். இத்துணை சிறப்புமிக்க கோதைத் தமிழ் ஐயைந்தும் ஐந்துமான, ''சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே

இங்கிப் பரிசுரைப்பார், ஈரிரண்டு மால்வரைத்தோர்டு
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின்யுறுவர்" என்பதுதிண்ணம்.

## ஆண்டாள் திருவடிகளே சரணம்

**பயன்பட்ட நூல்கள்:-**


1. வைணவ சமய சார நிதி – S.K.ஸ்ரீநிவாச இராமானுஜ தாஸர்.
2. தமிழ் வளர்த்த வைணவம் - டாக்டர் - சு.வேங்கடராமன்.
3. வடவேங்கடமும் திருவேங்கடமும் - பேராசிரியர்.டாக்டர்.ந.சுப்புரெட்டியார்
4. வைணவ விளக்கு – டாக்டர். மா. வரதராஜன்.
5. ஆண்டாள் - டாக்டர்.சி.பாலசுப்பிரமணியன்.


(☺)(☺)(☺)(☺)(☺)



# புறம் காட்டும் அறம்

**சே சந்துரு**
உதவிப்பேராசிரியர்
திவ்யா கலை (ம) அறிவியல் கல்லூரி
சேத்துப்பட்டு ___ தி.மலை
chandruarni96@gmail.com

*****

மனித வாழ்க்கை செம்மைப்படுத்த இலக்கியங்கள் உறுதுணையாக உள்ளன என்றால் மிகையாகாது. தமிழினம் தோன்றி ஐந்து ஆயிரம் ஆண்டுகள் இருக்கும் என்பது அறிஞர்களின் முடிவு. இத்தகைய பழமையான இனத்தில் மலர்ந்து மற்றும் உலகம் போற்றும் பழம் பெரும் சிந்தனைகளை தன்னகத்தே கொண்டுள்ள செவ்விலக்கியங்களில் ஒன்று தான் புறநானூறு. அந்நூலில் உள்ள அறச்சிந்தனை பற்றி பின்வரும் கட்டுரை ஆராய்கிறது.

**புறநானூற்றின் சிறப்பு:**

புறம் என்பது காதலொழிந்த பிற மானிடப் பொருள்களைப் பற்றியது என்பர் அறிஞர். போர், வீரம், கொடை, புகழ், அறநெறி போன்ற வாழ்க்கையின் புறக்கூறுகளை பாடுவது புறப்பாடல்களின் இயல்பு. இத்தகைய கொள்கைகளை செவ்வென கொண்ட நூல் புறநானூறு. இந்நூல் இன்றை உலகின் கண் வாழும் மக்களின் போராட்டங்களான சமூகம், அரசியல். பொருளாதாரம், கல்வி, சாதியம் போன்றவைகளுக்கு தீர்வு அளிக்கும் நூலாக விளங்குகிறது. புறம் புறப்பாட்டு என அழைக்கப்படும் இந்நூல் இன்றைய சமூகத்திற்கு அறக்கோட்பாட்டை நிலை நிறுத்தும் ஊன்று கோலகவே அமைகிறது.

**நீரின் அவசியம்**

ஞாலத்தின் அடிப்படை தேவைகளுள் மிகவும் அவசியமானது நீர். குறைந்த மழைப்பொழிவு, வறட்சி நிலை, நீர் பற்றாக்குறை போன்ற பெரும் பிரச்சனைகளினால் இந்த பூமி தத்தளிக்கிறது. இந்நிகழ்விற்கு உலக வல்லுநர்கள் நீர் மேலாண்மை, நீரின் அவசியம், நீர் சேமிப்பு என்றவாறான விழிப்புணர்வு விளம்பரங்களை செய்து வருகின்றனர். இதனை சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே குடபுலவியனார் முயன்றுள்ளார்.

**நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்**
**தட்டோர் அம்ம இவண்தட் டோரே**
(புறம் -18)

இந்த உடல் நீரின்றி வாழாது. இவ்வுடலுக்கு உணவு அளிக்க கூடியதும் உணவாக இருப்பதும் நீர். அத்தகைய சிறந்த உணவை அளித்தவரே உயிரை கொடுத்தவருக்கு ஈடாகுவார். நீரையும் நிலத்தையும் ஒருங்ககூட்டி வேளாண்மைக்கு உதவுக என அறிவுறுத்துகிறார். மேலும் வள்ளுவரும் ”நீரின்றி அமையாது உலகு” என்பர்.

**அரசியல் சிந்தனை:**

உலக மயமாதல், தாரள மயமாதல் என்ற கொள்கைகளினால் இந்த தேசம் வளர்ச்சியை அடைந்துள்ளதா என்ற கேள்விக்கு விடை காணுதல் என்பது அரிதாக உள்ளது. ஆனால் சமூகத்தின் ஒரு சாரர் மட்டும் வளர்ச்சியை பெற்றுள்ளனர் என்பது நிசர்சனமான உண்மை. அதிக வரி கௌளல் போன்ற காரணத்தால் மக்கள் பெரிதும் பாதிப்பு அடைந்தால் நாடு வளர்ச்சி அடையாது. ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது வாழும் ஒட்டு மொத்த மக்களின் வளர்ச்சியை பொறுத்து கணக்கிட வேண்டும். அந்த வகையில் வரி செலுத்தும் முறை குறித்த பிசிராந்தையாரின் பாடல் இங்கு ஆராயத்தக்கது.

**காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே**
**மாநிறைவு இல்லதும், பன்நாட்கு ஆகும்**
**நூறுசெறு ஆயினும், தமித்துப்புக்கு உணினே,**
**வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்**
**அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,**
**கோடி யாத்து, நாடுபெரிது நந்தும்**
**மெல்லியன் கிழவன் ஆகி, வைகலும்**
**வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு,**
**பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்,**
**யானை புக்க புலம் போலத்,**
**தானும் உண்ணான், உலகமும் கெடுமே.**

(புறம் - 184).

யானை நிலத்தில் விளைந்த நெல்லை சேகரித்து கவளம் கவளமாக கொடுப்பின் பல நாள் கொடுக்கலாம். அதே யானையை நிலத்தில் மேயவிட்டால் ஒட்டுமொத்த தானியமும் யானையின் காலடியில் பட்டு வீணாகிவிடும். அரசனும் நெறியறிந்து குடிகளிடம் திறை பெற்றால் கோடக்கணக்கான செல்வம் செழிக்கும். மாறாக பெரும் தொகையை வரியாக பெற்றால் அவனுக்கும் அவன் நாட்டுக்கும் கேடுதான் விளையும் என்பர்.

**மனித சிந்தனையில் நரிவெரூஉத்தலையார்:**

மனிதன் அடையும் துன்பங்களுக்கு தீய எண்ணங்களும் தீய சிந்தனைகளும் தான் காரணம். மனிதன் நல்லதை செய்யாவிட்டாலும் தீயவை செய்யாமல் இருப்பது தான் யாவருக்கும் சிறப்புடையது என்கிறார் நரிவெரு உத்தலையார்

**நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்.**

புறம்-195.

**தேச ஒற்றுமை:**

ஒவ்வொரு நாடும் பல பண்பாட்டு கூறுகளை தண்ணகத்நே கொண்டுள்ளது. அந்த அடையாளத்தோடு வாழ முயலாத தேசங்கள் பிற தேசங்களோடு போர்ட எண்ணுகிறது. பிற நாட்டின் அழிவு உலக அழிவிற்கு வித்தாகும். புவிதனில் வாழும் மக்கள் உலக நாடுகளை தன் நாடாக தன் மக்களாக கருதி சகோதரத்துவத்தை பேணி காக்க வேண்டும் என்பதனை கூறும் கணியன் பூங்குன்றனாரின் சிந்தனை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தனிதலும் அவற்றோ ரன்ன**

மேலும் செல்வத்தினால் பெரியோரை மதியாமல் இருத்தலும் சிறியோரை இகழ்தலும் கூட வெறுக்கத்தக்க செயலாகும்.

**பெரியோரை வியத்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே**
புறம் -192

**முடிவுரை**

சங்க கால மக்களின் அறம் சார்ந்த வாழ்வியலை புறநானூறு நன்கு எடுத்துக்காட்டுவனாய் அமைகிறது. மறத்திலும் அறத்தை கைக்கொண்டு வாழ்ந்த நனி நாகரிகரான தமிழரின் பண்பாட்டின் கருவூலம் புறநானூறு என்பதை இக்கட்டுரை கட்டுரைக்கிறது.

**பார்வை நூல்**

1. புறநனூறு ___ சாரதா பதிப்பகம்
2. திருக்குறள் - மு.வ உரை
3. சங்க இலக்கியம் - அ.அ.மணவாளன்.



(☺)(☺)(☺)(☺)(☺)

# சமூக நோக்கில் தி. ஜா. புதினங்கள்

Dr M Malathi
Academic consultant
Department of Tamil
Sri Venkateswara university
Tirupathi -2 A.P.

*****

**முன்னுரை:-**

முதியோர் தொடர்பான செய்திகள் (அ) சிக்கல்கள் தொன்றுதொட்டே இருந்துவந்தபோதிலும் அதற்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. ஆனால் இன்று அது ஒரு சமூகக் சிக்கலாக மாறிவருகிறது. இளைஞர்கள் போலவே முதியவர்களுக்கும் பல்வேறு ஆசைகள், தேவைகள் இருக்கின்றன. முதுமைப் பருவத்தை ''குழந்தைப் பருவத்தின் மறுவடிவம்'' என்றும் குறிப்பிடுவோர்கள்.(1) முதுமைப் பருவம் என்பது வாழ்க்கையின் முடிவுகாலமாக கருதப்படுகிறது. இந்தகாலமானது கடந்தவந்த பாதையைச் சித்திரிக்கின்றதாக மட்டுமின்றி பல எதிர்பார்ப்புகளையும் கொண்டுள்ளது. முதியோர் சமூக வாழ்க்கையிலும் குடும்பத்திலும் முக்கிய பங்கு வசிக்கின்றவர்களாக காணப்படுகின்றனர். இளையோர் தனித்து நிற்கும் போக்கையுடையவர்களாகவும், முதியோர்கள் மதித்தலும், நேசித்தலும், பராமரித்தலும் செய்வதின்மூலம் தங்களின் சொந்த பெற்றோர்களை முதிய பருவத்தில் அவர்களால் உற்சாகப்படுத்த முடியும்.

**தாழ்வு மனப்பான்மை:**

தி. ஜானகிராமன் நாவல்களிலும் பல்வேறு சமூக பிரச்சனைகளை உள்ளடக்கியதாக காணமுடிகிறது. அதிலும் அவரின் 'அம்மா வந்தாள்' எனும் நாவில் வரும் தண்டாணியனுடைய பரிதாப நிலையும் அவரின் மனைவி அலங்காரத்தம்மிவின் ஒழுக்கக்கேட்டை தட்டிகேட்க முடியாமல் தவித்துக்கொண்டு இருக்கிறார். " லோகம் ஆரம்பிச்ச நாளிலிருந்து சம்பாதிக்கிறவனுக்குத்தான் மதிப்பு. அதுவும் பொம்மனாட்டிகளுக்கு எல்லாம் இருந்தாத்தான். மதிப்புவரும், நிறைய சம்பதிக்கனும். அழகாய் இருக்கனும், முரடனாகவும் இருக்கனும், புத்திசாலியாகவும் இருக்கனும், எல்லாமாகவும் இருக்கனும் உண்ணு இருந்தால் மட்டும் போறாது(2). எனும் வார்த்தைகளில் தண்டபாணியின் தாழ்வுமனப்பாண்மையும் அங்கலாயபும் தெளிவாக புலப்படுகிறது.

முதுமைப்பருவம் குழந்தைப் பருவத்தின் மறுவடிவம் என்றே குறிப்படுவார்கள். இதற்கு காரணம் குழந்தைகளிடம் காணப்படும் எதிர்மறைப்போக்கு, முரண்டுபிடித்தல், பரபரப்படைதல் போன்ற குறைகள் இவர்களிடம் காணப்படுபதே ஆகும். தேவையில்லது குடும்ப நபர்களின் எதிர்காலத்தைக் குறித்த கவலை முதியவர்களிடம் அதிகமாக காணமுடிகிறது.

**பாதுகாப்பு அன்மை:**

தி. ஜானகிராமனின் அம்மா வந்தாள் நாவலில் பவானி அம்மாள் என்ற மூதாட்டி கதாபாத்திரம் படைக்கப்பட்டுள்ளாள். இவள் வசதியான இடத்தில் வாழ்க்கைப்பட்டு இளம் வயதிலேயே தன் கணவனை இழந்து ஏறக்குறைய 40 வருடம் தனித்து வாழ்ந்து வருகிறான். கணவன் விட்டுச்சென்ற சொத்து, நிலம் மற்றும் வேதப்பாடல் கலையையும் ஒருங்கே நடத்தி வருபவர். தனக்கு ஆதாரவாக இருந்த தம்பியும்

அவனுடைய மனைவியும் இறந்த பின் அவனுடைய ஒரே மகள் இந்துவை வளர்த்து திருமாணத்தையும். முடித்து வைக்கிறாள். எனினும் இந்து இளம்விதவையாக அவளின் எதிர்காலத்தை எண்ணி தவிக்கிறாள். இந்நிலையிலட் பவானி அம்மாள் எதிர்பாராத விதமாக கீழேவிழுந்து நடக்கமுடியாமல் படுத்த படுக்கையாக இருக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. அப்போது முதுமையின் பயம் அவளை வாட்டுகிறது. "போனதைப் பத்தி பயப்படலேடா அப்பு நீயும் போயிப்டே. இனிமே வாத்தியார் உடம்பையும் நம்புறதுக்கு இல்லை என் மண்டை சாஞ்ச கையோட வேதபாடகலையும் மண்டையைப் போட்டு விடுமோன்னு கிலியா இழுக்கு. அதை நினைச்சா படப்படன்னு வந்துடறது(3). "தான் இறந்துவிடுவதற்கு முன்னதாக இளம் விதவையான இந்துவுக்கு ஒரு துணையை ஏற்பாடு செய்துவிட்டால் வேதப்பாடச்சாலையை நடத்தலாம் என எண்ணுகிறாள். முடிவாக சமய ஆச்சாரத்திற்கும் பழக்க வழக்கத்திற்கும் எதிராக இந்துவை பாடசாலையில் படிக்கும் மாணவனுக்கு திருமணம் முடிக்க எண்ணுகிறாள். இந்த புரட்சிகரமான முடிவுக்கு பவாணியம்மாவின் வயது முதிர்ச்சியும், மரண பயமும் தான் காரணம் மனவெமுச்சித் தொடர்பான பாதுகாப்பு இன்மை, பிடிவாதம், குற்றவுணர்வு போன்ற மனப்போராட்டங்கள் எவ்வாறு முதியோரைத் தாக்குகின்றன என்பதும் சில கதாபாத்திரங்கள் மூலம் தி.ஜா எடுத்துக்காட்டுகிறார்.

**பாலியல் சிக்கல்கள்:-**



உயிர்களில் பாலியல் உந்துதல் பிறப்பு முதல் இறப்புவரை தொடர்கிறது. சமுதாய, சமய, அரசியல் அடிப்படையில் எத்தனையோ விதிமுறைகளை ஏற்படுத்திக் கொண்டு உள்ளம் தடுமாறுகிறது. உடம்பிற்கும் உள்ளத்திற்கும் போராட்டம் நிகழ்ந்த வண்ணம் உள்ளது. இப்போராட்டம் எல்லோர்க்கும் உண்டு"(4) என்பர்.

முதுமைப்பருவத்திலும் பாலுணர்ச்சி உண்டு. அப்பருவத்தில் பால் ஆற்றல் தேய்பிறைபோல் குறைந்து கொண்டே, பால் விருப்பம் இருக்காது என்றோ சொல்லமுடியாது. சமூகம் முதியோரிடத்தில் அதிக ஒழுக்கநெறிகளை எதிர்பார்க்கின்றது. முதுமைப் பருவத்தாருக்கு பாலியல் தேவையற்றது என்ற எண்ணம் சமூகத்தில் நிலவி வருகின்றது. முதியப் பெண்கள் உடல்நிலையில் மாற்றம் உண்டாகிறது. இதை சூதக ஓய்வு என்பர்.

"உயிர்த்தேன்" நாவலில் இடம்பெறும் செங்கம்மாவை' சுற்றியே முதியோர் வட்டமிடுகின்றனர். செங்கம்மாவில் உடல்கட்டும், இறக்க உணர்வும், அவளன் அழகை அனுபவிக்க 'பழனிவேலு' எனும் கதாபாத்திரம் படைக்கப்பட்டு இருக்கிறது. செங்கம்மா ஊர் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்படும்போது இனி அவள் நமக்கு கிடைக்கமாட்டாளோ என்று ஏங்குகிறார்.(5)

'செம்பருத்தி' நாவலில் இடம்பெறும் சட்டநாதன் புவனா தம்பதிகளின் வாழ்க்கையில் சில மாறுதல்களுக்கும் உள்ளப்போராட்டத்திற்க். உள்ளாகித்தவிக்கிறாள். இச்சூழ்நிலையில் தன்னுடைய கணவர் பாலின்த்தை நிறைவேற்றுவாலோ என்ற ஐயம் அவளுக்கு ஏற்படுகிறது. ஏனெனில் தன் சின்ன அண்ணியிடம் தவறுதலாக படிகுவதும் அவளுக்கு தெரியும் இதனால் அவளுக்கு சந்தேக மனப்பான்மை தோன்றி வாட்டுகிறது. ஏதற்கெடுத்தாலும் கணவளிடம் குற்றம் காண்பவளாகவும் அவனோடு சச்சரவு வைத்து கொள்பவளாகவும் மாறுகிறாள்" எனக்கு ஈடுகொடுக்க முடியாமல் யாரையோ நினைச்சிட்டு

எங்கிட்ட வந்தா, உங்களுக்கு திருப்தி வரலை எனக்கும் முடியில. என்னை என்னாகவே நினைச்சிருந்தா இப்படிச்செய்ய மனசு வருமா இக்கூற்று புவனாவின் நிறைவுறாத பாலின்பத்தை வெளிப்படுத்துகிறது.

**முடிவுரை**

தி.ஜா நாவல்களில் முதியோர் பிரச்சனைகள் பற்றிய சமூக சார்ந்த வற்றை நாவலாசிரியரின் பங்களிப்பை தமது படைப்புகளில் வெளிப்படுத்தி உள்ளார். சமூக கட்டுப்பாடுகளாலும் இளமைக்கால எதிர்பார்ப்புகள் நிறைவுறாததாலும் உடற் கூறு மாற்றத்தினாலும் முதியோர் பாலியல் சிக்கலுக்குள்ளாகின்றனர். முதியோரின் பல பிரச்சனைகளை தம் படைப்புகளில் வெளிப்படுத்தி அதற்கு தீர்வுகளையும் வழங்கி தி. ஜா அவர்கள் விளங்குகிறார் எனலாம்.

(☺)(☺)(☺)(☺)(☺)



# தத்துவ நோக்கில் தாயுமானவர் பாடல்கள்

**J Shobana MA**
Department of Tamil,
S. V. University,
Tirupati. A-P.

*****

## தாயுமானவர் வாழ்வும் கலையும்:-

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இயக்க காலத்தை அடுத்துத் தத்துவ இலக்கியம் எழுந்தபோது முன்னின்று வழி நடத்தியவர் திருமுலர். இவர் வழிகாட்ட, ஆன்மாவுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை ஆராய்ந்து உணர்ந்து வெளிப்படுத்திய அருட்கவிஞர்களுள் மெய்ஞானி தாயுமானுவரும் ஒருவர் பட்டினத்தாரும், பத்திரகிரியாரும் உணர்ந்து தத்துவம் பொருளிலிருந்து சற்று மாறுபட்டவர் அடிகள். வேதாந்த நூல்களைக் கற்றுதுடன் ஆகமநூல்களையும் ஆராய்ந்து பேரின்பம் தரும் உண்மைப் பொருளை உலகோர்க்குத் தம்பாடல்கள் வழிப் புலப்படுத்திய புலவர் நாயக்கர்கள் தமிழகத்தை ஆட்சி செய்தபோது அரசுப் பணியாற்றி, அவர்களின் நன்மதிப்பைப் பெற்றவர். உலகியல் வாழ்வில் சில காலம் இருந்து பிறகு ஆன்மிக வாழ்வில் ஈடுப்படவர். சைவ சித்தாந்த நூல்களையும் ஆகமங்கள், இதிகாசப்புராணங்கள ஆகியவற்றையும் முறையாகா் பயின்றவர். வடமொழிப் புலமை உடையவர். எனவே, இவர்தம் பாடல்களில் ஆளுமைத் தன்மையும் தத்துவ நெறியும் இடம்பெற்றிருக்கும் பாங்கை இக்கட்டுரை தெளிவு செய்கிறது.

### தத்துவங்கள்:-

உலகம் தோன்றுவதற்குரிய காரணப் பொருளாக அமைவது மாயை, மாயை முதற்கண் தத்துவமாய் வெளிப்பட்ட பின் உலகமாய்க் காரியப்படும். தத்துவம் என்பது “கருவி” எனும் பொருளில் உரைப்பர்.

தாயுமானவர் பாடல்கள் பெரும் பான்மை என்பதைவிட அனைத்தும் தத்துவ நோக்கில் நமக்கு ஞானம் புகட்டுபவையே எனலாம். தத்துவ முறைமை என்று இருபத்தேழு தத்துவக் கண்ணிகளால் பாடியுள்ளார்.

| | | | |
|---|---|---|---|
| **சைவர்க்கு** | - | 36 | **தத்துவங்கள்** |
| **வேதாந்தர்க்கு** | - | 28 | **தத்துவங்கள்** |
| **வைணவர்க்கு** | - | 24 | **தத்துவங்கள்** |
| **மாயாவாதிக்கு** | - | 25 | **தத்துவங்கள்** |

உரியன. இவ்வகைத் தத்துவங்களால் வகுவாகுபவை தனு, கரணம், புவனம், போகம் போன்றவை. இவை “தாத்துவிகங்கள்” எனப்படும்.

**மண்ணாதி ஐந்தொடு புறத்தில் உள கருவியும்**
**வாக்காதி சுரோத்ராதியும்**
**வளர்கின்ற சப்தாதி, மனமாதி, கலையாதி,**
**மன்னுகத் தாதி உடனே**
**தொண்ணுற்றொரு ஆறும், மற்று உள்ளனவும்.** (கருணாகரக்கடவுள் - 2)

என்ற பாடலில் தத்துவங்களைத் தாயுமானவர் கூறக் காணலாம்.

மண் முதலிய ஐம்பூதங்களும், புறக் கருவிகளும், ஐம்பொறிகளும், தன்மாத்திரைகளும், முக்கரணங்களும், அசுத்த மாயா தத்துவங்களும் சுத்த தத்துவங்களும் ஆகிய தொண்ணுற்றாறு தத்துவங்களைத் தாயுமானவர் விளக்குகின்றார்.

**அத்துலைத்த தத்துவம்:-**

தத்துவ அடிப்பபடையில் சங்கரரின். அத்வைதம் தாயுமானவர் பாடல்களில் இடம் பெற்றுள்ளது. சங்கரர் கி.பி.8ஆம் நூற்றாண்டினர். பக்திக்கு இடமில்லாத முறையில் தத்துவமாகவே தாயுமானவர் கையாண்டிருக்கிறார். வேதத்தின் முடிவை வேதாந்தம் என்பர். சித்தாந்தம் கருத்துகளைப் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். அடிகன், அ + துவைதம் என்பதே அத்வைதம் என்று பாடல்களில் வந்துள்ளது. ''பரம்பொருளான பிரம்மமும் உயிரன ஆன்மாவும் இரண்டல்ல, ஒன்றே என்பது சங்கரர். பிரமம் சூத்திரப் பேருரை (மாபாடியும்) மூலம் முன்வைத்த தத்துவம் ஆகும். ஆதிசங்கரர் உருவாக்கி வெளிப்படுத்திய பக்தியும் சங்கரரின் கோட்பாடும் அறிவார்ந்த தளத்தில் அமைவதும் எனலாம். இவ்வேதாந்தக் கருத்து தாயுமானவர் பாடல்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளது.

**''அத்வைதம் ஆன அயிக்ய அனுபவமே**
**சுத்தநிலை அந்நிலையார் சொல்வார் பராபரமே''**

(பராபரக் கண்ணி – 293)

**"அத்வைதம் பெறும்பேறு என்று அறியாமல்,**
**யான் எனம்பேய் அகந்தையோடு.**
**மந்தமதியினர் போல் மனம்கிடபப்ப**
**இன்னம் இன்னம் வருந்துவேனோ"**

(ஆசைஎனும் - 9)

போன்றவற்றில் அத்வைதக் கருத்துக்களைப் பாடக் காணலாம்.

**சன்மார்க்க நிலை:-**

'சத்' எனம் உண்மைப் பொருளை அறிந்து செயல்படுபவர் சன்மார்க்கி ஆவர். இதனை ஞானமார்க்கம் என்றும் அழைத்து ஞானத்தை அறிந்து உணர்ந்து செயல்படுவர். மெய்ஞ்ஞானி எனப்படுகின்றனர். எம்மதமும் சம்மதம் என்று மத நல்லிணக்கத்தை விரும்பும் அடியார்களே மெய்ஞ்ஞானியர் ஆவர், குறிப்பிட்ட சமயத்தைப் பின்பற்றி ஞான நெறியில் தலைநிற்பவர் சன் மார்க்கி ஆவார் தாயுமானவர் சைவ குலத்தைச் சேர்ந்தவர். சிவமத்தில் இறுதிவரை ஈடுபாடு காட்டியவர், உருவம், அருவம், அருவுருவம் என்பவற்றுள் அருவுருவ நிலையான லிங்க வழிபாட்டை மேற்கொண்டவர். சிவமாந்திரங்கள் உச்சரித்து சிவயோகியாகத். திகழ்ந்தவர். திருமூலர், மாணிக்கவாசகர் போன்றோரும் சமய சன்மார்க்கியாகவே வாழ்ந்தனர். சைவ அடியார்களில் புகழ் பெற்றவராயத் திகழ்ந்தனர். வடலூர் வள்ளலார், சன்மார்க்கம் பேசியதோடு வாழ்ந்தும் காட்டியதால் அவர் சுத்த சன்மார்க்கியானார்.

**சமரச சன்மார்க்கம்:**

உள்ளம் ஒன்றிய சமய ஒழுக்கத்தில் ஈடுபடுவோர் வேதங்களை ஆகமங்களுக்கு எதிராகக் கொள்வதில்லை. இவைகூறுவன வேறுவேறாக இருப்பினும் அவை ஒன்றுக்கொன்று துணையாவனவேயன்றிப் பகையாவனவல்ல'' என்கிறார். ப.அருணாச்சலம் (1973-46).

அடிகளாரும், வேதங்களின் முடியாகிய உபநிடதங்களும், சித்தாந்தக் கருத்துகளும் ஒரு தன்மையான என்பதை.

**“வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற**
**வித்தகக் சித்தர். கணமே”**

எனப் போற்றுகின்றார்.

**“ஆரணம் ஆகமம் எல்லாம்**
**உரைத்த அருள் மவுன**
**காரண மூலம்”**

(பாயப்புலி – 25)

என்றும்.

**“சுருதியே சிவாகமங்களே உங்களாந்**
**சொல்லும் ஒரு தனிப் பொருள்”**

(ஆசை எனும் - 18)

என்றும் கூறுமிடங்களில் வேதா சித்தாந்தக் கருத்து ஒருமையை உணர்த்துகிறார்.

“தாயுமான அடிகள் வேதாந்தம் என்பது சித்தாந்தம் கருத்துடைய உபநிடதங்களே என்பார்” என்றுக் கூறுகிறார். கா.சுப்ரமணிய பிள்ளை (1969:46)

**சிவத் தத்துவம்:**

சிவவடிவங்களில் மிகப்பழமையானது சதாசிவிலிங்கம் என்ற சிவலிங்கம். சிவத்தைச் சித்தரிப்பது சிவிலிங்கம். சிவத்தைச் சித்தரிப்பது சிவலிங்கம். “லிங்கம்” என்ற சொல்லுக்கே சித்தரித்தல் என்பது பொருள், சிவலிங்கபீடத்தை ஆவுடை அல்லது விந்து என்பர். லிங்கப்பகுதி நாதம் ஆகும். நாதவிந்து கலாத்னமோநம வேதமந்திர சொரூபாயநமோ நம’ என்பார். அருணகிரியார்.

**சிவதத்துவம் - இறைவனுடைய ஞானசக்தியாய் விளங்குவது.**
**சத்திதத்துவம் - முதல்வனது கிரியா சக்தியாய் விளங்குவது.**
**சதாசிவதத்துவம் - இறைவனின் ஞானசக்தி, கிரியா சக்தி இரண்டும் ஒத்து விளங்குவது.**

ஈசுவர தத்துவமும், சுத்தவித்தையும் சிவதத்தவத்தின் வெளிப்பாடுகளே ஆகும். ஈசுவர தத்துவத்தில் கிரியா சக்தியும், சுத்த வித்தையில் ஞான சக்தியும் வெளிப்பட்டு நிற்கும்.

**திருத்தாண்டவத் தத்துவம்:**

சிவனின் அம்சமான நடராசர் எனும் தெய்வத்தைக் தாயுமானவர் முதலில் வழிபட்டுள்ளார். ஐந்து இடங்களில் நடராசனின் தாண்டவக் கோலங்கள் உள்ளன. அவை தில்லை, மதுரை, நெல்லை, திருவெண்காடு, திருக்குற்றாலம். ஆகிய ஊர்களில் நடராசத் திருச்சபைகள் உள்ளன. இவற்றுள் ஆனந்தத் தாண்டமவம் ஆடும் இடம் தில்லை என்ற சிதம்பரம் ஆகும். தமிழில் கோயில்களில் முதன்மை எனச் சிறப்பிக்கப்பெறும் இடம் இன்றும் நாட்டியாஞ்சயிக்குரிய இடமாக விளங்குகிறது. தில்லையில் எல்லையில்லா நடம்புரியும் இறைவனைக் காண்பதற்காகவே மனிதப் பிறவி வேண்டும் என்று கூறுவது உண்டு.

இளைவயதிலேயே தேவாரப் பாடல்களை மனனம் செய்தவர் தாயுமானவர். இறை நடனமும், நடராசத் தத்துவமும் தம்மை ஆட்கொள்ள தில்லைச் சிற்றம்பலத்தாரைச் சேவித்துள்ளார். தாயுமானவர் இறைவனின் ஐந்து தொழில்களான படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, ஒடுக்கு ஆகியவற்றை ஒரு சேரக் காணும் நிலை இத்தாண்டைவத்தில் உண்டு. கடவுள், உயிர், உலகம் என்பதைப், பதி, பசு, பாசம் எனசைவ சித்தாந்தம் கூறும். இறைவன் பசு(உயிர்)வைக் கயிற்றால் (பாசம்) கட்டி வைப்பவர். உயிர்களை. வீடுபேற்றைத் தருபவர். மேய்ப்பவராகிய இறைவனை அடைய ஞானியர் காட்டும் திருநெறி ஞான நெறியாகும். அந்நெறிகுறித்து தாயுமானவர்.

**“ஞானநெறி தானே நழுவடினும் முப்பதத்துள்**
**ஆன முக்தி நல்கும் என அன்புறுவது எந்நாளே?**
(எந். நிலை. பிரி.கூடு.உபாயம் -2)

என்று பாடுகிறார்.

**நிலையாமைத் தத்துவம்:-**

இத்தத்துவம் வாழ்க்கை முறையுடன் தெடர்படையது வாழ்க்கை உண்மைகளை வகுத்துக் காட்டும் தத்துவம் மனிதனை அழிவுப் பாதையில் இருந்து காப்பாற்றி நல்ல பாதையில் இருந்து காப்பாற்றி நல்ல பாதையில் செலுத்த உதவும் தத்துவம். பட்டினத்தார் நிலையற்ற வாழ்வை, ஊரும், உற்றாரும், உறவில்லை எனப்பாடியதைக் கண்ணதாசன் வீடுவரை உறவு வீதிவரை மனைவி என வரையறை செய்தார். உயிருக்கும் உடம்பிற்கும் உள்ள தொடர்பைத் திருவள்ளுவர்,

**“குடம்பைத் தனித் தொழியபுள் பிறந்தற்றே**
**உடம்பொடு உயிரிடை நட்பு”**
(திருக்குறள் - 338)

என, வாழ்வின் நிலையாமையைத்தாதன் விளக்குகிறார்.

**“மாடு, மக்கள் சிற்றிடையார், செம்பொன், ஆடை வைத்தகன தனம், மேடை மாட கூடம் வீடும் என்பதால் தொடர்ச்சியோ.”**

(பெற்றவட்கே -9).

என வினவுகிறார், தாயுமானவர். இனி இதைத் தொடரபோவதில்லை இது அழிந்துவிடக்கூடிய ஒன்று என்பதே கருத்து. இது நிலையாமைத் தத்துவத்தை விள்க்குகிறது. மனித வாழ்வில் முதல் நிலை பிறப்பு, இறுதி நிலை இறப்பு. சேர்ப்பது செல்வம் மாடு, வீடு, ஆடை, மனைவி இவையாவும் நிலைக்கும் என்ற ஆசையால் அவன் பெறும் பொருள்கள் உயிர்போகும் போது உடன் வருவதில்லை, அடுத்த பிறவியிலும் அவை தொடர்வதில்லை என்பதால் நிலையற்றவற்றின் மீது ஆசை வைக்காதே எனக் கூறுகிறார் தாயுமானவர்.

**“தேடும் திரவயமும் சேர்ந்தமணிப் பெட்டகமும்**
**கூட வரும் ணையோ கூறாய் பராபரமே”**
(பராபரக்கண்ணி – 233)

எனச் செல்வத்தின் நிலையமையைக் கூறுகிறார்.

மேலும். தாயுமானவர் ஆககம், வேதாந்தம் போன்ற தத்துவங்களைத் தம் பாடல்களில் தெளிவுபடக் கூறுகிறார். உட்சமயங்கள், புறச்சமயங்கள் பற்றிய ஐயங்களையும் கடவுளின் பூரணத்துவம், உயிரின் அறியாமை, அதன் விளைவான தீய இயல்புகள் போன்றவற்றையும் பல இடங்களில் விளக்குகிறார். தத்துவங்கள் யாவும் சடமென்பதும் அவற்றின் வேறாகிய அறிவுக்பொருள் என்பதையும் தெளிவுசெய்துள்ளார்.

**பயன்பட்ட நூல்கள்:**

1. சுப்பிரமணிய பிள்ளை, கா. தாயுமான சுவாமி வரலாறும் நூலாராய்ச்சியும்.
2. அருணாசலம், ப. பக்தி இலக்கியம்.
3. இராமலிங்கம், ஆ.சி. மெய்ப்பொருறில் - ஓர் அறிமுகம்.
4. சுப்புரெட்டியர், ந. சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்.
5. திருவள்ளுவர், திருக்குறள்

(☺)(☺)(☺)(☺)(☺)



# இலக்கிய உலகில் கிராமியப் பெண்களின் பிரச்சனைகள் (சு சமுத்திரத்தின் புதினங்களில்)

Dr M Malathi
Academic consultant
Department of Tamil
Sri Venkateswara university
Tirupathi -2 A.P.

*****

**முன்னுரை**

சமுதாய முன்னேற்றமாகக் கொண்டொழுகும் சு. சமுத்திரம் சிறந்த எழுத்தாளர் வரிசையில் முன்னனியில் நிற்பவர். இவருடைய படைப்புகளில் சமுக பிரச்சனைகளில் மகளிர் பிரச்சனைகளே அதிகம் இடம் பெற்றுள்ளது. பதினான்கு நாவல்களையும் ஒன்பது (9) குறுநாவல்களையும் இவர் படைத்துள்ளார். இப்படைப்புகளில் 'ஒருகோட்டுக்கு வெளியே' (இது இவருடைய முதல் நாவல் ஆகும்) 'நெருப்பு தடயங்கள்' 'ஊருக்குள் ஒரு புரட்சி', 'சாமியடிகள்' போன்ற நாவல்களில் இடம் பெற்றுள்ள கிராமியப் பெண்களின் பிரச்சனைகள் குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

**கிராமியப் பெண்களின் சமுக நிலை:**



கிராமப்புற பெண்களுக்கு கல்வி அளிப்பதில் அதிககவனம் செலுத்துவதில்லை. பெண்பிள்ளை படிப்பதினால் ஒரு பயனும் இல்லை. வீட்டு வேலைகள், வயல் வேலைகள் செய்யவுமே அவர்கலுக்கு கற்றுத்தரப்படுகிறது. அது மட்டுமின்றி வயதிற்க்கு வந்த பெண்பிள்ளைகளை பள்ளிகூடத்திற்கு அனுப்புவது தவறு என்றும் பெண் படித்துவிட்டால் அவளுக்கு மாப்பிள்ளை கிடைப்பது கடினம் என்றும் படித்துவிட்டால் வீட்டிற்கு அடங்கி நடக்கமாட்டாள் இதனால் குடும்பத்திற்கு அவமரியாதை ஏற்படும் என கிராம மக்கள் கருதுகின்றனர்.

கிராமப்புற பெண்கள் கணவனுக்கு அடங்கி நடக்கின்றனர். கணவனுக்கும் பிள்ளைகளுக்கும் பணி செய்வதே தம் கடமை என்று நினைக்கின்றனர். நினைத்து திருப்தி அடைகின்றனர். இவர்களின் பணிவீட்டிற்கும் வயலுக்கும் இடையேதான். விவசாயக் குடும்பத்தில் இருக்கும் பெண்கள் விதைத்தல், அறுவடை செய்தல், தூற்றுதல் நெல்லை அரிசி ஆக்குதல் வரை அனைத்தையும் செய்கின்றனர்.

**பொருளாதாரம்:**

இன்றைய சமூகத்தின் இருகண்களாக விளங்குவன பணமும், போலி அந்தஸ்தும் ஆகும். மக்களின் வாழ்க்கை தரத்தைக் கணக்கிடுவது பொருளாதர அடிப்படையிலேதான். பொருளாதர மதிப்பீட்டிலேதான் இன்றைய திருமணங்களும் நிச்சயிக்கப்படுகின்றன இதற்கு பலியாகின்றவர்கள் பெண்கள். இன்றைய பிரச்சினைகளில் தலையாய பிரச்சினை பொருளாதார பிரச்சினையே ஆகும். இப்பிரச்சனையே பெண்கள் பின் தங்கியதற்கு காரணம் எனலாம். கிராமியப் பெண்கள் பெரும்பாலும் விவசாயக் கூலிகளாவர்கள். இவர்களின் வருமானம் வயிற்று பிழைப்புக்கே சரியாக இருக்கும்.

ஒரு கோட்டுக்கு வெளியே' நாவலில் "உலகம்மை" கால் உடைந்த வயதான பனையேறி தொழில் செய்யும் மாயாண்டியின் மகள் வயலில் வேலை செய்யும் கூலி பணத்தை கொண்டு இவர்களின்

இருவரின் பிழைப்பு ஒடிக் கொண்டிருக்கிறது? தன்னை விரும்பும் லோகநாதனை மணக்க முடியவில்லை. காரணம் அவனின் பெற்றோர். எதிர்பார்க்கும் பொருளோ பணமோ அவளிடத்தில் இல்லை.

“ஊருக்குள் ஒரு புரட்சி” நாவில் வரும். “மீனாட்சி” திருமணமாகி ஒரு குழந்தைக்கு தாள். அவளுக்குமர்பில் கட்டி. ஏற்பட்டதினால் சிகிச்சை பெற அரசு மருத்துவமனைக்கு செல்கிறாள். மருத்தவமனை ஊழியர்கள் கவனிக்காத காரணத்தினால் தன்னிடம் இருந்த ஒரே பொருளான மூக்குத்தியை அடகு வைத்து கிடைக்கும் பணத்தில் சிகிச்சை செய்துகொள்கிறாள், மீண்டும் வலி கண்டதால் மருத்துவரிடம் செல்ல பணம் இல்லாத காரணத்தினால் இறக்க நேரிடுகிறது. இவ்வாறு பண வசதி இல்லாத காரணத்தினால் திருமணதடையும். ஊயிரிழப்பும் ஏற்படுகிறது.

**திருமணம்:**

திருமணம் என்பது சமூக அங்கிகாரம் அல்லது சாட்சிகளைத் தேடும் சடங்க மணச்சடங்கு, மணமுறிவுக்கு பாதுகாப்பு. “உண்மையான அன்ப கொண்டவர்கள் இந்தக் திருமணச்சடங்கு இன்றியே இணைந்து வாழமுடியும்” என்னும் மு.வ.வின் கருத்துக்கள் இன்றைய திருமணபோக்கினைப் பிரதிபலித்து காட்டுகிறது.

“திருமணம் என்பது வெறும் விளையாட்டன்று. ஓவ்வொரு பாதியால் வளர்ந்த வரும் இரண்டு உயிர் ஒன்றி முழுதன்மை எய்தி கடணாற்றுவதற்கு அவைகளை அன்பு கயிற்றால் இயற்கை பிணிப்பது திருமணம்’



**பொருந்தாமணம்:**

இந்தியக் கிராமங்களில் வாழ்கின்ற பெண்களுக்கு பெற்றோர் பார்த்து முடிக்கும் திருமணங்களே மிகுதி. இல்லையெனில் சகோதரன் சகோதிரிகளின் விருப்பத்தின் பெயரில் முடிக்கும் திருமணங்களும் உண்டு. பெண்ணின் விருப்பம் என்பது தேவையில்லாத ஒன்றாகக் கருதப்பட்டது. ஒரு பெண்ணின் வாழ்வும் எதிர்கால நம்பிக்கைகளும், கனவுகளும் ஓர் ஆணின் விருப்பத்தின் பேரிலேயே நிர்ணயம் செய்யப்படுகின்றன. அவளுடைய விருப்பமென்பதும் கோரிக்கையென்பதும் கவனிக்கப்படுவதில்லை. கவனிக்கப்பட வேண்டியது எல்லாம் பெற்றவர்களின் விருப்பங்களும் உடன் பிறந்தவர்களன் விருப்பாக இருக்கிறது.

சோற்றுப்பட்டாளம்’ நாவலில் வரும் “சுந்தரி”யை கிழவனுக்கு முடிக்க இவளுடைய உடன் பிறந்தவர்களும். அண்ணியும், தங்களின் சுயநலம் கருதி ஏற்பாடு செய்கின்றனர். காதலனாலும் கைவிட்டப்படுகிறாள், ஊரைவிட்டு வெளியேறுகிறாள்.

ஒரு கோட்டுக்கு வெளியே நாவலில் வரும் சரோஜாவிற்கு பணம் இருந்தும் திருமணம் தடைபட்டு போகிறது. காரணம் அவளின் தாய் குலம், சாதி இவற்றை பார்த்து வரும் மாப்பிள்ளைகளுக்கு ஒரு குறையை சொல்லி விரட்டிவிடுகிறாள். முப்பது வயது ஆகியும் திருமணம் நடைபெறவில்லை. இறுதியில் தனக்கு சிறிதும் பொருத்தமற்ற :தங்கபழத்தை” விருப்பம் இல்லாமல் மணக்கிறாள். திருமணம் ஆன முதல் நாளே அவன் குடித்துவிட்டு அவளை மிரட்டுவதால் தன் தந்தையிடம் புலம்புகிறாள்.

“சாமியாடிகள்” நாவில் வரும் “அலங்காரிக்கு” சிறிதும் பொருத்தமற்றவனான காஞ்சான் என்பவனை மணம் செய்து கொடுப்பதினால் அவள் வழிதவறி செல்ல நேரிடுகிறது.

**வரதட்சணை:**

ஆணும், பெண்ணும் இணையும் திருமண வாழ்க்கைக்கு பொருள் அடிப்படையானது. இப்பொருள் தேடிச் செல்லும் ஆண் மகன் பெண்ணுக்கு முலைவிலை என்ற பெயரில் பொருள் கொடுத்து மனந்து கொள்ளும் மரபு பழந்தமிழகத்தில் இருந்ததுள்ளது என்பர். பெண்ணைத் திருமணம் செய்துகொடுக்கும் பெற்றோர் எதிர்காலத்தில் பெண்ணுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு இல்லாமற்போகும் நிலையில் துணைசெய்ய வேண்டுமென்ற நோக்கில் பொன்னையோ, பொருளையோ அவரவர் நிலைக்கு ஏற்பப் பெற்றோர்கள் தம் பெண்களுக்குத் தாமே மணமுவந்து கொடுத்தனர். காலப்போக்கில் இது கட்டாயமாக்கப்பட்டு இன்று “வரதட்சணை” என்ற பெயரில் பெரும் சமுதாய சிக்கலாக உருவெடுத்துள்ளது”.

‘ஒரு கோட்டுக்குக வெளியே’ நாவில் வரும் “பலவேசம்” நாடாருக்கு திருமணவயதில் இரண்டு மகன்கள் இருந்தபோதிலும் தன் மனைவியை தாய்வீட்டில் போய் பணம் வாங்கி வரும்படி அடித்து துன்புறுத்துகிறார்.

“மேற்குறிப்பிட்ட நாவலில் வரும் உலகம்மையை விரும்பும் லோகநாதன் அவன் தந்தை எதிர்பார்க்கும் பொருள், பணம் இவைகளை ஏழை உலகம்மையால் கொடுக்க முடியாத காரணத்தினால் வசதிவாய்ந்த வேறு ஒரு பெண்ணை மணம் செய்து கொள்கிறான்.

**சாதி**:

தனி மனிதர்களின் கூட்டமே சமுதாயம். இந்தச் சமூகத்தினர் தொழில் அடிப்படையிலும் சில பழக்க வழக்கங்களின் அடிப்படையிலும் உணவு உட்கொள்ளும் முறையிலும் பிரிந்து வாழ்ந்தனர். மேலும் வணிகத்தின் பொருட்டு இங்கே வந்து குடியேறிய யவனரும் இருந்தனர். சமணரும் பௌத்தரும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் இங்கு வந்து குடியேறியதன் காரணமாகவும் தமிழகத்தில் பொதுவாகப் பல சமூக அமைப்புகள் உருவாயின. சிற்றூர்களில் அவரவர்க்குரிய தொழில்களைச் செய்து வந்தனர். தோடக்க. காலத்தில் தொழில் அடிப்படையில் சமூக அமைப்புகள் இருந்துள்ளன

கிராமசமுதாயம் முற்றிலும் சாதியால் கட்டமைக்கப்பட்டதாகும். மேல்சாதி. கீழ்சாதி என்ற இருபிரிவு இருந்தபோதிலும் பொருளாதார அடிப்படையிலும் தொழிலின் அடிப்படையிலும் ஓர சாதியில் கூட பிரிவு ஏற்படும் நிலை கிராமங்களில் காணப்படும்.

‘ஒரு கோட்டுக்கு வெளியெ’ நாவலில் உலகம்மையும் கனகுவம் நாடார் ஜாதியை சேர்ந்தவர்கள், உலகம்மையின் தந்தை பனையேறும் தொழில் செய்வதால் தாழ்ந்தவராக கனகுவினால் எண்ணப்படுகிறார். ஊலகம்மை தன் குடும்பத்திற்கு செய்த உதவியை மறந்து பனையேறியின் மகளை மணப்பெண்ணதக காட்டி தன் மகளுக்க மணம் செய்ய வேண்டியுள்ளதே என இழிவப்படுத்தி பேசுகிறாள்.

‘ஊருக்குள் ஒரு புரட்சி’ வரும் தங்கம்மாவும் மாதர் சங்க தலைவி சரோஜாவின் மகள் மல்லிகாவும் ஒரே சாதியை சேர்ந்தவர்கள். மல்லிகாவை. தங்கமாளை வாய் தகராறு காரணமாக டீ என்று சொல்லிவிடுகிறாள். இதனால் கோபம் கொண்ட மல்லிகா யாரடி டீ போட்டு பேசுற எச்சிக்கல நாயே... ஒப்பன் எங்க மாமா வீட்டுல நாயி மாதிரி வேல பார்க்கார் நீ வயலுல கூலிக்குகளை பிடுங்கப் பேற

வேலைகார நாயா.. பேசுற நான் அவனப் பேசினால் உனக்கு என்னாடி'' என தங்கம்மை கேவல மாக பேசியதோடு மட்டும் அல்லாமல் மல்லிகாவும் தாய் சரோஜாவும் தங்கம்மாவின் தந்தையின் மூலம் தங்கம்மவை மன்னிப்பு கேட்கும்படி வற்புறுத்துகின்றனர். தங்கம்மா அதற்கு தலை வணங்காத காரணத்தினால் அவளை அவர்களின் முன்னிலையில் மகளை அடிக்கிறார். இவ்வாறு சாதிக்குள்ளேயே சாதி கிராமிய மக்களிடையே காணப்படுகின்றன.

**வன்முறை:**

இயல்பு மாறாக சட்டத்தை மீறி. உடல் வலிமையை பயன்படுத்தி நேர்மைக்கு மாறாக செய்யப்படும் செயல். இச்செயல் ஒருவரோ (அ) ஒருகுழுவோ சேர்ந்து செய்யலாம். கிராமங்களில் 'பஞ்சாயத்து' என்னும் பெயரில் வழங்கப்படும் தீர்ப்பு சட்டத்திற்கு மாறானதாக அமைகிறது. செல்வமும். அதிகாரமும் பெற்ற பண்ணையர்கள் கிராமங்களில் எதேச்சாதிகாரகள் போல் வாழ்கின்றனர். அவர்கள் நினைப்பதே சட்டமாகவும் சொல்வதே தீர்ப்பாகவும் இருந்தன.

'ஒரு வெளியே' உலகம்மையின் தந்தை மாயாண்டி. மாரிமுத்து நாடாரினால் கோட்டுக்குள் நிறுத்தப்படுகிறார். (குட்டாம் பட்டியில் கடன் பெற்றவர் கடனை திருப்தி தர காலதாமானால் கடன் அளித்தவர் கடன் பெற்றவரை கோட்டிற்கள் நிறுத்துவர். அக்கடனை அடைத்த பிறகு கோட்டைபிட்டு வெளியே வரவேண்டம்) தன் தந்தை கோட்டுக்குள் நிறத்தப் பட்டதையொட்டி காவல் துறையிடம் புகார் செய்கிறாள். இதனால் அவளை ஊர்பஞ்சாயத்து ஊரைவிட்டு தள்ளி வைக்கிறது.

வீட்டில் இருந்து வெளியே வர முடியாதபடி வீட்டை சுற்றிலும் வேலி அடைக்கப்படுகிறது. பின்பு ஒரே வழியில் மட்டும் செல்ல அனுமதிக்கின்றனர். அவ்வழியிலும் மலம் கழித்து அசிங்கப்படுத்துகின்றனர். அவள் பக்கத்து ஊர் வயலில் வேலை செயதுவிட்டு வரும்பொழுது மாரிமுத்து உறவினான வெள்ளையன், இராமசாமி போன்றவர்கள் ஆபாசமான வார்த்தைகளால் மறைமுக வேலி அடைக்கப்படுகிறது. பின்பு ஒரே ஒரு வழியில் மட்டும் செல்ல அனுமதிக்கின்றனர். அவ்வழியிலும் மலம் கழித்து அசிங்கப்படுத்துகின்றனர். அவள் பக்கத்து ஊர் வயலில் வேலை செய்தவிட்டு வரும்பொழுது மாரி இச்செயல் அவளின் மனதை புண்படுத்தும் செயலாகும்.

''நெருப்பு தடயங்கள் நாவலில் வரும் கலாவதியின் அண்ணன் வினைதீர்த்தான் முத்துலிங்கத்தின் தங்கை வி.பொன்மணியும் உடன்போக்கு கொள்வதால். முத்து லிங்கம் காவலர்களை கொண்டு கலாவதியையும் அவளின் தந்தை மாடக்கண்ணுவை அடித்து துன்புறுத்துவதோடு மட்டும் அல்லாமல், தன் சகாக்களுடன் கலாவதியின் உடலில் காய்ச்சிய அரிவாளினால் சூடு போடுகிறான். இதனால் மனநோய்க்கு ஆளாகி பைத்தியமாக திரிகிறாள்.

**முடிவுரை:**

இவ்வாறு கிராமிய பெண்கள் பொருளாதார பிரச்சினையாலும், திருமண பிரச்சினையினாலும், வரதட்சினை பிரச்சினையினாலும், சாதியம் பிரச்சினையினாலும். வன்முறையிகாலும் பாதிக்கப்படுவதை இவரின் நாவலின் வழியே அறிய முடிகிறது. சமூகத்தில் பெண்கள் அடிமையாக வாழ்ந்துள்ளதை நாவலாசிரியர்கள் பதிவு செய்துள்ளனர். கிராமத்தில் பெண்கள், கல்வியறிவு பெறுவதில் அதிககவனம்

செலுத்தவில்லை தற்பொது இதன் சதவிகிதம் அதிகரித்திருப்பது ஆறுதலான ஒரு செய்தியாகவும். ஆண்களுக்காகவே பெண்கள் படைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதை கிராமப்புற பெண்களைப் பார்த்தே நாம் அறிந்து கொள்ளலாம். சுமூகத்தில் பெண்களுக்கு சமஉரிமை வழங்கப்படவேண்டும் என்று படைப்பாளிகள் மத்தியிலும். சான்றோர் மத்திலும் அறைகூவல் விடுத்தாலும் அது எட்டாக் கனியாகவே உள்ளது.

**அடிக்குறிப்பு**

1. மு. வரதராசன், பெண்மை வாழ்க பக். 55-56
2. திரு.வி.க. பெண்ணின் பெருமை ப.187
3. பொய்யாமொழிப்புலவர் தஞ்சைவாணன் கோவை, ப281
4. சாராபீவி, ‘நாளிதழ்ச் செய்திகள் நங்கையர் மாறிவரும் மங்கையர் உலகம். பக்29-30.
5. இரா.மனுவேல். தமிழ் இலக்கியத் திறனாய்வுப் போக்குகள், ப.48
6. சு.சமுத்திரம் ஊருக்குள் ஒரு புரட்சி

(☺)(☺)(☺)(☺)(☺)



# நாலடியாரின் அறச் சிந்தனைகள்

**SM Venkatesan**
Tamil Department
Sri Venkateswara University
Tirupathi-517502.

*****

நற்சமூகம் உருவாவதற்கான நன்னெறிகளை ஒவ்வொரு காலத்தும் தோன்றிய அறநூல்கள் எடுத்துரைத்து வருகின்றன. சங்கம் மருவிய காலத்தில் வழக்கில் பெருகியிருந்த பல்வேறு சமூகச் சிக்கல்களைக் களையும் விதத்தில் பதினென்கீழ்க்கணக்கு நூல்களில் அறங்கள் எடுத்துரைக்கப்பட்டன.

தலைசிறந்த இலக்கியங்களின் நோக்கம் மனித மேன்மையை வளப்படுத்துவதுதான். வாழ்க்கையைப் பயனுள்ளதாக, உயர்வுள்ளதாக, இலட்சியங்களை உள்ளடக்கியதாக, அழகுள்ளதாகச் செய்வதே இலக்கியத்தின் முக்கிய நோக்கமாக இருந்திருக்கின்றது. இதனை "மனிதன் மனிதனாக வாழ்வதற்கு இலக்கியம் கைகொடுக்கிறது. சிறந்த உலக இலக்கியங்களின் நோக்கம் மனிதன் மனிதனாக, உயர்ந்தவனாக வாழ வேண்டும் என்று எண்ணச் செய்வதாகவே இருக்கிறது" என்ற க.நா.சுப்பிரமணியத்தின் கூற்று தெளிவுறுத்துகின்றது.

## நாலடியாரில் அறன் வலியுறுத்தல்



அறன் வலியுறுத்தலைத் திருக்குறள் எல்லா மனிதர்களுக்கும் பொதுவானதாக எடுத்துரைக்கின்றது. ஆயின் நாலடியார் சமயப் பின்னணியோடு அறக்கருத்துக்களை எடுத்துரைக்கின்றது. சமயநெறியைப் பின்பற்றி நடப்பவர்கள் ஒழுக்கம் தவறாதவர்களாக விளங்க வேண்டும் என்ற கருத்தினையும் முன்மொழிகின்றது.

இப்பிறவியில் செய்யும் அறத்தின் பயனை மறுப்பில் பெறலாம் என்பது சமண சமயக்கொள்கை ஆகும். நாலடியார் இக்கருத்தையே வலியுறுத்துகின்றது. இப்பிறப்பில் நல்வினைகளைப் பெற்று வாழ்வதற்குக் காரணம் முற்பிறப்பில் அவர்கள் செய்த நற்செயல்களின் விளைவே என்பதனையும் அறமாக எடுத்துரைக்கின்றது.

முற்பிறப்பில் செய்த நோன்புகளினால் பிற்பிறப்பில் தவம் செய்யாதவர்கள் அகத்திலுள்ளவர்களே நன்மையடைவர் என்று நினைத்து, அண்ணாந்து நோக்கித் தாங்கள் உள்ளே போகப் பெறாதவராகித் தலை வாயிலைப் பிடித்துக் கொண்டு மிகவும் வருந்திக் கொண்டிருப்பார்கள் என்பதனை,

> **"அகத்து ஆரே வாழ்வார் என்று அண்ணாந்து நோக்கி**
> **புகத் தாம் பெறாஅர் புறங்கடை பற்றி**
> **மிகத்தாம் வருந்தி யிருப்பரே-மேலைத்**
> **தவத்தால் தவம் செய்யாதார்"** (நாலடி. பா.31)

என்று நாலடியார் எடுத்துரைக்கின்றது. இக்கருத்தையே 'தவமும் தவமுடையார்க்கு ஆகும்' என்பார் திருவள்ளுவர். முற்பிறவியில் தவம் செய்தவர் இப்பிறவியில் வளமுடன் வாழ மற்றவர் வருந்தி இருப்பர் என்கிறார். இதேபோன்று நாம் செல்வத்தை விரும்பித் தருமத்தை மறந்து நாம் இறந்து போவோம் என்று நினையாத அற்பமான மனமே! ஒழியாமல் நிலைபெற்ற முயற்சி செய்து வாழ்வாயானாலும் உன்னுடைய

ஆயுள் நாள்கள் ஒழிந்தன. இனிச் செய்யவேண்டியது யாது எனச் சொல்வாயாக! என மனத்தை விளித்துக் கூறுவதாக,

> **“ஆவாம்நாம் ஆக்கம் நசைஇ அறம்மறந்து**
> **போவாம்நாம் என்னாப் புலைநெஞ்சே-ஓவாது**
> **தின்றுஉ ஞற்றி வாழ்தி எனினும் நின் வாழ்நாள்கள்**
> **சென்றன செய்வது உரை”** (நாலடி.பா.32)

என்னும் பாடல் அமைந்துள்ளது. செல்வத்தை விரும்பி, நெஞ்சே தருமம் செய்வதை மறந்துவிடாதே என்ற அறவுரை இப்பாடல்மூலம் அறிவுறுத்தப்படுகின்றது.

## இன்சொல் கூறல்

திருவள்ளுவர் கூறும் அறங்கள் எளிமையானவை; ஆயின் வலிமையானவை; காலவர்த்தமானங்களுக்குக் கட்டுப்படாதவை. அத்தகு சிறப்பியல்பில்தான் அது இன்றும் நிலைத்து நிற்கிறது. உலகநாடுகள் அனைத்தும் ஏற்கத்தக்க பொதுக்கருத்துக்களை எடுத்துரைப்பதாய் அமைந்துள்ளது. அவ்வகையில் தனிமனிதன் தன்னை நல்வழிப்படுத்திக் கொள்வதற்குத் திருவள்ளுவர் கூறும் அறவுரைகள் மிகமிக எளிமையானவை ஆகும். ஒருவன் தன்னை அறக்கூறுடையவனாக்கிக் கொள்வதற்கு மனம் மட்டுமே போதும். அறிவினால் சிந்தித்துப் பார்க்கும் ஆற்றலைக் கொண்டவனாக இருந்தால் மட்டும் போதும். இதனைத்தான் அன்புடைமை, அறிவுடைமை, இன்சொல்கூறல் என்ற அதிகாரங்களின்வழி எடுத்துரைக்கின்றார்.



வெப்பம் நிறைந்த கதிரவன் வருகையைக் கண்டு கடல் பொங்கி எழுவதில்லை. குளிர்ந்த கதிரினை உடைய தண்ணிலவின் வரவு கண்டுதான் மகிழ்ச்சியோடு ஆரவாரித்துப் பொங்குகிறது. அதுபோல் இன்சொல் பேசும் பண்புடையாளன் ஒருவன் எல்லோராலும் வரவேற்கப்படுகின்றான். வன்சொல் பேசுவோன் பலரது வெறுப்புக்கு ஆளாகின்றான். இதனைச் சிவப்பிரகாசர்,

> **“இன்சொலால் அன்றிஇரு நீர்வியன் உலகம்**
> **வன்சொலால் என்றும் மகிழாதேபொன்செய்**
> **அதிர்வளையால் பொங்காது அழற்கதிரால் தண்என்**
> **கதிர்வரவால் பொங்கும் கடல்”**[19]

என்று குறிப்பிடுகின்றார். இத்தகு இன்சொல்லுடைமையின் சிறப்பினைத் திருவள்ளுவர் ஒருமனிதன் பெறத்தக்க உடைமைச் செல்வங்களுள் ஒன்றாக்கிக் கூறுகின்றார். அது அன்போடும், அருளுணர்வோடும், அறத்தோடும் தொடர்புடையது. அது அறத்தோடு நின்று அறம் வளரத் துணைபுரிந்து அறமாகவே ஆகிவிடக்கூடியதாகும்.

## ஒழுக்கமே அறமாதல்

அறிவு, ஆற்றல், பண்பு நிறைந்த பெரியோரிடத்து மனம், மொழி, செயல் ஆகிய இவை மூன்றினாலும் குற்றம் செய்யாமல் இருப்பது மிகச் சிறந்த ஒழுக்கமாகும். நாம் எதைச் செய்தாலும் பொறுப்பர் என நினைத்துப் பெரியோர்களிடத்துக் கொடுஞ்செயல் எதையும் செய்யாது இருத்தல் வேண்டும். ஏனெனில் இதனை அவர் பொறுக்கமாட்டாமல் பொறுப்பாராயின் அதனால் வரும் தீங்கை எப்படிப்பட்டவர்க்கும் தடுத்தல் அரிதாகிவிடும் என்பதனை,

> **“பொறுப்ப ரென்றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்**

**வெறுப்பன செய்யாமை வேண்டும்-வெறுத்தபின்
ஆர்க்கும் அருவி அணிமலை நன்னாட
போக்குதல் யார்க்கும் அரிது"** (நாலடி.பா.161)

என்று நாலடியார் எடுத்துரைக்கின்றது.

## நாலடியாரில் ஒழுக்க நீதிகள்

நாலடியார், ஒழுக்கத்தை வாழ்வின் எல்லா நிலைகளிலும் பொருத்திப் பார்க்கின்றது. தனிமனித ஒழுக்கம் அவன் குடிப்பிறப்பிலிருந்து தொடங்குகின்றது என்பதனை எடுத்துரைத்து குடிப்பிறப்பு என்னும் அதிகாரத்தின்வழி ஒழுக்கங்களை வகுத்துரைக்கின்றது. இவற்றோடு தூய தன்மை என்ற அதிகாரமும் ஒழுக்க விதிகளை அறமாக வகுத்துரைக்கின்றது.

தாம் உடுத்தியிருக்கும் உடையானது அழிந்து, தேகம் மெலிந்துபோகும் இழிவான நிலைக்குத் தள்ளப்பட்ட போதும், நல்லொழுக்கம் மிகுந்த குடியிற் பிறந்தோர் தமக்குரிய ஒழுக்கப் பண்புகளில் இருந்து பிறழ மாட்டார்கள். அது காட்டில் வாழும் சிங்கமானது பசி தாங்கவொட்டாத பசித்துன்பத்தைப் பெற்ற போதும் புல்லைத்தின்னாத நிலையினை ஒத்ததாக அமைந்திருக்கும் என்பதனை நாலடியாரில்,

***"உடுக்கை உலறி உடம்பழிந்தக் கண்ணுங்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப் புள் கறிக்குமோ மற்று?"*** (நாலடி.பா.141)

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது. உயர்குலத்தில் பிறந்தவர்களுக்குச் சான்றாண்மை, ஒழுக்கம், நிறை ஆகிய மூன்றும் பெரிய செல்வமாகச் சேர்ந்து அவர்களை நிறைவுள்ளவர்களாக ஆக்கிக் காட்டும் என்பதனை,

**"சான்றாண்மை சாயல் ஒழுக்கம் இவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது-வான்றோயும்
மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வம்
எய்தியக் கண்ணும் பிறர்க்கு"** (நாலடி.பா.142)

என்று நாலடியார் எடுத்துரைக்கின்றது. பெரியோரைக் கண்டவுடன் தம் இருப்பிடத்தை விட்டெழுந்திருப்பதும், அவர்களை எதிர்கொண்டு அழைத்தலும், அவர்கள் விடைபெற்றுச் செல்லும்போது விடைகொடுக்க இயலா இயல்புடனே பிரிந்து நிற்றலும் நற்குடியில் பிறந்தவர்கள் பின்பற்றி ஒழுகும் ஒழுக்க நெறிகளாகும். ஆதலால், பிறரை மதியாத மூடர்களோடு அவர்கள் ஒருபோதும் சேர்ந்தொழுக மாட்டார்கள் என்பதனை,

**"இருக்கை எழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப ஒழிதலோடு இன்ன-குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோடு
ஒன்றா உணரப்பாற்று அன்று"** (நாலடி.பா.143)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது.

## பொறையுடைமை

பொறையாவது பொறுத்துக் கொள்ளுதல் ; சமுதாய வாழ்வில் தாங்கிக் கொள்ளுகின்ற திறம் எல்லோருக்கும் தேவைப்படுகிறது. சமூகவாழ்வில் தேவைப்படும் பண்புகளில் ஒன்றாகத் திகழ்வதால் இதனை அறத்துப்பாடலில் வைத்துப் பேசுகின்றார் தொல்காப்பியர்.

தம்மைப்பற்றி மிகுதியாக நினைத்துக் கொண்டு அதனால் விளைந்த செருக்கினால் முறைபிறழ்ந்து தீமை செய்தவரைத் தீமைக்கு ஆளானவர் தம்முடைய பொறுமையினால் வென்றுவிடுதல் வேண்டும். செருக்கினால் தீமை செய்தவரைப் பொறுத்துக் கொள்வதுதான் வெற்றிக்கு வழியாகும். மீண்டும் அவர்க்குத் தீமை செய்வது தீமையை வளர்த்து அறத்தைக் குலைப்பதாக முடியும். தீயவை செய்தார்க்கு மீண்டும் தீமை செய்தல் தோல்வியே தவிர வெற்றி அல்ல என்பதனை,

**"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்**
**தகுதியான் வென்று விடல்"** (குறள்.158)

என்னும் குறள்வழி வெளிப்படுத்துகின்றார். இப்பாடலின் கருத்தினை,

**"நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது**
**தாரித் திருத்தல் தகுதிமற்-றோரும்**
**புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலம்**
**சமழ்மையாக் கொண்டு விடும்"** (நாலடி.பா.72)

என்னும் நாலடியாரின் பாடல் எடுத்துரைக்கின்றது. செம்மைப் பண்பில்லாதவர்கள் மதியற்ற சொற்களைச் சொன்னால் அதனைப் பொறுத்திருப்பதே யோக்கியமானதாகும். அதற்கு வேறாகிய பொறாமையை மேலோங்குகின்ற கடல் சூழ்ந்த உலகில் உள்ளோர் புகழத்தக்கதாகக் கொள்ளாமல் அவமதிக்கத் தக்கதாகக் கொள்வார்கள் என்பது இப்பாடலின்வழி உணர்த்தப்பட்டுள்ளது.

## தீவினைக்கு அஞ்சுதல்

மனிதர்கள் எந்நாளும் அறவழியை அறிந்து அதன்படி ஒழுகுதல் வேண்டும். கூற்றவனுக்கு அஞ்ச வேண்டும். பிறர் கடுஞ்சொல்லைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். நெஞ்சில் வஞ்சகம் வராமல் காத்துக் கொள்ள வேண்டும். தீயோர் நட்பை வெறுத்து ஒதுக்க வேண்டும். பெரியார் வாய்மொழியைக் கேட்டு நடக்க வேண்டும் என்பதனை நாலடியார்,

**"அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்**
**பொறுமின் பிறர் கடுஞ்சொல் போற்றுமின் வஞ்சம்**
**வெறுமின் வினைதீயார் கேண்மை யெவனொன்றும்**
**பெறுமின் பெரியோர் வாய்ச்சொல்"** (நாலடி.பா.172)

என்று எடுத்துரைக்கின்றது. இதேபோன்று

**"நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்**
**பின்னீர பேதையார் நட்பு"** (குறள்.782)

என்னும் குறட்பாவின் பாடற்கருத்து,

**"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்**
**வரிசை வரிசையா நந்தும்-வரிசையால்**
**வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே**
**தானே சிறியார் தொடர்பு"** (நாலடி.பா.125)

என்று நாலடியாரில் விளக்கப்பட்டுள்ளது.

## நற்குடிப்பிறப்பு போற்றல்

திருக்குறளில் குழமை என்னும் அதிகாரத்தில் கூறப்படும் அறக்கருத்துக்கள் நாலடியாரில் குடிப்பிறப்பு என்னும் அதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ளன.

நற்குடிப் பிறந்தார்க்குத் துன்பம் பெரிதாக வந்தாலும் தாம் செய்யும் ஒப்புரவினை அவர்கள் ஒருக்காலும் மறவார் என்பதனை,

> **"இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்**
> **கடனறி காட்சி யவர்"** *(குறள்.218)*

என்னும் குறட்பா எடுத்துரைக்கின்றது. இதே கருத்தினை நாலடியார்,

> **"செய்கை யழிந்து சிதல்மண்டிற் றாயினும்**
> **பொய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்**
> **எவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்**
> **செய்வர் செயற்பா லவை"** *(நாலடி.பா.147)*

என்னும் பாடல் வழி அறிவுறுத்துகின்றது.

## முடிவுரை

மனத்தூய்மை பெறல், அன்புடையவனாய் விளங்குதல், இன்சொல் கூறல், இன்னா செய்யாதிருத்தல், ஒழுக்கப்பண்புடன் திகழ்தல், அடக்கமுடையனாய் விளங்குதல், பொறுமைகாத்தல், அழுக்காறு கொள்ளாதிருத்தல், புறங்கூறாது இருத்தல், செய்ந்நன்றி அறிதல், தீவினைக்கு அஞ்சுதல், வெகுளாதிருத்தல், பேராசை கொள்ளாதிருத்தல், உயிர்க்கொலை செய்யாதிருத்தல், கள்ளுண்ணாதிருத்தல், தெரிந்து செயலாற்றுதல், ஐம்புலன் அடக்கிவாழ்தல் என்பன மனிதன் மனத்தூய்மைபெற்று வாழ்வதற்கு உரிய அறங்களாக நாலடியார் சிறப்பிக்கிறது.



## பார்வை நூல்கள்

1. நாலடியார்
2. திருக்குறள்

(☺)(☺)(☺)(☺)(☺)

# இந்திய இராமாயணங்களில் கம்பனின் இராமகாதை

**பொருநை க மாரியப்பன்**
உதவிப் பேராசிரியர்
தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறை
திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம்
gmariappan.du@gmail.com

*****

**முன்னுரை**

இராமாயணமும் மகாபாரதமும் இந்திய இதிகாச மரபில் நீங்கா இடம் பெற்றவை. இரண்டிலும் மக்கள் மத்தியில் நீங்கா இடம் பெற்றது இராமாயணமே. காலத்தைக் கடந்து வென்றும் நிற்கிறது. விமர்சனத்திற்கும் உள்ளாகிறது. இதில் சந்தேகம் இல்லை. இன்றைய நிலையில் இராமாயண அரசியலும் நிகழ்வதை நிகழ்ந்ததை நாம் கண்கூடாகக் காண்கிறோம். நாட்டுப்புற வடிவிலும் நாடக வடிவிலும் செய்யுள் வடிவிலும் நிகழ்த்துக் கலை வடிவிலும் இராமாயணம் மக்களோடு தொடர்பு கொண்டு இருக்கிறது என்பதும் உண்மையே. இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலும் இராமயாணக் கதை ஏதோ ஒரு வடிவு கொண்டு இன்றும் இயங்கிக் கொண்டிருக்கிறது. திரு அ.அ.மணவாளன் அவர்கள் எழுதிய இராம காதையும் இராமாயணங்களும் என்ற நூலினை முன்வைத்து இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது.



**இராமகாதையும் இராமாயணங்களும்**

திரு அ.அ.மணவாளன் அவர்களின் மிகச் சிறந்த ஒப்பீட்டு நூல் ‘இராமகாதையும் இராமாயணங்களும்’ என்பதாகும். 48 நூல்களை அடிப்படையாகக் கொண்டு இந்நூலினை அமைத்துள்ளார். குறிப்பாக ஒரு செய்தியை ஆர. பார்த்தசாரதி கூறியுள்ளார். அதாவது, “வேதகாலத்தில் இராமாயணம் இருந்ததில்லை இராமாயணம் எழுந்த பிற்கால நிலையையும் விளக்குகிறார். ஜைன இராமாயணம், பௌத்த இராமாயணம் (ஜாதகக் கதைகள், தசரத ஜாதகம்) எனப் பல்வேறு இராமாயண நூல்களும் இருந்தன. முதலில் வாய்மொழி வழியாக வழக்கத்திலிருந்த நாடோடிக்கதை நாளடைவில் இலக்கிய நிலை எய்துகிறது. கதாநாயகன் வீரத்தலைவனாக உருவாகிறான். பிற்காலத்தில் வளர்ச்சிக் கட்டத்தில் அவன் இறைத்தன்மை ஊட்டப் பெற்று வணங்கத்தக்க கடவுளாக ஏற்றம் பெறுகிறான். வால்மீகி இராமாயணத்தில் இராமனின் நிலை முதல் நிலை. புத்தர் காலத்துக்குப் பிறகு இராமன் தெய்வத் தன்மையூட்டப் பெறுகிறான். நாராயணனின் அவதாரமாகிறான். இத்தகைய அவதாரமாக மாறியதற்குப் புத்த ஜாதகக் கதைகள் துணை செய்தன என்பதை “வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்” என்ற நூலில் கவீரா ஜெயஸ்வால் விரிவாக எடுத்துச் சொல்லியுள்ளார்”[1]

**தொடக்க காலம்**

வால்மீகி இராமாயணம் தான் காப்பிய வடிவில் எழுத்து வடிவில் முதலில் கிடைத்தது. அதற்கு இராமனின் கதை முன்பே நாடோடிப் பாடல்வடிவில் இந்தியா முழுமையும் பரவியிருந்து. இராமாயணக் கதைக்கூறுகள் சில இடங்களில் ஒன்றுபட்டும் சிலஇடங்களில் வேறுபட்டும் காணப்படுவதாக ஆசிரியர் அ.அ.மணவாளன் குறிப்பிட்டுள்ளார்.

இராமாயண நூல்களாக 48 நூல்களைத் தொகுத்துக்காட்டியுள்ளார். தசரதக ஜாதகம் முதலாகப் பிரகாஷ் இராமாயணம் வரையிலாகப் பட்டியலிட்டுள்ளார். (இராமகாதையும் இராமாயணங்களும், பக்.4-

7) இப்பட்டியலில் கம்பராமாயணம் 16ஆம் இடத்தில் அமைந்திருக்கிறது. கால வரிசையில் கி.பி பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக அமைகிறது.

பாலி, சமஸ்கிருதம், பிராகிருதம், திபேத்திய மொழி, பழைய ஜாவானிய மொழி, ஜப்பான், தெலுகு, அசாமி, மலையாளம், வங்காளி, கன்னடம், மராட்டி, இந்தி, ஒரியா, பாரசீகம், மலாய்மொழி, பர்மிய மொழி, பிலிப்பைன்ஸ்மொழி, தாய்(லாந்து), லாவோஸ்மொழி, காஷ்மீரி போன்ற மொழிகளில் இராமாயணம் இடம்பெற்றுள்ளது. வேறுபாடு தமிழில் தோன்றிய கம்பராமாயணத்திற்கும் பிற மொழி இராமாயணங்களுக்கும் பெருத்த வேறுபாடு காணப்படுகிறது. கதை மையப்பொருள் ஒன்றாக அமைந்திருந்தும் பண்பாட்டு அளவில் வேறுபாடு மிக்கதாகக் கம்பராமாயணம் அமைந்திருக்கிறது.

தமிழ்ப் பக்தி இலக்கியத்திற்குப் பின்னர் தோன்றிய இலக்கியங்களுள் சிறப்பானது கம்பராமாயணம். வால்மீகியைப் பின்பற்றி கம்பராமாயணம் அமைந்திருந்தாலும், சிற்சில மாற்றங்களைக் கொண்டதாகவே கம்பர் கம்பராமாயணத்தை அமைத்தார். கம்பன் இராமனை அவதாரப் பார்வையில் கொண்டு படைத்தான். கூடுதலாக இரணியன் கதை ஒன்றையும் இராமாயணத்தில் சேர்த்தார்.

**கம்பராமாயணச்சிறப்பு**

கம்பர் படைத்த இராமகாதை (கம்பராமாயணம்) மற்ற இராமாயண நூல்களை விட சிறப்பு பெறக் காரணம், கம்பனின் 'கற்பனை வளம், இனிய கவிதை நயம், உணர்வுகளுக்கேற்ற கவிதை நடை, குறிக்கோள் நாயகர்களாகப் பாத்திரங்களை படைத்துள்ள பாங்கு, நாடகப் பாணி, பிசிரில்லாமல் அமைத்துள்ள காப்பியக் கட்டுக்கோப்பு போன்ற பல்வேறு சிறப்புகளால் கம்பராமாயணம் ஓர் ஒப்புயர்வற்ற காப்பியமாகத் திகழ்கிறது. கம்பனுக்கு முன்னரும் அவனுக்குப் பின்னரும் சில இராமாயண நூல்கள் தோன்றினவாயினும் அவையெல்லாம் ஒன்று வழக்கில் இல்லை என்பதைக் கருத்தில் கொண்டால் கம்பராமாயணத்தின் சிறப்பு புலப்படும்'[2] என்கிறார் அ.அ.மணவாளன் அவர்கள்.

கம்பராமாயணம் வழி நூலாக இருந்தாலும், கம்பர் தனக்கே உரித்தான பாணியில் மொழியில் இயற்றியுள்ளார். வடமொழி கலவாத தூய தமிழ்ச்சொற்களைத் தனது நூலில் கையாண்டதால் கம்பர் தொல்காப்பிய நெறி நின்றவர். "வடசொல் கிளவி வடஎழுத் தொரீ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகுமே" (தொல்காப்பியம், எச்சவியல் 5)
வால்மீகி இராமாயணத்தில் இருந்து கம்பராமாயணத்தில் கம்பர் செய்த மாறுதல்களை நாம் ஒரு பட்டியலே இட முடியும்.

கன்னட பம்ப ராமாயணம் அகலிகைப் பற்றி பேசவில்லை. ஆகலிகை வரலாறு குறித்து பின்வருமாறு பிரிக்கலாம் என்கிறார் ஆசிரியர், அகலிகை வரலாறு கூறும் நூல்கள், கூறாதன. சாபவிமோசனத்துக்கு முன் அகலிகை வரலாறு உரைப்பன. பின்னர் உரைப்பன. சாபவரலாறு கூறுமிடத்து, அகலிகை இந்திரனை அறிதலும் அறியாமையும், சாபம், விமோசனம் வேறுபாடுகள் போன்றன.

அகத்தியன் தன் கமண்டல வழியாகக் காவிரியாற்றைத் தோற்றுவித்தான் என்று கம்பன் கூறுகிறான். வால்மீகியோ வியாசரோ இச்செய்தியைக் கூறவில்லை.

| எண் | வால்மீகி இராமாயணம் | கம்பராமாயணம் |
|---|---|---|
| 1 | இராமன் அசைவ உணவை ஏற்காமை(குகன்) | இராமன் அசைவ உணவை ஏற்றமை |
| 2 | இராவணனின் இழிவு, சீதையைத் தன் கையில் ஏந்தி தொட்டுத் தூக்கியமை | இராவணனின் வன்மையும், சீதையைத் தொடாமல் இருந்த நெறியும் |
| 3 | அகலிகை – சாதாரணமாகச் சொல்லுதல் | அகலிகை சொல்லும் முறையில் வேறுபாடு |
| 4 | வில் ஒடித்த பின்பே | சீதையை இராமன் காணல் (வில் ஒடிப்பதற்கு முன்பே) |
| 5 | ஆதி காவியமாகிய வான்மீகத்தில் எத்தகைய வாழ்த்தும் காணப்படவில்லை | ஆனால் கம்பராமாயணத்தில் வாழ்த்து காணப்படுகிறது. |
| 6 | அவையடக்கப் பாடல்கள் காணப்படவில்லை | அவையடக்கமாக ஆறுபாடல்கள் காணப்படுகின்றன. |

**பிற இராமாயணங்களில்**

சைனா ராமாயணத்தில் ராமனுக்கு பிரபாவதி, ரதினபா, சீதை , ஸ்ரீதாம என நான்கு மனைவிகள் உண்டென்று சொல்லப்படுகிறது. மேலும் அதில் ராமன், லட்சுமணன், சத்துருக்கனன் போன்றவர்களின் பிறப்பு வால்மீகி சொன்னதைப் போல் இல்லாமல் வேறு மாதிரி திரிக்கப்பட்டு உள்ளது.

பௌத்த ராமாயணத்தில் சீதையும் இராமனும் அண்ணன் தங்கை என்று கூறப்பட்டு உள்ளது. வசிஷ்ட புராணத்தில் சீதை தசரதனின் மகள் என்றும், பாகவா புராணத்தில் சீதை ராவணனுக்கு மகள் என்றும் கூறப்பட்டு உள்ளது. இதை திரு சீ. ஆர். சீனிவாச அய்யங்கார் சொல்லி இருக்கிறார். இவர் வால்மீகி ராமாயணத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.மேலும் சீதை ஜனகனின் மகள் என்று கூறப்பட்டு இருக்கிறது. இதில் எது உண்மை? ஏன் இத்தனை குழப்பம்? மேலும் ரிக் வேதத்தில் பத்தாவது மண்டலத்தில் சுலோகம் 10, 12 ல் சில செய்திகள் பதிவு செய்யப்பட்டு இருக்கிறது.

தெலுங்கு ராமாயணம் என்று அறியப்படும் ரங்கநாத ராமாயணத்திலும் பாஸ்கர ராமாயணத்திலும் அவையடக்கப் பாடல்கள் காணப்படவில்லை. கன்னட பம்ப ராமாயணத்தில் அவையடக்கப் பாடல்கள் காணப்படவில்லை. மலையாள மொழியில் அமைந்த கண்ணச ராமாயணத்தில் அவையடக்கம் அமைந்திருக்கிறது. எழுத்தச்சனின் அத்யாத்ம ராமாயணத்தில் அவையடக்கப் பகுதி அமைக்கப்படவில்லை.

இவ்வாறு பல இராமாயண நூல்களில் அந்த அந்த இடத்திற்கு தகுந்தவாறு கதைப் போக்குகள் அமைந்திருக்கின்றன. ஆனால், தமிழ்ப்பண்பாட்டு நோக்கில் அமைந்திருக்க கூடிய கம்பராமாயணம்

அழகியலைக் கைக்கொண்டு கம்பனால் உருவாக்கப்பட்டுள்ளது. சாதாரண மனித நிலையில் இருந்த இராமனை அவதார நாயகனாக முற்ற முழுக்க காட்டியிருப்பது தான் அதன் வெற்றி.

**முடிவுரை**

உலகெங்கும் பரவிக் கிடங்கும் இராமாயணங்கள் ஏதோ ஒரு தடத்தில் இயங்கினாலும் தமிழ் செய்த தவப்பயனால் கம்பனின் இராமாயணம் தான் நமக்கு ஒரு தெய்வீக இராமாயணத்தைத் தருகிறது என்பது சான்றோர்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இந்திய இராமாயணங்களில் கம்பனின் ராமயாணம் காலத்தால் சற்று பிந்தியதாக அமைந்திருந்தாலும் வெற்றி பெற்ற இராமாயணமாக அமைந்திருக்கிறது என்பதே உண்மை. இந்திய இராமாயணங்களில் தனித்துவம் மிக்கது கம்பனின் இராமாயணமே என்பதை இதன் வாயிலாக அறிகிறோம்.

**அடிக்குறிப்புகள்**

1. ஆர்.பார்த்தசாரதி,(ஆய்வு முன்னுரை), இராமகாதையும் இராமாயணங்களும், ப.xvi
2. அ.அ.மணவாளன், இராமகாதையும் இராமாயணங்களும், ப.38

(😊)(😊)(😊)(😊)(😊)



# தமிழ் நாட்டார்வழக்கியலில் குழந்தைப்பாடல்கள்

**இலங்கையில் தமிழர் செறிந்து வாழுகின்ற வடபகுதியாகிய யாழ்ப்பாணத்திலெழுந்த குழந்தைப்பாடல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட ஆய்வு**

**முனைவர் திருமதி சுகன்யா அரவிந்தன்**
**முதுநிலை விரிவுரையாளர்,**
**யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.**
**இலங்கை**
saravinthon@hotmail.com
*****

**அறிமுகம்.**

இசை என்பது ஒரு அற்புதமான கலை. இறைவனால் மானிடர்க்கு அளிக்கப்பட்ட மகோன்னதமான பரிசு.

'ஆஹா! உந்தன் அதிசயங்கள் தன்னுள்ளே கானாமுதம் படைத்த காட்சி மிக விந்தையடா!' என்று இசை பற்றித் தன்னுடைய குயிற்பாட்டிலே அதிசயித்துப் பாடுகின்றார் புரட்சிக்கவி பாரதியார்.

'ஒரு இனத்தின் அல்லது நாட்டின் பண்பாட்டை, பழக்கவழக்கங்களை, வரலாற்றை, நாட்டுநடப்பை, உண்மையான முறையிலே படம் பிடித்துக்காட்டுவனவே நாட்டுப்புறவியலாகும். மனித சமுதாயம் எதை அனுபவித்ததோ, எதைக் கற்றதோ, எதைப் பயிற்சி பெற்றதோ இவற்றைக் குவித்து வைத்திருக்கும் சேமிப்பு அறையே இது'1 என்று நாட்டுப்புறவியலாய்வாளர்கள் கருதுகின்றனர். நாட்டுப்புயவியலிலே முக்கிய இடம் பெறுவது நாட்டார் பாடல்களே. கலை மூலக்கூறுகள் யாவுமே உலகப்பண்பாடுகள் அனைத்துக்கும் பொதுவானவை. இவற்றின் வெளிப்படு தள நிலைகள் பண்பாடுப் பின்புலங்களுக்கேற்ப மாறுபட்டிருப்பினும் அடிப்படையின் சாரம் ஒன்றே.

பூர்விககாலம் தொட்டு இன்றுவரை வளர்ச்சி பெற்று வந்துள்ள இசைபற்றியும் அதன் வரலாற்றுப்பின்னணி பற்றியும் ஆராய்ந்த இனக்குழும இசையியலாளர்கள், மானுடத்தின் பண்பாட்டு வளர்ச்சி நிலைகளுக்கேற்ப இசைக்கலையினையும் பூர்வீக இசை, நாட்டார் இசை, சாஸ்திரிய இசை என மூன்று வகையாக வகுத்துள்ளனர்.

பூர்வீக இசை காலத்தால் முற்பட்ட, படிப்பறிவற்ற, எழுதத்தெரியாத பழங்குடி சமூகத்தில் வழங்கி வந்த இசைமரபாகும். சாதாரண சமூகத்தின் மத்தியிலே அவர்களது அனுபவ வெளிப்பாடுகளாக வெளிவருகின்ற எழுதாக்கவிகள் நாட்டார் இசைமரபு எனவும், ஒழுங்குபடுத்தப்பட்ட மரபுக்குள் நின்று குரு சிஸ்ய முறையிலே முறையாகக் கற்றுப்பாடப்படுவது சாஸ்த்திரிய இசை மரபு என்றும் கொள்ளப்படும்.2

நாட்டார்பாடல்கள் ஒவ்வொரு சமூகத்திலும் ஒரு தனித்துவமான மரபாக இருந்து வருகின்றன. பொதுவாக நாட்டார் பாடல்களின் பயன்பாட்டை அடிப்படையாகக்கொண்டு பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. **தாலாட்டுப்பாடல்கள்**
2. **சிறுவர் விளையாட்டுப்பால்கள்**
3. **தொழிற்பாடல்கள்**
4. **காதல் பாடல்கள்**
5. **வழிபாட்டுப்பாடல்கள்**

6. **கதை - கூத்துப்பாடல்கள்**
7. **ஒப்பாரிப்பாடல்கள்**

மேற்குறிப்பிட்டுள்ள ஒழுங்கு முறையின்படி இவ்வேழுவகைப்பாடல்களும் மக்களது பிறப்பு முதல் இறப்பு வரையும் தொடர்ச்சியாக வருவன. இந்த வகையிலே குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சியைத் தீர்மானிக்கின்ற சிறுவர் பருவத்திலே இந்த நாட்டார் பாடல்கள் எத்துணை இடம் வகிக்கின்றன என்பதனை ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வாய்வுக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது. இந்தப்பாடல்கள் சிறுவர்களது ஆளுமை வளர்ச்சியிலே எத்துணை தூரம் பங்குவகிக்கின்றது என்பதனையும் இக்கட்டுரையிலே நோக்கமுடிகின்றது.

**குழந்தைப்பாடல்கள்**

தமிழ் இலக்கியப்பரப்பிலே குழந்தைப்பாடல்கள் மிக நீண்ட நெடுங்காலமாகவே பயன்பாட்டிலிருந்து வந்துள்ளன. பொதுவாக இலக்கியத்தோற்றத்திற்குக் கூறப்படும் காரணிகளையே குழந்தை இலக்கியத்திற்குரிய காரணிகளாகவும் கொள்ளலாம். கவிதைத்தோற்றத்திற்கு வாய்மொழி மரபும் ஒரு வலுவான காரணியாக அமைந்துள்ளது எனக் கூறப்படுகின்றது. குழந்தைப்பாடல்களின் தோற்றத்திற்கும் வாய்மொழிப் பாடல் மரபுக்கும் மிக நெருக்கமான உறவுண்டு.

குழந்தைகளுக்காகப் பெரியவர்கள் பாடும் வாய்மொழிப் பாடல்களையும் குழந்தைகள் கூடிக்குலாவி விளையாடும் பொழுது தாமாகப் பாடும் பாடல்களையும் நாட்டுப்பாடல்களிலே இயல்பாகவே பரக்கக்காணலாம்.இதன் பயன்பாடு இயல்பாகவே குறைந்து வரும்காரணங்களாலும், சமூக பொருளாதார பண்பாட்டு மாற்றங்களினாலே இக் குழந்தைப்பாடல்களிற் பல இன்று வழக்கொழிந்து மறைந்து விட்டன.

குழந்தை மனம் இசையால் மிக இலகுவாக ஈர்க்கப்படும் தன்மை வாய்ந்தது. தாலாட்டுப் பாடல்களோடு இசைவுபடப் பழகிய குழந்தை காலப்போக்கில் ஒத்திசைவுள்ள இலகுவான பாடல்களை வாய்விட்டுப் பாடத்தொடங்குவதையும் அவதானிக்கலாம்.

தாய்மார் குழந்தைகளை மகிழ வைக்க,

**'அம்புலி மாமா வா வா வா**
**அழகழ சொக்கா வா வா வா'** என்றும்,
**'கூத்து கூத்து குமரப்பா**
**குரக்கனைக் கொட்டிக் கொண்டு மலைத்தா'** 3

என்றும் பாடுவதை இன்றும் யாழ்ப்பாணப்பண்பாட்டு வழக்கிலே காணமுடிகின்றது. ஓசை நயமும் வாய்ப்பாட்டு ரீதியாகத் திரும்பத் திரும்ப இடம் பெறும் சொற்களும் கட்புலன்சார் கவினும் குழந்தையின் ஆர்வத்தைத் தூண்டிவிடக் குழந்தை தானாகவே பாடத்தொடங்குவதும் உண்டு.

மழலை, குழந்தை, சிறுவர் என்ற நுண்ணிதான ஆய்வு நெறிமுறைகளை வாய்மொழியாக வழங்கும் குழந்தைப்பாடல்களினூடு பகுத்து நோக்குவது கடினம். பத்து அல்லது பதினொரு வயது வரையுள்ள சிறுவர்கள் மகிழ்ந்து கலந்து விளையாடும் பொழுது பாடும் பாடல்களை நாட்டர் பாடல் மரபிலே குழந்தைப்பாடல்கள் என்றே குறிப்பிடுவர்.

பெரும்பாலும் சிறுவர்கள் கூடிக்குலாவி விளையாடும் பொழுது பாடல்கள் பாடுவதே வழக்காறாக உள்ளது. இப்பாடல்களைப் பெரியவர்கள் தோற்றுவித்தார்களா என்று அறிய முடியவில்லை. குழந்தைகள் பாடும் பாடல்களிலே விடுகதைத்தன்மை, வியப்பார்வம், அபிநயப்பண்பு, கூற்றும் மாற்றமுமான பாங்கு முதலானவற்றைக் காணமுடிகின்றது. இப்பாடல்களில் பல இடத்துக்கிடம்

சிற்சில மாற்றங்களுடன் வழங்கி வருவதையும் கண்டுகொள்ளலாம். வாய்மொழிப்பாடல்கள் இடத்திற்கிடம் வடிவிலும் பொருளிலும் இசையிலும் மாற்றம் பெறுவது இயல்பானதே.

குழந்தைகள் பாடும் வாய்மொழிப்பாடல்களிலே ஓசை ஒழுங்கு, வாய்ப்பாட்டு ரீதியாகத் திரும்பத்திரும்ப இடம்பெறும் சொல்லாட்சி, ஆர்வத்தைத் தூண்டும் தன்மை முதலானவற்றைக் காணலாம்.

**'ஒன்று இரண்டு மூன்று நாலு**
**ஐந்தாம் நம்பரடி**
**ஐந்தாம் நம்பர் வீட்டுக்குள்ளே**
**றங்குப்பெட்டி யெடி**
**றங்குப் பெட்டிய திறக்கப் போனா**
**சிங்கக்குட்டியடி**
**சிங்கக் குட்டியப்பிடிக்கப்போனா**
**சீறிப்பாயுதடி'4**

இப்பாடலிலே ஒருவிதமான ஓசை ஒழுங்கும் குரற்பயிற்சிகளுக்குக்கேற்ற சொற்களும் ஆனந்திக்கக் கூடியதாக அமைகின்ற, ஒருவகையிலே ஆர்வத்தைத் தூண்டும் பண்பும் இவைகளுக்கு மேலாக இலக்க (எண்) ஒழுங்கை அறிந்து கொள்ளும் வாய்ப்பும் பொதிந்திருப்பதை அவதானிக்கலாம். இப்பாடலை அபிநயத்தோடு நாடகத்தன்மையுடன் குறிப்பாக பாலர் பாடசாலைகளிலே குழந்தைகள் பாடுவதும் உண்டு.

ஓசை ஒழுங்குக்கு இயைவு பட்ட ஒரே தன்மைத்தான வேறு வேறு சொற்களைப் பரிச்சயப்படுத்திக் கொள்ளக்கூடிய வகையிலே அமையும் வாய்மொழி மரபுக் குழந்தைப்பாடல்களும் யாழ்ப்பாணத்திலே வழங்கி வருவதைக் காணமுடிகின்றது. வகை மாதிரிக்குப்பின்வரும் பாடலைக்குறிப்பிடலாம்.



**'நெய் நெய் நெய்**
**அரைப்போத்தல் நெய்**
**அத்தான் வந்து**
**சொன்னதெல்லாம்**
**பொய் பொய் பொய்**
**நெத்தியில நீலப்பொட்டு**
**வை வை வை'**

இப்பாடலிலே நெய் நெய் நெய், வை வை வை முதலான ஒரே ஓசையுடைய வெவ்வெறு சொற்கள் இடம் பெறுவதை அவதானிக்கலாம். குழந்தையின் சொற்களஞ்சியம் வளர இத்தகைய பாடல்கள் உதவின எனலாம்.

வாய்மொழியாக வழங்கும் குழச்தைப்பாடல்களிலே வினாவும் விடையுமாக அமையும் பாடல்களும் உண்டு. பிள்ளைகள் வட்டமாக இருந்து தமது கைகளை நிலத்திலே வைத்து நுள்ளுப்பினாட்டு விளையாட்டு விளையாடும் பொழுது பின்வருமாறு பாடுவார்கள்,

**'நுள்ளுப் பினாட்டு, குறாப் பினாட்டு**
**கொக்க தலையில என்ன பூ?**
**முருக்கம் பூ**
**முருக்குத் தழைச்ச முன்னூறு மாம்பழம்**
**பட்டையிக்கை வைச்ச**
**பழஞ்சோ றெங்க?**
**பண்டி திண்டிட்டுது**
**பண்டிக்கு மேல**
**படுவான் மிளைக்க**
**செட்டியா பிள்ளை**
**ஒருகையை மடக்கேண்டா**
**துடக்கு'5**

வினாவும் விடையுமாகத் தொடர்ந்து பாடிக்கொண்டு விளையாடும் பாடல்களை வாய்மொழிப்பாடல்களிலே பரக்கக்காணலாம். குழந்தையின் ஆர்வத்தைத்தூண்டும் வகையிலே சொற்கள் அடுக்கப்பட்டுச் செல்வதை இப்பாடல்களிலே காணலாம். உதாரணமாகப் பின்வரும் பாடலைக்குறிப்பிடலாம்.

**‘அன்னம்**
**என்ன அன்னம்?**
**சோத் தன்னம்**
**என்ன சோறு?**
**பழஞ் சோறு**
**என்ன பழம்**
**வாழைப்பழம்**
**என்ன வாழை**
**திரி வாழை**
**என்ன திரி**
**விளக்குத் திரி**
**என்ன விளக்கு**
**குத்துவிளக்கு**
**என்ன குத்து**
**இந்தக் குத்து’6**

‘இந்தக்குத்து’ என்று கூறித் தமது குழுவில் ஒருவருக்குக் குத்திவிட்டு ஓடிப்பிடித்து விளையாடத் தொடங்குவார்கள். மேற் காட்டிய பாடல்கள் போன்ற பல பாடல்கள் வெவ்வேறு வகையிலே வழங்கி வருவதைக் காண முடிகின்றது.



குழந்தைகள் ஒழித்துவிளையாடும் வழக்கம் மிக நீண்ட காலமாகவே அருந்து வருகின்றது. இன்றும் யாழ்ப்பாணத்தமிழ்ப்பண்பாட்டு மரபிலே இந்த விளையாட்டிலே பிள்ளைகள் ஈடுபடுவதைக் காணலாம். ஒருவருடைய கண்ணை மற்றொருவர் பொத்திக் கொண்டு பின்வருமாறு பாடுவார்கள்.

**‘இவடம் எவடம்**
**புங்கடி புளியடி**
**புங்கடி புளியடி**
**எங்கடி போறாய்?’7**

இவ்வாறு பாடித் தாம் ஒளித்து வைத்த பொருளை எடுக்கும் படி சற்றுத்தூரத்திலே கண்ணைப்பொத்திக் கூட்டிச்சென்று விடுவார்கள். அப்பிள்ளை அப்பொருளைத் தேடி எடுத்தால் வென்று விட்டதாகப் பொருள் கொள்ளுவார்கள். இவ்வாறே கண்ணைப்பொத்தி விளையாடும் பொழுது பாடும் இன்னொருவகையான பாடலும் உண்டு.

**‘கண்ணாரே கடையாரே**
**காக்கணவன் பூச்சியாரே**
**ஈயாரே எறும்பாரே**
**கோச்சி என்ன காச்சினாள்?**
**கூழ்.**
**கூழுக்குக் கறியென்ன?**
**புழு.**
**ஒரு பெரும் புழுவாப்**
**பிடிச்சுக் கொண்டோடிவா’**

என்று கூறிக் கண்ணைப்பொத்திய கையை விடுவார்கள். ஒளித்தவர்களைக் தேடி ஒவ்வொருவராகக் கண்டு பிடிப்பார்கள். ஒவ்வாறே குழந்தைகள் இரு குழுவினராகப் பிரிந்து நின்று விளையாடும் பொழுது,

‘கொழுத்தாடு பிடிப்பேன்’

என்று ஒரு குழு பாட,

‘கொள்ளியாலே சுடுவேன்’

என்று மற்றக்குழுவினர் பாடித் தடுத்து நிறுத்தி வைப்பார், திரும்பத் திரும்ப இத்தொடரைப் பாடலாக இசையோடு பாடி விளையாடும் மரபு இப்பிதேசத்திலே நீண்டகாலமாக நிலவி வருகின்றது. அத்தோடு,

**‘மாமா பன்னாடே**
**மாமியார் வீட்டே போகாதே**
**சுண்டங்காயைத் தின்னாதே**
**சூத்தை அரிச்சுச் சாகாதே’**

என்று பாடி விளையாடுவார்கள்.

நாட்டார் பாடல்களுக்குரிய பொதுவான குணாம்சங்களையே

குழந்தைகளின் வாய்மொழிப்பாடலும் காண்கின்றோம். பெரும்பாலான வாய்மொழிக் குழந்தைப்பாடல்கள், குழந்தைகள் குதூகலமாக விளையாடும் பொழுது பாடப்படுபவையாகவே காணப்படுகின்றான.

வாய்மொழிக் குழந்தைப்பாடல்கள் அவர்களைக் குதூகலிக்கச்செய்து மகிழ்ச்சியாக வைத்திருக்கும் பண்பினையே பெருமளவிலே கொண்டிருக்கின்றன. மகிழ்ச்சியினூடாக சொற்களஞ்சியம் பரந்து விரிந்து செல்வதையும் அவதானிக்க முடிகின்றது.

வாய்மொழி மரபாக முகிழ்த்த குழந்தை இலக்கியம் ஏனைய இலக்கியத்தைப் போலவே எழுத்திலக்கிய மரபுடன் இணைந்து பயிலத்தொடங்கியது. வாய்மொழி மரபினின்றும் எழுத்திலக்கியமாக மாறும் பொழுது குழந்தை இலக்கியத்துக்குரிய உயிரோட்டமான தன்மைகள் சிலவற்றிலிருந்து விடுபடத்தொடங்கியமையும் அவதானிக்க முடிகின்றது.

பொதுவாக ஒரு வயது தொடக்கம் ஐந்து வயது வரை பாலப்பருவம் ஆறு வயது தொடக்கம் பனனிரண்டு வயது வரை குழந்தைப்பருவம் என்றும் பதின்மூன்று வயதுக்கு மேல் இருபது வயது வரை குமரப்பருவம் என்றும் உளநூல் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தமிழிலே தோன்றிய செந்நெறிப்பாங்கான குழந்தைப்பாடல்கள் ஓரளவுக்கு அறிதல் முறையையும், பெரும்பாலும் புத்திபுகட்டுவதையுமே பிரதான நோக்கமாகக் கொண்டிருந்தன. ஆரம்பகாலக் குழந்தை இலக்கியங்கள் என்று கூறப்படும் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் முதலானவை அறநீதிக்கருத்துக்களை அகர வரிசையிலே கூறுவனவாகவே அமைந்துள்ளன. குழந்தை அகர வரிசையை அறிவதனூடு இக்கருத்துக்களை அறிய வேண்டும். அறக்கருத்துக்களை அறிவதனூடு அகரவரிசையை நினைவுபடுத்த வேண்டும் என்பதே இந்த இலக்கியங்களின் இலக்காக அமைந்திருந்ததெனலாம்.

தமிழ்க்கவிதையின் போக்கையும் நோக்கத்தையும் மாற்றிய பாரதி கூட ‘புதிய ஆத்திசூடி’ ஒன்றைப்பாடினான். பழைய ஆத்திசூடியின் வைரமான பாரம்பரியத்தில் இருந்து விடுபட முடியாதவனாகவே பாரதியும் காணப்படுகின்றான். பாரதிக்குப் பின் பாரதி தாசன் முதல் பண்டிதர் வீரகத்தி வரை, பலர் ‘புதிய ஆத்திசூடி’ பாடியமையையும் அவதானிக்கலாம்.

இந்த குழந்தைப்பாடல்கள் பற்றிய எழுத்திலக்கிய மரபினை நோக்குகின்ற பொழுது இலங்கையிலே, குறிப்பாக தமிழ்ப்பண்பாடு கனிசமாகப்பின்பற்றப்படுகின்ற யாழ்ப்பாணப் பண்பாட்டு மரபிலே குழந்தைப்பாடல் வரலாற்றிற்கு முக்கியமான, காத்திரமான வரலாறு ஒன்றுண்டு. 1981இல்

‘குழந்தைப்பாடல் திரட்டு’ ஒன்று குழந்தைப்பாடல்களுக்குரிய இலக்கணங்களுடன் ச. வைத்தியநாதய்யர் அவர்களால் வெளியிடப்பட்டது.8 இவரைத் தொடர்ந்து 1935இல் க.ச. அருள்நந்தி அவர்களாலே ‘பிள்ளைப்பாட்டு’ என்கின்ற தொகுதி வெளியிடப்பட்டது. இது வட இலங்கைத்தமிழ் ஆசிரியர் சங்கத்தினரின் வெளியீடாக அமைந்திருந்தது, இந்நூலின் பதிப்புரையிலே பாலர்களுக் கேற்ற வகையிலே சந்தவின்பம் உள்ள சிறு பாட்டுக்கள் இதுகாறும் திருத்தமான முறையிலே தமிழில் வெளிவரவில்லை என்று குறிப்பிட்டிருப்பது சிறுவர் பாடலுக்கான இந்நூலின் காத்திரத்தை நமக்கு சுட்டிக்காட்டுவதாக அமைகின்றது. இக்காத்திரத்தின் பயனாக இலங்கைக்கான குழந்தைப்பாடல் வரலாற்றிலே அருள்நந்தி தொகுத்த பிள்ளைப்பாட்டுக்கு முக்கியமான இடமுண்டு என்று கொள்ள முடிகின்றது,

1930களிலே இலங்கையிலே வெளிவந்த ஈழகேசரிப்பத்திரிகையும் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியிருக்கின்றது. இந்தப்பத்திரிகையிலே பாலர் பகுதி என ஒன்று ஆரம்பிக்கப்பட்டு அப்பகுதியிலே பெருமளவிலே குழந்தைப்பாடல்கள் பிரசுரிக்கப்பட்டமையும் இங்கு குறிப்பிடப்படவேண்டிய ஒன்று.

இலங்கைத் தமிழ்க்குழந்தைப்பாடல்கள் வரலாற்றிலே குறிப்பாக யாழ்ப்பாணப்பரப்பிலே சோமசுந்தரப்புலவருக்கு அடுத்தபடியாக யாழ்ப்பாணன் ,கவிஞர் செல்லையா, வேந்தனார், இதம், கனக செந்திநாதன், க. சச்சிதானந்தன் முதலியோர் சிறப்பாகக் குறிப்பிடப்படவேண்டியவர்கள். யாழ்ப்பாணனின்,

**‘ஆட்டுக்குட்டி எந்தன் குட்டி**
**அருமையான சின்னக்குட்டி**
**ஓட்டமோடி வந்திடுவாய்**
**உனக்கு முத்தம் தந்திடுவேன்’**
**என்ற பாடலும்,**
**‘தம்பி நாங்கள் கோயில் கட்டி**
**சாமி ஒன்றை உள்ளே வைத்து**
**கும்பிட் டிங்கு பூசை செய்வோம்**
**கூடி ஆடிப் பாடிக்கொள்வோம்’9**



எனத் தொடங்கும் அபிநயப்பாடலும் அக்காலத்திலே மிகவும் புகழ்பெற்ற பாடல்களாக வழக்கிலிருந்தன.

**முடிவுரை**

இலங்கையின் பலபாகங்களிலும் தமிழ்ச்சமூகம் வாழ்ந்து வரினும் வடபுலமாகிய யபழ்ப்பாணத்திலே வாழ்ந்து வருகின்ற தமிழ்ச்சமூகம் தனக்கென இறுக்கமான கட்டமைப்பினைக கொண்டது. இந்தவகையிலே நாட்டார் மரர்களும் வாழ்வியல் போக்குளுக்கமைய செவிவழியாகக்கடத்தப்பட்டு வலந்தன. குழந்தைகளுக்கான வாய்மொழி இலக்கியமாகப்பல பாடல்கள் காலந்தோறும் விளையாட்டுக்கிளன் போதும் இந்நய செயற்பாடுகளினபோதம் இயல்பாகவே பாடப்பட்டு வந்திருப்பதை வரலாறுகள் வாயிலாகத் தெரிந்துகொள்ளமுடிகின்றது. இப்பாடல்கள் குழந்தைகளை மகிழ்வித்தல் என்பதற்கு அப்பால் பண்பாட்டு நெறிமுறைகளை வழக்காறுகளை அறிவியல் தெளிவினை குழந்தைகளுக்கு இயல்பாகவே புகட்டிவிட முனைந்திருக்கின்றன என்றால் மிகையில்லை.

**அடிக்குறிப்பு:**

1. கலாநிதி இ. பாலசுந்தரம், ஈழத்து நாட்டார் பாடல்கள் (மட்டக்களப்பு மாவட்டம்)ஆய்வும் மதிப்பீடும், மணிமேகலைப்பிரசுரம், 2005: பக் : 06
2. மேலது : பக் 15
3. கலாநிதி எஸ் சிவலிங்கராஜா: யாழ்ப்பாணத்து வாழ்வியில கோலங்கள் : குமரன் இல்லம் 2003: பக் : 23

4. மேலது : பக் 25
5. மேலது: பக் : 26
6. மேலது : பக் :27
7. மேலது : பக்: 30
8. ஜெயராசா. சபா. – “இசையும் சமூகமும்” – சேமமடு பதிப்பகம். – 1998- பக் : 23
9. மேலது (1): பக் :27

**உசாத்துணை நூல்கள்:**

1. H.Carpenter and M.Prichard, “The Oxford Companion to children’s Literature” (Oxford University Press),1984.
2. கலாநிதி இ. பாலசுந்தரம், ஈழத்து நாட்டார் பாடல்கள் (மட்டக்களப்பு மாவட்டம்)ஆய்வும் மதிப்பீடும், மணிமேகலைப்பிரசுரம், 2005:
3. கலாநிதி எஸ் சிவலிங்கராஜா: யாழ்ப்பாணத்து வாழ்வியில கோலங்கள் : குமரன் இல்லம் 2003.
4. ஆரம்ப ஆசிரியர் கல்விப்பாடநெறி - “அழகியலும் உடற்கல்வியும்” - தொலைக்கல்வி நிறுவகம் – தேசிய கல்வி நிறுவகம்.
5. கனகரத்தினம் . க: ஈழகேசரி : சங்கீதமும் பயனும் : 13-04-45-

(☺)(☺)(☺)(☺)(☺)








**Compilation of Papers**
**presented in**
**International Conference**
**organised by**

**Department of Tamil**
Sri Venksatesara University
**Dravidian University**
**UVeS Iyer Library**
**Na Subbu Reddiar 100 Educational Trust**

**On the eve of**

**DIAMOND JUBILEE OF**
(1960 – 2020)
**DEPARTMENT OF TAMIL, SVU**
(19 – 22 Feb 2020)

**Honouring Tamil Thatha**
**on his 166th Birthday (19 Feb 2020)**

| Dates | Place |
|---|---|
| 19 & 20 Feb 2020 | Department of Tamil, SVU [AP] |
| 20 - 22 Feb 2020 | Dravidian University [AP] |

# Papers in Telugu
# [Papers 47 <::> 260 Pages]

## విషయ సూచిక

# చారిత్రక వచన మహాకావ్యము 'బోయకొట్టములు పండ్రెండు'

తంగి ఓగేశ్వరరావు
పరిశోధక విద్యార్థి,
తెలుగు శాఖ, ఆచార్య నాగార్జున విశ్వవిద్యాలయం, గుంటూరు
Email: t.ogeswararao@gmail.com
Ph: 9959753832

కరణం బాలసుబ్రహ్మణ్యం పిళ్ళై గారు 1936 ఫిబ్రవరి 1న చిత్తూరు జిల్లా తలుపుల పల్లెలో జన్మించారు. ఆయన చిత్తూరు జిల్లాలోని పలు పాఠశాలల్లో తెలుగు ఉపాధ్యాయులుగా పనిచేసి, 1994 లో కలిచెర్ల ఉన్నత పాఠశాలలో పదవీ విరమణ చేశారు. పదవీ విరమణ అనంతరం పిళ్ళై గారు తన పూర్తి సమయాన్ని తెలుగు భాషాభివృద్ధికి వినియోగించారు. అచేతన స్థితిలో ఉన్న మదనపల్లి రచయితల సంఘంలో తిరిగి చైతన్యం నింపారు. తెలుగు సాహిత్యంలో పద్యం, నవల, కథ, వ్యాసం, నాటకం మొదలైన అన్ని ప్రక్రియలలోనూ రచనలు చేశారు. అతని రచనలలో పేరొందిన రచన 'బోయకొట్టములు పండ్రెండు'.

కారణం బాలసుబ్రహ్మణ్యంపిళ్ళై పండరంగని అద్దంకి శాసనం ఆదారంగా రచించిన చారిత్రక నవల బోయకొట్టములు పండ్రెండు.

"-----------------భూపాలకుండు
పట్టంబు గట్టిన ప్రథమంపు నేడు బలగర్వమొప్పంగ బైలేచి సేన
పటంబు గట్టించి ప్రభు పండరంగు బంచిన సామంత పదువతో బోయ
కొట్టము ల్వండ్రెండు గొని వేంగినాటి గొఅల్చియ త్రిభువనాంకుశ బాణనిల్పి
కట్టెపు దుర్గంబు కడు బయల్సేని కందుకుర్బెజవాడ గావించి
మెచ్చిపండురంగు పరమ మహేస్వరుండు ఆదిత్య బటరనికి ఇచ్చిన
భూమి ఎనుబొది వుట్ల ఆడ్లు పట్టు నేల ధర్మపురంబున
ధర్మువులు వీని రక్షించిన వారికి అస్వమేదంబున పలంబు అగు"

ఇదే పండ రంగని అర్దంకి శాసనం. ఈ శాసనాన్ని క్రీ.శ.848 లో గుణగ విజయాదిత్యుని సేనాని పండ రంగడు పల్లవులపై తన విజయానికి చిహ్నంగా అద్దంకిలో నెలకొల్పాడు. అద్దంకి శాసనంలో పేర్కొన్న బోయలు ఎవరు? వారు ఎక్కడి వారు? వారిని పండ రంగడు ఎందుకు జయించాడు? కట్టెపుదుర్గాన్ని ఎందుకు నేలమట్టం చేశాడు? అనే ప్రశ్నలకు సమాధానాల్ని ఊహించి కరణం బాలసుబ్రహ్మణ్యం పిళ్ళైగారు ఈ నవలను రచించారు. లభిస్తున్న చారిత్రక సత్యాలకు కొంత కల్పనల్ని జోడించి ఈ చారిత్రక నవల్ని రచించారు.

ఈ శాసనం వేంగి చాళుక్య రాజైన గుణగ విజయాదిత్యుని కీర్తికి, అతని సేనాని పండ రంగని పరాక్రమానికి ప్రతీకగా నెలకొల్పబడింది. కాని పిళ్ళై గారు "ఇతిహాసపు చీకటి కోణం అట్టడుగునపడి కాన్పింపని కథలన్నీ కావాలిప్పుడు" అన్న శ్రీశ్రీ గారి మాటలకు కట్టుపడి బోయవీరులపక్షం వహించి వారి విషాదగాథను నవలగా తీర్చిదిద్దారు. ఈ నవల్లో కొట్టం అనగా పల్లవ రాజ్యంలో పరిపాలన విభాగం. ఇది నేటి రెవిన్యూ మండలంగా భావించవచ్చు.

ఈ నవలలోని సంఘటనలు క్రీ.శ. 614 వ సంవత్సరంలో ప్రారంభమై క్రీ.శ.848 వ సంవత్సరం వరకు ఇంచుమించు 220 సంవత్సరాలపాటు కొనసాగుతాయి. ఈ నవలలో బోయల ఏడు తరాల చరిత్రను రచయిత వివరించారు. వేంగీ చాళుక్యులు, పల్లవుల మధ్య యుద్ధాలు సాగుతున్న కాలం అది. త్రిపురాంతకంలో నివశిస్తున్న బోయలు ఆ యుద్ధాల్లో నలుగుతూ తమదైన రాజ్యాన్ని నిర్మించుకునేందుకు గుండ్లకమ్మ, మూసీ నదుల మధ్య

ప్రాంతంలో ప్రయత్నాలు సాగిస్తాడు. రెండు నదుల మధ్య వ్యవసాయ, వ్యాపారాలు అభివృద్ధి చేసుకొని జీవిస్తూ పలు పరిపాలన విభాగాలను, ఒక పెద్ద కోటను కట్టుకుంటారు. చివరికి పల్లవ, చాళుక్యరాజుల సామ్రాజ్యకాంక్షకు బోయలు బలైయ్యారు. రెండు వందల సంవత్సరాల వ్యవధిలో నిర్మించిన బోయరాజ్యాన్ని చాళుక్యసేనాని పండరంగడు ఒక్కరోజులో కూలదోసి, దానికి చిహ్నంగా ఈ అద్దంకి శాసనం వేశాడు.

ఇట్లు రెండు వందల సంవత్సరాల కాలంలో ఆవిర్భవించి, అభివృద్ధిచెంది, ఒక వెలుగు వెలిగిన బోయరాజ్యం, అభిమాన ధనులైన బోయ విలుకాండ్రలకు స్థావరమైన బోయరాజ్యం, పండ్రెందు బోయకొట్టాలు అనే సామూహిక నామంతో పిలవబడే బోయరాజ్యం, పల్లవ, చాళుక్య రాజుల సామ్రాజ్యకాంక్షకు బలై, వారి రాజకీయపుటెత్తుల మధ్య నలిగి, కేవలం ఒక్కనాటి యుద్ధంలో శాశ్వతంగా రూపు మాసిపోయింది. బలైపోయింది. చరిత్ర పుటలలో కేవలం ఒక పంక్తిగా నిలిచిపోయింది. ఈ బోయకొట్టాల విషాదగాథనే పిళ్ళైగారు ఈ నవలలో వివరించారు.

పండ రంగని అద్దంకి శాసనంలోని దాన గ్రహీత అయిన ఆదిత్య భట్టారకుని కుటుంబాన్ని ప్రాఙ్నన్నయ్య యుగంలో శాస్త్ర ప్రగతిని ఆవిష్కరించడానికి పిళ్ళై గారు ఉపయోగించుకున్నారు. ఒకప్పుడు తెలుగునేలపై శాస్త్ర పరిశోధనలు అద్భుతంగా జరిగాయి. ముఖ్యంగా గణిత, రసాయన, లోహశాస్త్రాలలో గొప్ప పరిశోధనలు జరిగాయి. “ఆదిత్య భట్టారకుని ముత్తాత, ముదిముత్తాతలు ఉజ్జయినితో సంబంధాలు కొనసాగిస్తూ ఖగోళ గణిత శాస్త్రాలలో వరాహమిహిరుడి స్థాయి నందుకున్న వారుగా కనిపిస్తారు. ఆదిత్య భట్టారకుడి ముత్తాత అర్క భట్టారకుని పరిశోధనలు ‘టైకోబ్రాహి’ పరశోధనలని తలపింపజేస్తాయి. భూమి చుట్టూ సూర్యుడు, గ్రహాలు తిరుగుతున్నాయని విశ్వసిస్తున్న కాలంలో కూడా గ్రహభ్రమణ కాలాలు చక్కగా లెక్క గట్టారు” అని గాడేపల్లి దివాకరదత్తు ప్రశంచించారు.

అర్కభట్టారకుని తరువాత అతని కుమారుడు మొదటి ఆదిత్య భట్టారకుడు ఖగోళ శాస్త్ర పరిశోధనల పట్ల ఆసక్తి చూపలేదు. మొదటి ఆదిత్యభట్టారకుడు పంచాంగాలు రాయడం, వైదిక విద్యలు క్షుణంగా అభ్యసించాడు. ఆదిత్యభట్టారకుని కుమారుడు భాస్కరభట్టారకుడు ఆయుర్వేద ఔషదాల గురించి పరిశోధనలు చేశాడు. మొదటి ఆదిత్యభట్టారకుని మునిమనుమడైన రెండవ ఆదిత్యభట్టారకుడు జ్యోతిష్య, ఆయుర్వేద శాస్త్రాల్లో గొప్ప నిపుణుడు. రెండవ ఆదిత్యభట్టారకుని పూర్వీకుల ఆసక్తుల్ని పరిశీలిస్తే క్రమంగా శాస్త్రం వెనుకబడి, పంచాంగం, జ్యోతిష్యం ముందుకు వచ్చినట్లు తెలుస్తుంది.

ఈ నవల ప్రాఙ్నన్నయ్య యుగపు విజ్ఞాన సర్వస్వంలా ఉంది. అనేక విషయాలపైన నవలలో సమాచారం అందించారు పిళ్ళైగారు. ఏనుగులు పట్టే విధానం, వాటికి శిక్షణ ఇచ్చే విధానం, విలువిద్యా ప్రదర్శనం, యుద్ధతంత్రాలు, నాటి శిక్షావిధానాలు, సాతులు, సంతలు, పన్నులు, ఇసుక గడియారాల నిర్మాణం, నాటక ప్రదర్శనలు, తోలుబొమ్మలాటలు, ఆలయ నిర్మాణం, వేశ్యా వాటికలు, కోటలు కట్టడం, ఊర్లు ఏర్పడటం – ఒకటేమిటి అనేక విషయాలపైన ఈ నవల దృష్టిని సారించింది.

బోయకొట్టాల చరిత్ర చెబుతూనే ఆ కాలంలో ముఖ్యంగా చాళుక్యులు తెలుగు దేశికవితకు ఎలా పునాదులు వేశారో పిళ్ళై గారు వివరించారు. నన్నిచోడుడు తన కుమారసంభవంలో ఈ క్రింది పద్యాన్ని పేర్కొన్నాడు

“మును మార్గ కవితా లోకం
బున వెలయగ దేశి కవిత పుట్టించి తెనుం
గున నిలిపి రంధ్ర విషయం
బున జన చాళుక్యరాజు మొదలగు బలువుర్”

ఈ పద్యంలో కీర్తించిన చాళుక్య నృపులు ఎవరు? అనే ప్రశ్నకు సాహిత్య, చారిత్రక పరిశోధకులు భిన్న అభిప్రాయాలూ వ్యక్తం చేస్తున్నారు. "పై పద్యమునఁ జాళుక్యరాజనఁగా నిప్పుడు మనకుఁ బ్రస్తుతుడును, నన్నియ యాంధ్ర భారత కృతికి ( గారయి తయునగు రాజరాజనరేంద్రుఁ డగు నని నేను దలంచు చున్నాడను" అని వేటూరి ప్రభాకరశాస్త్రి గారు ఊహించారు. కాని పిళ్ళేగారు అతనికి భిన్నమైన అభిప్రాయం వ్యక్తం చేశారు. "దేశికవితను పుట్టించిన చాళు క్యరాజు ఖచ్చితంగా రాజరాజ నరేంద్రుడు కాదు. ఎందుకనగా నన్నయ్యకు పూర్వమే తెలుగువారు గానట బీసట అయిన తెలుగు దేశికవితను చదువుచుండినారు. కావున దేశికవిత పుట్టించి తెనుంగున నిలిపినవాడు సత్యాశ్రయుడే కావలయును" అని పిళ్ళేగారు ఊహించారు.

నన్నయ్యకి పూర్వం తెలుగు సాహిత్య స్వరూపం అంచన వేయడానకి ఈ నవల ఉపయోగపడుతుంది. దేశీయచ్ఛందాల పుట్టుకను ఎంతో చమత్కారంగా ఈ నవలలో వర్ణించారు. అందుకోసం యతులు, ప్రాసలు, సంధులు లేని కొన్ని పద్యలను కూడా రచించి, తెలుగు పద్యం ప్రాథమిక దశలో ఇలా ఉండవచ్చని పిళ్ళేగారు చూపారు. "తెలుగులో కవిత్వము పుట్టలేదు కాని తెలుగు వారు కవిత్వము చెప్పినారు. తమిళంలో 'తిరుక్కురళ్' కంటే ముందే తెలుగువారు కవిత్వం చెప్పియున్నారు. 'తిరుక్కురళ్' లో సూక్తులు మాత్రమున్నవి. తెలుగువారి కవిత్వము నానారస భరితము" అని గాథాసప్తశతి ద్వారా తెలుగు భాషా ప్రాచీనతను నిరూపించడానికి పిళ్ళేగారు ప్రయత్నించారు.

చాళుక్యుల కాలంలో తరవోజ, కందం, మధ్యాక్కర, ఆటవెలది, తేటగీతి, సీసం వంటి దేశీయ ఛందస్సులు రూపొందినప్పటికి పండితులు సంస్కృత వృత్తాలను తెలుగులోకి దిగుమతి చేశారు. "నన్నయ్యకు పూర్వము మొదట చెదురు మదురుగా తరవోజ, సీసము, మధ్యాక్కర మొదలైన దేశి పద్యము లుండెడివి. సంస్కృతాభిమానులయిన పండితులు వానిని ఆదరింపమిచే తరువాత సకృత్తుగా చంపకోత్పలమాలల వంటి వృత్తములు వ్యాప్తికి వచ్చినట్లు తోచుచున్నది" అని అన్న జి. నాగయ్యగారి మాటలు అక్షర సత్యం. అదే సమయంలో "పండిత కవులు సరళమైన శ్రావ్యమైన సంస్కృత పదములను సమాసములుగా కూర్చి తెలుగు పద్యములలో చేర్చుటకు ప్రయత్నములు చేయుచుండిరి" అని పిళ్ళేగారు పేర్కొన్నారు. ఈ విధంగా సంస్కృత వృత్తాలు, పదాలు, సమాసాలు నెమ్మదిగా తెలుగు భాషలో కలిసిపోయాయి. ఈ విధంగా తెలుగు భాషా నన్నయ్య కాలానికి సంస్కృత భూయిష్టమైంది. అప్పటివరకు వ్యవహారంలో ఉన్న అనేక అచ్చ తెలుగు పదాలు కనుమరుగయ్యాయి. వాటి స్థానాన్ని సంస్కృతం ఆక్రమించుకుంది.

శాతవాహనులకాలంలో ఉన్న మతసహనం ఈ కాలంలో అంతరించింది. ప్రభువులు ఏ మతాన్ని అనుసరిస్తే, ప్రజలు, సామంతులు కూడా అదే మతాన్ని అనుసరించవలసి వచ్చింది. "అంతరంతరములో అతడు జైనమతాభిమాని. కానీ పాలకులు శైవమతావలంబకులగుటచేత అతడు తన జైనమాతాభిమానమును బయట పడనీయక గుట్టుగా కాలము గడుపుచున్నాడు" అని పిళ్ళేగారు అద్దంకి పల్లవ దుర్గాధ్యక్షుడైన రుద్రమ నాయకుని గురించి పేర్కొన్నారు. ఈ కాలంలో బ్రాహ్మణులు, పాలకుల సహాయంతో జైన, బౌద్ధ మతాలను నిర్మూలించడానికి ప్రయత్నించారు. బోయకొట్టాలపైకి యుద్ధానికి వెలుతున్న జయసింహవల్లభునితో "ఆ ప్రాంతమున ఇంకను కొందరు బౌద్ధ భిక్షులు సంచారము చేయుచు బౌద్ధ ధర్మమును ప్రచారము చేయుచున్నారట. వారు బౌద్ధ ధర్మము ప్రచారము చేయుట వలన కొంత నష్టమున్నది. బౌద్ధులు నిరీశ్వరవాదులు. స్వర్గనరకములు లేవందురు. అందువలన ప్రజలలో పాపభయము నశించును. పామరులు వశృంఖలత్వమును అలవాటగుదురు. వైదికమతము కూడా భగవంతుని నిరాకారుడనియు, నిర్గణుడనియు, నిరంజనుడనియు పేర్కొనుచున్నది. అట్టి నిరాకార నిర్గుణ భాగవత్తత్త్వము నందు జ్ఞానులు మాత్రమే మనస్సును లగ్నము చేయగలరు. పామరులకు సగుణ, సరూప దేవతామూర్తి కనబడిననేగాని మనస్సు లగ్నము కాదు. భగవంతుని యందు మనస్సు లగ్నమైననేకాని పాపపుణ్యముల భావనము, ధార్మిక భావము

ఏర్పడదు. స్వర్గనరకముల భావన ఉండిననేకాకి ప్రజలు సన్మార్గ ప్రవర్తకులు కాలేరు. కావున పామరులైన బోయలకు స్వర్గనరక భావన కలిగించవాలె. వారి కొట్టములకు కొందరు బ్రాహ్మణులను పంపవలె. ఆ బ్రాహ్మణులు కొట్టములలో కాపురముండి వారికి ధర్మబోధన చేయవలె" అని అర్క భట్టారకుడు చెప్పాడు. జయ సింహుడు బోయ కొట్టాలను జయించిన తరువాత అర్కభాట్టారకుడు చెప్పినట్లు బోయ కొట్టాల నుండి బౌద్ధులను తొలగించాడు. అక్కడ బ్రాహ్మణులను నియమించాడు. దేవాలయ నిర్మాణం కూడా ప్రారంభించాడు. ఈ విధంగా ఏడవ శతాబ్దిలో బ్రాహ్మణులు, పాలకులు సంయుక్తంగా వైదిక మత పురురుద్ధరణకు ప్రయత్నించినట్లు తెలుస్తుంది.

చాళుక్య రాజులు, రాజోద్యోగులు, ప్రముఖులు క్రమంగా శైవ మతం పట్ల ఆకర్షితులైయ్యారు. కాని సామాన్య ప్రజలు, స్త్రీలు ఇంకా జైన మతాన్ని అభిమానించారు. జైన సాంప్రదాయాల్ని పాటించారు. జైన సన్యాసులకి సత్రాలు, మఠాలు, జినాలయాలు కట్టించారు. పృద్వీవ్యాఘ్రరాజు చేత మంచనశర్మ కుమారుడు హరిశర్మ అక్షరాభ్యాసం చేయిస్తాడు. అక్షరాభ్యాస సమయంలో హరిశర్మ ' ఓం నమశ్శివాయ ' అని రాయబోగా జయశ్రీ అడ్డుకుంటుంది. " ఈ సాంప్రదాయము ఇప్పుడిప్పుడు వచ్చినది. అనేక తరములుగా తెలుగు సీమలో జైన సిద్ధుల పేరు మీద ' ఓం సిద్ధం నమ: ' అని వ్రాయించుతయే అలవాటులో నున్నది. ఆ పద్ధతి నెందుకు మార్చవలె" అని వాదిస్తుంది. ఈ విధంగా రాజులతో సంబంధంలేకుండా అంత:పుర స్త్రీలు జైనాన్ని ఆదరించారు.

క్రీ.శ. 8,9 శతాబ్దాలలో కుమారీలభట్టు, శంకరాచార్యులు హిందూ మత దిగ్విజయ యాత్రలు జరిపి 'హస్తినాతాడ్యమానోపి నగచ్ఛేత్ జైన మందిరం' అని బోధించారు. ఈ విధంగా శైవమత వ్యాప్తితో జైనం అంతరించింది. జైనులు హిందూ మతంలో కలిసిపోయారు. హరిశర్మ ' ఇప్పుడు ఎక్కడ చూసిన ఓం నమశ్శివాయ సిద్ధం నమ: అని రాస్తున్నారు ' అని జయశ్రీతో చెప్పిన మాటలు హిందు, జైన సంస్కృతుల సంగమాన్ని చూపిస్తున్నాయి.

క్రీ.శ.7 వ శతాబ్దానికి ఆంధ్రదేశంలో బౌద్ధం దాదాపుగా అంతరించింది. బుద్ధుడు దశావతారాల్లో ఒక అవతారంగా మారిపోయాడు. కాని అశోకుని కాలానికే బౌద్ధం సియాం(థాయలాండ్), కంబోడియా, లావోస్, బర్మా, వియత్నాం, చైనా, జపాన్ దేశాలలో గొప్పగా ప్రచారం పొందింది. ఈ ఆగ్నేయాసియా దేశాలలో కూడా హిందూ మతం, బౌద్ధ మతంతో పోటీపడింది. "మన పొరుగున నున్న సింహళము నందును, సముద్రముల కావల బహుదూరమున నున్న మలయ, చంపా(వియత్నాం), సువర్ణ ద్వీపముల(బర్మా) యందు బౌద్ధమతము విస్తరించియున్నది. కావున ఆ దేశములలో బౌద్ధమతమును అణచివేసి వైదిక ధర్మమును స్థాపించుటకై మేము అక్కడికి బయలుదేరినాము" అన్న సూరనభట్టు మాటలు భారతదేశానికి వెలుపల హిందూ, బౌద్ధ మత ఘర్షణలను సూచిస్తున్నాయి. కంబోడియాలోని అంగొర్ వాట్ విష్ణుదేవాలయం, జావాలోని బొరోబొదుర్ బౌద్ధ స్తూపం ప్రాచీన కాలంలో ఆ దేశాలలో భారత సంస్కృతి వ్యాప్తికి నిదర్శనాలు. "స్థానికి ప్రజల సహచర్యం వల్ల హిందూ సంప్రదాయాలు కొంత మారినప్పటికీ, వెయ్యేళ్ళు గడిచినా ఈ దేశాల్లో భారతీయతను స్పష్టంగా చూడవచ్చును" అని అన్న కృష్ణారెడ్డిగారి మాటలు ఆగ్నేయాసియా దేశాల్లో భారత సంస్కృతి వ్యాప్తిని స్పష్టం చేస్తున్నాయి.

"బృహత్ఫలాయనులు, శాలంకాయనులు, విష్ణుకుండినులు, పల్లవులు జన్మరీత్యా బ్రాహ్మణులైనప్పటికి క్షాత్ర ధర్మాన్ని అనుసరిచడం వలన క్షత్రీయులైయ్యారు." బ్రాహ్మణులకు సమాజంలో గౌరవ స్థానం ఉండేది. 'ఇదం బ్రాహ్మం ఇదం క్షాత్రం' అన్నట్టు బ్రాహ్మణులు ఒక వైపు వైదిక విద్యావిజ్ఞాన విధులై ఉంటూ, మరో వైపు శస్త్రోపజీవులై సేనాపతులుగా, దండనాధులుగా ప్రభువులను సేవించేవారు. ఈ నవలలో చౌడమరసు, సోమేశ్వర భట్టారకుడు, అతని కుమారుడు కొమరశర్మ, కడియరాజు, అతని కుమారుడు పండ రంగడు, అయ్యపశర్మ, అతని కుమారుడు వినయడిశర్మ బ్రాహ్మణులైనా చాళుక్య ప్రభువులకు కుడిభుజాలుగా నిలచి విజయాలు సాధించిపెట్టారు. ఆంధ్రబ్రాహ్మణుల్లో ఈ యుగంలోనే వైదిక, నియోగి శాఖాభేదం ప్రారంభమై ఉంటుందని డా. బి.యస్. యల్. హనుమంతురావు గారు పేర్కొన్నారు.

శాతవాహ అనంతర కాలంలో రాజులు బ్రాహ్మణులకూ, మత సంస్థలకూ భూదానాలు విరివిగా చేశారు. ' భూమి దానాత్ పరం నాస్తి ' అనే భావన ప్రచారంలో ఉంది. "నా విష్ణు: పృథివీ పతి: రాజనగా ఎవరు? సాక్షాత్తు దేవుడే. రాజసేవయే దైవ సేవ. ఈ విషయమును మీరు ప్రజలకు నూరిపోయవలె. రాజులు మిమ్ములను భూసురులు అని గౌరవించుట ఎందుకు? మీకు అగ్రహారములు మాన్యములు ఇచ్చుట ఎందుకు? మీ మాటల వలన ప్రజలు రాజుకు విధేయులై ఉండవలెననియే కదా" అని మంగియువరాజు బ్రాహ్మణులతో అన్న మాటలు బ్రాహ్మణ క్షత్రియుల మధ్య సంబంధాలను తెలియజేస్తాయి.

" చాళుక్యులు బోయబ్రాహ్మణుల ఋషి గోత్రాలను, సనాతన సామాజిక వ్యవస్థలో వారి స్థానాన్ని గుర్తించి, కర్మరాష్ట్రంలో వారికి అగ్రహారాలిచ్చినట్లు రేయూరు, చందలూరు, కొడనాగూరు శాసనాల నుండి తెలుస్తుంది. ఈ బ్రాహ్మణుల ద్వారా చాళుక్యాధికారానికి బోయల విశ్వాస సహకారాలు సాధించి తద్వారా పల్లవ దాడులనరికట్టవచ్చని వీరి ఆశయం." పై విషయాల ఆదారంగా నాటి రాజులు ప్రజలను తమకు విధేయులుగా చేసుకోవడానికి బ్రాహ్మణుల సహాయం అవసరమైంది. అదే విధంగ జీవనానికి అవసరమైన ధనం, అగ్రహారాల కొరకు బ్రాహ్మణులకు పాలకుల అవసరం ఏర్పడింది. ఈ విధంగా పాలకులు, బ్రాహ్మణులు పరస్పర సహకారంతో క్రింది వర్ణాల వారిని తమ అదుపులో పెట్టుకున్నారని తెలుస్తుంది. అద్దంకి శాసనంలోని 'ధర్మువులు వీని రక్షంచిన వారికి అశ్వమేధంబున పలంబు అగు' అనే వాక్యం ఉంది. అనగా ఆనాడు ఈ బ్రాహ్మదేయాల విషయంలో బ్రాహ్మణులకు, సామాన్య ప్రజలకు మధ్య కొంత సంఘర్షణ జరిగినట్లు తెలుస్తుంది.

దేశ, జాతి, కుటుంబ మర్యాదలను తృణీకరించి స్వార్థపరులై సంహాసనం కోసం చాళుక్య రాజకుమారులు పోరాడారు. మూడవ విష్ణువర్ధనుడు–కొక్కిలి, రెండవ విజయాదిత్యుడు – భీమసలికి మధ్య జరిగిన వారసత్వ యుద్ధాల్లో వేంగిరాజ్యం అల్లకల్లోలమైంది. "చాళుక్యులు స్వహస్తాలతోనే వేంగి నగరాన్ని పరశురామ ప్రీతి చేసినారు" అని అన్న బి.యస్. యల్. హనుమంతరావు గారి మాటలు నాటికాలంలో నైతిక పతనతను చూపిస్తున్నాయి. పాలకులలోని వారసత్వ తగాదాలు సామంతుల్లోకీ పాకినట్లు నాగసాని వృత్తాంతం వలన తెలుస్తుంది. ఈమె తన కుమారుడు బోయకొట్టాలకి నాయకుడు కానందుకు ప్రతీకారంగా ఆరు సంవత్సరాల వయస్సు గల వీరభద్రుడ్ని విషప్రయోగంతో చంపుతుంది.

బోయలలో నాలుగవ తరం నుండి అక్షరాస్యులు కనిపిస్తారు. జయశ్రీ కుమారుడైన పులిరాజు వినుకొండలో విద్యను అభ్యసిస్తాడు. బోయాలకు ఐదవ తరం ప్రతినిధైన పొన్ని బోయడు బోయల్లో మొదటి విద్వాంసుడు. అతను బోయకొట్టాల్లో హరిశర్మ వద్ద కొంత సంస్కృత విద్యను అభ్యసించీ, ఉన్నత విద్యను అభ్యసించడానికి గుంటూరు, ధాన్యకటకాలకు వెళ్తాడు. అక్కడ సంస్కృత గ్రంధాలతో పాటు అప్పుడప్పుడే వికసిస్తున్న తెలుగు సాహిత్యాన్ని కూడా అభ్యసిస్తాడు. బోయల ఆరవ తరానికి ప్రతినిధి అయిన ఘలయప్ప గొప్ప సంస్కృత విద్వాంసుడు. కంచిలో గొప్ప విద్వాంసుల వద్ద విద్యను అభ్యసిస్తాడు. శంకరాచార్యుల శివనందలహరి, సౌందర్యలహరి అనే సంస్కృత గ్రంథాలకు వ్యాఖ్యానం రాస్తాడు. "పాండిత్యంలో శంకరశర్మ కుమారుడైన వాసవశర్మ కంటె మలయప్ప నూరు రెట్లు మెరుడు" అని అన్న పిళ్ళెగారి మాటలే మలయప్ప పాండిత్యానికి నిదర్శనం. అవకాసం కల్పిస్తే కులమతాలకి అతీతంగా అన్ని వర్ణాల ప్రజలు విద్యలో ప్రతిభ కనబర్చగలని పిళ్ళెగారు ఈ నవల ద్వారా తెలియజేశారు.

బొయకొట్టాలలో మొదట కార్తికేయ దేవాలయం నిర్మించడంలోనే పిళ్ళెగారు గొప్ప ఔచిత్యాన్ని పాటించారు. కార్తికేయుడు దక్షణ భారత ప్రజల దేవతాగణాల్లో మొదటివానిగా భావిస్తున్నారు. "పూర్వము యక్షులలో వేటకాంద్రకు 'మురుగ' అనే ఒక దేవత కలడు. ఇతని కాఱుమొగములను, పండ్రెండు చేతులును గలవు. ఈ దేవుని దేవాలయము లరణ్యముల నడుమ, పర్వత శిఖరముల మీదను సాధారణముగా నిర్మింబడుచుండెను. బ్రాహ్మణార్యులు యనార్యులను

